

# துளசிதாஸரின்
# ராமசரிதமானஸம்
அல்லது
# மானஸ ராமாயணம்

## உத்தர காண்டம்

S. ஜகந்நாராயணன்

கோஸ்வாமி துளசிதாசரின்

# ராமசரித மானஸம்

அல்லது

# மானஸ ராமாயணம்

மொழி பெயர்ப்பும், கருத்துக்களுடனும்,
மனோபாவத்துடனும்

## உத்தர காண்டம்

பிரசுரகர்த்தர்
S. ஜகந்நாராயணன்
25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,
புது டில்லி-1

*First Edition—March*, 1972


மத்திய அரசாங்கத்தாரால் பொருளுதவி செய்யப்பட்டது

விலை ரூ.

காபிகள் கிடைக்குமிடம்:

மதராஸ்:

எஸ். ஜகந்நாராயணன்

(I) "ராஜலக்ஷ்மி"
Plot No. 38, ராமகிருஷ்ண நகர்,
Door No. 11, Near மந்தவெளி,
மதருஸ்–28

(II) S. ஜகந்நாராயணன்,
C–588, ASHOK NAGAR, MADRAS–83

புது டில்லி:

S. ஜகந்நாராயணன்,
25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,
புது டில்லி-1

Kabeer Printing Works, Madras (1486)



# रामचरित मानस चतुःशती
## राष्ट्रीय समिति

टेलीफोन ३८२९९७ ४२, अशोक रोड, नई दिल्ली

The immortal classic of Ramacharit Manas by Goswami Tulsidas does not belong merely to Hindi literature. The noble ideas and sentiments expressed in this book are true of all ages and they will provide inspiration to mankind at all times. In this great book Goswamy Tulsidos has brought out from his own experience and reflections the essence of a happy way of living, a code of human behaviour which attracted the attention of Mahatma Gandhi in his dream of 'Ram Rajya' as an ideal state for the Independent India. Therefore, no wonder, this book belongs to the classics of all ages.

The 400th anniversary of this immortal work is being celebrated throughout the country and abroad. For this purpose a National Committee has been formed with Rashtrapati Dr. V. V. Giri as its Patron; Prime Minister Smt. Indira Gandhi, its President; Pandit Kamalapati Tripathi, its Acting President and Shri K. C. Pant, General Secretary. This Committee is getting full co-operation from distinguished poets, writers, scholars and intellectuals of this country and abroad.

I congratulate Shri S. Jagannarayanan, an Under Secretary in the Ministry of Finance for his praiseworthy work and for having brought out this book in Tamil on this occasion. The message contained in this book is not only confined to one language or one country but is universal. This book has already been translated in many languages in India and outside, and it has been and will continue to be a perennial source of inspiration for mankind.

The author of this book comes from a non-Hindi-speaking area. His work is therefore all the more commendable. Shri S. Jagannarayanan has not only been able to successfully overcome the language difficulty but imbued his work with the qualities of his own personality - a sense of dedication, piety and humanism, - qualities much in keeping with the original work. His work is the result of long research and deep study of the concepts and ideas of the great Ramayana writers like Valmiki, Kamban, Vyasa, Tyagaraja, and many others. I had the fortune to hear some of his renderings on many occasions, which revealed the depth of his knowledge in this field. This book is the fulfilment of long years of dedicated work of a scholar.

This book can be said to belong to the category of Reference Works as it contains not only translation of the original text of Ramacharita Manas but also parallel illustrations and a comparative study of the concepts of Ramayana literature of this country.

I must confess that I do not know Tamil. But I know the author of this book intimately. We have spent long hours together when he explained to me the special features of this book. I am sure that this work will add to the glory of Hindi literature. I congratulate Shri S. Jagannarayanan on behalf of the National Committee for this noble work. I firmly believe that with the grace of Goswami Tulsidas this book, which is the result of long dedicated effort and devotion, will become popular among the Tamil reading public who will read it as a religious work.

I must also congratulate Shri S. Jagannarayanan for having brought out this book at a very appropriate time to coincide with the 400th anniversary of Tulsidas's Ramacharita Manas. Timely work needs no praise.

I once again commend him for his scholarly translation and pray to God that his aims may be fulfilled and his work may gain wide popularity.

(Ratnakar Pandey)
Secretary
National Committee
Ramacharita Manas Chatuhshati

Dated: 29-11-1971

# ஸமர்ப்பணம்

நாராயணம் நமஸ்கிருத்ய நரம் சைவ நரோத்தமம்
தேவீம் ஸரஸ்வதீம் வியாஸம் ததோ ஜயமுதீரயேத்

"ராம சரித மானஸம்" எனப்படும் கோஸ்வாமி துளசிதாஸரின் மானஸ ராமாயணத்தின் கடைசியான ஏழாவது சோபானமாகிற உத்தரகாண்டத்தின் மொழிபெயர்ப்பை (கருத்துக்களுடன்) இந்த புஸ்தகத்தில் ஸமர்ப்பித்திருக்கிறேன். உத்தரகாண்டத்தில் ஸ்ரீராமச்சந்திரன், சீதை சஹிதமாக ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து கொள்வதும், தம்பிமார்களும், சுக்ரீவ, விபீஷண, ஆஞ்சநேயாதிகள் புடைசூழ, வஸிஷ்டாதி ரிஷிகளினுலும், தாய்மார்களாலும், ராஜதிலகம் அணியப்படுவதையும் கொண்டுள்ள சரித்திரத்துடன் ஆரம்பமாகிறது. ராம ராஜ்யம் என்பது என்ன? அதன் லக்ஷணங்கள் யாவை? ஸ்ரீமத் ராமச்சந்திரன் எவ்விதம் அயோத்தி ஜனங்களாலும், விப்ரஸ்ரேஷ்டர்களாலும், ஸனகாதி முனிவர்களாலும் போற்றப்பட்டார் என்பதும், "ஸ்ரீமத் ராமாயணம்" எவ்விதம் நாரதாதி மஹரிஷிகளாலும், ஆஞ்சநேயாதிகளாலும், காவ்ய ரூபமாக எழுந்தது என்கிற விருத்தாந்தங்களையும், "ராம சரித மானஸம்" எவ்விதம் ரஞ்சனம் செய்யப்பட்டு காவ்ய ரூபமாக எழுந்தது போன்ற விருத்தாந்தங்களையும் இந்தக் காண்டத்தில் காணலாம். அதற்கடுத்தாற் போல, கருட காகபுசுண்டி ஸம்வாதங்களும் ஏற்படுகின்றன. கருட மஹாராஜருக்கு காகபுசுண்டி தனது ஆத்ம கதையைச் சொல்லி, "ராமகிருபை" எவ்வளவு மஹத்தானது; ராம கிருபையை அடைந்தால் எவ்விதம் மனப்பிரமை ஒழிந்து, சாந்தி ஏற்படுகிறது; அந்த ராமபக்தியாகிற ராம ஸம்பத்தை அடைவது எவ்விதம்? பக்தி மார்க்கம் எவ்விதம் ஞானமார்க்கத்தை விடப் பெரியது; ஸகுண பிரும்மம், நிர்குணப் பிரும்மம் போன்ற விருத்தாந்தங்களையும், ஸ்ரீராம பக்திக்கு உமாமஹேஸ்வரர்களிடம் காட்டப்படும் பக்தி வினயமானது எவ்விதம் முக்கியமான அங்கியாக விருக்கிறது என்பது போன்ற விருத்தாந்தங்களையும், காகபுசுண்டியினுல் கருடமஹாராஜருக்குப் பிரகடனம் செய்யப்பட்ட ஆத்ம கதையிலிருந்து நாம் காணலாம். அதன் பிறகு ராமபக்திதான் இவ்வுலகத்தில் சம்பாதிக்கப்பட வேண்டிய தனம், ஐஸ்வர்யம், அதைவிட ஆத்மகதிக்கு உகந்தது வேறு எதுவுமில்லை என்று துளசிதாஸர் கடைசியில் சித்தாந்தபூர்வமாக தலைக்கட்டுகிறுர்.

இப்புத்தகத்தில் துளசிதாஸரின் ராமாயணத்தின் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பர்களால் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த மொழிபெயர்ப்பில் போடப்பட்டிருக்கும் பிராக்கட்டுகளிலுள்ள வசனங்களும், தியானமும் எனது கருத்துக்களையும் மனோபாவத்தையும் விமர்சனம் செய்கின்றன.

இந்த உத்தம காவியத்தை மொழிபெயர்க்கும் ஆவலில் இருந்த எனக்கு, அப்போதைக்கப்போது தோன்றின மனோபாவங்களையும், கருத்துக்களையும், ஆர்த்தி நிறைந்த வசனங்களையும், சீதாராமனுடைய பரத்வ சௌலப்ய குண விசேஷங்களில மூழ்கப்பட்டவனாகை ஆர்வம் அடங்காமல் தியானத்திலும், செய்யுட்களின் பிராக்கட்களிலும் நான் விளக்கும்படி நேர்ந்தது. துளசிதாஸரின் கதையை மாத்திரம் படிக்க நோக்கம் உள்ளவர்கள் செய்யுட்களின் நம்பர்களில் போடப்பட்டிருக்கும் கதை விருத்தாந்தங்களைத் தொடர்ச்சியாகப் படிக்கலாம். இந்தத் தியான யேற்பாட்டினால், நான் இதர ராமாயணங்களின் கருத்துக் களையும், வால்மீகி, வேதவியாசர், சுகர், கம்பன், தியாகராஜர், நம்பூத்ரி பட்டர் போன்ற மஹான்களின் கருத்துக்களையும் ஓரளவு சொல்லும்படி நேர்ந்தது. இதர ராமாயணங்களின் கருத்துக்களில் பரக்கப் பாடப் பெற்றிருக்கும் சீதாராம தம்பதிகளினுடைய கல்யாண குணச் சிறப்புக் களை என்னால் ஓரளவுதான் சொல்ல முடிந்தது. பரந்த பாற்கடலில் தேங்கியிருக்கும் பாலைப் பருகுவதற்கு ஆசையுடன் ஓடிவரும் ஒரு பூனையினால் முடியுமா? மந்திராசலம் போன்ற மலையையோ, ஸுமேரு பர்வதத்தையோ நளினமான ஒரு ஹம்ஸம்தான் தாங்க முடியுமா? சீதாராமனை குரு, பிதா, மாதா, தெய்வமாகிற ஸ்வாமி என்று நினைக்கும் பாவத்துடன் எனக்கு என் ஆற்றாமைகளைத்தான் சொல்லித் தீருமா? தீரனும், நரவரனும், மரியாதா புருஷோத்தம ராமசீதா தம்பதிகளின் பெருமைகளை ஒரு சிசு எவ்வளவு தூரம் பரிகிரஹிக்க முடியுமோ, அதைப்போல தீன ஸ்திதியில் இருப்பவனாக என்னை அறிந்து கொண்டு, எனது குற்றங்களையும், வாசக தோஷங்களையும் மனநிறைவுடன் மன்னிக்கும்படி தாழ்மையுடன் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகத்தை மேல் பார்த்து, இலக்கியப் பிழைகளைத் திருத்திக் கொடுத்துதவிய எனது நண்பரும், புதுடில்லி தயால்சிங் காலேஜின் தமிழ்ப்பேராசிரியர் ஸ்ரீமான் R. பார்த்தசாரதி அவர்களுக்கு நான் மிக்கக் கடமைப்பட்டுள்ளேன். அதேபோல மத்திய அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட மேற்பார்வையாளரும், ஆக்ரா பல்கழகம் ஹிந்தி, தமிழ் பேராசிரியர் ஸ்ரீமான் Dr. A. N. ராஜகோபாலன் அவர்களுக்கும், அவர்களுடைய சிறந்த மனப்பான்மையினால் யேற்பட்ட புத்தி ஆலோசனைகளுக்கும், கருத்துக்களுக்கும் நான் மிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன்.

இப்புத்தகம் வெளிவருவதற்கு சில பேர்கள் காரணமா யிருந்தனர். அவர்களில் முக்கியமாக காலம்சென்ற தேசீய உயர்நீதிபதி ஸ்ரீமான் T. L. வெங்கட்ராமய்யர் அவர்களும், புதுடில்லியில் மஹாத்மா காந்தியின் வாழ்க்கை சரித்திரம், அது சம்பந்தப்பட்ட நூல்களைத் தயாரிக்கும் கேந்திரத்தின் தலைவரும், டில்லி ரமண கேந்திரத்தின் காரியதரிசியும், அருளே உருவாகக்கொண்டு, என் போன்றவர்களுக்கு ஊக்கம் அளிவிக்கும் Prof. K. சுவாமிநாதன் அவர்களும் ஆவார்கள். என் மன உல்லாசத்திற்காகவும், ஆத்மதிருப்திக்காகவும் எழுதப்பட்ட இப்புத்தகத்தை அவர்களே வெளிவிடும்படி தூண்டினார்கள். அவர்களுக்கு நான் மிக்க கடமைப்பட்டிருக்கிறேன். அதுமாதிரி, என்னுடைய பரம மித்ரரும், பேரறிவாளியும், சாஸ்திரீய சங்கீதத்தில் மிக்க அறிவுள்ளவருமான, மதராஸ் Dr. V. ராகவன் அவர்களுக்கும், என் குல பந்துவும், அறிஞரும், மதராஸ் அட்வகேட் வீ. வீ. ராமதுரை அவர்களுக்கும் நான் மிக்கக் கடமைப்பட்டவனாக விருக்கிறேன். இப்புத்தகத்தின் தோஷங்கள் என்னையும், பெருமைகள் அவர்களைச் சேரட்டும்.

இப்புத்தகம் வெளிவருவதற்கு மத்திய அரசாங்கத்தினர், சிக்ஷா நிலையம் (Ministry of Education) எனக்குப் பண உதவி செய்துள்ளார்கள். அவர்களுக்கும் நான் மிக்க நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாக விருக்கிறேன். முக்கியமாக எனது நண்பர்களான ஸ்ரீமான் N. S. பட்நாகர் அவர்களுக்கும், ஸ்ரீமான் D. N. சாக்ஸீனா அவர்களுக்கும், மற்றுமுள்ள நண்பர்களுக்கும் நான் மிக்க நன்றியைச் செலுத்துகிறேன்.

ராம சரித மானஸ மென்கிற மானஸ ராமாயணத்தின் ஏழு காண்டங்களையும் சரிவர நான் எழுதி முடிப்பதற்கு உதவியவர் எனது மனைவி திருமதி ராஜலக்ஷ்மி ஜகந்நாராயணன் அவர்கள். அவர்களின் தூய மன அன்பினால், எழுதுவதற்குப் போதுமான அவகாஸம் கொடுத்து, எனது முயற்சியில் தேக [illegible]ழைப்புடன் பரிபூர்ணமாக ஈடுபட்டு, எனக்கு மிக்க உதவி செய்[illegible]ார். அவர்கள் சமீபத்தில் காலமான போதிலும், அவர்களுடைய [illegible] நினைவாகவும் சீதாராமர்ப்பணமாகச் செய்திருக்கும் இந்தச் சிறிய நூலை டில்லியிலுள்ள தமிழர்களும், மற்றைய பிரதேசங்களிலுமுள்ள எங்களது தமிழ் அன்பர்களும் மன நிறைவுடன் வரவேற்று, என்னை ஆசீர்வதிக்கக் கோருகிறேன். வாசக தோஷங்கள் பலவிருப்பினும், என்னை மன்னிக்கும்படி தாழ்மையுடன் நான் அடிக்கடி அவர்களைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

இந்த புத்தகத்தை அச்சிட்டு எனக்குக் குறித்த காலத்தில் பிரதிகளை அளித்த M/s. கபீர் பிரிண்டர்ஸ், திருவல்லிக்கேணி, மதராஸ் அவர்களுக்கு நான் மிக்க நன்றி செலுத்துகிறேன். இப்புத்தகத்தில்

காணப்படும் படங்களை எனக்கு இலவசமாகக் கொடுத்து, பண உதவியும் வாக்களித்தவர்கள் டில்லியிலிருக்கும் ஸ்ரீமத் ராம சரித மானஸ சதுஸ்ஸதி அதாவது கோஸ்வாமி ஸ்ரீ துளசிதாஸரின் நான்காவது நூற்றாண்டு நினைவுச் செயலாளர்களின் ராஷ்டிரீய கேந்திரம். அதன் காரியதரிசிகளாகவிருக்கும் ஸ்ரீமான் கிருஷ்ணசந்திர பண்ட் அவர்களுக்கும், உபகாரியதரிசியான ஸ்ரீமான் ரத்னாகர் பாண்டே அவர்களுக்கும் நான் மிக்கக் கடமைப்பட்டவனாக விருக்கிறேன்.

விரோதிகிருது வருஷம்,
பங்குனி மீ 7ம் உ,
திங்கட்கிழமை
20th March 1972

சீனிவாஸ ஜகந்நாராயணன்
38, ராமகிருஷ்ணா நகர்,
மதராஸ்-28.

ஶ்ரீராமச்சந்திரன் சீதையுடன் ராஜ சிம்மாஸனத்தில் ஏறி உட்கார ஸகலரும் ஜய மங்கள கோஷங்கள் செய்தனர். முதன் முதலாக வஸிஷ்டர் ராஜதிலகத்தை அவர்களுக்கு அணிவித்தார். அவருக்குப் பின்பு ஸகல பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் வஸிஷ்டரின் ஆக்ஞைப்படி ராஜ திலகத்தை அணிவித்தார்கள். ஸகல மாதாக்களும் சீதா ராம தம்பதிகளுக்கு மங்கள ஆரத்திகளை எடுத்தார்கள்.

# உத்தர காண்டத்தின் ஸ்துதிகள்

(1)

கேகீகண்டாப நீலம் சுரவர விலஸ த்விப்ர பாதாப் ஜசின் ஹம்
சோபாட்யம் பீதவஸ்திரம் ஸரஸிஜ நயனம் ஸர்வதா ஸுப்ரஸன்னம்
பாணௌ நாராச சாபம் கபி நிகரயுதம் பந்துனு ஸேவ்ய மானம்
நௌமீட்யம் ஜானகீஸம் ரகு வரம நிசம் புஷ்பகா ரூட ராமம்.

(2)

கோஸலேந்திர பதகஞ்ஜ மஞ்ஜுலௌ கோமளா வஜ மஹேச வந்திதௌ
ஜானகீக ரஸரோஜ லாலிதௌ சிந்த கஸ்ய மனப்ருங்க ஸங்கினௌ

(3)

குந்த இந்து த³ரகௌர சுந்தரம் அம்பிகா பதிம பீஷ்ட சித்தித³ம்
காரூணீக கலகஞ்ஜ லோசனம் நௌமி சங்கர மனங்க மோசனம்

## ஸ்ருதி கீதை

(1)

ஜய ஸகுண நிர்குண ரூபரூப அநூபபூப சிரோமணே,
தஸகந்த ராதி ப்ரசண்ட நிஸிசர ப்ரபல கலபுஜ பலஹனே

(2)

அவதார நர ஸம்சார பார விபிஞ்ஜி தாருண துக்க தஹே
ஜய ப்ரணத பால் தயாள் ப்ரபு ஸம்ஜுக்த ஸக்தி நமாமஹே

(3)

தவ விஷம மாயா பஸ் சுராசுர நாக நர அகஜக ஹரே
பவ பந்த ப்ரமத அமித திவஸ நிஸி கால கர்ம குணநிபரே
ஜே நாத கரி கருணு விலோகே த்ரிவிதி துக்கதே நிர்பஹே
பவ கேத சேதன தச்ச ஹம் கஹும் ரக்ஷ ராம் நமாமஹே.

(4)

ஜே க்யானமான விமத்த தவ பவ ஹரணி பக்தி ந ஆதரீ
தேபா இஸுர துர்லப பதாதபி பரத ஹம்தே க்தீ ஹரீ

விஸ்வாஸ கரி ஸப் ஆஸ் பரி ஹரிதாஸ் தவ ஜே ஹோஇ ரஹே
ஜபி நாம தப் பினு ஸ்ரம தரஹிம் பவ நாத ஸோ ஸம ராமஹே.

(5)

ஜே சரன் சிவ அஜ பூஜ்ய ரஜ சுப பரஸி முனி பத்னீ தரீ
நக நிர்கதா முனி வந்திதா த்ரை லோக பாவனி ஸுர ஸரீ
த்வஜ குலிஸ அங்குச கஞ்ஜ ஜீத பன பிரத கண்டக் கின் லஹே
பத கஞ்ஜ த்வந்த முகுந்த ராம ரமேஸ நித்ய பஜாமஹே.

(6)

அவ் யக்தமூல மநாதி தரு த்வச சாரி நிக மாகம பனே
ஷட் கந்த ஸாகா பஞ்ச பீஸ் அநேக பர்ன ஸுமன்கனே
பல ஜுகல விதி கடு மதுர பேலி அகேலி ஜேஹி ஆஸ்ரித ரஹே
பல்லவத் பூலத் நவல் நித ஸம் ஸார விடப் நமாமஹே.

(7)

ஜே ப்ரும்ம அஜமத்வை தமனுப வகம்ய மன்பர த்யாவ ஹீம்
தேக ஹஹீம் ஜானஹீம் நாத ஹம்தவ ஸகுண ஜஸ்நித காவஹீம்
கருணயத்ன ப்ரபு ஸத்குண கரதேவ யஹ் வரமாக ஹீம்
மன வசன கர்ம விகார தஜி தவ சரண ஹம் அனுராக ஹீம்

## உமாசம்புவின் ஸ்துதி

(1)

ஜயராம ரமா ரமணம் ஸமனம் பவதாப் பயாகுல பாஹி ஜனம்
அவதேஸ ஸுரேஸ ரமேஸ விபோ சரணகத மாகத பாஹிப்ரபோ.

(2)

தசசீஸ விநாஸன பீஸ்புஜா க்ருத தூரி மஹா மஹிபூரி ருஜா
ரஜ நீ சர ப்ருந்த பதங்க ரஹே ஸரபாவக் தேஜ ப்ரசண்ட தஹே

(3)

மஹி மண்டல மண்டன சாருதரம் த்ருத ஸாயக சாப நிஷங்க பரம்
மத மோஹ மஹா மமதா ரஜனீ தம புஞ்ஜ திவாகர தேஜ அநீ

(4)

மனஜாத கிராத நிபாத கிஏ ம்ருக லோக் குபோக் ஸரேன் ஹிஏ.
ஹதி நாத அநாதனி பாஹி ஹரே விஷயா பன பாம்வர பூலிபரே.

(5)

பஹுு ரோக் வியோ கன்ஹி லோக் ஹஏ பவதங்க்ரி நிராதர் கே பல ஏ
பவ ஸிந்து அகாத் பரே நரதே பத பங்கஜ ப்ரேம நஜே கர்தே.

(6)

அதிதீன் மலீன துக்கீ நிதஹீம் ஜின்ஹ கேம் பத பங்கஜ ப்ரீதி நஹீம்
அவலம்ப பவந்த கதா ஜின்ஹ கேம் ப்ரிய ஸந்த அநந்த ஸதா தின்ஹ கேம்

(7)

நஹிம் ராக்·நலோப் நமான் மதா தின்ஹ கேம் ஸம வைபவ வாபிஷதா
யேஹிதே தவஸேவக் ஹோத முதா முனி த்யாகத ஜோக் பரோஸ் ஸதா.

(8)

கரி ப்ரேம நிரந்தர நேம் லிஏம் பத பங்கஜ ஸேவத் ஸுுத்த ஹிஏம்
ஸம மானி நிராதர் ஆதர ஹீ ஸப் ஸந்த சுகீ பிசரந்தி மஹீ

(9)

முனி மானஸ பங்கஜ ப்ருங்க பஜே ரகுவீர் மஹா ரணதீர அஜே
தவ நாம ஜபாமி நமாமி,ஹரீ பவரோக் மஹாகத் மான அரீ

(10)

குணசீல க்ருபா பரமா யதனம் ப்ரணமாமி நிரந்தர ஸ்ரீரமணம்
ரகு நந்த நிகந்தயத்வந்தவ கனம் மஹிபால் விலோக்ய தீன ஜனம்

(11)

பார் பார் வர் மாகஹீம் ஹர்ஷி தேஹீ ஸ்ரீரங்க
பதஸரோஜ அனபாயனீ பக்தி ஸதா ஸத்ஸங்க.

## ஸனகாதிகளின் ஸ்துதி

(1)

ஸ்யாமள காத் ஸரோரு ஹலோசன சுந்தரதா மந்திர பவமோசன

ஏக்டக் ரஹே நிமேஷந லாவஹிம் ப்ரபு கர் ஜோரேம் சீஸ் நவாவஹிம்
ஜய பகவந்த அளந்த அநாமய அநக அநேக ஏக கருணாமய

(2)

ஜய நிர்குண ஜய ஜய குணஸாகர் சுக மந்திர் சுந்தர் அதி நாகர்
நுய இந்திரா ரமண ஜயபூதர் அனுபம் அஜ அநாதி ஸோபாகர்.

(3)

க்யான நிதான் அமான் மான ப்ரத பாவன ஸுஜஸ புராண வேத வத
தக்ய க்ருதக்ய அக்யதா பஞ்ஜன நாம அநேக அநாம நிரஞ்ஜன

(4)

ஸர்வ ஸர்வகத ஸர்வ உராலய பஸஸி ஸதா ஹம் கஹீம் பரிபாலய
த்வந்த விபத்தி பவ பந்த விபஞ்ஜய ஹ்ருதி வஸி ராம் காம் மத கஞ்ஜய.

(5)

பரமானந்த க்ருபா யதீன மன பரிபூர்ண காம்
ப்ரேம பக்தி அநபாய னீதேஹு ஹம்ஹி ஸ்ரீராம்.

(6)

தேஹீ பக்தி ரகுபதி அதிபாவனி த்ரிவிதி தாப் பவதாப் நஸாவனி
ப்ரணத காம் ஸுரதேனு கல்பதரு ஹோஇ ப்ரஸன்ன தீஜை ப்ரபு யஹ் ரூப.

(7)

பவ் வாரிதி கும்பஜ ரகுநாயக் ஸேவத் ஸுலப ஸகல சுகதாயக்
மன் ஸம்பவ தாருண துக்க தாரய தீனபந்து ஸமதா விஸ்தாரய

(8)

ஆஸ்த்ராஸ் ஈர்ஷாதி நிவாரக் வினய விவேக விரக்தி விஸ்தாரக்
பூப மௌளி மணி மண்டன தரணி தேஹி பக்தி ஸம் ஸ்ருதி ஸரிதரணீ.

(9)

முனி மன மானஸ ஹம்ஸ நிரந்தர் சரண கமல வந்தித அஜ சங்கர
ரகுகுல கேது ஸேது ஸ்ருதி ரக்ஷக கால கர்ம ஸுபாஊ குண பச்சக.

(10)

தாரன தரன ஹரன ஸப் தூஷண துளசிதாஸ ப்ரபு திரிபுவன பூஷண

## நாரத பகவானின் ஸ்துதி

(1)

மாமவலோக்ய பங்கஜ லோசன
க்ருபா விலோகனி ஸோச் விமோசன
நீலதாமரஸ ஸ்யாம காம அரி
ஹ்ருதய கஞ்ச மகரந்த மதுபஹரி.

(2)

ஜாதுதான பருத் பல பஞ்ஜன
முனிஸஜ்ஜன ரஞ்ஜன அக கஞ்ஜன
பூஸுர ஸஸிநவ வ்ருந்த பலாஹக்
அஸரண் சரணதீன ஜனகாஹக.

(3)

புஜபல விபுல பாரமஹி கண்டித
கரதூஷண விராத வதபண்டித
ராவணுரி சுகரூப பூபவர
ஜயதசரத குலகுமுத ஸுதாகர.

(4)

ஸுஜன புராண விதித நிக மாகம
காவத ஸுர முனி ஸந்த ஸமாகம
காருணிக வ்யலீக மத கண்டன
ஸப்விதி குஸல கோசல மண்டன.

(5)

கவிமல மதன நாம மமதாஹன
துளசிதாஸ ப்ரபு பாஹி ப்ரணத ஜன.

## ருத்ராஷ்டகம்

(1)

நமா மீச மீசான நிர்வாண ரூபம் விபும் வ்யாபகம் ப்ரஹ்ம வேத ஸ்வரூபம்
நிஜம் நிர்குணம் நிர்விகல்பம் நிரீஹம் சிதாகாச மாகாச வாஸம் பஜே஽ஹம்

(2)

நிராகாரம் ஓங்கார மூலம் துரீயம் கிரா க்யான கோதீத மீசம் கிரீசம்
கராலம் மஹா கால காலம் க்ருபாளம் குணுகார ஸம்சார பாரம் நதோ அஹம்

(3)

துஷா ராத்ரி ஸம்காச கௌரம் கபீரம் மனேபூத கோடி ப்ரபா ஸ்ரீசரீரம்
ஸ்புரந் மௌளி கல்லோலினீ சாரு கங்காலஸத் பால பாலேந்து கண்டே புஜங்கா

(4)

சலத் குண்டலம் ப்ர சுநேத்ரம் விசாலம் ப்ரஸன்னனம் நீலகண்டம் தயாளம்
ம்ருகாதீச சர்மாம் பரம் முண்ட மாலம் ப்ரியம் சங்கரம் ஸர்வ நாதம் பஜாமி

(5)

ப்ரசண்டம் ப்ரகிருஷ்டம் ப்ரகல்பம் பரேசம் அகண்டம் அஜம் பானு கோடி ப்ரகாசம்
த்ரய: சூலநிர் மூலனம் சூலபாணிம் பஜே அஹம் பவானீ பதிம் பாவகம்யம்.

(6)

கலாதீத கல்யாண கல்பாந்தகாரி ஸதா ஸஜ்ஜனனந்த தாதா புராரி
சிதானந்த ஸம்தோஹ மோஹாபஹாரி ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ மன்மதாரி

(7)

நயாவத் உமாநாத பாதாரவிந்தம் பஜந்தீஹ லோகே பரேவா நராணும்
நதாவத்சுகம் சாந்தி ஸந்தாப நாசம் ப்ரஸீத ப்ரபோ ஸர்வ பூதாதிவாஸம்

(8)

நஜானமி யோகம் ஜபம் நைவ பூஜாம் நதோ ஹம்ஸநா ஸர்வதாசம்பு துப்யம்
ஜராஜன்ம துக்கௌத தாதப்ய மானம் ப்ரபோ பரஹி ஆபந் நமாமீச சம்போ

(9)

ருத்ராஷ்டகம் ப்ரோக்தம் விப்ரேண ஹர தோஷயே
யேபடந்தி நரா பக்த்யா தேஷாம் சம்பு: ப்ரஸீததி.

# கோஸ்வாமி துளசிதாஸரால் இயற்றப்பட்ட
# ராமசரித மானஸம் அல்லது
# மானஸ ராமாயணம் என்கிற ராமதர்சனம்



## உத்தர காண்டம்

[தியானம்

நாராயணு, ராமா சீதா, நீ பரதனுடைய சரணுகதியை ஸ்வீகரித்து, அவனைத் த்ருப்தப் பிரபன்னனுகச் செய்து, பதினுன்கு வர்ஷங்கள் அவனைக் காத்திருக்கும்படிச் சொன்னுய். கைகேயியாகிற தாயின் உள்ளத்தை வியாஜமாகக் கொண்டு, தேவகாரியத்தை ஸாதிப்பதற்கு வனம் சென்ருய். பரதனுல் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்படவேண்டும் என்று பிரார்த்திக்கப்பட்ட சமயம், நீ சித்திரகூடத்தில் அவன் கொண்டுவந்த அபிஷேக சாமான்களை அத்ரிஜா என்கிற கிணற்றில் போடச் சொல்லி, அந்த உத்தம தீர்த்தத்திற்குப் "பரத தீர்த்தம்" எனப் பெயரிடும்படிச் செய்தாய். உமையுடன் கூடிய சங்கர பகவானுல், "ராஜ்ய திலகத்தை நீ அடைவாய்" என்று சொல்லப்பட்டும், நீ ஏன் ஹனுமாரை பரதனிடம் செய்தி சொல்ல அனுப்பினுய்? பரதனுடைய நியமநிஷ்டைகள் எல்லாவற்றையும் ஸர்வக்ஞனை நீயும், ஜானகியும் அறிந்தும், குஹப்பெருமானுடைய திருமுக மண்டலத்தால் எல்லாவற்றையும் அறிந்தும், பரதனிடம் நேராகப் போய்ச் சேருவதற்கு ஏன் தாமதம் செய்தாய்? சொல். உன்னுடைய ஸங்கல்பம்தான் என்ன? அன்று தர்மபுத்ரர் கர்ணனையும், துரியோதனனையும், யுத்தகளத்தில் வென்று, ராஜ்ய பட்டாபிஷேகம் செய்வதற்கு யாதொரு தடையுமின்றி

---

குறிப்பு:—இந்தப் புஸ்தகத்தில் துளசிதாஸரின் ராமசரித மானஸ ராமாயணத்தின் மொழி பெயர்ப்பு செய்யுட்களின் நம்பரில் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிராக்கட் செய்திருக்கிற தியானமும், மொழி பெயர்ப்பில் பிராக்கட்டுக்களில் போடப்பட்டிருக்கும் வசனங்களும் என் மனுேபாவத்தையும் துளசிதாஸரின் கருத்துக்களையும் விமர்சனம் செய்கின்றன. (மொத்தம் ஸ்லாகங்கள்)—ஆசிரியர்.

இருக்கும்போது, ஏன் அவர் கலங்கினுர்? அவரைப் போல உனக்கு ராஜதர்மத்தில் பற்றுதல் குறைவா? அல்லது ராவணன், வாலி, ராக்ஷஸர்களைக் கொன்றதும், ராவண வதத்தினுல் யேற் பட்ட பிரும்மஹத்தி தோஷங்கள் வந்தனவென்று சங்கல்பித்து, ராஜஸூய யாகங்களைச் செய்யவும், அஸ்வமேத யாகங்களின் பெருமைகளையும், பூமியில் நிலைபெறச் செய்வதற்காக திட்ட மிட்டாயா? உனக்கு ராஜதர்மம் ஒருபுறம் இருக்கட்டும்; ரிஷி தர்மம்தான் பெரியது என்று நினைத்துப் பார்த்தால், நீ உன் பிறப்பினுல், க்ஷத்திரிய ராஜகுமாரனுகப் பிறந்து, ராஜ தர்மத் தையும், வர்ணுஸ்ரம தர்மங்களையும், நீ ஸம்ரக்ஷிக்காத போனுல், உன்னுல் ஸ்ருஷ்டி செய்யப்பட்ட உலகமும், அதில் வாழும் எண் பத்தேழு கோடி ஜீவராசிகளும், பிரவிருத்தி தர்மமும் வளர்ச்சி அடையுமா? அதனுல்தானே வியாஸர், நாரதர், பீஷ்மர் முதலிய வர்கள் ராஜதர்மமே மிக்க உயர்ந்த தர்மமாகவும், மற்ற எல்லா தர்மங்களும், தவங்களும், தானங்களும் ராஜதர்மத்தில் அடங்கி யிருக்கின்றன" என்று சொன்னுர்கள். மாந்தாதாவையும், ஸ்ருஞ்சயனையும் உதாரணமாகக் கொண்டு, நஹுஷ புத்ரனுன யயாதி, பூமியிலுள்ள அசுர ராக்ஷஸர்களைக் கொன்று, பல யாகங்களைச் செய்து, இந்தப் பூமியை தனது புத்ரனுகிற பூருவுக் குக் கொடுத்து, மனைவியுடன் முதுமைப் பருவத்தில் காடு சென்ருன். ரந்திதேவனும் கவாமயனம் என்கிற யாகத்தைச் செய்தும், பிராம்மணர்களுக்கு நூறு ஸ்வர்ணங்களையும் கொடுத் தும், இன்னும் பலவித தானங்களைச் செய்தும், உத்தமமான கீர்த்தியை அடைந்தான். அதுபோல இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ஸகர மஹாராஜன் பராக்ரமத்தினுல் பூமியை ஜயித்து, அதன் பிறகு ஆயிரம் அஸ்வமேதங்களைச் செய்து, பலவிதமான தானங்களாகிற வீடு, பொன், பூமி, கன்னிகைகள், போக்ய வஸ்துக்கள் பலவற்றைத் தானம் செய்து, ஸமுத்திரத்தால் அடையப்பட்ட பூமியை கோபத்தால் அவன் ஸம்ரக்ஷித்தான். அவன் பெயர் ஸம்பந்தமாக "ஸாகரன்" என்கிற பெயரை ஸமுத் திரம் அடைந்தது. அதைப்போல, வேனபுத்ரனுகிற ப்ருது மஹா ராஜன் உலகத்தை ஆபத்துக்களிலிருந்து (க்ஷதத்திலிருந்து) காப்பாற்றியதால் "க்ஷத்திரியன்" என்றும், அவனைக் கண்டு பிராணிகள் ராகம் (விருப்பம்) கொண்டதால் "ராஜா" வென்றும் பெயருள்ளவன் ஆனுன். அவனுடைய தர்ம நீதி பரிபாலனத்தி னுல், மரங்களில் ஒவ்வொரு இலையிலும் தேன் ஒழுகிற்று. பசுக் கள் யாவும் பதக்குப்பால் கறந்தன. மனிதர்கள் நோயில்லாமல்,

பயமில்லாமல், நூறு ஆயுசுடன், எங்கும் இஷ்டம் போல சஞ்சரித்துக் கொண்டார்கள். ஸமுத்திர ஜலமும் கல்லைப்போல நிலைத்திருந்தது. இவ்விதம் ராஜதர்மம், ஞானம், வைராக்யம், ஐஸ்வர்யம் நான்கிலும் ப்ருது மேலானவனாக விளங்கி, அந்த ப்ருதுவும் மரணமடைந்தான். அதன் பிறகு ஸ்ருஞ்சயன் என்கிற புத்ரன், ஸ்வர்ணஷ்டவி என்கிற ஹிரண்யநாபன் உயிர் பெற்று எழுந்தான். அதைப்போல பகவான் வேதவியாஸரும், ஹயக்ரீவன் என்கிறவனுக்கு ராஜதர்மத்தை விளக்கிச் சொன்னார். அவனும் பல யாகங்களைச் செய்து, நீதி யுடன் பிராணிகளிடம் தண்டம் செலுத்தி, யுத்தம் முடிவு பெற்றதும், ஸாதுக்களையும், வித்வான்களையும் திருப்தி செய்து, உத்தமகதியை அடைந்தான். அதைப் போல "தெய்வத்தால் எவ்விதம் கர்மம் "செய்யும்படி" பிறப்பிக்கப்பட்டாயோ, அவ் வித கர்மத்தைச் செய். அதைக் கொண்டுதான் நீ சித்தி பெறவேண்டும்;" "அரசனே, உனக்கே நீ வல்லவனல்லன்" என்று ஞான உபதேசத்தை வியாஸர் தர்மபுத்ரருக்குச் சொன்னார். அந்த தர்மபுத்தியுடன் ராஜதர்மத்தை அனுஷ்டித்த ராஜ ரிஷியான புருஷோத்தம ராமா, ஜானகி ராமா, பரத லக்ஷ்மண சத்ருக்ன வஸிஷ்ட பிரமுகாதிகளால் ஸேவிக்கப்பட்ட ராஜராஜா, உன்னை சுக்ராச்சாரியார், பிரஹஸ்பதி முதலிய ஆசார்யர்களை முன்னிட்டுக்கொண்டு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய் கிறேன். புண்ணியனாக உருக்கொண்டு வந்த பிரவர்த்தி தர்ம ராமா, சீதா, உங்களை சரணமடைகிறேன். குரு சரணங்களைப் பணிந்து, பிராம்மணர்களுக்கு ஹிதத்தைச் செய்து, தம்பிமார் களுடன் புளகித சரீரத்தை உடைய சீதாநாயகனாகிற தசரத ராஜகுமாரனாகிற ஸ்ரீராமச்சந்திரனுக்கு, ஸ்ரீராமச்சந்திர மஹா ராஜாவை, நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். ஆஞ்ச நேய, சுக்ரீவ, விபீஷணன் புடை சூழ, சீதாபிராட்டியுடன் சிம்மாஸனத்தில் ஏறிய ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை, வஸிஷ்ட, வாமதேவ, ஜாபாலி, காஸ்யப, விஸ்வாமித்திர முதலியர்ஷிகளால் சூழப்பட்டவனும், பரத, லக்ஷ்மண, சத்ருக்ன, சுமித்திர ஸேவித ராஜாதிராஜனான ஸ்ரீராமச்சந்திர மஹாராஜாவை நான் நமஸ் கரிக்கிறேன். கோஸலாதீசா, அயோத்தி எம்மானே, கருணை யுடன் எங்களிடம் இருக்கவேண்டும்.]

## ஸ்ரீ ராமசரித மானஸத்தின் ஏழாவது சோபானம்
## உத்தரகாண்டம் ஆரம்பம்

மயில் கழுத்தைப் போல ஹரி மரகத நிறமுள்ள நீலமேக ஸ்யாமளனும், தேவதைகளுக்குள் பரம ஸ்ரேஷ்டரும், பிராம்மணர்களுக்கு ஹிதம் செய்வதையே விரதமாகக் கொண்டவரும், விப்ரசரணமாகிற பிருகு பதத்தை மார்பில் சின்னமாக உடைய மஹா நாராயண அம்சரான ஸ்ரீ மஹாராஜா, ராமச்சந்திர மூர்த்தியை, சீதாபிராட்டியுடன் ராஜகம்பீரமாக, பரிபூர்ண சோபையுடன் விளங்கும் சக்கிரவர்த்தி ஸ்ரீராமனை நான் அடிக்கடி அடிக்கடி வணங்குகிறேன். பட்டுபீதாம்பரத்தை உடுத்தியவரும், தாமரைத் தடாகம் பூத்தது போல, மலர்ந்த ஸரஸிஜ நயனங்கள் உள்ள ஸ்ரீராமனை நான் அடிக்கடி (நாரதரை முன்னிட்டு) நமஸ்கரிக்கிறேன். எப்பொழுதும் மனம் சோகமற்றதாகவும், அதனால் ஏற்படும் சோபையுடன் திருமுகமண்டலம் எப்பொழுதும் பிரஸன்னமாக விருக்கின்றது. அப்பேர்பட்ட என் பிரபு பிரஸன்ன (வேங்கடேச) ராமனை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். கைகளில் பாணத்தையும் கோதண்டத்தையும் தரித்துக்கொண்டிருக்கும் கோதண்டராமனை ஸர்வ பிராணிகளின் ஹிதத்திற்காக தண்ட நீதி செலுத்தும் "ஸதென்வா" என்று நமஸ்கரிக்கிறேன். ஸர்வ சௌலப்ய, கிருதக்ஞ வாத்ஸல்ய, சௌசீல்ய குணங்களுடன் பிரகாசிக்கும் ஸ்ரீராமனை ஆஞ்சநேய, சுக்ரீவ, அங்கத, ஜாம்பவான் ஆகிய வானர சமூஹங்களுடன் கூடியிருப்பவனை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். பாரபக்ஷமின்றி மிக்க தயை, அன்பு, வாத்சல்யம் இவைகளுடன் பிரகாசிக்கும் தசரத ராமனை, பரத லக்ஷ்மண சத்ருக்ன தம்பிமார்களுடன் பந்துஜனங்களால் சேவிக்கப்படும் ரகுகுல உத்தம ராமனை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். என் பிரபு ஸ்ரீஜானகியின் நாதன், ரகுகுல ஸ்ரேஷ்டன், என்னால் அடிக்கடி அடிக்கடி ஸ்தவராஜம் செய்வதற்கு யோக்யமான ஏக புண்யமான விஷயம், புஷ்பகவிமானத்தில் ரங்கசாயியைப் போல ஆட்சி பீடம் செலுத்தும் ஸ்ரீராமனை நான் (ஜானகியை முன்னிட்டு) ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். புஷ்பகவிமான ஆருட ராமா, என்னையும் கிருதார்த்தனாக்க வேண்டும். (1)

கோஸலபுரிக்கு அரசரும், என் பிரபுவுமான ஸ்ரீராமச்சந்திர சுந்தரமூர்த்தியை, அவருடைய இரண்டு பாதபங்கஜங்களில் சித்தம்வைத்து, கசிந்த நெஞ்சனை பிரும்மா மஹேசரை புறம்

வைத்து அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். பங்கய கண்ணுள், ஜானகிதேவியின் கரகமலங்களால் வருடப்படும் அந்த சுத்த ஸத்வ ராமபாதங்களை அடிக்கடி சிந்தனை செய்யும் மனரூபியாகிற வண்டு, (நம்மாழ்வார் தியாகராஜரைப் போல,) ஸதா அந்த திவ்ய சீதாராம பாதங்களை தேனின்ப ஆராவமுதமாக உண்டுப் பருகி ஆனந்த அனுபவங்களை அடைவதற்கு ஸதா சுற்றிக் கொண்டு சஞ்சரித்துக்கொண்டு வரட்டும். (2)

குந்தபுஷ்பம், சந்திரமா, சங்குபோன்ற அழகான ஸௌம்ய ரூபத்துடன் ஆஸ்ரித வாத்ஸல்யராகவிருப்பவரும், ஜகதம்பிகை யாகிற உமாதேவியின் பதியும், வாஞ்சிதபலன்களை அளிப்பவரும் மஹா கருணாநிதியுமான உமாமஹேஸ்வரிகளை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். "பிரபோ, தீனர்களை ரக்ஷிக்கும் நாதர்களே, அழகான பூத்ததாமரை மலரைப்போல விகஸித்த கண்களை உடைய கஞ்சலோசனு, நிஷித்த காமங்களிலிருந்து விடுபடச் செய்யும் மோஹமஹாரி, மன்மதனையும், ரதியையும் சந்தோஷிப்பித்த ஸ்ரீசங்கரபகவானே, பார்வதிதேவியுடன் என் மனத்திற்குள் குடிகொண்டு எங்களை ஆசீர்வதிக்கவேண்டும்." (3)

[தியானம்

நாராயணு, சீதாராமா லக்ஷ்மணு, மகரநெடுங் குழைக் காதனே, மாயனே, என் நெஞ்சில்புகுந்து என்னை ஆள்வானே, உன் நினைவுகொண்டும் என் நெஞ்சுநிறைவும் எனக்கில்லையே. கார்வண்ணு, உன் செங்கனிவாய் நெகிழ்ந்து, பேசும் பேச்சுக் களையும் தாமரைக் கண்களையும் கனிந்த பொழிலுடன் என்னை ஆட்கொள்ள வரமாட்டாயா? கார்முகில்வண்ணன் என்று உன்னை நெற்கதிரைத் தேடிப்போகும் அம்ருதவர்ஷம் என்றும், கன்றுக் கிரங்கி நினைத்து முலைப்பாலுடன் ஓடிப்போகும் தாய்ப் பசுவைப் போல, என் ஆச்சார்யர்கள் சொல்லுகிறார்களே. என் நெஞ்சு நிறையப் புகுந்த கள்வா, உன்னைத்தானே தியாகராஜர் "ஸத்யர்" என்றும், உன்னை மீறுவதற்கு யாவரும் ஸாமத்தியமில்லை யென்று சொல்லுகிறரே. காசிபதியான மஹேசர் உனது தாரகநாமத் தைச் சொல்லி அல்லவோ, ஜீவர்களை வாழச்செய்கிறர். ஜகந் நாதரே, இந்திரத்யும்னன் போன்ற ராஜரிஷிகளால் வணங்கப் பட்டவரே. திரௌபதியின் சரணுகதவிரதத்தை மெய்ப்பித்தவரே என்னிடம்மாத்திரம் உமக்கு ஏன் இவ்வளவு தயக்கம்? ஸந்தோஷ மில்லாமை, தவறுதல், மதம், ஆசை, பொறுமையில்லாமை, பலம், அவிவேகம், அபிமானம். பரபரப்பு ஆகிய பாபங்களால் சூழப் பட்டு, ராஜ்யம்முதலிய போகங்களில் ஆசைகொண்டிருக்கிறேன்

என்று உமக்குத் தயக்கமா? அரசனுக்கும், தரித்திரனுக்கும் ஒரே வயிறுதானே? ஆசை என்பதை ஆயுள்முழுவதிலும் பூர்த்தி செய்யமுடியாதே. அக்னி விறகுகளால் வளருமேயொழிய சாந்தியை அடையுமோ? வயிற்றை ஜயிக்காதவன் புலியைப்போல பிறர்களுக்கு ஹிம்சை செய்கிறான் அன்றோ? வேதாத்யயத்தினாலும் ஒழிவடைந்து, சாந்தரூபர்களாக மிருத்யுவின் பயத்தை அடைகிறார்களில்லை. ஆசையைப்போல "கர்மாவும்," போகத்திற்குரிய பாபமும் என்று சொல்லப்படுகிறதே. ஆகவே ஆசையையும் கர்மாவையும் தள்ளிவிட்டு, சோகப்படத் தகாதவைகளுக்கு சோகப்படாமல், அன்று ஜனகராஜன் சொன்னாரே, "என்னுடைய செல்வம் அளவற்றது; எனக்கு ஒன்றுமில்லை, மிதிலை எரிக்கப்பட்டால் எனக்கு ஒன்றும் தகிக்கப்படவில்லை;" அதைப்போல மெய்ஞான உபவாஸ விரதத்தினால் அல்லவோ பதினான்கு வருஷங்கள் பரதன், ராமசீதா லக்ஷ்மணா, உங்களையே பரமார்த்தமாகக் கருதி ஞான உப்பரிகையில் வாழ்ந்து சோகத்தைவிட்டான். "பிரும்மஸம்பத்யதே" என்கிறபடி, ஸந்தேகத்தைவிட்டு, தியான நிஷ்டையில் வைராக்ய புத்தியுடன் வாழ்ந்துவர்த பரதன் பிரபஞ்சம் யாவும் சீதாராமர்களே என்று நம்மாழ்வாரைப் போல நாராயணனைக் காதலித்தானே, அப்பேற்பட்ட புனித பரதனை நம்மாழ்வாரை புரம் கொண்டு ஆயிரம் நமஸ்காரங்களைச் செய்கிறேன். இவ்விதமே தர்மபுத்ரரும் கிருஷ்ணபக்தியில் ஈடுபட்டு வாழ்ந்தார். அப்பேற்பட்ட மஹாபாகவதர்களை முன்னிட்டு, நாராயணா, ராமா, கிருஷ்ணா, மஹாலக்ஷ்மிநாதா, உங்களை சரணமடைந்தேன். ராமானுஜா, நீதான் தயை செய்யவேண்டும்.]

ராமனுடைய வனவாசமாகிற பதினான்கு வருஷங்கள் நாளைக்கு முடிகிறது; ஒரே ஒரு தினம் பாக்கியிருக்கிறது; என்கிற நினைவு அயோத்தி ஜனங்களுக்கு வந்தது. அவர்களுடைய வருத்தமும் சோகமும் பச்சாதாபங்களும், கவலைகளும் அதிகரித்துக் கொண்டுபோயின. சீதாராம வியோகத்தினால் பதினான்கு வருஷங்கள் கஷ்டப்பட்டாயிற்று. உபவாஸ விரதத்தினாலும், மனக் கவலைகளாலும் அயோத்தியின் நரநாரிகள் இளைத்து வெளிறிப்போய், தங்கள் பாபங்களுக்கு விடிவுகாலம் வருமா என்று ஆவலுடன், சீதாராம லக்ஷ்மண ஆகமனத்தை எதிர்பார்த்தவண்ணமாக இருந்தார்கள். (4)

இவ்விதம் விசாரப்பட்டுக் கொண்டிருக்கும்போது, நல்ல மங்கள சகுனங்கள் அவர்களுக்கு ஏற்படலாயின. இதைக் கண்டு அவர்களுடைய மனம் பிரஸன்னமடைந்து, ராம ஆகமனத்தில்

அவர்களுக்கு நம்பிக்கை விஸ்வாஸம் வளர ஆரம்பித்தது. எங்கள் பிரபு ஸத்யர்; சொன்னசொல் தவருதவர், ஸகுணஸ்வரூபி. அன்புவாத்ஸல்யம் பந்து ப்ரீதிகொண்டவர்; கல்யாண குணச் சேர்க்கைகளின் ராசிக்குவியல். தீனபந்து, ஆபத்ஸகர், நம்மை ஒருக்காலும் பரிதவிக்கவிடமாட்டார், என்கிற மஹா விஸ்வாஸம் பேய்மாதிரி வளர ஆரம்பித்தது. அதனுல் அவளுடைய மனம் களங்கமின்றி சந்தோஷத்தை அடைந்தது. (உபவாஸாதிகளாகிற விரதங்களினுலும் ராமத்தியானத்தினுலும் அவர்களுடைய பாபங்கள் விலக ஆரம்பித்தன.) பிரபுவை நாம் மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டு அழைக்கவேண்டும்; என்கிற எண்ணம் எழுந்தவுடன் அவர்கள் அயோத்திநகரை, சீதாராம விவாஹத்தின்போது எவ்விதம் சிங்காரித்தார்களோ, அதைப்போல பன்மடங்குகள் அயோத்தியை அலங்கரிக்கத் தலைப்பட்டார்கள். அயோத்தியின் நான்கு திசை வாயில்களையும் ரமணீயமாக அலங்கரித்தார்கள். (5)

புனிதமான கௌஸல்யாதேவி, அவளுடன்கூடிய மற்ற தாய்மார்களான கைகேயி, சுமித்திரை மனத்தில் ஆனந்தம் கொண்டார்கள். எந்த மஹானுபாவன் நற்செய்தியாகிற பிரபு ஶ்ரீசீதாராமன் தம்பியான லக்ஷ்மணனுடன் அயோத்தி வந்தாய்விட்டது என்று எப்பொழுது சொல்லப்போகிருன்; எங்களை மீண்டும் சீதாராம லக்ஷ்மணர்களுடன் சேர்த்து வைத்துத் தானும் இன்பமடையும் உத்தம ராமதூதன் எவன் இருக்கப்போகிருன், எவன் அந்த நற்செய்தி கொண்டுவரப் போகிருன் என்று வழிமேல் விழி வைத்தவர்களாகத் தோன்றினுர்கள். (அப்பேற்பட்ட ராமபக்தி ஸாம்ராஜ்யம் என்று வாழ்ந்துவந்த கௌஸல்யைக்கும், கைகேயி, சுமித்திரைக்கும் அயோத்தி ஜனங்களுக்கும் நான் ஆயிரம் நமஸ்காரங்களைச் செய்கிறேன். (6)

என் பிரபு பரதனுடைய தூய எண்ணங்கள் நிறைந்த தடாகம் மாதிரி கண்ணீர்களால் நிரம்பப்பட்டு மேன்மேலும் கண்ணீர்கள் பெருகிக்கொண்டு இருந்தன. அப்போது அவனுடைய வலது கண்ணும், வலது புஜமும் துடிக்க ஆரம்பித்தன. பல தடவைகள் துடிக்க ஆரம்பித்தன. இந்த சுப சகுனங்களைக் கண்டுகொண்ட பரதன் பிரியபந்து சீதாராம தர்சனத்தையும், லக்ஷ்மணனுடையச் சேர்க்கை ஆனந்தத்தையும் நினைத்துக் கொண்டு, மனத்தில் ஹர்ஷத்தைச் (சந்தோஷத்தை) அடைந்து எப்பொழுது இந்த இன்பச் சேர்க்கை கிடைக்கப்பெறும், என்று விசாரம் செய்யலானுன். (7)

"என்னுடைய பிராணன் இந்தத் தேகக்கூட்டில் இருப்பதற்கு இன்னும் ஒருநாள்தான் பாக்கியிருக்கிறது." நாளும் சுருங்கிக் கொண்டு போகும்போது, ராமனுடைய ஆகமனத்திற்கு வெளிப் படையாகச் சூசகங்கள் ஒன்றும் தோன்றுமலிருக்க, பரதனுடைய கவலைகளும் துக்கங்களும் விஸ்தரிக்க ஆரம்பித்தன. அபார மான பயங்களும் ஏற்படத் தலைப்பட்டன. "ஒருவேளை பிரபு வராமலிருந்துவிட்டால் இந்த எண்ணம் ஏற்பட்டதுமே, அவனுக் குப் பயமும் அதிகரித்தது. என் நாதன் ரகுராமன் என்னை விட்டுவிடமாட்டார். கட்டாயம் அவர் வந்துவிடுவார். அவ் விதம் வராமலிருப்பதானல், என்ன காரணம் இருக்கக்கூடும்? ஒருவேளை நான் குடில புத்தியுள்ளவன், கபடமாக நடந்திருக்கி றேன், என்று நினைப்பாரோ; இந்த எண்ணம் உதித்தவுடன் அவனுக்கு அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது. பிரபு என்னை உபேக்ஷை செய்துவிட்டாரோ? அவர் இன்னமும் வர வில்லையே?" (8)

"ஆம். என் பிராதா லக்ஷ்மணன்தான் மஹா பாக்யசாலி. அவன்தான் கொடுத்துவைத்தவன். (தங்கக் கொலுசுடனிருக் கும் சீதையின் பாதங்களையும், பிரும்மா, சிவன், ஸனகர் ஸநந்த ஞதிகள், மஹேந்திரன், மஹா யோகிகளான நாதமுனிகள், நம் மாழ்வார், துளசிதாஸ தியாகராஜாதிகள் வணங்கும்) அந்த உத் தம ராம பாதங்களை, (கல்லைப் பெண்ணுக்கிய மஹாராம பாதங் களை,) ராமசீதா கிருபையினுல் அடைந்தான். கபடமில்லாத பக்தியைக் கொண்ட ராமானுஜன். நானே, ஸந்தோஷமில் லாமை, தவறுதல், மதம், ஆசை, பொறுமையில்லாமை, பயம், அவிவேகம், அபிமானம், பரபரப்பு, ராஜ்யத்திலும் ராஜபோகங் களிலும் பாஹ்யமாக வெளிப்படையாக ஆசையை வைத்திருத் தல், ஆகிற பாபங்களால் நான் இன்னும் சூழப்பட்டிருக்கி றேனே. என் பிரபு இவ்விதம் என்னை நினைக்கிருரோ, இல்லையோ, தெரியவில்லையே. என்னுடைய குடில கபட புத்தி யைப் பிரபு தெரிந்துகொண்டு விட்டாரோ, தெரியவில்லையே. (இதனுல் என்னை, என் ராமநாதன் வெறுக்கிருரோ, என் ஸம் பந்தச் சேர்க்கையை வெறுக்கிருரோ, எனக்கு ஒன்றும் தெரிய வில்லையே. என்னை ஏன் அயோத்தியில் தங்கும்படி நியமனம் செய்து அவன் வனம் சென்றுன்? நான் இனி என்ன செய் வேன்? எனக்கு அவனின்றி துணையாரும் இல்லை." அவர் பாதங்களே உபாயம் அவருடைய பாதங்களே உபேயம்.) (9)

[தியானம்

பரதா, சத்ருக்னு, உங்களுடைய பக்தியே தனிப்பட்ட பெருமை கொண்டது. க்ஷத்திரியனுகப் பிறந்து, தர்மத்திற்காக வும் உலகத்தை வாழவைப்பதற்காகவும், அயோத்தி ஜனங்களை அனுக்ரஹிப்பதற்காகவும், நீங்கள் பகவானுகிற ராமனையே நம்பி யிருந்தீர்கள். தர்மத்திலும் தன் ஜாதிக்குரிய ராஜ்யபரிபாலனத் திலும் நிலைத்து நின்ற உங்களை பகவான் விஷ்ணுவாகிற ராமன் கைவிட விரும்புவாரா? உலகம், எல்லாம் விரும்பத்தக்க ஸுவர்க்க லோகமும், நான்கு வர்ணங்களும் ஆஸ்ரமங்களும் யாவும், வேத பாடங்களும் எல்லா வைதிக லௌகிக கர்மங்களும் ஸ்ரீமஹா விஷ்ணுவின் அருளின்றி உலகில் நிலைபெறமாட்டா. க்ஷத்திரிய னுகப் பிறந்த ராஜகுமாரன் முனிதர்மத்தைச் செய்யக்கூடாது. யானையின் அடியில் மற்ற எல்லாப் பிராணிகளின் அடிகளும் அடங்குவதுபோல, ராஜ தர்மத்தில் மற்ற தர்மங்கள் யாவும் அடங்கி, அரசனைச் சார்ந்தனவென்று நீதிசாஸ்திரம் அறிவிப்ப தாக பீஷ்மர் யுதிஷ்டிரருக்குச் சொன்னுர். ஆகையால் எல்லாத் தர்மங்களுக்கும் ராஜதர்மம் முக்கிய ஆதாரமாகும். நல்ல அரச னுல் பரிபாலிக்கப்பட்டால் சகல தர்மங்களும் நிலைபெறுகின்றன. ஆகையால் ராஜ தர்மத்தைத் தியாகமென்றும், சிறந்ததென்றும் சொல்லுகிருர்கள். தண்டநீதி குறைந்தால் வேதம் ஒளித்துப் போகும்; தர்மங்கள் யாவும் நஷ்டமடையும். எல்லா போகங் களும் ராஜதர்மத்தில் நிலைபெற்றிருக்கின்றன. ஆகையால் உல கத்தில் ராஜதர்மத்தைவிடச் சிறந்த தர்மம் வேறு ஒன்றுமில்லை. எல்லாக் கர்மாக்களும் எல்லாப் பிராணிகளும் உலகமும் ராஜதர் மத்திலிருந்து ஜீவிக்கின்றன. ஆதிதேவரான நாராயணரிட மிருந்து முதன்மையாக வெளிவந்தது, ராஜதர்மம் ஒன்றே. மற்ற தர்மங்கள் யாவும் அதன் அங்கங்கள்தான். முந்தியக் காலத்தில் மஹாவிஷ்ணு ராஜதர்மத்திஞல் சத்ருக்களை வென்று முனிவர்கள் தேவர்கள் யாவரையும் காப்பாற்றினுர். ஆகையால் ராஜதர்மம் மிகச் சிறந்தது. பகவானுன பிரும்மதேவரும் பிரவிருத்தி நிவிருத்தி என்று இருவகைத் தர்மங்களை ரக்ஷிக்கக்கருதி க்ஷத்தி ரிய ஜாதியையும் அரசனையும் படைத்தார். இவ்விதம் தர்ம சக்கி ரத்தில் நிலைபெற்றுநின்ற பரத சத்ருக்னனை, தந்தை சொல்லிய படி காட்டிற்குச் சென்ற ராம லக்ஷ்மணர்களை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். ராமனின் வசனப்படி பரதன் நியமங்களுடன் ராம பக்தியையும் ராம பாதுகைகளையும் ஆதாரமாகக் கொண்டு, பதினுன்கு வருஷங்கள் அயோத்தியை நந்தி கிராமத்திலிருந்து

பரிபாலித்து வந்தான். "பாதுகா ராஜ்யம்," மிக்கச் செழிப்புடன் விளங்கியது. அவ்விதம் அயோத்தியைப் பரிபாலித்த பரத சத்ருக்னர்களை நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.]

"என் பிரபு தீனதயாளு; (நான் அவர் சொல்லியபடி ராஜ தர்மத்தைப் பரிபாலித்தேன். ஆனால் இதற்காகவா என்னை அயோத்தியில் தங்கும்படி நியமித்தார்?) கர்மங்களால் மாத்திரம் அவரை சந்தோஷப்படுத்த முடியுமோ? (பக்தி ஞானம் பிரபத்தி இவைகளுக்கு வேண்டிய சரண்ய குண விசேஷங்களில், பரிபூர்ண பகவத் அனுபவமாகிற ராம சேர்க்கையை அடைந்து எம் பெருமாளே உபாயமாகவும் உபேயமாகவும் ஆவான்,) அவனன்றி வேறு கதியுமில்லை; அவனுக்குத்தான் ஏகபோக உரிமையாகிற அனன்ய கதி; அனன்யார்ஹ சேஷத்வம் பூண்டு வந்த நான் அவ்விதமில்லாவிடில் எவ்வளவு கல்பங்கள் கர்மங்கள் செய்திடினும் அவனை அடைய முடியுமோ? (கர்மத்திற்கு ஏற்ப ஞானமும் பக்தியும் அனன்ய சரணத்வமும் அவசியம் அல்லவோ!) என் கர்மாக்களின் ஆராதனை ஒன்றிலே பிரபு தியானம் செலுத்துவாராகில், கோடிக்கணக்கான கல்பங்கள் நான் காத்துக்கிடக்க வேண்டுமே? பிரபத்தி ஞானத்துடன்தான் நான் அவரை அடையவேண்டும். அந்த தீனபந்து, மஹாத்மாவின் கிருபையை அல்லவோ நான் யாசிக்கவேண்டும். (அதிமிருது ஸ்வபாவமுடைய என் பிரபு, கன்றுக்கு இரங்கி தாய்ப்பசு நினைத்ததும் பால்சொரியுமாப்போலே, உலர்ந்த பூமியையும், நெற்கதிர்களையும் கண்டு மழை வர்ஷம் வருவது போல, தியாகராஜ ஆஞ்சநேய துளசிதாஸாதிகளாகிற பக்தர்களைத் தேடிக்கொண்டு பிரபு ஜானகிராமன் வருவது போல,) மஹா கிருபாளுவாகிற ரகுகுலோத்தமனாகிற ராமன் என்னுடைய அவகுணங்களையும் குறைகளையும் பாரார். மான்யரான பிரபு தன் பக்தர்களுக்கும் மானத்தைக் காப்பவர். உயிரை ரக்ஷிப்பவர். சீதையுடன் கூடிய ராமன் பக்தர்களை ரக்ஷிப்பவர். தயாபூர்ணமாக விருப்பவர். கோமள சித்தத்தை உடையவர்." (நம்பிக்கை குறைவு எனக்கு ஏன் வந்தது? நான் வேறு உபாயமற்று கிலேசங்களைப் போக்கும் ஸ்ரீசீதாராம பாதங்களையே நம்பினேன். "வியாஸ நாரதாதி மஹரிஷிகள் ஸம்சயமற்றதும் சந்தேகங்களைப் போக்குவதும் வசனங்களின்படி கர்மங்களில் பலன்களை "நாராயணனுக்கே" என்று அர்ப்பணம் செய்து "நாராயண ப்ரீதியில்" விரதம் பூண்டு வாழ்ந்துவரும் எனக்கு, திருமந்திரத்தில் பிறந்து, த்வயத்தில் வளர்ந்து, அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்,

அனன்ய சேஷனுய், அனன்ய சரணனுக, எனது ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களை அடைவதற்கு, எனது ராஜ தர்மத்தை ஸஹகாரித்வமாக, ராம கைங்கர்யமாக வல்லவோ, நான் அனுஷ்டிக்கிறேன். அதனுல் ராம கிருபை எனக்கு கிடைக்குமா ?) (10)

"நான் எதை நினைத்தாலும், சீதாராமனிடமுள்ள மஹா விஸ்வாஸத்தை விடக்கூடாது. என் பிரபு ப்ரியதமர். (உடம்பில் அழுக்குடைய வத்ஸத்தின் வழும்பை நக்குவதுபோல, தாய்ப்பசு கன்றை நக்குவதைப் போல, பிரபன்னனுடைய தோஷங்களைப் பாராத சரணுகத வத்ஸலனுகிற என் பிரபு ராமன் புத்தி பூர்வமாகவும் யதா சக்தியுடனும் செய்யப்பட்ட எனது சரணுகதி தர்மத்தை "போக்யம்" என்று ஈஸ்வரன் ஸ்வீகரிப்பார். பிரகி ந்தி விசேஷத்வத்தினுல் யேற்படும் அபராதங்கள் புத்தி பூர்வமாக ஏற்படினும் கூட, என் பிரபு மீண்டும் புனப்பிரபத்தி செய்யும் என்னை, விட்டு விடமாட்டார்." "தேவம் சார்ங்கதரம் விஷ்ணும்யே பிரபன்னுந்ः பராயணம், நதேஷாம் யம ஸாலோக்யம் நசதே நரகௌகஸः" அவர்கள் நரகத்தில் இருக்கமாட்டார்கள்; என்கிற வாமன புராண வசனப்படி, நான் சார்ங்கபாணியான கோதண்ட ராமனையே மீண்டும் சரணம் அடைவேன்.) அவனிடமே எனது திருடமான நம்பிக்கையை வைப்பேன்." (என் பிரபு சரணுகதர்களை ரக்ஷிக்கும் கல்யாண குணச்சேர்க்கைகளின் ஸகுண ஸ்வரூபம். ஆஸ்ரிதர்களின் தாரதம்யத்தைப் பாராமல் சுபத்தை அளிப்பவன். ராம ப்ரீதியையே உத்தேஸ்யமாக வைத்து வாழ்பவன். ஸர்வ ஸ்வதந்திரனுன ராமனுடைய கட்டளையை முறை தவருமல் பரிபாலிப்பவன். எம்பெருமானுடைய நிக்ரஹம் வந்தாலும் சரி; வராத போனுலும் சரி. நாம் விரும்பாமல் எதிர் பாராயல் எது நேர்ந்தாலும் சரி, நான் விட்ட அம்பைப் போல, ஒருநோக்குடன் ராமனுடைய ஸங்கல்பத்திற்கு வாழ்வேன்; என்று திட நிச்சயம் கொண்ட என் பரதன், ஏன் மார்க்கதரிசி, மீண்டும் கல்யாண குணங்களுடன் பிரகாசிக்கும் சீதாராமனை நினைத்து புளகாங்கிதமடைந்தான்.) ஈஸ்வரன் எதைச் செய்தாலும் சரி, என்ற உகப்புடன் வாழ நினைத்த பரதன் சுபமான சகுனங்களைக் கண்டு சிறிது ஆறுதலடைந்தான். (நான் "ஸர்வ பாப பிராயச்சித்தம்" என்கிற ராம அபிப்ராயத்தின்படி வாழ்வது என்கிற பிரபத்தி செய்திருப்பதால், யதிவா ராவணः ஸ்வயம், என்று சொல்லிய ராமனை அடைந்திருப்பதால், நான் கவலைப்படவேண்டாம்.) இன்றே நாளையோ, என்று காலம் பார்க்கும் எனக்கு பதினுன்கு வருஷங்கள் கழிந்த பின்பும், ராம ஆகமனத்தின் காலவரை

தாண்டிப்போனாலும், அந்த எண்ணம் தோன்றவே, பரதன் நினைத்தான்; என் மாதிரி ஒருவரும் ராம அபராதி பூலோகத்தில் இருந்திருக்கமுடியாது. ராமனுக்குத் தம்பியாகப் பிறந்தும், ராமனுக்கு மஹத்தான அபராதத்தைச் செய்த மஹாபாவி ஜகத்தில் நான் ஒருவன்தான் இருக்கக்கூடும். நான் பிராணனை ரக்ஷித்து, நல் நினைவால் வாழ்ந்தும், என் முடிவு காலம் வரை ராம அபராதியாகத்தான் திகழ்வேன். இதில் சந்தேகம் ஒன்றுமில்லை. என்னைப் போல நீசமான பிறவி யார் இருக்கக்கூடும்?'' (11)

''(என் பிரபு உதாரர்.) ஸ்ரீராமனை விட்டுப்பிரிந்து பரந்ததும் விசாலமானதும் ஆழமுள்ளதான ராம வியோக ஸமுத்திரத்தில் நான் மூழ்கியிருக்கிறேன். என் மனம் மூழ்கியிருக்கிறது;'' என்று தன்னை வாட்டிக்கொண்ட பரதன் கழிக்கவேண்டிய சோகத்தைக் கழித்துக்கொண்டிருந்தான். (கால விளம்பத்தினால் ஏற்பட்ட சோகம், சோகத்தின் ஹேது, உபாய பூதனாகிற ஈஸ்வரன் தன் கார்யத்துக்குத் தானே கடவன் ஆகிறபடியால்; பிரபன்னனை மாசுச: என்று சொல்லி ''ஒருக்காலும் கைவிடேன்'' என்கிற ஆதாரத்தின்படி, பகவத் ப்ராப்திக்கு விரோதிகளை எல்லாம் அழிக்கும்) ஜனார்த்தனர் சரியான காலத்தில் விப்ரரூபத்தை தரிக்கும் பவன சுதனாகிற ஆஞ்சநேயரை பரதனிடம் அனுப்பி வைத்தார். அவன் வந்த சமயம், ஆழமான கடலில் மூழ்கப் போகின்ற ஒருவனுக்கு உயிர் தப்பிவிப்பதற்கும் அக்கரைக்கு ஆபத்தில்லாமல் அடைவதற்கும் ஸஹகாரியான ஒரு ஓடம் போலிருந்தது. சோகத்தால் பீடிக்கப்பட்ட சேதனனுக்கு ''சோகிக்கவேண்டாம்; (அத்திகிரி அருளாளப்) பெருமாள் வந்தார்; (ஆனை பரிதேரின் மேல் அழகர் வந்தார். கச்சிதனில் கண் கொடுக்கும் பெருமாள் வந்தார்; கருதவரம் தரும் தெய்வப் பெருமாள் வந்தார். முத்தி மழை பொழியும் முகில்வண்ணன் வந்தார். ஆதிமூலமே, எனக் கூப்பிட்ட யானையைக் காக்க சக்தி உடையவர் வந்தார். உத்திரவேதியில் உதித்த அருள்வரதர் வந்தார். நித்ய ஸூரிகளால் தொழப்படும் திருவடிகளை உடைய அருள் பரதர் வந்தார்.'') என்று சொல்லும்படி ஆஞ்சநேயர் ராமதூதன் சீதாபிராட்டியின் அந்தரங்க தூதன் அவிடம் பரதனிடம் சீதாராமலக்ஷ்மண ஆகமனச் செய்தியைச் சொல்லி களிப்பூட்ட ஆவிர்பவித்தார். (அப்பேற்பட்ட பரத சத்ருக்ன சோகத்தை விலக்கிட்ட மஹா ஆசார்யர் போலவிருக்கும் ஆஞ்சநேயரை நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். என்னையும்



ஸ்ரீராமனுடைய விரஹதாபமாகிற சமுத்திரத்தில் மூழ்கிப்போன பரதனுக்குக் காக்க வந்த ஓடம்போல் விளங்கின ஹனுமான் விப்ர ரூபமாகக் காக்ஷி அளித்தல்.

ரக்ஷித்து ஜானகி ராம பாதங்களில் சேர்க்கவேண்டும் என்று லக்ஷ்மணனை முன்னிட்டு பிரார்த்திக்கிறேன்.) (12)

[தியானம்

பரதா, உன் பக்தியும் ராமஸ்மரணையும் மிகமிக மெச்சத் தகுந்தது. நீதானே பிரபன்ன ஜனஸந்தான கூடஸ்தரான நம்மாழ்வாருக்கு வழிகாட்டியாக நின்றாய். உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லாமல், ராமனையே ஏககதியாக நின்று வாழ்ந் தாயே, அதைநினைத்தால் திருக்குருகூர் சடகோபன் ஸ்திரமாய் நின்ற நிலையை அல்லவா ஞாபகப்படுத்துகிறது. அந்த நிலையோ, ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரோ என்று முழங்கு வது போல, அல்லவா விருக்கிறது. ஆஞ்சநேயரும் உன்னுடைய வழுவில்லாத ஸத்பக்தியையும் ஏகபராயணத்தையும் கண்டு ஆச்சரியப்பட்டுப் போயிருப்பாரே. தியாகராஜர் அன்று சொன்னார். "ராமா, நீதானே என் குலதனம்; ஸந்ததமும் என் ஜீவனம்; இதுவரையிலும் நான் உன்னை சரியாகப் புரிந்து கொள்ளாதது என் குற்றமேதவிர, உன் குற்றமில்லை. மாதவா, சீதாவரானுஜஸஹிதா, மங்கள கரனும் நீதானே. பரமாத்புத சரித்திரத்தை உடையவனும் நீதானே. காதிகுலத்தைச் சேர்ந்த விஸ்வாமித்திரருடைய யாக ஸம்ரக்ஷணத்தைச் செய்ததைப் போல, பரதனுடைய தபஸ்ஸையும் அங்கீகரித்தவன் நீதானே. உன் மித்ரர்கள், ஸுஹ்ருத் ஜனங்கள், பாபரஹிதர்கள். உன்னைப்புகழ்ந்து சம்பு பார்வதி போன்றவர்கள் உன்னுடைய குண காம்பீர்யத்தில் ஈடுபட்டவர்களாக ஸுஸ்வரமாகவும், மாதுர்யமாகவும் கனராகங்களைப்பாடி லயத்துடன் அனுபவித்து தங்களையும் பிறர்களையும் இன்புறச் செய்கிறார்கள். ஹே ராகவா, ஸ்வபிரகாசா, எல்லோரையும் இன்புறச் செய்யும் ரமணீயகரா, ஸர்வோத்தமா, என்னிடம் கருணை செய்ய மாட்டாயா?" தியாகராஜர், குருகூர் சடகோபன், பரதாதிகளின் ஹ்ருதயங்களில் கள்ளத்தனமாகப் புகுந்த, அரவிந்தலோசனன், தேவப்பிரான் என்றும், உன் சீதையை கருத்தடங்கண்ணி நாச்சியார் என்று அடைசொல் வரும்படி என்ன மாயம் செய் வாயோ, அதை என்னிடம் செய். தொலைவில்லி மங்கலத்தில் வீற்றிருந்த திருக்கோலத்திலிருக்கும் நாராயணா, இந்திரன் வாயு வருணன் முதலியவர்களுக்குப் பிரத்யக்ஷமாக விருந்தாயே, உன்னைத் தலைவணங்கும் என்னையும் கடாக்ஷிக்கமாட்டாயா?

உன் திருநாமத்திலே சிந்தையாகவிருக்கும் என்னிடம் கிருபை பாலிக்க மாட்டாயா?]

அந்த ஆஞ்சநேயர் அந்தபரதனைப் பார்த்தார். தர்ப்பாசனத்தில் ஜடாமுகடத்துடன், தவத்தினல் இளைத்துப்போன சரீரத்துடன் "ராம், ராம்; ராமா, சீதாராம்" என்று இடைவிடாது ஜபித்துக் கொண்டும், ரகுபதியின் தர்ம நெறியையும் சிந்தித்துக் கொண்டும், ஸாது ஸம்ரக்ஷணத்தையும் ஸ்மரித்துக்கொண்டும், அரவிந்த லோசனங்களில் ராம நாமத்தை இடைவிடாமல் உச்சரிப்பதினல் ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டும், யோக ஸமாதியில் இருப்பதைக் கண்டார். (அந்த ராமதியான பரதனுக்கு ஆஞ்சநேயரை முன்னிட்டு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (13)

பரதனைக்கண்ட ஹனுமார் அதிபிரீதியினல் சந்தோஷத்தை அடைந்தார். அன்பு சூட்டிய பரதனைப்பார்த்து, பரதனின் மனத்திலுள்ள அந்தர்யாமியாக வாழ்ந்துவந்த எம்பிரானை ஒடிவந்து சரணமடைந்தார். (என் மனக்கடலில் மாயமணுள் நம்பி வாழ்வானு? உளன் கண்டாய் நன்னெஞ்சே, உத்தமன் என்றும் உளன் கண்டாய் உள்ளுவா: உள்ளத்து உளன்கண்டாய், வெள்ளத்தினுள் ளானும் வேங்கடத்துமே யானும் உள்ளத்தினுள்ளான் என்று ஓர், என்று பொய்கையாழ்வார் சொல்லும்படி அந்த ராமன் பரதனுடைய உள்ளத் திருக்கோயிலிலிருப்பதைக் கண்டார் என்பிரபு ஆஞ்சநேயர்.) மனத்துள்ளான் என் பிரபு ராமன் இவ்விதமாக கோயில் கொள்வார் என்று நினைப்புடன் புளக சரீரத்துடன், பரிபூர்ண லோசனங்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, என் ஆசார்யர் ஹனுமான் (சிவசக்தியின் ஐக்யஸ்வரூபம்,) ஆனந்தமயமாக பரதனையே பார்த்துக் கொண்டிருந்தார். (சீதா பிராட்டிக்கு இன்செய்தி சொல்லி மனஊட்டம் அளித்த) ஹனுமான் (அதே பிரகாரம்) சுகத்தைத் தரும் மதுரமான வாணியினல் பரதனுடைய காதுகளுக்கு அம்ருதத்தைப் பொழியும் வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். (14)

[தியானம்

ராமா சீதா, நாராயணு, லக்ஷ்மிபிரபோ, புண்டரீகாக்ஷா, உய்யக்கொண்டார், எங்களாழ்வான், மார்க்கண்டேயர், பிரும்ம ருத்திராதிகள் பெரிய திருவடி, சிபிச்சக்ரவர்த்தி முதலிய வைஷ்ணவர்களை ரக்ஷித்த தர்மவிக்ரஹமே, பரதனுக்கு நீ

எவ்விதம் விளங்கினுய்? பெரும் ஞானச்சுடராக வல்லவோ நீ விளங்கினுய். நீதானே பரிமுகமாய் பிரும்மனுக்கும் வேதாந்த தேசிகருக்கும் நான் மறை ஓதினுய். சுத்த ஸத்வ மயமான சீதா ராமா, சௌரியே, பங்கய வல்லியுடன் கூடிய நீ எனக்கு அருள் புரியவேண்டும். பரதனுடைய நந்திக்கிராம வாழ்க்கை அன்று ராமானுஜர் சொல்லிய வசனங்களின்படி த்வயத்தை அனுஸந்தித்துக்கொண்டு, ஸ்ரீரங்கத்தில் சுகமாக காலத்தைக் கழித்துக் கொண்டு, பகவத் கிருபையை எதிர்பார்க்கும் திருப்த பிரபன்னனைப் போல அல்லவா விருக்கிறது! ராமபிரானுடைய ஸத்வ குணங்களை நினைப்பவனுக, பரதன் ஆத்மஸ்வரூபத்தைப் பற்றிய விவேகத்தில் நிலைபெற்றிருந்தான். மனோவாக்கு காயங்களின் ஒற்றுமையினுல் யேற்படும் சீலதர்ம வாழ்க்கையினுல் பகவத் ஆராதனம் என்று கருதி, நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்துகொண்டு, தன்னையும் பிறரையும் துன்புறுத்தாமல் ராமானுவர்த்திக்கு பிரதிகூலமான காரியங்களை வர்ஜித்து, வெளி இந்திரியங்களைப் பழக்கி, தகாத விஷயங்களில் ஆசையைத் துறந்து, ஸாதுக்களோடு சேர்ந்திருக்க தகுதிபெற்று, எவ்வித ஆபத்திலும் ராமவிஸ்வாஸம் கொண்டு, சீதா ராமனுடைய கருணைக்குப் பாத்திரமாகி, முமுக்ஷுக்கள் வாழ்வதுபோல அல்லவா, பரதன் சத்ருக்னனுடன் பதினுன்கு வர்ஷங்கள் ராமனைவிட்டுப் பிரிந்து வாழ்ந்து வந்தான். எம்பெருமானுர் சரணுகதிகத்யத்தில் பகவானுடைய வாக்யமாகச் சொன்னுரே, அதஸ்த்வம் தவ தத்வதோ மத்ஞான தர்சனபிராப்திஷு நிஸ்ஸம்சய: சுகமாஸ்வ, ''ஆதலால் நீ என்னை உள்ளவாறு அறிவதிலும், பார்ப்பதிலும், அடைவதிலும் ஸந்தேஹ மற்றவனுய் இரு,'' என்று வாழ்ந்துவந்த பரதனை ஆஞ்சநேயரை முன்னிட்டுக் கொண்டு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். இவ்விதம் வாழ்வதினுல், அவனுக்கு சோக நிவ்ருத்தியுடன் பாப நிவிருத்தியும் கர்மவாசனைகளின் நிவிருத்திகளும் ஏற்பட்டது. அனுஷ்டான பர்யந்தம் இல்லாத ஞானமும் சித்தி பெற்றது. நிஷ்பிரயோசனமாகச் செய்யப்பட்ட ராஜதர்மம் என்கிற அயோத்தியின் பரிபாலனமும் அவனுக்கு ராமானுவர்த்திக்கு பலமாக விளங்கியது. அதனுல் களிப்புற்ற பரதன் பூர்வ, அபர மத்ய, அந்தர தசைகளைப் பற்றிய ஸம்பாவிதமான சோகமும், பாபமும், பயமும் முழுவதையும் கழித்துவிட்டான். உத்தரகிருத்ய விசேஷத்தால் பரிபூர்ண கைங்கர்ய பலசித்தியையும் பரதன் அடைந்து விட்டான். அவனுக்கு ப்ராப்யருசியும், ப்ராபக

விஸ்வாசமும், அகிஞ்சன்ய ஞான விசேஷங்களும் உண்டான போது, சோகங்கள் விலகின. உபாயவிசேஷத்தால் சரணுகதி தர்ம பரிபாலனந்தால் ராமன் கால விளம்பம் செய்தாகிலும், கால முடிவில் தாய்ப்பசு கன்றைத்தேடி வருவது போல அவனே திருவுள்ளம்கொண்டு பரதனிடம் வந்துவிட்டான். ஸர்வ சுலபனுகவும் பரம காருணிகனுகவும், ஸ்வாதந்திரியத்தை யிழந்த ரகுராமனுக விளங்கினுன். அயோத்தி ஜனங்களேயும் தாயா ரான கைகேயியும் மற்ற தாய்மார்களேயும் ஸம்ரக்ஷித்து வந்த தால் நிரபராதியாகி உத்திர கிருத்ய நியம வாழ்க்கையால் தன்னேயும் பந்து ஜனங்களேயும் அயோத்தி மக்களேயும் பரதன் பரிசுத்தப்படுத்தினுன். பகவான் புத்திபூர்வமாகச் செய்யப்படும் அபராதங்களே மன்னிக்கும் ஸ்வபாவம் உள்ளவன், நத்யஜேயம் கதஞ்ஜன, என்கிறபடியும் புன: பிரபத்தி என்கிற பிராயச்சித்த விசேஷத்தால் அசரண்ய சரண்யனின் அனுதாபத்தை அடைந் தான். கேவலம் ஆத்ம அனுபவத்தினுல் பரம பலமான சீதா ராம கைங்கர்யத்தை ஸர்வபிரகாரமும் அடைந்தான். ரக்ஷண பரத்தை ஏற்றுக்கொண்ட ராமபிரான் ஸர்வபர நியாஸம் செய்த பரதனே அங்கீகரித்து அவனே கிருத கிருத்யனுக ஆக்கி, சர்மஸ் லோகத்தில் ஸாரதமமாகிற மாசுச: என்கிற சர்வவாக்கியத்தின் தாத்பர்யத்தை விளக்குவதற்கு ஆசாரியனேப் போல ஆஞ்ச நேயர் அன்று பரதனிடம் தோன்றினுர். சர்மதசையில் ஆசாரியர்கள் ஸத்சிஷ்யர்களுக்கு உபதேசிப்பதைப் போல என் பிரபு ஆஞ்சநேயர் பரதனுக்கு அன்று தோன்றினுர். அப்பேற் பட்ட ஆஞ்சநேய பரத சத்ருக்னுதிகளே முன்னிட்டு நான் சீதா ராம லக்ஷ்மண திருவடிகளே அடைகிறேன்.]

"பிரியமுள்ள பரதா, எந்த மஹானுபாவரின் கருணேயை உத்தேசித்து, நீ இரவும் பகலும் வாட்டமில்லாமல் விரஹ தாபங் களே அனுபவித்துக் கொண்டிருக்கிருயோ, அந்த மஹா பிரபு, (வள்ளல் ஆதிகூர்ம பிரான், உன்னிடம் அகலகில்லா திருமகளுடன் உனக்கும் உன் தாபங்களுக்கும் முக்திமழையைப் பொழிவிக்கும் முகில் வண்ணனேப் போல) அருள்வரதர் வந்து கொண்டிருக்கிருர். பிரிய பாக்கியமுள்ள பரதா, எந்த ஆதிமூலப் பெருமாளின் பரந்த குண கீர்த்திகளே ஸுஸ்வரராக தாள பாவத் துடன் ஸதாகானம் செய்துகொண்டிருக்கிருயோ, அந்த உம்பர் தொழும் கழலுடைய அருளாளப் பெருமான் (கன்றுக்கிரங்கி, நினேத்து முலேவழியே நின்று பால்சொரியும் காமதேனுவாகிற தாய்ப்பசுவைப்போல) என்பிரபு தனது திருமுக மண்டலம்

குளிர்ந்து சந்திர பிம்பத்தைப் போல உன்மீது அருள் பொழியும் அழகர்போல வந்துகொண்டிருக்கிறுர். பரதா, ரகுகுலதிலகன், ரகுசைலதீபம், ஸஜ்ஜன பாரிஜாதம், நான்முகன், வெண் ணேறன், இந்திரன், வானவர், புள்ளூர்தி கழல்பணிந்திடும் என் பிரபு, சரணுகதர்களுக்கு கண்கொடுக்கும் பெருமாள், முனி ஜனங்களின் அருளாளன், உன் க்ஷேமகுசலங்களை முதலில் என் மூலமாகவும், அதன் பின்புதானே நேரில் விசாரித்து அருள் பாலிப்பதற்காகவும் (நீலமுகில் நெற்கதிர்களை நாடிவருவது போல, ஸூக்ஷ்மபுத்தியை உடைய பரதா,) உனக்கு மாகிருபை செய்ய அருள்வரத ராமன் வந்துகொண்டிருக்கிறுர்.'' (அப்பா, பரதா, சத்ருக்னு, உங்களுடைய ராமபக்தியே அதி ஆச்சரிய மாக விருக்கிறது. பரம அபராதியான ஜகத்தைக் காப்பாற்று வதாகவிருக்கிறது. எனக்கும் துளசிதாஸ தியாக ராஜாதி களுக்கும் ஆனந்தத்தை உண்டுபண்ணுவதாக விருக்கிறது.) (15)

''என் பிரபு ரகுராமன் யுத்தத்தில் சத்ருக்களை வென்று, ஸூயசஸ்ஸூடன், பிரும்மருத்ராதி வானவர்களால் மிக்கப் புகழ் கீர்த்திகள் பாடப்பெற்று, சீதையுடனும், தம்பி ராமானுஜனுட னும், பிரபு ராமன், லக்ஷ்மிதேவியின் நாயகனுகிற நாரா யணன் வருவது போல, தன்னுடைய வனவாசத்தை முடித்துக்கொண்டு, விரதத்தின் அவபிருத ஸ்நானத்தைச் செய்த மாமுனி போல, உன்னையும், அயோத்தியையும் நோக்கி வந்து கொண்டிருக்கிறுர்'' (யசோதை பிராட்டி யின் பக்தி என்னும் கயிற்றுக்கு கட்டப்பட்ட பிரபு இன்று உன் பக்திக்கு வசப்பட்டு உன்னிடம் வந்து கொண்டிருக் கிறுர்.) இந்த அம்ருத வசனங்கள் பரதனுடைய செவிகளில் விழுந்ததுதான் தாமதம். பரதனுடைய துக்கங்கள் விலகின. ராமபலத்தை அடைந்த மஹா பாக்யவானுகிற பரதன், தாக மடைந்த புருஷன் புஷ்கலாவர்த்தம் என்கிற மேகங்களினுல் பொழியப்படும் உதங்க அம்ருதத்தைப் பருகி, எவ்விதம் ஆனந் திப்பானே, அதுபோல ராமாமிருதத்தை அனுபவித்தான். (உகந்த பயன் எனவும், சேதனர்களிடம் உயிர்ப் பொருளாக வசிக் கின்றவரும், அடியவர்களாகிற வைஷ்ணவ பாகவத கோஷ்டிகள் அமுது செய்யும் பகவத் நைவேத்யம் அம்ருதம் போல, என் பிரபு, ஆஞ்சநேய பரத சத்ருக்னுதிகளுக்கு அன்று விநியோகப் பட்டான். அப்பேற்பட்ட கருணுமூர்த்தியான ராமனுக்கு, சீதா நாயகனுக்கு, லக்ஷ்மணுக்ரஜனுக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (16)

பரதன் ஆச்சரியம் கொண்டு வினவ ஆரம்பித்தான்: "ஐயனே நீ யார்? எங்கிருந்து வந்திருக்கிருய்? என் மனத்திற்கு உகந்த அருள்வாக்குக்களைச் சொன்னுயே. நான் உனக்கு என்ன கைம்மாறு செய்யக்கூடும்?" (இந்த சமுத்திரம் சூழ்ந்த பூமி அனைத்தும் அதற்கு ஈடல்லவே. விஸ்வபூரிதக்ஷணரே, உத்தம ஸ்லோகா, சங்கடமோசனு, நீ எனக்கு பரமப்ரியனுக வல்லவாக விருக்கிருய். என்னை, நதி பிரவாஹம் கரைகளை உடைப்பது போல, அன்பினுல் ஆனந்திக்கிருயே. உன்னை நான் எவ்விதம் கௌரவிப்பேன்?" என்று பரதன் விப்ரரூபரான ஆஞ்சநேயரைத் தழுவிக்கொண்டு ஆனந்தித்தான்.) (கிருபாநிதி அவரைப்போல யார் இருக்கக்கூடும்? ஆனந்தக்கூத்தன், பக்த சபாபதி தில்லை நடேசன் அல்லவாஅவன்.) கரங்களை குவித்துக் கொண்டு, பாகவத பிரியனுகிற அந்த பிரபு சொன்னுர். "கிருபாநிதான் தயவு செய்து கேளும். நான் வாயுபகவானுடைய குமாரன்; வானர ஜாதியைச் சேர்ந்தவன்; என்னுடைய நாமம் ஹனுமான்." (17)

"தீனபந்து, ஸர்வஜனரக்ஷகன் என் பிரபு ரகுபதியின் கிங்கரன்" என்று வினயபூர்வமாக ஆஞ்சநேயர் தன்னை ஸமர்ப்பித்துக் கொண்டான். ஆச்சரியம். (அவனுடைய வினய ஸம்பத்து கண்கொள்ளாத பெருமையுடன் காதுகளுக்கு இனிக்கும் சர்க்கரைத் தேனுடன் தித்திப்பாக கன்னலுமாக விருந்தது.) பரதன் அத்வினயத்துடன் ஹனுமாரைத் தழுவி, இறுக அனுபவித்து தாஸ்யபாவத்துடன் அனுபவித்தான். (ராம பரத ஸ்நேகத்திற்கு முன்பாக ஆவிர்பவித்த ஹனுமத் பரத ஸ்நேகம் ஸத்சிஷ்யனுக்கு சர்மதிசையில் கிடைக்கும் சர்ம ஸ்லோகத்தின் ஆசார்ய உபதேசம் மாதிரி, சோக நாசத்துடன் "பாரமார்த்திக" என்கிற கத்யத்ரய வாக்யத்தின்படி, பல பர்வமாகி விளங்கிற்று. மாசுசః என்கிற படி திருப்த பிரபன்னனுடைய சரணுகதியை அங்கீகரித்த ரகுராமன், உபாயபூதனுன சரண்யன் நெகிழ்ந்து தன் காரியத்துக்குத் தானே கடவனுகையாகிறபடியால், தானே பிரபன்னனைக் கைவிடாமல் காப்பாற்றிவிட்டபடியாகி விளங்கினுன். காலவிளம்பத்தால் ஸம்பவிக்கப்பட்ட சித்தசோகமும், ஆசார்ய உபதேச காலத்தில் அழிவடைந்து வருவது போல, பரதசத்ருக்னர்களின் சோகதாபங்களும் நாசத்தை அடைந்தன. அவர்கள் இருவர்களும் சேர்ந்து, காடோபகூடமாக அனுபவித்த ஆனந்தம் பிரேமை சொல்லவொண்ணுதபடி ஆச்சரியமாக

விருந்தது.) இருவர்களுடைய புண்யலோசனங்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர்கள் புளகிதமாக உதிர்ந்து கொண்டிருந்தன. (அவர்களை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) (18)

[தியானம்

ஹே சீதே, ப்ருகுநந்தினி, குற்றமொன்றுமில்லாத கோபாலர்களுடைய பொற்கொடியே, ஜனகநந்தினி, உனது புத்ர வாத்ஸல்யம் பெயர் போனது என்று சொல்லுவார்களே, பங்கயக் கண்களை உடைய மாதவி, ராவணனுடைய கிருஹத்தில் நெருப்பு என்னும்படி நிற்பவளே, உன்னை நான் அருந்தித்து வந்திருக்கிறேன். அயோத்தியையும், செல்வங்களையும், போகங்களையும், தியாஜ்யம் செய்துவிட்டு, ராமப்ரியே, ஹரிவல்லபே, அசேஷ ஜகதாம்ஜனனி என்று நாமம் வரும் பொருட்டு, ராமன் வாழ் காடு அயோத்தி என்று சொன்னாயே. என்னை ராம பக்திக்கு இலக்காக்கிக்கொண்டு, எனக்கு ராமனைத்தரும் கற்பகமே, உன்னுடைய சங்கல்பம்தானே ராமனுடைய சங்கல்பம். நீ அயோத்தியையும், என்னையும் சத்ருக்னனையும் கடாக்ஷித்தால் அன்றோ ஸ்ரீராமனை மீண்டும் அடையலாம். அதற்கு நீ முதலில் உன்னைக் கொடுத்தாலன்றோ, நாங்கள் ராமனை அடைவதற்கு தகுதியாவோம். எங்களுக்குத் தெரியும். ஸ்ரீராமன் உன்னுடைய மகத்தான பொருள் என்றும், அவன் உன்பால் வைத்திருக்கும் அன்பும், பிரீதியும், கடல் கடந்து இலங்கை சென்றும், காடு நடந்து மிதிலை சென்றும், நிரதிசயமானது. சமுத்திர மதனத்தில் உண்டாகிய ஸ்ரீதேவியே, உன்னைப் பார்த்துப் பார்த்து, அந்த திக்கஜங்கள் பொற்குடங்களில் கங்கை ஜலத்தை அபிஷேகம் செய்தனவே; அதைப்போல ராம பட்டாபிஷேகத்தை நான் உனக்காகவும் செய்யக் காத்திருக்கிறேன். நீதானே ராமஸம்பத்காரணி. அம்மா, நாராயணப்ரியே, நீதானே ஸகல இந்திரிய நந்தினி. பரதனுக்கு ஸாம்ராஜ்யத்தைக் கொடுத்தாயே. அதைப்போல எனக்கும் ராம ஸாம்ராஜ்யத்தைக் கொடு அம்மா. ஸரோருஹாக்ஷி, உன்னை நான் அடிக்கடி வணங்கினால், என் பாடங்களும், பயங்களும் போகும் என்று சங்கரபகவான் சொன்னாரே, மாமேவ மாதரநிசம் கலயந்து மான்யே, அதைப் போல உன்னை நமஸ்கரித்து, அர்ச்சித்து, அடியார்களை ஸேவித்து, உனது கடாக்ஷ ஸம்பத்துக்களை அடைய விரும்புகிறேன். ராவணாரி, முராரி, ஹ்ருதய ஈஸ்வரி, உன்னை வாக்கு, காயம், மனம் இவைகளால் நமஸ்கரிக்

கிறேன். திரிபுவனபூதிகரி ப்ரஸீத மஹ்யம். ப்ரஸீத ப்ரஸீத, ப்ரயச்ச ப்ரயச்ச, கமலே, கமலாக்ஷ வல்லபே, நீ கருணையின் ஸ்வரூபம். நானோ அகிஞ்சனனும் பிரதமன்; அனன்ய கதியில்லாதவன்; அகில ஜகன் மாதரம் அஸ்மின் மாதரம் அசரண்ய சரண்யாம் அனன்ய சரணஃ சரண மஹம் பிரபத்யே என்று சொல்லி, பாத்ரம கிருத்ரிமம் தயாயாஃ உன் தயைக்கு பாத்திரமானவன், என்று என்னை ஸ்வீகரித்துக் கொள். உன்னையும் ராமனையும் எனக்குத் தா, தா ரெங்கநாயகி, அலர் மேலு, பெரிய நாயகி, கல்யாண நாராயணா, நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தார்க்கு இடம் என்று சொல்லும்படி மாமலையாக விருக்கிறாயே; நீலமுகில் வண்ணா, காரிவானத் துள்ளாய் கள்வா, எனது வாத்ஸல்ய வல்லி நாச்சியாரே, பெருஞ் செல்வநாயகியே, கபில ரிஷிக்கு பிரத்யக்ஷமான ஸ்ரீதேவியே, பூஞ்சோலை தென் காட்கரை யென்னப்பா, உன்னை நினைத்து நினைத்து நான் உனக்கு ஆட்செய்யும் நீர்மையே, உங்கள் தர்சனமும் உங்களுடைய கைங்கர்யமும் அந்த கைங்கர்யத்தில் ஸ்வபிரயோசன புத்தியைத் தவிர்த்தலும், ப்ராப்ய விரோதி கழிகையும், மற்ற நங்காமங்கள் மாற்றென்றிருக்கையும் தந்து உங்களுடைய ஸம்பந்தச் செல்வத்தை, உங்களுக்கே நான் ஆள் செய்வோம், அடிமை செய்யக்கடவோம், என்று நீங்கள் ஸித்த சங்கல்பம் செய்யவேண்டும்.]

பரதன் தொடர்ந்து சொன்னான், "ஹனுமான்ஜி, உம்முடைய தர்சனம் என்னுடைய (ஸமஸ்த துரிதா ஹரணோத்ய தான், என்று சொல்லும்படி உனக்கு நான் செய்யும் வந்தன நமஸ்காராதிகள் எனது பாபங்களைப் போக்குவதில் முயற்சி உள்ளவைகளாக விருக்கின்றன.) எனது சோகங்களை நாசம் செய்து ஆனந்தங்களைக் கொடுப்பதாக விருக்கின்றன. (உன்னுடைய ப்ரிய தர்சனத்தால் உமா மஹேஸ்வரர்களை நான் சேர்ந்து காண்பது போல விருக்கிறது. அது மாத்திரமில்லை, ஸ்வாமி.) உங்களுடைய பரம உதார அனுக்ரஹத்தால் ராமப்ரீதி என்று சொல்லப்படும் சீதாராம தர்சனத்தையும் அந்த தர்சன பிராப்தியின் பயனாக சீதாராம கைங்கர்யமும், சீதாராம ராஜ்ய மும், சீதாராம ஸத்பக்தியும், அந்த பக்தியுடன் பரிமளிக்கும் மற்றை நங்காமங்கள் மாற்றென்றிருக்கையும், ஹே பிரபோ ஆஞ்சநேயா மாருதி, வாயு சுதா, "சபரிபாக்யம்" என்று புகழுடன் விளங்கும் ராமலக்ஷ்மண தர்சனமும், அவர்களுக்குப் புளகாங்கிதமாகச் செய்யப்பட்ட நமஸ்காராதிகளும் (தனுவு புல

கரிஞ்சே பாதயுக முலகு தியாகராஜ) இக்ஷ்வாகு குலத்தில் பிறந்ததும் ராமசகோதரனுக அவதரித்தும், சீதாராம அபராதியாகி அவர்கள் வனம் செல்லுவதற்குக் காரண பூதனுன எனக்கும் என்னுடைய இழிய பிறவிக்கும் சுகத்தைத் தரும் (தியாகராஜாதிகள் வணங்கிய) புனராவிருத்தி ரஹிதபதம், புண்ய சீதாராம பாதங்களை எனக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டும். (ஹே ஹர்ஷ மாருதியே, நீர் உமா மஹேஸ்வரர்கள் மாதிரி நித்ய அனந்தமாக விருக்கவேண்டும். என்னிடம் ஸதா ஸாந்நித்யம் கொள்ள வேண்டும். உம்முடைய ஆனந்தம், க்ஷேமலாபங்கள் எனது முக்கிய கருத்தாக விருக்கவேண்டும். பிரபோ, ஆஞ்சநேயா, சீதாராமனின் தயை ஸ்வரூபமே, என்னிடம் உம்முடைய ப்ரீதி நிரந்தரமாக விருக்கவேண்டும். உமக்கு நான் எப்போதும் உம்முடைய ப்ரீதிக்காகவே அடிமை செய்து வாழவேண்டும். என் பிராதாவே, என் சகாவே, நீர் அல்லவோ எனக்கு சீதாராம சம்பத்தைக் கொடுக்க வந்திருக்கிறீர்.) நான் உமக்கு யாது ஈடு செய்ய முடியும்? (உம்முடைய சீதாராம ஸேவை மஹத்தானது. அதற்கு ஈடு ஒன்றும் கிடையாது. உம்முடைய கிருபையும் மஹத்தானது. அதற்குச் சமமாக யாவரும், எதுவும் இருப்பது மில்லை. இருக்கப்போவது மில்லை. (ஹனுமான்ஜி, நீரே எனக்கு கதி. நீரே எனக்கு ஆசாரியர்.'') (19)

"நீர் கொண்டு வந்திருக்கும் நற்செய்திக்கு வெகுமதி இந்த சதுர்தசபுவனங்களிலும் ஏதேனும் இருக்கக்கூடுமா? நான் புத்தி பூர்வமாக தீரவிசாரித்து அறிந்து சொல்லுகிறேன். ஒரு பதார்த்தமும் இல்லை, இருக்கவும் முடியாது. உமக்கு நான் கடன் விடுபடாமல் ஸதா இருக்கக்கடவன், உம்முடைய பரம ப்ரீதிக்கு நான் என்றும் சேவை செய்யக்கடவன். (ஹே பிரபு ஆஞ்சநேயா, ஆபத்ஸகா, உம்முடைய கிருபையும், அன்பும் தீனர்களிடம் காட்டப்படும் தயையும், க்ஷேமக் கருத்துக்களும் ஹிதகாரியங்களும், என் விஷயத்தில் எப்போதும் பிரகடனப்பட வேண்டும். உம்மை நான் பார்ப்பதால் சீதாராமனை அந்த கனஸ்யாமனை நிஜ ஆயுத புஜ தாரியை, வனமாலை பூஷணனை, மஹா விஷ்ணுவை, விசால நயனங்களுள்ள கோஸல ராமனை சோபா சிந்து என்று போற்றப்படும் தசரத மைந்தனை, சீதைக்கு கராரியாகத் தோற்றம் அளித்த லோசனபிராமனை நான் லக்ஷ்மணனுடனும் ஜனக புத்ரியுடனும் நேரில் பார்ப்பது போல பார்க்கிறேன்.) இப்பொழுது அவர்களுடைய முழுவிருத்தாந்தங்களைபற்றிச் சொல்லவேண்டும்.'' (20)

அப்பொழுது அந்த நற்செல்வன் ஹனுமான், ரகுநந்தனுடைய "கிங்கரன்" என்று சொல்லிக்கொள்ளும் (உமா மஹேஸ்வரர்களைப் போல) தாஸ்ய உள்ளம் படைத்த தனி வீரன், பரத சரணாரவிந்தங்களில் விழுந்து நமஸ்கரித்தான். (பரம பாகவத ப்ரியன், என் பிரபு ஆஞ்சநேயன் மஹாவீரன், மஹாவிக்ரமன், அஞ்சனாபுத்ரன், பவனசுதன், (காதுகளில் குண்டலங்களை அணிந்து கொண்டு, குஞ்சித கேசங்களுடன், வஜ்ரம் போல இருகைகளுடன் ராமத்வஜம் போல விளங்கும் என் மாருதி,) ரகுபதியினுடைய ஸகல கல்யாண குணங்களை முற்றிலும் அறிந்து சொல்பவன், ஸுஸ்வரமாக கீர்த்தனம் செய்து, லயராக பாவத்துடன் ஆனந்தமடைபவன்,) பரதனுடைய விஸ்லேஷ துக்கங்களை ஆற்றுவதற்காக சீதாராம விருத்தாந்தங்களை முழுவதும் ஒன்று விடாமல் சொன்னான். அதைக் கேட்ட பரதன் கூப்பிய கரங்களுடன் ராமன் இருக்கும் திசையைத் தொழுது, மீண்டும் சொல்ல ஆரம்பித்தான். "கிருபாளு, ஹனுமான்ஜி, கோஸாயி, என் பிரபு என் தாஸ உள்ளத்தை அறிந்து கொண்டிருக்கிறாரா?" (இந்த வார்த்தைகள் பரதனுடைய கண்டத்திலிருந்து வெளிவரும் போது, அவனுடைய புஷ்கர லோசனங்களிலிருந்து, நீர் முகில் மாதிரி அம்ருததாரைகள் வந்து கொண்டிருந்தன. அஷ்டாக்ஷர வித்யை கைகூடின சேதன அதிகாரி எவ்விதம் ஆனந்தக் களிப்புடன் பகவத் ஸ்வீகாரத்தைப் ப்ரியமாக எதிர்பார்ப்பானோ, நாராயணனே நமக்குப் பறை தருவான், ராமனே ஸர்வ ஸ்வாமி, அகிஞ்சநியம், அனன்யகதி, என்னும் அதிகாரங்கள் அமைந்து கைங்கர்யம் விருப்பம் கொண்டவனும், அந்த கைங்கர்யமும் ராமசீதா ப்ரீதிக்காகவே செய்யப்படவேண்டியது என்கிற ஸ்வரூபத்திற்கு ஏற்ப நாராயணனும் அடியார் கிடுக்காரியம் செய்யும் சமயமும், சாதனங்களை எதிர்பாராது செய்து தலைக்கட்டுபவனைப் போல, பரதன் எனக்கும், அந்த மஹானுபாவரான ஆஞ்சநேயருக்கும் காக்ஷி அளித்தான். அப்பேற்பட்ட பரதனை வேதாந்த தேசிகரை முன்னிட்டு, நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். "ஒருக்காலே சரணாகவடைகின்றார்க்கு, முனக்கடிமை யாகின்ற னென்கின்றார்க்கு," உனக்கு ஒரு தடவை தாஸனாக விருக்கிறேன், என்று சொன்ன அடியார்க்கு, "அருக்காதே யனைவர்க்குமனைவராலுமஞ்சேலன் றருள்கொகுப்பனிதுதானே து. அஞ்சேல் என்று அபய பிரதானம் செய்வேன், அது எனக்கு நீக்க முடியாத ஒன்று நீள்விரதம்"

என்று நெறி உரைத்த ஸ்ரீராமபிரானுடைய உறுதிநிலையைச் சிறப்பித்துக் காட்டுபவனைப் போல, எனக்கும், வேதாந்த தேசிகருக்கும் காக்ஷி கொடுத்த வள்ளலை நான் எவ்விதம் வர்ணிப்பேன்? அவர்களுக்கு நான் என் நமஸ்காராதிகளைத் தவிர என்ன பெரிது செய்யக்கூடும்?) (21)

"பிரபு ஆஸ்ரிதவாத்ஸல்யன், ஆஞ்சநேயர் பிரதிஉத்தரம் சொன்னார். "பரதா, ராமனையே கதி, (நின்னருளால் கதியின்றி மற்றொன்றிலே நெடுங்காலம் பிழை செய்து நிலைகழிந்தேன். உன் அருளுக்கு இனிதான நிலை உகந்தேன். உன் சரணே சரண் என்று துணிவு பூண்டேன். நித்யஸூரிகள் வாழும் வாழ்க்கையை எனக்குத் தரும்படி உன்னிடம் வரித்தேன். உனது இன் அருளால் இனி எனக்கு ஒரு சுமை (பரம்) ஏற்றாமல், பொறுப்பு வைக்காமல்,) "நீதான் அடைக்கலம் ஏற்றுக்கொள்ள வேண்டும்," என்று சொல்லும் நிஜபிரபன்னர்களை என் பிரபு ரகுவம்ச பூஷணன் கைவிட்டுவிடுவாரோ? பரதா, என் பிரபு (உன்னைப் போன்ற கார்ப்பண்யம் கொண்டவனும், ப்ராதிகூலவர்ஜன்யமும், ராமனுடைய திருவடிகளே சரணே சரண் என்று அனுகூல்ய ஸங்கல்பத்துடன்,) ராமனே என்னை எவ்வளவு நாட்கள் கழிந்தாகிலும் காப்பான் என்கிற மஹா விஸ்வாசத்துடன் வாழ்ந்துவரும் உன்னை, எவ்விதம் ஸ்வீகரிக்காமல் தள்ளிவிடுவார்? (உனக்கு அக்ஞானம் விலகி, விவேகஞான ஸம்பத் கொண்டாய் உன்னுடைய நியம நிஷ்டைகளாலும் ராஜ தர்மத்தினல் அயோத்தியை ராம திருப்திக்காக பரிபாலித்து வந்ததால், கோப்த்ருத்வமும் உனக்கு கைக்கிட்டியது. ராமனுடைய ஸங்கல்பமே, ராமனுடைய திருவருள் என்று வாழ்ந்துவரும் உனக்கு ஆத்ம ஸமர்ப்பணமாகி விட்டது.) என் பிரிய பரதா, உனக்கு ராமன் தன்னையே தந்துவிட்டார். கவலைப்படாதே. அவர் உன் நினைவாகவே ஸதா இருக்கிறார்." என்று ஆஞ்சநேயர் சொல்ல, பரதன் மீண்டும் தனது தாஸ்யத்தை பிரகடனப்படுத்திக் கொண்டிருந்தான். அப்போது ஹனுமான் பரதனுடைய கழல்களைப் பிடித்துக்கொண்டு சுக்ருத பிரணாமம் செய்தார். அவருடைய களங்கமற்ற ஹ்ருதயத்தில் ஒரே எண்ணம் குடிகொண்டிருந்தது. ஆகா, என்ன ஆச்சரியம். ஜகந்நாதர், ஸகல சேதன அசேதனங்களுக்குப் பிரபு பக்த தயாளன் என் பிரபு ரகுவீரன் தன்னுடைய நிஜ ஸ்ரீமுக மண்டலத்தால் அடிக்கடி புகழும் இந்த பரதன் பரமபவித்திர புருஷனாகவும் ஸத்குண ஸிந்துவாகவும் இருப்பதில் ஒரு ஆச்சரியமில்லை. இவனே பரம

பாகவதன். பரம வைஷ்ணவன். நிஜ தாஸ உள்ளம் படைத்தவன். அடியார்களுக்கு அடிமை செய்பவன். பிறர் படும் கஷ்டங்களை சகியாதவன். (கொக்குப்போல ஒரே மதியாக ராமனை நினைப் பவன். மற்ற ஐஸ்வர்யங்களை விட்டுவிட்டு, ராமனே பரம புருஷார்த்தமாக நினைத்தவனே இவன். கோழியைப் போலச் சிறந்த அம்சங்கள் கொண்ட பிரபத்தி வித்யையினால் வேதங் களின் ஸாரமாக அறிந்து, ஆசாரியர்களின் உபதேச வழியில் நின்று ராம பாதுகைகளை உபாயம் உபேயமாக வரித்திருக்கிறான். உப்பில்லாப் பண்டம் குப்பையிலே, என்கிறபடி பரதன் பாகவத தொண்டு செய்பவன். பாகவத ப்ரேமையும் என் போன்ற ராம பக்தர்களிடம் சமுதாயத்திலும் அதிக ப்ரேமை கொண்டவனாகை யிருக்கிறான். உலகமே இவனை ராமனின் நிமித்தமாக நிந்தை கூறிடினும், மறுமாற்றம் சொல்லாமல் பதினான்கு வருஷங்கள் மஹாக்ஷமை விரதத்துடன் தன்னை ராமானுவர்த்தியில் அழித்துக் கொண்டிருக்கிறான். இவனைப் புகழ்ந்தாலோ இவன் "நீசனேன், நிறை ஒன்றுமிலேன்," என்று தன்னை ஒதுக்கிக்கொள்கிறான். இவனை நிந்தித்தாலோ, இவன் "அடியேனுடைய குறைகளை நினைவு ஊட்டியதற்கு நன்றி" என்கிறான். தொண்டு நெறியிலும் சீதா ராமபக்தியிலும் தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ளாமல், மறைந்து வாழ்பவன் இவனே. அது மாத்திரமா இவனைச் சேர்ந்த பந்து பரிவாரங்களையும், அயோத்தி ஜனங்களின் நலத்தையும் நாடிச் செய்தவன் இவன் அன்றோ? திருத்துழாய் பரிமளத்துடன் வளர்ந்து வந்திருக்கிறான்.) இவனை அல்லவோ நான் கல்யாண குணங்கள் கொண்ட ஸமுத்திரம்போல என் தெய்வமாகக் கொண்டாடவேண்டும்," என்று ஆஞ்சநேயர் நினைத்தார். (22)

[தியானம்

ராமா, சீதா நாயகா, லக்ஷ்மணாக்ரஜா, சரணம், சரணம். நீதானே செல்வ நாராயணன். பெரியாழ்வார் பாடிய சப்பாணி குடந்தைக் கிடந்தானே சப்பாணி. உன் புகழ் மஹத்தானது. உன் செய்கைகளும் மிக மிகப் பெரியது. செங்கண் நெடுமால் திரு மார்பா, ஆயிரம்வாய் பாம்பணை மேல் பள்ளிக் கொண்டிருக்கும் ஆராவமுதே, நீ எப்போது என்னிடம் வருவாய்? மாயா மாயா மூர்த்தியாய் ஆராவமுதாய் என்னிடம் என்னைத் தித்திப்பிக்க எப்போது வருவாய்? என் தீரா வினைகள் தீர்க்க என்னையாளும் குடந்தை பிரானே, உன்னைத் தொழுது நாவினால் உய்ய நான் கண்டு கொண்டேன் நாராயணா, என்னும் நாமத்தை. ராமாசீதா,

லக்ஷ்மணா, நீதானே மறைந்த தமிழ்மறைகளை நாதமுனிகளின் வாயிலாகத் தோற்றுவித்த எம்பிரானே, இப்போது பரதனுக்கு லக்ஷ்மணனுடன் கூடிய சீதாராமனை ஆஞ்சநேயர் மூலமாகத் தோற்றுவித்த கிருபாளுவல்லவோ; அதைப்போல என்னிடம் உவந்து எனக்கு தேசிகனாக யார் வந்து, உங்களை என்னிடம் தழைக்கச் செய்யப்போகிறார்கள்? என் கண்களால் கண்ணினை கண்களாகவும் நின்று கண்ணா மங்கையுள் கண்டு எப்போது கொள்வேனோ? சுடர் சோதியே, பக்தவத்ஸலா ஓடிவா.)

ஹனுமான்ஜி மீண்டும் சொன்னார். "பிரிய நாதா, நீ ஸ்ரீபுருஷோத்தமராமனுக்கு பிராணப் ப்ரியன். (உன்னிடம் அந்த மஹா பிரபு நிலையாய் இருப்பதால் "பிராண நிலையர்" என்று சொல்லும்படி அவர்விளங்குகிறார்.) நான் சொல்லும் வார்த்தைகள் முழுவதும் ஸத்யம். உன் திருப்திக்காகச் சொல்லும் வார்த்தைகள் அல்ல" (நீயே எனக்கும் வழிகாட்டியாக விருக்கிறாய்) இந்த மஹா வார்த்தைகளைக் கேட்ட பரதன் அடிக்கடி ஆஞ்சநேயரை நமஸ்கரித்து, அவரை இறுகத் தழுவிக்கொண்டான். இருவர்களும் ஒன்றாகச் சேர்ந்து கலந்து மஹா ஆனந்தத்தை அடைந்தார்கள். (23)

(ஸகல உலகங்களுக்கும், ஸகல பிரபன்னர்களுக்கும் பயத்தைப் போக்கும் ஸங்கட மோசன) ஹனுமான்ஜி மீண்டும் பரத சரணங்களில் நமஸ்கரித்துவிட்டு, ராம பரத சேர்க்கைக்கு கால விளம்பம் செய்யவிடாமல், உடனேயே ஸ்ரீராம ஸந்நிதிக்கு மீண்டும் எழுந்தருளினார். ராம பிரானுக்கு ஸ்ரீ பரதனுடைய க்ஷேமங்களைச் சொல்லிவிட்டு, ராம ஆக்ஞையை எதிர்பார்த்தவர் போலிருந்தார். அப்போது ஸ்ரீசீதாராமன் ஆனந்தமடைந்து விமானத்தில் ஏறிக்கொண்டு, எல்லோருடனும் புறப்பட்டார். (24)

இங்கு பரதன் ஆனந்தம் கொண்டு நந்திக் கிராமத்திலிருந்து அயோத்திக்கு (தம்பி சத்ருக்னனுடன்) எழுந்தருளினான். ராம விருத்தாந்தங்கள் அனைத்தையும், பரதன் குரு வசிஷ்டருக்குச் சொன்னான். ராம ஆகமன விஷயம் ராஜமஹாலுக்குப் பரவியது. வெகு சீக்கிரத்தில், ஸ்ரீராமன் சீதையுடனும், லக்ஷ்மணனுடனும் வந்து கொண்டிருக்கிறார் என்கிற அந்த சுபமான விஷயம் அயோத்தி முழுவதும் பரவியது. ராஜ மஹாலிலும், அயோத்தியிலும் ஒரே குதூகலமாக விருந்தது. (25)

[தியானம்

ராமா சீதா லக்ஷ்மணா, ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:. பிரபு, ஆளவந்தார் சொல்லியபடி, நீதானே எனக்கு மாதா; நீதானே எனக்குப் பிதா; அர்ஜுனன் சொல்லிய பிரகாரம், நீங்கள்தானே எனக்கு ஸர்வமும். யசோதை யின் பக்திக்கு வசப்பட்ட ஸ்ரீகிருஷ்ணா, தாயே மைதிலி, உங் களுடைய நிர்ஹேது கிருபையானது பெரும் பாபங்களைச் செய்த எங்களையும் ஆனந்திக்கட்டும் கமலநயனா, வாசுதேவா, விஷ்ணோ, நாராயணா, நீ மனம் வைத்தால் உன்னுடைய தாஸர் களான நித்யசூரிகளுடன் ஸம்பந்தச் சேர்க்கையைக் கொடுக் கிறாய். நானும் அவர்களுடன் கூடியிருந்து உங்கள் இருவர் களுக்கும் பல்லாண்டு பாடிய பெரியாழ்வாரைப்போல பல்லாண்டு பாடுகிறோம். உங்கள் இருவர்களுக்கும் நம்மாழ்வாரைப் போல, "பொலிக, பொலிக" என்று கூறி உங்களுக்கு அடிமை செய் கிறோம். மாதவா, மதுசூதனா, தேனும், பாலும், நெய்யும், கன்னலும், அமுது ஒத்துவிருக்கும் சீதாப்பிராட்டியின் நாயகனா கிற ராமனே, நீதானே ஊழிதோறும் எங்களுக்கு பிறப்புத்தந்து, அந்தப் பிறப்புக்களுக்கு அருள் செய்ய திரிவிக்ரமனாக அவதரிக் கிறாயே. வாரணவெற்பின் மழைமுகிலே, அயோத்தி எம்மரசே, கோதண்டராமா, செங்கமலவல்லியே, ஆண்டாளுக்கு திரு வரங்கச் செல்வனாராக விளங்கினாயே, ரங்கபுருஷோத்தமா, எப்போது உன் கிருபை எங்கள் மீது விழும்? என் கண்களைக் களிக்குமாறு அரங்காமா கோயில் கொண்ட நீ எனக்கு எப்போது உனது பெரும் சுவையை கொடுக்கப் போகிறாய்? உன்னை அடுத்து அல்லவோ நாங்கள் உய்யவேண்டும். ருத்ரனுக்கு கபால நிவர்த்தி செய்த எம்பிரானே, அகஸ்திய லோபாமுத்ரைக்கு பிரத்யக்ஷமாக விளங்கிய காவேரி ரங்கா, புருஷோத்தமா, பலியிடம் மூன்று அடி மண் தா என்று பிச்சை கேட்ட வாமனா, கச்சியில் கருடன் உருவாய் மறையின் பொருளாக விளங்கும் கண்ணா, வேங்கடகிரி மேல் நின்று என்னைக் காக்கும் வேத வேற்பே, ஸ்ரீரங்கத்தில் உன்னால் படைப்பிக்கப்பட்ட ஏழு உலகங்களை வளர்த்து ஸம்ரக்ஷிக்கும் மங்களத் தீபக்கொழுந்து போலவிருக்கும் ஸ்ரீரெங்கராஜமஹிஷியே, அலர்மேல்மங்கையே, அல்லிமாமலர்மகளே, ராமசீதா, லக்ஷ்மிநாராயணா, நீங்கள் இருவர்களும் அவாப்த ஸமஸ்தகாமர்கள். உங்களுடைய திவ்ய லீலைகள் பொதுவாக விருந்தாலும், பகவானுடைய உள்ளத்தை தூண்டுபவளாக, லக்ஷ்மியே பிராட்டியாக விளங்குகிறாள்.

உங்கள் இருவர்களையும் சரணமடைகிறேன். "பகவானுடைய அபராதங்களுக்கு பயப்படவேண்டாம், வா," என்று சொல்லி அணைக்கும் லக்ஷ்மியே, பிரபோ, அதற்கு உன் வசனங்களே போதும் "நான் தோஷங்களைப் பாரேன்; தலைகீழாகவுள்ள சிரః பத்மத்திலிருந்து பெருகும் அம்ருத தாரையினாலே அபிஷேகம் செய்யப்பட்ட நான் எப்போதும் கருணையினால் நனைந்திருக்கிறேன். "தயயார் த்ராந்த்ராஸ்மி" என்கிறபடி, இரக்கத்தாலே நனைக்கப்பட்ட நெஞ்சை உடையவளான லக்ஷ்மியுடன் எப்போதும் நான் சேர்ந்திருக்கிறேன். ஆஸ்ரிதர்களின் தோஷங்களைப் பாராமையால் பிராட்டி ஆர்த்தரையாகிருள், என்கிறபடி உங்கள் இருவர்களையும் "ஸ்ரீயா ஸஹாஸீனம்" என்கிற ராமானுஜ வாக்கியத்தின்படி வீற்றிருக்கும் உங்கள் மிதுனச் சேர்க்கையை அடைந்து, வழிபாடு செய்பவர்கள் குறைகளை அடைவதுண்டோ? பிரணவ தத்வமாகவல்லவோ எனக்கு நீங்கள் விளங்குகிறீர்கள். ஆண்டாளுடன் கூடிய சகிமார்களுக்கு கோல விளக்காக நப்பிள்ளையைக் கொடுத்த மஹானுபாவா, கொடிக்கு கருடனைக் கொடுத்த திருவரங்கத்தம்மானே, விதானத்திற்கு அனந்தாழ்வானைக் கொடுத்த வள்ளலே, நீ ஆஸ்ரிதர்கள் விஷயத்தில் மாத்திரம் பரதந்திரனாக விருக்கிறாய். பாண்டவர்களுக்கும், சுக்ரீவ, விபீஷணாதிகளுக்கும், கபடமின்றி உனது உத்தம சேர்க்கையைக் கொடுத்தாய். என்னுடைய மழலைச் சொற்களுக்கு நான் ஒன்றும் வேண்டாதபடி நீ என்ன கொடுக்கச் சித்தமாயிருக்கிறாய்? சொல். ஆய்ச்சிகளும், பரதனும் உங்களுக்காக உண்ணாவிரதமிருந்தார்கள். நானோ என் பசி தீறுகைக்காக பலவற்றை உண்டு நெறியிழந்து, உன்னால் பிரியப்பட்டு பல துயரங்களை அடைந்திருக்கிறேன். நீங்கள் என்னுடைய உறவுள்ள சம்பந்தத்தை அறிந்து, அருளாழியெம்மானைக் கண்டக்கால் என்கிறபடி அத்தியூர் வரதராஜனாக விருப்பாயா? பெருமாளோ, பிராட்டியே உங்கள் திருவடிகளையே பேணினேன். சிவனுக்குப் பிரத்யக்ஷமான ராமபிரானே, தஞ்சம், தஞ்சம். பகவன்நாராயணா, பத்னி ஸம்பந்தம், நாரவர்க்கம் ஆகிய ஸம்பந்தங்களைக் கொண்ட சீதாராமா, தஞ்சம். ரெங்கநாதா, ரெங்கநாயகி உங்களை அற்றவர் சேர் திருவரங்கப் பெருமான் என்றும், ஏழை ஏதலன் கீழ்மகன் என்று பாராது குஹனையும் தோழமை கொண்ட ராமன் என்று சொல்லுகிறார்களே. என்னையும் உபகரிக்கமாட்டாயா? லங்கேஸ்வரனை பயப்

படச் செய்த ஆஞ்சநேயா, நீ எப்பொழுது பிரபுவின் முத்ரிகையை எனக்குக் கொடுப்பாய்?]

''சீதாராமலக்ஷ்மண அயோத்தி பிரவேசம்'' என்னும் செய்தி எங்கும் பரவியது. கௌஸல்யா, கைகேயி, சுமித்ராதேவிமார்கள் ஆனந்தம் கொண்டார்கள். உவகை பொங்க அவர்கள் எழுந்து (இராமனை எதிர்கொண்டு அழைக்க) ஓடிவந்தனர். (ராமானுஜன் வாக்கியத்தின்படி வைஷ்ணவர்கள் கூடியிருந்து சீதாராம பிரிவினால் ஏற்பட்ட துயங்களைப் போக்கி, பசி தீருவதற்கு கூடிக் களித்திருப்பது போல, எல்லோரும் ஒன்று கூடி கோஷ்டியாக சீதாராம அம்ருதத்தை அனுபவிக்க, குளிரக் காத்திருந்தார்கள்.) எங்கு பார்த்தாலும் பரதன் சந்தோஷம் கொண்டு, சீதாராம லக்ஷ்மணர்களின் க்ஷேமவிலாஸங்களைப் பறைசாற்றி, அவர்களின் புனர் அயோத்தி ஆகமனத்திற்காக ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னான். அயோத்தி நகர் மக்களுக்கு இந்த நற்செய்தி பரவினதுதான் தாமதம். (பொலிக, பொலிக, பொலிக என்கிற சப்தங்களும், பல்லாண்டு, பல்லாண்டு சப்தங்களுடன் ஸ்ரீமத் ரங்கஸ்ரிய மநுபத்ரவா மனுதினம் ஸம்வர்த்தய, என்கிற மங்கள சாஸனங்களுடன் வைஷ்ணவதிரள்கள் கூடியிருந்து அனுபவிப்பதைப் போல,) அயோத்திமா ஜனங்கள் முழுவதும் ஒரே கோஷ்டியாக ராமபுண்ய தரிசனத்திற்காக கிளம்பினார்கள். ஒன்று கூடி பிரயத்னம் செய்தார்கள். நரநாரிகள் யாவரும் மஹா சந்தோஷத்துடன் ஆரவாரங்களோடு ராஜமரியாதைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். (26)

ஸ்ரீ சீதாராம லக்ஷ்மண அயோத்தி விஜயத்திற்கு தயிர், பால், கோரோசனை, பழங்கள், நவதுளசிதளங்கள் இன்னும் அநேக மங்கள வாசனை திரவியங்களை ஏற்பாடு செய்தனர். அவைகளைத் தங்கத் தாம்பாளங்களில் நிரட்பிக்கொண்டு மதம்பிடித்த யானைகளின் கர்வத்தைப்போக்கும் சௌபாக்ய சீல நாரீமணிகள் வேகமாக அயோத்தியின் கோட்டை வாசல்களை நோக்கி ஓடிச் சென்றனர். (27)

சிலபேர்கள் ஓடினார்கள். சிலபேர்கள் துள்ளிச் சென்றார்கள். அவர்கள் போகும் பரபரப்பைக் கண்டு, பத்துதிக்குகளும் சேர்ந்து எழுந்தாற்போலும் ஓடுவது போலவுமிருந்தன. பாலர்கள், விருத்தர்கள் என்று தங்களைப் பாராமல், அவர்களுடைய ஸ்வயநினைவுகளையும் யிழந்தே, வெறிபிடித்தவர்கள் ஒரே மதியுள்ளவர்களைப் போல, எல்லோரும் அவரவர் காரியங்களை மறந்து, ராமனை சந்திக்க ஓடத் தலைப்பட்டார்கள். அவ்விதம்

ஓடும்போது ஒருவர் மற்றொருவரைப் பார்த்து "நீங்கள் பரம தயாளுவான ரகுநாயகனைப் பார்த்தீர்களா?" என்று கேட்டுக் கொண்டே போனார்கள். (28)

அயோத்தியபுரி முழுவதும் பிரபுவின் வருவதலால் ஒரே கோலாஹலம், ஒரே ஆனந்தம். சரயுநதியும், அயோத்தியும் (திருவேங்கடம் மாதிரி நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்கு உய்த்தனள் நான்முகனார் பெற்ற நாட்டுவே, என்கிறபடி) மிதிலைச் செல்வியையும் ரகுராமனையும் வரவேற்க ஒரே சோபிதமாகவிருந்தன. சீதாராம பரத லக்ஷ்மண சத்ருக்ன வசிஷ்ட பிரமுகாதிகளால் அன்று அயோத்திமாநகர் பரம வ்யோம பாஸ்கரனாக விளங்கிற்று. [துவளவண்ணனைக் காண வைஷ்ணவ குழாம்கள்கூடி ஆனந்திப்பதைக் கண்டு,] இயற்கையும் மந்தமாருதமும் மூன்றுவித தாபங்களைப் போக்கும் சஞ்சீவியைப் போல அழகுடன் சோபித்தன. ஸரயுநதி அதி நிர்மலமாக விளங்கியது. சக்கிரவர்த்தி திருமகன் ரகுநாதன், சீதாபிராட்டியுடனும் லக்ஷ்மணனுடன் திரும்பிவருவதைக் கேட்டு, ஸரயுநதி முக்திதரும் நகரேழில் அயோத்தி முதலாவதாக விளங்கவேண்டுமென்று பெரும் பிரபாவங்களுடன் விளங்கியது. (29)

என் நாயகன் பரதன் குரு வஸிஷ்டரை முதலாகக் கொண்டும், பரிஜனங்களையும் பந்துவர்க்கங்களான சத்ருக்னனை யும் கௌஸல்யா, ஸுமித்திரா, கைகேயி தாய்மார்களுடன், பூஸுரர்களுடன் புடைசூழ ஒரே கோஷ்டியாக கிருபா நிகேதனாக விளங்கும் சீதாராம லக்ஷ்மணர்களை வரவேற்கப்புறப்பட்டார். அவர்களுடைய மனம் பிரேமையினால் பூர்ணமாக நிரம்பி யிருந்தது. அவர்கள் ராம ஆகமனத்தில் அதிஸன்முகர்களாக விளங்கினார்கள். (30)

அநேக ஸ்திரிகள் மணிமாட அயோத்தியின் உப்பரிகைகளின் மீது ஏறி, ஆகாயத்தில் பறந்துவரும் புஷ்பகவிமானத்தைக் கண்டு, ஆனந்தமடைந்தார்கள். அந்த ராமசீதா திவ்ய தம்பதி களைக் கண்டு, உத்தம மங்கள கீதங்களை ஸுஸ்வரமாகப் பாடி ஆனந்தமடைந்தார்கள். (கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ, எங்கள் ராமனைத்தவிர வேறு ஒரு தெய்வம் எங்களுக்கு உண்டோ? அவர்களுடைய மதுர ஸுஸ்வர கீதங்கள் தியாக ராஜாதிகள் பாடும் லயபாவத்துடனும், ஸப்த ஸ்வரங்களுடனும் மூர்ச்சனையுடனும் பாடப்படும் ஆனந்த கீர்த்தனங்கள் மாதிரி யிருந்தன.) (31)

[தியானம்

ராமா சீதா, லக்ஷ்மணு, பரதசத்ருக்னு, ஆஞ்சநேயா, நீங்கள் என் கிரஹத்திற்கு வரமாட்டீர்களா? தியாகராஜாதிகளை விட்டு நான் உனக்கு ஆனந்த கிர்த்தனம் செய்யச் சொல்லி உங்களை மகிழ்விப்பேன். ராமா, உன்னை தங்கசிம்மாஸனத்தில் உட்கார வைத்து சீதையைவிட்டு அழகான புஷ்பங்களாலும் தங்க நகைகள் ஆபரணங்களாலும், ஸ்ருங்கார லீலைகளைச் செய்யச் சொல்வேன். பரதலக்ஷ்மண சத்ருக்னுதிகளைக் கொண்டு, உனக்கு சைத்ய உபசாரங்களைச் செய்துவைப்பேன். ஸாகரத்தைத் தாண்டின உன் தூதன் இருக்கிறனே, என் ஆசார்யர் ஆஞ்சநேயரைவிட்டு, மஹாவினயத்துடன் அஞ்சலிசெய்த கைகளால் ஆகம ஸாரமாகிற கீதங்களைப் பாடச்செய்வேன். கௌசிகமுனியைப் பின்பற்றி நடந்த திருப்பாதங்களை நான் அடிக்கடி அலம்பி என் கைகளால் அவைகளை ஒத்திக்கொண்டு என் மஸ்தகத்தில் உன் பாதரேணுக்களை அணிவேன். கருணுஸாகர ராமா, சுகுமாரா, தசரதகுமாரா, யதுநந்தனு, உன்னுடைய நீரஜ நயனங்களைப் பார்த்துப் பார்த்து இன்புறுவேன். உன்னுடைய மிருதுபாஷண பேச்சுக்களைக் கேட்டு என் பாக்யமாகக் கருதுவேன். உன் கட்டளைகளைக் கேட்டு நடந்து கருடன் ஆஞ்சநேயாதிகளைப் போல இன்புறுவேன். நாரத, வால்மீகி, வியாஸபகவானுக்குக் கிடைத்த உனது புண்யதரிசனத்தை பிரஹ்லாதன், துருவன், அம்பரீஷனைப் போல, அடிக்கடி பெறுவேன். ஸதா சுத்தாந்த ரங்கா, உமை பரமேஸ்வரன் குஹன், கணபதி ஹ்ருதயகோசங்களில் சந்தோஷத்துடன் வீற்றிருக்கும் ஸ்ரீராமா, உனது கருணுகடாக்ஷங்களை அனுபவிப்பதற்கு ஸாது ஜனங்களுடன் நைவேத்யம் ஸமர்ப்பிப்பேன். புஷ்பகவிமானத்திலிருந்து இரங்கிவந்து, என்னைப் பரிவுடன் நிஜ உள்ள அன்புடன் பரதனையும் சத்ருக்னனையும் வாரிக்கட்டி அணைத்து முத்தமிட்டாயே, அந்த விசாலமான ப்ருகு பதம் பதிந்த வக்ஷஸ்தலத்தையும் சுக்கிரீவ வானராதிகளையும் குஹன் விபீஷணனையும் அணைத்துக்கொண்ட தீர்க்க பாஹுக்களையும் நான் எப்போது ஸ்பர்சிப்பேன்? மாரீசனைப் பின்பற்றிச் சென்றதும், சிவதனுஷ்ஷை மிதிலாபுரிக்குச் சென்ற உனது பரம பாவனமான பாதங்களில் அகல்யையைப் போல வணங்கி, இன்புறுவேன். சீதாராமா, நாராயணு, ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணு, நம: சித்திரகூட ஸ்ரீராமா, உன்னை மனதார துதிக்கும் என்னிடம் வரமாட்டாயா? உன் உறவு புண்யமானது.

உனக்கு நான் செய்யும் நமஸ்காராதிகள் வியாஜமாத்திரமின்றி உன் கருணுகுணப் பூர்த்திக்கு ஏதாவது குறைவுவருமா? ஸர்வக்ஞனுகிற நீ பக்தர்களை ஸம்ரக்ஷிக்கும் விஷயத்தில் என் அறிவோ, கர்மபூர்த்தியோ, உனது ஸர்வ ஸ்வதந்திரத்வத்திற்கு என்ன செய்யும்? குறை ஒன்றுமில்லாத கோவிந்தா, அல்லிமா மலர் நாச்சியாரே, பேரருளாளா, அடியார்களின் உள்ளத்தில் ஊறும் தேனே, உளம் கனிந்து நான் பேரின்பமடைய என் வீட்டிற்குவருவாய். சியாமளமேனிப் பெருமாளே, ப்ருகுகௌதம உசத்யருக்குப் பிரத்யக்ஷமாகக் காக்ஷிகொடுத்த திருக்கண்ணங் குடியானே, அரவிந்தவல்லி நாச்சியாருடன் ஓடிவாரும். கிருபை செய்யும். நாராயணு, ராமா, சீதா, லக்ஷ்மணு, பரதசத்ருக்னு, ஆஞ்சநேயா, என்று நாமம் சொல்லும் என்னிடம் வாருங்கள், அமரர்கள் தொழும் தலைவா, வாரும்.]

ஸ்ரீரகுபதியின் முகம் பூர்ணசந்திரனைப் போல பிரகாசித்து, ஸரயுநதியுடன் கூடிய அயோத்தி மஹா சமுத்திரத்தைப் போல விருந்தது. ராம ஆகமனம், சந்திரோதயத்தின் சமயம் அலைகளுடன் விளங்குமாப் போல ஒரே ஜனக் கூச்சல் பேரானந்தங்களுடன் விளங்கியது. எங்குபார்த்தாலும் ஒரே ஆனந்தமயம். இங்குமங்கும் ஓடிய நாரிகள் அச்சமுத்திரத்தில் எழும்பி துள்ளுகின்ற அலைகளாயினர். (32)

இங்கே புஷ்பக விமானத்தில் பானுகுல திலகன், ரகுராமன், ரகுகுலகமல புஷ்பம், அயோத்தியை தனது பரிஜனங்களான வானர சுக்ரீவாதிகளுக்குக் காட்டினர். அவர்கள் மனேரஞ்சிதமான அயோத்தியை மிக்க ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். ப்ராப்ய ருசி பெற்ற வானராதிகளைப் பார்த்து, என் பிரபு சொன்னர். "சுக்ரிவா, அங்கதா, லங்காபதியான விபீஷணு, இதோ பாருங்கள். ஸரயு நதி அயோத்தியுடன் அழகாக விளங்குகிறது. இந்த பிரதேசம் பரம பாவனமானது. ஸாதுக்கள் வாழ்ந்து வரும் பிரதேசமான படியாலும், தர்மத்தில் நம்பிக்கையுள்ளவர்களால் ஆஸ்ரயிக்கப்படும் இந்த பிரதேசம் அழகாகவும் செழிப்பாகவுமுள்ளது." (33)

"நாம் வேத புராணங்களில் ஸ்ரீயப்பதியான நாராயணன் வசித்துவரும் வைகுண்டபுரியைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறோம். அதைப் போல இந்த திருவயோத்தி நான்முகன் ஸ்ருஷ்டித்த நகர்களில் முக்திக்கு முதலாவதாக விளங்குகிறது. பிரியர்களே, எனக்கு, வித்வான்கள் கூடிச் சேர்ந்து வாழும் இந்த அயோத்தியை விட மிக்கப் பிரியமானது வேறு ஒன்று

மில்லை.'' இந்த வசனங்கள் உண்மையானவை என்று வேதங்களின் மர்மங்களை உணர்ந்தவர்கள் அறிவார்கள், '' ''அகாரம்'' பிரும்மாவையும், ''ய'' காரம் விஷ்ணுவையும், ''த'' காரம் ருத்ரரையும் குறிக்கிறது. ஸர்வ பாதகங்களையும் பிரும்மஹத்யாதி பாபங்களையும் போக்கக்கூடிய திறமை வாய்ந்தது இந்த அவத்புரி என்று சொல்லுவார்கள். ''கனக பவனுடன் கூடிய இந்த அயோத்யாபுரி மனு முதவிய ராஜரிஷிகள் அரசு செலுத்திய இடம், விஸ்வத்திற்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய பிரதான நகரம். ஸ்ரீராமச்சந்திரனுடைய கோதண்டத்தினுல் ரக்ஷிக்கப்பட்ட நகரம், அம்பரீஷன், ரகு, பகீரதன், இக்ஷ்வாகு இன்னும் அநேக சூரியகுல மன்னர்கள் தர்ம நெறியுடன் அரசு செலுத்திய ராஜதானி.'' (34)

சகாக்களே, இந்த அயோத்தி என்னுடைய சுகமான ஜன்ம பூமி, இதைப் பார்த்ததும் நான் எனது தாய் தந்தையர்களைப் பார்ப்பது போல விருக்கிறது. அயோத்திக்கு வடக்கில் பரம பாவனமான சரயு நதி அழகாக ஓடுகிறது. இந்த புண்யமான நதியில் ஸ்நானம் செய்வதால் மனுஷ்யர்கள் ஒருவித சிரமமின்றி என் சம்பத்தை அடைகிறுர்கள்.'' (35)

''இங்கு வசிக்கும் ஜனங்கள் எனக்கு மிக்க வேண்டியவர்கள். (ஸ்ரீவைகுண்டத்தில் பரமபத நாதனுடன் வாழும் நித்ய ஸூரிகள் என்று அயோத்யா ஜனங்கள் ராம அவதார காலத்தில் கருதப்பட்டார்கள்.) இங்கு வசிப்பது இக லோகத்தில் பரம சுகங்களையும், அதற்குப் பின்பு என்னுடைய நிஜபதமாகிற வைகுண்டத்தையும் அளிக்கக் கூடியது.'' உத்தம கதியை அளிக்கும் அயோத்தியைக் கண்ட அந்த வானரங்கள், விபீஷண சுக்ரீவாதிகள் பிரபுவின் வார்த்தைகளைக் கேட்டு. மிக்க ஆனந்தமடைந்தார்கள். பிரபு ஸ்ரீராமன் ஸ்வயமாகவே திருவுள்ளம் கொண்டு, இந்த ஸாகேதபுரியில் ஜனனம் எடுத்து, தனது விளையாட்டு ஸ்தலமாக பூமியில் லீலைகளைச் செய்வதற்காக அவதரித்தார். அதனுல் அது நிஜமாகவே அபார மகிமைகளுடன் கூடியதாக விருக்கிறது. ராமத்வனி கொண்ட இந்த ''அயோத்தியாதாம்'' நமக்கு இந்த தரிசனத்தால் ஸர்வபலன்களை அளிக்கக்கூடியது. நாம் பரம தன்யர்களாக ஆக்கப்பட்டோம்.'' என்று கிருதக்ஞையுடன் ஸரயு நதியுடன் கூடிய ஸாகேத புரியை அவர்கள் வணங்கினுர்கள். (அந்த ஸாகேத புரியையும் ஸரயு நதியையும் நான் ஸதா ஸ்மரித்து நமஸ்கரிக்கிறேன்.) (36)

அயோத்தி நகரை அடைந்த என் பிரபு கிருபாஸிந்து பகவான் ஸ்ரீராமச்சந்திரன் கருணையினால் நனைந்தவராக ஸகல அயோத்யாபுரி வாசிகளைப் பார்த்தார். நகரத்தில் எல்லையை அடைந்த பின்பு அவர் புஷ்பக விமானத்திலிருந்து இறங்கு வதற்கு பிரயத்னம் செய்தார். அதன் பிறகு அவர் பூமியில் தனது மிருதுவான பாதங்களை வைத்தார். (37)

பிரபு விமானத்திலிருந்து இறங்கினார். அவரைத் தொடர்ந்து மற்றவர்களும் இறங்கினார்கள். சகலரும் இறங்கின பின்பு, பிரபு அந்த புண்யமான புஷ்பக விமானத்தை குபேர னிடம் போகும்படி ஆக்ஞை செய்தார். பிரபுவின் ஆக்ஞையின் படி அந்த விமானம் ராம ஸம்பந்தத்தின் தொடர்ச்சியை அனுப விக்க முடியாமல் இருந்ததற்கு துக்கத்தையும் தனது பழைய எஜமானரிடம் போய்ச் சேரும்படி இருந்ததற்கு அதிக சந்தோஷத்தையும் அடைந்தது. (அந்த புஷ்பக விமானத்திற்கு நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) (38)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி பிரபோ, ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நமः, பரதலக்ஷ்மணா, சத்ருக்ன, ஆஞ்சநேய சுக்ரீவ, விபீஷண, குஹன் முதலியோர்களால் ஸேவிக்கப்பட்ட சீதாராமா, சரணம் சரணம், அஞ்சலி செய்து கொண்டு முமுக்ஷு வானஅதிகாரி அனன்ய தேவதாந்த ராத்வம், அனன்ய பிரயோச னத்வமும் விரதம் கொண்டு, தோஷமில்லாதவனாக எவ்விதம் கால நியமம், தேக நியமம், வர்ணாஸ்ரம நியமங்கள் முதலியவை இல்லாதபடி நாராயணனை அடைவானோ, அதைப்போல ஆசார்யர்களான ராம பாதுகைகளையே நம்பி விரத தீக்ஷையுடன் வாழ்ந்து வந்த பரத சத்ருக்னாதிகள் அக்ஷய பலமான சீதாராம னுடைய கைங்கரிய ஸேவைகளை மீண்டும் அடைந்தார்கள். பிரபத்தி செய்தவன் போலவும், அனன்ய பிரயோஜன நிலையை அடைந்தவனும், கைகளைக் கூப்பிக் கொண்டு, ''கண்ணபுரம் ஒன்றுடையானுக்கு அடியேன் ஒருவர் குரியானோ, விஷ்ணுவே ஸர்வம்'' என்று நம்பி வாழும் ஏகாந்தியைப் போல அல்லவா பரதன், சீதாராம பாதங்களை கைங்கர்ய பாக்கியத்திற்காக அடைந்தான். கண்ணன், ராமன் கழல் தொழக்கூப்பிய பரதனின் கைகளின் பெருமையை விவரிக்க யாரால் முடியும்? ஹே சீதாப் பிராட்டியுடன் கூடிய சீதாராமா, ஸாகேத புரிவாஸா, ஸ்வாமின், பரத சத்ருக்னாதிகளைப் போல நானும் அஞ்சலி

செய்துகொண்டு, எங்களது ரக்ஷண பரத்தை உம்முடைய சொத்தாகச் செய்துவிட்டேன். சொத்துக்கு உரியவன் போல நீரும் பிராட்டியும் எனது ஆசாரியர்களும் ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டும். நீதானே பரதன், சத்ருக்னன், லக்ஷ்மணன், ஆஞ்சநேயர், நம்மாழ்வார், மூலம் இந்த ஞானத்தை அளித்தாய். துளசிதாஸர், தியாகராஜர், வேதாந்ததேசிகர் முதலியவர்களை வணங்கும் என்னைப் பாருங்கள். உனக்காகவே, உங்களிடத்தில் பரஸமர்ப்பணம் செய்த என்னை அங்கீகரிக்க வேண்டும். ஆண்டாள் சொன்னதுபோல "எத்தகைய பிறப்பு எடுப்பினும் உங்களது உறவுப் புண்ணியமும் நான் அடையவேண்டும்," "தான் தந்த இன்னறிவால் தாழ்ந்த வென்னை தன்தனக்கே பரமாக தானே எண்ணி, ஸ்வஸ்மை, ஸ்வப்ரீத்யே, ஸ்வயமேவ காரயதி" என்கிற ஸாத்விக தியாகத்தைச் செய்யும் என்னைப் பரதசத்ருக்ன கௌஸல்யாதி வஸிஷ்ட பிரமுகர்களைப் போல ஸ்ரீமானுகவிருக்க அருள் புரியவேண்டும். நீயே உனது திருவடியை நான் அடையும்படி செய்யவேண்டும். இந்த அடிமை விஷயத்தில் நான் தெளிவுற்றேன், உங்களை அடைவதையே பரம பிரயோசனமாகக் கருதினேன். நிஷித்த காரியங்களை வர்ஜித்த என்னை தங்களது தாஸன், நித்ய கிங்கரன் என்று தேவியும், நீரும் ஸங்கல்பம் செய்யவேண்டும். என்னையும் என்னைச் சேர்ந்த ஸமஸ்த வஸ்துக்களையும் தங்களுக்கே ஸமர்ப்பணம் செய்ததை கிருபையுடன் அங்கீகரிக்கவேண்டும். ஹே கருணாகரா, நீ சமர்த்தன். ஸர்வ ஸ்வதந்திரன், ஜகந்நாதர். பிரணதார்த்திஹரன். "சீறியருளாதே, இறைவா," என்று உங்களை அழைக்கிறேன். சம்சார வெப்பங்களிலிருந்து என்னைக் காப்பாற்றும் பொருட்டு, ஸதாசாரியர்களால் தீட்டப்பட்ட மார்க்கத்தில் வரும் எனக்கும் என் பரிவாரங்களுக்கும், நிஜபரம் "நிர்ப்பரோ, நிர்பயோஸ்மி," என்கிறபடி சீதாராம திருவடிகளில், நாராயண பதங்களில், எங்களது பரத்தை ஸமர்ப்பித்து பயமின்றி பொறுப்பின்றி வாழ்கின்றேன். "தர்ம விக்ரஹவான் ஸகிருத் பிரபன்ன ஜனதா ஸம்ரக்ஷணம்" என்கிற "வ்ரதி, தன்வீஸ தன்விதநः" என்று சொல்லும்படி கோதண்டத்தைத் தரித்து எங்களை அல்லவோ நீர் ரக்ஷிக்க வேண்டும்.]

பரதனை முன்னிட்டுக் கொண்டு ஸகல அயோத்திவாசிகளும் ஸ்ரீசீதாராமனை எதிர்கொண்டு அழைத்து மங்கள ஆரத்தி செய்வதற்கு முன் வந்தனர். ஸ்ரீரகுவீரனுடைய ஸம்பந்த

வியோகத்தினுல் மெலிந்துபோன சரீரத்தை உடையவர்களாக அவர்கள் காணப்பட்டார்கள். (ராம சீதாவின், புனர் தரிசனம் என்கிறதற்கு விரத தீக்ஷை எடுத்து, காயக்கிலேசம் செய்த மஹா புண்யவான்கள். அவர்களை நான் தண்டனிட்டு நமஸ்கரிக்கிறேன்.) பிரபு கோதண்டத்தையும் பாணங்களையும் கீழேவைத்து விட்டு, என் பிரபு சரணுகத வத்ஸலன், வாமதேவ வஸிஷ்டர்களை தலைமைகொண்டுள்ள ரிஷிக்கூட்டங்கள் தன்னிடம் வருவதைக் கண்டார். (39)

பிரபு ஸர்வாவஸ்தைகளிலும் ஸகிருத் பிரபன்ன ஜனங்களை ஸம்ரக்ஷிப்பதே என்கிற விரத தீக்ஷை செய்துகொண்ட ரகுராமன் வேகமாக ஓடி அவர்களுடைய சரோஜ பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். லக்ஷ்மணனும் ஓடினுன். அவர்களை விழுந்து நமஸ்கரித்தான். அவர்கள் இருவர்களும் மஹா கிருதிக்கையுடன் சரீர முழுவதும் புளகாங்கித மடைந்தவர்களாகக் காணப்பட்டார்கள். முனிராஜரும் மஹாவிரதம் கொண்ட வஸிஷ்டபகவான் அவர்களை வாரி எடுத்து, தன் ஹ்ருதயத்துடன் தழுவிக்கொண்டு, அவர்களுடைய க்ஷேம குசலங்களை விசாரித்தார். பிரபு பதில் சொன்னுர். "ஸ்வாமி, தங்களுடைய தயையுடன் கூடிய மங்களா சாஸனத்தினுல் நாங்கள் சௌக்யமாக விருக்கிறோம்," என்றுர். (40)

அதற்குப் பிறகு ஸகல பிராம்மணர்களையும், தர்மத்தையும் ரக்ஷிக்கும் பிரபுவான ரகுகுல துரந்தரன், ரகுகுல நாயகன், ஸ்ரீராமன் நமஸ்கரித்தார். அந்த ஸரோஜ பதங்கள், சுரர்கள் முனிகணங்கள், உமாசங்கரர், பிரும்மா, சரஸ்வதி யாவராலும் தினமும் வணங்கப்பட்ட பாதங்கள். அப்பேற்பட்ட ராமசீதா சரணங்களை பரத சத்ருக்னன் தண்டனிட்டு, சுக்ருத பிரணமம் செய்தார்கள்! (41)

பரதன் மீண்டும் மீண்டும் நமஸ்கரித்ததைப் பார்த்த பிரபு, கிருபாஸிந்து ரகுவீரன், ரகுகுல ஸோமன், பரதனை வாரி அணைத்துக்கொண்டு ஆஸ்வாசப்படுத்தினுர். ஜனுர்த்தனரான என் பிரபுவின் சியாமள சரீரத்தில் பரத ஸ்நேகத்தினுல் யேற்பட்ட ஆனந்தப் பெருக்கு ஓடிப்போய், அவருடைய ரோமக்கால்கள் புளங்காங்கித மடைந்து, அவருடைய நவராஜீவாக்ஷங்களில் பிரேமைக் கண்ணீர்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. அந்தக் காக்ஷியைக் கண்டவர்கள் அல்லவோ மஹாபாக்ய சாலிகள்! (42)

"பரத ராம ஸ்நேகம்" அத்யாச்சர்யமானது. இயற்கை வாசனையுடன் பரிமளிக்கும் அந்த ஸ்நேக ஸம்பந்தம் நினைப்ப தற்கும் சுகந்தமாகவும் ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியது. கமல புஷ்பம் போல நேத்ரங்களைக் கொண்ட ராமபரதர் ஆகிற இருசகோதரர்கள் ஆனந்தக் கண்ணீர்களைச் சொரிந்தார்கள். அவர்களுடைய புண்யமான சரீரங்கள் புளகாங்கிதமடைந்து ஆனந்தமயமாகி, மஹா சோபையுடன் விளங்கியன. திரிலோக லக்ஷ்மியின் பிரபுவான ஸ்ரீராமச் சந்திரன் அதிபிரேமையுடன் தம்பி பரதனை தனது ஹ்ருதயத் துடன் தழுவிக்கொண்டான். அந்த உத்தம ராமன், "தொழுது கொண்டு, ராமனடிக்கே அன்பு சூட்டி மெய் நின்று கேட்டருளாய அடியேன் செய்யும் விண்ணப்பம்," என்று அஞ்சலி செய்து கொண்டிருக்கும் பரதனை இறுக அணைத்துக்கொண்டு, அவனுக்கு உயிரளித்து, வாழ்வித்த புண்ய திருக்கோலத்தில் வீற்றிருந்த தோற்றத்துக்கு என்ன உபமானம் கிடைக்கும்? (அன்று நம்மாழ்வாரை உபகார ஸங்கரஹம் செய்தானே, இரு கற்பக மரங்கள், வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க் கும் ஞானப்பிரானை யல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே என்ன சரியான உபமானம் இருக்கக்கூடும்?) பிரேமையும், அழகும் சரீரங்களை எடுத்து தெய்வக்குழாங்கள் கைதூக்கி, கூப்பித்தொழ பரம சோபிதமாக விளங்குவது போலவிருந்தன. (அப்பேற்பட்ட ராம பரத சஹோதரர்களை நம்மாழ்வாரை முன்னிட்டு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (43)

[தியானம்

பரத, சத்ருக்ன, வஸிஷ்ட, வாமதேவ முனிநாயக ஸேவித ராம லக்ஷ்மண சீதா, உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய் கிறேன். நாராயணா, மஹாலக்ஷ்மி பிரபோ, தேவதேவா சரணம் சரணம். உங்களைப் பார்த்தால் உத்திராயன சூர்யனின் சேர்க்கை ரேவதி நக்ஷத்திரத்தில் இருப்பது போல அல்லவா விருக்கிறது. கிடைக்கப்பெருத பொருள் கிடைத்து, நஷ்டப்பட்டுப் போயும் மீண்டும் கிடைக்கப்பெற்று அன்புடன் நீடிப்பது போல விருக் கிறது. ராமாசீதா, அயோத்யை, அபராஜிதை என்று சொல்லப் படும் ஸாகேதராமா, தசரதபுத்ரா, உனக்கும் உனது பரிவாரங் களுக்கும் ஸதா மங்கள ஜயங்கள் ஏற்படட்டும். அமலனுதிப் பிரானே, கொண்டல்வண்ணா, நீதானே என் காவலர். பகவத் கடாக்ஷம் எனப்படும் உன் கடாக்ஷம் கிடைக்கப்பெற்றுல் பரதத்வ



மூன்று லோகங்களுக்கும் நாதரான பிரபு ஸ்ரீராமச்சந்திரன் பரதனைத் தழுவி அன்புடன் குசலம் விசாரித்தல். இந்த ராம–பரத சிநேகம், சந்திப்பு ப்ரேமை, இவைகளைப் பார்த்தால் பிரேமையும் சிருங்காரமும் மனுஷ்ய தேகங்களை எடுத்து, நேரே சந்தித்துத் தழுவிக்கொண்டால் எவ்விதம் ஆனந்தம் பரஸ்பரம் யேற்படுமோ அதுபோல ராம பரத சிநேகம் விளங்கியது.

பரமஹித பரம புருஷார்த்த விவேகத்தை உடையவனாய், அநாதி கால பிரவர்த்தங்களான க்ஷுத்ர புருஷ ஸ்தோத்திரங்களையும், தள்ளிவிட்டு, பரம ப்ராப்தமானதும், ஏகபோக்யமாகிறதும் அனன்ய பிரயோஜன அனுகூல விருத்தியை உடையதும், மஹா சந்தோஷ ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியதுமான உன் ஸம்பந்தப் பெரும்பேற்றை இங்கேயே பெரிய பெருமாள் திருவருளாலே பெற்று, அனுபவ பிரவாகமாக பெருக்கெடுத்து ஓடுகின்றது. ஹே கொண்டல்வண்ணா, என்னை நீதான் ஆட்கொண்டு, அடியார்க்கு அடிமையாக்க வேண்டும்.]

கருணைக் கடலாகிய ஸ்ரீராமச்சந்திரன் பரதனுடைய குசல க்ஷேமங்களை விசாரித்தார். (துருவனைப் போல) பகவத் தரிசனத்தினால் யேற்பட்ட ஒரே ஆனந்தமயமாகவிருந்த பரதனுக்கு பேச்சுக்கள் பேச முடியவில்லை. பகவான் சிவன் உமையிடம் சொன்னார் :—"பார்வதி, பரதன் அப்போது அனுபவித்த ஆனந்தம் வாக்குக்களுக்கும் மனத்திற்கும் அடங்காத ஆனந்தம், யாருக்கு பிரும்மானுபவம் ஏற்படுகிறதோ, அவர்களே அதன் ருசியை அறிவார்கள்." பரதன் பதில் சொன்னான். "கோஸல நாதரே, தாங்கள் என்மீது கிருபைகொண்டு எனக்கு இன்று தரிசனம் தந்தீர்கள். என்னுடைய ஆர்த்தி வேண்டுகோளையும் விண்ணப்பங்களையும் தாங்கள் அறிந்திருக்கிறீர். இனி என் கவலைகள், என்னைவிட்டு விலகிவிட்டன. தங்கள் விரஹ ஸமுத்திரத்தில் மூழ்கிவிட்டிருந்த என்னை, கிருபையுடன் தாங்கள் கைகொடுத்து கரையில் சேர்த்திருக்கிறீர்." (44)

இந்த வார்த்தைகளைக் கேட்ட பிரபு மீண்டும் சந்தோஷமடைந்தார். அதன் பிறகு அவர் சத்ருக்னனை தனது ஹ்ருதயத்துடன் அணைத்துக்கொண்டார். அதன் பிறகு லக்ஷ்மணன் பரதனை சந்தித்து இருவர்களும் தங்களுடைய பரம ப்ரீதியை நிதர்சனம் செய்துகொண்டார்கள். (45)

அதன் பிறகு லக்ஷ்மணன் பரதனுடைய தம்பியான சத்ருக்னனை அடைந்து இறுகத் தழுவிக்கொண்டான். இந்த விதமாக நான்கு சஹோதரர்களும் அனுபவிக்க முடியாத பிரிவின் துக்கங்களை மீண்டும் சந்திப்பதால் போக்கிக் கொண்டார்கள். அதன் பிறகு பரதன் சீதையின் திருவடிகளை நமஸ்கரித்தான். சத்ருக்னனும் லக்ஷ்மணனை நமஸ்கரித்து எல்லோரும் ஆனந்தத்தை அடைந்தார்கள். (46)

பிரபு ஸ்ரீராமன் அயோத்யாபுரி வாசிகளின் ஆர்வங்களைக் கண்டார். ராமபிரிவினால் வாட்டப்பட்டிருந்த சகல அயோத்யா

வாசிகளும், அத்யந்த பிரேமையுடன் ஸ்ரீராமனைத் தரிசித்து, தங்களுடைய துக்கங்களைப் போக்கிக்கொண்டார்கள். அவர்களுடைய பாபங்களும் பயங்களும் கஷ்டங்களும் அன்றோடு விலகின. கிருபாளு, கராரியான ஸ்ரீராமனைத் தர்சனம் செய்ததால் அவர்களுடைய தாபத்ரயங்களும் நீங்கின. அவர்களை தனித் தனியாக சந்திப்பதற்கு, பிரபு ஓர் உபாயம் செய்தார். (47)

அந்த சமயம் அவர்களுடைய தர்சன ஆர்வங்களைக் கண்டு பகவான் ஸகலருக்கும் நேராக தர்சனம் அளிக்கும் எண்ணத்துடன் ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் இஷ்டப்படி கணக்கற்ற ரூபங்களை எடுத்துக்கொண்டு தர்சனம் தந்தார். பகவான் க்ஷணபர்யத்தில் தனது கணக்கற்ற ரூபங்களைச் செய்து கொண்டு எல்லோருக்கும் தர்சனம் தானம் செய்தார். சம்பு உமையிடம் சொன்னார். "உமா, இந்த மர்மம் யாருக்கும் தெரியாது. சகலரையும் ஏககாலத்தில் சந்தோஷப்படுத்த சாமர்த்திய முள்ள என் பிரபு அவ்விதம் அமலனுதிப்பிரானக, ஒவ்வொருவரின் கண்ணின் முன் நின்றார்." அதனால் யாவரும் பரம ப்ரீதியை அடைந்தார்கள். பிரபு ஸாகேதபுரிவாசிகளுக்கு சீலவாத்ஸல்ய, ஸௌலப்யாதி குணங்களால் எல்லோரையும் சந்தோஷிப்பித்து, அவர்களுக்கு மிக்க சுலபரானார். (48)

ராமனை அடைந்துவிட்ட சந்தோஷத்தினால் துள்ளி ஓடிப் பாய்ந்த கௌஸல்யாதிகளின் ஆனந்தங்கள் தாய்ப்பசு தன் இளம் கன்றைக் கண்டதும் எவ்விதம் ஓடித்தாவுமோ, அதைப் போல விருந்தன. (49)

தாய்ப் பசுக்கள் இளம் கன்றுகளைவிட்டுப் பிரிந்து காடுகளுக்கு ஆகாரத்திற்காக அலைந்து திரிந்த பின்பு சாயந்திரம் எவ்விதம் தங்கள் இளம் கன்றுகளைப் பார்த்துவிட்டு இரங்கி முலையில் பாலை வழியவிட்டுக்கொண்டு பரவசமடையுமோ, அதைப்போல கௌஸல்யாதேவி ஆனந்த பரவசமடைந்தாள். அந்த நிரதிசய பிரேமை வெள்ளம்கொண்டு வாயில் நுரையுடன் தாய்ப்பசு வெகு ஆர்வமாக எவ்விதம் ஓடிக்கொண்டு வருமோ, அதைப்போல ஒருவித வெட்கமின்றி மரியாதைகள் ரீதிகள் கட்டுக்கு அடங்காமல் "ராமா" "லக்ஷ்மணா" "சீதா" என்று கூப்பிட்டுக்கொண்டு ஓடிவந்தாள் அந்த மஹா பாக்கியவதி கௌஸல்யை. வரம்ருதுபாஷணன், ஸுஸ்வரபூஷணன், என் பிரபு கௌஸல்யாராமன் அதிக தயையுடன் தனது தாயை இறுக்கத் தழுவிக்கொண்டார். பலவிதங்களால் அவளை சமாதானப்படுத்தி இன்புறுத்தினர். ராம வியோகத்தினால்

யேற்பட்ட பயங்கர விபத்துக்கள், அதன் விபரீதமான விளைவு களினுல் ஏற்பட்ட துக்கங்கள், அந்த விஷம்போன்ற நினைவுகள் ராமனை மீண்டும் சந்திப்போமா, ஆயுள் முடிவதற்குள் ராமசேர்க் கையின் ஆனந்தம் கிடைக்குமா என்று ஏங்கி வாடியிருந்த கௌஸல்யையின் பயங்கள் முற்றிலும் விலகி, அதனுல் எல்லை யற்ற ஆனந்த இன்பங்களை ராமதர்சனத்தால் என்தாய் கௌஸல்யா தேவி அடைந்தாள். (50)

அதன் பிறகு லக்ஷ்மணன் சுமித்திரையின் பாதசரணங் களில் விழுந்து நமஸ்கரித்தார். தனது புத்திரனுகிற லக்ஷ்மணன் மீது ராமன் காட்டிய பரம ஸ்நேகத்தினுல் நன்றி உணர்ச்சி கொண்ட சுமித்திராதேவி ராமனைத் தழுவி ஆனந்தித்தாள். ராமன் கைகேயியையும் நமஸ்கரித்து, அவளுடைய ஆசீர் வாதங்களையும் பெற்ருர். ஆனுல் அவருடைய மனத்தில் வருத்தத்தின் சாயை படர்ந்திருந்தது. (51)

லக்ஷ்மணனும் எல்லாத் தாய்மார்களையும் சந்தித்து நமஸ் கரித்து தானும் ஆனந்தமடைந்து பிறர்களையும் ஆனந்தித்தார். அவர் கைகேயியையும் அடிக்கடி சந்தோஷத்தினுல் சந்தித்து மீண்டும் ஆனந்தத்தை அடைந்தார். ஆனுல் அவருடைய மனத்தில் கைகேயியின் மீது ஏற்பட்ட ரோஷம் தணியவில்லை. (52)

வைதேஹியும் தனது மாமிகளையும் சந்தித்து அவர் களுடைய பாதசரணங்களில் நமஸ்கரித்து அதிக ஆனந்த மடைந்தாள். அந்த ராஜ ஸமுதாயமே ஒரே ஆனந்தமயமாக விருந்தார்கள். அவர்கள் சீதையின் க்ஷேமகுசலங்களை விசா ரித்து, "நீயும் உன் புருஷனும் பல்லாண்டுகள் பர்த்தாவுடன் பிரிவின்றி சந்தோஷமாக வாழவேண்டும்" என்று மங்களா சாஸனம் செய்தார்கள். (53)

[தியானம்

நாராயணு, மஹா லக்ஷ்மி பிரபோ, ராமா, மாயாமானுஷ சாரித்திராய நம:, நீதானே ஸர்வலோகங்களுக்கும் நாதன். சீதாநாயகா, முனிஜன ஸம்ஸ்துதா, கராரி, ராவணுரி, உன்னுடைய சரித்திரம் மஹா புண்ணியமானது. தியாகராஜ துளசிதாஸ கம்பர், வால்மீகாதிகளால் மிக்க சிரத்தையுடன் பாடப்படும் புண்ய சரித்திர கீர்த்தனய நம:, சீதா, ராமப்ரபோ, உன் ராம நாமம்தானே ஸர்வ வேதாந்த ஸாரம். பவரோகத்தின் மருந்து. ஹே ஸத்யவாக்குக்களை உடைய வாக்மீ, ஸத்ய விக்ரமா,

ஸதா ஹனுமதா ஸ்ரிதாய நம:. எப்பொழுதும் ஹரகோதண்ட கண்ட நாய நம: என்று உன்னை ஸ்துதி செய்யும் என்னைப்பார். உன்னுடைய அனந்த குணகம்பீரியங்களைப் பாடிமகிழும் எனக்கு உன்னுடைய பீதவாடையுள்ள தர்சனத்தை எப்போது அளிப்பாய்? பரமாத்மா, வாலி ப்ரமதனுய நம: என்று நமஸ் கரிக்கும் எனக்கு எப்பொழுது ஸ்மிதவக்த்ரத்துடன் பூர்வ பாஷணுக மிதபாஷியாகப் பேசப் போகிருய்? ராகவா சீதா, பரதலக்ஷ்மண சத்ருக்ன ஸேவிதா, சரணம் சரணம்.]

எல்லோரும், கமலபுஷ்பம் போலசந்தோஷத்தால் விகஸித்து பூத்து நிற்கும் ரகுபதியின் திருமுக மண்டலத்தைப் பார்த்தார்கள். அவர்களுடைய புண்யமான லோசனங்களி லிருந்து மங்களகரமானதும் ஆனந்த மயமான ப்ரேமை கண்ணீர்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. "ஸர்வ பிரியபந்து தர்சனம்'' என்கிற எண்ணத்துடன் அவர்கள் தங்களுடைய கண்ணீர்களை துடைத்துக்கொண்டு, சந்தோஷப் படும் சமயம் பழைய ஞாபகங்களை நினைத்துக்கொண்டு வருத்தப்படும் சமயம் இதுவல்ல என்கிற நினைப்புடன் தங்களைத் தேற்றிக்கொண்டார்கள். தங்கத் தாம்பாளங்களில் ரகுநாய கனுக்கு மங்கள ஆரத்திகளை எடுத்தனர். அடிக்கடி பிரபுவின் கருணை தோய்ந்த திருமுக மண்டலத்தையும் சுபமான லக்ஷணங் களுடைய பிரபுவின் அங்கங்களையும் பார்த்தவண்ண மிருந்தனர். (54)

பகவானுக்கு கண்எச்சில் படக்கூடாது என்கிற எண்ணத் துடன் அவர்கள் நாளுவிதமான பண்டங்களை பிரபுவைச் சுற்றி நான்கு திசைகளிலும் வீசி எறிந்தனர். அந்த தாய்மார்களும் அயோத்தியாபுரி வாசிகளும், வஸிஷ்ட, வாமதேவ, முனிகணங் களும், பரதலக்ஷ்மண சத்ருக்னுதிகளும், மங்கள தாயக தெய்வங் களான சீதா ராமமூர்த்திகளை அடிக்கடி தர்சனம் செய்து கொண்டு, பரமானந்தத்தை அடைந்தார்கள். அவர்களுடைய மன சந்தோஷம் எல்லையற்று பரம சோபிதமாக விளங்கியது. கௌஸல்யை தன் புத்ரனை அடிக்கடி பார்த்து அதிக ஆனந்தத் துடன் இன்புற்றுக்கொண்டிருந்தாள். அவளுடைய சித்தமும் கண்களும், கிருபாஸிந்துவாகிற ரகுராமனின் மங்கள விக்ரஹத்தில் பதிந்திருந்தன. ராமனுடைய புஜபல பராக்ரமத் தையும், யுத்தத்தில் மஹா தைரியத்துடன் சண்டை செய்யும் மனவலிமை தேகவலிமையையும் அவள் நினைத்து நினைத்து புளங்கிதமடைந்தாள். (55)

"என் புத்ரன் ஸத்ய வாக்குள்ளவன். ஸத்திய விக்ரமம் கொண்டவன். லோகத்தை ரக்ஷிப்பதற்காக பூமியில் அவதாரம் செய்தவன். ஆனல் அவனைப் பார்க்கும் சமயம், இவன் ஸர்வ சாதாரண மனிதனைப் போலல்லவா தோற்றமளிக்கிருன். மாய ளுக எனக்குத் தோற்றமளித்து, என் புத்தியை கலக்குகிருனே. இவ்வளவு சுபமான அங்கங்களைக் கொண்ட ம்ருது சுகுமாரன் பத்து தலைகள், இருபது கைகளைக் கொண்டவனும், ராக்ஷஸ ராஜனுமாகிற லங்காதிபதி ராவணனைக் கொன்றிருக்க முடியுமா? அதிசுகுமாரன், தாமரை இதழ்களைவிட மெல்லிய மிருதுவான ஈரநெஞ்சை உடைய என் ராமன், புருஷோத்தமன், கருணு காகுத்ஸன், ராவணனுடன் சண்டை செய்து, அவனைக் கொன்றிருப்பானு? இந்த லக்ஷ்மணனும் மிகச் சிறிய பாலகனுக விருக்கிருன். இவனும், என் ராமனும் மாயாஜால வித்தைகளில் தேர்ந்தவர்களும், இரவில் சஞ்சரிப்பவர்களும், மஹாபலம் பொருந்திய யுத்த படர்களுடன் சண்டை செய்து ஜயித்திருப் பார்களா? ஒரே ஆச்சரியமாக விருக்கிறதே.!" அடிக்கடி அடிக்கடி இந்த விஷயத்தை நினைப்பவர்களாக கௌஸல்யாதேவி தோன்றிஞள். (56)

கௌஸல்யாதேவி லக்ஷ்மணன், சீதை, ரகுபதி ஆகியவர் களை மீண்டும் நோக்கிஞள். "ஆம். இவர்கள் நிச்சயமாகவே தெய்வ அம்சங்கள்தான். நம் முன் நாடகம் போடுகிருர்கள். என்னைச் சிறு வயதில் மாயலீலைகளைச் செய்து, ஆனந்தப் படுத்திய ராமன், நிஜமாகவே ஸர்வலோக மஹேஸ்வரர். இந்த சீதை மஹாலக்ஷ்மியின் அம்சம். லக்ஷ்மணன் ஆதிசேஷ னுடைய அம்சமாகத்தான் இருக்கவேண்டும்." இந்த நினைவு வந்தவுடன், அந்த புண்யவதியான கௌஸல்யாதேவி பரமானந் தத்தை யடைந்து, அவர்களை அடிக்கடி அடிக்கடி தரிசனம் செய்து, மனம், தேகம் ஆகியவற்ருல் புளகாங்கிதமடைந்தாள். (57)

லங்காதிபதியான விபீஷணன், கபிகளுக்கு அரசனுன சுக்ரீவன், நளன், நீலன், ஜாம்பவான், அங்கதன், ஹனுமான் ஆகிய உத்தம வீரர்கள் அந்த சமயத்திற்கு ஏற்ப, அழகான மனுஷ்ய ரூபங்களை எடுத்துக்கொண்டு எல்லோரையும் மனோரஞ்சிதம் செய்தார்கள். (58)

அந்த மஹானுபாவர்கள் தங்களுடைய பாக்யமான கண் களினுல் பரத ராம ஸ்நேகத்தையும், அவர்களுடைய உத்தம சீல விரத நியமங்கள் கொண்ட புண்ய நடத்தைகளையும் கண்டு,

ஆச்சரியம் கலந்த பிரேமையுடன் விளங்கினார்கள். அவர்கள் அந்த சமயத்தில் ராஜமரியாதைப்படி விசேஷமான மரியாதைகளைச் செய்து ராமபரதனுக்கு ஏராளமான வெகுமதிகளையும், காணிக்கைகளையும் கொடுத்தார்கள். அந்த சுபமான காக்ஷிகளைக் கண்ட மஹாபாக்யமுள்ள அயோத்யாபுரவாசிகள், அவர்களுடைய பிரேமை சீலம், ஸ்நேகம், வினய நம்ரதிகளைக் கண்டு, பிரபுவின் சரணங்களில் அடிக்கடி விழுந்து நமஸ்கரித்து, பிரபுவின் ஆனந்த குண கம்பீர்யங்களைப் புகழ்ந்து, ஆனந்த ஸ்துதி செய்தவண்ணமிருந்தார்கள். (அப்பேற்பட்ட மஹா பாக்யமுள்ள ஸாகேதபுரிவாசிகளை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) (59)

[தியானம்

ஹே சீதே, மஹாலக்ஷ்மி, நாராயணி, சாருஹாஸா, ஸுததி, ராகவப்ரியா உன்னை நமஸ்கரித்து, ஸ்ரீராமனை நமஸ்கரிக்கிறேன். ராமபிரியா, ராஜமஹிஷி, ஆர்யா, ஜனகநந்தினி, உன் சரித்திரம் தானே ஸ்ரீராமனுடைய திவ்ய லீலை. உங்களிருவர்களுடைய பிரியத்தை அடைந்தவன்தான் மஹா பாக்யமுள்ளவன். லக்ஷ்மணனுக்கும், குஹனுக்கும், சுக்ரீவ, ஆஞ்சநேய, விபீஷணனுக்கும் கிடைத்த பாக்யங்கள், இன்று பரதசத்ருக்ன, கௌஸல்யாதி, ஸாகேதபுரவாசிகளுக்கு பரதனால் கிடைத்ததல்லவோ. உங்கள் அடியார்களான ஸாகேதபுரிவாசிகளையும், ஸாகேதபுரியையும் புகழ்வதால், கபிலைப் பசுவைத் விப்ரனுக்குத் தானம் செய்வதுபோல் அல்லவா மகிமை பெற்றிருக்கிறது. ஸ்ரீ ரகு நாயகர் தாம் என்று அழைக்கப்படும் அயோத்யா, ரெங்கதாம் என்று அழைக்கப்படும் ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தைப் போல பிரசித்தி பெற்றதல்லவா. ஆதிக்காலத்தில் ஸ்வயம்புமனுவும், பிரும்மாவும் சேர்ந்து, விஷ்ணு பகவானிடம் சென்று கேட்டபோது, அவர் அயோத்திதான் சிறந்த வாசஸ்தலம் என்று அவர்களுக்குச் சொன்னார். அதன் பேரில் விஸ்வகர்மா, வஸிஷ்டர் ஆகியவர்கள் அயோத்யாபுரியை நிர்மாணித்து, இக்ஷ்வாகுவம்ச ராஜதானியாக அமைத்தார்கள். இந்த புண்ய நகருக்கு மேற்கில் காக்ரா என்கிற நதி ஸரயுநதியுடன் ஸங்கமத்தை அடைகிறது. அந்த ஸங்கம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்பவர்கள், பிரும்மஹத்தி தோஷத்தையும் நாசம் செய்கிறார்கள். ஸரயு நதி மானஸ ஸரோவரிலிருந்து, வசிஷ்டரால், இக்ஷ்வாகு ராஜனின் வேண்டுகோளால் கொண்டு வரப்பட்டது. அயோத்யா என்கிற அக்ஷரங்களில் மூன்று

மூர்த்திகளான பிரும்மா, விஷ்ணு, மஹேஸ்வரர் வசிக்கிருர்கள். பகவான் விஷ்ணுவின் ஸுதர்சன சக்ரம் இந்த விடத்தை ரக்ஷை செய்கிறது. இந்த அயோத்யாபுரி மீன் உருவத்தைப் பெற்றது போலிருக்கிறது. இதன் மகிமைகள் எல்லையற்றவை. இதில் தானம் செய்வது ஸர்வோத்தமம். இதில் பித்ருக்களின் காரியங்களைச் செய்வது ஸ்வர்க்கத்தில் சேர்ப்பது போல விருக்கிறது. அயோத்யாபுரி என்று சொல்லப்படும் ஸ்ரீராமனுடைய ஜன்மபூமி தலையாகவும், காசிபுரி மத்ய பாகமாகிற இடுப்பாகவும், விஷ்ணு பகவானுடைய பாதமூலமாகிற பிரயாகையாகவும் விளங்குகின்றன. ரங்கமூர்த்தியல்லவோ அயோத்யாபுரியில் வசிக்கிருர். ராம நவமி புண்யமான தினம். அன்று சரயுவில் ஸ்நானம் செய்துவிட்டு, சீதா ராமச்சந்திரமூர்த்திகளை, ஸாகேதபுரிவாசிகள் புண்ய தரிசனம் செய்து மகிழ்கிருர்கள். அவ்விதம் செய்வதால், அநேக ஜன்மங்களின் பாபங்களை, ஜபயக்ஞங்கள் போன்ற சிரமங்களின்றி நஷ்டப்படுத்தி பகவானுடைய உத்தமகதியை அடைகிருர்கள். இந்த மஹா உத்தம ராஜதானியில் ரகு வம்சத்து அரசர்கள் அரசாண்டு உத்தம கதிகளை அடைந்து, இன்று முதற்கொண்டு அவைகளை ஸ்மரணம் செய்யும்படி விளங்குகின்றனர். காசியில் எவ்விதம் மஹேசருடைய பெருமை விளங்குகிறதோ, அதைப்போல அயோத்தியில் விஷ்ணு பகவானுடைய பெருமைகள் விளங்குகின்றன. ரவியினுடைய குண்டம் குஷ்ட நோய்களை நாசம் செய்வதற்கு பிரபாவம் உள்ளது. நாகபஞ்சமியில் லக்ஷ்மணன் ஆராதிக்கப்படுகிருர். ஆயிரக்கணக்கான புண்ய தீர்த்தங்கள் தங்கள் பெருமைகளுக்காக அயோத்தியையும், சரயு நதியையும் தினம் வந்து அடைகின்றன. வைகுண்டத்தைப் போல பூமியில் பிரபாவமுள்ள ரங்கதாம் என்று சொல்லப்படும் ஸ்ரீரங்கத்தைப் போல, சீதாராமநாயக தாம் என்று சொல்லப்படும் ஸாகேதபுரியை, நான் அடிக்கடி ஸ்மரித்து வணங்குகிறேன். சுந்தரா, தசரதநந்தனு, ரகுகுலபூஷணு, உன்னையும், அயோத்தியையும், சரயுவையும் ஸ்மரித்துப் பார்த்தால், ரங்கதாம், காவேரி, எனது பூர்வாசாரியர்கள் ஆகியவர்களின் புண்ய ஸ்மரணை அல்லவா ஏற்படுகின்றது. ரெங்கநாயகா சரணம், சரணம்.]

ரகுபதி தன்னுடைய சகாக்கள் அனைவரையும் மீண்டும் அழைத்து, தன்னுடைய குலநாயகரான வஸிஷ்ட பகவானை நமஸ்கரிக்கச் செய்தார். "என் தோழர்களே, (இந்த குரு மஹாராஜ் அயோத்யாபுரியை நிர்மாணித்தவர்.) ஆதிக்காலம் முதல்

எங்களுக்கு குலதனமாக இவர் விளங்குகிறுர். இவரை நமஸ்கரியுங்கள்'' என்று மஹாபூஜ்யரான வஸிஷ்டரைப் புகழ்ந்து அவர்களிடம் சொன்னுர். மேலும் வஸிஷ்டபகவானைப் பற்றிப் புகழ்ந்து ராகவன் சொன்னுர். ''தேவர்களுக்கு பிரஹஸ்பதி எவ்விதமோ, அசுரர்களுக்கு சுக்ராசாரியர் எவ்விதமோ, அதைப் போல வஸிஷ்டபகவான் ரகுகுலத்திற்கு விளங்குகிறுர். இவருடைய கிருபையினுல்தான் நான் ராக்ஷஸர்களை வதைக்க முடிந்தது. எங்கள் குலபூஜ்யரான இவருடைய கிருபையினுல், நாங்கள் இவ்விதம் சந்தோஷத்துடன் ஒன்று கூடியிருக்கிறோம். நீங்களும் இவரைப் பூஜை செய்து, அவருடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொள்ளுங்கள்'' என்று சொன்னுர். (60)

அதன்பிறகு ரகுகுலராமன், குருவஸிஷ்டரிடம் சொன்னுர். ''பிரபு, ஆசாரியரே, இவர்கள் என்னுடைய பரமமித்ரர்கள். இவர்கள் யுத்தமாகிற ஸாகரத்தின் சுழல்களைக் கண்டு பயப்பட்ட எனக்குத் தோணியைப்போல உதவினுர்கள். இவர்கள் எனக்குச் செய்த பேருபகாரம் மஹத்தானது. தங்கள் உயிர்களையும் லக்ஷ்யம் செய்யாமல் தங்கள் ஜீவனங்களை என் கைங்கர்யத்திற்காக அர்ப்பணம் செய்தவர்கள். இவர்களை பரதனைவிட நான் அதிகமாக நேசிக்கிறேன். இவர்களையும் தாங்கள் குளிர்ந்து என்னைப்போலப் பாவித்து ஆசீர்வாதங்கள் செய்யவேண்டும்.'' (61)

பிரபு ஸ்ரீராமச்சந்திரன் கிருதக்ஞை வசமடைந்து அத்யந்த வாத்ஸல்யத்துடன் பரிபூர்ணராக வார்த்தைகளைச் சொல்லியதைக் கேட்ட எல்லோரும் அன்பு ஆனந்தம் ஆகிய இரு கரைகள் கொண்ட ப்ரேமை வெள்ளத்தில் மூழ்கினுர்கள். அவர்கள் ஒவ்வொரு நிமிஷமும் நடந்து செல்வதைக் கண்டு, ஒவ்வொரு நிமிஷத்திலும் புதுப்புது ஆனந்தசுகத்தை அனுபவித்து அனுபவித்து வாழ்ந்துவந்தார்கள். (அப்பேற்பட்ட மஹானுபாவர்களை வஸிஷ்டரைத் தலைமையாகக் கொண்ட புனித ராம பக்தர்களை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஹே ஸாகேதபுரி ராமா, தேவாதீசா, போகஸயனு, தியாகராஜாதிகள் இந்த ஸம்சாரம் ராகத்வேஷரதிகளால் நிரம்பப்பட்டு ஸந்ததமும் துக்கங்களைக் கொண்டதாகவிருக்கிறது, என்று புத்தியினுல் ஆராய்ந்து பார்த்து, மிக்க ஜாக்கிரதையுடன் துஷ்டர்களை விலக்கி, பாகவத உள்ளத்துடன் காசீஸ்வரர்களான உமா மஹேஸ்வரர்களைப்போல ஸாகேதபுரி ராமனின் பாத பங்கஜங்களை ஹ்ருதயத்தில் தரித்துக் கொண்டு, ஸதா ஏக பாராயணமாக நம்பி வாழ்ந்து, ஸந்ததமும்



பிரபு ஸ்ரீராமன் பகவான் வசிஷ்டரை நமஸ்கரித்து, அதன்பிறகு தனது வானர சகாக்களை அவரிடம் அறிமுகப்படுத்தி, அவர்களுக்கும் அவருடைய க்ருபையையும், ரக்ஷணத்தையும் வேண்டுதல். "பிரபு, இவர்கள் என் சகாக்கள். சம்சாரமாகிற பெரும் சமுத்திரத்தில் எனக்கு பெரும் கப்பலைப்போல இவர்கள் உதவி செய்தார்கள். பரதனைப்போல இவர்களிடமும் நான் பிரியம் வைத்துள்ளேன்." என்று விக்ஞாபித்துக் கொண்டார்.

ஆனந்த அனுபவங்களை அடைந்தார்களோ, அப்பேற்பட்ட பரம பாவனமான ராமமூர்த்தியே, சீதையுடனும் பரத லக்ஷ்மண சத்ருக்ன ஆஞ்சநேயாதிகளுடனும் என்மனதிலும் கோவில்கொள்ள மாட்டாயா? உங்களது பிரும்மானந்தத்தை அனுபவிக்க ஸம்மதிக்கமாட்டாயா? ஆதியுகநாயகா, ஸ்ரீசா, உன் கருணையினால் அல்லவோ மனத்தைச் சுத்தப்படுத்தி ஆசைகளைத் துறந்து பாசங்களை அறுத்து கர்மங்களின் பலன்களைத் தியாகம் செய்து, வேதமூர்த்தியாகிற அயோத்யா ராமனைப் பூஜைசெய்து, ஸம்சார பந்தங்களிலிருந்து விடுபட நினைக்கும் எனக்கு உன் கிருபை எப்போது கிடைக்கும்? சீதாராமா, தயை செய்யுங்கள்.'') (62)

பிறகு அந்த மஹானுபாவர்கள் ஸர்வலோகங்களின் ஹிதத்திற்காக ஸ்ரீராமனைப் புத்ரனாகப் பெற்றவளும் மஹா புண்யவதியுமான கௌஸல்யா தேவியை நமஸ்கரித்தார்கள். அதனால் மிக்க சந்தோஷமடைந்த கௌஸல்யா தேவி அவர்களை ஆசீர்வதித்து "நீங்கள் என் புத்ரனை ரகுநாயகனைப்போல எனக்குப் பிரியமாக விருப்பீர்கள்,' என்று சொன்னாள். (63)

என் பிரபு ஸ்ரீராமன் மஹா பேரானந்தத்தை அடைந்தவராக தனது பவனமாகிற கனக பவனத்திற்குச் சீதையுடன் சென்றார். அப்பொழுது ஆகாயத்திலிருந்து புஷ்பவர்ஷங்கள் யேற்பட்டன. அந்த மாளிகையின் உப்பரிகையின் மீது ஏறி அயோத்தியிலுள்ள ஸ்திரி புருஷர்களின் கூட்டங்கள் பகவான் ஸ்ரீராமச்சந்திரனைத் தரிசனம் செய்த வண்ணமாக விருந்தனர் (64)

(கனகபவனம் பகவான் ஸ்ரீராமச்சந்திரனுக்காகச் சீதையின் உல்லாஸ மணவாழ்க்கையின் இன்பத்திற்காகக் கைகேயியினால் அளிக்கப்பட்டிருந்தது.) எல்லா மாளிகைகளும் தங்கக் கலசங்களாலும் தங்கத் தூண்களாலும் மிக்க விசித்திரமாக நிர்மாணிக்கப்பட்டிருந்தன. மணிரத்னங்களால் எங்குப் பார்த்தாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. சீதாராமனைத் தர்சனம் செய்யவந்த ஸ்திரி புருஷர்கள் தங்கள் பிரேமையை வெளிப்படுத்துவதற்காக எது எது தங்களுக்குப் பிடித்தமான வஸ்துக்களோ, அந்த உத்தம வஸ்துக்களை மரியாதை ரீதிகளுடன் தங்களது காணிக்கைகளாக அந்த அரண்மனையில் வைத்துள்ளார்கள். அவர்களது நிஜப்ரமையை நிரூபிக்கும்படி அவைகள் அலங்காரமாக வைக்கப்பட்டிருந்தன. பிராட்டியுடன் கூடிய பகவான் வெகுகாலம் இன்பமாக வாழ்வதற்கும், அந்தச் சமயத்தை வெகு உற்சாகமாகக் கொண்டாடுவதற்கும் அவர்கள் சந்தோஷ மிகுதியினால் அநேக ஜண்டாக்கள், கொடிகள், தோரணங்கள் முதலியவைகளை

தங்கள் கிரஹங்களில் நட்டு அலங்கரித்து, ராம ஆகமனத்தைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். அநேக மங்கள வஸ்துக்களும் அயோத்யா நகர் முழுவதும் வைக்கப்பட்டிருந்தன. (65)

அந்த நகரின் வீதிகளில் சுகந்தமான வாசனைத் திரவியங்கள், மங்கள ஆரத்திகள் வைக்கப்பட்டிருந்தன. வீடுகள், தெருக்கள், அழகாகச் சுத்தமாக்கப்பட்டு, வீதிகளில் ஒவ்வொரு வீட்டிலும் கோலங்கள் போடப்பட்டிருந்தன. ஒவ்வொரு கோலத்திலும் யானைகளின் முத்துக்கள் வைக்கப்பட்டு, அந்தத் தெரு வீதி முழுவதும் மிக்கச் சிரத்தையுடன் அலங்காரம் செய்யப்பட்டிருந்ததுபோல விளங்கிற்று. எங்குப் பார்த்தாலும் கோலாஹலமாக மங்கள பேரிகைகள் வாசிக்கப்பட்டன. (66)

நாலுத் திசைகளிலும் அயோத்யாபுரியின் ஸ்திரிகள் மங்கள அக்ஷதைகளையும் வாசனைத் திரவியங்களையும் வாரி இறைத்தார்கள். அவைகள் வீசி எறியப்படும்போது அந்த ஸ்திரிகள் மஹா பேரானந்தத்தால் மனம் நிரம்பப்பட்டவர்களாக, மதம் பிடித்தவர்களைப்போல விளங்கினார்கள். அநேக சௌபாக்ய லக்ஷணங்களைக் கொண்ட அழகான ஸ்திரிகள் யுவதிகள் மங்கள ஆரத்திகளைச் செய்தார்கள். ஸுஸ்வரத்துடன் ராக பாவத்துடன் அவர்கள் மங்கள கீதங்களைப் பாடியவண்ணமிருந்தார்கள். (67)

[தியானம்

கனகபவன ராமா சீதா, இயற்கையாக நீலமேகம்போலக் கருத்தத் திருமேனியை உடைய ஸ்ரீராமா, கமலாகுசங்களில் சாற்றினத் திருமுக மண்டலத்தையுடைய ஸ்ருங்கார ராமா, என் வார்த்தைகளைக் கொஞ்சம் தயவுசெய்து கேள். எப்போது சிவந்தப் பொன்மேனியுள்ள மஹாலக்ஷ்மி சகிதம் உன் தாமரைக் கண்களையுடையத் திவ்ய மேனியை என் கண்கள் ஆனந்திக்கத் தர்சனம் தரப் போகிறாய்? லோகநாதா, விஜய வேங்கட சைல பதே, ஸஜ்ஜன பாரிஜாதா, தியாகராஜ, துளசிதாஸ, கம்பர் முதலியவர்களால் இடைவிடாமல் பூஜிக்கப்பட்ட ஆத்மா ராமா, ஸ்ரீலோலுடா, பரதனாலும், அர்ஜுனனாலும் காண்பிக்கப்பட்ட உனது பொற்ப் பாதங்களை நான் விடவேமாட்டேன். ஏன் என்று கேட்பாயோ? அபராதங்களும் தோஷங்களும் மலிந்த எனக்கு சீதாராமா, உன்னைத்தவிர யார் ரக்ஷகம் இருக்கக்கூடும்? நீ என்னை ரக்ஷிப்பாய் என்று சொல்லும்வரை, உனது வேங்கடேசப் பாதங்களை வரம்பு கடந்தபடி, ஓயாமல், மேன்மேலும் பாபங்களைச் செய்யப் பரபரப்பை உடைய ஒன்றுகூடிய ஆத்மா

வினல் தொழுதுகொண்டு யிருப்பேன். உன் கிருபை அடையும் வரையில் ஹரே பாஹி, பரிபாஹி, என்று அழைத்துக் கொண் டிருப்பேன். பசித்துத் தாகம் எடுத்தவனுக்கு அம்ருதம் கிடைத் தாற்போலும், பரம தரித்திரனுக்கு ஏதாவது நயாபைசா கிடைத் தாற் போதும் என்று ஏங்கிக் கொண்டிருப்பவனுக்கு, சிந்தா மணி கிடைத்தாற் போலும், பதியின் உண்மையான காதலுக்கு ஏங்கி வாடும் கன்னிகைக்குப் பதியே நேரில் வந்து மனம் முற்றி லும் மாறி அவளை அழைத்துக் கொண்டபோது, என்ன ஆனந் தத்தை அடைவார்கள். அதைப்போல அல்லவா—உனது சேர்க் கையினுல் நாங்கள் ஆனந்தமடைகிருேம். நடு சமுத்திரத்தில் அகப்பட்டு மூழ்கப்போகிற ஒருவனுக்குப் பாக்யவசத்தால், யத் ருச்சையாக நிழலேயும் விஸ்ராமம் செய்வதற்கு கற்பக விருக்ஷத் தையும் அடைவிக்குமாப்போல அல்லவா நீயாக வலுவில் வந்து என்னிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கிருய். இல்லாதபோனுல் தியாகராஜ, பிரஹ்லாத, துருவன் உன்னே க்ஷணநேரம் பிரிந்து வாழ்வார்களா ? ஆகமநிகமங்களுக்கு கர்த்தாவாக விளங்குபவரே, தியாகராஜவந்தித ஸ்ரீராமபாதங்களே, நானும் கரையேறுவதற்கு ஸ்ரீவேங்கடேச சரணௌ, சரணம் பிரபத்யே என்று சொல்லி, உனது திவ்யபாதங்களே சரணமடைகிறேன். பிருகு, நாரத, பராசரர் முதலியவர்கள் உன்னேயே பரிபூர்ண ஸத்வகுணம் கொண்ட பரமார்த்தம் என்று பூஜித்து ஆராதித்து எனக்கு வழி காட்டினுர்களே ; வியாஸபகவான் த்யேயஃ நாராயணஃ ஸதா என்று அடிக்கடி சொல்கிருரே ; பிரஹ்லாதன் ''ஸம்சாரதாரக தயார்த்ர த்ருக கஞ்சலோசனு,'' என்றும், மணவாளமாமுனிகள் ''இந்த வெங்டேசபாதங்கள் மிக உயர்ந்தவை, சரணம் புகுந்தவர்களே மோக்ஷமடைவிக்க வல்லவை'' என்று காட்டிக் கொடுத்திருக்கிருர்களே ; அதன்படிக்கும் தர்மபுத்ராதிகளேப் போல மஹாவிஸ்வாஸம் கொண்டல்லவா, உன்னே நான் சரணமடைந்திருக்கிறேன். பீஷ்மர், இந்திராதி, லோகபாலர்கள், பிரும்மா, சங்கரர் ஆகியவர்களால் வணங்கப்பட்ட ஸௌம்ய மூர்த்தியே, என் குற்றங்களேக் கண்டு சீருமல், ப்ராப்யத்வயி ஸ்வயமுபேயதயா ஸ்புரந்த்யா, என்கிறபடி, சீதையுடன் அந்தரங்கமாகக் கூடிய ராமா, புருஷோத்தமா, நீங்கள் இருவர் களும் எங்களால் அடையப்படும் நிலேயில் அல்லவா இருக்கிறீர் கள் ? நிஜ ஆஸ்ரிதர்களுக்கு நிரவத்யமான கிருபையை வர்ஷிக் கிறீர்கள். உங்களது கிங்கரன் என்று நான் சொல்லிக்கொண் டிருக்கிறேன். நீங்கள்தான் எங்களே ஸ்வீகரித்துக் கொள்ள

வேண்டும். என் புண்ய ஸ்நேகிதர்களே, கிருபை செய்ய வேண்டும்.]

அந்த மஹாபாகவத உத்தமன் ரகுகுல கமலத்தின் அழகு மேதா விலாஸங்களை உடைய சீதைக்கு பூர்ண அழகைக் கொடுக்கக் கூடிய ரகுகுல தினகரனுகிற ஸ்ரீராமனுக்கு பரமாராத்யம், பரமார்த்தம், பூர்ணவிஹாரம் பரிபூர்ணம் என்று சொல்லி, ஸதாமங்கள ஸுப்ரபாதங்கள் மங்களா சாஸனங்கள் செய்த வண்ணமிருந்தார்கள். அப்பேற்பட்ட கனகபவனத்தின் சோபையும், பூர்ண அழகும், தயையுடன் கூடிய பரிபூர்ண குணங்களுள்ள சீதா ராமமூர்த்திகளின் ஆஸ்ரிதவாத்ஸல்ய குணவிபவங்களும் பெரும் பிரகாசமாகத் தோன்றின. அதனுல் அயோத்தியாபுரி பரம ஸம்பத்துக்களுடனும், பரம கல்யாண குணங்களுடனும் ஸதா விளங்குகிறது. வேதமாதர்களான காயத்திரி, சாவித்திரி சரஸ்வதி, மஹா ஆசார்யரான ஆதிசேஷபகவான் ஸதா கானம் செய்வதற்கு யோக்யதரமாக விருக்கிறது. (68)

ஆம். அவர்கள் ஸதா மங்களகீதங்கள் பாடுவதற்கு யோக்யமாகத்தான் இருக்கிறது. ஆனுல் அப்பேற்பட்ட மஹாபாக்யவான்களுக்கு அகண்ட ஏகரஸ பரிபூர்ண ஸச்சிதானந்த ஸ்வரூபமாக விளங்கும் சீதா ராமமூர்த்திகளின் அஸங்க்யேய கல்யாண குணவிபவங்களை எத்தனை காலம்தோறும் ஆனந்த கீர்த்தனம் செய்தபோதிலும், சொல்லித் தீருமோ? அவைகள் கணக்கற்றபடியிருக்கிறபடியால், அவர்களும் ஸ்தம்பித்துப்போய் களைத்துப் போய்விடுவார்களே. இதில் ஒரு ஆச்சரியமில்லை. அதனுல் என் பிரபு மஹேசர் உமைக்குச் சொன்னுர். "உமா, அவர்களே அவ்விதம் மலைத்துப் போகும்போது, சாதாரண மனிதர்களால் அவர்களுடைய அனந்தமான கல்யாணகுணங்களைச் சொல்லித் தீர்க்கமுடியுமோ? (69)

[தியானம்

ராமசீதா, நாராயணு, புண்டரீகாக்ஷா, நீ தயை செய்ய வேண்டும். உனக்கு ஸமமான தெய்வம் யார் இருக்கக் கூடும்? ஸாது ஜனங்களை ரக்ஷிப்பதில் பிகுவும் டம்பமும் உனக்கு கிடையவே கிடையாதே. ஸுரபூஸுர, பூஜித கோதண்ட ராமா, நாகசயனு, தியாகராஜ வால்மீகாதிகளால் சேவிக்கப்பட்ட ஸ்ரீராமச்சந்திரா, சுக்ரீவனைவிட்டு விபீஷணனை அழைத்துவரச் சொல்லும்போது, "இவன் ராவணனுகவிருந்தாலும் அழைத்து வா," என்று உத்திரவிட்டாயே; அதிலிருந்து தெரியவில்லையா?

உனக்கு மித்ரன், சத்ரு என்கிற பாரபக்ஷம் கிடையாது. உன்னிடம் பக்தி ஒன்றேபோதும். லங்காராஜ்யத்தை விபீஷணனுக்குக் கொடுத்தாயே; அதிலிருந்து உனக்கு ராஜ்ய போகங்களிலும் ஆசை இல்லை. உன் சொந்த ராஜ்யமான கோஸல ராஜ்யத்தை பரதனுக்குக் கொடுத்தாயே. ஹே மனஸே, ஒரு வார்த்தை, ஒரு அம்பு, ஒரு பத்னிவிரதம் கொண்ட சீதாராமனை மறந்துவிடாதே. ஒரு சித்தத்துடன் மரகதவனம் போலவிருக்கும் சீதாராமனுடைய திருவடிகளையே ஸ்மரணை செய்துகொண்டிரு. உனக்கு ஆயுளும், பயமில்லாமையும், சோகமில்லாமையும், பரமாம்கதி என்று சொல்லப்படும் ஸ்ரீரங்கதாம் என்பதையும் அவனே அளிக்கக் கூடியவன், உனக்கு அவனே என்று ஆயிரம் தடவைகள் சொல்லி ஸதா நான் ஞாபகமூட்டுகிறேன்.]

அயோத்தியிலுள்ள ஸ்திரிகள் குமுதினி புஷ்பங்களாகவும் (அல்லி மலர்கள்) அயோத்திமாநகரம் தடாகமாகவும், ஸ்ரீ ரகுபதியின் பிரிவு சூர்யனாகவுமிருந்தது. இப்பிரிவெனும் தாபத்தினால் அவர்கள் வாட்டப்பட்டனர். இப்போது அந்த விரஹமெனும் சூரியன் அஸ்தமனமடைந்து விட்டான். இராமன் என்னும் பூர்ணசந்திரன் உதயமாகிவிட்டான். ஆகவே அந்த குமுத புஷ்பங்கள் மீண்டும் மலர்ச்சியுற்று விளங்கின. (70)

அநேகவிதமான சுபசகுனங்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. ஆகாயத்தில் தேவதைகள் துந்துபிகளை வாசித்தார்கள். அயோத்தியா நகரத்திலுள்ள ஸ்திரிபுருஷர்கள் யாவரும் ஸநாத் என்று சொல்லப்படும் புருஷோத்தம ராமனின் தரிசன லாபத்தை அடைவதற்கு பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய மஹாலுக்குச் சென்றனர். (71)

சிவன் பார்வதியிடம் சொல்லுகிறார், "பவானி, பிரபுவுக்கு தன் மாதாவான கைகேயி மிகவும்லஜ்ஜையை அடைந்திருக்கிறாள் என்று தெரியும். அதனால் தீனபந்துவான பிரபு தனது மாளிகைக்குச் செல்வதற்கு முன்பு, கைகேயியின் அரண்மனைக்குச் சென்று அவளை பலவிதங்களால் ஆஸ்வாஸப்படுத்தினார். சிறிது நேரம் கழிந்த பின்பு, ஹரிபகவான் தனது மாளிகைக்குத் திரும்பி வந்தார்." (72)

"என் பிரபு கிருபாஸிந்து. அப்போது அங்கு கூடியிருந்த அயோத்யாபுர நரநாரிகள் சகலரும் பிரபுவைக் கண்டதும் சந்தோஷமடைந்தார்கள்." அந்தசமயம் குரு வஸிஷ்டர், பிராம்மணர்களை அழைத்து, அவர்களிடம் சொன்னார். "இன்று சுபயோக சுபமங்கள தினமாகவிருக்கிறது. ஸகல கிரஹங்களும்

ஸகலவிதமான புண்ணிய சேர்க்கைகளுடன் கூடியிருக்கின்றன. நல்ல சகுனங்கள் யேற்படுகின்றன. லோகத்திற்கு ஹிதம் செய்யும் நோக்கத்துடன் ஸகல தேவதைகளும் அனுக்ரஹ பூர்ண மாகவிருக்கிறுர்கள்.'' (73)

வஸிஷ்டருடைய ஆக்ஞையை சிரம்கொண்டு தாங்கி, ஸகல பிராம்மணர்களும் ஏகோபித்து ''சரி'' என்று ஆமோதித்து, வஸிஷ்டபகவானை நோக்கி, ''ஸ்வாமி, என்ன கட்டளையிடு கிறீர்கள்? அதைச் சொல்லவேண்டும்,'' என்று கேட்டார்கள். அவர்களிடம் பிரபு வஸிஷ்டபகவான் சொன்னுர்: ''இன்று ராமச்சந்திரன் வைதேஹியுடன் ராஜ்ய சிம்மாஸனம் ஏறட்டும். நாம் அனைவரும் சேர்ந்து அவர்களுக்கு ராஜ்யபட்டாபிஷேகம் செய்துவைப்போம். அதற்குள்ள ஏற்பாடுகளை நாம் செய்ய லாம்.'' பகவான் வஸிஷ்டரின் வசனங்களைக் கேட்ட பிராம்மண முனி ஜனங்கள் மஹா ஆனந்தமடைந்து ''சரி'' என்று ஆமோதித்து, மரகதஸ்யாமள நிறமுள்ள என் பிரபு ஸ்ரீராமச் சந்திரனுக்கு, கிருஷ்ணசந்திரனுக்கு ராஜதிலகம் அணிவதற்கு ஏற்பாடுகளைச் செய்ய முனைந்தார்கள். (''பிரும்மா ஸரஸ்வதி பார்வதி சீதாலக்ஷ்மணன் இவர்களுக்குக் கிடைக்கும் மஹாபாக்ய மான ராமபட்டாபிஷேக உத்ஸவத்தில் மஹாராஜா ஸ்ரீராமச் சந்திரமூர்த்தியின் ராஜசிம்மாஸனத்தின் மீது ஏறி ஆட்சிசெலுத் தும் பாக்யத்தை நாம் அனுபவிப்போம். ரவிகுலத்தில் பிறந்த சக்கிரவர்த்தி திருக்குமாரனுக்கு நாம் புருஷஸூக்தங்கள் சொல்லி மந்திரஜபங்களைச் செய்து அபிஷேகம் செய்வோம்,'' என்று அந்த பிராம்மணுேத்தமர்கள் மனத்திற்குள் ஆனந்தித்து வஸிஷ் டர் ஆக்ஞைப்படி எல்லாக்காரியங்களைச் செய்தார்கள்.) (74)

''இந்த ராமச்சந்திர பட்டாபிஷேக மஹோத்ஸவத்திற்கு நாம் அனைவரையும் அழைப்போம். மஹாபிரபு ஸ்ரீராமன் லோகாபி ராமனுக, ஸர்வ குணசீல ஸம்பன்னனுக, ஸர்வ கல்யாண குணங்களுடன் விளங்குவான். காலந்தோறும் சந்திரன் சூரியன் இருக்கும்வரை, கடல் மண் உள்ளவரை, யுகந்தோறும் ஸர்வகுண உத்தமனுக விருக்கும் நம் பிரபு அயோத்தியா ராமனுக்கு மணிமுகுடம் அணிவித்து வைப்போம்,'' என்று திடஸங்கல்பம் செய்துகொண்ட அந்த மஹா பாக்கியவான் களான விப்ரஸ்ரேஷ்டர்கள் மிருது மதுர வசனங்களைச் சொல்லிக்கொண்டு, ஸ்ரீ சீதாராம பட்டாபிஷேக மஹோத்ஸவத் திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். அப்போது வஸிஷ்டபகவான் அவர்களைப்பர்த்து, ''சரி, நாழிகையாகிறது.

காலதாமதம் செய்யாதீர்கள். ஸ்ரீ சீதா ராமச்சந்திர மஹா ராஜனுக்கு ஜயமங்களங்கள், மங்களா சாஸனங்கள் செய்து ராஜதிலகத்தை அவர்களுக்கு அணிவித்து நாம் கிருத கிருத்யர் களாக ஆவோம்,'' என்று ஆக்ஞை செய்தார். (75)

அப்பொழுது வஸிஷ்ட பகவான் ஸுமந்திரரை அழைத்து, அந்த ஏற்பாடுகளைச் சொன்னார். அவர் அந்த புண்ணிய வசனங்களைக்கேட்டு, மஹா சந்தோஷமடைந்தார். அவரும் ராமபட்டாபிஷேக மஹோத்ஸவத்திற்கு வேண்டிய அநேக ரதங்களையும், யானைகளையும், குதிரைகளையும் தயார் செய்வதற்கு முனைந்தார். (76)

யார் யாருக்கு தூதர்களை அனுப்பிச் செய்தி சொல்லி அனுப்பவேண்டுமோ, அந்த இடங்களுக்கு ராஜதூதர்களை வஸிஷ்டருடைய கட்டளையின் பேரில் அவர் அனுப்பினார். எந்த எந்த மங்கள வஸ்துக்களையும், புண்ய தீர்த்தங்களையும் சேகரிக்க வேண்டுமோ, அந்தவிடங்களுக்கும் ராஜதூதர்களை அனுப்பி ஸகல யேற்பாடுகளையும் சுமந்திரர் செய்து முடித்தார். எல்லா ஏற்பாடுகளையும் சுமந்திரர் சீக்கிரமாகவே செய்து முடித்தார். அந்த ஏற்பாடுகளினால் மஹா ஆனந்தத்தை வஸிஷ்டர் அடைந்தார். சுமந்திரர் வஸிஷ்டருடைய மங்கள பாதசரணங்களில் நமஸ்கரித்து அவருடைய மங்கள ஆசீர் வாதங்களைப் பெற்றார். (77)

## நவாஹ பாராயணம்—எட்டாவது நிறுத்தம்
## ஸ்ரீ ராம பட்டாபிஷேக ஸர்க்கம்

[தியானம்

நாரத, வால்மீகி வேதவியாஸாதிகளால் ஸேவிக்கப்படும் ஜயராமா, பட்டாபிராமா, ஜயஜானகியுடன் என் கிரஹத்திற்கு வாரும். ஆஸ்ரிதவாத்ஸல்யா, பரத சத்ருக்னாதிகளால் ஸேவிக்கப்படும் லக்ஷ்மணாக்ரஜா, சீதாபதே, எந்த உள்ளத்துடன் நீங்கள் தியாகராஜரிடம் ஓடிவந்து கட்டிக்கொண்டாயோ, எந்த மனத்துடன் துளசிதளமாகிற ராமசரித மானஸத்தை ஒப்புக் கொண்டு, என்பிரபு துளசிதாஸரை அங்கீகரித்தாயோ, அதே மனோபாவத்துடனிருக்கும் என்னிடமும் நீ கிருபை செய்ய வேண்டும். ஆஞ்சநேய ஸேவித பட்டாபிராமா, கோதண்டராமா, கம்பனுக்கு அனுகிரஹித்த ஜயராமா, பிரபோ ராமச்சந்திரா, உன்னுடைய கல்யாணகுண விலாஸங்களையும், வாத்ஸல்ய

ஸௌலப்யாதி குணவிசேஷங்களையும் மஹான்களாகிற ஆஞ்ச நேய, வால்மீகி, தியாகராஜ, வேதவியாஸாதிகள் பாடிக்கேட்கும் போது, ஆகா, எனக்கு எவ்வளவு ஆனந்தம் வருகிறது. "இது வல்லவோ ராமபக்தி" என்று சொல்லும்படி யிருக்கிறது. அப்பேற்பட்ட கனபக்திகொண்டவனாக நான் இருக்க ஆசைப் பட்டால், உன் கிருபையின்றி வேறு எதனால் முடியும்? காக்கை கோகிலமாக மாறவேண்டுமானால், சீதாபிராட்டியின் தயையும் உன்னுடைய மஹத்தான கிருபாகடாக்ஷமும், எனது ஆசார்யர் களின் ஹிமயத்திற்கு ஒப்பான ஆசீர்வாதபலமும் அல்லவா வேண்டும்? ஸ்ரீவனிதா ஹ்ருத குமுதாப்ஜா, வாங்மனஸ கோசரா, மிகவும் குற்றங்கள் கொண்ட என்னை உங்களையின்றி எந்த மஹாராஜன் காப்பாற்றுவான்? ஸகல பூதங்களுக்கும் ஆதிப்பிதா நீயல்லவோ? இளம் வயதிலிருந்து உனது அமுதத் தைப் பெறாத நான் பல அபராதங்களைச் செய்து, என் மனத் திலேயே உன்னோடு வாதம்செய்யும் விபரீத ஞானத்தை உடையவனாகிவிட்டேன். அனந்தன், விஷ்வக்ஸேனர், கருடாதி களால் ஸேவிக்கப்படும் நாராயணா, பிறர் மனைவி, பிறர் சொத்து, இவைகளில் ஆசை, எனது சொந்த சுகம், எனது ஞானம் தான் மிகப் பெரியது என்கிற அஹங்காரம், பிறப்பின் அஹங்காரம், ஐஸ்வர்யத்தின் அஹங்கராதிகள் இவைகளில் மூழ்கி, உங்களுடைய பெருமைகளை குருமுகமாகக் கேட்காமல், என் மனப்படி நடந்து வாழ்ந்து வந்திருக்கும் நாட்களை அப்பா, உனது உதார ஹ்ருதயத்தால் வீணாகக் கழிந்தது என்று எண்ணாமல், என்னை அங்கீகரித்து ஆட்கொள்ளவேண்டும். ராமபிரும்மமே, கிருஷ்ண தயாளுவே, நீ மஹாராஜர்களுக்கு மஹாராஜன் என்று தெரிந்தும், தெளிவுற்ற ஞானத்துடன் உன்னைப் பரிபூர்ணமாக ஆராதிபாமல், அற்பர்களிடமும், அற்ப வஸ்துக்களிடமும் மனத்தையும் செய்கைகளையும் அர்ப்பித்துக் கொண்டு, எவ்வளவு நாட்களை நான் வீணாக்கி விட்டேன்? ஸப்தஸ்வரங்களையும் லயபாவத்துடன் அறியாத வித்வான் ஜடமாக மகிழ்ந்து பாடினால் உன் திருவுள்ளத்தை அடைய முடியுமா? தேவாதி தேவா, உன் திருஷ்டிக்கு வராதபோனால் யாதுபயன்? உனக்கு ஸேவகனாக வில்லாதபோனால் யாது லாபம்? உனது பதாப்ஜங்களில் விழுந்து நமஸ்கரிக்காத போனால் அவன் அளவற்ற பொருள்களை சம்பாதித்து யாது பயன்? உன் முகத்தாமரையை என் மனத்தில் எப்பொழுதும் ஸ்மரிக்காமல் குருடனாக வாழ்வதில் யாது லாபம் இருக்கக்கூடும்?

ஹே ராமா சீதாபதே, தசரதா, உமா, மஹேஸ்வரர்களின் அனுகிரஹம் யில்லாவிடில் உங்களிடம் வரமுடியுமா? மானிடப் பிறவியை அடைந்து உங்களை நினைக்காமல் பரமானந்தமான வாழ்க்கையைப் பெறமுடியுமா? கிருபை கூர்ந்து பிரபோ, என் மதம், லோபம், காமம், மதிஸரம் மோஹம், தாஸ்யம், இவைகளை நாசம் செய்து, என்னையும் உங்கள் பொருளாக அங்கீகரிப் பீர்களா? தயை செய்யுங்கள்.]

அயோத்யாபுரியைப் பார்க்கப் பார்க்க பதினாயிரம் கண்கள் தேவை என்று சொல்லும்படி எங்கும் ஒரே கோலா ஹலமாக விருந்தது. அதிக அழகாய் விளங்கியது. எங்குபார்த்தாலும் அந்த பட்டிணத்தில் நாம் எப்பொழுதும் பிறக்கமாட்டோமா என்று ருசிபிறக்கும்படி விளங்கியது. தேவதைகள், புஷ்பங் களை வர்ஷித்துக்கொண்டிருந்தார்கள். என் பிரபு சீதாராமன் தனது சேவகர்களை அழைத்து, "முதலில் என்னுடைய மித்ரர் களை ஸ்நானம் செய்துவைத்து அலங்கரியுங்கள்" என்று கட்டளையிட்டார். (ஹே ராமா, அர்ஜுனனை கிருஷ்ணன் "சகா" வென்று அழைத்தானே, அதைப்போல குஹன் சுக்ரீவ விபீஷணு திகளை "சகா" வென்று நீ அழைத்து முதல் மரியாதையைச் செய்தாயே, உனது ராஜதர்மத்தை எவ்விதம் புகழ்வேன்? என்னிடமும் கருணை காட்டு.) (78)

பகவானுடைய, ஆக்ஞையைப் பெற்றுக்கொண்ட ஸேவ கர்கள் சுக்ரீவன் முதலிய ராம சகாக்களைக் கண்டு, அவர்களுக்கு ஸ்நானம் செய்வித்தார்கள். அவர்களை அலங்கரித்தார்கள். அதன் பிறகு கருணாநிதியானஎன்பிரபு பரதனை அழைத்து, ஸ்வயமாகவே தனது திருக்கரங்களால் அவனுடைய ஜடா மண்டலம் முதலியவற்றை அவிழ்த்து, அவனுக்கு மங்கள அவபிருத ஸ்நானம் செய்துவைத்தார். (79)

அதன் பிறகு பக்தவத்ஸலன், மஹா கிருபாளு, என்பிரபு ஸ்ரீ ரகுராமன் தன்னுடைய மற்ற சஹோதரர்களை அழைத்து வைத்து, அவர்களுக்கும் மங்கள ஸ்நானுதிகளைச் செய்து வைத்தார். பரதனுடைய பாக்கியத்தையும் என்பிரபு தாசரத ராமனின் அதிகோமளத்வம் வாய்ந்த மனப்பான்மையையும் ஆயிரம் தலைகள்கொண்ட ஆதிசேஷ பகவானுல்கூட வர்ணிக்க முடியாது. (80)

எல்லாவற்றிற்கும் பிறகு பிரபு ஸ்ரீராமன் தனது ஜடா மண்டலத்தையும் அவிழ்த்து, குருவான வஸிஷ்ட பகவானுடைய ஆக்ஞையை அடைந்து ஸ்நானம் செய்தார். அதன் பிறகு என்

பிரபு மங்கள அலங்காரங்களையும் ஆபரணுதிகளையும் அணிந்து கொண்டார். (தியாகராஜர் போன்ற மஹா பக்திமான்களுக்கு பகவானுடைய ஆப்தசகாயத்தினுல் பாக்கிய வசமாகக்கிடைத்த பேரின்ப காக்ஷிகளைப்போல,) அந்த மாபெரும் அயோத்யா வாசிகள் அங்கம் அங்கமாக சுபேக்ஷணராக விளங்கும் பட்டாபிஷேக ராமச்சந்திரனின் அற்புத அலங்காரங்களைக் கண்டு, அஸங்கியேய காமதேவர்கள் சேர்ந்து ஒருங்கே ஒருசோபித மூர்த்தியாக விளங்குவதைக் கண்டார்கள். (திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன், என்று களிப்புறும்படி அந்த இன்பக் காக்ஷியைக் கண்டவர்களே மஹாபாக்யசாலிகள். "ஹே தாரக ராமா, கலியுகத்திலும் உனது மகிமைகள் தெரியும்படி எவ்வளவோ மஹான்களுக்கு நீ உன்னைத்தானே ஸ்வயமாகப் பிரகடனப் படுத்திக்கொண்டாய். அப்பேற்பட்ட தயாளுவான நீ என் முன்பும் தோன்றமாட்டாயா?") (81)

இவ்விதம் அவர்களை அலங்கரித்துக் கொண்டிருக்கும்போது என் மாதாவான ஜானகி தேவியையும் ஸ்திரி பிரமுகர்கள் வித விதமாக அலங்கரித்தார்கள். அவளுடைய மென்மைவாய்ந்த அங்கங்களுக்கு தகுந்தபடி ஆபரணங்களை அணிவித்து, திவ்ய பட்டு வஸ்திரங்களை உடுத்தி, பரம அழகின் பொக்கிஷமாக சிங்காரித்தார்கள். (82)

ஸ்ரீராமனுடைய இடது பக்கத்தில் அதிசோபிதையுடன் விளங்கும் ரமாதேவியைப்போல மஹாலக்ஷ்மியின் அம்சமான ஜானகிதேவி விளங்கினுள். சீதையினுடைய அழகு லாவண்யத்தையும் குணக்கீர்த்திகளையும் ஸகல தாய்மார்களும் ஆனந்தித்து தங்களுடைய ஜன்மங்களின் ஆயிரம் கோடிக்கணக்கானவற்றிற்கு அன்றுதான் மஹத்தான பலனை அடைந்ததாகக் கருதினுர்கள். அவர்களுடைய ஜன்ம லாபத்தை நினைத்து நினைத்துப் பூரித்து, சந்தோஷம் கொண்டவர்களாக இன்புற்றுர்கள். (ஹே பட்டாபிராமா, சீதா நாயகா, உங்களுடைய புண்ய தர்சனம் எனக்குக் கிடைக்குமா? நானும் உங்கள் கடாக்ஷத்தைப் பெறுவேனு?) (83)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி பிரபோ, சீதா ஸமேதராமா, நான்கு வேதங்களின் ஸாரதமமான புருஷன் நீதானே கருடனுல் புகழப்பட்ட ஆதிநாராயணு, லக்ஷ்மிமணுளா, ஸ்ரீரமணு, உங்களை நான் மனதார வழிபடுகிறேன். சரணுகத வத்ஸலா, ஸ்ரீரங்கநாயகி

ஸமேத ரெங்கநாதா, நீங்கள்தானே ரெங்கதாம், பரம்தாம் என்று சொல்லப்படுகிறீர்கள். உங்களைக் காணுத பிழைப்பும், உங்கள் நினைவு இல்லாத வாழ்க்கையும் எதற்கு அப்பா? மத தர்க்கம், தீய ஆசாரங்கள், தர்க்கத்திற்கு ஸாதகமான பேச்சுக்கள், திறங்கள், சாமர்த்தியங்கள் ஆகியவை இருந்தும், அவைகள் உன் கிருபையை ஸம்பாதிக்காவிட்டால் பயன்படுமா? பரதனுலும் சத்ருக்னனுலும் ஸேவிக்கப்பட்ட சீதாபிரபோ, கௌஸல்யா புத்ரா, அயோத்யாராமா, தேவர்கள், பிரும்ம ரிஷிகள், ராஜ ரிஷிகளால் ஸேவிக்கப்படும் ஆதிநாராயணு, உன் பக்தனுக நடித்து வாழ்வதும் ஒரு வாழ்க்கைதானு? தியாகராஜாதிகளைப் போல உன்னை மனதார வழிபடும் வாழ்க்கை வாழ்க்கைதான். ஆயிரம் தடவைகள் சொன்னுலும் உன்னையன்றி எனக்கு வேறுகதியாக யார் இருக்கக்கூடும்? தேவர்கள் முதலாக, ஸனகாதிகளாலும் சுக மார்க்கண்டேய நாரதாதிகளாலும் அரவிந்த உத்பவனுகிற பிரும்மாவினுலும் ஸ்ரீபவர் உமை ஆகியவர்களாலும் இந்திராதி திக்பாலர்களாலும் அவர்களுடைய பட்டமஹிஷிகளாலும் ஒரே கதியாக அடையப்படும் ஸ்ரீராமா, நீதானே எனக்கும் ஒரேகதி.]

காகபுசண்டி சொல்லுகிருர். "பக்ஷிராஜனுன கருடரே, நன்ருக கவனித்துக்கேளும். அந்த புண்ணிய வேளையில் பிரும்மா, சரஸ்வதி, உமையுடன் கூடிய மஹேசர், ஸனக நாரதாதிகளால் சூழப்பட்டவர்களாக, தங்கள் தங்கள் விமானங்களின் மீது ஏறிக்கொண்டு தேவர்களையும் ரிஷிகளையும் ஆனந்திக்கும் மஹாபுருஷனுகிற ஸ்ரீமந் நாராயணரைப் பார்க்கவருவது போல, அவர்கள் சீதா ராம தர்சனத்தை அடைவதற்கு ஓடி வந்தார்கள். அவர்களுடன் இந்திரனும், திக்பாலர்களும், அவர்களுடைய பட்டமஹிஷிகளும் வந்திருந்தார்கள். (84)

பிரபு தீனதயாளு, ஆஸ்ரித வாத்ஸல்யர், ஸ்ரீரகுராய் அவர்களைப் பார்த்தார். அவர்களும் பிரபுவையும் சீதையுடன் கூடியவர்களாகவும் தம்பிமார்களுடனும், வஸிஷ்டாதி ரிஷிகளின் ஸமூகத்தில் பிரகாசிக்கும் ஜோதி ஸ்வரூபமாகக் கண்டார்கள். அதே சமயத்தில் வஸிஷ்டரும் பிரபுவை மந்திராக்ஷதையுடன், பூஜா திரவியங்களுடன், சுகந்தமான மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தார். அவருடைய மனத்தில் பிரேமை வெள்ளம் பொங்கி எழுந்து கொண்டிருந்தது. முன்பு நிறைவேறப்படாமலிருந்த ஆசையை அவர் இப்பொழுது தீர்த்துக்கொள்ள ஆசைப்பட்டார். உடனேயே, அவர் திவ்யமான ராஜ சிம்மாஸனத்தை கொண்டு வரச் சொன்னுர். அது சூர்யனைப் போல மிக்க தேஜஸ் வாய்ந்த

தாக விருந்தது. அதனுடைய ஸௌந்தர்ய அழகுகள் வர்ணிக்க முடியாதபடி பரம சோபிதமாக விளங்கின. பிராம்மணர்களை நமஸ்கரித்து அவர்களுடைய மங்கள ஆசீர்வாதங்களை ஸ்ரீராமச் சந்திரன் பெற்றுக்கொண்டு, அந்த சிம்மாஸனத்தின் மீது ஏறி சக்கிரவர்த்தியாக அமர்ந்தார். (85)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி, தேவதேவா, ஜகத்தாத்ரி, விஷ்ணு வல்லபே, சீதாராமா, உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். ஆஞ்சநேய பரத சத்ருக்ன லக்ஷ்மணுதிகளாலும், பிரும்ம ருத்ராதிகளாலும், தேவர்களாலும், சரஸ்வதி, உமை, இந்திராணி போன்ற திக்பாலர்களின் மஹிஷிகள், அருந்ததி, கங்கை, யமுனை, சரஸ்வதி, சரயு நதிகளாலும், வஸிஷ்டவாமதேவ விஸ்வாமித்திர, மார்க்கண்டேயாதிகளாலும் ஸேவிக்கப்பட்ட சீதா ராமச்சந்திரா, நாரதர், விக்னேஸ்வரர், சூரியன், சந்திரன் விபீ ஷணன், சுக்ரீவ, அங்கதன், ஜாம்பவான் ஆகிய பிரமுகர்களாலும் ஸேவிக்கப்பட்ட அயோத்யராமா, சீதாநாயகா, உங்களுடைய மங்கள சரணங்களில் பீஷ்மர், அம்பரீஷர், தர்மர், துருவன், பிரஹ்லாதன் முதலிய வைஷ்ணவ பக்தர்களை முன்னிட்டு, ஆயிரம் சுக்ருத நமஸ்காரங்கள் செய்கிறேன். நம்மாழ்வார், நாத முனிகள், ராமானுஜர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகளை முன்னிட்டு, வைஷ்ணவ அடியார்களையும் முன்னிட்டும், ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். சீதாபதி, தியாகராஜ, வால்மீகி, ஸ்யாமா சாஸ்திரி, முத்துஸ்வாமி தீக்ஷிதர், நாராயண நம்பூத்ரி, ஆகியோர்கள் சொன்னது மாதிரி, ஆயிரம் தடவைகள் சொன்னு லும் எனக்கு கதி உன்னையன்றி வேறு கதி யார்? சதுர்தச புவனங் களுக்கு ஸ்வாமியாக விளங்கும் புருஷோத்தம நாராயணு, நாரத ஸனகாதிகளாலும், அரவிந்த உத்பவனுன பிரும்மா சரஸ்வதி யினுலும், உமா மஹேஸ்வரர்களாலும் ஆஸ்ரயிக்கப்பட்ட உங் களுடைய திவ்ய பாதங்களைத் தவிர எனக்கு வேறு கதி என்ன இருக்கக்கூடும்? புண்டரீகாக்ஷா, நீங்கள் மஹாராஜ தம்பதிகள் யாருக்காக நீங்கள் அவதாரம் செய்கிறீர்கள், என்கிற சந்தேகம் தியாகராஜாதிகளுக்கு இருந்தாலும், இல்லாவிட்டாலும், பிரபு என் மட்டில் அந்த மஹாராஜனுகிற தியாகராஜர் கடைசியாகச் சொல்லி அனுபவித்ததுமாதிரி, உன்னை எங்களைப் போன்ற புண்யவான்களுக்காக வல்லவோ பூவுலுகக்கு ராவணனும் விபீஷணனும், மஹரிஷிகளும் அழைத்தார்கள். அப்பேற்பட்ட

புண்ணியவான்களான அவர்களை துளசிதாஸரை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். வேதங்களால் புகழப்பட்ட ஸ்ரீராமா, சீதா, நாராயணா, உங்கள் இருவர்களையும் பிரும்மாவும் ருத்ரரும் தியாகராஜர், கம்பர், வால்மீகி போன்ற மஹான்களும், உறுதி யானநல்ல நடத்தையுடன் சேர்ந்த புண்ணிய சரித்திரத்தை உடையவர்கள் என்று புகழ்கிறார்களே. அந்த புண்ணிய சாரித் திரிய கீர்த்தனமாக விளங்கும் "ஸ்ரீமத் ராமாயணம்" என்றும் புகழ் பெற்றதாக விளங்கட்டும். பிரபு, நீ யாருக்காக அவதாரம் செய்த போதிலும், அந்த மஹானுபாவர்களை முன்னிட்டு, மும் மூர்த்திகளுக்கு உயர்ந்தவனாகவும், முனி ராஜ வேஷம் கொண்ட என் பிரபு ஜானகி ஸமேத ஸ்ரீராமசந்திரனை ஆயிரம் தடவைகள் ஆயிரம் மங்கள நாமாக்களால் அர்ச்சித்து வணங்குகிறேன். பட்டாபிராமா, உன்னுடைய ஸேவை கிடைக்குமா? மரகதமணி ஸந்நிஹ கனகபூஷணா, உங்களுடைய சோபிதமான சரணயுக நகாவளியின் காந்திகள் எனக்கு ஸதா ஒளியைக் கொடுத்துக் கொண்டிருக்கட்டும். உங்களுடைய வரநூபுர சலங்கைகளின் சப்தங்கள் எனக்கு மார்க்கதரிசியாக விருக்கட்டும். சுகர் சௌன காதிகளால் போற்றப்பட்ட உங்களுடைய முக்தாஹாரங்கள், மகர குண்டலங்கள், முகாம் போஜங்கள் என்னிடம் ஸதா கருணை யுடன் வசித்துக் கொண்டிருக்கட்டும். காமித பலதாயக, ஸௌபாக்ய லக்ஷ்மி, எனது தாமஸ குணங்களை அழித்து, அடியவர்கள் விரும்பி ஸேவிக்கும் உங்களது ராஜ சிம்மாஸனத் தின் மீது, ஏறியிருந்த திருக்கோலத்தின் திவ்ய திருஷ்டி எங்கள் மீது படட்டும். ஹே சீதே, உன் நாயகனாகிற ஸ்ரீராமனைக் கண்டு ஆனந்தத்தால் பூரித்துப்போய் ராம பிரும்மத்தின் குமாரனாகிற தியாகராஜரைப் பாடச் சொல்லி அனுபவித்தாயே; அதைப் போல உனது மங்கள சரணங்களை அடைந்திருக்கும் என்னை ஸ்ரீராம பாதங்களில் நீதான் கருணையுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். சின்மய புருஷா, ஸத்குண ஸம்பன்னா, எனது ஊனக் கண்களாலும் ஞானக்கண்களாலும் உங்களுடைய புண்ய தரிசனம் பார்க்கப்பட்டு, என் மனதில் ஸதா காணும்படி ஸதா கிருபையுடன் நீங்கள் வசிக்கவேண்டும்.]

ஜனகரின் புத்ரியான சீதையுடன்கூட ரத்னமய சிம்மாஸனத் தில் ரகுராஜர் வீற்றிருந்தார். அவர்களைச் சுற்றி மஹரிஷிகளின் கூட்டங்கள் வெகுசந்தோஷத்துடன் இருந்தார்கள். விப்ரஸ்ரேஷ் டர்கள் வேதமந்திரங்களை உச்சரித்தார்கள். ஆகாயத்தில் தேவர் கள் புஷ்பங்களை வர்ஷித்தார்கள். பகவானுக்கும், பிராட்டிக்கும்,

பல்லாண்டு பல்லாண்டு பாடி, மங்களா சாஸனம் செய்தார்கள். எங்கு பரர்த்தாலும் ஜயமங்கள சப்தங்கள் கேட்கப்பட்டன. மஹரிஷிகள் புருஷஸூக்தம், நாராயண ஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், பூமி நீளாஸூக்தங்களைப் பாடினுர்கள். (86)

முதன் முதலாக வஸிஷ்டபகவான், ஸ்ரீ ராமச்சந்திரனுக்கு ராஜதிலகத்தை அணிவித்தார். அதன் பிறகு அவர், அங்கு வந்திருக்கும் விப்ரஸ்ரேஷ்டர்களை அழைத்து, பகவானுக்கு ராஜ திலகத்தை அணிவிக்கச் செய்து, திவ்ய தம்பதிகளுக்கு ஆசீர் வாதங்களைச் செய்ய ஆக்ஞையிட்டார். தாய்மார்களும் தங்களது புத்ரனுக்கு ராஜசிம்மாசனத்தை அளித்து, ஆனந்தமாக விருந்தார்கள். அடிக்கடி அடிக்கடி அவர்கள் சீதாராம தம்பதி களுக்கு மங்கள ஹாரத்திகளைச் செய்தார்கள். (87)

விப்ரஸ்ரேஷ்டர்களுக்கு உத்தமமான தானங்களாகிற பொன், வெள்ளி, நிலம், பசு, வஸ்திரம் ஆகியவை கொடுக்கப் பட்டன. யாசகர்கள் அழைக்கப்பட்டு, அவர்களுடைய ஸம்பூர்ண ஆசைகளும் நிறைவேறும்படி தானங்கள் செய்யப்பட்டன. ரத்னமய சிம்மாஸனத்தில் திரிபுவனத்தின் ஸ்வாமியாக விளங் கும் என் பிரபு சீதாராமன் கொலுவீற்றிருந்தார். அந்த மரகத ஸ்யாமளனுகிற கோதண்டபாணி, பன்னீர் முதலிய வாசனை திரவியங்களால் ஸ்நானம் செய்யப்பட்டு, கங்கை, யமுனை, ஸரயு, புஷ்கரம் முதலிய புண்ணிய நதிகளின் தீர்த்தங்களாலும், நான்கு சமுத்திரங்களின் புண்ய தீர்த்தங்களாலும், மங்கள ஸ்நானம் அபிஷேகம் செய்யப்பட்டு. உத்தமமான ஆபரணுதி களாலும், புஷ்பமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு, சீதையுடன் கூட, தம்பிமார்களான, பரத, லக்ஷ்மண, சத்ருக்னன், ஆஞ்ச நேய, சுக்ரீவ, விபீஷண அங்கதாதிகளால் சேவிக்கப்பட்டு, சுமந்திரருடன் கூடிய வஸிஷ்டபகவான், ஸப்தரிஷிகள், அநேக மஹரிஷிகளுடன் புடை சூழ, என் பிரபு ராமன் பட்டாபிஷேக ராமனுக கொலுவீற்றிருந்தார். ஸ்ரீ ஹரிபகவானின் ராஜ்ய பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைப் பார்த்த மஹா பாக்யமுள்ள தேவர்கள், மஹா ஆனந்தம் அடைந்து, துந்துபி வாத்யங்களை வாசித்தார்கள். (88)

[தியானம்

ஸித்தார்த்த ராமா சீதா, மஹாலக்ஷ்மி நாராயணு, ரெங்க நாயகி ஸமேதா, ரங்கநாதா, வேங்கட பிரபோ, அலர்மேல்மங்கை உறைமார்பா, வரத வெங்கடேசா, அகஸ்திய, லோபாமுத்ரை,

நாரதாதிகளால் ஸேவிக்கப்பட்ட அயோத்யா ராமா, சரணம், சரணம். ஸ்ரீகரா, நீங்கள்தான் என் சிந்தாமணி. நீங்கள்தான் என்னுடைய பரமாராத்யமான தெய்வங்கள். நீங்கள் எங்களுடைய குலதனம். நீங்கள்தான் தியாகராஜாதிகள் செய்தது போல, எங்களுடைய திவ்ய பூஜை, மஹா நைவேத்யம், தீபாராதனை. பிரபோ, எங்களுடைய நமஸ்காராதிகளை யேற்றுக் கொள்ளும். உதாரஹ்ருதயம் கொண்ட காருண்யமூர்த்திகளாகிற கம்பன், வால்மீகி முதலான வாக்கேய காரர்களை அனுக்ரஹித்த சீதாராமா, உங்களுடைய மாயாலீலைகளும், கிருத்யம், ஸ்ருஷ்டி ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அனுக்ரஹம் ஆகிற ஐந்து வகையானவை என்று ஆகமங்களும், வேதங்களும் சொல்லி யிருக்க, மூன்று தொழில்களையும் நீங்கள் ஸங்கல்பம் ஒன்றினாலே செய்வீர்கள். அவ்விதம் இருப்பினும், உலகத்தில் நீங்கள் அவதரித்து, தர்மத்தை ஆசரணை செய்து, இந்திராதி தேவர் களும், மஹரிஷிகளும், ராஜரிஷிகளும், '' தர்மத்தின் விக்ரஹம் '' என்று உன்னைச் சொல்லும்படி ஒவ்வொரு தர்மத்தையும் அனுஷ்டித்து நீ நிலைநாட்டினாய். ''ராமராஜ்யம்'' என்று சொல்லப் படும் உன்னுடைய ஆட்சியில் தேவர்கள் பயமின்றி ஆகாச வீதியில் சஞ்சரித்தார்கள். விப்ரர்கள், க்ஷத்திரிய, வைஸ்ய, சூத்ரர்கள் அவரவர்களின் கார்ய அகார்யங்களில் ஈடுபட்டு, நிறைந்த உள்ளம் கொண்டவர்களாகி, ஸத்புருஷர்களாக விளங்கினார்கள். சரஸ்வதி அம்சமாகிற கவிகள், அயோத்யா ராமன் அரசாண்டதைப் புகழ்ந்து, இன்றும் என்றும் பாடி ஆனந்த கீர்த்தனம் செய்யும்படி உன்னுடைய தர்ம மார்க்கங் களும், ஆகாயத்தை தொடும் மஹா கர்மங்களினால் யேற்படும் கீர்த்தி பிரபாவங்களும், புண்யஸ்ரவண கீர்த்திகளாக விளங்கு கின்றன. ஸ்ரீ ஹரிபகவானே, கனகாங்கதி, ஆஸ்ரித பக்த வத்ஸலா, உன் குணகீர்த்திகளையும், ஆசார அனுஷ்டானங்களை யும் நினைத்து, ஆனந்தமடைந்து, தியாகராஜாதிகளும், உமா மஹேஸ்வரர்களும், தம்புரா சகிதம் உங்களது பிரபாவங்களைக் கீர்த்தனம் செய்து கொண்டிருக்கிறார்கள். பிரபு, நீதானே நான் நாடிய பொருள். நீதான் நான் சேர்க்கவேண்டிய புண்யம். உன்னுடைய பாதங்களே நான் தேடவேண்டிய மோக்ஷம். உன்னைப்பற்றி புகழும் கீர்த்தனைகள் வேதம், கல்வி, செல்வம். நீ நடத்திய வாழ்க்கைதான் சித், அசித், ஈஸ்வரன் ஆகிய முப்பொருள்களின் ஜீவாதாரம். உன்னுடைய ராம கதைதான் பரம் வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சையாகிற அர்த்த

பஞ்சகம். அரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை சூடிய ராம பிரானே, கௌசிகமுனியின் பேச்சால் தாடகையை ஸம்ஹரித்து, அவருடைய வேள்வியை ஸம்ரக்ஷணம் செய்த சீதாபிரபோ, உனது தோள்வலிமையை கூறுவதான ஸ்ரீ ராமகதா என்கிற அமிர்தம் உன் கிருபாகடாக்ஷத்தினுல் எனக்கு எப்பொழுதும் தித்திக்கட்டும். உன் நாமம் எனக்கு ரஸபோக்யமாக விருக்கட்டும். பாயாமணியாகிற ஜானகி எனக்கு மார்க்கதரிசியாக விருக்கட்டும். லக்ஷ்மண பரத சத்ருக்னுதிகளின் பிரேமை, விஸ்வாஸம் என் மூச்சுக்காற்ருக விருக்கட்டும் ஆஞ்சநேயாதிகளால் ஆஸ்ரயிக்கப்பட்ட உன் பொற்பாதங்கள், என் சம்சாரக் கடலை தாண்ட வைக்கும் தோணியைப் போல விருக்கட்டும். உன்னைப் பற்றிய தர்மஞானம், எனக்கு ஸகல புருஷார்த்தங்களையும் அடைவித்து இடைவிடாது அனுபவிக்கும் ஆனந்தமாக விருக்கட்டும் ஆனந்த சௌக்யத்தையும் தரட்டும். என் கர்ம பந்தங்களை நாசம் செய்யும் பிரபோ, கல்யாணி, உங்களுடைய கிருபையினுல் கலியில் செய்யப்படும் பாபங்கள் நாசமடைந்து, நாரத, தியாகராஜ, கம்பர், துளசிதாஸர் போல விருக்கும் மஹானுபாவர்கள் அடைந்த பரமாம்கதி எனக்கு சுலபமாக சித்திக்கட்டும். லக்ஷ்மணுக்ரஜா, பரதசத்ருக்ன ஸேவிதா, ஆஞ்சநேய, விபீஷண பூஜிதா, கிருபை செய்.]

ஆகாயத்தில் துந்துபி வாத்யங்கள் முழங்கப்பட்டன. மிக்கத் தேர்ச்சி பெற்ற கந்தர்வர்கள், கின்னரர்கள் ஆனந்த லயத்துடன் பாட, அப்சரஸ்கள் நர்த்தனம் ஆட, முனிஜனங்களும், தேவர்களும் பரமானந்தத்தை அடைந்தார்கள். அவர்களுடன் கூட விருந்த பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன், விபீஷணன், அங்கதன், ஹனுமான்ஜி, சுக்ரீவன் ஆகியவர்கள் குடை பிடிக்க, சாமரம் வீச, விசிறி வீச, விபீஷணன் தனுஷ்ஷைத் தாங்க, அங்கதன் வாள் பிடிக்க, ஹனுமான் கேடயத்தைத் தாங்க, சுக்ரீவன் சக்தி ஆயுதத்தை ஏந்திக்கொண்டு, ஸகலரும் ராஜாக்களின் சின்னங்களை தரித்துக்கொண்டு பிரகாசித்தார்கள். (89)

என் பிரபு ரகுராமன், மஹாலக்ஷ்மியாகிற சீதாதேவியுடன் ரத்ன சிம்மாசனத்தில் கொலுவீற்றிருந்தார். தினகர குலமணி பூஷண கோதண்டராமனின் திவ்யமங்கள விக்ரஹம் பரிபூர்ண அழகு சோபைகளுடன், அநேக காமதேவர்கள் வெட்கப்படும்படி பரம மங்கள மூர்த்தியாக விளங்கியது. அப்போது உண்டானதும் புதிதான கனத்த மேகத்தைப்போல சுந்தர ஸ்யாமளனுகிற நிறத்துடன் அவருடைய திருமேனி பிரகாசித்தது. அந்தக்

கோமளமான சரீரத்தின்மீது பட்டு பீதாம்பரம் சாற்றியிருந்தது, அதன் அழகைக் கண்டு தேவர்களும் மோஹிக்கும்படி பரம சோபையுடன் விளங்கியது. ரத்னமணி முகுடம், தோள்வளைகள் ஒவ்வொரு அங்கத்திற்கும் ஏற்ப அழகான கைபூஷணங்கள், ரத்னமணி, முத்து ஹாரங்கள், பிரபுவின் அழகைப் பன்மடங்கு கள் மேன்மைப்படுத்தியன. அவருடைய பத்ம நயனங்கள் விசாலமான வக்ஷஸ்தலம், தீர்க்கமான ஆஜானுபாஹுக்கள் இவைகளைப் பார்க்கப் பார்க்க திகட்டாதவண்ணம் பரம சோபித மாகவிருந்தன. அந்த உத்தமமான தரிசனத்தை ஸேவை செய்தவர்கள் அல்லவா மஹா பாக்யசாலிகள், தன்யர்கள். (ஹே சீதா நாயகா, நாரத, வால்மீகித் தியாகராஜ, துளசிதாஸருக்குக் கிடைத்த உன் புண்ய தர்சனம் எனக்கு எப்போது கிடைக்கும்? உன்னைப் பாராத கண்களும், ஸ்பர்சிக்காத கைகளும், தலையும் வீண் அப்பா. எனக்கு ஜன்மலாபம் இவைகளின்றியும், உன் பேச்சு பலுக்குகளையும் கண்டு கேட்காது போனால் இல்லவே இல்லை. என்மீது எப்போது உன் கிருபை விழும்? ஆஞ்சநேயா, சீதாபிராட்டி லக்ஷ்மண பரத சத்ருக்ன, கிருபை செய்ய வேண்டும்) (90)

"அந்த ராம சமாஜத்தின் பரம சோபிதங்களைச் சொல்லுவ தற்கே மதுரமாகவும், ஆனந்த மயமாகவும் இருக்கின்றதே. அதைப்பார்த்த மஹான்களின் ஆனந்தத்தை வர்ணிக்க முடியுமா? ஆச்சரியம். ஆச்சரியம்" பக்ஷிராஜனான கருடரே, சரஸ்வதி தேவியும், சேஷபகவானும், வேதங்களும் அவைகளை விதவிதமாக பல தடவைகள் விவரித்துச் சொல்லுகிறார்கள். அதன் ரஸத் தைப் பரிபூர்ணமாக ஸ்வானுபாவமாகக் கொண்ட மஹேச உமா தம்பதிகள் அல்லவோ அறிவார்கள். அவர்களுடைய ஆனந்த ரஸம் அம்ருத ரஞ்சனம் ஏகபோக அனுபவமாகவுள்ளது." (என் பிரபு தன்னை அடைந்தவர்களுக்கு நேரும் குற்றங்களைப்பொருட் படுத்தாமல் நமது தீவினைகளை வேரறுத்துப் போமாறு செய்து, பெரியதோர் வாழ்வைக் கொடுக்கச் சித்தமாயிருக்கும் ரகுநாதனை சீதாபிராட்டியின் நாயகனை, ஹே மனஸே, பஜித்து ஸதா நிலை யாக விருப்பாயாக.) (91)

ஸகல தேவதைகளும் ஒருவர் ஒருவராகத் தனி ஸ்துதி செய் தும், பிறகு சேர்ந்து ஸ்தோத்ரம் செய்தும், நிஜ ஆனந்தத்தை அடைந்தார்கள். அதன் பிறகு பிரபுவினிடம் விடைபெற்றுக் கொண்டு அவர்கள் தங்கள் இருப்பிடம் சென்றார்கள். அப் பொழுது நான்கு வேதங்களும் பகவானுடைய தாஸர்களின்

ரூபத்தைத் தரித்துக்கொண்டு ஸ்ரீராமனை ஸ்துதி செய்தார்கள். (92)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மியை அடையாளமாகவும் ப்ருகுவின் பதத்தைப் பூஷணமாகவும் கொண்ட மஹாதீர்த்தரே, என் கோவிதாம்பதியே, நீதானே எனக்கு ஸர்வமும். பீஷ்மர், துரோணர், கர்ணன், அர்ஜுனன் முதலியோர்களும், வேதவியாஸர், தர்மர், மஹேஸ்வரர் உமா தம்பதிகளும், நாரதர் ஏகதர், த்விதர் திரிதர்; பிரஹஸ்பதி போன்ற பரம நிஷ்டர்களும் உனது பரத்வத்தை ஸதா நினைத்துக்கொண்டு உனது ஆக்ஞைக்கு நடந்துகொண்டார்கள். அந்த பரத்வம் என்னைவிட்டு அகலாமல் இருக்கட்டும். மஹா மோஹங்களில் சிறைப்பட்டு, என் ஜீவன் உனது ஸ்மரணையை விட்டு விலகாமல் இருக்குமானால், அதுவே போதும். இதைத்தானே வைஷ்ணவப் பெரியோர்கள் உன்னுடைய ஸம்யக்ஞானம் என்கிற ஸம்பந்தச் சேர்க்கையை விரும்பினார்கள். அவ்விதமிருந்தும், உன் நடத்தையும் ஸங்கல்பமும் உன்னுடன் கூடப்பிறந்த யாதவர்களுக்கும் பரதனிடத்திலும் வேறு மாதிரியாக விருந்தது. அதை நினைக்கும்போது நான் அர்ஜுனன் விஸ்வரூபத்தைக் கண்டு அஞ்சி பயந்து பார்ப்பதற்கே நடுங்கினதுபோல, நடுங்குகிறேன். பிரஹ்லாத பிரியா, துருவப்பிரியா, ஸர்வ பக்த ஜனபிரியா, உன்னுடைய ஸௌலப்ய வாத்ஸல்யாதி குணங்கள் சீதையினிடமே மிக்க விநோதமாக விருந்தன. ஆனால் பராசராதிகள் உனது ஸௌலப்யாதி கல்யாண குண விபவங்களை வர்ணிக்கும்போதும், (யசோதை நந்தன்,) கௌஸல்யாபுத்ரன், சுமித்திரா, விஸ்வாமித்ரர், ஜனகர் மஹரிஷிகள் ஆகியவர்களிடமும், கொடும் விரோதியான ராவணனிடமும் வாலியினிடமும் நீ காட்டிய கருணை, உனது நிஜஸ்வரூபத்தை விளக்குவதா அல்லது பயத்தைத் தெரிவிக்கிறதா, என்று யாரால் சொல்ல முடியும்? உன்னைப் பெரும்தனமாக மதித்த லக்ஷ்மணனையும் தர்ம புத்தியிலிருந்து பேதலித்துவிட்டாயே. உனது மாயம் அமோகமாக விருக்கிறபடியால், பாராபரமான வஸ்து அபாரமான பொருள் நீதான் என்று பராசரர் தலைக்கட்டுகிறார். ஹே பகவான் வியாஸரே, உம்முடைய பூர்ணமான ஸ்வரூபத்தை அறிவது மிகக் கடினம். அதை அறிவதைவிட உன்னையே பரமாராத்யன் என்று விஸ்வாஸம்கொண்டு, பரமார்த்தம் என்று ஆராதனை செய்யும் மஹரிஷிகளின் நடத்தையால் ஒழுங்குபடுத்திக்கொண்ட

என்னை எந்தவிதமாகிலும் நடத்து. உனது கிருபையை மாத்திரம் எனக்கு அருள்செய். ஹே விஷ்ணு, ஸச்சிதானந்த பரிபூர்ண மூர்த்தியே, கௌஸ்துபமணி அணிந்த மஹாவிஷ்ணோ, உன்னுடைய வேங்கடேச ஸுப்ரபாதங்களை என் ஸ்மரணைக்குத் தந்தருள வேண்டும். பத்மநாபா புருஷோத்தமா, வைகுண்டபதே, அரவிந்தலோசனு, ஸஹஸ்ர யோனிகளை நான் அடைந்த போதிலும், உன்னுடைய அச்யுத பாதங்களைத் தா. உனது அனுஸ்மரணைகளால் என் ஹ்ருதயத்தில் க்ருபையுடன் நித்ய வாஸம் செய். ஐந்திரமிந்திரனே, பிரதான புருஷரே, நீர்தானே ஸகலத்திற்கும் காரண புருஷர். நீர் என்னிடம் பிரஸன்னமடைய வேண்டும். நீர் சுத்தர் புத்தர். பரமேஸ்வரரே, உம்மை நான் துருவனைப் போலவும் பரதனைப் போலவும் சரணமடைந்தேன். க்ருபை செய்ய வேண்டுமென்று பிருர்த்திக்கிறேன்.]

## ஸ்ருதி கீதை—ஸ்ருதிகளின் ஸ்துதி

(1)

பிரபு ஸர்வக்ய கீன்ஹ அதி ஆதர க்ருபாநிதான்
லகேஊ ந காஹீம் மரமகச் லகேகரன்குண்கான்।

(2)

ஜய ஸகுண நிர்குண ரூப ரூப அநூப பூப சிரோமணே
தஸகந்த ராதி ப்ரசண்ட நிசிசர ப்ரபல கல புஜ பலஹநே

(3)

அவதார நரஸம் ஸார பார விபஞ்சி தாருண துக்கதஹே'
ஜய ப்ரணத பால தயாள ப்ரபு ஸம்ஜுக்த சக்தி நமாமஹே

(4)

தவ விஷம மாயா பஸ்ஸுராஸுர நாகநர அகஜக ஹரே।
பவ பந்த ப்ரமத அமித திவஸ நிஸி கால கர்ம குணநி பரே॥
ஜே நாத கரி கருணு விலோகே த்ரிவிதி துக்கதே நிர்பஹே
பவ கேத சேதன தச்ச ஹம் கஹீம் ரச்ச ராம நமாமஹே॥

(5)

ஜே க்யான மான விமத்த தவ பவஹரணி பக்தி ந ஆதரி
தேபாஇ சுர துர்லப பதாதபி பரத ஹம தேக்த ஹரீ
விஸ்வாஸகரி ஸப் ஆஸ் பரிஹரி தாஸ் தவஜேஹோஇ ரஹே
ஜபி நாம தவ வினு ஸ்ரம தரஹிம் பவநாத ஸோ ஸமராமஹே

(6)

ஜே சரண சிவ அஜ பூஜ்ய ரஜ சுப பரஸி முனி பதினிதரீ
நக நிர்கதா முனி வந்திதா த்ரைலோக பாவனி ஸுரஸரீ
த்வஜ குலிஸ அங்குச கஞ்ச ஜுத பன பிரத கண்டக கினலஹே
பத கஞ்ச த்வந்த முகுந்த ராம ரமேஸ நித்யபஜா மஹே

(7)

அவ் யக்தமூல மநாதி தரு த்வச சாரி நிகமாகம பனே
பட கந்த ஸாகா பஞ்ச பீஸ் அநேக பர்ன ஸுமன கனே
பல ஜுகெ ள விதி கடு மதுர பேலி அகேலி ஜே ஹி ஆஸ்ரித ரஹே
பல்லவத பூலத நவல நித ஸம்ஸார விடப நமர்மஹே

(8)

ஜேபிரும்ம அஜமத்வைத மனுபவகம்ய மன்பர த்யாவஹீம்
தே கஹஹீம் ஜான ஹீம் நாத ஹம் தப் ஸகுண ஜஸ நிஸ காவஹி
கருணயதன ப்ரபு ஸதகுண கரதேவ யஹ வர்மாகஹீம்
மன்வசன கர்ம விகார தஜி தவசரண ஹம் அனுராகஹீம்.

என்பிரபு ஸ்ரீராமன் ஸர்வக்ஞரானபடியால் அவர்களை அடையாளம் புரிந்துகொண்டார். கிருபா நிதான், என்று சொல்லும்படி அனுக்ரஹப் பார்வையுடன் அவர்களைத்தனது பத்ம நயனங்களால் நோக்கினர். அவர் புரிந்துகொண்டதை அவரைத் தவிர வேறு யாருக்குத் தெரியும்? நான்கு வேதங்களும் ''ஸ்ருதி கீதை'' என்று சொல்லும்படி பகவான்பிராட்டி ஆகியவர்களின் கல்யாண குண கீர்த்திகளைக் கீர்த்தனம் செய்ய ஆரம்பித்தார்கள். (93)

''ஹே பிரபோ, உங்களுடைய ஸகுண ஸ்வரூபத்தையோ, ஆயிரம் மங்கள நாமாக்களால் புகழப்படும் உங்களுடைய நிர்குண ஸ்வரூபத்தையோ நாங்கள் எவ்விதம் கூறி ஆனந்திப்போம்? ஸ்வாமி, தங்களுடைய திருமந்திர தாரகம் மிக உயர்ந்ததாக விருக்கிறது. அதனுல் ஸர்வ ஸ்வதந்திரரான நீர் பக்தர்களுக்கு சுலபராகவும் எளியவராகவுமிருக்கிறீர். உம்முடைய பரத்வ சௌலப்யாதி குணங்கள் உமக்கே பொறுத்தமாகவும், உம்மைப் பரமஸௌம்ய மூர்த்தியான சுத்தஸத்வ மூர்த்தியாகவும் விமர்சனம் செய்கின்றன. பாற்கடலைக் கடைந்து அம்ருதத்தை எடுத்தரற்போல, ஸ்வாமி, உம்முடைய பரம மங்கள திவ்ய விக்ரஹம், ஸ்வரூபம், என்றும் ஆராவமுதாக விருக்கிறது. ராஜாக்களுள் சிரோண்மணியாக விளங்கும் ஸ்ரீராம பத்ரரே, உமக்கு ஸதா ஜய மங்களங்கள் ஏற்படட்டும். உம்முடைய பாஹு பலத்

தினுல் ராவணுதி பிரபல பிரசண்ட துஷ்டர்களை அடக்கிக் கொன்று, உலகத்திற்கும் தேவர்களுக்கும் ஹிதத்தைச் செய்து, ஸகலரையும் தர்ம வழியில் செல்லும்படி ப்ரேரணை செய்கிறீர். உம்முடைய பரம ஸௌம்யமான ராம அவதாரமானது (என்னைப் போன்ற பரம லௌகிக மனம் கொண்ட) ஸம்சாரிகளையும் கடைத் தேறுவதற்கு உதவுகிறது. உம்முடைய ராம தாரகமானது அதிகமான துக்கங்களில் மூழ்கிப்போன நித்ய ஸம்சாரிகளின் சோகங்களை நாசம்செய்து, உம்முடைய ஸம்பந்த ஞானத்திஞல் யேற்படும் ஆனந்தங்களை அளித்துப் போஷகமாக விருக்கிறது. சாந்தமூர்த்தியே, பிரணதார்த்த ஹரரே, ஆஸ்ரிதவாத்ஸல்ய ஜலதே, தயாளு, உம்மைவிட்டு நாங்கள் யாரை அடைக்கலமாக அடையக்கூடும்?'' (பக்தவத்ஸலா, பயிர்களின் களைகளை எடுப்ப தைப்போல, உமது பிரபன்னர்களின் தீவினைகளை அறுத்து, தயிரும் வெண்ணெயும் அமுது செய்வதுபோல, உலகத்தையும் சகலத்தையும் பிரளய காலத்தில் விழுங்கிடும் திருமாலே, பிரபு, சீதையுடன் கூடிய ஸ்ரீராமச்சந்திரா, உங்களது திருவடிகளில் தஞ் சம் புகுந்த எங்களுக்கு ஸதா உங்களுடைய ரக்ஷையை அளிக்க வேண்டும். நீர் மஹாலக்ஷ்மியுடன் சேர்ந்து கடாக்ஷ கூட மாக உலகத்தை செழிக்க வைக்கிறீர். அவ்விதமான குளிர்ந்த பார்வைகளிஞல் எங்களையும் செழிக்க வைக்கவேண்டும்.) (94)

''உம்முடைய அவதாரம் என்று சொல்லப்படும் பூலோகத் திற்கு எழுந்தருளியிருத்தல் உம்முடைய ஸ்வதந்தரமான ஸங்கல் பத்தால் ஏற்பட்டது. அதனுல் உமக்கு மாயை வசப்பட்டு உம் முடைய ஆக்ஞையை நிறைவேற்றுகிருள். சுரர்களும், அசுரர் களும், நாகர்களும், நரர்களும், உயிருள்ள சேதனர்களும், உயிரில் லாத அசேதனங்களும், ஹே ஸ்வாமி, உமக்கு பயந்து நடக் கின்றன. பிரபோ நாராயணு, உம்முடைய ஆக்ஞையின்படி நடக்கும் காலமும், கர்மங்களாலும் குணங்களாலும் பற்றப்பட்ட சகல சேதஞசேதனங்களையும் இரவும் பகல் என்று பாராமல் ஆட்டிவைக்கிறது. அதனுல் ஜன்ம மரண சுழல்களில் அகப் பட்ட அவர்கள் யாவரும் நிலைதவறி தர்மவழிகளிலிருந்து புரண்டு மிக்க கேவலமான ஸ்திதியை அடைகிருர்கள். ஹே ஜானகி நாதரே, அப்பேற்பட்ட ஜீவர்கள் நொந்துபோய், தாபத்ரியங்களி லிருந்து விடுபட ஸங்கல்பம் செய்துகொள்வதும் உம்முடைய கருணுதிருஷ்டியினுல் அல்லவோ ஏற்படுகிறது. அதனுல் உம்மால் கடாக்ஷிக்கப்பட்ட மஹாபாக்யவான்கள் உமது கிருபை யினுலேயே அவலம்பிக்கப்பட்டவர்களாகி உம்மால் ஏற்படுத்தப்

பட்ட முக்குணங்களின் தாபங்களைப் போக்கிக்கொண்டு, உம்மையே வந்து அடைகிறார்கள். நாராயணா, ஸ்ரீமத் ராமச் சந்திர பிரபோ, உம்முடைய தாரகநாமமானது ஜன்ம மரணங் களின் சுழல்களில் அகப்பட்டுத் தவிப்பவர்களை மோக்ஷபதம் எனப்படும் ராமபாதத்தில் சேர்க்கிறது. பிரபோ, எங்களையும் உம்முடைய ரக்ஷணத்தில் சேர்த்துக்கொண்டு, ஆட்கொள்ள வேண்டும்.'' (அப்பேற்பட்ட பரமகருணாமூர்த்தியான ராமபத்ர மூர்த்திக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (95)

[தியானம்

நாராயணா, சீதாராமா, சரணம் சரணம். உன் பெருமைகளை கருடன் நைமிசாரண்யத்தில் உள்ள முனிவர்களுக்குச் சொல்ல நான் அவைகளைக் கேட்டு ஆனந்தப்படுகிறேன். நாராயணரே, உம்முடைய நாமாக்களை ஜபிப்பதாலும், உம்முடைய உருவத் தைத் தியானிப்பதாலும், உம்மை முழுமனதுடன் ஆராதிப்ப தாலும் ஞானிகள் மோக்ஷத்தை அடைகின்றனர். தாமரைக் கண்ணரே, ஓர் ஆலிலைமேல் படுத்த எம்பெருமானே, பராங்குச நாயகா, மாமாயா, செங்கண்மாலே, நீதான் என்னைப் பெற்ற தாய், தந்தை, மற்றையாவும் நீயே, நீ காட்டும் நெறி ஆச்சர்ய கரமாகவிருக்கிறது. கருமாமுகில்வண்ணா, நான் பிறந்தும் வளர்ந்தும், நின்றும், உன்மாயங்களை நினைத்து நினைத்து, என் ஆவிமுழுவதையும் உனக்கு அளித்தேனே. ராமாசீதா, உனது கள்ளவேடத்தைத் தள்ளி, என் உள்ளம்புகுந்து, என்னை ஆட்கொள். ஸ்ரீபதி, ஸ்ரீமானே, திருவேங்கடவா, மலைமகள் உன் ஒரு நாமத்தை உச்சரித்து, ஆயிரம் நாமாக்களின் இன்பத்தை அடைகிறாளே, அந்த இன்பத்தை எனக்குத் தரவேண்டும். பரஞ் சோதியே, சுடர்விளக்கே, மஹாபலி சக்கிரவர்த்தியிடமும் ராவணனிடமும் வலுவில் சென்ற உன் திருவுள்ளத்தை எனக்குத் தரவேண்டும். பீஷ்மரிடம் நீ காண்பித்த மரியாதையைத் தர வேண்டும். உதங்கருக்கு நீ காட்டிய கருணையைத் தரவேண்டும். திரௌபதிக்கும் நீ வாக்களித்தபடி உனது ரக்ஷணத்தைத் தர வேண்டும். தர்மர், பீமன், நகுலன், ஸஹாதேவர்களிடம் காட்டிய பரம ஸ்நேகத்தை என்மீது வர்ஷிக்கவேண்டும். ஆஞ்சநேயரின் உள்ளத்தை அறிந்துகொண்டு நடக்கும் சுலபத்தன்மையை என்னிடம் பரிவுடன் காட்டவேண்டும். பரத லக்ஷ்மணனிடம் காண்பித்த சௌலப்ய வாத்ஸல்யத்தை நான் கேட்காமலிருந் தாலும் ஸதா காண்பிக்கவேண்டும். என் கருவினைகளை அகற்றும்

நாரணு, எல்லா உலகங்களுக்கும் முதல் பொருளே, அந்தர் யாமியே, ஆறு அங்கங்களோடும் உபநிஷத்துக்களோடும் ரஹஸ்யம் எனப்படும் தியான மார்க்கங்களோடும் இதிஹாஸ புராணங்களோடும் ஓங்காரத்துடனும், வஷட்காரத்துடனும் கூடின வேதங்களை உம்மையே உத்தமமான யக்ஞம் என்று கோஷிக்கின்றன. நிராமயரே, அநாமயரே, அவ்யயரே, ஸர்வ ஸத்வரே, ஸுபர்ணரிடம் என்ன கிருபையுடன் உமது ஸ்வரூபத்தை விளக்கினீர். அப்பேற்பட்ட உமது நிஜ ஸ்வரூபத்தை அனன்ய மனஸ்ஸுடன் த்யானித்து சரணமடை கிறேன். ஞான சக்ஷுஸ்ஸுடன் பார்க்கும் மஹாத்மாக்கள் விஷயங்களிலிருந்து விடுபட்டு, சுசியுள்ள மனத்துடன் உம்மை உபாஸிக்கிருர்கள். நீர் தான் ஸர்வ ஜகத்திற்கும் பீஜம். ஏகாந்தி களால் தியானிக்கப்படும் பரபிரும்மமும் நீர் தானே. அதோக்ஷஜா, மஹாகர்மரே, ஸுக்ஷ்மரே, துருவ நாராயணு, என்னுடைய அனுத்தமமான ஸம்பத் என்று சொல்லி உம்மை சரணமடைகிறேன். மஹாயோகியே, மாதவா, ஸ்ரீவத்ஸம் என்னும் அடையாளத்துடன் இருப்பவரே, வைநதேயரின் அடையாளத்தால் பொறிக்கப்பட்ட ஸ்ரீமன் நாராயணு, ஞான வான்களும் பற்றுதலற்றவர்களும், "நான்" என்கிற மமகாரத்தை விட்டவர்களும், பலன்களில் ஆசையைத் துறந்தவர்களுமான வித்வான்கள் உம்மை அடைகிருர்கள். உம்மிடம் ஸதா மனம் வைத்து பக்தி செய்பவர்கள் உலகத்திற்குக் காரணமாகவிருக்கும் உம்முடைய ஸ்தூல ரூபத்தையும் பார்க்கிருர்கள், அறிகிருர்கள். ஸுமனஸ்ஸும் சௌமியருமான உம்மை நான் ஸதா பக்தியுடன் ஆராதிக்கிறேன். எல்லாப் பிராணிகளுக்கும் தீங்கு செய்யாமை யும் வஞ்சகம் செய்யாமையும் ஆகிற முக்கியமான விரதம் கொண்டவர்கள் உம்மை அடைகிருர்கள். குற்றமற்ற கருடரிட மும் ஆஞ்சநேயரிடமும் காண்பித்த அன்பை என்னிடமும் காட்டவேண்டும். உம்மிடம் எனக்கு அசஞ்சலமான பக்தியை வரமாகக் கொடுக்கவேண்டும். உமது பாதங்களே எனக்கு மோக்ஷத்வாரம், உம்மை கருடன் ஆஞ்சநேயாதிகளை முன்னிட்டு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். உம்முடைய நிர்குண ஸ்வரூபமாகிற வாஸுதேவ ரூபத்தையும், ஸ்தாவரஜங்கமம் ஆகிற பொருள்களைப் படைக்கும் அநிருத்த ஸ்வரூபத்தையும், தனக்குத்தானே ஆதாரமாகவும், தனது மாயையினுல், எல்லாவற்றையும் ஒதுக்கித் தன்னை அறியாமல் இருக்கும்படி செய்கிறதும் உலகத்திற்கு விருத்தியைக் கொடுப்பது

மான பிரத்யும்ன ஸ்வரூபத்தையும், நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன்.]

"எவர்கள் விபரீத ஞானத்தினுல் ஸ்வஅபிமானத்துடன் தனக்குத் தானே ஸ்வதந்திரர்கள் என்று எண்ணி ஜன்மச் சுழல்களில் அகப்பட்டு, மரணம் என்கிற நோய்க்கு வாய்ப்பட்டு தவிக்கிருர்களோ, அவர்கள் உம்மை பக்தியுடன் ஆராதிக்காமல் பாக்யஹீனர்களாக ஆகி, மந்தபுத்தியுடன் வாழ்கிருர்கள். ஹே ஹரிபகவானே, தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் மிக்க அரியதான உம்முடைய பதாப்ஜங்கள் ஸகல பதங்களைவிட உத்தமமான ஸ்தானமாகும். ஆகையினுல் யோகிகள் ஸதா உம்முடைய நாராயணபதத்தைத் தியானிப்பவர்களாக, தேவ, இந்திர, பிரும்ம, நாக, யக்ஷகின்னர பதங்களை மிக்க கீழானதாக நினைக்கிருர்கள். உம்மை ஒருதடவை ருசிகண்டுவிட்டால், உம்முடைய சுவையைத் தவிர வேறு எதையும், அரங்கமா நகருளானே, பெரிதாகவும் எளிதாக அசையக்கூடியதாகக் கருதமாட்டார்கள். எந்த மஹானுபாவர்கள் உம்மையே பரமார்த்தம் என்று கருதி, பற்றுதலற்ற மனத்துடன் உமது ஸங்கல்பத்திற்கு அனுசரணையாக வாழும் வைஷ்ணவ தாஸர்கள், பரமவிஸ்வாஸம் என்கிற விரதம் பூண்டு, கேவலம் ஞானத்தினுல் உம்முடைய திருமந்திர தாரகத்தை ஸதா அனுசந்தித்து, பரிஸ்ரமமின்றி, உம்மையே ஆதாரமாகக் கொண்டு, பவஸாகரத்தை சுலபமாகத் தாண்டுகிருகள். ஜானகிநாதரே, சீதாபிரபோ, இந்தவிதமாக உமது தாரகத்தை நம்பி, திருமந்திரம் உபதேசிக்கப்பட்டு, த்வயத்தை அனுஸந்தித்து, உமது பாதங்களையே உபாயம் உபேயமாக வைத்து பரமபுருஷார்த்தமாகிற சீதாராம நாராயண பதத்தையே நாங்கள் அடைகிறோம். (96)

"சீதாராமா, உம்முடைய மகிமைகள் அனந்தமாகவிருக்கின்றன. ஆதலால் உங்களுடைய சரணங்களை உமா மஹேஸ்வரர்களும், காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதியுடன் கூடிய பிரும்மதேவரும் ஸதா தங்களையே பஜித்துக்கொண்டிருக்கிருர்கள். (பத்மகர்ப்பரே, ஸ்ரீகர்ப்பரே, பத்மநாபரே,) உங்களுடைய ரங்கநாத சரணும்புஜங்களின் ஸ்பரிசத்தினுலேயே கல்லாய்கிடந்த கௌதம பத்னியான அஹல்யையும் சாபத்திலிருந்து விடுபட்டு, தன்னுடைய பதியைச் சேர்ந்தாள். பிரணதார்த்திஹரனே, அல்ப ஸம்பந்தங்களைத் தியாகம்செய்த பெரியோர்கள் முனிஜனங்கள் தங்களது பாதசேர்க்கையையே பெரிதாக மதித்து, ஸ்வபாவிக

மாகவே நிலைநின்று தங்களுடைய ஸர்வவித ஸம்பந்தத்தைப் பெறுவதற்கு இடைவிடாது தங்களது சரணங்களையே பஜிக்கிறார்கள். தாஸபூதர்களாக ஸ்வாமிக்கு ஆகி, ஸதா பரதந்திரர்களாக, ஸ்வாமியினுடைய அபிமதத்தில் இஷ்டர்களாகி, அனுகூல மனத்துடன் தங்களை அடைவதற்கு பிரதிபந்தமான விரோதிகளை அழித்து, நிரபேக்ஷ கர்த்ருத்வம் என்கிற புத்தியை விட்டு, திரைலோக்ய தீர்த்தமான கங்கையை உண்டுபண்ணுவித்த தங்களது புண்ய சரணங்களின் நகஜோதியை இடைவிடாது பஜிக்கிறார்கள். நாராயணா, திரிவிக்ரமா, உம்முடைய ஸ்ரீராம பாதங்களின் பெருமைகளை எவ்விதம் வர்ணித்த போதிலும் ஸாத்யமா? (தாசரதி, பிரும்மா, ஸனகர், ஸநந்தனாதிகள், இந்திரன், நாரதர், மார்க்கண்டேயர், வால்மீகி, கம்பர், துளசிதாஸர், தியாகராஜாதிகள்) அதனால் அல்லவோ தங்களை ஸதா பஜிக்கிறார்கள். உம்முடைய கிருபை மாத்திரமிருந்தால், த்வஜம், வஜ்ரம், அங்குசம், கமலபுஷ்பம், அரிசி, கோதுமை போன்ற தானியம் முதலிய மஹா புருஷலக்ஷணங்கள் பதிந்த ராமசரணாரவிந்தங்களின் ஸ்பர்சமாத்திரத்தில், தாங்கள் முள்ளும் புதரும் நிறைந்த காடுகளில் கரியமேனி வாட சஞ்சரிக்கும் போது, சகல சேதனா சேதனங்கள் யாவும், சுபமான கதியை அடைந்ததைப் பற்றி ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஹே முகுந்தா, அரவிந்தலோசனா, புஷ்கராக்ஷா, உம்முடைய சிந்தையாகிற கிருபாகடாக்ஷம் எங்கள் மீது விழட்டும். (உமது பாதங்களையே தியாகராஜ, வால்மீகாதிகளைப் போல, நம்பி வாழ்ந்துவரும் எனக்கு ஸம்சாரத்வந்தங்களை விலக்கி, உம்முடைய நிஜ பாதங்களான ராம பாதுகைகளை ஆஸ்ரயித்த பரதனைப் போல, மங்களங்களைச் செய்யட்டும். உம்முடைய பாதுகைகளின் ஸம்பந்தத்தால் அல்லவா பரதன் முதலியவர்கள் தங்களுடன் நித்ய ஸம்பந்தத்தைப் பெற்று, என் போன்ற அவிவேகிகளுக்கு மார்க்கதரிசியாக விளங்கினான்.) ராமா, ரமேசா, சீதாநாயகா, ராமய்யா, சந்தேகமின்றி ஸாகேத ராமனின் பாதாரவிந்த யுகளங்கள், ஸ்ரீவைகுண்டம், வேங்கடம், ஸ்ரீரங்கம், ஸ்ரீ காஞ்சி என்று நம்பி வாழும் என் போன்ற தாஸர்கள் அதனால் அல்லவோ, உம்முடைய பாதுகைகளை, உம்முடைய பாதசரணங்களைப் பெரிதாகக் கருதி வாழ்கிறார்கள். உத்தம கதியையும் இறுதியில் அடைகிறார்கள்.'' (97)

''லாவண்ய ராமா, உன் நாம பெருமைகள், உன் பாத பெருமைகள், அழகு, மஹா கர்மங்கள், அவைகளின் பெருமை

கள், உன் அடியார்களின் பெருமைகள், இன்னும் இதைப்போல பலவித உன் ராம தர்சனத்தின் பெருமைகளை வேதங்கள் கணக்கில்லாமல் வர்ணிக்கின்றன. ஹே அவ்யக்த ஆத்மாவே, நீர்தான் ஜகத்தின் ஆதிபிஜம். நீர்தான் பிரகிருதி. உமக்கும், ஜகத்திற்குமுள்ள ஸம்பந்த ஸ்நேகம் அனுதியானது. நியக்ரோத உம்பரரே, கீழே நின்று வணங்கும் பக்தர்களுக்கு, தங்களை நோக்கி அனுக்ரஹிக்கும்படி எல்லாவற்றிலும் உயர்ந்ததான ஸ்ரீ ராம பதத்தை அளிக்கும் உதாரரே, மேலே வேரும், கீழே கிளைகளுடன் பரவியிருக்கும் பிரபஞ்ச விருக்ஷத்திற்கு, ஜாக்ரத, ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரியாவஸ்தையாகிற நான்கு விதமான மரப்பட்டைகள் இருக்கின்றன. இருத்தல், இருக்கப் போதல், மாறுதல், ஏற்படுதல், வளர்தல், மெதுவாக அழிவுண்டு போதல், ஸம்பூர்ணமாக நாசமாகுதல் ஆகிய ஆறுவிதமான அடிக்கிளைகளும், அந்தக் கிளைகளிலிருந்து பிரியும் இருபத்தைந்து சிறிய கிளைகளுமிருக்கின்றன. (பிரகிருதி, மஹத், அஹங்காரம், மனஸ், சித்தம், கேட்டல், பார்த்தல், ஸ்பர்சித்தல், ருசி பார்த்தல், நுகருதல் ஆகிற ஐந்து ஐந்து கர்மஞான இந்திரியங்கள், தன் மாத்திரைகள், ஐந்து மஹா பூதங்கள் ஆகியவை.) மனத்தில் தோன்றும் ஆசைகள், அவைகளை நிறைவேற்றுவதற்கு யேற்படும் பரிஸ்ரமங்கள் புதிய புதிய இலைகளாகவும், பூக்களாகவும், துக்கம், சந்தோஷம் ஆகிற இரட்டைகள் பழங்களாகவும், மாயை என்பது கொடியாகவுமிருக்கின்றன. அப்பேற்பட்ட சதுராத்மா ஸம்சார விருக்ஷ ரூபமாக தன்னை ஜகத்தில் பிரகடனப்படுத்திக் கொள்கிறீர். அப்பேற்பட்ட நியக்ரோத உம்பருக்கு, ஜகத் ஆதார நிலையருக்கு நாங்கள் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறோம்.'' (98)

[தியானம்

ராமா சீதா, கிருஷ்ணு, ஆதிவேங்கடேசா, நாராயணு, மஹாலக்ஷ்மி பிரபோ, உன்னை அனுதினமும் பூஜை செய்து நமஸ்கரிக்கிறேன். ராமா, என்னைப்போல மூர்க்க குணம் படைத்தவன் யாரும் இருக்கமுடியாது. உன் நாமஜபம், உனது ஸ்மரணை, பாதபூஜை ஆகியவைதான் எனக்கு வாழ்க்கை என்று தெரிந்து கொண்ட உலகம் எல்லாம் சிரித்து என்னை ஏளனம் செய்த போதிலும், நான் சொல்லித் திரிகிறேன். நரசிம்மா, ராஜீவாக்ஷா, பரமபாவனு, உன் கிருபாகடாக்ஷமின்றி அரை க்ஷணமும் என்னுல் வாழமுடியாது என்று பிரஹ்லாதன், தியாக

ராஜாதிகள் மாதிரி சொல்லும் என்னைக் கஷ்டப்படுத்துவதில் உனக்கு இவ்வளவு சந்தோஷமா? ஜானகி மனோஹரா, ராகவா, ஹரிபகவானே, என் மனத்திலிருக்கும் எண்ணங்களை ஸர்வாந்தர்யாமி என்கிற பட்டம் பெற்ற நீ இன்னமும் தெரிந்து கொள்ள வில்லையா? சீதாராமா, என் பாபச் செய்கைகள் ஒரு தேவதை ரூபம் எடுத்து எனக்கு உன் 'ஸாந்நித்யத்தை தடுக்கிறதா? நீரஜாக்ஷா, தியாகராஜ வந்திதராமா, வாலியினுடைய கொடுமையையும், ராவணனுடைய கொடுமையையும் முறையிட்ட சுக்ரீவ, விபீஷணாதிகளையும், பிரஹ்லாதனையும், "முரஹரா" என்கிற சப்தத்தினால் கூப்பிடப்பட்டபோது நீ ஓடிவந்தாயாமே? ராமச்சந்திரா, சீதாபதி என்று அழைக்கும் என்னிடம் ஓடி வரமாட்டாயா? என்னிடம் வருவதற்கு யாருடைய பேச்சைக் கேட்பாய்? அதையாவது சொல். சாஸ்திரங்களும், பக்தர்களும், உன்னை பக்த பராதீனன் என்று சொல்லுகிறார்களே. திரௌபதியிடம் காண்பித்த அன்பைவிடவா மேலானதாக உள்ளது? தியாகராஜ, வியாஸாதிகளிடம் நீ காண்பித்த வ்யக்த ரூபத்தை விடவா மேலான ஸௌம்ய ரூபம் இருக்கப் போகிறது? ராமா, கிருஷ்ணா, சக்திதேவியுடன் கூடிய மஹாதேவர் உன்னை சந்தோஷத்துடன் அனுபவிக்கிறாரே. அந்த ஸத்யஸந்த சுத்த ஸத்வமங்கள விக்ரஹத்தை எனக்கு அனுக்ரஹிக்கமாட்டாயா? ராகவா, அந்தராத்மா, என் சிந்தனைகள் எல்லாவற்றையும் உனக்கு கொடுத்தேனே. ஸார்வபௌமா, உன்னையே நம்பின என்னை கைவிட்டுவிடுவாயா?]

"ஹே அஸ்வத்தராமா, நீர்தான் பரபிரும்மம். அந்த நாராயண பிரபுவும் நீர்தான். மற்றவர்களைப் போல ஜனியாத அஜர். தூணிலும் நரசிம்மனாக நீர் பிறந்தீர். உமது ஸங்கல்பம் எவ்விதமோ, அவ்விதமே நீர் தோன்றுகிறீர். ஏகாந்திகளால் ஒரே பராயணமாக நம்பி வாழப்படும் ஏகமூர்த்தியான ஸ்ரீமந்நாராயணர் நீர். உமக்கு ஸகலரும் அடங்கினவர்கள். அகாரமாகிற பிரணவத்தின் முதல் எழுத்தும் நீர்தான். எந்தக் காலத்திலும், எந்த தேசத்திலும், குணங்களும், விபவங்களும், ஸ்வரூபமும் குறையாத அக்ஷரர். எக்காலமும் யௌவனமாக விருக்கும் அநாதி நிதனர். இந்திரியங்களுக்குப் புலப்படாத அதோக்ஷஜர். நீர் கிருபையுடன் உம்மைத் தோன்றுவித்தால் தான் மனத்திற்கு எளிதில் புலப்படுகிறவராகிறீர். உம்மை அனுபவித்தால் மாத்திரம் நீர் அறியப்படுகிறீர். உம்மை ஸ்ரீயப் பதித்வம் முதலிய அடையாளங்களால்தான் ஓரளவு அறிய

முடியும். அதனால் யோகிகள் ஸதா உம்மைத் தியானித்துக் கொண்டு, உமது சேர்க்கை இன்பத்தை அனுபவித்தவண்ண மிருக்கிறார்கள். உம்மைவிட சிறந்த நன்மையை தருபவர் யாரு மில்லை என்று சொல்லும்படி தாங்கள் ஸதா மங்களமூர்த்தியாக விளங்குகிறீர். ஆகையால் ஜானகிநாதரே, பரமஸௌம்ய மூர்த்தியே, சுகத்திற்கும், சௌக்யத்திற்கும், சாந்தத்துக்கும், ஹிதமான ராமபத்ரா, (ராமானுஜாதிகள்) உம்மை அடைவதற்கு, ஸகுண ஸ்வரூபமாகிற உம்முடைய பரமகல்யாண குணங்களைப் பாடி ஆடி இன்புற்று, ஸதா கீர்த்தனம் செய்து கொண்டு, ராக பாவ தாளத்துடன் ஆனந்த கீர்த்தனம் செய்து இன்புறுகிறார் கள். எங்களையும் இன்புற வைக்கிறார்கள். கருணையையே கவச மாகக் கொண்ட பட்டாபிஷேக சீதாராமா, பரத, லக்ஷ்மண, சத்ருக்ன, ஆஞ்சநேய, சுக்ரீவ, விபீஷண, வஸிஷ்ட, வாமதேவ, ஜாபாலி, காஸ்யப, விஸ்வாமித்திர, கௌதமாதிகளால் ஸேவிக்கப் படும் ஜானகிராமா, ஜயராமா, பிரபு, ஸத்குண ஸ்வரூபி, ஸஜ்ஜன பாரிஜாதா, உம்மை அனுபவிப்பவர்களை, நீரும் போக்யமாக அனுபவிக்கும் அந்நாதரே, நீர் எல்லோருடனும் மங்கள மூர்த்தி யாகவும், ஸார்வபௌம சக்கிரவர்த்தியாகவும், ராஜகோலத்துடன் சீதாபிராட்டியின் ஸகியத்துடன் இருக்கும்போது, உம்மை எங்களுக்கு வரதானம் செய்யும்படி பிரார்த்திக்கிறோம். (துளஸி தாஸ, கம்பர் வால்மீகி, தியாகராஜ நாரத வியாஸ சுகஸனக ஸநந்தனாதிகளைப்போல,) மனம் வசனம் கர்மம் முதலியவை களால் நாங்கள் உம் கைங்கர்யங்களுக்கு அன்புடன் ஈடுபாடு கொண்டு, பரம பாவனமான உன்னுடையதும் ஸகல சராசரங் களுக்கும் ஆதாரமான ஸ்தம்பம்போல நிற்கும் ஆதி சேஷருக்கும் ஆத்மாவாகவும், உமா மஹேஸ்வரர் பிரும்மா ஸரஸ்வதி, வால்மீகி, சீதை, லக்ஷ்மணன், பரத, சத்ருக்ன, ஆஞ்ச நேய, நாரதாதிகளால் 'ஸதா புகழப்படும் தங்கள் திவ்ய சரணங் களில் ஸதா அனுராகம் கொண்டு, ஸதா திரிந்துகொண்டு இன்பத்துடன் வாழ்வோமாக.'' (மதம், லோபம், கிரோதம், மாத் ஸர்யம், லோபம், அசுபமான மதி இவைகளுக்கு வசப்படாமல் உம்மை ஸதா ஆனந்தத்துடன் நினைத்துக்கொண்டு தியான மூர்த்தியாக வாழ்வோமாக.]

நான்கு வேதங்களும் பிராம்மண ரூபத்தில் யாவரும் பார்த்துக்கொண்டிருக்கையில் இந்த விதமாக பகவானை வந்தனை ஸ்துதிகளைச் செய்தனர். அவர்களுடைய உதாரமான புகழ் கீர்த்திகளை நினைப்பதற்கு பரம போக்யமாக விருக்கின்றன.

அதன்பிறகு அவர்கள் அந்தர்த்தியானமாகி பிரும்ம லோகத்தை அடைந்தார்கள். (99)

காகபுசண்டி கருடனிடம் சொன்னார். "வைநதேயரே, கேளும். அப்பொழுதுதான் உமையுடன் கூடிய மஹேஸ்வரர் அவிடம் வந்தார். சீதாராம தம்பதிகளைப் பார்த்ததும் அவர்களுடைய மனம் அன்பினால் பொங்கி வழிந்தது. கராஞ்சலியுடன் வார்த்தைகள் தொண்டையிலிருந்து வெளிவர மெய்சிலிர்க்க அந்த உத்தம தம்பதிகள் ரகு வீரரை ஆனந்த ஸ்துதி செய்தார்கள்." (100)

1. ஜய ராம ரமா ரமணம் ஸமனம்
பவதாப பயாகுல பாஹிஜனம்
அவதேஸ ஸுரேஸ ரமேஸ விபோ
ஸரணாகத மாகத பாஹி பிரபோ.

2. தஸசீஸ விநாஸன பீஸ் புஜா
க்ருத தூரி மஹா மஹி பூரி ருஜா
ரஜனீ சர விருந்த பதங்க ரஹே
ஸரபாவக தேஜ பிரசண்ட தஹே.

3. மஹி மண்டல மண்டன சாருதரம்
த்ருத ஸாயக சாப நிஷங்க பரம்
மதமோஹ மஹா மமதா ரஜனீ
தம புஞ்ச திவாகர தேஜ அநீ.

4. மனஜாத் கிராத நிபாத கிஏ
ம்ருக லோக குபோகஸ ரேன ஹிஏ
ஹதிநாத அநாதனி பாஹி ஹரே
விஷயா வன பாம்வர பூலி பரே.

5. பஹு ரோக வியோகன்ஹி லோக் ஹஏ
பவதம்திரி நிராதர் கே பலஏ
பவஸிந்து அகாத பரே நரதே
பதபங்கஜ ப்ரேம நஜேகரதே.

6. அதிதீன மலீன துக்கி நித ஹீம்
ஜின்ஹகேம் பத பங்கஜ ப்ரீதி நஹீம்
அவலம்ப பவந்த கதா ஜின்ஹ கேம்
ப்ரிய ஸந்த அனந்த ஸதா தின்ஹ கேம்.

7. நஹிராக நலோப ந மானமதா
தின்ஹ கேம் ஸம வைபவ வாபிபதா
ஏஹி தே தவஸேவக் ஹோதமுதா
முனி த்யாகத ஜோக பரோஸ ஸதா.

8. கரிப்ரேம நிரந்தர நேம லிஏம்
பதபங்கஜ ஸேவத சுத்த ஹிஏம்
ஸமமானி நிராதர ஆதரஹீ
ஸப் ஸந்த சுகி விசரந்தி மஹீ.

9. முனி மானஸ பங்கஜ ப்ருங்க பஜே
ரகுவீர மஹா ரணதீர அஜே
தவநாம ஜபாமி நமாமி ஹரீ
பவரோக மஹாகத மான அரீ

10. குணசீல க்ருபா பரமாயதனம்
ப்ரணமாமி நிரந்தர ஸ்ரீரமணம்
ரகுநந்த நிகந்தய த்வந்தவ கனம்
மஹிபால விலோகய தீன ஜனம்.

11. பார் பார் வர மாக ஊம் ஹரஷி தேஹீ ஸ்ரீரங்க
பத ஸரோஜ அநபாயனீ பக்தி ஸதா ஸத்ஸங்க.

"ராம், லக்ஷ்மி காந்தா, ரமாரமணா, உம்மை நினைத்தாலே ஸம்சார தாபங்கள் அடியோடு நாசமடைகின்றன. பாபங்கள் விலகி, அத்துடன் சம்சார தாபங்களும் நீங்கி, மனம் சாந்தியை அடைகிறது. ஸ்வாமி, உமக்கு ஸதா ஜய மங்களங்கள் ஏற்பட்டு, நீங்கள் இருவர்களும் பல்லாண்டு, பலகோடி நூருயிரம் பல்லாண்டு வாழ்வீர்களாக. அயோத்யாபுரி ராமா, தசரதபுத்ரா, தேவதைகளின் ஈஸ்வரரே, ரமேசா, ஸகல விபூதிகளையும் மகிமைகளையும் உடைய பிரபோ, நாங்கள் உம்மை சரணாகதர்களாக வந்து அடைந்திருக்கிறோம். எங்களை ரக்ஷிக்கவேண்டியது என்று பிரார்த்தித்துக் கொள்கிறோம்." (101)

"பிரபு, தாங்கள் பத்துத்தலைகள் இருபது கைகளைக் கொண்ட ராவணனை நாசம் செய்து இந்த பூமியை மிக்கக் கொடுமையான துக்கங்களிலிருந்து விடுவித்தீர். ராக்ஷஸர்களின் கும்பல்களான விட்டில் பூச்சிகளை தங்களுடைய பிரசண்டமான

கோதண்டத்திலிருந்து விடுபட்டதும் பிரளய காலாக்னிக்கு ஒப்பானதுமான பாணங்களால் நாசமடையச் செய்தீர்.'' (102)

''இப்பொழுது இந்த பூமி ஸாதுக்கள் வாழ்வதற்கு அழகிய வாசஸ்தலமாக விருக்கிறது. அந்த அழகான பூமிக்கு தாங்கள் கீர்த்தி வாய்ந்த மஹா ஆபரணம் போல விளங்குகிறீர். தாங்கள் ஸதா கோதண்டத்துடனும் பாணத்துடனும் அம்புராத் துணியுடன் இருப்பதால் பூமிக்கு ஸதா தங்களுடைய ரக்ஷை ஏற்பட்டிருக்கிறது. தங்களுடைய ஜோதி ஸ்வரூப திவ்ய மங்கள விக்ரஹம் மஹத்தான மதத்தையும், மஹா மோஹத்தையும் மமதை எனப்படும் ஸ்வஅபிமானங்களான இருட்டுக் கும்பல்களை யும் நாசம் செய்யும் திவாகரனுக விளங்குகிறது.'' (103)

''பிரபு காமத்தால் தன் மனம் போல நடக்கும் வேடன் எவ்விதம் மனித ரூபியாகிற மானை அடிப்பானே, அதுபோல கெட்டவழியில் சஞ்சரிக்கும் மனிதனுடைய ஹ்ருதயத்தை நீர் அடிக்கிறீர். அவனவனுடைய துஷ்கர்மச் செயல்களின் பலன் களாக அனுபவிக்கப்படும், அவனவனுடைய பாபங்களுக்கு சரியான தண்டனையை அளிப்பதுபோல பாணங்களால் நீர் அடிக்கிறீர். தீனர்களுக்கும், நாதனற்றவர்களுக்கும் தாங்களே கதியாகவிருக்கிற படியால், ஸ்வாமி, ஹரிபகவானே, விஷ்ணோ, காருண்யஸிந்தோ, விஷயபோகங்களில் மூழ்கி, அக்ஞானத் தால் தங்களையே எஜமானர்களாகக் கருதி, ஆத்ம கள்வர்களாகி விளங்கும் மஹாபாபிஷ்டர்களையும் தயை செய்து தாங்கள் ரக்ஷணம் செய்ய வேண்டுமென்று நாங்கள் பிரார்த்திக்கிறோம்.'' (104)

''இந்த ஜகம் முழுவதும் தங்களுடைய நினைவும், தங்களுக்கு அடங்கி தர்ம வழியில் நடக்கவேண்டும் என்கிற வியவஸ்தையுமில் லாமல், சகல சம்சாரிகளும் ஸ்வானுபாவமாக விருந்துகொண்டு, தங்களை மறந்து மிக்கக் கஷ்டப்படுகிறுர்கள். அவர்களுக்கு நஷ் டங்களும் வருத்தங்களும் அதனல் யேற்படும் தாபங்களும் ரோகங் களும் கடுமையாகவும், கொடியதாகவு மிருக்கின்றன. தங்களால் காட்டப்பட்ட வேத மார்க்கங்களிலிருந்து வழி தப்பினவர்களாக அதன் விபரீத பலன்களையும் அவர்கள் அனுபவிக்கிறுர்கள். அப் பேற்பட்ட மஹா பாபிகளும் தங்களுடைய பாத சரணங்களில் பிரேமையுடன் பக்தி செய்வார்களாகில் அவர்களுடைய தாபங் களும் தீர்ந்து போகின்றன. ஸ்வாமி, எவர்களுக்குத் தங்க ளுடைய பாத பங்கஜங்களின் மீது அனன்ய பக்தி, பிரேமை

இல்லையோ, அவர்களுக்குச் சம்சாரக் கடலானது ஆழமாகவும் மத்ஸயங்கள் நிரம்பி மஹா பயத்துடன் விளங்குகிறது.'' (105)

''அப்பேற்பட்ட நிர்மலமான பக்தியில்லாதவர்கள் பாக்ய ஹீனர்கள். ஸதா துக்கங்களை அனுபவிப்பதற்கு யோக்யமான வர்கள்தான். ஆனால் தீனர்களாகவிருந்தும் தங்களுடைய பாத பத்மங்களில் பிரேமையை எவர்கள் செலுத்துகிறார்களோ, அவர்கள் கடினமான ஆபத்துக்களையும் தாண்டுகிறார்கள். தங்க ளுடைய பாத பத்மங்களையே நம்பி வாழும் தன்யர்கள் ஸதா தங்களுடைய கதாம்ருதத்தைப் பருகி, அதையே அவலம்பனம் செய்துகொண்டு, தங்களையும் தங்களுடைய அடியார்களையும் பிரேமையுடன் நேசித்து, இன்புறுகிறார்கள். அப்பேற்பட்ட ராம கதா ஸுதாவைப் பருகும் உம்முடைய பக்தர்களிடம் ஸதா தாங்கள் ப்ரேமை மயமாகவும், க்ஷமா பூர்ணமாகவுமிருக்கி றீர்கள்.'' (106)

அந்த மஹானுபாவர்களுக்கு உம்மைத் தவிர வேறு பரமார்த் தம் கிடையாது. வேறு ஆசைகளுமில்லை. அவர்களுக்கு ராம பக்தியே ஸாம்ராஜ்யம் ஆனபடியால் மற்றவர்களிடம் அசூயை, லோபம், மானம், கௌரவம், மதம், ஸ்வ அபிமானம் யாவும் கிடையாது. அவர்களுக்கு ஸம்பத்தும் ஆபத்தும் சமமாகவிருக் கிறது. துக்கமும் சந்தோஷமும் அவர்களைப் பாதிக்கிறதில்லை. தங்களுடைய ஸங்கல்பத்தின்படி அவர்கள் வசிப்பதால் நடந்து கொள்ளுவதால், அவர்களுக்கு ''ராமன் எல்லாவற்றையும் நடத் திச் செல்கிறான்; அவனே நம்மை ரக்ஷிப்பான்'' என்கிற மஹா விஸ்வாசமிருக்கிறபடியால் அவர்கள் கவலையற்று வாழ்கிறார்கள். அப்பேற்பட்ட முனி ஸ்ரேஷ்டர்கள் யோகம், தவம் முதலியவற் றைத் தியாகம் செய்துவிட்டு அதி பிரேமையுடன் தங்களுக்குக் கைங்கர்யம் செய்து வாழவேண்டும் என்று ஒரே ஆசையுடன் வாழ்கிறார்கள்.'' (107)

''ராமா, அவர்கள் அதிப்ரேமையுடன், நியம நிஷ்டை மாதிரியும், ஸகலவிதமான ஆசார சுத்தத்துடனும், மன சுத்தி யுடனும், தங்களையும் தங்களுடைய பாத பங்கஜங்களையும் ஆரா தனை செய்துகொண்டு, ஸதா தங்களுக்கு அனுகூல மனத்தினர் களாகவும் பிரியமுள்ளவர்களாகவும், நடந்துகொள்ளுகிறார்கள். அவர்களுக்கு ஸ்ரீராமனே எல்லாம். மானம் அவமானம் என்பது அவர்களுக்குக் கிடையாது. எல்லாம் ஸமமாகவும் ஒன்றாகத் தானுமாகவுமிருக்கிறது. அப்பேற்பட்ட மஹான்கள் எல்லாவற் றையும் ராமன்தான் நடத்தி வைக்கிறான், என்கிற மனோபாவத்

துடன் பரமசாந்தியுள்ள மனத்துடன் சந்தோஷமாக உலகத்தில் திரிந்துகொண்டு வாழ்கிருர்கள்.'' (108)

[தியானம்

சங்கர பகவானே, கிருத்திவாஸரே, நாராயண ப்ரீதிக்காக ஸதா பாடுபடுகிற பிரபு, உமாபதி, உமாகாந்தரே, லோககுருவே, ஆஞ்சநேய ஹ்ருதயரே, உம்மை சரணமடைந்தால் அல்லவோ, மனிதனே, தேவனே, ரிஷியோ, முனிகணமோ, ராக்ஷஸர்களோ, அசுரர்களோ சீதாராம பதாப்ஜங்களை அடைய முடியும். மஹா பரோபகாரியான உம்முடைய உள்ளம் அதிகோமளத்வமும், அதி நளினத்வமும் கொண்டது. விருஷபத்வஜரே, விருஷபவாஹனரே, ஸதா ராம கதை, ராம தியானம், ராம கைங்கரியம், இவைகளில் அதிகப் பற்றுதலுடன் உலகத்தை உலகத்தின் நன்மைக்காக செழிக்க வைக்கிறீர். லலாடாக்ஷரே, விரூபாக்ஷரே, கங்காதரரே, நாகாபரணரே, உம்முடைய ஆனந்த சேர்க்கை பெற்ற ஹிமவத்புத்ரியான உமை, பார்வதி, உம்முடைய விரதமாகிற ராமநாம ஜபம், ராம பராயணம் எனப்படும் ராமனையே பரதத்வமாகக் கருதி, ஸர்வத்தையும் ஸ்ரீசீதாராமனுக்கு அர்ப்பணம் செய்து நித்ய ராம பக்தர்களாக வாழ்வது உம்முடைய திருவுள்ளத்திற்கு மதிப்பு கொடுப்பதற்கல்லவா? சக்தி தெய்வம் எனப்படும் உமாபதி, ஜைகீஷவ்யர் ஆணிமாண்டவ்யர், மார்க்கண்டேயாதிகளால் ஸதா வணங்கப்படும் நீர், தேவர்களாலும் அசுரர்களாலும் ஸ்தோத்ரம் செய்யப்பட்டு, அவரவர்களுக்குத் தக்கபடி ஸம்மானிக்கிறீர். உம்முடைய யோக நியமங்கள், சங்கீத சாஸ்திரத்தின் மர்மஞானங்கள், பக்தியுடன் செய்யப்படும் தியாகங்கள், ஆச்சரியகரமாக விருக்கின்றன. அவைகள் சங்கர பகவானை என்றும் என் ஹ்ருதயத்தில் வீற்றிருக்கச் செய்கின்றன. அன்று ராமானுஜர் வைஷ்ணவ ஸம்பிரதாயத்தை வளர்க்க எண்ணம் கொண்டு, ஸ்ரீரெங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாயகரை பங்குனி உத்திரத்தில், ஸ்ரீரங்க மஹா க்ஷேத்ரத்தில் சரணகதி அடைந்தாரே, அதைப்போல அல்லவா, பகவான் சங்கரர் லோக ஹிதத்திற்காகவும், நித்ய ஸம்சாரிகளுக்கு மோக்ஷ பதமாகிற ஸ்ரீராம பதத்தை அளிப்பதற்காகவும், அயோத்யாராமனை பட்டாபிஷேக கோலத்திலிருக்கும்போது, சரணமடைந்தார். ராமதாரக விசேஷத்தினுலும் அன்று சீதாபிராட்டியுடன் கூடிய ஸ்ரீராமனுடைய வரதானத்தின் மகிமையினுலும் அல்லவா கருணாநிதியான மஹேஸ்வரர் காசியில் உமையுடன் கூடி மரித்துப்போன ஜீவர்

களுக்கு நித்யமான வைகுண்டபதமாகிற சீதாராமபதத்தை இன்றும் அளித்துக் கொண்டிருக்கிறார்.! "சங்கர உள்ளம்" என்று சொல்லப்படும் மிக்க காருண்யமய செய்கைகளாலே, பகவான் சங்கரர் ஆசுதோஷி என்கிற பட்டப் பெயரையும் பெற்றார். துளசிதாஸருக்கு அனுக்ரஹித்த காசி விஸ்வநாதரே, ஸ்ரீகரரே, ஸ்ரீதாமரே, உமாகாந்தா, சந்திரகலாதரரே, பத்மலோசனரே, மஹா யோகீஸ்வரரே, தர்ம ஞானபூதரே, உம்முடைய மங்கள கரமான பதாப்ஜங்களை என் முடிமேல் வைத்து அனுக்ரஹிக்க வேண்டும். ஊர்வசி கிருதாசி முதலிய அப்சரஸ்களாலும், நாக, யக்ஷ, கின்னர கந்தர்வர்களாலும் ஸேவிக்கப்பட்ட உமா மஹேஸ்வரர்களே, நீங்கள்தான் எனது தஞ்சம். நீங்களே என் மார்க்க பந்துக்கள். நீங்களே எனது ஞான போதகர்கள். தீனனை என்னிடம் நீங்கள் கிருபையுடன் இருக்கவேண்டும்.]

"ஹே ராமா சீதாபதே, மஹா யோகீஸ்வரர்களின் மனமாகிற பங்கஜத்தில் சிந்தும் தேனைப் பருக ஓடிவரும் வண்டே, முனி மானஸ பங்கஜப் ப்ருங்கமே, உன்னுடைய தாஸ உள்ளத்தையும் சௌலப்யாதி வாத்ஸல்ய குணங்களையும் பூர்ணமாக யாரால் வர்ணிக்க முடியும்? ரகுவீரா, ரணதீரா, யாவராலும் அவமதிக்கப் பட முடியாத அஜரே, பிரகிருதி, மஹத், அஹங்காரம், ஐந்து பூதங்கள், ஐந்து தன்மாத்திரைகள், ஐந்து ஞானேந்திரியங்கள் ஐந்து கர்மேந்திரியங்கள், மனம், புருஷன் எனப்படும் ஜீவாத்மா, ஆகிற இருபத்தைந்து தத்வங்களின் முடிவில் இருபத்தாருவது தத்வமாகக் காணப்படும் ஸ்ரீமந் நாராயணா, பிரணவத்தின் அகாரமாக விருப்பவரே, மன்மதனை உண்டுபண்ணின அஜிதரே, வைகுண்டபதியே, நான் ஸதா உம்மை சரணமடைந்து, உமது நாமமாகிற ஸ்ரீராம நாமத்தை ஜபித்துக்கொண்டு நமஸ் கரிக்கிறேன். நீர்தான் என்னை ரக்ஷிக்கவேண்டும். ஸம்சார நோயாகிற ஜனனமரணம் என்னும் சுழல்களிலிருந்து விடுபடுவதற்காக ஔஷதம் போன்று தாங்கள் விளங்குகிறீர். தன்வந்தரியே, அம்ருதரே, அம்ருத்யுவே, ஸர்வத்ருக் நரசிம்மரே, உம்மிடம் நாங்கள் ஸதா அபிராமிகளாக இருக்கும்படி, கிருபை செய்யவேண்டும்." (109)

"ஹே ராமச்சந்திர பிரபோ, தாங்கள் ஸர்வ கல்யாண ஸத்வ குணங்களுக்கும், கிருபை என்று சொல்லப்படும் பரம அபராதிகளிடமும் பொறுமையையும் க்ஷமையையும் அனுக்ரஹத்தையும் வ்ரதமாகக் கொண்ட பரம மங்கள மூர்த்தியாக விளங்குகிறீர். நீங்களே எங்களுக்குப் பரம உத்தம ஸ்தானமாக விருக்கிறீர்.

ஹே ராம், ஜயராம், ஜயஜயராம், ஸர்வ மங்களங்களுக்கும் மூல்ய மான மஹாலக்ஷ்மி அகலகில்லாமல் ஸதா நித்யவாஸம் செய்யும் நித்ய ஸ்ரீ நித்ய மங்கள மூர்த்தியே, உம்மையும் மஹாலக்ஷ்மியை யும் நாங்கள் ஸதா நமஸ்கரிக்கிறோம். நாராயணரே, ரகுநந்தரே, ஜனனம் மரணம் சுகம் துக்கம், ராக த்வேஷமாகிற வெறுப்பு விருப்பு ஆகிய இரட்டைகளிலிருந்து எங்களை விடுதலை செய்ய வேண்டுமென்று பிருர்த்திக்கிறோம். ஸார்வபௌமரே, மஹீ பாலரே, தரணிதரரே, பூமியை ரக்ஷித்து, ஸர்வ அநிஷ்டங்களை யும் நாசம் செய்யும் ஆதிவராஹ மூர்த்தியே, தங்களுடைய க்ருபாதிருஷ்டி, தீனர்களான மனிதர்களிடமும் சராசரங்களின் மீதும் விழட்டும்.'' (110)

'' நாங்கள் அடிக்கடி அடிக்கடி மஹா பிரபுவாகிற தங்களைப் பிரார்த்தித்துக் கொள்கிறோம். (ஹே ரெங்கநாயகி ஸமேத ரங்கநாதரே,) எங்களுடைய பிரார்த்தனையை மன சந்தோஷத் துடனும், தயையுடனும் அங்கீகரிக்க வேண்டும். தங்களுடைய பாதசரணங்களில் அசஞ்சலமானதும், திடமானதுமான பக்தியையும், பிரேமையையும் வளர்க்கும்படி அனுக்ரஹிக்க வேண்டும். தங்களை அடைந்த பின்பு, தங்களுடைய ஸம்பந்தம் விட்டு விலகாமல் இருப்பதற்கும், நித்ய அனபாயினியாக பக்த ஸம்பந்தம் பெருகி விளங்குவதற்கும், ஸதா ராமபக்தி செய்யும் ஸாதுக்களுடைய ஸங்கமத்தையும், ஸ்நேகத்தையும் அளிக்கும் படி அனுக்ரஹிக்க வேண்டும். பிரபு, ஸதா எங்களிடம் கருணையைக் காட்டி, எங்களைப் பொருளாக்கி வந்துய்யக் கொள்கின்ற நாதா, பரம குருவாக வந்து, அறுதிஜன்ம பரம் பரைக்கு முடிவாக, தங்களுடைய திருவடி ஸம்பந்தத்தைக் கொடுத்து, ரூபமும், நாமமும், ஸாந்நித்யமும் எங்களுக்கு அருளிச் செய்து, அனந்தமான ஆராவமுதக் கடலிலே எங்களை இன்புறச் செய்யவேண்டும்.'' (ஸ்ரீரங்கதாம், ஸ்ரீரங்கராஜனே, லக்ஷ்மிபதி, கிருபையைச் செய்யவேண்டும். இவ்விதமாக பகவான் ராமச்சந்திரனுடைய அருளைக் கதி யென்றும், மற்றொன்றிலும் இச்சையில்லாமல் ''உன் சரணே சரண்'', என்று திருமாலை அடைக்கலம் செய்த உமாமஹேஸ்வரர்களின் ஹ்ருதயத்தையும், உதார பக்தியையும் எவ்விதம் வர்ணிக்கக் கூடும்? அப்பேற்பட்ட மஹானுபாவர்களை சரண் அடைந்து, ஸ்ரீ சீதாராம சரணங்களே சரண் என்று துணிவு பூண்ட என்னை யும் ஒரு பொருளாக மதித்து கடாக்ஷிக்கமாட்டீர்களா?) (111)

இவ்விதம் உமாபதி, உமையுடன் கூடியவராக, ஸ்ரீராமனுடைய அனந்தமான கல்யாண குணங்களை மிக்க சந்தோஷத்துடன் வர்ணனை செய்து, ஆனந்தக்கீர்த்தனம் செய்துவிட்டு, ராகபாவ தாளத்துடன் மனமுருகி ஸ்துதி கானம் செய்தார்கள். அதன் பிறகு மஹாதேவர் ஸ்ரீ சீதாராமனிடம் விடைபெற்றுக் கொண்டு, உமையுடன் விருஷபத்தின் மீது ஏறி கைலாஸத்திற்கு திரும்பிச் சென்றார். அதன் பிறகு ஸர்வ கல்யாண ஹ்ருதயமுள்ள பிரபு ஸ்ரீராமன் வானரங்களை அழைத்து, அவர்கள் சௌக்யமாகவும், சந்தோஷமாகவும் வாழ்வதற்கு, சுக ஸ்தானங்களை ஏற்படுத்தி, அவர்களை ஆனந்தமூட்டினார். ('கிருபாளு ராமா, சீதா, என்னிடமும் உன் தயை விழட்டும்''.) (112)

''கருடரே, கேளும். இப்பேற்பட்ட பரம பவித்திரமான ராமகதை எல்லோருக்கும் அம்ருதத்தைப் போல, ஆனந்த சுகத்தைத் தரக்கூடியது, ஸம்சாரத்தில் ஏற்படும் ஆதி ஆத்மிக, ஆதி தைவிக, ஆதி பௌதிக தாபங்களை சமனம் செய்து, அவர்களுடைய பயங்களை விலக்கி, ஜன்ம மிருத்யு சுழல்களிலிருந்து விடுதலையை அளிக்கிறது. எந்த மஹா உத்தமர்கள் ஸ்ரீராமன் மஹாராஜ பட்டாபிஷேகத்தைச் செய்து கொண்ட உத்ஸவத்தில் சுபமாக விளங்கும் அபிஷேக கட்டத்தைக் கேட்கிறார்களோ, அந்த பாக்யமுள்ள மனிதர்களுக்கு வைராக்யமும், ஞானமும் சுலபமாகக் கிடைக்கின்றன, (ஹே ராமா, சீதாபதி, என்னிடமும் இந்தக் கருணையைக் காட்டவேண்டும். நீங்கள்தான் என் நெஞ்சம்.) (113)

[தியானம்

உமாதேவி, பார்வதி, சங்கரமனோஹரி உன்னை கணேசர், குஹன் முதலியவர்களை புரம் வைத்து நமஸ்கரிக்கிறேன். உன் பதிப்ரேமை, ஆஸ்ரிதவாத்சல்யம், உதாரமானது. தர்மத்தில் சிரத்தை, பொறுமை, திருதி, சக்தியாகவும் புகழும்படி இருக்கிறது. தர்மவத்ஸலை, உன்னுடைய பரபக்தி, சீதாராமனிடமுள்ள ஆழ்ந்த விஸ்வாஸம், சரணமடைந்தவர்களிடம் நீ காட்டும் அன்புள்ளம், உனக்கே விலக்ஷணமாகவுள்ள ஞானம், வைராக்யம் எல்லாம் மஹத், பிருஹத் சப்தங்களால் அறியக் கூடியதாக விருக்கின்றன. சாம்பசிவனிடம் நீ காட்டும் ஆழ்ந்த பக்தியின் அர்த்தம் என்ன ? அவனுடன் ஸதா கூடியிருப்பதில் அர்த்தம் என்ன ? ஸ்ரீயப்பதியாக விளங்கும் அயோத்யா ராமன்,

அவாப்தஸமஸ்தகாமனுய், மாறி மாறிப் பல பிறப்பு பிறந்து, அடிக்கடி ஸாது ஸம்ரக்ஷணுர்த்தம் அவதாரம் செய்து, எங்களைப் போல நித்ய ஸம்சாரிகளை விசேஷ கடாக்ஷம் செய்வதற்காக வல்லவா நாராயணி, நீ பகவான் சங்கரருடன் கூடி, ஸ்ரீ சீதாராம னிடமிருந்து எங்களுக்காக வரம் பெற்றுக்கொண்டாய்? பகவான் சங்கரரை அனன்ய பக்தியுடன் காதலித்து, சீதாராமனிடம் அனன்ய சரணத்வம் என்கிற விரதம் பூண்டு, சீதாராமனின் கிருபையால் மஹேஸ்வரரை நித்ய சாக்ஷாத்காரமாக அடைந் தாய். அதுமாத்திரமா, தேவி, விவேக உருவாகக் கொண்டு, அருவாயும், உருவாயும் உள்ள இப்பிரபஞ்சத்தை வாழ்விக் கிருய்; சச்சிதானந்த பரபிரும்மமே, என் அம்மா, கர்மஞான பக்தியின் விசேஷத்தால், ஸர்வேஸ்வரனுடைய அருளாக நின்று, அதனடியாகப் பிறந்த பல பாபாத்மாக்களுக்கும், அறிந்தார், பிறந்தார், உயர்ந்தே என்கிறபடி, ஸம்சாரத்தில் பிறந்து அவதிப் படும் என் போன்றவர்களை, பிறந்தே உயர்ந்தார் என்கிறபடி நீ விமர்சனம் செய்கிருய் அம்மா. நாதரூபசுந்தரி, ஓங்காரிணி, உன்னுடைய ஸ்வரூப ஸ்வபாவாதிகளை அறியாமல், சீதாராம படியில் ஏறமுடியாது. எதை அறியவேண்டும், எது புண்யம், எது பாபம், எந்த கர்மாக்கள் சிறை போலிருக்கும், எவை மண்ணுலக வாழ்வை உய்யப்பண்ணி, திருமாமகளின் கிருபையை அடையச் செய்யும் என்பது எல்லாம், உன்னுல் அல்லவா சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. மஹேஸ்வரருக்குப் பெருமை அளிக்கும் புண்யா, வேதம் கூறும் வழியைப் பின்பற்றினுலன்றி, வேறு வழியில்லை என்று நீதானே ஹைமவதி யாக இந்திரனிடம் கூறினுய். ஸம்சார சுகம் அல்பம், அதைவிட மோக்ஷ சுகம் பெரிது; அதை அடைவதற்கு சீதாராம பதங்களே நிலையுள்ளவை. அந்த இறை நிலையை அறிந்தவர்கள், பெரிய பெருமாளின் மெய்ப்பதங்களைக் கண்டவரே, என்று அருள் கொண்டு எனக்குப் போதித்தாயே. கோமாதா, விருஷதர்ப்பிணி, ராஜராஜேஸ்வரி, குஹமாதா, பிரணவரூபிணி, பழமறையின் பரம நெறியாக விளங்குபவளே, நான் செய்யும் பிரபத்திக்கு உன்னுடைய திவ்ய பாதங்களைத் தா. காமாக்ஷி, மீனுக்ஷி, கஞ்ச தளாயதாக்ஷி, திருமால் அடிகளைச் சேர்க்கும் உனது கிருபையை எனக்குத் தரவேண்டும். அம்மா நீதானே மந்திர ஸ்வரூபிணி, தந்திர ஸ்வரூபிணி, யந்திர ஸ்வரூபிணி, உன் கிருபை ஒன்றே எனக்குப் போதும்.]

எந்த மஹா பாக்யவான்கள், சீதாராம பட்டாபிஷேகம் என்கிற சக்கிரவர்த்தித்திருமகனின் அரசு ஏறும் கட்டத்தை அர்த்தபாவத்துடன் கேட்கிறார்களோ, கேட்கச் செய்கிறார்களோ, ஆனந்தக்கீர்த்தனம் செய்கிறார்களோ, அவர்கள் நானாவிதமான ஸம்பத்துக்களையும், ஐஸ்வர்யங்களையும் சுலபமாக அடைகிறார்கள். தேவர்களுக்கும் கிடைக்க அரியதான போக போக்யங்களையும், அவர்கள் இந்த ஜகத்தில், இந்த ஜன்மத்திலேயே அடைகிறார்கள். அதன் பிறகு அவர்களுக்கு அந்திம காலத்தில், ரகுபதியினுடைய அனுஸ்மரணை விமலபுத்தியினால் யேற்பட்டு, சீதாராமபதத்தை சுலபமாக அடைகிறார்கள்.'' (பார்வதி, தயாபரி, சித்தேஸ்வரி, ஞானவைராக்ய பூஷிணி, சங்கரரின் மஹிஷியே, ஜானகியே, உன் கிருபையினால் சீதாராமனுடைய கிருபைபிறக்க வேண்டும். தயை செய் அம்மா. காமாக்ஷி.) (114)

''இந்த உத்தம ராம சரித்திரத்தை ஜீவன்முக்தர்கள் கேட்பார்களாகில், அவர்களுக்கு சீதாராமனிடம் நிச்சய புத்தியுடன் கூடிய திருடமான பரமபக்தி யேற்படுகிறது. மோக்ஷத்தை விரும்பிக் கேட்கும் வைராக்ய மனம் படைத்தவர்கள் முக்தியை அடைகிறார்கள். விஷய போகங்களில் ஆசைப்படுகிறவர்கள், இந்த புண்யமான சரித்திரத்தைக் கேட்டால், புதிது புதிதான போகங்களையும், அனுத்தமமான ஸம்பத்துக்களையும் தினே தினே அடைகிறார்கள்.'' காகபுசுண்டி கருடனிடம் மீண்டும் சொன்னார் :—''கருடமஹாராஜரே, என் புத்திக்குத் தக்கபடி ராம கதையை நான் தங்களுக்கு வர்ணித்தேன். என்றால் சொல்லப்பட்ட ராம கதாம்ருதம் ஸர்வ பயங்களையும் நாசம் செய்து, ஸகல துக்கங்களையும், பாபங்களையும் போக்கி, மட்டற்ற ஆனந்தத்தைக் கொடுக்கும்''. (115)

''இந்த மஹா ஸ்ரேஷ்டமான ராம கதாம்ருதம் மனிதர்களுக்கு விஷய போகங்களில் வைராக்யத்தையும் விவேக புத்தியையும் பகவான் ஸ்ரீராமச்சந்திரனிடம் அசஞ்சலமான பரமா பக்தியையும் அளிக்கக் கூடியதாக விருக்கிறது. அதே மாதிரி, மஹா மோஹம் என்கிற ஆழமான நதியைக் கடக்கவல்ல அழகான ஓடத்தைப் போல விருக்கிறது. ராமனும் சீதையும் பட்டாபிஷேகம் செய்துகொண்ட தினத்திலிருந்து, அயோத்யா பட்டிணத்தில் நித்யோத்ஸவ, பக்ஷோத்ஸவ, மாதோத்ஸவங்கள், யேற்பட்டு, ஜனங்கள் ஒரே ராமானந்தமயமாக வாழ்ந்து வந்

தார்கள். ஸகலரும் ஆனந்தத்தினுல் சந்தோஷத்துடன் பூர்ண காமர்களாக வாழ்ந்து வந்தார்கள்.'' (116)

ஸ்ரீ சீதா ராமச்சந்திரனின் பாத பங்கஜங்களில் ஸகல அயோத்யா வாசிகளும் ப்ரேமையுடன் ஈடுபட்டு ஆனந்தித் தார்கள். உமா மஹேஸ்வரர்கள், ஸனகாதி, நாரதாதி முனீஸ் வரர்கள், சரஸ்வதியுடன் கூடிய பிரும்மா முதலியவர்கள் தினம் வணங்கி ஸ்துதி செய்து, புதிது புதிதான ஆனந்த அனுப வங்களே அடைகிறது மாதிரி, அவர்களும் அடைந்தார்கள். அப்பேற்பட்ட பரம போக்யமான ஸ்ரீராம பதங்கள் ஸகலருக்கும் ஸர்வ அபீஷ்டங்களேப் பூர்த்தி செய்து அவர்களேப் பூர்ண காமர்களாக ஆக்குகின்றன. (அப்பேற்பட்ட சீதாராம பாதங் களுக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். தியாகராஜ துளசிதாஸ, கம்பர், வால்மீகி, வேத வியாஸாதிகள் ஸதா தியானம் செய்து ஆராதனம் செய்த ஸ்ரீராம பாதங்களே என் மன உல்லாஸத்திற்கும், சாந்தி பராயணத்திற்காகவும் நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன் ) அப்பேற்பட்ட புண்ய மஹோத்ஸவத்தில் பகவான் ஸ்ரீராமச்சந்திரன் பிக்ஷுக்களுக்கும், பிராம்மணர்களுக்கும் வஸ்திரங்கள், ஆபரணங்கள் போன்ற நாஞ பிரகாரமான தானங்களே அமோகமாகச் செய்தார். (117)

ஸகல வானரங்களும் பிரும்மானந்தமாகிற சீதாராம ஸ்நேகத்தையும், சௌலப்யத்தையும், வாத்ஸல்யத்தையும் அடைந்து, ஸதா இன்புற்றிருந்தார்கள். அந்த மஹானுபாவர் களுக்கு பிரபுவினிடம் பரபக்தி, பரஞானம், பரமபக்தி யேற்பட்டு, பிரபுவை ஸ்துதி கானம் ஸதா செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு காலம் போனதே தெரியவில்லே. வர்ஷங்கள் மாதங்களாகவும், மாதங்கள் தினங்களாகவும் சென்று கொண் டிருந்தன. இவ்விதமாக பேச்சு வாக்கில் ஆறு மாதங்கள் ஓடிச் சென்றன. (118)

அவர்களுக்கு தங்களுடைய சொந்த கிரஹம் மறந்தே போய் விட்டது. அவர்களுக்கு ஸ்வப்னத்தில் கூட தங்கள் கிரஹத்தைப் பற்றி நினேவே இல்லே. அதைப் பார்த்தால் ஸாதுக்களுக்கு பரத்ரோஹ சிந்தனே எவ்விதம் அணுகாதோ, அதைப் போல சீதாராமா ஸந்நிதானத்தைப் பெற்ற அவர்களுக்கு தங்களுடைய கிரஹத்தின் கவலேகளே தோன்றவில்லே. இவ்விதம் பல நாட்கள் சென்றன. ஒரு நாள் ரகுபதி தன்னுடைய சகாக்கள் அனேவரையும் அழைத்து, அன்புடன் பேசலாஞர். அவர்கள்

அனைவரும் பகவானுடைய வார்த்தைகளை மிக்க மரியாதையுடன் தலை வணங்கி, கேட்க ஆரம்பித்தார்கள். (119)

[தியானம்

சூர்ய நாராயணா, அமேயாத்மா, விஸ்வாத்மா, ஸர்வசாக்ஷி, ஜகத்சக்ஷீ, நீதானே அப்பா என்னுடைய பராயணம். நீதானே வைஷ்ணவி என்கிற காயத்திரி ஸாவித்திரி, ஸரஸ்வதி தேவி. ஸர்வேஸ்வரி, ஆதிசக்தி தேவதையே, நீதானே பரம தேஜஸ் என்று சொல்லப்படும் ஜ்யோதீஸ்வரி. பிரபு, தாங்கள் ஸுதர்சனம் என்கிற காலசக்கரம். தாங்களே ஸர்வக் கலையுடன் கூடிய ஸநாதனமான தர்மம். உம்மை ஸ்மரிப்பதால், ஆரோக்யமும், ஐஸ்வர்யமும், மேதையும், யுத்தத்தில் வெற்றியும், இன்ப சுகமும் யேற்படுகிறது. ஹே பிதா, பிதா மஹர், பிரபிதாமஹர் என்கிற முந்தின மூன்று தலைமுறைகளையும் புத்ரன், பௌத்ரன் என்கிற பிந்தின தலைமுறைகளையும் காப்பாற்றும் ஆர்யமா, உம்மைச் சரணமடைந்தவர்களை பெரிய ஊக்கத்துடனும் ஸம்ஸாரமென்னும் படுகுழியிலிருந்து கரையேற்றி தம்மிடம் சேர்த்துக் கொள்ளும் அநிர்விண்ணர் நீர்தானே. அன்னமே, அன்னதாதா, ஐஸ்வர்யம், பலம், ஞானம், வீர்யம், சக்தி, தேஜஸ் ஆகிற ஆறு குணங்களும் அளவற்ற கடல்கள் போல நிரம்பியிருக்கும் உம்முடைய திவ்ய மங்கள விக்ரஹம் எனக்கு பயத்தையும் பாபத்தையும் போக்கி, உம்மிடம் ஸதா நம்பி வாழும் பக்தனாக விருக்கக்கடச் செய்வீர். ரகுகுலராமா, ரகோத்தமரே, அகஸ்திய தர்ம புத்ராதிகளால் வணங்கப் படுபவரே, வஸிஷ்டருக்கும் த்ரௌபதிக்கும் பிரத்யக்ஷமானவரே, ஆதித்யரே, த்வாதசியில் த்வாதசாதித்யராக விளங்கும் ஸ்ரீராமா, ஸாதுக்களைக் காப்பதில் இமை கொட்டாமல் ஸர்வ ஜாக்ரதையாக விருப்பதால், நீர் அநிமிஷர் என்கிற பெயர் பெற்றிருக்கிறீர். சரணாகதியடைந்த என்னிடம் மிக்க கிருபையுடன் இருக்க வேண்டும். வாலகில்யர்கள் அப்சரஸ்கள் நாகயக்ஷ கந்தர்வர்கள், இன்னும் வேத வ்யாஸ பராசராதிகளால் கானம் செய்யப்படும் ருத்ரரே, ருக்யஜுஸ் ஸாம பாரகா: என்று உம்மை ஸ்துதி செய்து என்னையும் ரக்ஷிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். ரகுகுல த்வஜரே, தர்மத்வஜரே, எனது மோக்ஷத்வாரமே, கிருபை செய்ய வேண்டும்.]

அந்த வானரங்கள் பரம ஸௌலப்யத்துடன் அன்னதர்தாவாக விருக்கும் ரகுகுல ராமனின் காலடியில் அதி ப்ரீதியுடன்,

உட்கார்ந்து கொண்டார்கள். ராமன் தனது பூர்ணமான அன்பினால் அவர்களை கிருபையுடன் நோக்கினார். பக்த பராதீனரான ரகுகுல ராமனின் அருள் நோக்கு கொண்டுள்ள வானராதிகள் அத்யந்த சுகத்தை யடைந்தார்கள். அவர்களுடைய ஆனந்த இன்பநிலை உச்சத்தை அடைந்திருந்தது. அவர்கள் மிருது பாஷணனான ஸ்ரீராமனின் வசனங்களை அதி வினயத்துடன் கேட்டார்கள். மதுர பாஷியான ஸ்ரீராமன் சொன்னார். "ஸகாக்களே, பந்துக்களே, உங்களால் எனக்கு மஹத்தான ஸேவை, கைங்கர்யங்கள் செய்யப்பட்டன. நான் உங்களிடம் கிருதக்ஞை பூர்வமாக அனுக்ரஹ சிந்தையுடன் இருக்கிறேன். உங்களுக்கு நான் எவ்விதம் பிரதி உபகாரம் செய்து என் கடனைத் தீர்த்துக் கொள்வேன்? எனது அபிப்ராயத்தில் உங்களுக்கு என் கடனை வார்த்தைகளால் சொல்லி, நான் எவ்விதம் விவரிப்பேன்?" (120)

"பிரியர்களே, என் ஹிதத்திற்காக நீங்கள் எல்லோரும் வீடு, மனைவி, புத்ரன், முதலியவற்றைத் துறந்து, உங்களுடைய தேக சிரமத்தையும் பாராமல், ஆகாரம், நித்ரை, போகங்கள் முதலியவற்றைத் தியாகம் செய்து விட்டு, எனக்காக மிக்க பரிஸ்ரமத்துடன் கைங்கர்யம் செய்திருக்கிறீர்கள். அதனால் நீங்கள் என்னுடைய ஆத்ம பந்துக்களாக விருக்கிறீர்கள். என்னுடைய வாழ்க்கையில் எனக்குப் பிடித்த மானவர்கள் பல பேர்கள் இருக்கின்றனர். என் தம்பிமார்களையும், ராஜபதத்தையும், அஷ்ட ஐஸ்வர்யாதிகளையும், நான் நேசிக்கிறேன். இதோ என் பிரிய மனைவியான வைதேஹியும் இருக்கிறாள். என் சொந்த தேக சுகங்களும் என்னுடன் கூடவாழும் தாய்மார்கள், சகாக்கள், பந்து மித்ரர்கள் ஆகிய அனைவரும், (121)

எனக்கு மிக்க பிடித்தவர்கள் தான். ஆனால் அவர்கள் எல்லோரையும் விட உங்களிடம்தான் எனக்கு அதிகப் பிரியம்." மதுரபாஷணனான என் பிரபு ஸ்ரீராமன் அதிகிருபாவேசம் அடைந்து, மீண்டும் கண்களில் கிருதக்ஞை பூர்வமாக தாரை தாரையாக அம்ருதாம்சுகளை வர்ஷித்துக்கொண்டு மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். "பிரியர்களே, இவர்கள் யாவரிலும் உங்களுக்குச் சமமான பிரியர்கள், எனக்கு யாரும் இருக்க முடியாது. நான் உங்களை நேரில் கண்டு புகழ்கிறேன் என்று நினைத்துக் கொள்ளவேண்டாம். ஸத்யமாகச் சொல்கிறேன், இது என்னுடைய இயற்கையான ஸ்வபாவம். என் பிரிய சேவகர்

களிடம், நான் அதிகமாகப் பிரியத்தைக் காண்பிக்கிறேன். இது தான் எனக்கு நீதி நியமம். அவர்களிலும் என்னையே ஏக மாத்திரமாக நம்பி வாழும் தாஸர்களிடம் அதிகமானதும், ஸ்வ பாவிகமான பிரியம் கூட்டுவேன். அப்பேர்பட்ட உங்களுக்கு நான் ஸதா பிரியத்தைச் செய்வேன். (122)

"என் மித்ரர்களே, இப்பொழுது நீங்கள் விடை பெற்றுக் கொண்டு, உங்கள் கிரஹத்திற்குச் செல்லுங்கள். உங்கள் கிரஹங் களில் திருடமான நியமங்களால், என்னை ஸதா ஆராதித்து வாருங்கள். என்னை ஸர்வ வியாபகர் என்றும், ஸர்வஹிதர் என்றும், ஸர்வ சக்திமான், எங்கும் தடையின்றி செல்பவன் என்று நினைத்து, என்னை ஆராதித்து வாருங்கள். அதுவே உங்களை என்னிடம் எக்காலத்திலும் ஸாந்நித்யம் செய்ய வல்லது" என்று பூர்வபாஷண ராமன் அருளினர். (அப்பேற் பட்ட ராமனை, சீதாராமனை, வானரர்களை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன்.) (123)

[தியானம்

மஹாலக்ஷ்மி, என் தாயே, காமாக்ஷி, காமதாயகி, உனது கிருபை வேண்டும் அம்மா. அன்றொரு நாள் கோபிகைகள் கிருஷ்ணனை விட்டுப் பிரியும் போது, எவ்விதம் வருத்தத்தை யும், தாபத்தையும் அடைந்தார்களோ, அதைப்போல ராம அவதாரத்தில், வானரர்கள் ராமஸாந்நித்யத்தைவிட்டு, பிரிய மனமில்லாமல் வெகுவாக அழுதார்கள். ஸ்ரீராமனுடைய ஸ்நேக மானது, பாண்டவர்களிடம் கிருஷ்ணன் காண்பித்த ஸ்நேகத் தைப் போன்றது. புருஷோத்தமரான ஸ்ரீராமன், சீதையை அடைவதற்கு முயற்சி செய்தது, ருக்மிணியை கிருஷ்ணன் அடைவதற்கு எடுத்துள்ள பரிஸ்ரமத்தைப் போன்றது. தேவகி புத்ரனான கிருஷ்ணனும், பகவானான ஸ்ரீராமச்சந்திரனும், தாங்கள் அவதரித்ததற்கு யேற்ப, உல்லாஸமாய் லக்ஷ்மியான சீதையையும், ருக்மிணியையும், மதுர ஸல்லாபங்கள் செய்து கொண்டு, வானரர்களை, உமாசங்கரர் பிரமத கணங்களைக் கடாக்ஷிப்பது போலவும், பூமி நீளாதேவி ஸஹித ரெங்கநாச்சியா ருடன் கூடிய ஸ்ரீ ரெங்கநாதன், என் பேரருளாளன், நாத முனிகள், ஆளவந்தார், ராமானுஜாதிகளைக் கடாக்ஷித்தது போல ஒக்கும். ஸர்வேஸ்வரனாகிற ஹரியானவர் கிருஹஸ்தனாகவும், சக்கிரவர்த்தியாகவும், பக்தவத்சலனாகவும், உத்தமமான தர்மங்

களை அனுஷ்டித்துக்கொண்டு, மரியாதா புருஷோத்தம ராமனுக வும், பிரகாசித்துக் கொண்டிருந்தார். பசுக்களை வளர்க்கும் பிரபு, பசுக்களையும், ஸ்வர்ணத்தையும், வெள்ளியையும், பிராமணர் களுக்கும், யாசகர்களுக்கும் அமோகமாக தானம் செய்தார். ஜகத்பதியான பிரபு ராஜதர்மத்தை சரிவர அனுஷ்டித்துக் கொண்டும், ஜனகரைப் போல ராஜரிஷியாகவும் வாழ்ந்து வந்தார். தேவதேவா, உலகங்களுக்கு எல்லாம் நாதரே, கோவிந்தா, புருஷோத்தமா, நாராயணு, ஹ்ருஷீகேசா, சந்திரனை நேசிக்கும் ரெங்கநாதரே, உம்மை ஆயிரம் தடவை கள் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரிக்கிறேன். உமது திவ்ய நாம ஸங்கீர்த்தனம் செய்கிறவர்களுக்கு, அபரிமித புண்யத்தைச் செய்பவரே, அச்சுதா, அவ்யயரே, உமது கிருபையினுல் நான் எந்தவிடத்தில் இருந்தாலும், தங்கள் சரணுரவிந்தங் களை ஆஸ்ரயித்து வாழவேண்டும். சுக்ராசாரியார் பிருஹஸ்பதி போன்ற மஹா யோகிகளுக்கு எல்லாமாகவும், பதியாகவும் இருக்கும் வாஸுதேவா, ஸ்ரீ கிருஷ்ணு, ஸ்ரீராமச்சந்திரனுக்கு, மஹாலக்ஷ்மி நாயகனுக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய் கிறேன்.]

ஸகல வானரங்கள், ஸ்ரீராமனுடைய அபரிமித பிரேமை வாத்ஸல்யத்தினுல் கட்டுண்டு, என்ன சொல்வது, என்ன செய்வது என்று தெரியாமல் சில நிமிஷங்கள் பேசாமலிருந்தார் கள். "நாம் யார்? ஜாதியிலும் சபலபுத்தியிலும் தேர்ந்துள்ள வானரங்கள், இந்த ராமன் யார்? வேதங்களையும் அனுஷ்டானங் களையும் நிர்வஹிக்க வந்த புருஷோத்தம ராமன். நமக்கும் இவருக்கும் எவ்வளவு பெரியவித்யாஸம்? இந்த பிரபு இவ்விதம் நம்மிடம் பரிபூர்ண வாத்ஸல்யராகவிருப்பதற்கு நாம் என்ன கைங்கர்யம் செய்திருக்கிரும்? நமக்கு உயிரையும் பலத்தையும் உத்ஸாஹத்தையும் அளித்த பிரபு, இவ்விதம் ஸகலரும் பார்த்துக் கொண்டிருக்கும் போது பேசுவது அவருக்கே பொருத்தமானது. இவருடைய முன்னிலையில் அம்ருதமயமான கடாக்ஷ வீக்ஷண் யங்கள் விழும்போது, நமக்கு சிரமம் ஒன்றுமே தெரியவில்லையே. இவரைவிட்டு நாம் எவ்விதம் பிரிந்து வாழமுடியும்?" அவர்களின் கண்களிலிருந்து ஜலம் பெருகிக்கொண்டிருந்தது. மனத்தில் வரப்போகும் விரஹதாபங்களின் பயமும் அவர்களுக்கு யேற் பட்டது. ஸ்வராட், ஸர்வஸ்வதந்திரரான பகவான் தம் இச்சைப் படிதான் நடப்பார். இந்த எண்ணம் ஓங்க அவர்கள் கைகளை கூப்பிக்கொண்டும் கட்டிக்கொண்டும், தாஸ்ய கிங்கரர்களின்

பாவமாக பிரபுவின் கிருபையை நோக்கியவண்ணமிருந்தார்கள். ஒரு பக்கம் பிரேமை, மற்றொருபக்கம் கிருபையை வேண்டும் வினதி, தாஸ்ய உள்ளம். பகவத் ஸம்ஸ்லேஷத்தினுல் ஏற்படும் சுகம், விஸ்லேஷத்தினுல் ஸம்பவிக்கும் துக்கம், பயம் எல்லாம் அவர்களுடைய நினைவிற்கு வந்ததும், அவர்கள் தீனர்களாகத் தோன்றினுர்கள். "ஜனுர்த்தனரே உமது திருவுள்ளப்படி நடக்கட்டும். ஸ்வராட், நாங்கள் என்ன சொல்லக்கூடும்?" என்று தீனர்களாக பகவானையும் பிராட்டியையும் இமை கொட்டாமல் பார்த்தவண்ணமாக விருந்தார்கள். அவர்களுக்கு வார்த்தைகள் வெளிவரவில்லை. (124)

ஸர்வாந்தர்யாமியாகிற என் பிரபு ரகுநந்தனன் அவர்களுடைய அனுத்தமமான பக்திபிரேமையை பிரத்யக்ஷமாகப் பார்த்தார். அவர், அவர்களுக்கு விசேஷ ஞானத்தைப் போதித்தார். விவேக அறிவினுல் அவருடைய விஸ்லேஷ துக்கங்களைப் போக்குவதற்கு தமது நாம ஜபத்தையும், ஆச்சர்யகரமான கதைகளையும், பாகவதர்களின் ஸங்கமத்தையும் அதன் பெருமைகளையும் எடுத்துரைத்தார். பிரபுவினுடைய ஸாந்நித்யத்தில் அவர்களால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அடிக்கடி அடிக்கடி அவர்கள் பிரபுவின் புண்யமானதும், ஸரோஜ புஷ்பத்திற்குச் சமமான பாதசரணங்களைப் பார்த்துக்கொண்டே அவைகளே உபாயம், அவைகளே உபேயம்; (ஹிரண்யகர்ப்ப புருஷ அவ்யக்த ரூபியாகிற நாராயணன், வாஸுதேவர், சுத்த ஞான ஸ்வரூபமாக விருக்கிறபடியால்,) அவரை ஞானவிவேகத்தினுலும் பிராட்டியின் கிருபையினுலும்தான் அடையமுடியும் என்று எண்ணினவர்களாக பேசாமலிருந்தார்கள். (125)

அந்த சமயத்தில் பிரபு அநேக வஸ்திரங்கள், பட்டுப் பீதாம்பரங்கள் ஆபரணுதிகளை தரவழைத்து, அவர்களுக்கு வெகுமதிகளாகக் கொடுத்தார். அவருடைய உத்தரவின் பேரில் அவர்கள் நானுவிதம'ன பட்டுப் பீதாம்பரங்களை உடுத்திக் கொண்டும், மணிரத்ன முத்து ஸ்வர்ண ஆபரணங்களையும் அணிந்துகொண்டும் பரம சோபிதமாகவிருந்தார்கள். எல்லோரையும் விட சுக்ரீவ மஹாராஜாருக்கு முதலில் ஸ்ரேஷ்டமான ஆபரணங்கள் கொடுக்கப்பட்டன. பரதன் தன்னுடைய சொந்த திருக்கைகளால் சுக்ரீவ மஹாராஜரை அலங்கரித்தான். (126)

பிரபுவின் கட்டளையின்படி லக்ஷ்மணன் பட்டுவஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் விபீஷணனை அலங்கரித்தான்.

ரகுநாதனுடைய இஷ்டப்படி லங்காபதியை பலவிதமாக அலங்கரித்து அவரிடம் கூட்டிவந்தனர். விபீஷணனுக்கு அதனுல் மஹத்தான சந்தோஷம் ஏற்பட்டது. அங்கதன் மாத்திரம் வருத்தத்துடன் பேசாமல் உட்கார்ந்துகொண்டிருந்தான். பிரபு அவனுடைய ப்ரீதியைக் கண்டு அவனை அழைக்கவில்லை. (127)

அதன்பிறகு ஜாம்பவானும், நீலன், நளன் முதலியவர்களும் அலங்கரிக்கப்பட்டு, ஸம்மானிக்கப் பட்டார்கள். ரகுநாதன் தானே ஸ்வயமாக அவர்களை தனது திருக்கரங்களால் அலங்கரித்தார். அதைப்போல வானர பிரமுகர்கள் அனைவரும் அலங்கரிக்கப் பட்டனர். பிரபுவின் காரியத்தால் சகலரும் சந்தோஷமடைந்து, அவர்கள் பிரபுவின் பாத பங்கஜங்களை நமஸ்கரித்து ஸ்ரீராமனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை மனத்தில் தரித்துக்கொண்டு ஆனந்தத்துடன் விடைபெற்றுக் கொண்டார்கள். (128)

அந்தசமயம் அங்கதனின் கண்களிலிருந்து தாரை தாரையாக கண்ணீர்கள் உதிர்ந்தவண்ணமிருந்தன. அங்கதன் தீனமான ஹ்ருதயத்துடன், கரங்களை அஞ்சலி செய்துகொண்டு பிரபுவினிடம் வந்தான். பிரபு அவனைத் தழுவிக்கொண்டு, பிரியமான வசனங்களால் அவனை ஆஸ்வாசப்படுத்தினுர். அவனைப் பார்த்தால் பிரேமை ரஸமே உருவெடுத்து வந்தது போல விருந்தது. அவனுடைய ஹ்ருதயத்திற்கு ஏற்ப, பிரபு வார்த்தைகளைச் சொன்னுர். ("சீதாராமா, என்னிடமும் இந்தப் பிரியத்தை நீ காண்பிப்பாயா? உனது நட்பும், ஸ்நேகமும், பிரியமும் எனக்கும் கிடைக்குமா? ராமாசீதா, கிருபை செய்வீர்களாக?") அங்கதன் மனம்தாங்காமல் மீண்டும் வசனங்களைச் சொன்னுன். (129)

[தியானம்

"நாராயணு, நீர்தான் அவ்யயமான நிதி. எக்காலத்திலும் வைத்துக் காப்பாற்றவேண்டிய பரமார்த்தம். நீர்தானே ஆதி சேஷன், விஷ்வக்ஸேனர், கருடாதிகளால் எப்பொழுதும் திருவடி பணிந்த ஸ்ரீபதி நீர்தானே. ஜயந்தரே, ஜயசப்தம் உள்ளவரே, பாஷண்டிகளால் ஆத்மாவென்று அறியமுடியாதவரே, தர்மரே, ஹனுமத்ப்ரியரே, புண்டரீகாக்ஷரே, கிருஷ்ண துவாதசியில் ஆராதிக்கப்படும் வாஸுதேவரே, யமரே, என்னிடம் கிருபையுடன் இரும். நீர்தானே சனேஸ்சரனுக்கு அனுக்ரஹம் செய்தவர்.

நீர் திரயீமயி, த்ரயீநாதர், திரயிஸ்துதர். ஸர்வலோகேசா, தேவேசா, ஹ்ருஷிகேசா, உம்மை ஆயிரம் தடவைகள் பிரதக்ஷிணம் செய்து நான் நமஸ்கரிக்கிறேன். பக்தபிரியரே, லோகப்ரியரே, பக்தவத்ஸலா, நீர்தான் என்னிடம் கிருபைசெய்ய வேண்டும்.]

"ஸர்வக்ஞரே, கிருபாநிதி, சுகத்தைப் பக்தர்களுக்கு வாரிக் கொடுப்பவரே, பிரபு, தீனர்களிடம் தயைசெய்யும் நாராயணு, சரணுகதர்களுக்கு ஆத்மபந்துவே, என் மனத்திலிருக்கும் அபிப்ராயங்களை தாங்கள் அறிவீர். ஜகந்நாதரே, உமக்குத் தெரியும். என் பிதாவான வாலி சாகும்போது, என்னை உமது மடியில்வைத்து என் க்ஷேமத்தை உம்மிடம் ஒப்பிவித்தார். உமது புத்ரனைப் போல நடத்தவேண்டும், என்று தங்களைக் கேட்டுக்கொண்டார்." (130)

"ராமா, அசரண்ய சரண்யா, என்னைத் தாங்கள்தான் ஆதரிக்கவேண்டும்." (அனன்ய சரணமஹம் பிரபத்யே;) உம்மைவிட்டு எனக்கு வேறு கதி கிடையாது. ஸ்ரீராமா, பக்த ஹிதகாரி, என்னை மற்றவர்களைப்போல நினைக்காமல் தங்களையே அனன்ய கதியாகக் கொண்டவன் என்று ஸ்வீகரிக்கவேண்டும். என்னைத் தியாகம் செய்துவிடவேண்டாம். என் சம்பந்தமட்டில் தாங்கள்தான் எனக்கு ஸ்வாமி, குரு, பிதா, மாதா, யாவும் தாங் கள்தான். உம்முடைய சரணங்களைத் தஞ்சம் அடைந்திருக்கும் நான் உம்மைவிட்டுவிட்டு எங்கு புகல்செல்வேன்? யாரிடம் சொல் வேன்? ஸ்வாமி, நீர்தான் எனக்கு கதி." (131)

"மஹராஜ், உமது சேவகனின் நிலையைத் தாங்கள் உணர்ந்து, என்னை ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும். தாங்கள் ஒரு வேளை என்னைத் தள்ளிவிட்டாலும், தள்ளிவிடலாம். நான் எங்கு போவேன்? உம்மை விட்டுவிட்டு எனக்கு என் வீட்டில் என்ன வேலையிருக்கிறது? ஜானகிநாதரே, நானே வயதில் பாலகன்; ஜாதியில் வானரம்; புத்தியும், ஞானமும், பலமும், (உம்மை பிரிந்துவிட்டு வாழ சக்தியும்) என்னிடம் இல்லை. அறியாத இளம்பாலகனுகவிருக்கிறேன். ஆகையினுல் என்னை உமது பாதசரணங்களில் படிந்து கிடக்கும்படி ஸதா அனு கிரஹிக்கவேண்டும்." (132)

"ஸ்வாமி, உமக்கு எத்தகையான நீசகாரியங்கள் இருக்கக் கூடும். அதை யாவற்றையும் நான் இன்புற்று செய்துமுடிப் பேன். உம்முடைய கருணை நிரம்பிய முகத்தைப் பார்த்துக்

கொண்டு, உமது திருவடிகளை எனது பற்றுக் கோடுகளாக வைத்துக்கொண்டு, நான் மிகுந்த வாழ்நாட்களை ஓட்டிவிடுவேன். பவஸாகரஸேது, என்னை உமது தாஸனாக ஸ்வீகரித்துக்கொண்டு உமது காரியங்களில் அனுவர்த்தி செய்பவனாக என்னை உய்யப் பண்ணவேண்டும். சீதாநாயகா, தயாநிதி,'' என்று கதறிக் கொண்டு அங்கதன் (அன்று தர்மபுத்திரர், அர்ஜுனன் முதலியோர் கிருஷ்ணனை அனன்ய கதியாக எவ்விதம் அடைந் தார்களோ, அதைப்போல,) சீதாராமனுடைய பவித்திரமான சரணங்களில் சரணாகதி அடைந்தான். மஹாபாக்யவான்; மஹா புண்யவான். இருபத்துநான்கு மணிநேரமும் இடைவிடாது தியானிக்கும் மஹாயோகிகளுக்கும் கிடைக்க அரியதான சீதா ராமசரணங்களை பரமபாக்யத்தினால் தனக்குக் கதியாக அடைந் தான். அவன் சரணமடைந்த சமயம் வார்த்தைகள் வெளிவர மறுத்தன. கழுத்தில் தடைப்பட்ட குரலுடன் பிரபோ, ''எனக்கு ரக்ஷை அளிக்கவேண்டும், என்னைப் பார்த்து, நீ வீட்டிற்குச் செல்லலாம் என்று மாத்திரம் கட்டளையிடவேண்டாம். எனக்கு ஸர்வமும் தாங்கள்தான்,'' என்று மீண்டும் சொல்லி அங்கதன் கதறிவிட்டான். (133)

ஸர்வதர்ம ஸ்வரூபியாகிற ரகுபதி, கருணையின் வடிவாக விருக்கும் என்பிரபு நாராயணன், எல்லா வசனங்களையும் கேட்டார். அங்கதனுடைய சரணாகதியை ஸ்வீகரிப்பவர் போல், வாரி எடுத்து, தனது ஹ்ருதயத்துடன் அணைத்துக் கொண்டார். பிரபுவினுடைய ராஜீவ நயனங்களிலிருந்து பிரேமை கண்ணீர்கள் உதிர்ந்த வண்ணமாகவிருந்தன. அவருடைய குரலும் அடைபட்டு, வார்த்தைகள் வெளிவர மறுத்தன. யாவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போது, என் பிரபு சரணாகதவத்ஸலர் அவனைத் தடவி அவனுடைய ஹ்ருதய தாபத்தை சமனம் செய்யும்படி பிரேமையுடன் கூடிய வசனங் களைச் சொல்ல ஆரம்பித்தார். (134)

ஸர்வபக்த பிரியன், ஸர்வஜன ரக்ஷகன், தீனபந்து, ஆர்த்தி கல்பன், ஆபத்ஸகன், ரகுநாயகன் அவனை இறுக அணைத்துக் கொண்டு, புன்முறுவலால் தேற்றி அவனுக்கு ஹிதமான வார்த்தைகளை அம்ருத கடாக்ஷம்கொண்டு சொல்லலானார். ''வாலிபுத்ரா, கவலைப்படாதே. நான் உன்னை கைவிட்டு விடமாட்டேன். இந்தா, என்னுடைய வனமாலை, பட்டுபீதாம் பரம், ரத்னமணி ஹாரம், இவைகளைத் தரித்துக்கொள். உனக்கு ஒருபொழுதும் என் நினைவு, ஸ்மரணை உன்னைவிட்டு விலகாது.

தைர்யமடை. எப்போது என்னிடம் வரவேண்டும் என்று நினைக்கிறாயோ, அப்போது வா. நானும் உன்னை விட்டுவிட மாட்டேன்,'' என்று பலவிதமாகச் சொல்லி அவனை ஆறுதல் செய்து பிற்பாடு அங்கதனையும் அனுப்பிவைத்தார். (135)

பகவானைப்போல பாகவதர்களை நேசிக்கும் மனப்பான்மையுள்ள பரதன், தம்பியான லக்ஷ்மணனுடன் கூட ராமதாஸர்களை வழியனுப்ப, ஒவ்வொருவருடன் சென்று பிரேமையினால் தழுவிக் கொண்டு, விடைகொடுத்து அனுப்பினான். அங்கதனுடைய ப்ரேமைவெள்ளம் பொங்கிவழிந்து, ராமபக்தி பிரவாகமாக ஓடியதை அந்த இருவர்களும் கண்டார்கள். ஒவ்வொரு சமயமும் அங்கதன் போகும்பொழுது, ராமனை பின்புறம் பார்த்துக் கொண்டு, ராமன் இருந்த திக்குக்கு நமஸ்கரித்துக்கொண்டு, ராம சரணங்களைத் தியானித்துக்கொண்டு, சென்றவண்ணமிருந் தான். அடிக்கடி ஸ்ரீராமனைப் பார்த்துக்கொண்டு, அங்கதன் சென்றுகொண்டிருந்தான். (136)

அடிக்கடி அடிக்கடி அங்கதன் சீதாராம தம்பதிகளை சரண மடைந்து, அவர்களை தண்டனிட்டுக் கொண்டு மெதுவாகச் சென்று கொண்டிருந்தான். அவன் மனதில் ஒரே எண்ணம் தான் இருந்தது. என் பிரபு ராமச்சந்திரன் மனம் மாறி என்னைத் தங்கி விடும்படி சொல்ல மாட்டாரா? என்னைப் போக விடாமல் தடுத்து, தன் பக்கம் நிரந்தரமாக வைத்துக் கொள்வாரா? ராமனுடைய கருணை நிறைந்த முகமும், கிருபையை வர்ஷிக்கும் புஷ்கர கடாக்ஷங்களும், (காது குண்ட லங்கள் அசைந்து ஆடும்படி அவர் தனது திருமுக மண்டலத் தினால் பேசுவதும், குளிர்ந்த பானம் போல தித்திக்கும் மதுர மான பேச்சுக்களும், அவருடைய ஹ்ருதய பிரேமையைக் காட்டும் பரபரப்புடன் கூடிய உத்தம கதியும், சிம்ம நடையும், கஜ நடையும், ஸர்ப்ப கதியும், நவயௌவன லாவண்யமும், ப்ரேமையுடன் விளங்கும் சுந்தரியான பெண்ணின் ஹ்ருத யத்தைப் போல மிக மென்மையான ஹ்ருதயமும், பேச்சுக்களும் லஜ்ஜையுடன் கூடிய உதாரச் செய்கைகளையும் மந்த ஹாஸ சிரிப்பும், ஏளனம் செய்யும் போது அவருடைய கேலி விளையாட்டுக்களும், மித்ரர்களையும் சரணாகதர்களையும் வாரி அணைத்துக் கொண்டு, அவர்களின் தாபங்களை அணைக்கும் போதும் அவர் காட்டும் கார்மேக செங்கண் கதிர்முக மண்ட லமும்,) எல்லாவற்றிலும் அவர் காட்டிய ரீதியும் மரியாதைகளும்,

வரம்புடன் கூடிய தர்ம ஸ்தானத்தையும், கண் கூடாகப் பார்த்து அனுபவித்து இன்புற்ற அங்கதன் ஒவ்வொன்றையும் அக்க் கண்களால் நினைப்பவனாக, வருத்தமும் சோகமும் ஒன்று சேர்ந்து, ஒருவனை தவிக்க வைப்பதைப் போல, சீதாராமா விஸ்லேஷ துக்கத்தை ராமன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவன் அனுபவிக்க ஆரம்பித்து விட்டான். (பாவம், பகவான் ஸர்வ ஸ்வதந்திரர் என்று தெரிந்துகொண்டும், பகவானை அடைவதற்கு வேறு வழி, வேறு கதி ஒன்றுமில்லை என்று தெரிந்து கொண்டும், பூர்ணமாகிற ராமகி நுபையை அடையவில்லையே என்று மனவருத்தப்பட்டுக் கொண்டிருந்தான் அந்த பாகவத உத்தமனான அங்கதன்.) (137)

ஸ்ரீராமன் அங்கதனைப் பார்த்தார். ஆஸனத்திலிருந்து எழுந்து வந்து அங்கதனை தடவிக் கொடுத்தார். மீண்டும் மிருதுவான பேச்சுக்களால் அவனைத் தேற்றினார். அநேக விதமாக வினய பூர்வமான வசனங்களைச் சொல்லுகின்ற அங்கதனை மீண்டும் தனது ஹ்ருதயத்தில் அணைத்துக் கொண்டு அன்புடன் நோக்கினார். அங்கதன் பிரபு ஸ்ரீராமனுடைய பாத பங்கஜங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். பிரபுவினிடம் விடை பெற்றுக் கொண்டு, அவருடைய பாதங்களைத் தனது கைகளால் ஒத்திக் கொண்டு, சரண ரஜஸ்களை அணிந்து கொண்டு, சென்றான். ஸகல வானரர்கள் இருக்குமிடத்திற்கு அங்கதன் வந்து சேர்ந்தான். மிக்க மரியாதைகளுடன் வானரர்கள் எல்லோரையும் அனுப்பிவிட்டு, பரதன், லக்ஷ்மணன் சத்ருக்னனுடன் திரும்பி ராமனிடம் வந்து சேர்ந்தான். (138)

[தியானம்

நாராயணரே, சித்ர சிகண்டிகளையும், சுக்ரரையும், பிரஹஸ்பதியையும், ஸ்வாயம்பு மனுவையும், வஸு மஹராஜனையும் ஆதரித்த நாராயணரே, பாஞ்ச ராத்திரத்தின் பிரமாணமே, உம்முடைய இச்சையினால் தேவலோகத்திலும் பூலோகத்திலும் அநேக மரியாதைகள் நிலைத்திருக்கின்றன. எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் பிரபோ, சரஸ்வதியின் ரூபத்தில் வேதங்களாக நின்ற நாராயணா, நீதானே சப்தம் அர்த்தம் ஆகியவற்றிற்கு ஹேதுவாக விளங்குகிறாய். உதார ஹ்ருதயம் உள்ள பிரபோ, புருஷோத்தமா, நாதரூபரே, ஓங்கார ஸ்வரூபியே, நீர் சரீரத்துடனும் பார்க்க முடியாத தேஜஸ் பெற்றவராக விருந்தும்

உம்முடைய மகிமைகள் கணக்கற்று அனாதி காலமாக விருந்த போதிலும், உம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரும்மா, ருத்ரர், பிரும்மவாதிகளும், ஸூர்ய சந்திரன், வாயு, பூமி, அப்பு, அக்னி, எல்லா நக்ஷத்திரக் கூட்டங்களும், பூதங்களும், இந்திரன், யமன், வருணன், குபேராதிகளைப் போல அஷ்டதிக் பாலர்களும், பூமியிலுள்ள ஸகல சராசரங்களும், ஆஸ்ரமங் களும், அவைகளின் தர்மங்களும், பிரபு, புருஷோத்தமரே, உமது ஆக்ஞையினால் அவரவர்கள் தங்கள் ஸ்தானத்திலிருந்து அதிகாரத்தைச் செலுத்துவதாக விருக்கின்றனர். அவைகளை தாங்களே அவதரித்து, விமர்சனம் செய்வது போல தர்மனுஷ் டானம் செய்து, ஆதர்ச புருஷனாக விளங்கினீர்கள். ரஜஸ், தமஸ் என்கிற குணங்களால் விடுபட்டு, சுத்த ஸத்வமாக விளங்கினீர். உம்மிடம் பாரபக்ஷம் கிடையாது. உம்மிடம் க்ஷமையை விட கருணை அதிகமாக விருக்கிறது. உம்முடைய சத்தி, தேஜஸ் அபரிமிதமாக விருக்கிறது. உம்மைச் சரியாக அறிந்து கொள்ளாதவன் உலகத்தில் பல ஜன்மங்கள் எடுத்தும் லாபத்தை அடைகிறானில்லை. உம்முடைய ஸ்வரூபம் ஞானமய மாகவும் கருணை மயமாகவும் ஆனந்த மயமாகவுமிருக்கிறது. உம்முடைய தாஸ உள்ளம் கருணையையே அடிக் கொண்டதாக விருக்கிறது. பானு, உம்மை உபாஸிப்பவர்களின் தாரதம் யத்தை அனுசரித்து, இந்திரபதம், பிரும்மபதம், கைவல்யம் மோக்ஷம் ஆகிற சதுர் கதியைக் கொடுப்பவராக விருக்கிறீர். நீரே ஜாக்ரதா, ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரியா வஸ்தையாக உம்மைப் பிரித்துக் கொண்டு, ஒவ்வொன்றிலும் நான்கு நான்காக வகுத்துக் கொண்டு, தர்மார்த்த காம மோக்ஷங்களை அளிவிக்கும் சதுர்பாவராக விளங்குகிறீர். யயாதி, நஹுஷன், அம்பரீஷன், ந்ருகன், பீஷ்ம துரோணாதிகள் ஆகிய ராஜ ரிஷிகளின் தர்மங்கள், பிராம்மண க்ஷத்திரிய வைஸ்ய சூத்ர தர்மங்கள் ஆகிய எல்லா ஜாதி தர்மங்களையும் ஆஸ்ரம தர்மங் களையும் ஒழுங்கு படுத்தி, பரஸ்வரூபமாக விருந்தாலும் பரம சௌலப்ய சௌம்ய மூர்த்தியாக நீர் விளங்குகிறீர். ஆஞ்சநேய அங்கதனால் ஸேவிக்கப்படும் ஸ்ரீசீதாராமா, என்னிடம் உமது கிருபையையும் உம்முடைய கைங்கர்ய அனுவர்த்தியையும் உம்மை ஸதா தர்சனம் செய்து கொண்டிருக்கும் பாவத்தையும் எனக்கு அளிப்பீரா ? திருமகளின் கேள்வா, சீதைக்காக கடலை அணை கட்டிய ஸ்ரீராமா, பெரிய நாச்சியாரே, கம்பரையும் நம்மாழ்வாரையும் அனுக்ரஹித்த ஸ்ரீரங்க நாதரே, தயை செய்.]

அந்த சமயம் ஹனுமான்ஜி, வானர வீரர்களுடன் சூழ்ந் திருக்கும் சுக்ரீவ மஹாராஜனை தண்டம் செய்தார். அவனுடைய பாதசரணங்களை இறுகக் கட்டிக்கொண்டு, கிருதாஞ்சலியுடன் பிரார்த்தனை செய்தார். "மஹாராஜா, எனக்கு பத்து நாட்கள் ரகுபதியை சேவை செய்யும் பொருட்டு, அவகாசம் தரவேண்டும். ரகுநாதனுடைய பாதங்களின் தர்சனம், சேவை, அடிக்கடி செய்ய வேண்டுமென்று எனக்கு அவாவிருக்கிறது. பத்து நாட்கள் அயோத்தியில் தங்கிவிட்டு, மீண்டும் தங்களுடைய சரணங்களை நான் வந்து தரிசிக்கிறேன். தயை செய்யவேண்டும்". (139)

சுக்ரீவன் பதில் சொன்னார். "பவனகுமாரா, நீ புண்யராசி. மஹா பாக்யவான். உனக்கு ஸ்ரீ சீதாராம கிருபை அபாரமாக விருக்கிறது. பகவான் ஸ்ரீராமச்சந்திரனால் தனது ஸேவா கைங்கரியத்திற்காக நீ நிரந்தரமாக ஸ்வீகரித்துக் கொள்ளப் பட்டாய். நான் உனக்கு மனப்பூர்வமாக விடை கொடுக்கிறேன். உனது இஷ்டப்படி யிருந்துவிட்டு, ஸ்ரீ சீதாராமச்சந்திரனுக்கு ஸேவா கைங்கர்யங்கள் பூர்ணமாக செய்துகொண்டுவா. உனக்கு என்னுடைய பூர்ணமான ஆசீர்வாதங்கள் நிரந்தரமாக உண்டு" என்று ஹனுமான்ஜியை தடவிக் கொடுத்து சுக்ரீவ மஹா ராஜா விடை கொடுத்து அனுப்பினார். அப்பொழுது ஹனுமான்ஜி புறப்பட சித்தமா யிருப்பதைக் கண்டு, அங்கதன் ஹனுமான்ஜியை அழைத்து, வசனங்களைச் சொல்ல ஆரம்பித் தான். "ஹன்மான்ஜி, என் வசனங்களைக் கேள்." (140)

"நான் உன்னை அஞ்சலி பந்தத்துடன் பிரார்த்தித்துக் கொள்கிறேன். எனது வேண்டுகோளை நிறைவேற்றி வை. எனது சார்பில் பிரபு சீதாராமச்சந்திரனை, சுக்ருத பிரணமம் செய். அடிக்கடி அடிக்கடி நமஸ்கரி. அப்பொழுது ராமன் என்ன வேண்டுமென்று கேட்பார். அங்கதன் தன்னை தங்களிடம் ஞாபகப்படுத்தச் சொன்னான், என்று வினயபூர்வமாகச் சொல். என்னை நிவேதனம் செய். ரகுநாயகனுக்கு என் மீதும் பூரண மாக கிருபாதிருஷ்டி விழுவதற்குக் காரணமாக நீ இருக்க வேண்டும்" என்று அங்கதன் சீதாராம சரணங்களில் பிரேமையை அனுவர்த்தித்துக்கொண்டு, கண்களில் ஜலம் ததும்பச் சொன்னான். (அந்த அங்கதனை நான் ஆயிரம் தடவைகள் ஹனுமான்ஜியை புரம் வைத்து நமஸ்கரிக்கிறேன்.) (141)

இவ்விதம் வாலி புத்ரனுகிற அங்கதன், ஹனுமான்ஜியைப் பிரார்த்தித்துக்கொண்டு, மேலே தொடர்ந்து சென்று கொண்டிருந்தான். அங்கதனுடைய பிரேமை, பக்தி வினயம் ஆகிய யாவற்றையும், தாஸ உள்ளத்துடன் கூடிய பாகவத பிரேமையையும், யாரால் வர்ணனை செய்யமுடியும்? ஹனுமான்ஜியினல் பிரேமை பூர்வமாகச் சொல்லப்பட்ட அங்கதன், சுக்ரீவ வசனங்களைக் கேட்ட பிரபு, சீதாநாயகனுகிற ஸ்ரீராமன், மரியாதா புருஷோத்தம புருஷன், ரகுகுல நாயகன், தினகரகுலபூஷணன், பகவான் பிரேமைக்கடலில் மூழ்கினர். (அந்த பக்த பாகவதப் பிரேமை எனக்கு இருக்குமா? ராமா, சீதா கிருபை செய்யுங்கள்.) (142)

காகபுசுண்டி கருடனிடம் சொன்னர். "கருடமஹாராஜரே, ஸ்ரீராமனுடைய ஹ்ருதயம் வஜ்ரத்தை விட மிகக் கடியது. கொடியது. அவன் மஹா கடியன், கொடியன், நெடியன். தர்மத்தைப் பரிபாலிப்பதில் ஈர நெஞ்சு இல்லாதவன். ஆனல் அப்பேற்பட்ட திருமால் பாகவத ஸம்ரக்ஷணத்தில் அதிகோமளமான நெஞ்சு படைத்தவனுக விருக்கிருன். கருடரே, பகவானுடைய ஹ்ருதயம் தன் தரஸர்களிடம், வெண்ணெயை விடவும், அதிகோமளமான தாமரை இதழை விடவும் மிக மிக மென்மையானது. அவருடைய சித்தத்தை யாரால் அறிய முடியும்? (ஸர்வ ஸ்வதந்திரரான பகவான் யாரிடம் கிருபையைக் காட்ட நினைக்கிருரோ, அவனிடம்தான் அவர் தயை செய்கிருர். நித்ய ஸூரிகளால் சேவிக்கப்படும் முனி மானஸ ராமன், ஸம்சாரத்தில் விழாமல் மோக்ஷத்தைப் பெற வாய்ப்பளிக்கும் பக்தவத்சலன், ஜகத் ஸ்ருஷ்டியையும், நான்முகன் முதலியவர்களையும் நிர்வஹிக்கும் மனு,) பரம புருஷன், பரமபத நாதன் பூரித்துக் கொண்டு, தனக்கு இஷ்டப்பட்டவர்களிடம்தான் ஸதா செல்வான். அவனுடைய கிருபாதிருஷ்டியையும், ஸங்கல்பத்தையும், ஸர்வ ஸ்வாமித்வத்தையும், யாரால் பூர்ணமாக அறியமுடியும்? (நாராயணு, வாஸுதேவா, எங்கும் வியாபகமாகவுள்ள விஷ்ணே, காருண்யஸிந்தோ, குருவாயூர் அப்பனே, உமது தாஸனுகிற என்னிடம் உமக்கு அத்யந்த கிருபை யிருக்கட்டும். உம்முடைய 'கொடுமையான ஆக்ஞாசக்கிரம், என் விஷயத்தில் குளிர்ந்து உமக்குத் தாஸனுக விருக்கும்படி ஸங்கல்பம் செய்ய வேண்டும். புராணரே, புருஷோத்தமா, வேத புருஷா, பவன புரபதே, பாஹிமாம் பாஹிமாம்" என்று சொல்லி காகபுசுண்டி,

கருடன், ஆஞ்சநேயாதிகளைப் புறம்வைத்து நான் நமஸ்கரித்துப் பிரார்த்திக்கிறேன்.) (143)

[தியானம்

சீதாராமா, நாராயணு, உன் ஸ்வரூபம் எனக்கு இன்னமும் புரியவில்லை. ஒரு கையில் ஸுதர்சனமும், ஒரு கையில் கதையும், ஒரு கையில் சங்கும் சார்ங்கமும், மற்றொரு கையில் அனுக்ரஹ முத்ரையுடன் ஸ்ரீ பத்மத்தை தரித்திருக்கிருயே. பத்மமாலினி என்கிற மஹாலக்ஷ்மியை வக்ஷஸ்தலத்தில் தரித்திருக்கிருயே. உனக்கு நிறைய ஐஸ்வர்யம், தர்மம், நித்ய யசஸ், ஸ்ரீ, சாஸ்திரிய மான ஞானம், மஹானுபவங்கள் ஆகிற ஆறு குணங்களுடன் கூடிய கருணையானது "உனது வடிவமா? அல்லது வேதாந்த தேசிகர் சொல்லியபடி, உன்னுடைய வைபவத்தை விமர்சனம் செய்வதற்காகவா உன் நிஜ ஸ்வரூபம் விளங்குகிறது." உனது திருமேனியை அடைந்த பஞ்சாயுதங்கள், உன்னை மங்களா சாஸனம் செய்து, பல்லாண்டு பல்லாண்டு பாடிய பெரியாழ் வாரைப் போல, பக்த ஜனங்களைக் காப்பாற்றுவதற்காக விருக் கின்றன என்று நான் நினைக்கிறேன். உன்னை உபாஸிக்கும் ஸாதுக்கள் உன் ரக்ஷணத்தை அடையும் போது, இந்த ஆயுதங் கள் நான் முந்திப் போகிறேன் என்று போட்டி போடுவது போல, லோகானுக்ரஹத்திற்காக விருக்கின்றன. ஹ்ருஷிகேசா, ஆத்மதத்வத்தை அறிந்தவர்கள், புத்தி மனஸ், உனது ஸங்கல்பம் என்பதைப் போன்ற ஸகல தத்வங்களினுலும், உன்னை முழுவதும் அனுபவிக்கிருர்கள். நாராயணு, உம்முடைய ஆயுதங்கள் என்னை ஒருவிதத்திலும் பயமுறுத்திய போதிலும், உமது முக்குணங்களாகிற மாயை, என்னை உம்மை அடைய விடாதபடி தடுத்த போதிலும், எனது கர்மசேஷ்டைகள் உன்னை நிரந்தரமாகப் பஜிப்பதற்கு விரோதிகளாக விருந்த போதிலும், பிரபு, ஸாத்வி, ஸுநாபரே, பகவான் என்கிற சொற்களால் நான் உன்னை அழைக்கும் போது, ஜகத் வியாபாரம் முதலிய பிரவிருத்திகளைக் கொண்ட நீர், திரோதானம், அனுக்ரஹம் என்கிற சக்திகளுடன் பூர்ணமாக சுத்த ஸத்வமாக விளங்குகிறீர். சுத்த ஸத்வத்தை பிரதான குணமாகக் கொண்டால் பரமானு க்ரஹத்தைச் செய்பவராக அபய முத்திரையுடன் க்ஷமையைக் கவசமாகக் கொண்டு பானுமண்டல மத்ய நாராயணுக நீர் விளங்குகிறீர். காயத்ரி தேவதையின் ஜ்யோதிஸே, உம்முடைய

ஸமஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்கிற ஐந்து காரியங்கள் ஜகத் வியாபாரமாக விருக்கிற படியால், ஸ்வாமி, ராமபத்ர மூர்த்தி, என் ஸம்பந்த மட்டில் அனுக்ரஹ மூர்த்தியாகவும், ஹிதகாமியாகவுமிருக்கிறீர். சக்கிரத்தை ஆயுதமாகக் கொண்ட நீர் ஜகம் என்கிற சக்கிரத்தில் உள்ளவராக விருக்கிறீர். ஹே ஜகந்நாராயண, உம்மிடமிருந்து தான் ரிஷிகளும் பித்ருக்களும், தேவர்களும் ஜங்கமாஜங்கமங்களும், மஹா பூதங்களும் வேதங்களும் பிரகடனப் படுத்தப் பட்டன. வேத வியாஸரால் அடிக்கடி சொல்லப்பட்டு, கீர்த்தனம் செய்யப்படும் திரிலோக த்ருக்ஃ உம்மை அடிக்கடி அடிக்கடி அர்ஜுனன், பரதனைப் போல நான் நமஸ்கரிக்கிறேன். உமக்கு பதினாறு ஆயுதங்களைக் கொண்ட சக்கிரம் காலசக்கரமாக விருக்கிறது; அதுவே தர்ம சக்கரம். அதுவே உமது ஆக்ஞை சக்கரம். அந்த சக்கரத்தின் நிறமும் ஸ்வர்ணத்தைப் போல மஹா தேஜஸ்ஸுடன் விளங்குகிறது. அதுவே உமது ஸங்கல்பமாகவுமிருக்கிறது. அந்த ஸங்கல்பம் சந்திரனைப் போன்று பதினாறு கலைகளுடன் ஜ்வலிக்கிறது. அந்த ஆயுதங்கள் ஸகலமும் சேர்ந்து உம்மை ஸ்ரீதேவியுடன் கூடிய பரம புருஷன் என்று சித்தாந்தப்படுத்துகிறது. ஹேசக்கிரதாரி, சக்ர ரூபிணி, கால சக்ரமே, நீர் தான் சாஸ்வதம். எனனைப் போன்ற கர்ம மடியில் அவதரிக்கும் ஜீவர்களுக்கு நீர்தான் தஞ்சம். தர்மரூபிணியாகிற நீர், பானு, விஸ்வரேதஸ், விஸ்வகர்மா, சார்ங்கதன்வா, ஸத்யம் ஸத்வம், மஹா தேஜஸ், மஹா ஜ்யோதி, ஜகத்தையும் காலத்தையும் அதீனமாகக் கொண்ட சாஸ்வதர் என்று பல நாமங்களால் அழைக்கப்படுகிறீர். ஸ்வாமி, என்னை ரக்ஷி, என்னை ரக்ஷி என்று பலமுறைகள் சொல்லி நான் நமஸ்கரிக்கிறேன்.]

பிறகு பிரபு நிஷாதராஜனை குஹனை அழைத்தார். மஹா கிருபாளுவாகிற என் ஸ்வாமி ரகுநந்தனன் குஹனுக்கு பட்டு வஸ்திரங்கள், முத்து மணிகள் கொண்ட நவரத்ன ஹாரங்கள், என்றும் மங்காத வாசனையுடன் கூடிய புஷ்பங்களின் மாலைகள் எல்லாவற்றையும் பரிசளித்தார். அதன் பிறகு அவனைப் பார்த்துச் சொன்னார். "இனி நீ உன் கிரஹத்திற்குச் செல்லலாம். என்னை எப்பொழுதும் ஸ்மரணை செய்து கொண்டு மனம் கர்மம் வசனம் முதலியவற்றில் தர்மத்தை அனுசரனை செய்துவா."
(144)

"நீ என் சகாவாக விருந்தாலும், என் தம்பியான பரதனுக்குச் சமமாக அன்புடனிருக்கிருய். அயோத்திக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிரு." பிரபுவினுடைய வசனங்களைக் கேட்டு குஹப் பெருமானுக்கு அடிக்கடி சுகம் உண்டாயிற்று. நேத்ரங்களில் சுமை பொறுக்க முடியாத பிரேமை ஆனந்தக் கண்ணீர்கள் வழிந்து ஓடின. அவன் சீதா ராம ஸ்நேகத்தை நினைத்து நினைத்துப் பார்த்தான். தாங்க முடியாமல் பிரபு ஸ்ரீராமச்சந்திரனிடம் சரண மடைந்து, "ஐயா, நீர் தான் எல்லாமும் எனக்கு" என்று பிரபுவின் பாத பங்கஜங்களைப் பற்றிக் கொண்டான். (145)

குஹப் பெருமானை பெருமாள் பல தடவைகள் ஆஸ்வாசப் படுத்தினுர். பகவானுடைய நளினமான சரணங்களை ஹ்ருதய புண்டரத்தில் தரித்துக் கொண்டு குஹன் தனது கிருஹத்திற்கு திரும்பி வந்தான். தனது கிரஹத்தில் உள்ள ஸகல பந்துக் களுக்கும் பிரபுவினுடைய ஸரள ஸ்வபாவத்தையும், சௌசீல்ய வாத்ஸல்யாதி குணங்களையும் எடுத்துச் சொல்லி, அடிக்கடி தானும் இன்பமடைந்து அவர்களையும் ஆனந்த மூட்டினுன். ரகுபதியினுடைய மஹத்தான சரித்திரத்தைப் பார்த்துக் கேட்டு, அனுபவித்த மஹா பாக்யமுள்ள அயோத்யாவாசிகள் அடிக்கடி தங்களுக்குள் சொல்லிக் கொண்டார்கள். "எங்கள் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் சுகத்தை வாரிக் கொடுக்கும் பிரபு. அவருடைய கடாக்ஷத்தைப் பெற்றவர்கள் நிஜமாகவே தன்யர்கள். அவரைப் போல சௌம்ய, சௌசீல்ய, தர்ம வத்ஸலர் யார் இருக்கக்கூடும்? பார பக்ஷமின்றி யாவரையும் கௌரவமாக நடத்தும் பிரபு யார் இருக்க முடியும்?" (146)

"ராமராஜ்யம்," என்பது ஸ்ரீராமச்சந்திரனுடைய பட்டாபி ஷேகத்திலிருந்து துவக்கமானது. அவர் ராஜ்ய பாரம் செலுத்த ஆரம்பத்திலிருந்து, மூன்று லோகங்களும் சந்தோஷ மடைந் தன. சகல சராசரங்களுக்கும் பயம் என்பதே கிடையாது. ஒரு விதமான சோகமும் ஏற்படவில்லை. ஒருவர் மற்ருெருவரிடம் விரோதம் பாராட்டவில்லை. எல்லோருடைய மனமும் நிர்மல மாகி, தப்பு, அதர்ம வழிகளிலிருந்து அவரகள் காப்பாற்றப் பட்டு, ஸகலரும் சுக ஜீவனர்களாக விருந்தார்கள். ஸ்ரீசீதாராம னுடைய பிரதாபத்தினுல் கொடும் செய்கைகளைச் செய்யும் விஷமத்தனம் அழிந்து போனது. எங்கு பார்த்தாலும்

அமைதியும் சுகமும் சோகமில்லாமையும் ஆனந்தமும் செழிப்பும் காணப்பட்டது. (147)

வர்ணாஸ்ரம தர்மங்கள் காப்பாற்றப்பட்டு, ஜனங்கள் தங்கள் ஜாதிக்கு ஏற்ப, தர்மங்களைச் செய்து கொண்டிருந் தார்கள். வேதங்களில் சொல்லியபடி கர்மாக்களைச் செய்து கொண்டும், தகாத கர்மாக்களை தியாஜ்யம் செய்து கொண்டும், ஜனங்கள் தர்ம வழியில் சென்று கொண்டிருந்தார்கள். அதனல் அவர்கள் சுகத்தையும் மனசாந்தியையும் அடைந்தார்கள். அவர்களுக்கு எத்தகைய பயமோ, சோகமோ, பாபமோ, ரோகங்களோ ஏற்படவில்லை. (148)

''ராம ராஜ்யத்தில்'' மனிதனுக்கு ஏற்படும் ஆதி ஆத்மீக, ஆதி தைவிக, ஆதி பௌதிக தாபங்கள் ஒன்றும் ஏற்படவில்லை. ''ராம ராஜ்யத்தில்'' ஸகலரும் ப்ரேமை ஸ்நேகத்துடன் இருந் தார்கள். விலங்குகளும் தங்களுக்குள்ள ஸ்வாபாவிகமான விரோதத்தை மறந்து நேச பாவத்துடன் அமைதியாகவும், ஒற்றுமையுடனும் வாழ்ந்து வந்தனர். ஸகல நர நாரிகளும் வேதங்களில் சொல்லியபடி மரியாதை வியவஸ்தைகளுக்குக் கட்டுப்பட்டு, ஸ்வதர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு சாந்தர் களாக விருந்தார்கள். (149)

தர்ம தேவதை ஸத்யம், சௌசம், தயை, தானம் ஆகிற நான்கு பாதங்களுடன் பூலோகத்தில் பயமின்றி எங்கு பார்த் தாலும் இஷ்டப்படி சஞ்சரித்துக் கொண்டிருந்தது. அதனல் ஸ்வப்னத்தில் கூட யாருக்கும் பாபம் ஏற்படவில்லை. அயோத் தியில் வாழ்ந்துவந்த நர நாரிகள் ராமபக்தி விரதம் கொண்டவர் களாக, ஸ்ரீசீதாராம சரணங்களையே, ஏக பராயணமாகக் கொண்டு, ''பரமாம்கதி'' என்று சொல்லப்படும் வைகுண்ட பதத்திற்கு யோக்யதையுள்ள அதிகாரிகளாக விளங்கினர்கள். (150)

[தியானம்

நாராயணி, என் ஸ்ரீதேவி, காமாக்ஷி அம்மா, நீதானே ஸர்வ ஸ்ரேஷ்டமான புருஷார்த்தம். உன்னை அடைந் தல்லவோ பரம புருஷார்த்தமான சீதா ராமனுடைய திருவடி களை அடையவேண்டும். நித்ய ஸூரிகளான கருடன், அனந் தன், விஷ்வக் ஸேனதிகளால் ஆராதிக்கப்படும் பரமேஸ் வரரே, ஸர்வ லோகேஸ்வரரே, ப்ருகுமஹரிஷியினுலுல், பராசர

ராலும் ஆராதிக்கப்படும் பரம ஸ்ரேயோ மூர்த்தி. நீரே பிரவிருத்தி தர்மமாகவும், நிவ்ருத்தி தர்மமாகவும், இவைகளை அறிந்த பரமவிவேகியாகவும், அதில் ஒட்டிக்கொள்ளாத ஞான வைராக்ய பூஷணனாகவும் இருக்கிறீர். ஆஞ்சநேய நம்மாழ்வாரால் ஆராதிக்கப்படும் கருமாணிக்கமே, உண்டு உமிழ்ந்தும் கடந்து, மிடந்தும், கிடந்தும், நின்றும், கொண்ட கோலத்தோடு வீற்றிருந்தும் மணங்கூடியும் கண்டவாற்றால் தனதே உலகென நின்றான் தன்னை, உன்பாதங்களை அடியார்க்கினிய இன்பமாகிய உன் வேங்கடபாதங்களை நோன்பு நோற்று சரணமடைந்தேன். எனக்கு உன்பாதங்களை அடைந்து உபாஸிப்பது என்னுடைய நினைவா, இல்லவே இல்லை அம்மா, அப்பா உன் கிருபைதானே என்னை இவ்விதம் நியமிக்கிறது. அன்று பிரஹ்லாதன் இந்திரனுக்கு உபதேசித்தாரே, அதன்பிரகாரம் மனிதன் ஆசையற்றவனாகவும், ஞானத்தை அடைந்தவனாகவும், அடக்கமுள்ளவனாகவும் ஸங்கல்பமில்லாதவனாகவும் யோகநிலையை அடைந்து ஸதாசிவனாகிற பரபிரும்மத்தை ஸதா பார்த்துக்கொண்டிருந்தால், அவனுக்கு வருத்தமில்லை. காரியத்திலும் கவனத்திலும் விருப்பமில்லை. வெறுப்புமில்லை; 'ஆகையால் விரோதத்தைச் செய்கிற பகைவனையும் அவன் காண்கிறான் இல்லை. ஸ்வர்க்கத்திலும், பாதாளத்திலும், பூமியிலும் ஒன்றிலும் விருப்பமுள்ளவனல்லன். அறியவேண்டியதிலும், அறிவிலும், அறியாமையிலும் அவனுக்கு வேற்றுமை இல்லை.'' ''இதற்கு யாது உபாயம்?'' என்று பிரஹ்லாதனை இந்திரன் கேட்க, பிரஹ்லாதன் மீண்டும் பதில் சொன்னான். ''இந்திரனே, ஸத்யமாக இருப்பதாலும், அதற்கு பிரமாணம் போலவிருப்பதாலும், அஜாக்ரதையுடன் இல்லாதிருப்பதாலும், மனத்தெளிவுடன் புத்தியுடனிருப்பதாலும், ஆசார்ய பணிவிடையாலும், மோக்ஷத்தை அவலம்பித்த மனிதன் ஸ்ரேயசை அடைகிறான். ஸ்வபாவத்தினால் அவன் நல்ல புத்தியையும், சாந்தியையும் வேற்றுமையையும் அறியமாட்டாதவனாகவும், குருவின் முகத்தால் போதிக்கப்பட்ட வேத வசனங்களாலும் பிரும்மத்தை அறிகிறவனாகவும், ஸத்புருஷர்களுடன் சேர்க்கையை அடைந்து பரமாத்ம சுகத்தை அடைகிறான். அவன் எல்லா பற்றுதல்களிலிருந்தும் விடுபட்டவனாக, சீதாராம பிரும்மத்தை நித்ய ஸூரிகளைப் போலவும் அயோத்தியாவாசிகள் அடைந்த மஹா போக்யத்தைப் போலவும் தியானித்து, பரமாம் கதியை அடைகிறான். தேவர்களுக்கும் கிடைக்கப்பெறாத உத்தம பிறவியை அடைந்த அயோத்தியாவாசிகளே, த்வாரகா மதுரா

வாசிகளே, உங்களுடைய ஸாதுசேர்க்கையை, ராமபக்தி என்கிற ஸாம்ராஜ்யத்தை, நம்மாழ்வார், பிரஹ்லாதன், இந்திரன், தியாக ராஜ, நாரத, வியாஸாதிகளின் சிஷ்யனுன எனக்குக் கொடுப்பீர்களா? உமாமஹேஸ்வரர்களே, என்னிடம் உங்கள் கிருபை கிட்டுமா? ஸாகேதராமா, ஜயஜய ரகுராமா, ஸஜ்ஜன ஹ்ருதயார்ணவஸோமா, உன் நாமபலம்தான் எனக்கு; என் தேகம் உன்சொத்து, உன் ஸந்நிதானம்தான் எனக்கு வாசஸ்தானம். உன்னைப்பற்றிய செய்கைகள்தான் எனது சுபகர்மங்கள். நீரே எனக்கு ஏக பராயணமாகிற கதி. என் தோஷங்களைப் பாராதே. என்மானம் உனது கௌரவம். கலிநாதரே, பத்மநாபா, அமரஸேவிதா, ராஜித நவமணி, பூபாலரே, ம்ருது பாஷ தியாகராஜ வந்திதராமர, சீதா, பரதாக்ரஜா, லக்ஷ்மண சத்ருக்ன ஆஞ்சநேயா ஸேவிதா, கிருபை செய்.]

அகாலம்ருத்யு ஏற்படவில்லை. பாலர்கள் மரணமடையவில்லை. தாய் தந்தையர்கள் புத்ர புத்ரி மரணங்களைப் பார்க்கவில்லை. சகோதர சகோதரிகளும் ஒருவர் மற்ெருருவருடன் ப்ரீதிகொண்டு விளங்கினுர்கள். ஜனங்கள் பரஸ்பர ஹிம்சையை செய்துகொள்ளவில்லை. தேகமனே வியாதிகளின்றி, ஸகலரும் அழகானதும் காந்தியுள்ளதுமான சரீரங்களை எடுத்துக்கொண்டு சந்தோஷகரமாயும் துஷ்டி புஷ்டியுடனும் வாழ்ந்துவந்தார்கள். மோதக ஹஸ்தனுகிற விக்னேஸ்வரரைப் போல ஸகலரும் அன்ன சௌக்யம், வஸ்திர ஸெக்யம், ஸ்வர்ணக்ருஹ, புத்ர, புத்ரி சௌக்யம் இத்யாதி சௌக்யங்களையும் பந்துமித்திரர்களையும் அடைந்து தீனர்களாகவும், தரித்திரர்களாகவும், துக்கமடைந்தவர்களாகவும் பாக்ய ஹீனர்களாகவும் காணப்படவில்லை. அறிவு விலாஸங்களிலும், அனுஷ்டான முறைகளிலும் தேர்ந்தவர்களாகவும், மந்தபுத்தி மூர்க்கத்தனம் முதலியவைகளை தியாஜ்யம் செய்துவிட்டு, பரமலக்ஷண ஸம்பன்னர்களாகவும் அயோத்தியா வாசிகள் வாழ்ந்துவந்தார்கள். (151)

மஹாஸம்பத்தான சீதாராம ஸேவையை அடைந்த அந்த ஸாகேதபுரிவாசிகள் டம்பமின்றி தர்மத்தையே ஏகாதாரமாக அவலம்பித்து வாழ்ந்துவந்தார்கள். புருஷர்களும் ஸ்திரீகளும் ஸ்லாக்யர்களாகவும், யோக்யர்களாகவும், குணஸம்பத் உள்ளவர்களாகவும், தன்யர்களாகவும், குலீனர்களாகவும், சீலம் முதலிய கல்யாண குணவிபவங்களால் ஸந்துஷ்டியுள்ளவர்களாகவும், புத்திமான்களாகவும், சூரர்களாகவும் ஸகலகுண விசேஷங்களை

உடையவர்களாகவும் அனுக்ரஹிக்கப்பட்டார்கள். சகலரும் குணுக்யர்கள். பிரும்மநாட்டமுடைய வித்வான்கள். பற்றுதல்களிலிருந்து விடுபட்ட ஞானிகள், நன்றிமறவாத க்ருதக்ஞர்கள், கபடம் துரோஹம் வஞ்சகமின்றி பூததயையுடன் விளங்கினுர்கள். (152)

காகபுசுண்டி சொன்னுர், "கருட மஹாராஜரே, தயவு செய்து கேளும். ராமராஜ்யத்தில் ஸகல சராசரங்களும் ஜட சேதனர்களும், ஜகத்தின் வியாபாரங்களால் யேற்படும் துக்கங்களேயும் காலத்தினுல் ஏற்படும் விபரீத நஷ்டங்களேயும், அதனுல் யேற்படும் துக்கங்களேயும், கர்மங்களால் ஏற்படும் துக்கங்களேயும், இயற்கையின் ஸ்வபாவங்களினுல் யேற்படும் ஆபத்துக்களேயும், பயங்களேயும், பாபம், முன்விஜ்ன முதலியவைகளால் யேற்படும் சோகங்களேயும், துக்கங்களேயும் அனுபவிக்கவில்லே. எங்குபார்த்தாலும் அமைதியும், ஸந்துஷ்டியும்,சோகமின்மையும் பரவியிருந்தது." (153)

"சக்ரவளேயம் போலவிருக்கும் ஸகல பூமிக்கும், அதன் ஒட்டியாணம் போலவிருக்கும் ஏழு ஸாகரங்களுக்கும், ஒரே ஒரு பூபதி, கோஸலாதிபதியான ரகுபதிதான் இருந்தார். அவரே ஸார்வபௌம சக்கிரவர்த்தியாக, பூபாலராக விளங்கினுர். எந்த உருக்ரமனின் ஒவ்வொரு ரோமக்காலிலும் அநேக பிரும்மாண்டங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டு, காப்பாற்றப்பட்டு லயமடைகின்றதோ, அப்பேற்பட்ட மஹானுபாவனுக்கு, ராஜாதிராஜ, ராஜகம்பீர ராஜமார்த்தாண்ட ஸார்வபௌம சக்கிரவர்த்திக்கு, இந்த பூப்ர தேசமாகிற ஏழுகாண்டங்களும் அவருடைய பிரபுத்வத்தை மேன்மைபடுத்துவதற்கு அதிகம் என்று சொல்லுவதற்கில்லே." (154)

"ஆனுல் என்பிரபு மஹீதரர், ஆதிவராஹப்பெருமாள் அந்த ஏழுகாண்டங்கள் கொண்ட பிருத்வியின் பெருமைகளே அறிந்து, அந்த பூப்ரதேசத்தை தனது குடையின்கீழ் அமர்த்திக் கொண்டார். அவருடைய நிழலிலிருக்கும் பூப்ரதேசம் அவரால் பெருமையடைந்து வர்ணனேகளுக்கு மேற்பட்டு, அமோகமாக விளங்கியது. அப்போது பூமியில் ஸர்வ இடங்களும் பிரபுவின் மகிமைகளால் சந்தோஷமாக வாழக்கூடிய வாசஸ்தலமாக விளங்கியது. ஹே கருட மஹாராஜரே, ராமபிரும்மத்தின் மகிமைகளே உணர்ந்த எவனும் பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய விஸ்தாரமான லீலேகளில் அதிகப் ப்ரேமை காட்டுபவனுக, ஸதா

இந்த ராமஸாகரத்தில் ஆனந்தமயமாக மூழ்கியிருக்க விரும்புவான்.'' (155)

''ஸ்ரீ ராம நாடகம்,'' என்கிற ராமாயணத்தையும், பகவான் சீதையுடன் கூடிய ராஜ்ய பாரம் செய்ததையும், அந்த ''ராம ராஜ்யத்தில்,'' யேற்பட்ட சந்தோஷ சந்துஷ்டியையும் எவர்கள் அறிவார்களோ, அவர்கள் இவைகள் எல்லாம் ராமராஜ்யத்தின் அமிதமான பலன்கள் என்று எண்ணமிடுவார்கள். இந்த புனிதமான ராமராஜ்யத்தின் மகிமைகளை, தமம், சமம் கொண்ட குணசீலர்களாகிற ஆத்ம ஸம்பன்னர்கள், முனிஸ்ரேஷ்டர்கள், ஸதா பாடி ஆடி மனம் மகிழ்ந்து, புகழ்ந்து கொண்டிருப்பார்கள். ராமராஜ்யத்தில் ஜனங்களின் சுகமே ஸம்பத்தாக விருந்தது. அந்த மஹா சுகத்தை ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனும், சாரதாதேவியும் வர்ணிக்க முடியாதபடி அதிகிரமித்திருந்தது.'' (156)

''ஸகல நரநாரிகளும் உதாரமன முள்ளவர்களாகவும், பரம உபகாரிகளாகவும் இருந்தார்கள். ராமராஜ்யத்தில் பிராம்மண மகிமையை யாவரும் உணர்ந்திருந்தார்கள். ஸ்திரி புருஷர்கள் யாவரும் பிராம்மணர்களை நமஸ்கரித்து, பிராம்மணர்களுக்காகவே வாழ்ந்து வந்தார்கள். ''பிராம்மணோத்தமர்கள், பூமி, வாயு, அப்பு, அக்னி, சூர்யன், ஆகாயம் இவற்றை விட பெரியவர்கள். பகவானே பிராம்மண பூஜை செய்கிறவர்'' என்கிற தர்மத்தினால், யாவரும் பிராம்மணோத்தமர்களை வணங்கி, அவர்களுடைய நன்மைக்காக வாழ்ந்து வந்தார்கள். ஸகல புருஷர்களும், ''ஒரு ஸ்திரி,''ஏகபத்னி விரதர்களாக விருந்து கிருஹஸ்த தர்மத்தை பரிபாலித்தார்கள். அதனால் ஸ்திரிகளும் மனம், கர்மம், வசனம் முதலியவைகளில் தங்கள் பதிகளுக்கு ஸதா ஹிதம் செய்துகொண்டு, பதிகளுக்கு அனுகூலர்களாக வாழ்ந்து வந்தார்கள்.'' (157)

''ஸ்ரீ சீதாராமச்சந்திர ராஜ்யத்தில் தண்டனை என்பதே கிடையாது. குற்றம் செய்யாதவர்கள் வாழ்ந்தபோது, ஏது தண்டனை யேற்படும்? அதே மாதிரி பேதம் என்கிற கலகமும் கிடையாது. சத்ருவின் பயமும் இல்லை. மனம் ஒன்றே சத்ருவாக விருந்தபடியால், அந்த மனத்தை யாவரும் கட்டுப்படுத்தி, நியம தர்ம வாழ்க்கையில் நடந்து வந்ததால், சத்ரு நிக்ரஹம் என்பதே கிடையாது. ஆனால் தண்டம் என்கிற திரிதண்டம் சன்யாசிகளுக்கும், பேதம் என்கிற ஜதிஸ்வரதாளங்களின் பேதம்

கீதத்திலும், நர்த்தக நிருத்ய ஸமாஜத்திலும், ஜயிப்பது என்கிற சொல் மனம் ஒன்றைத்தான் ஜயிப்பது என்கிற சொல்லாகவும்' ஸ்ரீராமச்சந்திர ராஜ்யத்தில் கேட்கப்பட்டன. அபராதிகள் ராஜ்யத்தில் இல்லாதபடியாலும், ஜனங்கள் மனத்தை அடக்கி ஸந்துஷ்டியாக விருந்தபடியாலும், சங்கீதம், ராமபக்தி என்கிற ஸன்மார்க்கத்தில் ஜனங்களின் மனம் சென்றபடியாலும், ஜனங் கள் எது நியாயம், எது அநியாயம் என்று தெரிந்து கொண்ட படியால், இந்த உலகத்தை மாயாமயம் என்று விவேகத்தினுல் அறிந்துகொண்டு, ஸகல துர்குணங்களை ஒழித்து, காமாதி தோஷங்களையும் விலக்கி, மன இந்திரிய நிக்ரஹத்தால் ராமபக்தி செய்துகொண்டு, (தியாகராஜாதிகளைப் போல,) சீதாராமனை பரமார்த்தம், பரமாராத்யம், பரம புருஷார்த்தம் என்று விஸ்வாசித்து வாழ்ந்துவந்தார்கள். (அப்பேற்பட்ட பரம பாகவத உத்தமர்களான ஸாகேதபுரிவாசிகளை, நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரித்து, எனக்கு ராமகார்யம் எது என்று சொல்லி போதிக் கும்படி பிரார்த்தித்துக் கொள்கிறேன்.) (158)

[தியானம்

சீதாராமா, நாராயணு, காமாதிகள், தோஷங்கள் விலக வேண்டுமானுல் உன்னுடைய பாதங்களையே பஜிக்க வேண்டும் என்று தியாகராஜாதிகள் சொல்லுகிருர்களே. ப்ருங்கி, நடேச கும்ப ஸம்பவ, வாகீஸ, மஹேசாதிகளின் சேர்க்கை ஸம்பந்தம் கொண்ட ராமபக்தியல்லவா சங்கீத சாஸ்திரத்தின் மர்மமாக விருக்கிறது. ஹே கஜரக்ஷக, ராஜகுமாரா, முனிராஜவேஷதரா, ஓங்காரஸதன், பாகவதப்ரியனுகிற ஸ்ரீராமா, ரகுநந்தனு, என் வீட்டிற்கு, என் ஹ்ருதயத்திற்கு வரமாட்டாயா? ரகுகுலாப்ஜ சந்திரா, உன் ராஜ்யபாரம் ஸுரநர, அசுர, கந்தர்வ, யக்ஷ, உரக ராக்ஷஸர்களுடன் கூடிய ஜகத்தைக் காப்பாற்றியது. உன்னையல்லவோ சகல சராசரங்களும் பின்பற்றி வாழ்கிறது. யோகம், ஞானம், வைராக்யம், ஸாங்கியம், சகல வித்யைகளும், சில்பம் முதலிய சாஸ்திரங்களும், வேதங்களும், விக்ஞானம், ஸுக்ஞானம் என்று சொல்லப்படும் உன் பாத மகிமை களும், ஸம்பந்த ஞானம் எனப்படும் உன் பாகவத பிரேமையும் எல்லாம், உன் பாதங்களைத்தான் நம்பி வாழ்ந்து வருகின்றன. ஆதலால் சங்கீத சாஸ்திரத்தின் மர்மங்களை அறிவது, உனது ஸாந்நித்யத்தை அடைந்தவர்களால்தானே அறியக்கூடும்; அதுவும் உனது ஸாந்நித்யத்தை அவர்கள் அடைந்தால்தானே

ஸம்பவிக்கும்? ராகவா, நீ தயை செய்யாது போனால், நான் ஒரு க்ஷணம் வாழ முடியுமா? நீ கிருபை செய்யாவிடில், எனது பூஜை பலிக்குமா? ராமா, நீதானே எனக்கு ஸர்வமும் என்றும், நீதான் ஸாமவேதத்தின் சாரம் என்றும் சொல்லும் போது, என் மமகாரம் ஒழிந்தது என்று நீ சந்தோஷப்படமாட்டாயா? நீயும், உன் ஜானகியும் மனம் ஒப்பி என்னை அனுக்ரஹிக்காது போனால், என் மாயை ஒழியுமா? ஒரு ஸ்திரீயை மூர்க்கத்தனத்தால் நான் அடைய முடியுமா? ஹே தாரக நாமா, ராகவா, கருணாரஸாக்ஷா எனக்கு நீ சௌக்யம் நினைப்பாயாகில், மனதினால் உன்னை நான் வந்து அடைய வேண்டுமென்று நான் ஸங்கல்பித்துக் கொண்டால், உங்களை அனுபவிக்கிற பிரேமை பக்தியும், உன் தாஸர்களின் பக்தியும், உனது தாரக நாமமும், உனது ராமகதாம்ருதத்தில் யேற்படும் வாத்ஸல்யமும், சீதையின் கடாக்ஷமும், உங்கள் இருவர்களுக்குச் செய்யும் பூஜையும், ஆராதனைகளுடன் கூடிய நியமநிஷ்டைகளாக விருக்கவேண்டும். ஸ்வரராகஸுதா, நீதான் எனக்கு பரமானந்தம். உன் பாதங்கள்தான் எனக்கு ஆதாரம். உனது கதாம்ருதம்தான் எனக்கு நாதமேரு. உனது ஸாமீப்யம்தான் எனக்கு மோக்ஷம். கோலாகலத்துடன் ஸப்தஸ்வரங்களின் லயபாவத்துடன் கூடிய ஸம்யோக சேர்க்கைதான் எனக்கு பாகவத சேர்க்கை. பிருங்கி நடேச, கும்பஸம்பவரான அகஸ்திய, லோபாமுத்ரை, ஆஞ்சநேய, மதங்க, நாரத, பராசராதிகள், தியாகராஜஸ்யாமா சாஸ்திரிகள், தீக்ஷிதர் போன்ற மஹானுபாவர்கள் எனக்கு குருக்கள். ஹே காம ஜனகனே, என்னிடம் வா அப்பா. தியாகராஜாதிகளின் மார்க்கத்தில் வரும் எனக்கு உன் கிருபையை தா. பவனதனய வினுதசரண, எனது க்ஷேமத்தை கொஞ்சம் நினைத்துப்பார். சீதா, பரத, ஸௌமித்ரி, சத்ருக்ன, ஆஞ்சநேய, தியாகராஜ ஸேவித ராமா, மஹேசஸ்துதா, என்னிடம் வா, என்னிடம் வா.]

"ராமராஜ்யத்தில்," விருக்ஷங்கள் ஸதா புஷ்பங்களையும், பழங்களையும் காய்த்து சுமந்துகொண்டு மனிதர்களுக்கும், பக்ஷிகளுக்கும், ஸகல சராசரங்களுக்கும் சந்தோஷத்தைக்கொடுத்தன. யானைகளும், சிம்மங்களும் தங்கள் வைர ஸ்வபாவங்களை மறந்து, ஒன்றாகக் கூடி சந்தோஷித்தன. அதேமாதிரி பக்ஷிகளும், மிருகங்களும், விரோதங்களையும் மறந்து, ஸஹஜ ஸ்வபாவத்துடன் ஸதா ராமபக்தி பிரேமையுடன் ஓடித்திரிந்தன. ஸர்வ கதியுள்ள பரமாத்மா, சகல சராசரங்களுக்கும் அதிபதி, மஹி

பர்த்தா மஹரிஷியைப் போலவும், ராஜரிஷி, பிரும்ம ரிஷியைப் போலவும், சக்கிரவர்த்தியைப் போலவும், ஸர்வமேதினி பதியைப் போலவும் விளங்கினர். அவருடைய பிரஜைகள், அரசனுடைய ஸ்வபாவத்தைப் போல, அவருடைய தர்ம ஆசரணைகளுக்கு ஒத்து வாழ்ந்தனர். எங்கு பார்த்தாலும் பரஸ்பர ப்ரீதி ஏற்பட்டது. ஸம்விருத்தி உண்டாகியது. (159)

பக்ஷிகள் ஸதா சந்தோஷ சமாசாரங்களைச் சொல்லுவதைப் போல, நல்லதும் மங்களமான குரல்களுடன் மதுரமாகப் பேசின. மிருகங்களும் மனிதர்களும் பயமின்றி எங்கும் சஞ்சரித்தார்கள். அதனுல் சகலரும் ஆனந்த மடைந்தனர். பூமியில் சீதளம், மந்தம், சுகந்தம், ஆரோக்யம் ஆகிய குணங்கள் கொண்ட வாயு எங்கும் வீசியது. புஷ்பங்களும், பழங்களும் இனிமையான மகரந்த வாசனைகளைப் பெருக்கிக் கொண்டு, பார்ப்பதற்கும் தின்பதற்கும் மதுகரமாக விருந்தன. வண்டுகளும் ஸப்த ஸ்வரங்களுடன் மதுரமாக ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. பூமி ஸந்தோஷத்துடனும் ஸந்துஷ்டியுடனும் புஷ்டியுடனும் சோபித்தது. ("ராமா, உன் கிருபை தான் இதற்கு காரணம். அந்த கிருபை என்னிடம் இருக்குமா? தயை செய் அப்பா. என்னிடம் வா அப்பா? என் கண்களுக்கு சந்தோஷம் கொடு. உனது சேர்க்கையின்றி நான் வீணுக வாழ்ந்து கொண்டிருக்கிறேன். எனது பக்தியும் பிரார்த்தனையும் டம்பம் என்று நினைக்கிருயா? அதையாவது சொல்.") (160)

கொடிகளும், விருக்ஷங்களும் மார்க்கங்களில் மதுவைப் பொழிந்த வண்ணமாக விருந்தன. பசுக்கள் யதேஷ்டமாக பாலைக் கொடுத்து, யாவர்களின் மனத்தையும் சந்தோஷப் படுத்தின. பூமி எப்பொழுதும் தானியங்களைச் சுமந்து கொண்டிருந்தது. திரேதோ யுகத்தில் கிருத யுகத்தின் ஸம்பத் ஸ்திதிகள் அமோகமாக விளைந்தன. (161)

ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி ஜகத் ஆத்மாவான ஸ்ரீமந் நாராயணர், அவரே பூபதியாக அரசாண்டு கொண்டிருக்கிருர் என்று மனதில் நினைத்துக் கொண்டு, பர்வதங்கள் தங்களுடைய கோச ஸ்தானங்களில் சிறந்த ரத்னங்களையும் பிரகடனப் படுத்தி அமோகமாக விளைவித்தன. ஸகல நதிகளும் ஸ்ரேஷ்டமானதும் நிர்மலமானதும், ருசியுள்ளதும், குளிர்ந்ததுமான ஜல பிரவாஹங்களைப் பெருக்கிக் கொண்டு, ஜனங்களுக்கு அத்யந்த சுகத்தைக் கொடுத்தன. (162)

ஸப்த சமுத்திரங்களும் தங்கள் மரியாதையைக் காப்பாற்று பவர்களாக, வரம்பில் அடங்கியிருந்தன. அவைகள் அலைகளின் வழியாக விலை மதிப்புள்ள ரத்னங்களையும் முத்துக்களையும் கரை களில் சேர்த்து, ஜனங்களை சந்தோஷப்படுத்தியன. ஸகல தடா கங்களும் ஜலங்களால் நிரம்பி, அவைகளில் தாமரை புஷ்பங்கள் பரி பூர்ணமாக விகஸித்து மனத்தை சந்தோஷப்படுத்தின. பத்து திக்குக்களும் நிர்மலமாகவும் சந்தோஷத்தை வாரிக் கொடுப்பது போலவும் பிரகாசித்தன. (163)

சந்திரன் ஸ்ரீராமச்சந்திரனுடைய ராஜ்யத்தில் அம்ருதத்தை வர்ஷித்தான். அவனுடைய சீதளமான கிரணங்கள் ஸகல தாபங்களையும் போக்கி, சுகத்தைக் கொடுத்தன. சூரியன் எவ்வளவு தூரம் உஷ்ணத்தைத் தபிக்கச் செய்ய வேண்டுமோ, அந்த அளவுக்கு அவன் தினமும் காய்ந்து, சுகத்தை யாவருக்கும் கொடுத்தான். வழிகளிலும் மார்க்கங்களிலும் தண்ணீர் எவ்வளவு தேவையோ, அந்த அளவுக்கு மேகங்கள் வர்ஷித்தன. இவ்விதமாக ஸ்ரீராமச்சந்திரனுடைய ராஜ்யத்தில் ஸூர்யன் சந்திரன் மேகங்கள் யாவரையும் சந்தோஷிப்பித்தன. (164)

பிரபு ஸ்ரீராமன் கோடிக்கணக்கான அஸ்வமேத யாகங்களைச் செய்தார். அநேக பிராம்மண ஸ்ரேஷ்டர்களுக்கும் தீனர் களுக்கும் பிரபு அமோகமாக தானம் செய்தார். என் பிரபு தர்மர், தர்ம துரந்தரர், தர்மத்வஜர், தர்ம வாஹனர், வேதங் களில் சொல்லியபடி தர்மங்களை அனுஷ்டித்தார். என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் மஹா நாராயணர், பிரக்ருதி சம்பந்தத்தால் உண்டாகும் ஸத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களுக்கு அப்பால் இருப்பவர், குணாதீதர், ஒன்றிலும் பற்றப்படாதவராக விருந்து மஹேந்திரனுக்கு ஸமமாக போக போக்யங்களை அனுப வித்தார். (165)

[தியானம்

நாராயணா, சீதா பிரபோ, ராமா சீதா, அயோத்யா சக்கிரவர்த்தி ஸ்ரீராமச்சந்திரா, உனக்கு ஆயிர நமஸ்காரங்கள், ஆயிர ஜயமங்களங்கள் செய்து ஸ்வஸ்தி வசனங்கள் பாடி ஆனந்தம் அடைகிறேன். பிரபோ, மஹாலக்ஷ்மி நாயகா, உங்கள் அனுக்ரஹம் பெற்ற அயோத்தி, நவகிரஹங்கள் என்னும் தேவர்கள், உன்னடியார் தம் அடியாரடியார் தமக்கு அடியாரடி யார் தம் அடியார்கள் உன் திருவாசலில் காத்து நிற்கும்

போது, ஏன் பரம மங்கள ஐஸ்வர்யங்களுடன் விளங்காது? என் திருவேங்கடவா, உனது மனைவியான ஜானகிதேவி, பூமியின் குமாரியாகவும், நீ அவளுக்கு மஹீபர்த்தாவாகவும் இருக்கும் போதும், ரிஷிகளும், தேவர்களும், ஸித்த ஸாத்யர்களும் அயோத்யா புரவாசிகளாக விருக்கும் போது, தளிர் போன்ற உங்களுடைய சங்கல்பம் மிக மிக மென்மையாக விருக்கும் போது, ராமா, சீதா பிரபோ, உன்னுடைய தாமரைத் திருவடிகளை அவர்கள் பற்றிக் கொண்டிருக்கும்போது, ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிற உன் ஜானகி, உனது ராஜ்ய ஸம்பத்துக்கள், உனது தர்ம ஆசரணைகள், தங்கள் தளிர்போன்ற கைகளால் தங்கள் பதாப்ஜங்களை வருடும்போது, உனது ஸங்கல்பம் மாத்திரம் வெண்ணெயைவிட மிக மிக மென்மையாக விருக்கும் என்பதில் என்னப்பா சந்தேகம்? உனது அடியார்களுடைய க்ஷேமத்திலேயே உனது மனம் நிலைத்து நிற்குமே. அன்று கோபிகைகளிடம் பதிந்த மனமுடைய கண்ணபுரத்தம்மானின் கருத்துப்போல அல்லவா அது நிர்மலமாக விருக்கிறது. ரஜஸ் தஜஸ் குணங்கள் விலகி, சுத்த ஸத்வ ஜோதியாக நீ விளங்குகிறாய். உனது ஞான ஸ்வரூபம் அயோத்யா வாசிகளின் ஸுஷுப்தி, ஜாக்ரதா, ஸ்வப்ன, துரியாவஸ்தைகளில் விருத்தியாகும்படி விருக்கும் ஆத்ம தத்வத்தைப் பிரேரணை செய்து, உனது பக்கலில் நீயாக வல்லவோ அவர்களை சேர்த்துக் கொள்கிறாய். உனது லீலைகளும் வேடிக்கையாக விருக்கின்றன. மனத்திற்குள்ளே விருக்கும் அந்தர்யாமியாகிற நீர், ராமா, அவர்கள் உம்மைப் பிரத்யக்ஷமாக காணும் போது, உமது பெருமைகளை தியானிக்க முடியாதபடி வேண்டுமென்று நீ ஸங்கல்பித்து வெகு தூரத்திற்கு வலுவாக ஓடிப் போகிறாய். சீதா நாயகா, கண்ணுக்கு சமீபத்திலிருக்கும் போது மனம் வேறிடத்திற்குச் செல்லுகிறது. ஆதலால் யோகிகள் ஸதா உன்னை மனத்திலேயே பதிய வைத்து இன்புறுகிறார்கள். மனம் அனன்ய கதியாக உன்னை வந்து அடைய வேண்டுமானால், உத்தம ஸ்லோகனான நீர் மற்ற எண்ணங்கள் யாவற்றையும் ஒழித்து, அனுதினமும் இடைவிடாமல் உனது தியானத்தின் உதவி ஒன்றினாலேயே உன்னை அடைய விரும்புகிறாய். அது எப்படி யெனில், ஸ்திரி புருஷனின் சமீபமிருக்கும் போது, அவளுடைய மனம் வேறிடத்திற்குச் செல்லுகிறது. கணவன் பிரிந்திருக்கும் சமயம் அவளுடைய மனம் கணவனிடம் செல்லுகிறது. இவ்விதமாக ராம சீதா பிரபோ, உனது ஸங்கல்பம் ஒருவனை உன் பக்கம் அணைக்

கிறது. அதுவே அவனை உன் பக்கலிலிருந்து ஒதுக்கி விடுகிறது. யோகம், ஸாங்கியம், தியானம், தவம், தமம், ஸத்யம் அஹிம்சை இவைகளைப் போதிக்கும் வேதங்களும் மனத்தை அடக்குவதில் தான் முடிகிறது. மனம் அடங்கினால், புத்தியும் பிராணனும் அடங்கி இந்திரியங்களும் அனுசரணையான குணங்களுடன் உன்னை வந்து அடைகின்றன. ஸர்வாகர்ஷிணிகா முத்ரையைக் கொண்ட சீதா பிரபோ, பிராணேசா, பிராண த்ருக், பிராண நிலையரே, பிராண ஜீவனரே, என்னையும் உன் ஸம்பிரதாய விஷயத்தில் உனது மன சங்கல்பத்தினால் ஏற்றுக் கொண்டு, உய்ய வைக்க வேண்டும். ராமா, சீதா நாயகா, ரகு நந்தனா, கிருபை செய்.]

ஜானகிதேவி தனது பதியாகிற ரகுநந்தனுக்கு ஸதா மனோனுகூலையாகவிருந்து, அயோத்தியையும் அயோத்யாவாசிகளையும் பூர்ணமாகக் கடாக்ஷித்தாள். அவளுடைய கருத்தும் ஸ்வரூபமும் மங்கள விக்ரஹமும் ராமஹ்ருதயத்திலும் ராமபக்கலிலும் ராம ராஜ்யத்திலும் பிரகாசிக்கும்போது, எங்கு பார்த்தாலும் சோபித மாகவிருந்தது. ஜனங்களும் சுத்த நடத்தையுள்ளவர்களாகவும் சுசீலகுணமயர்களாகவு மிருந்தார்கள். அவர்களுக்கு சீதாராம ஸம்பத் யேற்பட்டபோதிலும், மனம், புத்தி, பிராணன், இந்திரியங்களின் நிக்ரஹம் ஆகியவைகளுடன் பரமபுனித அடக்கமுள்ள வர்களாகவிருந்தார்கள். சீதாதேவிக்குத் தெரியும் "என் பிரபு கிருபாஸமுத்திரம். ஸர்வ ஸ்ரேஷ்டரான மகிமைகளுடன் பிரகாசிக்க விரும்புகிறார்; நானும் அவருடைய கமலபாதங்களை தினமும் வணங்கி, ஸேவைசெய்து, மனத்தையும் புத்தியையும் அவருக்கே அர்ப்பித்துவிட்டால் எல்லோரும் அவ்வித தர்ம ஆசரணைகளுடன் இருப்பார்கள்," என்று நிரூபணம் செய்வதைப் போல, என் தாய் கருணாநாயகி ராமவிரதமாக ஸதா வாழ்ந்து வந்தாள். (சீதா, உன்னை ஆயிரம் நமஸ்காரங்கள் செய்து உனது மனத்தையும் புத்தியையும் வினயத்தையும் எனக்கு அருள்புரிய வேண்டும்.) (166)

[தியானம்

ஈஸ்வரி, சீதே, மஹாலக்ஷ்மி அம்மா, ஸர்வ பூதங்களுக்கும் நீதானே ஆஸ்ரயம். நாராயணன் எவ்விதம் ஸர்வசேதனர்களுக்கு இருப்பிடமோ, அதுபோல நீதானே ஸர்வ சேதனா சேதனர்களுக்கு ஆஸ்ரயம். உன் பெயராகிய மஹாலக்ஷ்மி

என்னும் திருநாமம் ஸுகந்தமாகவிருக்கிறது. ஸ்பரிசம், ரூபம், ரஸம், சப்தமாகிற உன் நாமதேயம் இவைகளுடன் கூடிய உன் கருணை ஸ்வரூபம், என்னை பரவசப்படுத்துகிறது. உனது ஞானபோதகமாகிற ஸ்ரீராமபாதங்கள் என்னை உனக்கு சிஷ்யனாக ஆக்குகிறது. உனது திருடமான ராமவிரதம் இருக்கிறதே, எனக்கு சீதாராம லாபமாகிற உங்கள் நினைவை அளிக்கிறதாகவிருக்கிறது. ஹே அநிந்திதே, உன்னுடைய விபூதிகுண ஐஸ்வர்யங்கள் என்னை மஹாமோகத்திலிருந்து காப்பாற்றட்டும். ஸ்ரீராமனை அறியவேண்டுமானால், உன்னை அறிந்துகொண்டு அல்லவோ, உன்னைக் காரணமாக கொண்டல்லவோ, நான் உங்கள் இருவர்களையும் அடையவேண்டும். ராமதயிதே, ஸர்வ கந்தன் எனப்படும் எம்பெருமான் நாராயணன் உனது மனத்தினால் அல்லவோ பரிமளிக்கிறான். ஹே, ஸ்ரீவிபாவனரே, ஸ்ரீயப்பதியே, சூர்யனிடமிருந்து பிரபையையும், சந்திரனிடமிருந்து குளிமையையும், சுக்ராசார்யரிடமிருந்து அனுஷ்டான ஆசார சீலத்தையும் எவ்விதம் பிரிக்கமுடியாதோ, அதைப்போல தேவி, உன்னை பெருமாளுடைய பக்கலிலிருந்து பிரிக்கவே முடியாது. நாராயண ப்ரியே, அக்னியைப் போல தேஜஸ் உள்ளவளே, அதனால் அல்லவா நீ "துராதர்ஷாம்," யாவராலும் ஜயிக்கப்பட முடியாதவள் என்று பெயர் பெற்றிருக்கிறாய். ஹே அம்ருதே, அம்ருத நிலையே, நாராயணி, மஹா திரிபுரசுந்தரி, தியாகராஜாதிகள் உன்னுடைய மருக்கொழுந்து போல மென்மையானதும் பசுமை நிறமுள்ளதுமான உன் அழகையும் ஸ்வபாவத்தையும் எப்போதும் குணபூர்த்தியுள்ள உன் நாமத்தை, நித்யபுஷ்டி, என்று சொல்லி உன் மங்களகர நாமத்தை ஸதா உச்சரித்த வண்ணமிருக்கிறார்கள். ராமதயிதே, பராசரர் உன்னை ஸ்துதி செய்யும்போது தேவர், மனுஷ்யர், ஊர்வன, பறப்பன, ஆகிய ஸகல ஜீவராசிகளுள் ஆணாயிருப்பது ஹரிபகவானும்; பெண் லிங்கமாயிருப்பது லக்ஷ்மியினுடையது என்றும், இவ்விருவரைக் காட்டிலும் பரம் என்று சொல்லப்படும் பொருள் யாதுமில்லை என்று சொல்லுகிறார். நீதான் எனக்கு புண்யத்தின் ராசி. ஸ்ரீமந்நாராயணருடைய கிரியைகளில் இச்சா சக்தியாகவிருக்கும் மஹாலக்ஷ்மியே, ஸ்ரீதேவியே, நித்யாதேவியே, ஞானமயமான உனது திருமேனி ராமபக்தியாக வடிவுகொண்டது, ராம உபவாஸத்தால் மந்திர ஸ்வரூபமுள்ளது. ஜடனாகிற ஸ்ரீராமனுக்கு இச்சையையும் காரியத்தையும் கொடுக்கும் காரணசக்தியாக விளங்குகிறாய். அதனால் உனக்கு கரீஷிணி என்கிற பெயரும்

ஸம்பவித்திருக்கிறது. யானைகளின் மேல் ஏறி சவாரிசெய்யும் ராஜமஹிஷி, ராஜலக்ஷ்மி, ஐராவதாதி ஸம்யக்ஸமான ஐராவ் ருதாம் ஸுபாம், என்று உனக்கு ராஜமஹிஷித்வமும், ராஜ்ய லக்ஷ்மித்வமும், ராஜயோகமும், ராஜலோசனங்களும், ஸம்பவித் திருக்கின்றன. ராஜா ராஜார்ச்சிதா, ராஜ்யதாயினி ராஜராஜேஸ் வரி, ராஜ்யவல்லபா, ராஜத் க்ருபா, ராஜபீடநிவேஸிதா, கோஸ நாதா, சதுரங்க பலேஸ்வரி, ஸாம்ராஜ்யதாயினி, ராஜலக்ஷ்மி என்கிற பல பெயர்கள் உனக்கு இயற்கையாகவே ஏற்பட்டிருக் கின்றன. ஸ்ரீவாஸுதேவ மஹிஷி, ஜயலக்ஷ்மி, க்ஷீராப்தி கன்யே, ரெங்கநாயகி, பெரியநாச்சியாரே, என்னிடம் கருணை செய், கருணைசெய் அம்மா அம்மா.]

ராமகிருஹத்தில் ஆயிரக் கணக்கான வேலைக்காரர்களும் வேலைக்காரிகளும் இருந்து பகவானுடைய தேவைகளை மிக்க ஜாக்ரதையுடன் கவனித்துவந்த போதிலும், என் தாய், ஸகல லோகமாதா, ஜனகரின் பெண், ராமதயிதே, ஸதா ராமகைங்கர் யத்திலே அனுவர்த்தித்துக் கொண்டு ஸதா கண்ணும் கருத்துமா யிருந்தாள். அந்த மஹாராஜி புண்யவதி நல்ல மனத்துடன் ஸகல ராமகைங்கர்யங்களை தனது திருக்கரங்களால் ஒவ்வொன் றையும் ஸர்வ ஜாக்ரதையுடன் செய்வாள். அதுமாத்திரமா, சீதாதேவி இங்கிதங்களாலும் மனோனுகூலையாக ராமகைங்கர்யங் களில் இச்சையுடன் ஈடுபட்டு ராம ஆக்ஞையை ஸதா எதிர் பார்த்த வண்ணமிருந்தாள். அவளுடைய பரிசர்ய காரியங்கள் ஸ்ரீராமச்சந்திரனுக்கும் ஆனந்தத்தைக் கொடுத்தன. அவளே தன் கணவருக்கு சாப்பாடு தயாரித்து போடுவாள்; படுக்கை விரிப்பாள்; துணிமணிகளையும் ஆபரணங்களையும் எடுத்து வைப்பாள். ஸகல காரியங்களையும் அவளே சரிவரச் செய்வாள். ("தர்மபத்னி, நீ தயை என்னிடமும் காட்டு அம்மா.") (167)

"கிருபா ஸாகரம் என்று சொல்லப்படும் என் பிரபு ராம நாதன் சுகத்தை எவ்விதம் அடைய விரும்புவாரோ, அந்த வழியைப் பின்பற்றி என் பரதேவதையான கைங்கர்ய லக்ஷ்மி ராமனுக்கு ஸேவைசெய்தாள். அவளே (நாராயண மஹரிஷியின்) கைங்கர்ய லக்ஷ்மியாகவிருப்பதால், ராஜரிஷியான ஸ்ரீராமச் சந்திரனுக்கு என்ன கைங்கர்யங்கள் தேவைப்படுமோ, அவை களைப் பூர்ணமாகவும் வேதவிதிப்படியும் முற்றிலும் அவளே அறிந்தவளாவாள். அதுமாத்திரமா, அவளுடைய கைங்கர்ய ஸேவைகள் கோஸலாதிபதிக்கும் மாத்திரமல்ல; அவருடைய தாய்மார்களான கௌஸல்யாதேவி, சுமத்திரா, கைகேயி தேவி

களுக்கும் அவள் சலிப்பின்றி கைங்கர்யம் செய்தாள். அதனால் அவர்கள் அதிக திருப்தி அடைந்தார்கள். மனித ஸ்வபாவத்தினால் ஏற்படும் தோஷங்களாகிற மானமோ, ஸ்வ அபிமானமோ, புகழ்வசனங்களால் யேற்படும் மதமோ, கர்வமோ இவைகளை ஒன்றும் பாராட்டாமல் அவள் பூர்ணகாமியாக வேலை செய்தாள். (168)

என் பிரபு மஹேஸ்வரர் உமையிடம் சொன்னார்: "பிரியமுள்ள உமா, ஸ்திரிரத்னமே, (உன்னைப்போல) சீதாதேவி, பதி விஸ்வாஸம் கொண்டவள். அவளே ரமாதேவியானபடியால், அவளே ஜகதம்பா, அவளைத்தான் பிரும்மா முதலான தேவர்களும், நானும், நீயும் உள்பட ஸந்ததும் நமஸ்கரித்து, ஆனந்தப்படுத்த வேண்டிய தெய்வம். அவளுடைய குணங்களிலோ, செய்கைகளிலோ, வசனங்களிலோ குற்றமே இருக்காது. அவளே அநிந்திதா; ஸர்வகுண ஸம்பன்ன பதிவிரதா நாரி." (169)

"இந்திராதி தேவர்கள், எந்த பரதேவதையின் க்ஷண நேர கடாக்ஷ வீக்ஷண்யங்களுக்கு ஆசைப்பட்டு, ஸதா தபஸ்ஸாகிற நியமங்களுடன் ஏங்கி நிற்கின்றார்களோ, அந்த மஹாலக்ஷ்மி அம்மா, என் தாய், சகலலோக நாயகி, அகிலாண்டேஸ்வரி, ஜகன்மாதா, ராமதர்மபத்தினி, தாக்ஷாயணி, விஷ்ணு பத்னி, மஹாதேவி, தன்னுடைய விபவங்களையும், மகிமைகளையும் விட்டுவிட்டு, தன்னுடைய ஸ்வாதந்திரிய ஸ்வபாவங்களைத் தியாகம் செய்துவிட்டு, அனன்ய சரணத்வம் என்கிறவிரதம் பூண்டு, ஸ்ரீராம பாதாரவிந்தங்களை சதா அணைத்துக்கொண்டு, நித்ய சேவை செய்து வந்தாள்." (அப்பேற்பட்ட ஸ்ரீராம சரணாரவிந்தங்களை அணைத்து நிற்கும் என் பகவதி ஜானகியை நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். அவளுடைய கிருபையை வேண்டி நிற்கிறேன். தாயே, என்னிடமும் கிருபை செய். திருவள்ளுவரிடம் வாசுகியைப்போல, அனன்ய பக்தியை, எனக்குக் கொடு.) (170)

[தியானம்

கமலேசரே, நளினாக்ஷரே, மஹாவிஷ்ணு, சங்கு சக்ர கதாப்ருதரே, பரதாக்ரஜரே, லக்ஷ்மண பூர்வஜரே, சத்ருக்னப் பிரியரே, மனைவி பக்தி, பித்ரு பக்தி, மாத்ரு பக்தி, சகோதர பக்தி, ஸ்திரி புருஷ சேவகர்களிடம் காட்டவேண்டிய பக்தி,

உமது பக்தர்களிடமும், தாஸர்களிடமும் காட்டவேண்டிய பக்தி, தர்மத்தில் பக்தி ஆகிய சகலவித பக்தி ஆசரணைகளில் பாதி விரத்ய விரதமுள்ள சீதை எவ்விதம் திருடமாக இருந்தாளோ, அதைப்போல நீரும், சாரித்திர புருஷனாகவல்லவோ வாழ்ந்தீர். மரியாதா புருஷோத்தம ராமா, சீதா, உங்களுடைய ஆசரணை களினால், அந்த பக்தி தர்மமே பெருமையடைகிறது. குற்றம் செய்த ராவணனைக் கூட கொல்லுவதற்கு மனமில்லாமல், அந்த பொறுமையைக் கைக்கொண்டீரோ? பர்த்தாவினிடத்தில் மிக்கச் சிறந்த பக்தியைச் செய்த சீதையையும், பதினைரு மாதங்கள் தவிக்கவிட்டதற்கு காரணம் உம்முடைய பித்ரு பக்தியா? ப்ராத்ரு பக்தியா? அல்லது மஹாத்மாவான ராவணன் சீதை யின் சாபத்தால், துர்மரணத்தை அடையாமலிருக்கும்படி செய்வதா? அல்லது உமக்கே தனிப்பட்ட முறையில் ஏற்பட்ட பொறுமை விரதமா? அல்லது அவனுக்கு உம் கையாலே நிக்ரஹம் ஏற்படுவதற்கா, அல்லது வானராதிகளிடம் காட்ட வேண்டிய சௌலப்ய சௌசீல்யமா அல்லது ராவணனுடைய தம்பியான விபீஷணனிடம் காட்டவேண்டிய அனுகம்பையா? ஒன்றுமே புரியவில்லை. வனமாலி, சார்ங்கதன்வா, சாரங்க பாணி, ஸ்ரீமந்நாராயணா, பரமபுருஷா, நீரே எனக்கு ரக்ஷணம், ரக்ஷகம்; கதிஸர்வமும் நீரே. தஞ்சம், நிக்ரஹம், பரிக்ஹம், அனுக்ரஹம், ஸர்வமும் நீரே, சீதாநாயகா கிருபை செய்யும். வாஸுதேவா, விஷ்ணோ, கிருபாஸிந்து.]

ஸகல பிராதாக்களான, பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் ஆகியோர்கள் ராமசீதா சரணங்களில் அதிகப்ரீதியுடன், அனுகூலமான மனதுடன் ஈடுபட்டு சேவை செய்து வந்தார்கள். அவர்கள் ராமனுடைய முக பங்கஜத்தைப் பார்த்து, அதற்கு யேற்ப இங்கிதங்களால் அவருடைய மனோரதங்களை அறிந்து கொண்டு, ஸர்வ ஜாக்ரதையுடன் வேலை செய்து வந்தார்கள். அவர்கள் ஸதா ராம ஆக்ஞையை எதிர்பார்த்தவண்ண மிருந்தார்கள். (171)

அவர்களுடைய அத்யந்த ப்ரீதியைக் கண்ட பிரபு ராமச் சந்திரன் அவர்களிடம் பரம ப்ரீதியை வர்ஷித்தார். அவர் தன் சகோதரர்களுக்கு நானாவிதமாக ராஜ நீதி, ஆஸ்ரம தர்மங்கள், இன்னும் அநேக தர்மங்களின் நுட்பங்கள் முதலியவற்றை மிக்க கிருபையுடன் உபதேசித்தார். அதேமாதிரி பிரபு அயோத்யாபுரி வாசிகளையும், தம்பிகளை நேசிப்பது போல நேசித்தார். பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய கிருபையினால், ஸகல ஸாகேதபுரிவாசி

களும், தேவர்களுக்கும் கிடைக்கப் பெருத சுகபோகங்களை அனுபவித்தார்கள். (172)

“அந்த மஹா பாக்யவான்கள், இரவும், பகலும் ஸதா ஸ்ரீ ரகுவீரனுடைய பாதசரணங்களில் உத்தம பக்தியை செய்து கொண்டிருந்தார்கள். ஹே பிரும்மா, எங்களை அயோத்தியில் ராம அனுசாஸனம் செய்யும் சமயம் பிறவி எடுக்கும்படி எவ்விதம் கட்டளையிட்டீரோ, அதைப்போல நாங்கள் சதா ராம பக்தியை அடைந்து, ராமசரணங்களில் படிந்து கிடக்கும்படி, பல காலம் எங்களுக்கு அனுக்ரஹிக்க வேண்டும்” என்று அவர்கள் வேண்டிக் கொண்டார்கள். மஹாலக்ஷ்மியின் அம்சமான சீதாதேவிக்கு, மஹா அழகு, அறிவு முதலிய ஸம்பத்துக்களுடன், பார்த்திப லக்ஷணங்களுடன் கூடிய லவன், குசன் என்கிற புத்ரர்கள் பிறந்தார்கள். அவர்களுடைய ராஜலக்ஷணங்களையும், பாண்டித்யத்தையும், சாரித்திரியமான நடத்தையையும் பற்றி, வேதங்களும், புராணங்களும் பலவிதங்களாகப் புகழ்ந்திருக்கின்றன. அவர்களின் மூச்சுக் காற்றே ஸ்ரீமத் ராமாயணமாக, ஜானகிதேவியின் புண்யமான மஹா சரிதமாக விளங்குகிறது. (173)

அந்த இருசகோதரர்களும் மிக்க கியாதிபெற்ற யுத்த வீரர்கள். மஹாகுணவான்கள். வணக்கம் அடக்கம் முதலியவைகளில் மிக்க தேர்ந்தவர்கள். பார்ப்பதற்கு மிக்க அழகான ராம ப்ரதிபிம்பம் போல விளங்கினர்கள். அவர்கள் ஹரிபகவானுடைய அம்சமாதலால் ராமனைப்போல உத்தம லக்ஷணங்களுடன் கூடினவர்களாக விருந்தார்கள். ஸ்ரீராமனைப் போல மற்ற சஹோதரர்களான பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் ஆகியவர்களுக்கும் புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களும் லவ குசர்களைப் போல அழகான ராஜலக்ஷணங்களுடனும் குணங்களில் பரிபூர்ணர்களாகவும், சுசீலமான நடத்தை உள்ளவர்களாகவும் விளங்கினர்கள். (174)

இந்தவிதமாக பிரகிருதியுடன் ஸம்பந்தம் பெற்ற ஞானம், சப்தபிருமம், இந்திரியங்கள் ஆகியவைகளால் அறியப்படக் கூடாத என்பிரபு ஸ்ரீராமச்சந்திரன், அதோக்ஷஜர், அஜர், ஜ்யேஷ்டர் விருத்தாத்மா, பிறப்பு இறப்புமில்லாத ஸநாதனரான நாராயணர், மனத்தாலும் கல்யாணகுண சேர்க்கையின் ராசிக் கூட்டத்தினுலும், ஓரளவு அடையாளங்களால் அறியப்படக் கூடிய நாராயணர், ஸச்சிதானந்த பிரும்மம், தொடர்ந்து அனு

பவிக்க வேண்டிய அம்ருதம், கனஸ்யாம ராமன் மானிட அவ தாரம் எடுத்த, ஸகல மனிதர்களையும் போல உண்டு, படுத்து, ஸர்வ ஸஹஜத்துடன் மஹாலீலைகளைப் பக்தர்களின் இன்பத்திற் காக செய்துவந்தார். (அப்பேற்பட்ட மாயா மானுஷ சரித்திர ஸ்ரீராமனுக்கும் சீதாதேவிக்கும் ஆயிரம் நமஸ்காரங்கள் செய் கிறேன்.) (175)

[தியானம்

ராமாசீதா, மஹாலக்ஷ்மிபிரியா, தரணிதரா, உன்னுடைய சாரித்திரிய ராஜரிஷி வாழ்க்கை மிக மிக உயர்ந்தது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த வாழ்க்கையில் ராவண, வாலி வதம், ராக்ஷஸ வதம் முதலியன ஏற்பட்டிருக்கிறது. நீ ராஜ சிம்மாஸனம் ஏறியபோதிலும், உனக்கும் ராமா, தர்ம புத்ராதி களையும் போல தாபங்கள் ஏற்பட்டிருக்கின்றன. தர்மர் வேத வியாஸரை அடைந்து, மஹா ஆறுதலைப் பெற்றது மாதிரி, நீயும், உன் தம்பிமார்களுடன், வஸிஷ்டபகவானையும், காஸ்யப, அகஸ்திய, வாமதேவ, விஸ்வாமித்திரர் போன்ற மஹரிஷிகளை யும் அணுகி, மிக்க சிரத்தையுடன் உபதேசங்களைப் பெற்றுக் கொண்டாய். கிருஷ்ணர் சாந்தீபினி மஹரிஷியையும், நாரதரை யும் அடைந்தது போல், நீயும் ஸன்மார்க்கத்தில் உபதேசம் பெற்றாய். அதனால் குலதர்மமும், வேதவசனங்களும், க்ஷத்திரிய தர்மமும், ஆஸ்ரம தர்மங்களும், ராஜ தர்மங்களும், உன்னால் பாதுகாக்கப்பட்டன. உலகத்திற்கு தர்மமே பிரமாணம் என்றும், அரசனாகிற நீ அந்த தர்மத்தை அனுஷ்டித்து, சிறந்த உதாரண மாக விளங்க வேண்டும், என்கிற நியம விரதங்களுடன் மஹா சிறந்த புருஷனாக வாழ்ந்து வந்தாய். வேதங்களால் நிச்சயிக்கப்பட்டதும், பிராம்மணர்களால் மிக்க சிரமப்பட்டு, காப்பாற்றப்படுகின்றதுமான தர்மங்கள் யாவும், பிரமாணங் களாகவும், சாஸ்வதமாகவுமிருக்கின்றன. அந்த தர்மத்தை ரக்ஷிப்பவன் க்ஷத்திரியனே. அரசனின் கட்டளையை மீறுபவ னும், உலக நடையையும், உலக மரியாதையையும் மீறுபவனும், ராஜ்யத்திலுள்ள வளர்ச்சிக்கும், ஜனங்களின் ஹிதத்தைக் கெடுப்பவன் எவனும், அவிவேகமுள்ள சேவகனானாலும், பார்யா, புத்ரனாகிலும், ரிஷியானாலும், பிரமாணமான தர்மத்தை, அப்பிரமாணமாகச் செய்கிறவன் பாவி யென்று நினைத்து, எல்லா உபாயத்தாலும் அடக்க வேண்டும்; இந்த முறைப்படி நீதி செலுத்தாது போனால், அரசனை பாவம் அடையும்.

தர்மத்தைப் பாதுகாத்த அரசனே மரியாதைக்குரியவனுவான். ஸவதர்மத்தால் தர்ம முறைப்படி அரசாளும் அரசன், பிரத்யக்ஷ பிரமாணமாக வாழ்பவனே புருஷோத்தமனுகிருன், என்கிற வேத வியாஸ வசனங்களின்படி வாழ்ந்துவந்த என் குலதெய்வமே, ரகுகுலஸோமா, சீதாநாயகா, தர்மேஸ்வரரே, பரமபூஜ்யரே, செய்யப்பட்ட பாபங்களுக்கும், தர்ம முறைப்படி பிராயசித்தம் செய்து, சரீரத்தையும், ஆத்மாவையும் சுத்தப்படுத்திக் கொண்ட சீதாராமா, உனக்கும், உனது தர்ம ஆசரணைகளுக்கும், வேதம், யக்ஞம், பிராம்மணர்களின் உபதேசங்கள், அவைகளில் நீ காட்டிய விஸ்வாஸம், ஆசரணை, அடக்கம், உனது ராஜதர்ம விவகாரங்கள் யாவற்றிற்கும், மரியாத புருஷோத்தம ராமா, சீதா, தம்பிமார்களுடன் கூடிய ராஜசேகரா, ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். என்னையும் உனது பொருளாக நீ ஸ்வீகரிக்க வேண்டும்.]

என் பிரபு ராஜ ராமச்சந்திரன், நித்ய சம்சாரியைப் போல காலையில் எழுந்து, சரயு நதிக்குச் சென்று, ஸ்நானம் முதலிய நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்வார். பிரபு ராஜஸபைக்கு எழுந்தருளி, பிராம்மணர்களை நமஸ்கரிப்பார். வஸிஷ்டபகவானை இதிஹாஸ புராணங்கள் சொல்லும்படி பிரார்த்திப்பார். தம்பிமார்களுடனும், சீதையுடனும், எல்லா உபதேசங்களையும் மிக்க சிரத்தையுடன் கேட்பார். வேதசாஸ்திரங்களை உண்டுபண்ணிய ஜகந்நாராயணர்; அநிருத்த நாராயணர் சாதாரண அரசனைப் போல, குலதர்மப்படி ராஜதர்மத்தைப் பரிபாலித்து, பிரும்மவாதிகளிடம் அடங்கி நடந்து பிரும்ம ஞானத்தைப் பெற்று, ராஜரிஷியைப் போல வாழ்ந்து வந்தார். (176)

அந்த மஹானுபாவன் தன் சகோதரர்களைக் கூட அழைத்துக்கொண்டு போஜனம் செய்வார். அவருடைய சகோதர பிரியத்தையும், தம்பிமார்களின் பிரேமை பக்தியையும் கண்டு, சகல தாய்மார்களும் சந்தோஷப்படுவார்கள். பரதன், சத்ருக்னன் ஆகிய இரு சகோதரர்களும், பவனஸுதனுகிற ஆஞ்சநேயரும் உபவனத்திற்குச் செல்வார்கள். அவ்விதம் ஒவ்வொரு நாளும் அவர்கள் ஒன்று சேர்ந்து செல்லுவது வழக்கமாயிற்று. (177)

அவர்கள் தினந்தோறும் அந்த நந்தவனத்தில் ஒரு புல் மேடையில் உட்கார்ந்துகொண்டு, சீதாராம குணம்ருதங்களை அனுபவிப்பார்கள். பரதனும், சத்ருக்னனும், ஹனுமான்ஜியை

ஒவ்வொரு விருத்தாந்தங்களையும் சொல்லும்படி நியமிப்பார்கள். மஹா விவேகபுத்தியுள்ள ஹனுமான்ஜி ராமாம்ருதத்தில் ஈடுபட்டு, ஆனந்த உல்லாசத்துடன், பாவராக தாளத்துடன், ராம சீதா குணங்களை ஆனந்தக்கிர்த்தனம் செய்வார். அவருடைய ஸத்பக்தியும், ஸத் ஸம்பிரதாயமும், பிரேமை வாத்ஸல்யமும், சங்கீத சாஸ்திரத்தின் மர்ம ஞானமும் அவருக்கு துணைபுரிந்தன. ஹனுமான்ஜியினால் நெஞ்சுருக பாடக் கேட்டு, அந்த இரு சகோதரர்களும் அடிக்கடி மெய்சிலிர்த்து, பரமவினய ஸம்பத்துக்களுடன் அந்த ஸ்ரீராம சரணாரவிந்தங்களை அந்த திசையை நோக்கி, கைகூப்பித் தொழுவார்கள். (178)

எங்கு பார்த்தாலும் ஆஞ்சநேயரால் பாடப்பெற்ற, ஸ்ரீ சீதா ராம பிரபாவங்கள் புகழடைந்து, அயோத்யாபுரிவாசிகள் அனை வரையும் பரம உத்சாகத்தில் ஆழ்த்தியது. ஒவ்வொரு வீட்டிலும் பரமபாவனமானதும், ஆஞ்சநேயரால் ஸ்துதி செய்யப்பட்டது மான ஸ்ரீ ராம சரிதம் மதுரமாகப் பாடப்பெற்று, அநேக பிரகாரம் புகழடைந்தது. அயோத்தியிலும், அதைச் சுற்றிய பிரதேசங்களிலும், ராமகுணாம்ருதம் எனப்படும் ராம சஞ்சீவினி, ஸ்ரீராமச்சந்திரன், சீதை ஆகியவர்களின் குணஸ்ரேஷ்டங்களை அடிப்படையாகக் கொண்ட ராம கதாம்ருதம் பரவியது. இதனால் யாவரும் இந்த பூலோகத்திலேயே பிரும்மானந்தத்தை அனு பவிக்க ஆரம்பித்தார்கள். இவ்விதமாக தினமும் இரவும் மாறி மாறி வந்துகொண்டு, ஆனந்தபூர்வமாக பல நாட்கள் சென்றன. இந்த மர்மம் யாருக்குத் தெரியப்போகிறது ! (179)

மஹா பாக்யம் பெற்ற அயோத்யாபுரிவாசிகள், ராம ஸம்பத் தாகிற சீதாராம தரிசனத்தையும், அவர்களின் பிரத்யக்ஷ பிரமாணமாக விளங்கும் ஸ்நேகம், பிரேமை, அன்பு முதலியவை களைக் கேட்டும், நேரில் பார்த்தும், கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து அனுபவித்தும், வைகுண்ட சுகத்தை நேரிலேயே இங்கேயே அனுபவிக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் அடைந்த ஆனந்த இன்பத்தை ஆயிரம் நாவுகள் கொண்ட சேஷபகவானே வர்ணிக்க முடியாது. இந்தவிதமாக என் பிரபு சக்கிரவர்த்தி ராமன், சீதையுடனும், தம்பிமார்களுடனும், ராஜ்யபாரம் செய்து கொண்டு, ரகுகுலத்தையும், அயோத்தியையும் பிரகாசிக்கச் செய்தார். (அப்பேற்பட்ட ரகுகுல ராமனுக்கு, ஸாகேதபுரி ராம னுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் நான் செய்கிறேன். ஆஞ்சநேயா, நீதான் எனக்கு உதவவேண்டும்.) (180)

[தியானம்

"ராமச்சந்திரா, சீதாபதே, ரகுகுல பதி, ராஜராஜ வந்திதா, உன்னை தர்மஸ்தாபனம் செய்வதற்காக அவதரித்தவன் என்று சொல்லுகிறார்களே? அது என்ன தர்மம்? நீ யாரை ரக்ஷிக்கப் பிறந்தாய்? அந்த தர்மம் எங்கு போய் ஒளிந்து கொண்டிருந்தது? பரசுராமரின் கர்வத்தைப் போக்கிய ஸ்வதர்மனுஷ்டானம் உள்ள ராமா, தசரதபுத்ரா, பரசுராமரால் பூமி ஓரளவு க்ஷத்திரிய பயத்திலிருந்து காப்பாற்றப்பட்டது. பிறகு பரசுராமர் அந்த பூமியை காஸ்யபருக்கு தானம் செய்தார். அப்பொழுது காஸ்யபரின் மடியின் மீது குமாரியைப் போல விளங்கிய பூமிதேவி, ஊர்வி, மாதவி, காஸ்யபி என்கிற பெயர்களுடன் விளங்கினாள். அவளால் இந்த உலகத்தின் அராஜகமானது தீர்க்கப்பட வேண்டும் என்று வேண்டிக் கொள்ளப்பட்டது. பலமுள்ளவர்கள் பலம் குறைந்தவர்களை அடிக்கத் தொடங்கினார்கள். அக்காலத்தில் பொருள்களால் பிரபுத் தன்மை எவனிடமும் நிலைத்திருக்கவில்லை. மூர்க்கர்களாக சில பிராம்மணர்கள் தங்களை பண்டிதர்கள் என்று நினைத்துக் கொண்டு, அஹங்காரத்துடன் கள்ளைக் குடிக்கத் தலைப்பட்டனர். பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைஸ்யர்கள், சூத்திரர்கள் யாவரும் கெட்ட வழிகளில் சென்றார்கள். அடுத்தவர்களைக் கொலை செய்யவும் தலைப்பட்டார்கள். ஸ்வதர்மத்தையும், ஸநாதன தர்மத்தையும் தியாகம் செய்து விட்டு, அவர்கள் பாஷாண்டியர்களானார்கள். எல்லோரும் திருட்டு பொய் மாயைகளைச் செய்தனர். ஆஸ்ரம தர்மங்கள் கெடுக்கப்பட்டன. கெட்ட நடை உள்ளவர்களுக்கு பயமும் லஜ்ஜையுமில்லை. பசுக்கள், பாலர்கள், கிழவர்கள், ஸ்திரிகள் நாசம் செய்யப்பட்டனர். வேதங்களும் தர்ம சாஸ்திரங்களும் ராஜ நீதியும் ஒளிந்துப் போயின. இவ்விதமாக பூமி தேவி பல விதங்களால் பீடிக்கப் பட்டாள். பூமி தேவியின் சொற்படி காஸ்யபர் பூமியில் ராஜாக்களை நியமித்து வீரசாலிகளானவர்களும், தயையுள்ளவர்களும், பிராம்மணர்களிடமும் பசுக்களிடமும் அன்பு கொண்ட க்ஷத்திரியர்களை வரவழைத்து காஸ்யபர் ராஜ்யாபிஷேகம் செய்து வைத்தார். அவர்களுடைய வம்சங்கள் நிலைபெற்று, அவர்களால் தர்மமும் ராஜ நீதியும் காப்பாற்றப்பட்டது. தவத்தின் பெருமையும் தர்மத்தின் பெருமையும் இவ்விதமாக ஸ்தாபிக்கப்பட்டு, நான்கு ஜாதிகளுக்கும் விரோத பாவமில்லாமல் அனுஷ்டிக்கப்படுவதுமான தர்ம நூல் உம்மாலும் ஸ்தாபிக்கப்பட்டது. தேச, ஜாதி குணங்

களுக்கும், தர்ம லக்ஷணம் வேதத்தில் சொல்லியபடியும், பெரியோர்களின் வாக்குக்களால் சொல்லப்பட்டதுமான ஸநாதன தர்மம் ராமா, ராஜாதி, ராஜ ராமா, ஸார்வ பௌமா, வஸுதாதிபா, உன்னால் நன்கு நிலை நாட்டப் பெற்றது. பிரவிருத்தி தர்மமும், நிவிருத்தி தர்மமும் ஆகிற இரு வழிகளும் உம்மால் நிலை நிறுத்தப்பட்டன. இதிஹாஸ புராணங்களில் சொல்லப்பட்ட தர்மங்களும், வேதத்தில் சொல்லப்பட்ட ஆசார அனுஷ்டானங்களும், வர்ணாஸ்ரம தர்மங்களும், நிலை நிறுத்தப்பட்டன. இவ்வுலகில் சந்தேகப்படக் கூடிய விஷயங்கள் அனைத்திலும் உம்முடைய வாழ்க்கை அந்த சந்தேகங்களை அறவே போக்கத் தெளிவாக உம்மால் நடத்தப்பட்டது. இவ்விதம் சிறந்த ராஜ ரிஷியின் நடத்தையுள்ள உன்னை, ரகுகுலஸோமா, சீதா நாயகா, கோஸலாதிபதி, ராஜ ரிஷிகளை முன்னிட்டு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பீஷ்மரைப் போன்ற ராஜ ரிஷியே, என் மனுவே, மோகமுள்ள என்னை நீர் தான் ரக்ஷிக்க வேண்டும்.'']

"நாரதாதி ஸனகாதிமுனிவர்கள், காஸ்யபர் வசிஷ்டர், விஸ்வாமித்திரர், அகஸ்தியர், பரசுராமர், பிருகு, சியவனர் போன்ற மஹரிஷிகள் சக்கிரவர்த்தி ஸார்வ பௌமராக விளங்கும் உம்மிடம் வந்து சேர்ந்தார்கள். உம்முடைய ராஜ்ய பாரமும் தர்ம பரிபாலனமாகிற ஸாது ஜன ரக்ஷகமும், பிரஜா பரிபாலனமும் அவர்களுடைய உள்ளங்களைக் கவர்ந்தன. அவர்கள் உன்னை கோஸலாதீஸரான சக்கிரவர்த்தி கோலத்தில் ராஜ தர்பார் நடத்தும் சமயம் உம்மிடமும் ஜானகியிடமும் வந்து, உங்களைத் தர்சனம் செய்து, மஹாபாக்யம் பெற்று, உங்களைப் பல்லாண்டு பல்லாண்டு பாடி மங்களா சாஸனம் செய்ய வந்தார்கள். (அவர்களுடைய பாததூளிகளினால் அயோத்தியும் பிரபுவாகிற நீரும், சீதையும், பரிசுத்த மாக்கப்பட்டீர்கள். ஹே தீர்த்தராஜ, தீர்த்தகரா, மஹா தீர்த்தமான அந்த பிரும்ம ரிஷிகளுடைய ஸம்பந்தம் பெற்ற நீர் ராஜஸேகரனாக விளங்கினீர். தினம், இரவு என்று பாராமல் பிரும்ம ரிஷிகள் வந்து போய்க்கொண்டிருந்தார்கள். அஸிதர், தேவலர், காத்யாயனர், பராவஸு, விஸ்வாவஸு, ஸப்த ரிஷிகள், பர்ஹிக்ஷித்துக்கள் யாவரும் வந்து சேர்ந்தனர்) அவர்களைப் பார்த்ததும், ஸகல வைபோகங்களையும் கொண்ட அயோத்யா ஜனங்கள் வைராக்ய ஸம்பத்தையும் அடைந்தார்கள். அதே மாதிரி அவர்களும் தங்களுடைய

தபஸ்ஸுகளேயும் நிவிருத்தி தர்மங்களேயும் மறந்து போஞர்கள் அல்லவா ?'' (181)

அயோத்தியில் எங்கு பார்த்தாலும் மாட மாளிகைகள், கூட கோபுரங்கள் தங்கத்தாலும் ரத்ன மணிகளாலும் நன்ருக அலங் கரிக்கப் பட்டிருந்தன. மனத்திற்கும் கண்களுக்கும் ருசியுள்ள தாகவும், நாஞ விதமான வர்ணங்களுடனும் அந்த மாட மாளி கைகள் கட்டப்பட்டிருந்தன. அயோத்தியின் நான்குபுற வாசல் களும், கோட்டை மதில் சுவர்களும் பல வர்ணங்களுடன் பரம சோபிதமாக விளங்கின. (182)

அந்த அழகுகளேப் பார்த்தால் நவக்கிரஹங்கள் வெவ்வேறு வர்ணங்களுடன் பிரகாசிப்பது போலவும், ஒவ்வொரு கிரஹமும் பெரும் சேனைகளுடன் இந்திரனுடைய பட்டிணமாகிய அமரா வதியைச் சூழ்ந்து கொண்டு முற்றுகையிட்டது போல விளங்கின. அயோத்தியின் பூதளம், தெருவாசல்கள் ரஸ் தாக்கள் யாவும் பளிங்குக் கற்கலால் செய்யப்பட்டு பரம வைராக் யர்களான முனிவர்களின் மனங்களேயும் பார்த்தால் மோஹிக் கும்படி யிருந்தன. (183)

இந்த பளிங்கு மாளிகைகள் ஆகாயத்தை தொட்டு முத்த மிடுவது போல உயரமாகக் கட்டப்பட்டுவிருந்தன. ஒவ்வொரு மாளிகையின்மேல் தங்கக் கலசங்களும் வெள்ளிக் கலசங்களும் வைக்கப்பட்டிருந்தன. அந்த கலசங்களின் பிரகாசம் சூரிய னுடைய தேஜஸ்ஸையும் சந்திரனுடைய ஒளி காந்தியைப் போல விளங்கின. எங்கு பார்த்தாலும் ரத்னங்களும் முத்து மணிகளும் வைக்கப்பட்டு, பரம சோபிதமாக இந்த கலசங்கள் விளங்கின. ஒவ்வொரு வீட்டிலும் ரத்னமணி தீபம் எரிந்து கொண்டிருந்தது. (184)

ஒவ்வொரு வீட்டிலும் ரத்ன தீபம் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு வீட்டின் நடை பாதைகளில் விளக்கு வைத்தாற் போல ரத்னங்களின் ஒளி வீசிக் கொண் டிருந்தது. தூண்கள் பவழம், ரத்னமயமாகவும், சுவர்கள் தங்க மயமாகவும் அதில் பதிக்கப்பட்ட மரகத மணிகள் வாசற்படி களிலும் கதவு ஜன்னல்களிலும் தொங்கிக் கொண்டு பார்க்கப் பார்க்க வெகு நேர்த்தியாகவும், பிரும்மாவே ஸ்வயமாக தனது கைகளின் சாமர்த்தியத்திஞல் படைத்திருப்பது போலவு மிருந்தன. ஒவ்வொரு வீடும் மிகப் பெரியதாகவும் விசாலமாகவு மிருந்தது. ஒவ்வொரு வீட்டிலும் ஸ்படிகத்தால் செய்யப்பட்ட

முற்றமிருந்தது. அதன் கதவுகள் ஸ்வர்ணத்தால் செய்யப்பட்டு, வைரங்களால் பதிக்கப்பட்டு, மிக்க நேர்த்தியாகவும், வஜ்ரத்தைப் போல கடுமையான பாதுகாப்புடனும் இருந்தன. (185)

ஒவ்வொரு வீட்டிலும் அழகான சித்ர சாலைகள் இருந்தன. அந்த சித்திராலயத்தில் ராம சரித்திரத்தின் அழகான கட்டங்கள் சோபிதமான வர்ணங்களால் தீட்டப்பட்டு, பரம வைராக்ய மனம் படைத்த முனிவர்களின் ஹ்ருதயத்தைக் கொள்ளை கொள்வதாக விருந்தன. (186)

[தியானம்

கௌஸல்யா புத்ரா, தசரத குமாரா, ரகுநந்தனா, சுமித்திரா, கைகேயி ஸேவிதராமா, கமலேசா, என் வெங்கடேசபதே, ரமாபதி சீதாபதே, உனக்கு ஜய விஜயிபவ, என்று ஸதா நான் கோஷிப்பேனாக. சதுர்முக, பஞ்சமுக, ஷண்முக, யானைமுக பிரமுகாதி அகில தேவதைகளால் ஸேவிக்கப்பட்ட ராவணாரி, சரணாகதவத்ஸலா, உன்னுடைய சரணாகத தர்ம ரக்ஷணமானது நாரத ஸனகாதிகளைப் போல ஸாதுக்களை ரக்ஷணம் செய்வதற்காக மட்டுமல்ல. அகில வேத ஸார நிதே, பாபம் மலிந்தவர்களையும் வரம்புமீறி துர்விஷயங்களில் புகுந்து ஓயாமல் அபராதம் செய்பவர்களையும், பாபவாசனையினால் மேன்மேலும் பாபக் கூட்டத்திலேயே சஞ்சரிக்கும் மனத்தை உடைய என் போன்றவர்களையும், பரயாகிருபயா, ஸம்ரக்ஷிப்பதற்காக, பூலோகத்தில் அயோத்யா ராமனாகவும், விருஷசைல நாதனாகவும், வரத வேங்கடேசனாகவும், ஸ்ரீரெங்கபதியாகவும் அவதரித்திருக்கிறீர். பிரபோ, ஸகல சேதனா சேதனங்களால் விரும்பப்படத் தக்க ஸர்வ குணோத்தம விபூஷணங்களைக் கொண்ட தாசரதே, ரகுநாயகா, ராமரமேசவிபோ, தயாஜலதே, உனது நிஜஸ்வரூபம் பாரபக்ஷமின்றி கருணையையே ஸாரமாகக் கொண்டது என்று நான் நம்பி எனது ஆசார்யர்களான நாரத மார்க்கண்டேய ஸநகாதிகளை முன்னிட்டு, பார்த்தனுக்கு உன்னாலே காட்டப்பட்ட திவ்ய சரணாரவிந்தங்களை நான் பிரபத்தி பண்ணுகிறேன். உனது சக்கிரத்தண்ணல் காட்டும் வலக்கரமும், சீதையை அணைத்துள்ள உனது இடக்கையும் நான் பயன்பெற உன் சிறந்த வெங்கடேச சரண்ங்களைக் காண்பிக்கின்றன. என் மனத்திலும் எனது தலையிலும், காளிங்கனின் தலையிலும் வைத்த உன் செந்தாமரைப் பாதங்களை வை. காடுகளிலும், முனிவர்களுடைய மனதிலும் திகழும் குருபாதுகைகளாகிற சடகோபனின் திருமுடி

யிலும் அமர்த்திக்கொள்ளப்பட்ட உனது திவ்ய பாதசரணங்களை வைத்து என்னை அலங்கரி. மஹாபலிக்கு அருள்செய்த நாரணா, வாமனா, உனது கருமேனிவாட திருவேங்கட மலையின் சிகரத்தில் நிலைபெற்று நின்ற நெடியனே, வேதங்களின் சிந்தாமணியே, அனன்ய மனதுடன் பெரியோர்களால் காட்டப்பட்ட வழியில் நடந்துவரும் என்னை, துளசிதாஸ பக்தனை, தியாகராஜ ஆஞ்சநேய ஸேவித என்னை, ஒரேவிதமாக ஸ்வீகரித்து அனுக்ரஹி. உனது பாதாம்புஜங்கள் ஹர்ஷனுக்கு தாயின் முலைப்பாலைப் போல அம்ருதமாகவிருக்கட்டும். வ்ருஷகிரி ஈசா, ஸ்ரீவத்ஸமார்பா, ஸ்ரீதேவியே, எனது பிரபத்திக்கு ஸ்வயமாகவே உபாயம் உபேயமாக நிலையோடு விளங்கும் அலர்மேல் மங்கையே, நிஜஸ்ரீ ஆஸ்ரிதனுன ஸ்ரீநிவாஸனுகிற நீ என்னையும் எங்களையும் உங்களது கிங்கரர்களாக எப்பொழுதும் இருக்கும்படி அனுக்ரஹிக்க வேண்டும். எனக்காக வாழ்பவனுக நாங்கள் ஒருக்காலும் இருக்கக்கடவல்லோம், என்று அனுக்ரஹி. உங்களது நித்யஸேவா பலத்தைப் பெறும்படி வஸிஷ்ட விஸ்வாமித்திர பிரியனுகிற நீ க்ருபை செய்.]

ஒவ்வொரு அயோத்தியாவாசியும் தங்களது வீட்டில் நறுமணமுள்ளதும் பலவர்ண அழகுகளுடன் கூடிய புஷ்ப நந்தவனங்களை அமைத்திருந்தார்கள். அழகான தளிர்கள், கொடிகள், முல்லைப் பூக்களைப் போல புஷ்பக்கொடிகள் அமோகமாக விருந்தன. சம்பகம், புன்னுகம் மல்லி, ரோஜா, தவனம், மருக்கொழுந்து, கதம்பமந்தாரம், பாரிஜாத புஷ்பங்கள் இன்னும் அநேக உயர்ந்தஜாதி புஷ்பங்கள் வசந்தகாலத்தில் பூப்பதைப் போல, ஸர்வகாலங்களிலும் பூத்துக்கொண்டிருந்தன. அழகான பில்வமரங்களும், துளசிச்செடிகளும் அநேகம் அந்த நந்தவனங்களில் காணப்பட்டன.

மதுரமான கீதத்துடன் தேனீக்கள் அவைகளை முகர்ந்துகொண்டு, மனோஹரமான ஸ்வரங்களுடன் தேனை உறிஞ்சிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. மந்தமாருதம், ஸ்பர்சம், கந்தம், ஆரோக்யம் ஆகிய குணங்களுடன் மனத்திற்கு சந்தோஷத்தை கொடுப்பதுபோல ஸதா வீசிக்கொண்டிருந்தது. அநேகவிதமான பக்ஷிகள் மதுரமான குரல்களுடன் இனிமையாகக் கூவிக்கொண்டு, ஸப்த ஸ்வரங்களுடன், மதுரமாகப் பாடிக்கொண்டிருந்தன. எங்குபார்த்தாலும் மதுரமான கீதம், இனிப்பான சங்கீதம், மனத்தில் உத்ஸாஹத்தைப் பொங்கும்படி செய்யும்

உத்தம சங்கீத ஸ்ருங்கார பாவங்கள் கேட்கப்பட்டன. அயோத்தியாநகர் முழுவதும் சங்கீதமயமாகவும் மதுரமாகவும் விருந்தது. அந்த அயோத்தியை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். (187)

மயில்கள், ஹம்ஸங்கள், கொக்குகள், புருக்கள், இன்னும் அநேக அழகான பக்ஷிக்கூட்டங்கள் பார்க்கப் பார்க்க பதினுயிரம் கண்கள் தேவை என்று சொல்வதுபோல பரமசோபிதமாக விருந்தன. அவைகள் மித்ரபாவத்துடன் ஒன்றுக்கொன்று மதுரமாக ஸல்லாபம் செய்துகொண்டு யாவருக்கும் இன்பத்தை அளித்தன. அவைகள் நர்த்தனம் செய்துகொண்டு, தங்களுடைய பிரதிபிம்பங்களைப் பார்த்துக்கொண்டு ஆனந்தக் கூத்தாடின. (188)

கிளிகள், மைனுக்கள் ஆகியவைகளை பாலகர்கள் தங்கள் கைகளில் வைத்துக்கொண்டு விளையாடிக்கொண்டிருந்தனர். அவர்கள் அந்த பக்ஷிகளைப் பார்த்து "ராம், ரகுபதி ஜனபாலகா, என்று சொல்," என்று விளையாடிக்கொண்டு, சிறித்துக்கொண்டிருந்தனர். அந்தக் கிளிகளும் அவர்களுக்கு ஏற்ப ராம நாமாக்களைச் சொல்லிக்கொண்டு அவர்களை இன்புறுத்தின. ராஜத்வாரத்தில் அழகான வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அயோத்தியிலுள்ள வீதிகளும், சதுரங்களும், கட்டடங்களும், கடைவீதிகளும் பரம சோபிதமாகவிருந்தன. (189)

அந்தக் கடைவீதிகள் வர்ணிக்க முடியாதபடி அழகாயிருந்தன. சாமான்கள் மலிவாகவும் அதிகமாயும் கிடைத்தன. மலிவாக கிடைக்கப்பெருத சாமான்கள் ஒன்றுமேயில்லை. ஸ்வயம் லக்ஷ்மிபதியான நாராயணரே அரசனுக அவதரித்திருக்கிற போது, ஸாதுக்களே மஹாதபஸ்ஸின் பலனுக அந்த ராஜ்யத்தில் ராம குடையின்கீழ் வாழும்போது, லக்ஷ்மிதேவியே ஸ்வயம் சீதையாக அவதரித்திருக்கிற போது, ஸம்பத்துக்களுக்கும் ஐஸ்வர்யங்களுக்கும் என்ன குறைவுயேற்படும்? துணிவியாபாரிகளும், கொடுக்கல்வாங்கல் தொழில்புரியும்பாங்கர்களும், இன்னும் அநேக வியாபாரிகளும் அவர்களுடைய கடைகளில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால், குபேரன் பல ரூபங்கள் எடுத்துக்கொண்டு, உட்கார்ந்திருப்பது போலத் தோன்றினுர்கள். ஸ்திரீ, புருஷர், பாலகர்கள், விருத்தர்கள் யாவரும் சுகிகளாகவும், நல்ல நடத்தையுள்ளவர்களாகவும் அழகாக வாழ்க்கை நடத்துகிறவர்களாகவுமிருந்தார்கள். (190)

[தியானம்

காமாக்ஷி, விசாலாக்ஷி, என் மீனுக்ஷி, லலிதாதேவி, அனன்ய தேவதாத்வம் என்கிற விரதம் பூண்டு, கண்ணபுரம் ஒன்றுடையானுக்கே அடியேன் ஒருவர் குரியனே, என்று சொல்லும் மஹானுபாவர்கள் வாழ்ந்தார்களே, அதே போலே அனன்ய கதித்வம் விரதம் பூண்டு சீதை ராமனிடம் பதிபக்தி என்கிற நியம விரதத்தால் ராமனேடு கூடி இன்பம் அடைந் தாள். இந்த உத்தம சேர்க்கை தானே ஸ்ரீவித்யையென்றும் ராஜவித்யை என்றும் போற்றப் படுகிறது. அயோத்தி ஸ்ரீசக்கிர மாகவும், திரிபுரேஸ்வரி ஸ்ரீசக்ர நிலையாகவும், சீதாராம தம்பதிகள் சதாசிவனுடன் கூடிய லலிதா தேவியாகவும் விளங்கு கிருர்கள் அன்ருே? காதி வம்சத்தில் உதித்த விஸ்வாமித்திர ராலும், ஸனகாதிகளாலும், நாரத, அகஸ்திய லோபாமுத்ரா, துர்வாஸராலும் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீபுர ஸ்ரீசக்ரராஜ மார்த் தாண்ட பைரவா, மந்திரிணி, தந்திரிணியாகிற தர்மம், லோக பாலனம் ஆகிய சக்திகளுடன், கங்கை சரஸ்வதிகளால் சேவிக்கப்படும் கனகபவன சீதா ராமா, திரிபுரேஸி, நீங்கள் தான் என்னுடைய ஏகதைவதம். அனன்ய பிரயோசனம் என்கிற விரதத்துடன் வரும் என்னை, பராபராமாக விருக்கும் நீ, ஏக பராயணமாக விருக்கும் என்னை கடாக்ஷிக்க மாட்டாயா? நாம ரூப வர்ஜிதா, பவானி, ஸங்கீத யோகினி, ஸ்யாமளா, நீதானே ஸ்ரீ என்கிற அக்ஷரத்துடன் கூடிய மந்திர வித்யை, வீணுவதி, ராமவனத்தில் நடமாடும் கதம்ப வனவாஸினி, உன்னை வாராஹி, சிவா, சக்ரேஸ்வரி என்றும், தண்ட நாதா ஸமயேஸ்வரி என்றும் புண்ய ஸ்ரவண கீர்த்தனு, பந்த மோசினி என்றும் பக்தர்கள் சொல்லுகிருர்கள். ராமா, ரமேஸ்வரா, உன்னுடைய ஸ்ரீசக்ரத்தில் ரஹஸ் தர்ப்பணம் செய்கிறவர்கள், உன்னுடைய கழல்களைத் தொழக் கூப்பிய அஞ்சலி வைபவங்களின் பெருமையே பெருமை. ஸரயுத்துறைவா, திண்ணமாகத் தெளிந்து உனது சீதா வந்தித ராம பாதங்களை, உமாதேவியுடன் கூடிய மஹேஸ் வரரை முன்னிட்டு, ஆயிரம் தடவைகள் நான் நமஸ்கரிக்கிறேன். சீதையின் புன் சிரிப்பினுல் ஆகர்ஷிக்கப்பட்ட மனத்தை உடைய காமேசரே, உனது அழகிய புன் சிரிப்பையும் சுபமான ஸ்ரீ விரா ஜிதமான உங்கள் இருவர்களுடைய ஐக்ய மிதுனத்தையும் நான் ஸதா ஸேவித்துக் கொண்டிருக்க நீங்கள் தான் கிருபை செய்ய வேண்டும். ஸர்வலோக வசங்கரியாகிய நீதான் என்னையும் வசம் செய்துகொள்ளவேண்டும். நீதான் ஸாரமான ஸத் ஸம்பிரதாயம்.

நீதான் எனக்கு மஹாகுரு. உன் நாதனுடன் சேர்க்கை தான் எனக்கு ஸதாசிவத்தை அளிக்கக் கூடியது. ஸாத்வி, கிருபை செய். ராமாஞ்சலி செய்யும் என்னிடம் அன்புடன் இரு.]

வடக்கு திக்கில் ஸரயு நதி அழகாக ஓடிக் கொண்டிருக்கிறது. அதனுடைய ஜல பிரவாஹங்கள் நிர்மலமாகவும், கம்பீரமாகவும், அம்ருத மயமாகவும், மனோஹரமாகவும் ஓடிக் கொண்டிருக்கின்றன. அதில் அழகான ஜலக் கட்டங்களும், படித்துறைகளும் கட்டப்பட்டிருந்தன. ஸ்நானத்திற்கும், பார்ப்பதற்கும் மனோஹரமாகவுமிருந்தன. சகதியோ சேறோ அந்த தீர்த்தக் கட்டங்களில் காணப்படவில்லை. (191)

சிறிது தூரத்தில் இன்னும் அழகான ஸ்நான படித்துறைகள் கட்டப்பட்டிருந்தன. அந்த இடங்களில் குதிரைகளும் யானைகளும் ஸ்நானம் பானம் செய்வதற்கு அமைக்கப்பட்டிருந்தன. இன்னும் சில விடங்களில் ஸ்திரிகளுக்கென்று பிரத்யேகமாக ஸ்நான கட்டங்கள் அழகாக கட்டப்பட்டிருந்தன. அந்த இடங்களில் புருஷர்கள் ஸ்நானம் செய்வதில்லை. (192)

எல்லா ஸ்நானக் கட்டங்களைவிட ராம சீதா தம்பதிகளுக்கும் பரத லக்ஷ்மண சத்ருக்னன், அவர்களுடைய தாய் மார்களுக்கும் கட்டப்பட்ட ராஜ்காட் என்கிற ஸ்நானஸ்தலம் மிக்க நேர்த்தியாக அமைக்கப்பட்டிருந்தது. அந்த ஸ்நானஸ்தலம் அரசர்களுக்கு மாத்திரமின்றி நான்கு ஜாதிகளைச் சேர்ந்த மனுஷ்யர்கள் யாவருக்கும் உபயோகப்பட்டது. அதில் யாவரும் ஸ்நான பானாதிகளைச் செய்து கொண்டு வந்தார்கள். புண்யமான சரயு நதியின் இரு கரைகளிலும் அழகான தேவதைகளின் கோயில்கள் கட்டப்பட்டிருந்தன. அந்தக் கோயில்களைச் சுற்றி அழகான நந்தவனங்கள் நான்கு புறங்களிலும் அமைக்கப்பட்டிருந்தன. (193)

அந்த புண்ய நதி தீரத்தின் கரைகளில் விரக்தி பாவம் கொண்ட வைராக்ய மனமுள்ளவர்களும், ஞானத்தையே அவலம்பித்த ஞான பராயணர்களும், முனி ஸ்ரேஷ்டர்களும், சன்யாஸிகளும், ஆஸ்ரமம் கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள் சரயு நதியின் கரைகளில் துளசி வனம் அடர்த்தியாக வளர்ந்திருந்தது. அந்த பிருந்தாவன வனத்தில் முனி ஜனங்கள் வண்டு ரூபமாக சஞ்சரித்துக் கொண்டு ராம ஸுதாவைப் பருகிய வண்ணமிருந்தார்கள். (அந்த துளசி பிருந்தாவன சீதா ராமனுக்கு நான் துளசிதாஸரை முன்னிட்டு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பிரபோ, நீர் தான் எனக்கு கிருபை செய்ய வேண்டும்) (194)

அயோத்தியா புரியின் சோபையை யாரால் பூர்ணமாக வர்ணிக்க முடியும்? அது மாத்திரமா, அந்த நகரின் வெளிப் புறங்களும் பரம ருசியுடன் விளங்கியன. அப்பேற்பட்ட அயோத்யா புரியை தர்சனம் செய்வதாலே, ஸகல பாபங்களும் ஓடிப் போய்விடும். அப்படியிருக்கும் போது, அந்த ஊரில் நிரந்தரமாக வசிப்பவர்களின் பாக்யத்தைச் சொல்லவா வேண்டும்? அயோத்யா புரியில் வனங்களும், உபவனங்களும், புஷ்பத் தோட்டங்களும் குளம் குட்டைகளும் பரம சோபிதமாக விருந்தன. (195)

உத்தமமானதும் உவமையில்லாத கிணறுகளும் குளம் குட்டைகளும் பரம மனோஹரமாக விருந்தன. அவைகள் பெரிதாகவும் விசாலமாகவுமிருந்தன. அழகான படிகள் அவை களில் கட்டப்பட்டிருந்தன. அவைகளின் ஜலம் நிர்மலமாகவும் ருசியுள்ளதாகவுமிருந்தது. அதைக் கண்டு தேவர்களும் முனிவர்களும் மோஹித்து விடுவார்கள். அநேக வர்ணங் களுடன் தாமரைப் பூக்கள் விகஸித்துக் கொண்டு பூத்திருந்தன, பக்ஷிகள் கூட்டம் கூட்டமாக வந்தன. வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. பரம ரமணீயமான தோட்டங்களில் பக்ஷிகளும், தேன் வண்டுகளும் ஹ்ரீங்காரம் செய்து கொண் டிருப்பதைப் பார்த்தால், வழியில் போகும் நடைபாதை சாரிகள் இவைகளைப் பார்த்து விட்டுப் போகலாம் என்று எண்ணும் படிக்கும், அவர்களை வாய்விட்டு இவைகள் அழைப்பதும் போலவுமிருந்தது. (196)

ரமாதேவியாகிற மஹாலக்ஷ்மியின் ஈசரான நாராயணரே ஸ்வயமாக அவதாரம் செய்து, அந்த திவ்ய தம்பதிகள் அயோத் தியில் ஸாந்நித்யம் செய்யும் போது, இதைத் தவிர வேறு எவ்விதம் இருக்கும்? திவ்ய தம்பதிகளான சீதா ராமன் அயோத்தியில் ஆட்சி செலுத்தும் போது, அந்த ரமணீயமான அழகுகளை யாரால் தான் பூர்ணமாக வர்ணிக்க முடியும்? அணி மாதி சக்திகளாகிற அஷ்ட லக்ஷ்மிகளும் தேகம் எடுத்துக் கொண்டு ஸமஸ்த ஸுக ஸம்பத்துக்களை அவதிபுரி வாசிகளுக்குக் கொடுக்க வந்திருப்பது போலத் தோன்றின. (அப்பேற்பட்ட மஹா சித்திகளையும் அயோத்யா வாசிகளையும் முன்னிட்டு நான் ராம சீதா தம்பதிகளை ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன்.) (197)

[தியானம்

நாராயணு, ஆதிசேஷன் மேல் படுக்கை கொண்டிருக்கும் லக்ஷ்மிநாராயணு, பிரணவத்தின் முதல் எழுத்தே, நீயன்றோ மோக்ஷத்தையும் போகத்தையும் அளிக்கும் ஸ்ரீரங்கஸ்ரீ, அயோத்தியிலோ, அரங்கமாநகரிலோ, காஞ்சியிலோ, வேங்கடத்திலோ, ஒஷதிகிரியிலோ, உனது ஸ்வயம் வ்யக்தமான திருமேனியை தரிசிப்பவர்கள் நித்ய ஸூரிகளைப் போன்றல்லவா ஆனந்தமடைகிருர்கள். ஹே ஸ்ரீநாதா, பெரிய பிராட்டியின் மணுளனுகிற நீ ஆஸ்ரித ஜனங்களின் ஸம்ரக்ஷகன், ஸத் அத்புத குணேததி. இயற்கையாய் அமைந்த உம்முடைய பிரபுத்வம், ஸௌலப்யம் என்பதுடன் கலந்துவிருக்கும் போது உன்னைத் தவிர எனக்கு வேறுசரண்யன் யார் இருக்கக்கூடும்? க்ஷாந்தி என்னும் உனது கல்யாணகுணம், "ஒருமுறை காப்பாற்று," என்று சொல்லுவதாலேயே, நினைக்கவும் எண்ணவும் இயலாததான மஹா அபசாரங்களை விழுங்கிவிடுகிறது. காகாசுரன், துர்வாஸர். சிசுபாலன் முதலியவர்களின் விஷயத்தில் இது ஸத்தியம் என்று காண்பிக்கப்பட்டது. உனது புகழ் நீரெல்லாவற்றையும் பாலாக்கிவிட்டது. எவ்வளவு அனுபவித்தாலும் போதாபோதாது என்னும்படி நவஸுதாவாக இருக்கிருய். உனது இன்பநிலையை நான் அடைவேனுகில் பரம உத்கிருஷ்டமான ஐஸ்வர்ய ஸம்பத்துக்களையும் பிரகிருதி ஸம்பந்தமற்ற பரிசுத்தாத்ம ஸாக்ஷாத்காரமாகிற கைவல்யத்தையும், எம்பெருமானுடைய திருவடிகளைவிட்டுப் பிரியாது ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தையிலும் ஸர்வவிதமான அந்தரங்க அடிமை செய்வதாகிற பெருவாழ்வுகூட சிறிதாகிவிடுகிறது. உமக்குப் பிடித்தமாக என்னை நடத்து. உம்மை மனம்கோணுமல் ஆஸ்ரயித்து வாழ்ந்தால், அதுவே போதும் என்று எனது பூர்வாசார்யர்கள் உபதேசம் செய்தார்கள். அர்ஜுனனுக்கு நீ உபதேசம் செய்ததும் உன்னைப்பற்றியே அன்றி, உனது ஐஸ்வர்யத்தைப் பற்றி அல்லவே? உனது நிஜகருணையை அடைபவர்கள் "ஸ்ரீரங்கதாம்" என்கிற உன்னுடைய ஸாந்நித்யத்தையும், தர்மத்தின் முடிவையும் அல்லவோ அடைகிருன். தர்மவிக்ரஹவான் அதர்மவிரதிம் தந்வீஸ தந்வீதந: என்று வேதாந்த தேசிகர் சொன்னுரே, உனது ராமதத்வம் என்னைப்போல ஸக்ருத பிரபன்ன ஜன ஸம்ரக்ஷணமாக விளங்கட்டும்;" ராமசீதா கிருபை செய்யுங்கள்.]

அயோத்தியில் எங்கு பார்த்தாலும் ஸ்ரீராமனது சம்பந்தமான பேச்சுக்குரலும், குணம் ஒன்றுமே கேட்கப்பட்டது. ரகுபதி பரமகல்யாண குணங்களின் தேஜோமயம். எங்கு பார்த்தாலும் நரநாரிகள் சொல்லிக்கொண்டார்கள், "ஸ்ரீராமனுடைய பாராவார குணேத்தமங்களைப் பாருங்கள். அவைகளைக் கீர்த்தனம் செய்யுங்கள். ஸாதுஜனங்களாகிய நாம் ஒவ்வொருவரும் வீணுக வார்த்தைகளைப் பேசி காலத்தைக் கழிக்கமாட்டோம். ஸக்ருத பிரபன்ன ஜனங்களின் பாரிஜாதமாகவிருக்கும் பிரபு ஸ்ரீராமன் "சரணுகததர்ம ஸம்ரக்ஷணம்" என்கிற விரதம்கொண்டு, கண்ணும் கருத்தும் என்னும்படி கோதண்டத்தையும் அம்பையும் தரித்திருக்கும் ஸ்ரீராமன் தர்மமே உருவெடுத்தாற் போல, ஒரு வசன சுத்தமுள்ளவனுகி, சீதையாகிற ஏகபத்னியுடன் வாழ்ந்து கொண்டிருக்கிருர்." நாம் ஸ்ரீராமனுடைய பரந்த கீர்த்திகளைப் பஜிப்போம். "ஹே மஹாஜனங்களே, அழகு சோபைகள், சீலம் தமாதிகுணங்கள், உதாரமான க்ஷாந்தி முதலிய குணங்கள், பயத்தைப்போக்கும் பரமகாருண்யமய கடாக்ஷ வீக்ஷண்யங்கள் கொண்ட ஸ்ரீரங்கதாமனை, அயோத்தியா ராமனைப் பாடிபறையுங்கள். கம்பீரமாகவும் மனத்தை கவருவதாகவுமிருக்கிற ஸ்ரீரங்க ஸ்ரீயுடன்கூட விருக்கும் ஸ்ரீராமனைப் பாடி இன்பமடையுங்கள்." (198)

"தாமரைப்பூவின் இதழ்களைப் போல விசாலமான விழிகளுடன் இருப்பவரும், கருணையினுல் கசங்கின சிவந்த கடைக் கண்களையுடைய அரவிந்தலோசன, ஸ்யாமள நிறமுள்ள அயோத்யாபுரி நாயகனைப்பற்றி பாடுங்கள். கண் இமைகள் கண்களை ரக்ஷிப்பதைப் போல, நம்பிரபு கோதண்டராமன் தனது நிஜ ஆஸ்ரிதர்களை ஸதா காப்பாற்றும் மிக ஜாக்கிரதையுள்ள பிரபு. ஸம்ஸாரமாகிற ஆழமானதும் அகன்றதுமான பெரும் சமுத்திரத்தை ஒரே பாணத்தினுல் வற்றவைக்கும் திறமையுள்ள கோதண்டராமன். பிரளய காலாக்னியைப் போல, ஜ்வாலையுடன்கூடிய சாரங்கபாணி, எந்த நிலையிலும் "ஒரு முறை சரணம்" என்று சொல்லும் தீனர்களை ரக்ஷிக்கும் தர்ம விக்ரஹவான். ஸாது ஜனங்களாகிற கமலபுஷ்பத்தைப் பூர்ணமாக விகஸிக்கவைக்கும் சூர்யரூபியும், ரணதீரருமான பிரபு ஸ்ரீராமனை, ஹே மனஸே, ஸதா பஜித்துக் கொண்டிரு." (199)

"கால ரூபியாகிறதும், மிக்க மிக்க பயங்கரமான சர்ப்பத்தைப் புஜிக்கும் கருட மஹாராஜாவைப் போல அல்லவா என் பிரபு ஸ்ரீரகுநாயகன் விளங்குகிருர். நிஷ்காமபாவத்தினுல்

செய்யப்படும் எல்லா சுக்ருத பிரணுமங்களை அங்கீகரிக்கும் பிரபு ஸ்ரீராமன் இருக்க, வியாதியைப் போக்கும் ஸ்ரீராமன் இருக்க, ஹே மனஸே, நீ யாரை ஸ்வாமியாகத் தேடித் திரிகிருய்? லோபம், மோஹம் எனப்படும் பெரும் காட்டுயானைகளை வேட்டையாடிக் கொல்லும் சிம்மம் மாதிரி ராகவசிம்மம் இருக்க உனக்கு வேறு யார் தஞ்சம் இருக்கக்கூடும்? ஹே மனஸே, இன்னமுமா உனக்கு இவ்வளவு பிடிவாதம்? தனது பக்தர்களைக் கட்டிக் காக்கும் ஸ்ரீராமச்சந்திரனைப் பஜிப்பதற்கு உனக்கு இன்னமும் தயக்கமா?'' (200)

''ராமனே நாராயணன், நாராயணனே பரதத்வம் என்று சித்தாந்தபூர்வமாக அறிந்தும் உனக்கு சம்சயமும் சோகமும் எதற்காக ஏற்படவேண்டும்? அக்ஞானத்திஞல் யேற்படும் கன இருட்டை நாசம் செய்யும் ஞான பாஸ்கரஞக என்பிரபு ரகுகுல ராமன் விளங்குகிருர். அவரைப் பஜிக்காமல், ஹே மனஸே, வீணுக நரஸ்துதி செய்துகொண்டு ஜபர்தஸ்துடன் ஏன் வாழ் கிருய், வாழ விரும்புகிருய்? ஐஸ்வர்யம், கேவலம் ஞானம், பலம் ஆகியவைகளாலும் ஏற்படும் மமதைரூபியாகிற ராக்ஷஸ வனங்களை நாசம் செய்யும் ராமாக்னி இருக்கும்போது, ஹே மனஸே, ஜனக புத்ரியான சீதையுடன் ரமித்துக்கொண்டு ரகுவீரன் இருக்கும்போது, அந்த விஷயசுகங்கள் நிச்சய மாக சுகத்தைத் தருமா? அந்த சீதாராம தரிசனத்தைவிட இந்த ஐஸ்வர்யங்கள் பெரிய சுகத்தைத் தருமா?'' (ஹே மனஸே, பால், வெண்ணெய், தயிர் இவைகள் பரமருசியைக் கொடுக்குமா? அல்லது ராமாம்ருதத்தை சுவைத்து தாஸரதி ராமநாமத்தை தியானித்து, பஜித்து, சீதாராமா ஸாந்நித்யதை அடைவது மிக சுகத்தை தருமா? ஹே மனஸே, ஜன்மம் ம்ருத்யு வாகிற சுழல்களில் அடிபட்டு மீண்டும் மீண்டும் பிரவர்த்திக்கும் ''பவம்'' எனப்படும் பொதிமண் நிறைந்த சமுத்திர ஸ்நானம் சுகமா? இந்திரியநிக்ரஹம், மனஅடக்கம், ராமநாமம் ஆகிற தவ வாழ்க்கையுடன் கூடிய கங்காஸ்நானம் சுகமா? உனக்கு இன்ன மும் தியாகராஜாதிகள் வணங்கிய ஸ்ரீராமபாதங்களின் மேன்மை களைப் புரிந்துகொள்ளத் தெரியவில்லையா? ஹே மனஸே, டம்ப வாழ்க்கையை வாழ்ந்து, நரஸ்துதி செய்யும் சேவகர்களின் வாழ்க்கை சுகத்தைத் தருமா? அல்லது ஸுமதியுடன் வாழ்ந்து ஆனந்தகீர்த்தனம் செய்த தியாகராஜாதிகளின் ராமஸ்துதி சுகத்தைத் தருமா? உனக்கு இன்னமுமா ராமபாதங்கள் சுகத் தைத் தரும் என்று தெரிந்துகொள்ளவில்லை. பவக்குழியில்

விழுந்து ஏன் மரிக்கவிரும்புகிருய்? மமதையை விடு. உனது குலநிதி ராமன்தான் என்று அறிந்துகொண்டு அவரைப் பஜி. ராமுனி ஸந்நிதியில் ஸேவைபண்ணி சுகத்தை அடை.) (201)

[தியானம்

சீதாராமா, உன்னுடைய ஹ்ருதயம் தாஸர்களிடம் பதிந்துள்ளது. உன் மனைவியாகிற சீதையின் உள்ளம் உன் பொற்பதங்களில் ஈடுபாட்டை உடையது; உங்களுக்குப் பொதுவாக யேற்பட்ட தர்மம், சரணுகத தர்மம் என்று சொல்லப்படும் தர்மமானது உங்களுடைய ஆஸ்ரிதர்களை காப்பாற்றுவதில் அடிப்படையாகக் கொண்டது என்று சொல்லுகிருர்கள். உங்களுடைய தாஸர்களுடைய உள்ளமோ உங்களை நிரந்தரமாக அடைய விரும்புகிறது. அப்படி ஒரு வேளை அது அடையுமானுல் அது நிலைத்து நிற்க மறுக்கிறது காரணம் யாது என்று ஆராயப் போனுல், அவர்களுக்கு உங்களைப் பற்றிய மோஹம் ஏற்படவில்லை. அந்த மோஹம் எவ்விதம் ஏற்படும் என்று ஆராயப் போனுல், உன்னை அடைந்த மஹானுபாவர்களுடைய ஸத்ஸங்கம் கிடைக்க வேண்டும். அந்த மஹானுபாவர்களின் ஸம்பந்தச் சேர்க்கையை அடைவதற்கு, ஹே ராமா சீதா, உங்கள் கிருபையைத் தான் காரணம் என்று சொல்லுகிருர்கள். அந்த கிருபை எனக்கு நிலைத்து நிற்குமா? நாரதாதி ரிஷிகள் அந்த மஹா கிருபையை எனக்கு அனுக்ரஹம் செய்யும்படி ஆசீர்வாதம் செய்வார்களா? தியாகராஜ, துளசிதாஸ, ஸ்யாமா சாஸ்திரி, தீக்ஷிதர் ஆகியவர்களால் ஸதா தியானம் செய்யப்படும் பிரபோ, ஸ்ரீசீதா ராமச்சந்திரா, உங்கள் இருவர்களையும் எத்தனை எத்தனை கோடிக் கணக்காக பிரவர்த்தி செய்து, ராமானுவர்த்தி கொண்ட ராம தாஸர்களை முன்னிட்டு அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். உன்னுடைய ராம நாமமே எல்லாப் பேர்களுக்கும் ஒரு பக்தி கயிறு போலவிருக்கிறது. அந்த கயிற்றினுல் கட்டப்பட்ட அனைவரும் உன் கதை, உன் அமானுஷ்யமான சேஷ்டிதங்கள், உனது ஸௌலப்ய பரத்வ விபவங்கள் ஆகிய ஸுதா ஸாகரத்தில் மூழ்கினவர்களாக பிரேமையினுல் நிரம்பப்பட்ட மனமுடையவர்களாக, உங்களை நினைத்த மாத்திரத்தில் ஆனந்தக் கண்ணீர்களை உதிர்க்கிருர்கள். அப்பேற்பட்ட ராம பக்தியுடைய நிஜ தாஸர்களை நான் அடிக்கடி பூஜித்து என் வினய நம்ரதிகளைத் தெரிவிக்கிறேன்.]

"விஷய போகங்கள் என்கிற காமாதி ஐஸ்வர்யங்களில் ஈடுபட்டு, கர்ம பிரவாஹத்தில் அலைந்து திரிபவர்களாக, விஷய போகங்களின் வாசனையால் தூண்டப்பட்டவர்களாக, அந்த நித்ய சம்சாரிகளாகிற கொசுக் கூட்டங்களை நாசம் செய்யும் மூடு பனியாகிற ஸ்ரீராமச்சந்திர பிரபோ, சரணுகத ஸம்ரக்ஷணம் என்கிற தர்மத்தை விரத தீக்ஷை கொண்டவராக நீ இருக்க, ஹே, மனஸே அவரை மூட புத்தியினுலும் மமகார அகங்காராதிகளாலும், ஸாது ஸங்கம் சேர்க்கை பெருமல், அவதிப் பட்டுக் கொண்டு, ஏன் ராம நாமத்தைப் பஜிக்காமல் கெட்டுப் போக விரும்புகிருய்?" (நித்ய ஏக ரஸம் என் பிரபு ஸ்ரீ ராமாம்ருதம். அவரே ஸர்வ வேதங்களின் ஸாரம். அவரே என்றும் இருக்கும் நாராயணர்; அஜர், வைகுண்டபதி, ஸுர அசுரர்களைக் காப்பாற்றும் பாரபக்ஷமில்லாத நித்யர்: அவிநாசி. அஜன்மா, அவரையே பிரும்மாதி ருத்ரர், தேவக் கூட்டங்கள் ஏக தைவமாகப் பூஜிக்கிருர்கள். அவருடைய வைபவங்களைச் சொல்லிக் கணக்கிட முடியாது. முனி ரஞ்சன சச்சிதானந்த சுந்தரமூர்த்தி. தியாகராஜ, துளசிதாஸ, தீக்ஷதர் போன்ற மஹான்களால் ஆராதிக்கப்பட்டு வினயமாக நமஸ்கரிக்கப்படும் ஸர்வ ஸ்வாமி. அந்த மஹானுபாவர்களால், நேத்திரங்களில் ப்ரேமை கண்ணீர்களை உதிர்த்துக் கொண்டு, பிரேமை பாவத்துடன், ராக தாளாதிகளுடன் சௌக்யமாகவும் சாந்தமாகவும் நிரவத்ய சுகத்துடன் ஆனந்தக் கீர்த்தனம் செய்யப்படும் ஆனந்த கந்த மூர்த்தி. தர்மத்தை உத்தாரணம் செய்து, ஸாதுக்களை ஸம்ரக்ஷித்து, நம்மை மஹா பலிஷ்டர்களிடமிருந்து காப்பாற்றி, அமைதியுடன் ராஜ்ய நிர்வாஹம் செய்வதற்கு அவதாரம் எடுத்த வைகுண்டபதி, என் பிரபு துளசிதாஸரின் பிரபுவை, ஹே மனஸே, ஏன் பஜிக்க மறுக்கிருய்?") (202)

இந்த விதிப்படி மஹா பாக்யமுள்ள அயோத்யா ஜனங்கள் தமம், சீலம், இந்திரிய நிக்ரஹம், பிரேமை பக்தி ஆகியவைகளால் சீதாராம பிரபுவை தினமும் ஆராதித்து வந்தார்கள். அந்த திவ்ய தம்பதி மஹா யசசையும், கல்யாண குணேத்தமங்களையும் ஆனந்த கீர்த்தனம் செய்து இன்புற்ருர்கள். அதனுல் ராஜரிஷியைப் போல வாழ்க்கை நடத்தி வந்த ஸ்ரீ ராமச்சந்திர சக்கிரவர்த்தி ஸகல அயோத்யாபுரி நரநாரிகளின் மீது அடிக்கடி கிருபையை வர்ஷித்தார். என் பிரபு ஸ்ரீ ராம சீதா பரிபூர்ண கிருபாளுக்கள் அல்லவோ? (203)

காகபுசுண்டி கருடனிடம் சொன்னார். "கருட மஹா ராஜரே, எந்த நிமிஷத்திலிருந்து ராம பிரதாபங்கள் பிரஸித்தி யடைந்து, பிரசண்ட சூர்யனைப் போல உதயமானதோ, அந்த நிமிஷத்திலிருந்து மூன்று உலகமும் தேஜோ மயமாக விளங்கியது. இதனால் பல பேர்களுக்கு பூரண சுகமும், பல பேர்களுக்கு வருத்தமும், ஏமாற்றமும் ஏற்பட்டது." (204)

"முதலில் யாருக்கு சோகம் ஏற்பட்டது என்று நான் சொல்லுகிறேன். கேளும் பிரபு, முதலில் அவித்யையாகிற இருளுக்கு நாசம் ஏற்பட்டது. அந்த இருள் நாசமடைந்தபோது, பாபக் கூட்டங்களாகிற ஆந்தைகள் எங்கு எங்கு ஒளிவதற்கு இடம் கிடைக்குமோ, அங்கே பறந்து சென்றன. அடுத்தாற் போல் காமம், க்ரோதம் என்கிற ஆம்பல் பூ மூடிக் கொண்டது." (205)

"அநேக விதமான கர்மங்கள், குணங்கள், காலம், இயற்கை ஸ்வபாவங்கள், இவைகள் எல்லாம் சகோர பக்ஷிகளைப் போல விருந்தன. ராம பிரதாபங்கள் என்கிற தேஜோமய சூர்யனிடமிருந்து வெட்கப்பட்டு, முகத்தைக் காட்டாமல் சோகப்பட்டுக் கொண்டிருந்தன. அசூயை, மானம், மஹா மோஹம், மதம், அபிமானம், அஹங்கார மமகாரங்களாகிற திருடர்களால் தங்களுடைய கலைத் தேர்ச்சியையும், காரிய ஸாமர்த்தியத்தையும் காண்பிக்க முடியவில்லை."

"தர்ம ரூபியாகிற குலத்தில் ஞானம், ஸுக்ஞானம் என்கிற கமல புஷ்பங்கள் விகஸித்துக் கொண்டு, பூர்ண பொலிவுடன் சோபிதமாக விருந்தன. சுகம், சாந்தி, ஸந்துஷ்டி, வைராக்யம், விவேகம், ஆகிற சக்ரவாக பக்ஷிகள் சோகம் தீர்ந்தவர்களாக ஆனார்கள்." (206)

"இவைகள் ஞான பாஸ்கரனாகிற ஸ்ரீ ராமனால் பிரகாசமடைந்து ஹ்ருதயத்தில் ஸந்தோஷத்துடன் விளங்கினார்கள். அதனால் மனிதர்கள் பூர்ண காமர்களாகவும், தர்ம ஞான, விக்ஞான, சுக ஸந்தோஷத்துடன் வைராக்ய விவேக ஸம்பன்னர்களாக விளங்கினார்கள். முதலில் சொல்லப்பட்ட அவித்யை, பாபங்கள் காமம், க்ரோதம், கர்மம், காலம், குணங்களின் இயற்கையான ஸ்வபாவங்கள் எல்லாம் நாசமடைந்து ராம ஸம்பத்து கொண்டு விபூஷணங்களாக விளங்கினார்கள்." (207)

ஒரு சமயம் பிரபு ராமச்சந்திரன் தனது சகோதரர்களுடனும், பரமபிரிய சிஷ்யரான பவனகுமாரனாகிற ஹனுமான்ஜி

யுடன் நந்தவனத்திற்கு எழுந்தருளினர். அந்த நந்தவனம் பார்ப்பதற்கு மிக ரம்யமாக விருந்தது. எங்கு பார்த்தாலும் புதிய தளிர்களும், மணமுள்ள புஷ்பங்களும் பூத்து அழகாய் விளங்கின. (208)

[தியானம்

வனமாலி, சங்குசக்கிர கதாப்ருதரே, ஆஞ்சநேய ஸேவித பரத லக்ஷ்மண சத்ருக்ன ஸ்ரீ சீதாராமா, பத்மி, பத்மநேமி, நீதானே பரம போக்யம், ஐயனே, அரங்கநகர் கோமானே, அயோத்தி எம்மரசே, அத்ரி போன்ற மஹரிஷிகளாலும், பிரமன், சிவன் முதலியவர்களாலும், ஸனக ஸநந்தனுதிகளாலும் சேவிக்கப்பட்ட யோக்ஸ்வரரே, ஸ்ரீ வெங்கடாசலபதே, அவர்கள் உன்னுடைய வாசற்படியையே திருக்கோயிலாகவும், தங்கும் வீடாகவும் நினைத்து வாழ்கின்றனர். கஜேந்திரனுடைய விரோதியான முதலைக்கும் மிருத்யுவைத் தடுத்து அனுக்ரஹித்த வீரஹா, ஆதி அனந்தமத்புதமான வானவர் தம்பிரானே, உனது பாத மாமலர் சூடும் பக்திமானுக நான் விளங்குவேனுக. அரும்பெரும் சுடரே, என் நெஞ்சம் சேராக, என் கண்கள் நீர்களை உமிழ, என் வாய் நிறைந்து உனது புகழ்களைப் பாடி, என் மனம் ஹர்ஷத்துடன் உனது மாலைகள் நிறைந்த வக்ஷஸ்தலத்தைப் பார்த்துக் கொண்டிருப்பேனுக. உனது பெரும் திருமார்பினில் அகலகில்லாமல் உறைந்து கிடக்கும் மணமகளை மாலையுடன் டார்த்து, ஆடிப்பாடி என் மனம் அந்தரங்கன் என்னும் அம்மானுக்கே என்று தெளிவுற்று வாழ்வேனுக. அரங்கன் அடியார்களை வணங்கி, அவனுக்கே அர்பித்த மனசுடன், நான் தொண்டர் தொண்டர்களாவேனே, நீயே ஸர்வ காரணத்வம் என்று விஸ்வாசம் கொண்டு உன்னையே நம்பி வாழ்வேனுக. கண்டு, கேட்டுற்று, மோந்து, உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் என்று சொல்லப்படும், ஐஸ்வர்ய, கைவல்ய லாபாதிகளில் இளைப்பாராமல், உனது சரணுரவிந்தத்தில் போக்யதையை அனுபவித்து உண்டு வாழ்வேனுக. நாராயணு, சீதாபதே, கோவிந்த மாதவா, என்னை நீர்தான் ரக்ஷித்து அருளவேண்டும்.]

அதுதான் சமயம் என்று ஸநகாதி முனிவர்கள், பிரபுவினிடம் வந்தார்கள். "நம் பரமாத்மா தேஜோமயமாக விருக்கிருர். நித்யஸூரிகளுடன் பரிமளிக்கிருர். சௌலப்ய, வாத்ஸல்ய, பரத்வ குணங்களுடன் பிரகாசிக்கிருர். சீலம் என்கிற

தவ வாழ்க்கை நடத்துகிருர். பிரும்மானந்தம் என்று சொல்லப் படும் போக்யத்தை அளிப்பவராக விருக்கிருர்'' என்று தங்களுக் குள் நினைத்துக் கொண்டவர்களாக, அந்த மஹா யோகீஸ்வரர் கள் அவ்விடம் எழுந்தருளினுர்கள். அவர்களைப் பார்த்தால், யோகம் ஸாங்கியம் ஆகிற சாஸ்திரங்கள் தவ உருவெடுத்து வந்தாற்போல, தேஜோமயமாகவும், ஸர்வஸத்வ குணசீல ஸம்பன்னர்களாகவும், பிரும்மானந்தத்தை சதா விரும்பும் யோகீஸ்வரர்களாகவும் காணப்பட்டார்கள். பார்ப்பதற்கு சிறு பாலகர்களாகவிருந்தாலும், பழமையானவர்களாகவும், ஸநாதனர் களாகவும், எப்பொழுதும் பிரும்ம நாட்டமுடைய பிரும்மவாதி களைப் போல தோற்றமளித்தார்கள். (அவர்களை நான் அடிக்கடி வணங்குகிறேன்.) (209)

அவர்கள், நான்கு வேதங்கள் குமார வடிவம் எடுத்துக் கொண்டு வந்தனவோ என்று சொல்லும்படி யிருந்தது. அந்த முனீஸ்வரர்கள் தவத்தையும், மோக்ஷத்தையும், பராயணமாக வைத்து வாழும் ஸமதர்சிகள். பேதபுத்தியில்லாத அத்வைத ஏகாந்திகள். அவதூதர்கள், அவர்களுக்கு திசைகளே வஸ்திரங் கள், அவர்களுக்கு ரகுபதியின் புண்ய சரித்திரத்தைக் கேட்பதே ஜீவிய வாழ்க்கை. எங்கு எங்கு ரகுநாதனின் சரித்திரம் கேட்கப் படுகிறதோ, வாசிக்கப்படுகிறதோ, அங்கு போய் அவர்கள் மனசாந்தியுடன் கேட்பது வழக்கமா யிருந்தது. அவர்கள் பரிபூர்ண கண்களில் பாஷ்பவாரிகளை உதிர்த்துக்கொண்டு, கைகளை அஞ்சலி செய்துகொண்டு, ஸதா ராமபிரும்மத்தைத் தியானித்துக்கொண்டு இன்பமடைவார்கள். (210)

பகவான் சம்பு உமையிடம் சொல்லுகிருர்: ''பவானி, இதைக் கவனமாகக் கேள். அந்த யோகிகள், அகஸ்திய முனி வரின் ஆஸ்ரமத்திற்குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்தனர். அந்த சமயம் (லோபாமுத்ரையின் கணவரான) அகஸ்திய ரிஷி, ராமஸூதாவாகிற சீதாராம சரித்திரத்தை ஒன்று விடாமல் எடுத்துச் சொன்னுர். அந்த ராமபிரபாவங்களைக் கேட்ட ஸநகாதிமுனிஸ்ரேஷ்டர்கள் ஆனந்தமடைந்தார்கள். ஸ்ரீராம சரித்திரம் ஞானத்தையும், வைராக்யத்தையும் பிரபோதம் செய்யக்கூடியது. இரு அரணிக்கட்டைகளின் நடுவிலிருந்து அக்னி கிளம்புவது போல, ஞானபிரபோதம் ராமகதையிலிருந்து உற்பத்தியாகிறது'' (211)

பிரபு ஸ்ரீராமச்சந்திரன் பரம யோகீஸ்வரர்களான அந்த முனிஸ்ரேஷ்டர்கள் வருவதைக் கண்டார். அவர் ஓடிப்போய்

அவர்களுக்கு சுகீருத நமஸ்காரம் செய்தார். அவர்களை கிருதாஞ்சலியுடன் என் பிரபு, பிராம்மணப்பிரியர் வரவேற்று, குசலபிரஸ்னம் செய்தார். அவர்களுக்கு தனது பீதாம்பரத்தை விரித்து உத்தம ஆசனத்தைக் கொடுத்து, அர்க்கியம், பாத்யம், ஆகாரம் முதலியவைகளைக் கொடுத்து சந்தோஷிப்பித்தார். (212)

அதன் பிறகு ராமனுடைய மூன்று சகோதரர்களும், ஹனுமான்ஜியும் அந்த முனிஸ்ரேஷ்டர்களை நமஸ்கரித்தார்கள். யாவரும் சுகமடைந்து இன்புற்றுர்கள். அந்த முனீஸ்வரர்கள் ரகுபதியின் உத்தம அழகைக் கண்டு மோஹித்துப் போய்விட்டார்கள். அவர்களுக்கு ஆனந்தம் தாங்கமுடியவில்லை. மனத்தை அவர்களால் அடக்கவே முடியவில்லை. எந்த பகவான் தான் பிரகாசிப்பதால் மற்றவர்களைப் பிரகாசிக்கச் செய்கிருரோ, எவர் அளவற்ற கல்யாண குணங்களுடன் விளங்குவாரோ, எவர் ஸர்வ வியாபகரோ, எவர் தமது சக்தியினுல் தம்மைச் சேர்ந்தவர்களை தம்மைப் போல பெருகச் செய்கிருரோ, எவர் எல்லாவற்றிலும் பெரிதான நாராயண பரபிரும்மமாக விருக்கிருரோ, எவர் பரிசுத்தம் செய்பவன எல்லாவற்றிற்கும் சிறந்த பாவனமாகவும், தீர்த்தகரராகவும் விளங்குகிருரோ, எவர் மங்களங்களுக்கு எல்லாம் ஆதிமங்கள தேவதையோ, எந்த பகவான் லக்ஷ்மிபதி எல்லாவற்றிற்கும் முடிவான பரம புருஷார்த்தமோ, தேவர்களுக்குத் தேவதையோ, ஸநாதனரும், புராண ரிஷியோ, எவரிடமிருந்து ஸகல புவனங்களின் முதல் ஸ்ருஷ்டி ஆரம்பமாகி கடைசியில் எவரிடத்தில் லயமடைகின்றனவோ, அந்த பிரபு ஸர்வ லோகேஸ்வரரான விஷ்ணுபகவான், சாக்ஷாத் ராமவடிவாக அவர்களுக்கு எதிரில் கைகளைக் கட்டிக்கொண்டு, அதிவாத்ஸல்யத்துடன் பரம சௌலப்யாதி குணங்களை விகஸித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும் அவஸ்தையைக் கண்டு, அடிக்கடி அடிக்கடி ஸ்தம்பித்துப் போனவர்கள் மாதிரி, அந்த பிரும்மரிஷிகள் காணப்பட்டனர். ஆனந்தம் தாங்கமுடியாமல் அந்த மஹானு பாவர்கள், (என் போன்ற ராமதாஸர்களின் ஆத்ம உஜ்ஜீவனத்திற்காக) ஸ்துதி செய்ய ஆரம்பித்தார்கள். (213)

[தியானம்

நாராயண, சீதாராமா, ஸனகாதிகளால் சேவிக்கப்படும் பரபிரும்மமே, மஹத், பிரும்மம் முதலிய பதங்களால் அறியப் படும் நாராயணரே, உம்முடைய பரபிரும்ம ஸ்வபாவத்திற்கு

எது அடையாளங்கள் என்று வேதங்களும், ஸனகாதிகளைப் போன்ற பரமயோகீஸ்வரர்களும் அல்லவோ சொல்ல முடியும். ஸ்ரீ வத்ஸ மார்பனே, கௌஸ்துபம் என்கிற ரத்னமய விபூஷணு, சரணுகத வத்ஸலர் என்கிற நாமதேயம் உன்னுடைய ஸௌலப்ய வாத்ஸல்ய குணத்தைத் தவிர, "தர்ம பரிபாலனம்" என்கிற உன்னுடைய மேன்மையை அல்லவா காட்டுகிறது. லக்ஷ்மி பதித்வமும் உனக்கு அசாதாரணமான அடையாள மன்றோ? அத்துடன் ஸர்வ சக்திமான் என்கிற பரத்வமும் உனக்கு அடையாள மன்றோ? தேவர்களுக்குத் தேவரே, மார்க்கண்டேய ரிஷியினுல் தாமோதரனுகவும் ஆதிசக்தியாகிற புவனேஸ்வரியுடனும் ரமித்துக்கொண்டு அல்லவோ நீர் காணப்பட்டீர், உமக்கு நாமாக்கள் அநேகமிருந்த போதிலும் வேதவியாஸரால் சொல்லப்பட்ட மங்களகரமான ஆயிரம் நாமாக்கள் உம்முடைய கல்யாண குணங்களால் விமர்ஸனம் செய்யப்பட்டு, பிரஸித்தி பெற்ற நாமாக்களாக விருக்கின்றன. வாக்குக்கும், மனசுக்கும் எட்டாத அதோக்ஷஜரே, உம்முடைய திவ்ய மங்கள விக்ரஹம், திவ்ய கல்யாண குணங்கள், மகிமை, திவ்யாத்ம ஸ்வரூபம், செய்கைகள் எங்கும் தடைப்படாதபடி ஸர்வேஸ்வரத் தன்மையைக் கொண்டது. வேண்டியவர்களுக்கு வரதானம் அளிக்கக் கூடியது. ஆபத்திற்கு உதவும் தன்மையுள்ளது. வரத ராஜனே, கல்பக விருக்ஷமே, ஔதார்யம் என்கிற குணத்தால் சிறப்பாக விளங்கும் மஹா பிரபோ, புருஷோத்தம ராமா சீதா, உன்னை ஆஸ்ரயித்த பின்பு எனக்கு என்னைப் பற்றிய கவலையும் பொறுப்பும் நீங்கி விட்டது. அதுவும் உன் கிருபை தான்.]

எம்பெருமானுடைய திருவடிகளையே உபாயமாகவும், பலனுகவும் கொண்ட ஸனக, ஸனந்தன, ஸனத்குமார, ஸனத் ஸுஜாதர் பழுதில்லாமல் வாழ்க்கையை நடத்தின மஹாத்மாக்கள், எனது ஆசார்யர்கள், புகழ் பெற்ற வசனங்களால் ஸ்ரீ ராம ஸ்துதியை கிருதாஞ்சலியுடன் செய்ய ஆரம்பித்தார்கள். "ஸ்யாமள காத்ரனே, திருமாலே, உம்முடைய பத்ம பத்ர நிபேக்ஷண லோசனங்கள் பரத்வ ஸௌலப்யங்களின் மேன்மைக்கு அறிகுறிகளாக விருக்கின்றன. குளிர்ந்தும் அகண்டும், பரந்தும் நீண்டுமிருக்கும் திருக் கண்களை உடையவராகவும், "இவர் மிக்கவும் நம்பத்தக்கவர்," என்று ஆஸ்ரயித்தவர்களைச் சொல்லும்படி விருக்கிறது. யாகம், ஸமம், நியமம், ஆஸனம், பிராணுயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி என்னும் யோகங்கள் எட்டினையும் நிறைவேற்றும் சுபாங்கராக வல்லவோ, உம்முடைய

திவ்ய மங்கள விக்ரஹமும், திவ்ய ஆத்ம ஸ்வரூபமும் விளங்குகின்றன. பிராம்மணர்கள், எந்தபரபிரும்மத்தை "ஏகம்ஸத்விப்ரா வதந்தி" என்று சொல்லுகிறுர்களே, அந்த ஏக பராயணம், என்று சொல்லும்படியாக விருக்கும் உம்முடைய விபவங்கள் எங்களை, ஒரு நிமிஷமும், கண்களின் இமைகள் மூடித் திறப்பதற்குக் கூட அவகாசம் தராதபடி, ஸர்வா கர்ஷணிக முத்ரையினுல் எங்களை, ஹே விபு மீட்யரே, பரவசப் படுத்துகிறீர். அது மாத்திரமா, ஸ்வாமி, பரத்வத்துடன் கலந்த வாத்ஸல்யாதி குணேத்தமங்கள் பிரகாசிக்க, கைகட்டிக் கொண்டு, கிருதாஞ்சலி ஸ்புடராக, எங்களை அனுக்ரஹிக்க விருக்க, தாங்கள் எங்களை வணங்குகிறீரே? அந்த சௌலப்ய மஹத்வங்களை நாங்கள் எவ்விதம் வர்ணிப்போம்?" இந்த விதமாக சதுர்தச புவன ராஜ ராஜாதி ராஜஸேகரராக விருக்கும் ஸ்ரீ சீதா ராமனைப் பார்த்து மோஹித்துப் போய் தர்சனத்தினுல் லோபமடைந்து கண்களைக்கூட மூடமாட்டாமல் அவர்கள் பிரபுவின் திருக் கல்யாண விக்ரஹத்தைப் பார்த்த வண்ணமாக விருந்தார்கள். (214)

பிரபு ராம கிருபாளு ஆஸ்ரித கல்பதரு, அவர்களைப் பார்த்துக் கொண்டு, கண்களில் பிரேமையுடன் கலந்த அமிர்த ரஞ்சனக் கண்ணீர்களை உதிர்த்த வண்ணமிருந்தார். (பிரஹ்லாத பக்தி, தியாகராஜ ஹ்ருதயம், கோபிகைகளின் வாத்ஸல்யம், தர்ம புத்ராதிகளின் வினயம், பீஷ்மாதிகளின் கிருதக்ஞை ஆகிய எல்லாவற்றையும் ஸர்வ காலங்களிலும் ஸ்மரணை செய்து நினைத்துப் பார்க்கும்) என் பிரபு ஸ்ரீமந் நாராயணர் நாரதருடைய பிரேமையைப் போல ஸனகாதிகளின் பிரேமை வாத்ஸல்யத்தை நினைப்பவராக, புளகாங்கித சரீரத்துடன், ஒவ்வொரு மயிர்க் காலிலும் பிரும்மானந்த மடையும் யோகீஸ்வரரைப் போல, என் பிரபுவும், அந்த நான்கு மஹாத்மாக்களை வினய கிருதக்ஞையுடன் பார்த்துக் கொண்டிருந்தார். சிறிது நேரம் கழிந்ததும், பிரபு அவர்களுடைய கைகளை ஸ்பர்சம் செய்து கொண்டு, பரம மனோஹரமான வசனங்களால் அவர்களிடம் ஸம்பாஷித்தார். (215)

"முனீஸ்வரர்களே, நான் இன்று கிருத பூண்யனுக தங்களால் ஆக்கப்பட்டேன். உங்களுடைய தரிசனம் எனது பாபங்களைப் போக்கி, என்னைப் பரம தன்யனுகச் செய்துவிட்டது. எந்த மனிதனுக்கு தங்களைப் போல ஸாதுக்களின் ஸம்பந்தம் கிடைக்கின்றதோ, அந்த மனிதனே மஹா பாக்யவான். மீண்டும்

பிரவர்த்திக்க வைக்கும் ஜன்மம்ருத்யு சம்சாரச் சுழல்களிலிருந்து ஒரு வித பரிஸ்ரமமின்றி, அவன் தங்களைப் போன்ற மஹான் களின் அனுக்ரஹத்தினால் அல்லவோ விடுதலை அடைகிறான்.'' (216)

''தங்களைப் போன்ற ஸாதுக்களின் சேர்க்கை, அனுக்ரஹ ஆசீர்வாதங்கள், யாவரையும் ஜன்ம சம்சார பந்தங்களிலிருந்து விடுவிக்கின்றன. தங்களுடைய நாமதேயத்தை உச்சரிப்பதாலே, மனிதன் காமத்தை துர்விஷயங்களில் செலுத்துகிறதில்லை. ஹே விப்ரேஸ்வரர்களே, உங்களுடைய ஸம்பந்தம் பெறுவிடில் ஸம்சாரமாகிற ஜன்ம மிருத்யு சுழல்களில் மனிதன் உழண்டு போகிறான். ஸாதுக்கள், வாக்கேயக் காரர்களான கவிகள், பிரும்மத்தை அறிந்த வித்வான்கள், ஸ்ருதிகளாகிற வேதங்கள், இதிஹாஸ புராணங்கள் ஆகிற உத்தம தர்மானு சாஸனங்கள் மிக்க சிரத்தையுடன் இந்த மர்மத்தைத் தான் கோஷிக்கின்றன. எல்லா வித்யைகளுக்கும் ஆசார்யர்களும் பிரும்ம ஸாக்ஷாத் காரமும் பெற்ற நீங்கள் மனமுவந்து உதார ஹ்ருதயத்துடன் எங்களை அனுக்ரஹிக்க வேண்டும்,'' என்று பூர்வ பாஷியான ஸ்ரீராமன் மதுரமாக கிருதாஞ்சலியுடன் பேசினார். (217)

## ஸனகாதிகளின் ஸ்ருதி

(1)

ஸ்யாமள காத் ஸரோரு ஹலோசன சுந்தரதா மந்திர பவமோசன
ஏக்டக் ரஹே நிமேஷந லாவஹிம் ப்ரபு கர் ஜோரேம் சீஸ் நவாவஹிம்
ஜய பகவந்த அனந்த அநாமய அநக அநேக ஏக கருணாமய

(2)

ஜய நிர்குண ஜய ஜய குணஸாகர் சுக மந்திர் சுந்தர் அதி நாகர்
ஜய இந்திரா ரமண ஜயபூதர் அனுபம் அஜ அநாதி ஸோபாகர்.

(3)

க்யான நிதான் அமான் மான ப்ரத பாவன ஸுஜஸ புராண வேத வத
தக்ய க்ருதக்ய அக்யதா பஞ்ஜன நாம அநேக அநாம நிரஞ்ஜன

(4)

ஸர்வ ஸர்வகத ஸர்வ உராலய பஸஸி ஸதா ஹம் கஹீம் பரிபாலய
த்வந்த விபத்தி பவ பந்த விபஞ்ஜய ஹ்ருதி வஸி ராம் காம் மத கஞ்ஜய.

(5)

பரமானந்த க்ருபா யதீன மன பரிபூர்ண காம்
ப்ரேம பக்தி அநபாய னீதேஹு ஹம்ஹி ஶ்ரீராம்.

(6)

தேஹீ பக்தி ரகுபதி அதிபாவனி த்ரிவிதி தாப் பவதாப் நஸாவனி
ப்ரணத காம் ஸுரதேனு கல்பதரு ஹோஇ ப்ரஸன்ன தீஜை ப்ரபு யஹ்ருப.

(7)

பவ் வாரிதி கும்பஜ ரகுநாயக் ஸேவத் ஸுலப ஸகல சுகதாயக்
மன் ஸம்பவ தாருண துக்க தாரய தீனபந்து ஸமதா விஸ்தாரய

(8)

ஆஸ்த்ராஸ் ஈர்ஷாதி நிவாரக் வினய விவேக விரக்தி விஸ்தாரக்
பூப மௌளி மணி மண்டன தரணி தேஹி பக்தி ஸம் ஸ்ருதி ஸரிதரணீ.

(9)

முனி மன மானஸ ஹம்ஸ நிரந்தர் சரண கமல வந்தித அஜ சங்கர
ரகுகுல கேது ஸேது ஸ்ருதி ரக்ஷக கால கர்ம ஸுபாஊ குண பச்சக.

(10)

தாரன தரன ஹரன ஸப் தூஷண துளசிதாஸ,ப்ரபு திரிபுவன பூஷண

பிரபுவின் வசனங்களை மிக்க அத்புத ஆச்சரியத்துடன் அந்த நான்கு யோகிகளும் கேட்டார்கள். அவர்களுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. பெரும் சுமையாக விருந்த அந்த ஆனந்த ரஸத்தைப் பெருக்கிக் கொண்டு, ஸநாதனர்களும் புராண ரிஷிகளும், பரமேஷ்டி குருக்களும், தாமரைக் கண்களுள்ள நாராயண ஸாக்ஷாத்காரத்தை அடைந்தவர்களுமான அந்த யோக பராயணர்கள் புளகாங்கித சரீரத்துடன் "நாராயணீயம்" என்று சொல்லப்படும் ஆதிப்பிரானின் மகிமைகளை புகழ் பெற்ற வசனங்களால் ஸ்துதி செய்யத் தலைப் பட்டார்கள், "ஜயபகவான், ஜயஜப, ஜய விஜயிபவ, தேசவரை காலவரை, ஸ்வரூப அளவு, குணங்களுக்கும் கணக்கு முடிவு பெறுதபடி, "அனந்தர்" என்று தாங்கள் சொல்லப்படுகிறீர். ஸம்சாரம் என்னும் பெரும் பிணிக்குப் பகைவராக விருக்கும் நாராயணரே, அநாமயரே, ஜனார்த்தனரே, எங்களிடம் தயை செய்ய வேண்டும். பாரபக்ஷம், முதலிய குணங்களால் விகார மற்றவராக விருக்கிறபடியால், ஸத்யர் என்றும், ஸ்நானம் அலங்காரம் கோஷ்டி முதலிய எல்லாக் கார்யங்களிலும் பக்தர்

களுக்குப் பராதீனமாக, ஸ்வதந்திரமில்லாதவராக விருக்கிற படியாலும், பிரபஞ்சத்தில் அவதரித்தும் ஸர்வ சாதாரண மானிடர்களைப் போல பிராக்ருத குணங்கள் தோஷங்கள் யாவற்றுலும் பற்றப்படாத விலக்ஷணமுள்ள அநகர் என்று சொல்லும்படி இருக்கிறீர். உமக்கு துக்கம்கிடையாது. பாவம் இல்லை. கர்ம வசங்கள் கிடையாது. பலரூபங்கள், பலநாமாக்கள் கொண்டபடியால் உம்மை ஒரு ரூபத்தில் பிரகடனப்படுத்திக் கொள்வது ஸாத்யமாகாது. ஸர்வவியாபகராகவும் ஸர்வாந்தர்யாமி யாகவுமிருப்பதால், பிரபோ, உம்முடைய ஸ்வரூபத்தை முழுவதும் அறிய முடிகிறதில்லை. இருந்தாலும் உம்மை அறிந்துகொண்டவர்கள் உம்மையே கருணைமயமாகக் காண்கிருர்கள். ஏகம் என்று சொல்லப்படும் நாராயணராகவும், ஆதிப்பிராணுகவும், மகிமைகளினுல் உமக்கு ஒப்பாக எண்ணக்கூடிய மற்ற யாவரும் இல்லாதபடி தாங்கள் இருக்கிறீர். எல்லாவகையிலும் ஒப்பில்லாதபடி பெரிய பிராட்டியுடன்கூட ஒன்றினுலேயே அறியப்படக் கூடிய ஸ்ரீயப்பதியாக, ஏகநாராயண புருஷராக, புருஷோத்தம ராமராக, தாங்கள் பிரும்மா, சிவன், இந்திரன், வசிஷ்டாதிகளால் வணங்கப்படும் பரபிரும்மமாக விளங்குகிறீர். உம்மை நாங்கள் [ஆயிரம் நாமாக்களுடன் ஆயிரம் தடவைகள்] நமஸ்கரிக்கிருேம். (218)

[தியானம்

நாராயணு, சீதாபிரபோ, ராமாசீதா, வெங்கடபிரபோ, உன் பாதங்களே சரணம். உனது பரம பவித்திரமான பாதங்களை வணங்குவதற்கு வாலகில்யாதி ரிஷிகளும், கிருஷ்ணத்வைபாயனரும், நாரதரும் தும்புருவும் ஸதா காத்துக்கிடக்கிருர்களே. திரிவிக்ரமரே, உம்முடைய திருவுள்ளம் எவ்விதமோ, அவ்விதம் நடக்கிறது. நீர் ஸர்வக்ஞராக விருக்கிறபடியால் பாரபக்ஷம், வெறுப்பு விருப்பு ஆகிய ராகத்வேஷாதிகளால் கவரப்படாதவராக விருக்கிறபடியாலும் உம்முடைய கருணை ஸ்வரூபத்தை முழுவதும் அறிவதற்கில்லை. நாராயணு, எங்கள் உள்ளத்தில் பிரவேசித்தும், ஸகல ஜகத்திலும் ஆவிர்பவித்தும், சதுர்தச புவனங்களை நடத்துகிறபடியால், உம்முடைய மாயையும் எங்களுக்கு அதீதமாகவிருக்கிறது. எதுவேண்டும், எதுவேண்டாம் என்று புத்தியினுல் அறியப்பட முடியவில்லை. ஹே விஸ்வாதீதனே, பாரரசர்யாதி மஹரிஷிகளால் உமது குணப்பெருமைகள் ஓரளவு சொல்லப்படுகிறதென்ருலும், உம்முடைய ஸ்வரூபம்

பலவிதங்களாக விருக்கிறபடியால் எங்களை திகைக்கவைக்கிறது. ஆதலால் உம்முடைய நாமஜபமும், உம்மைப்பற்றிய தியானமும் தான் மோக்ஷம் என்று சொல்லும்படியாகவும், ஸம்ஸார துக்கங்களுக்கு நித்ய சஞ்சீவியாகவும் இருக்கிறது. நீரே தவத்தின் முடிவாகவிருக்கிறபடியால், நீரே ஸித்தோபாயம்; நீரே ஸாத்யோபாயமாக விளங்குகிறீர். ஸகல பிரபஞ்சங்களுக்கும் குணங்களுக்கும் நீரே காரணமாகிறபடியால் ஸகல சேதனு சேதனர்களும் உம்முடைய ஆதீனத்திலிருப்பவர்களாக விருக்கிருர்கள். தாமோதரரே, உத்பவரே, எங்களுடைய வெளிக் கண்களுக்குத் தோற்றம் அளிக்கும் ஸ்ரீராமச்சந்திரா, அவதார காலங்களிலும், உம்முடைய நிஜ ஸ்வரூபத்தை நீரே மனமுவந்து மஹா கிருபையுடன் உமது தாஸர்களுக்கு அளிக்கிறீர். லக்ஷ்மிநாதா, நாரத பிரும்ம ருத்ராதிகளால் ஸேவிக்கப்படும் ஸ்ரீசீதாராமா, பரத லக்ஷ்மண, சத்ருக்ன, ஆஞ்சநேய ஸஹித சீதாராமா, நீங்கள் எங்களை ஸ்வீகரிக்கவேண்டும்.]

"வாஸுதேவ ஸ்வரூபமாகவுள்ள நிர்குண பிரும்மமே, மந்திரம், ஜபம், தியானம் இத்யாதிகளால் ஆராதிக்கப்படுபவரும், பிராக்ருத குணங்களால் பற்றப்படாதவரே, கல்யாணகுணங்களின் சேர்க்கையாகவிருக்கும் ஸகுண ஸ்வரூபமே, உமக்கு நாங்கள் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறோம். உமக்கு ஸதா மங்கள ஜயமங்களங்கள் ஏற்படட்டும். உமக்கு ஆயிர நாமாக்களால் புகழத்தக்க ஸர்வோத்தம கல்யாணகுணங்கள் இருக்கிறபடியால் பிரபோ, தாங்கள் குணஸாகரம் என்று சொல்லும்படியாக விளங்குகிறீர். உம்மை ஸ்மரிப்பதால் சகல சுகங்கள் ஏற்படுவதால், உம்மையே சுகத்தின்யிருப்பிடம் என்று சொல்லும்படி நீர் பிரகாசிக்கிறீர். அழகிய மணவாளமூர்த்தியே, ஸ்ரீரெங்கதாமரே, உமக்கு ஸாமர்த்தியமும் காரிய கௌரவமும் பிரத்யேகமாக விளங்கும்படியிருக்கிறது. ஜய இந்திரா ரமணு, ஜயபூதரனே, ஜயஸ்ரீதரா, உமக்கு ஸதாஸர்வ மங்களங்களும் ஏற்படட்டும். உமக்கு உபமானமாகவும் சமமாகவும் யாருமில்லை. நீரே ஸநாதனர். புராணரிஷி. பிரும்மாதி தேவர்களாலும் ஸ்வாமியாகவிருந்தும் முழுவதும் அறியப்படாதவர். பக்திசெய்த திர்யக்திகளுக்கும் வசப்படுகிறவராக விருக்கிறீர். எக்காலமும் நித்ய யௌவனராக விருக்கிறபடியால் பிறப்பு மூப்பு ஆகிய மாறுதல்கள் இல்லாமல் நித்யமான திவ்ய விக்ரஹ சோபையுடன் விளங்குகிறீர்." (219)

"பிரபு, நீர்தான் விக்ஞானத்தின் ஸ்வரூபம். ஸமாதி நிஷ்டை யென்னும் பரவித்யையினுல் அறியத்தக்கவர். வைஷ்ணவதர்மம் எனப்படும் வைஷ்ணவ ஞானத்தைத் தெரிந்து கொள்ள ஞானமுத்தமமாக விருக்கிறீர் [மஹாலக்ஷ்மிக்கு பாஞ்சராத்ராதி சாஸ்திரங்களைப் பிரவர்த்தி செய்தவர் நீர்தானே.] பக்தர்களின் விஷயத்தில் நீர் உம்முடைய உயர்வைப் பாராமல், [தூதுசென்றும், குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்து தேரோட்டியாகவும்,] வானரங்கள், கரடிகள் என்றுகூடப் பார்க்காமல், அவர்களை சகாக்களாகவும் புத்திமதி சொல்வதற்கு தகுதியுள்ள மதிமந்திரிகளாகவும் வைத்துக்கொண்ட அமாநீ. பிரபோ, நீர் பக்தர்களுக்குக் கீழ்ப்படிந்த நிலைமையையே பெருமையாக நினைத்து அவர்களாலே உம்மை வெகுமானிக்கத் தக்கவராக ஆக்கிக்கொள்ளும் மாநதர். உம்முடைய கௌரவத்தை, உம்மைச் சேர்ந்தவர்களுக்கு அளிக்கும் மானப்ரதர். ராமா, நீர் பதித பாவனராகவும், அமலனுதிப் பிரானுகவும், சுயசஸ்ஸுடனும் பிரகாசிக்கிறீர். காலவரையில்லாமையால் புராண ரிஷியாகவுமிருக்கிறீர். உம்முடைய நித்யபுகழ்களை வேதங்களும் புராணங்களும் ஸதா கோஷித்துக் கொண்டிருக்கின்றன. எல்லா சாஸ்திரத்தையும் பிரவிருத்தி செய்தபடியால் தத்வஞானம் உள்ளவராகவிருக்கிறீர். உம்மை வணங்கும் பக்தர்களின் நல்வினைகளையே அறிந்துகொள்ளும் கிருதக்ஞர். உம்மை அடைந்தவர்களின் அக்ஞானத்தை நாசம் செய்கிறீர். உம்முடைய மங்களகரமான நாமாக்கள் பலவிருந்தாலும், [வேதவியாஸரால் இயற்றப்பட்ட ஆயிரம் மங்களநாமாக்கள் மிகச் சிறந்தவை. அவ்விதமிருந்தபோதிலும்] அந்த நாமாக்களுக்கு பல உருவங்களுடனும் பல தேகங்களுடனுமிருக்கிறீர், நிரஞ்சனர் என்று அழைக்கப்படுகிறீர் (220)

[தியானம்

நாராயணு, சீதாபிரபோ, உன்னைப் பரிபூர்ணமாக அடைய வேண்டுமாகுல், ஸ்வதந்திர ஸங்கல்பத்தைவிட்டு, விஷயபோகங்களில் அதிகமாக ஈடுபாடு அடையாமல் நிலைநின்று அல்ப ஸம்பந்தமுடையவர்களை விட்டு, ஸ்வாபாவிகமாய் உன்விஷயத்தில் நிலைநின்று ஸர்வவித ஸம்பந்தத்தை அடைவேனுக. இதற்கு பிரதிகூலமாக நிற்கும் விரோதிகளை உனது கிருபையினுல் அகற்றி, ஸாது ஸங்கத்தை அடைந்து, உனது நாம கதா பாராயணத்தில் ருசியுள்ளவனுக பகவத் குணம்ருதத்துடன்,

பாகவத குணும்ருதங்களையும், ஆசார்ய குணும்ருதங்களையும் அடைவேனுக. பரம ஏகாந்திகளான தியாகராஜ, ஸநத்குமாராதிகள், நாரத, சுகர், பிரஹ்லாதன், பரத, ஆஞ்சநேய, லக்ஷ்மண, சத்ருக்னுதிகளைப் போல, உங்கள் விஷயத்தில் அனன்யார்ஹ சேஷத்வம் விரதம் பூண்டு, நல்வழி நடக்க ருசியுள்ளவனுக, வேதாந்த தேசிகாதிகளால் காட்டப்படும் சரணுகதி தர்மத்தை அவலம்பித்து, பெருமாள்பிராட்டியின் சரணங்களை பரம பிரயோசனமாகக் கொண்டு, ஸந்தேகமில்லாத ஞானத்தால், ஸர்வேஸ்வரனை அனுபவிக்க நித்ய கைங்கர்யம் பெறுவேனுக. இவ்விதமாக ஞான விவேகம் பண்ணி, ஞான அக்ஞான காரியங்களை அறிந்து, ஆசார்ய விசேஷத்தாலே தத்வஞானத்தை அடைந்து, பரமபுருஷார்த்தமாகிற வைஷ்ணவ தாஸ்யத்தைப் பலமாகப் பெற்று, அயர்வறுமமார்களுடைய ஆனந்த ஸாகரத்திலே அழுந்தி, எனது ஆத்மாவுக்கு ஸ்வதாப்ராப்தம் அடைவேனுக.]

"நாராயணரே, சீதாபதி, தாங்கள்தான் ஸர்வர். உம்முடைய சரீரங்களாகிற சராசரங்கள் அனைத்தையும் ஆத்மாவாகப் பாவித்து, அதில் உட்புகுந்து அவற்றை யெல்லாம் தாமாகவே நினைத்து நடத்துகிறீர். ஸர்வக்ஞராகிய நீர், ஸர்வ காரணமாகவுமிருக்கிறீர். (அதனுல் ஹ்ருஷீகேசரே, அர்ஜுனன் உம்மை பிரதக்ஷணம் செய்து, சுக்ருத நமஸ்காராதிகளைச் செய்து, தேவ தேவா, நீரே எனக்கு ஸர்வர் என்று அடிக்கடி நமஸ்கரித்தான். நீரே மாதா, பிதா, நீரே பந்து, நீரே ஸகா, நீரே என் ஐஸ்வர்யம், வித்யை முதலியவைகள் என்று நினைத்து, உம்மையே ஏகமாக பரம விஸ்வாசத்துடன் வரித்தான்.) உம்முடைய கதி எங்கும் பரவியுள்ளது. பிரபோ, நீர் அந்தர்யாமியாக ஸர்வ பூதங்களிலும் ஸ்திதராகவிருக்கிறீர். உம்மைத் தஞ்சம் என்று அடைந்திருக்கும் எங்களை ஸதா பரிபாலிக்க வேண்டுமென்று நாங்கள் கேட்டுக் கொள்கிறோம். ராகத்வேஷாதிகள், விருப்பு வெறுப்பு, ஜன்ம மிருத்யு, சுகம், துக்கம் ஆகிய த்வந்தங்களிலிருந்தும், மஹா ஆபத்துக்களிலிருந்தும், ஸ்வாமி எங்களுக்கு விடுதலை அளித்து. எங்களைக் காப்பாற்றி, ஹே ராம், எங்களிடம் சதா வசித்துக் கொண்டு, எங்களுடைய காம மதங்களையும் நாசம் செய்ய வேண்டும்". (221)

"ராமா, தாங்கள் பரமானந்த ஸ்வரூபம். கிருபையின் பொக்கிஷம். ஸர்வஸத்வ மனோரதங்களைப் பூர்த்தி செய்யும் பரிபூர்ண ராமர். ஹே ராமா, கருணுகாகுத்ஸா, தங்களிடமும்,

தங்களை விட்டு என்றும் பிரியாத ஜானகிதேவியிடமும், எங்களுக்கு அசஞ்சலமான பிரேமை பக்தியை ஸதா அருள வேண்டும். ஸ்ரீ ராம, சீதாநாயகா, எங்களிடம் தயை செய்ய வேண்டும்". (222)

[தியானம்

நாராயணா, சீதாராமா, ருக்மிணி கிருஷ்ணா, பூமிநாயக வெங்கடேசா, மஹா வராஹரே, இந்த ஜகம் முழுவதும் உனது உடலாகும். ஆனால் ஜகத்திற்கு யேற்படும் பிறப்பு, இறப்பு, சுகம், துக்கம், முக்குணங்களின் சேஷ்டிதங்கள் உன்னிடம் காணப்படுகிறதில்லை. உன்னையே தவமாகவும், தவத்தின் பலனாகவும் கருதி, பிரேமையுடன் பூஜித்து வரும் என்னிடம் கருணையைக் காட்டமாட்டாயா? தியாகராஜ சுகபிரும்மம் போல, நான் உன்னையல்லவோ பரகதியாகக் கொண்டு வாழ்கிறேன். நான் உறுதியுடன், புத்தி நிச்சயத்துடன் அனன்யகதியாக வரவில்லை என்று யோசிக்கிறாயா? கல் போன்று விருந்த அஹல்யையைப் போல, ஒருமிக்க நான் ஸ்மரணை செய்யவில்லை என்று நினைக்கிறாயா? உனது ஸங்கல்பம் என் விஷயத்தில் எப்போது ஏற்படும்? "எனது ஸங்கல்பம் தோன்றிய பின்பு, நானே உனக்கு நன்மையைப் பயக்க, என்னிடம் சேர்த்துக் கொள்வேன். அர்ச்சராதி கதியைக் கொடுப்பேன்" என்று பலவாறு, ஹே மஹாவராஹரே, கோவிந்தரே, குருவாயூரப்பனே, பவனபுரநாதரே, பூமிப்பிராட்டியிடம் உரைத்தீரே, அந்த வசனங்களை மறந்தீரோ? கோபர்களிடம் கருணையைக் காட்டி, நீர் அக்னியை பானம் செய்தீரே. அதுமாதிரி என்னுடைய பாபங்களைப் போக்கடிக்க, வல்லமை பெற்ற உம்முடைய கிருபை யாகிற கருணை எப்போது எனக்கு ஸித்திக்கும்? அச்சுதா, ஸர்ப்ப ராஜனான காளிங்கன் தங்களிடம் தனது சரீரத்தை அர்ப்பணம் செய்து வணங்கினான். உமது ஆக்ஞையினால் கருடன் அவனிடம் விரோதம் செய்யவில்லை. இவ்விதம் பலவித மாக உம்முடைய பாதசரணங்களையே நம்பியிருக்கும் என்னிடம் கருணை காட்ட இன்னமும் உனக்கு அவகாசம் ஏற்படவில்லையா? காரார் கடல்வண்ணா, ஓராயிரம் நாமங்களுக்கு ஒரே நாமமாக விளங்கும் ராமநாமமே, எனக்கும், எந்தை தந்தைக்கும், மஹா லக்ஷ்மி, உமாமஹேஸ்வர, பிரும்மாதி தேவர்களுக்கும், சுக்ர, அகஸ்திய, பிரஹஸ்பதி போன்ற மாமுனிவர்களுக்கும், நம்மாழ் வார் போன்ற வைஷ்ணவ தாஸர்களுக்கும் ஆதியாயிருந்து

அணியாய் விளங்கின எம்மானே, நாராயணா, அரங்கத் தம்மானே, என்னிடம் ஏன் இந்த பாராமுகம்?]

"ஹே பிரபோ, ரகுபதி, எங்களை சுத்தம் செய்யும் பொருட்டு உம்முடைய பரமபக்தியையும், பரஞானத்தையும் கிருபை கூர்ந்து அருள்புரிய வேண்டும். முக்குணங்களாலும், ஆதி தைவிக, ஆதி ஆத்மிக, ஆதி பௌதிகாதிகளாலும் யேற்படும் தாபங்களையும், மமகார அஹங்காராதிகளையும் ஒழித்து, எங்களுடைய பாபங்களைப் போக்கி, கிலேசங்களையும், பயங்களை யும் நாசம் செய்வீராக. உம்முடைய பரம பவித்திரமான ராம நாமம், ஸர்வ ஔஷதி மணிமந்திரமாக எங்களைக் காப்பாற்றும் கவசமாக விருக்கட்டும். சரணாகத தர்மத்தை அவலம்பித்து, ("ஒருக்கால் அடைக்கலம் கொள் என்னை நீயே," அருளாளா, அருளாழிப்பெருமானே) ஸுரதேனுவே, கற்பகத்தருவே, பிரபு, பக்தவத்ஸலா, பரிபூர்ண ராமா, உம்முடைய உதவி அழியாதது. ஒன்றிரண்டு என்று கணக்கிட முடியாது. ஜாயமான கடாக்ஷம் முதல் வைகுந்தத்தை அடையவிக்கும் ஒவ்வொரு நிலையிலும் எங்கள் மீது கருணை கொண்டு, எங்களுக்கு உபகாரங்களைச் செய்வீராக. எங்களிடம் ப்ரீதி அடைந்த, எங்களுக்கு, வேதங் களின் பொருளாக விளங்கும் உங்களுடைய திருவடித்தாமரை களை ஸதா பற்றும்படி அனுக்ரஹிப்பீராக. இயற்கையாகவே பகையுள்ள பாம்பும், கருடனும் உம்முடைய திருவடிகளை எவ்விதம் தரிக்கின்றனவோ, அது மாதிரி எங்களுடைய மமகாரங்களை ஒழித்து விரோதிகளான பாபங்களை அக்ஞான வாசனைகள், செய்கைகளை யாவற்றையும் விலக்கி, எங்களுக்கு த்ருடமான மனத்தை அளிப்பீராக." (223)

"பிரபோ, ரகுநாயகா, தாங்கள் ஸம்சாரம் எனப்படும் ஆழமான சமுத்திரத்தை வற்ற அடிப்பதற்கு அகஸ்திய முனி வரைப் போல விருக்கிறீர். ரகு குலோத்தமா, உம்முடைய ஸேவகர்களுக்கு ஸகல சுகங்களையும் வாரி அளிக்கும் நிரவதி சுகதாயகராக விருக்கிறீர். ஹே தீனபந்தோ, மனத்தில் ஏற்படும் அசுசிக்கும், நோய்களுக்கும், ஆசைகளுக்கும் தகுதியான மருந் தாக தாங்கள் விளங்குகிறீர். நாராயணா, உண்மைப் பஜிப்பதினால் எங்களுக்கும் விருப்பும் வெறுப்பும் இல்லாத ஸமதிருஷ்டி உமது அருளினால் ஏற்படட்டும்." (224)

"உம்முடைய பாதபங்கஜங்கள் விஷயங்களின் ஈடுபாடுதலை அழிக்கின்றன. பாப பயங்களையும், ஈர்ஷை, அசூயை,

அக்ஞானுதிகளையும் நாசம் செய்கின்றன. வினய நம்ரதிகளை அதிகப்படுத்தி, விவேகத்தையும், வைராக்யத்தையும், விஸ்தாரம் செய்கின்றது; ராஜ ரிஷிகளில் எல்லோரிலும் சிரோண்மணி பூஷணமாக தாங்கள் விளங்குகிறீர். ஜன்ம ம்ருத்யு பிரவாஹம் ஆகிற ஸம்ஸ் நதிக்கு ஒரு ஓடத்தைப் போல தாங்கள் விளங்குகிறீர்கள். உம்முடைய பக்தியை எங்களுக்கு ஸதா அருள வேண்டும். தயவு செய்து அருள வேண்டும்.'' (225)

('' தியாகராஜ, துளசிதாஸ, கம்ப, நாரதாதிகளாகிற) முனீஸ்வரர்களுடைய மனரூபியாக விருக்கிற மானஸ ஸரோவரில் சஞ்சரிக்கும் ஹம்ஸப்பேடே, பரம ஹம்ஸரே, நாராயாணரே, நளிர்மதிச்சடையானும் நான்முகக் கடவுளும், தளிரொளியிமையவர்தலை வனு முதல்வா, ஓர் ஆலிலையில் பள்ளி கொண்ட பெரு மாமாயா, உம்மை பிரும்மருத்ராதி தேவர்களை முன்னிட்டு நாங்கள் நமஸ்கரிக்கிறோம். தாங்கள் ரகுகுலத்தின் சிரோண்மணி பூஷணமாக விருக்கும் கொடி. உலகத்தில் தீயவைகளைப் பிரிக்கும் அணையாக விருக்கும் ஜகதஸ் ஸேதுவே, புண்ய பாப பலன்களை மாறுமல் கொடுப்பவரே, உலகத்தைக் கரையேற்றுவதற்கும், வர்ணுஸ்ரம ஆஸ்ரமங்களின் தர்மங்களை கலங்காமலிருக்கும்படி தாங்குகிறவரே, வேத மார்க்கங்களை ரக்ஷிக்க அவதரித்த பகவானே, உம்முடைய அருளினுல் நாங்கள் காலத்தின் விபரீத பலன்களையும், கர்மத்தின் தோஷங்களையும், குணங்களால் யேற்படும் பந்தங்களையும் நாசம் செய்ய வேண்டும்.'' (226)

''ராமா, சீதா நாயகா, (பரதாக்ரஜா, லக்ஷ்மண சத்ருக்ன ஆஞ்சநேய ஸேவித ராமா,) நீரே உபாயம் உபேயமாக விருக்கிறபடியால் எங்களுக்கு சம்சாரமாகிற சமுத்திரத்தைத் தாண்ட வைக்கும் ஓடமாகவும், ஓடக்காரனுகவுமிருக்கிறீர். எங்களுடைய பாபங்களையும் பயங்களையும் கல்மஷங்களையும் நாசம் செய்ய வேண்டும். திரிபுவன பூஷணரே, (துளசிதாஸ தியாகராஜ ஜகத் பிரபோ,) உமக்கு நாங்கள் அடிக்கடி அடிக்கடி சுக்ருத நமஸ்காரங்கள் செய்கிறோம். (தர்மோ விக்ரஹவான் அதர்ம விரதிம் தந்விஸ் தந்வீதநः) என்று ஒப்பற்ற சார்ங்கத்தையும் அஸ்திரத்தையும் கையில் தரித்துக் கொண்டு, ஸாது ஸம்ரக்ஷணத்தைச் செய்யும் ''ஸ்ரீராமதத்வம்'' என்கிற உம்முடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை நமஸகரிக்கிறோம். பிரபோ, கிருபை பாலிக்க வேண்டும்.'' (மஹாலக்ஷ்மி நாயகா, கருட அனந்த

விஷ்வக்ஸேனுதிகளால் ஸேவிக்கப்படும் ஸ்ரீமந்நாராயணு, கிருபை செய்ய வேண்டும்.) (227)

[தியானம்

மஹாதேவ சம்போ, திரிபுராரி, திரியக்ஷரே, கங்காதரரே, உமா காந்தரே, தேவா ஸுர பராயணரே, தேவ ரிஷியக்ஷ கந்தர்வ ராக்ஷஸ ஸித்த மனுஷ்யர்களால் ஆஸ்ரயிக்கப்படும் உமா மஹேஸ்வரர்களே சரணம் சரணம், ஸ்ரீமான், ஸ்ரீவர்த்தனரே, ஸ்ரீயாவாஸி, பிரும்ம கர்ப்பரே, சங்கர பகவானே, நந்தி முதலிய பிரமத கணங்களால் வணங்கப்படுபவரே, கூட லிங்கரே, ஸ்தாணு மூர்த்தியே, ஓங்கார ரூபியே, குஹஜன்ம விபோ, உம்மை சரணமடைந்தவர்கள் ஸம்சாரம் எனப்படும் கடலிலிருந்து கரையேற்றப் படுகிருர்கள் காசி பதியே, ராமலிங்கரே, உம்முடைய ஸாந்நித்யத்தில் இருப்பவர்கள் மஹா பாக்ய முள்ளவர்கள். தண்டி, சுக்ரர், கௌதமர், யமன், நாசி கேதர், நாராயணர், உபமன்யு ரிஷி ஆகிய மஹானுபாவர்களால் ஆராதிக்கப்பட்ட சங்கர பகவானே, கிருத்தி வாஸரே, எங்களிடம் தயை காட்ட வேண்டும். தீன பந்தோ, ருத்ரரே, ஆசுதோஷி, நீரே தாதா விதாதா, விஸ்வே தேவர்கள். நீரே சுக்ரர், பிருஹஸ்பதி, துருவன், பிரும்மலோகம், ஸத்யலோகம், வேதங்கள். ஸ்வாமி, நீரே திக் பாலர்கள். அவர்களுடைய மஹிஷிகள், யக்ஞங்கள், ஸோமலதை. ஸ்வாஹாரம், வஷட்காரம். திரியம்பகரே நீரே கால சக்ரம். பிராம்மணர்கள், பசு, முக்கிய மான தர்மமும் நீரே. விருஷ பிரியரே, கிருஷ்ண பிங்களரே, உம்மை பரிசுத்தனுக விருந்து ஐம்புலன்களை அடக்கி, தியானம் செய்கிறேன். உமா மஹேஸ்வரர்களே, ருத்ரரே, அம்பிகையின் பதியே, ராம நிவாஸரே, என்னிடம் தயை செய்யவேண்டும்.]

இவ்விதம் ஸனகாதி முனீஸ்வரர்கள் அடிக்கடி அடிக்கடி தண்டனிட்டு பிரபு ஸ்ரீராம தயாளுவை (சங்கரர், உமை, அகஸ்தியர், லோபா முத்ரை ஆகியவர்கள் ஸ்தோத்ரம் செய்து தண்டனிடுவது போல) ஸ்துதி செய்து சுக்ருத பிரணமம் செய் தார்கள். அவர்களுடைய ப்ரேமை பக்தி எல்லையற்றதாகவும் ஆழமாகவுமிருந்தது. அடிக்கடி கிருதாஞ்சலியுடன் அவர்கள் தலை வணங்கினுர்கள். அதன் பிறகு பிரபுவினுல் உத்தரவு கொடுக்கப்பட்டு அந்த மஹானுபாவர்கள் பிரும்ம லோகம் சென்றனர். அவர்களுடைய ஸர்வ ஸத்வ மனோரதங்கள் பூர்த்தி யடைந்ததினுல், ஸ்ரீ சீதாராமனுடைய பரமானுக்கிரஹத்தை

அடைந்த படியால் மிக்க ஆனந்தத்துடன் சென்றுர்கள். (அப்பேற்பட்ட அனுக்ரஹ சித்தமுள்ள ஸ்ரீ சீதாராமனே, ஸனகாதி யோகீஸ்வரர்களேயும் உமா சம்புவையும் முன்னிட்டு அடிக்கடி அடிக்கடி நான் நமஸ்கரிக்கிறேன்.) (228)

ஸனகாதி முனிவர்கள் பிரும்ம லோகத்திற்குச் சென்று விட்டார்கள். பரத, லக்ஷ்மண, சத்ருக்ன சஹோதரர்கள் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய பாத சரணங்களில் விழுந்து நமஸ்காரித்தார்கள். அப்பொழுது அவர்கள் லஜ்ஜையுடன் பேசாமலிருக்க, ஸ்ரீ ராமச்சந்திரன் அவர்களே அருள் கடாக்ஷத்துடன் நோக்க, ஸகல பிராதாக்களும் ஹனுமான்ஜியைப் பார்த்தார்கள். (229)

அந்த மஹாத்மாக்கள் பரபிரும்மமாகிற ஸ்ரீ ராமச்சந்திரனுடைய ஸ்ரீ முகத்தைப் பார்த்த வண்ணமிருந்தார்கள். "ஏதாவது பகவான் நம்மிடம் பேச மாட்டாரா, பூர்வ பாஷியான பிரபு நம்மிடம் சில மதுரமான வார்த்தை ஸல்லாபங்களேச் செய்ய மாட்டாரா" என்று ஏங்கினுர்கள். எந்த மஹானுபாவனுடைய வார்த்தை வசனங்களேக் கேட்ட பின்பு அக்ஞானம், அவிவேகம், மமகார அபிமானங்கள் "நான்" "தன்னுடையது", என்கிற பிரமைகள், அந்தகாரங்கள் அழியுமோ, அந்த மதுர வாக்யங்களே அவர்கள் மீண்டும் கேட்க விரும்பினுர்கள். ஸர்வக்ஞர், ஸர்வாந்தர்யாமியான பிரபு எல்லாவற்றையும் கண்டார். பிரபு ஹனுமான்ஜியைப் பார்த்து, "ஹனுமான், என்ன விஷயம் சொல்", என்று ஆக்ஞை செய்தார். (அந்த ஹனுமான்ஜியை முன் வைத்து பரத லக்ஷ்மண சத்ருக்ன ஸ்ரீராமனே நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (230)

[தியானம்

ஹனுமான்ஜி ஸேவித நாராயணு, சீதா மஹா பிரபோ, மஹாதேவ சம்போ, சிவ அச்யுதா சரணம் சரணம். உம்முடைய பரத்வம் ஸனகாதி முனிவர்களால் புகழப் பட்டதைப் பார்த்தேன். ஸௌசீல்ய வாத்ஸல்யாதி குணங்களேயும் பக்த வாத்ஸல்யத்தையும் இன்று அதே விடத்தில் காண்கிறேன். காசி வ்ருகாசுரன், அந்தகாசுரன், சிவதனுஷ்; பாணுஸுரன் விருந்தாந்தம், கங்கை உற்பத்தி ஸ்தானம், ஸம்பூதி, நாமக்ருதி, ஸம்வதனன் முதல்ய வரலாறுகளிலிருந்தும், பகவான் உமா மஹேஸ்வரர் தானே சொல்லிய வசனங்களிலிருந்தும், அம்பரீஷ பயத்திஞலும், பிரும்ம சாப பிரஸங்கத்தாலும், பகவான் சம்பு

விருஷபாரூடர், உமாபதி, உன்னிடம் கொண்ட நிலையுள்ள பக்தியினாலும் நான் நன்றாகவும், நேரிடையாகவும் கண்ட பின்பு, ஸ்ரீ சீதா ராமா, மஹாலக்ஷ்மி நாராயணா, உங்களைத் தவிர வேறு சரண்யன் எனக்கு யார் இருக்கக் கூடும்? ஸாகேத ராமா, கர்ம யோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலியவற்றை உமது விஷயமாகக் கொண்ட கதைகளிலிருந்து முழுவதும் அறியக் கூடவில்லை. காமக்ரோதங்கள் அதிகமாக, விஷய பிரவிருத்திகளின் ஆசைகள், அதனால் ஏற்படும் க்லேசங்கள் தேகமன இந்திரிய கலக்கங்கள் ஆகியவை என்னைத் தபிக்கின்றன. ராமா, வேங்கட வரதா, கார்த்திகேயாதிகளால் ஆராதிக்கப்படும் ரகு வீரா, அகஸ்திய லோபா முத்ரார்ச்சித சீதா ராமா, பூர்ணகாமா, எனக்காக எனது ஆசார்யர்கள் என்னுடைய பரத்தை (பொறுப்பை) உன்னிடம் ஸமர்ப்பித்து விட்டார்கள். "நான் மறுபடியும் சரணமடைகிறேன்" என்று என் வாயினாலும் சொல்லி, தேக மன இந்திரியங்களாலும் பூர்ண விஸ்வாசத்துடனும் சரணமடைய வேண்டும் என்று நீ வாதாடினால், அதையும் நான் "அப்படியே ஆகட்டும்", என்று உன் ஸந்நிதியில் சொல்லி, ஆளவந்தார் வசனப்படி "எனக்கு உபாயம் உன்னைத் தவிர வேறு மறுபடியும் செய்ய வேண்டியதில்லையே", என்று சொல்லுகிறேன். இப்பொழுது நீ என்னைப் பற்றி சிந்திப்பாயா' அது இருந்து விட்டுப் போகட்டும், சரணாகத வத்ஸலன் என்கிற ஸத்கீர்த்தி உனக்கு உண்டே. அந்தக் கீர்த்தியுடன் நினைவிலாவது என்னை ரக்ஷிக்க மாட்டாயா? சீதா தேவியே, நீ தான் எனக்கு சரணம்)

அதுதான் சமயம் என்று நினைத்த ஹனுமான்ஜி கிருதாஞ்சலியுடன் பகவத் ஸந்நிதானத்தின் முன்பு நிவேதனம் செய்ய ஆரம்பித்தார். "ஹே பகவான், தீனதயாளு, தயவுசெய்து எங்களுடைய பிரார்த்தனைகளைக் கேளும். பரதன் தங்களிடம் ஏதோ கேட்க விரும்புகிறான். ஆனால் அவன் ஸங்கோசத்தை அடைந்திருக்கிறான்." (231)

பகவான் பதில் சொன்னார் "ஹனுமான், உனக்குத்தான் என் ஸ்வபாவம் நன்றாகத் தெரிந்திருக்கிறதே. பரதனுக்கும் எனக்கும் நடுவில் ஏதாவது பேதவித்யாஸம் இருக்கிறதா? அவனே நான், நானே அவன் என்கிற ஒரே மனப்பான்மை எங்களிடம் யிருக்கிறதே." இதைக் கேட்டான் பரதன். அவனுடைய உடம்பு முழுவதும் கிருதக்ஞையுடன் புல்லரித்தது. புளகாங்கிமடைந்தான். உடனே ஸ்ரீராமபாதங்களில் பரதன்விழுந்து நமஸ்கரித்தான்.

வார்த்தைகள் அவனுடைய தொண்டையிலிருந்து மெதுவாக வர ஆரம்பித்தன. "ஹே ஜானகிநாதா, பிரணதார்த்தி ஹரனே, "ஒருக்கால் சரணம்" என்று சொல்லிவந்தவர்களை ரக்ஷிக்கும் தீனதயாளு. தயவுசெய்து எனது பிரார்த்தனையைக் கேளும்." (232)

"ஜானகிநாதரே, எனக்கு (மஹாமோஹமும் கிடையாது.) தாங்களே பரமார்த்தம், பரமாராத்யம் என்று மஹாவிஸ்வாசம் கொண்டு, ஸந்தேகமின்றி வாழ்ந்துவருகிறேன். அயோத்தியாபதி ஸ்வப்பனத்தில் கூட தங்களைவிட்டுப் பிரியாமலும், அந்த ஸம்பந்த ஆனந்தத்தினால், நான் துக்கங்களையும் விஸ்லேஷஸந்தாபங்களையும் அனுபவியாமலிருக்கிறேன். பரமானந்த சீதாபதி, இந்தமாதிரி இடைவிடாமல் தங்களுடைய பாதபங்கஜங்களை வேறுகதியின்றி (சுகர், ஸனகாதிகள் நாரதர், தேவர்களாகிற பிரும்மா, ருத்ரன், இந்திராதி தேவர்கள், தியாகராஜ வால்மீகி, துளசிதாஸர் போன்ற மஹானுபாவர்கள் அனுபவிக்கும் பேரானந்தங்களை, நம்மாழ்வார் போன்ற வைஷ்ணவப் பெரியார்களைப் போல நின்றநிலையில்) ஸதா அனுபவித்து வருகிறேன். இந்த பிரேமாபக்த அனுபவங்கள், ஹே கிருபாதாம், ஸந்தேகமின்றி, தங்கள் கிருபையால் எனக்குக் கிடைத்த பாக்யங்கள். கேவலம் உம்முடைய தயையினால் பரிபூர்ணகாமனாக விளங்குகிறேன். "ஸ்ரீராமுனி" கிருபையினால் இதை நான் முழுவதும் அடைந்திருக்கிறேன். மும்மூர்த்திகளுக்கும் மேலான ரகோத்தமா, நாராயணா, இது தங்களுடைய மஹாகிருபையின்றி வேறல்ல. வேறு ஒன்றும் இருக்கமுடியாது." (233)

"ஸ்வாமி, அவ்விதமிருந்தபோதிலும், தாங்கள் என்னுடைய பிடிவாதத்தை க்ஷமித்து, எனக்கு தங்களிடம் உபதேசம் பெறுவதற்கு சந்தர்ப்பம் அளிக்கவேண்டும். நானோ உங்களுடைய சேவகன். தாங்கள் என்னுடைய எஜமானர். தாஸர்களுக்கு சுகத்தை அளிக்கும் ஸஜ்ஜன பாரிஜாதமே, ரகுராமா, வேதங்களும் புராணங்களும் அநேகபிரகாரமாக ஸாது ஜனங்களின் மகிமைகளைப் புகழ்கிறார்கள். ஹே ரகுநாத்ஜி, இதைத் தாங்களும் நன்றாக அறிவீர்கள்." (234)

"அப்பேற்பட்ட ஸாது ஜனங்களின் பெருமைகளையும் வைஷ்ணவ தாஸர்களின் லக்ஷணங்களையும் தாங்கள் கிருபைகூர்ந்து முழுவதும் எங்களுக்கு உபதேசிக்கவேண்டும். தங்களுடைய ஸ்ரீமுகத்தினால் எங்களுக்கு உபதேசம் செய்ய

வேண்டும்.'' இந்தவிதமாக பரதன் பேசும் வசனங்களை பிரபு சிரித்துக்கொண்டு கேட்டார். அவருக்கு பரதனுடைய வைஷ்ணவ பக்தியைக் கண்டு, ப்ரீதிவளர்ந்தது. பரதன் மீண்டும் விக்ஞாபனம் செய்தான். ''பிரபு, வைஷ்ணவர்களின் தாஸ்ய பக்தியின் சின்னங்களையும் அவர்களுடைய ஞான விசேஷங்களையும், பூர்ணமாக உபதேசிக்கவேண்டும். கிருபாஸிந்து, தங்களுடைய அபிப்ராயத்தை நாங்கள் நேரில் அறிய விரும்புகிறோம்.'' (235)

[தியானம்

மஹாலக்ஷ்மி ஸமேத நாராயணா, ரகுநாதா, யானைக்கும் முதலைக்கும் சுபத்தைத் தந்த தருமமூர்த்தியே, உன்னைத்தானே நாரத, துளசிதாஸ, தியாகராஜாதிகள் ''கருணாதரங்கம்'' என்று அடிக்கடி சொல்லுகிறார்கள். ஸ்வாமி, நாங்கள் கர்மகாண்டத்தில் உழண்டு, பக்தியும் ஞானமும் இல்லாமல், வரண்ட ஜீவர்களாக வாழ்ந்திருக்கும் சமயம், தாங்கள் தசரதபுத்ரனாக அவதரித்து, மானிட வாழ்க்கைநடத்தி, உம்முடைய பரமசுபமான நடத்தையினால், வழிகாட்டியாகவிருக்கிறீர், ''தான்'' என்று உடல் தேகத்துடன் ஸம்பந்தப்பட்டு, ஆத்மாவென்பதை தெரிந்துகொள்ளாமல், தசரதபாலா, காணும் பொருள்கள் எல்லாம் நீயே, என்று நினைக்காமலிருப்பவன் உலகமாயையிலிருந்து விடுபடமுடியுமா? சீதையின் சஹாயத்தினால் நாடகத்தை நடத்திக்காட்டிய ரகுகுல ராமா, ஆத்மா ராமர்கள் என்று தங்களைச் சொல்லிக்கொள்பவர்கள் பரிபூர்ணனாகிற உன்னை அடைந்து, ஸதா ஜபமாலையுடன், உனது பக்தகோடிகளைப் போல நடித்து, ஸத்குருக்களின் மூலம் உன்பாதங்களைத் தேடாமல் போலியாக நடந்துவந்தார்களானாலும், உனது கிருபைமாத்திரம் அவர்களுக்கு கிடைத்துவிட்டால், அது நிஜபக்தியாக மாறிவிடுகிறதல்லவா? அதே நிஜ பக்தி அவர்களை ஸாதுவாக இறுதியில் உண்டாக்கிவிடுகிறதல்லவா? இந்த மர்மம் உனக்கும் ராமபக்தி என்கிற சஞ்சீவினியைத் தெரிந்தவர்களுக்கும் புரிகிறது. உயிரற்றவனுக்கு அலங்காரம் செய்வதைப் போல, உனது பக்தியில்லாதவன் பிரஸங்கம் செய்வதும், அவனுடைய அறிவும் வீணே வீண். இதைத்தானே பரத லக்ஷ்மண சத்ருக்ன ஆஞ்சநேயாதிகள் உனது ஸ்ரீமுகமண்டலத்திலிருந்து அறிந்து கொண்டார்கள். எனக்கு நீயும் அவர்களும் இதைப்பற்றிச் சொல்லவேண்டும்.]

"பிரணதபால், (சரணமடைந்தவர்களைக் காப்பவரே,) உம்முடைய அன்பு, பொறுமை, என்கிற க்ஷமை, ஆகிய இரு குணங்களுக்கும் பாத்திரமாகவிருக்கும் எங்களிடமும் கருணை காட்டி, தேவரீர் ஸாது ஜனங்களின் லக்ஷண மகிமைகளையும், அசாதுக்களின் லக்ஷண அடையாளங்களையும் விபரமாக தங்கள் ஸ்ரீ முகமாக எடுத்துச் சொல்லவேண்டும். மஹா தீர்த்தரே, தேவரீருடைய கைங்கர்யங்களையே பிரும்மானுபவம் என்று சுவையுடனிருக்கும் எங்களுக்கு தாங்கள் உபதேசிக்க வேண்டும்." என்று பரதன் பிரபுவினிடம் விக்ஞாபித்தான். ஸ்ரீராமச்சந்திரன் பதில் சொன்னர். "பரதா, லக்ஷ்மண, சத்ருக்ன, ஆஞ்சநேயா, கேளுங்கள். ஸாது ஜனங்களுடைய லக்ஷண அடையாளங்கள், குணமகிமைகள் கணக்கற்றதாக விருக்கிறபடியால் அவைகளை எளிதில் சொல்லமுடியாது. வேதங்களும் புராணங்களும் பலவிடங்களில் பலவிதங்களாக இவைகளைப் பற்றி புகழ்ந்திருக்கின்றன என்பது பிரஸித்தமான விஷயம். அவைகளை நான் சுருக்கமாகச் சொல்லுகிறேன்." (236)

"ஸாதுக்களின் லக்ஷணங்களும், துஷ்டர்களின் ஸ்வபாவங்களும் சந்தன மரத்தையும் கோடாரியையும் போன்றவைகள். பிரியமான தம்பிகளே, சந்தன மரத்தை கோடாரி வெட்டிப் பிளக்கிறது. கோடாரியின் இயற்கையான ஸ்வபாவம் ஹிம்சையைத் தவிர வேறு ஒன்றுமில்லை. ஆனல் சந்தன மரமோ வெட்டப் பட்டாலும், அது தன்னுடைய வாசனையை கோடாரிக்குக் கொடுத்து, அதை பரிமளிக்கச் செய்விக்கிறது. ஸாதுக்களின் ஸம்பந்தத்தைப் பெற்ற துஷ்டர்கள் ஸுகந்தமான கல்யாண குணங்களை அடைந்து, தங்களுடைய நிஜ குண ஸ்வபாவங்களை தியாகம் செய்து விட்டு, நாளடைவில் நற்குணங்களைப் பெறுகிறுர்கள்." (237)

"இந்தக் காரணத்தினுல் நற்குணத்தைப் பெற்ற சந்தனம் தேவதைகளின் தலையின் மேலே ஸ்ரீ கண்டமாக விளங்குகிறது. அதனுல் ஸர்வ ஸுகந்தமான சந்தனம் ஜகத் பிரியமாக விருக்கிறது. ஸர்வ வல்லமை பெற்றதாகவு மிருக்கிறது. நாராயணருக்கு மிக்கப் பிரியமாகவு மிருக்கிறது. ஆனுல் பிறருக்கு ஹிம்சையைச் செய்யும் கோடாரி நெருப்பினுல் சுடப்பட்டு, சுத்தியினுல் அடிக்கப்பட்டும், தண்டனையை அடைவது போலிருக்கிறது. ஆகையினுல் ஸாதுக்கள் துஷ்டர்களால் பீடிக்கப்

பட்டும் வருத்த தாபங்களை அடையாமல், இறுதியில் ஸத்கீர்த்தியையும் நாராயண ப்ரீதியையும் சுலபமாக அடைகிறார்கள்.''

(238)

''இன்னமும் ஸாதுக்களின் குணங்களைப் பற்றிச் சொல்கிறேன் கேளுங்கள். ஸாது ஜனங்களுக்கு விஷய போகங்களில் ஆசையும் திருப்தியுமில்லை. சீலம், தமம், மனம், இந்திரிய அடக்கம் முதலிய குணங்களால் விளங்குகிறார்கள். பக்தி ஆராதனை ஆகிய செயல்கள் யாவற்றையும் (தியாகராஜ துளசி தாஸர்களைப் போல) ராமார்ப்பணம் செய்து தங்களுக்கென்று ஸாது ஜனங்களின் நல்வாழ்க்கையையே ஸம்பத்தாகக் கொண்ட ஸாது மஹாராஜாக்கள் ஸர்வ உத்தம குணங்களுக்கு பொக்கிஷமாக விளங்குகிறார்கள். இந்த மஹா பாக்கியர்களுக்கு பர துக்கம், பர பீடை இவைகளைக் கண்டால், தங்களுடைய துக்கங்களாக பாவித்து, அனுகம்பையில் ஈடுபடுவார்கள். பிறர்களுடைய சுகங்களை தங்களுடைய சுகங்களாகப் பாவிப்பார்கள். அவர்களுக்கு வெறுப்பு விருப்போ, ஜாதி வித்யாஸமோ, பாபியோ புண்ய ஆத்மாவோ ஆகிய பேத வித்யாஸங்கள் ஒன்றும் கிடையாது. (வைஷ்ணவன் தொண்டர் குலத்தைச் சேர்ந்தபடியால் இவனுடைய தொண்டு ஸமுதாயத்திற்கேயன்றி, தங்களுக்காக ஏற்பட்டதல்ல. உப்பைப் போல அவர்கள் தங்களை அழித்துக் கொண்டு, தியாக சீலர்களாக பிறர்களுக்குச் சுவையான கறியமுதாக ஆகி விடுகிறார்கள். ஒருவன் ஒரு வைஷ்ணவனைப் பார்த்து, ''நீசனே, சீலமில்லாச் சிறியனே''. என்று நிந்தித்தால், அந்த வைஷ்ணவன் சினத்தை விட்டு விட்டு, ''அடியேனுடைய குறைகளை நினைவூட்டியதற்கு நன்றி'', என்று மகிழ்ந்து, வாழும்) ஸமதர்சி, ஸர்வத்தையும் பாரபக்ஷமின்றி ஸமமாகப் பார்க்கும் ஞான சீலன். (துளசி திருத்துளாய், சந்தனம் பரிமளத்துடன், ''உண்ணும் சோறும் பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்'', என்கிறபடி) சகல பாரங்களையும் ஸ்ரீமந் நாராயணனின் அடிகளில் ஒப்படைத்து, (பக்தியைக் கூட உபாயமாகக் கருதாமல்,) பகவானுடைய திருவடிகளையும் ஆசார்ய உகப்பையும் ஸாதனமாகவும், நெறியாகவும், குறியாகவும் கொள்வான். அவன் பூததயை உள்ளவன். மமகாரம், அஹங்காரம் அவனுக்கு கிடையாது. ஸர்வ பூதங்களையும் வாஸுதேவ மயமாகப் பார்ப்பான். வைராக்ய ஸம்பன்னன், லோபம், க்ரோதம், துக்கம், சந்தோஷத்தினால் மாறுபடுதல், பாபங்களினால் யேற்படும் பயங்கள் ஆகிய

யாவற்றினுலும் அவன் பற்றப்படுகிறதில்லை.'' (ஸர்வஸங்கதியாக சீலனுக, கழுத்தில் துளசி மணி மாலையையும், தாமரை மணி மாலையையும் அணிந்து கொண்டு, தோள்களில் ஆழிச் சங்கு களின் கோயிற் பொறிகளாலே, ஒன்றுண்டு நின்றும், நெற்றியில் பளபளவென்று விளங்கும் திருமண் காப்பை அணிந்து கொண்டு, அந்தக் கரண சுத்தியுடன் பாகவத அபசாரத்தை மிகப் பெரும் குற்றமாகக் கருதி, ஸகல ஜீவராசிகளிடமும் ஜன்ம நிரூபணம் போன்ற அபசாரங்களைச் செய்யாமல், ''நம் பிள்ளை கோஷ்டியோ'', ''நம் பெருமாள் கோஷ்டியோ'', என்று வியக்கும்படி வைஷ்ணவ தாஸர்களாக வாழ்ந்து, தொண்டு என் பிரியத்திற்காகச் செய்வார்கள்.) (239)

[தியானம்

மஹாலக்ஷ்மி பிரபோ, ஸ்ரீமந் நாராயணு, நீதானே என் ஆத்மஜயோதி. ஆதித்யர், ஸவிதா, சூர்யர் என்று சொல்லப்படும் ஞான பாஸ்கரன். நீதானே காயத்திரி தேவதை. உன்னைப் பற்றி நான் புகழாவிடில் உனக்கு ஏதாவது நஷ்டம் ஏற்பட்டு விடுமா? உனக்கு சுகர் ஸனகாதிகள் பிரஹ்லாத நாரதாதிகள் வால்மீகி துளசிதாஸ தியாகராஜாதிகள், பரத லக்ஷ்மண சத்ருக்ன ஆஞ்சநேயாதிகள் இருக்கும் போது, நித்ய ஸேவை செய்யும் பொழுது, கருடனைப் போல படர்கள் ஸதா உனது ஆக்ஞையை எதிர் பார்த்திருக்கும்போது, என்னைப் போல மட்டமான புருஷனுடைய ஸ்துதி வாக்யங்கள் இல்லாத போனுல், உனக்கு ஒரு குறையும் ஏற்படாது. ஹே ராமா, குறை வொன்றுமில்லாத கோவிந்தா, பிரும்ம ருத்ராதிகளால் ஸதா புகழப்படும் பரமேசா, உனக்கு சீதையைப் போல ஒரு அழகான பெண்டாட்டி நீ வைதாலும் திட்டினுலும் இகழ்ந்தாலும் ''உன் பாதங்களையே நம்பி வாழ்கிறேன்'' என்று ஸித்தாந்த பூர்வ மாகச் சொன்னுள். ஹே முனிமானஸ ஹம்ஸா, உனக்கு வேத வியாஸ பீஷ்மாதிகளைப் போல பக்தர்கள் ஸாமகானங்களின் ஸாரத்தை பூஜையாகவும் ஸ்துதியாகவும், அர்க்கியமாகவும், கொடுப்பதற்குத் தயாராக விருக்கிருர்கள். உன்னுடைய உறவைப்பெற்ற இந்திராதிகள் உனக்கு ஸதா கைங்கர்யம் செய்த வண்ணமிருக்கிருர்கள். ஹே சுகார்ச்சிதா ராமா, தியாகராஜார்ச் சித ஸ்ரீராமா, அர்ஜுனனுக்கும் சுக்ரீவனுக்கும் சரணுகதி தர்மத் தின் மர்மத்தை உரைத்தாயே. அந்த வார்த்தையின் பலத்தினுல் எனது பூர்வாசாரியர்கள் உனது சரணுகதி தர்மத்தைப் புகழ்ந்து,

"ராமோ தர்மோ விக்ரஹவான்," என்று சொல்லியிருக்கிறார்கள். பாஞ்ச ராத்திரத்திலும் ஸ்ரீராமா, பிரும்மாவும் சங்கரரும் உனது ஸ்வரூபத்தையும் கல்யாண குணங்களையும் அறிவதற்கு முடியாமல் வேதங்களைப் போல களைத்து நிற்கும் போது, நீ ஆஸ்ரிதர்கள் தன்னைத் தேடி வேண்டாதபடி மிக்க சுலபனாய், நன் நிதியாய், குல தனமாய், எனது பிரானாய், பசுபதியாக, கோவிந்தனாக, நற்காவலாக "ராம" என்கிற நாம ஸாரமாக விளங்குகிறாய். அயோத்தி கோமானே, உன்னையே கதியென்று கண்ட பின்பு, ஸம்சாரத்தில் மட்டுமா உய்யும் வழி கண்டோம்? சாஸ்திரங்களின் அக்கரையையும், கர்ம ஞான பக்தி முதலிய யோக மார்க்கங்களின் எல்லையையும் அல்லவோ நாங்கள் அடைந்து விட்டோம்.]

(" நாரதசுகாதிகள் போன்ற) ஸாது ஜனங்கள் பரமாத்மாவினுடைய மெல்லிய பாதங்களை வருடும் நளினாக்ஷியான சீதையை விட மிகமென்மை பெற்ற ஹ்ருதயத்தை உடையவர்கள். அதி கோமள சித்தத்தை உடைய மஹாத்மாக்கள். வாழ்க்கையில் நொந்து, தேகம் மனம் ஆகியவைகளில் மிக்க மலினமடைந்த, ஜீவர்கள் திக்குத்தெரியாமல் அடர்ந்த காட்டில் சஞ்சரிக்கும் சமயம், மார்க்கதரிசிகளாகவும் ஆத்ம பந்துக்களாகவும் தீன ரக்ஷகர்களாகவும் இந்த ஸாதுக்கள் ஆவிர்பவிக்கிறார்கள். தயையே கவசமாக உள்ளவர்கள். மனம் வசனம் கர்மம் இத்யாதிகளில் (நாராயணார்ப்பனம் ராமர்ப்பணம், சிவார்ப்பணம், இத்யாதி பல தியாகத்தினால்) பகவானுடைய திருவடிகளையே ஸ்வயம் பிரயோசனமாக ஆராதிக்கும் வைஷ்ணவ சீலர்கள், கபடமின்றி பரமபக்தி விரதம் பூண்டு, எப்பொழுதும் ஆர்த்திகளைக் காப்பாற்றிய வண்ணமிருக்கிறார்கள். அவர்கள் திருடர்களாகவிருந்தாலும் அவர்களுக்கு ஆத்ம உபதேசம் செய்துவைத்து, வழிதப்பிப் போனவர்களை எனக்கு மீட்டுக் கொடுக்கிறார்கள். ஹே பரதா, ஆத்மாபஹாரிகளான அவர்களை சீலமுள்ள பக்த பிரமுகர்களாக ஆக்கிவிடுகிறார்கள். அவர்களுக்கு மானமோ, அவமானமோ, ஒன்றும் கிடையாது. தங்களுடைய ஸத்கீர்த்தியை அவர்களுக்கும் அளிப்பதால் அவர்கள் ஜகத்தை உய்விக்கச் செய்கிறார்கள். அப்பேற்பட்ட ஸாதுஜனங்கள், ஹே பரதா, என் உயிருக்கு ஸமானம். அவர்களே நான் வாசஞ்செய்யும் கோயில். எனக்கு அவர்களே பிராணதாதா; பிராண நிலையர்களாகவிருக்கிறார்கள். நானும் அவர்களிடம்தான் பூர்ணமாக வசித்துக்கொண்டிருக்

கிறேன்.'' (ஹே ராமா, ஸாதுஜன ஸம்ரக்ஷகா, நீரஜநயனு, ஸ்ரீ தியாகராஜானுத ஸ்ரீராமா, நீர்தான் எனக்குத் தஞ்சம்.) (240)

''அந்த மஹாத்மாகளுக்கு வேறு சிந்தனை ஒன்றும் கிடையாது. எனது நாமஜபமும் எனது கல்யாணகுணங்களும், பிராட்டியினுடைய பாதசரணங்களுமே அவர்களுக்கு ஸதா தியானம். (த்வயம் என்கிற மந்திரத்தை ஸதா அனுஸந்தானம் செய்த வண்ணமிருப்பவர்கள்.) அவர்களுக்கு ஆசையில்லாதபடியால், பகவத் திருவுள்ளத்தின்படி அவர்கள் வாழ்க்கை நடத்துவதால், அவர்களுடைய மனம் உத்தமமான சாந்தியை அடைந்ததாகவிருக்கிறது. பரமவைராக்ய புருஷர்களானபடியால் அவர்களுக்கு எனது ருசியைத் தவிர, மற்ற விஷயபோகங்களில் இச்சைகிடையாது. அவர்களுக்கு ''அஹம்'' என்கிற அபிமானங்களும் இல்லை. அவர்களிடம் எப்பொழுதும் ஆனந்தம் குடிகொண்டிருக்கிறது. அவர்களுடைய நினைவு எல்லாம் பரஹிதமாகவும், பரோபகாரமாகவும் இருக்கிறது. அவர்களுடைய ஸ்வபாவமும் ஸரளமாகவும், தாழ்ந்தவர்களும் அனுபவிக்கும்படி இருக்கிறது. அவர்கள் மித்ர ஸ்வபாவத்துடன் ஸர்வ ஜந்துக்களுடன் பழகுகிருர்கள். அவர்களுக்கு பிராம்மணர்களின் பாதங்களும் ஆசீர்வாதங்களும் எப்போதும் பிடித்தமானவை. அதனுல் அவர்களுடைய மனமும் செயலும், பேச்சுக்களும் தர்மத்தைப் பற்றியதாகவிருக்கின்றன.'' (241)

''என் அன்புள்ள பரதா, எவர்களிடம் இந்தமாதிரி லக்ஷணங்கள் இருக்கின்றனவோ, அவர்களுடைய ஹ்ருதயத்தில் ஸதா ஸாத்வீககுணம் நிலைபெற்று விளங்குகிறது. அவர்களும் ஸதா பரஹிதகாம்யர்களாக விருக்கிருர்கள். அவர்கள்தான் ''ஸாதுக்கள்'' என்று அறியப்படுகிருர்கள். மன அடக்கமாகிற சமம், இந்திரிய ஸ்வாதீனம், (தமம்), நியம அனுஷ்டானங்கள், ஸத்கர்மாக்கள், தர்ம ஆசரணைகள் அவர்களுக்கு வழியாகவிருக்கின்றன. இந்த மார்க்கங்களிலிருந்து அவர்கள் விலகமாட்டார்கள். அவர்கள் பிறர்களை தூஷிக்கவுமாட்டார்கள். கடுமையான வசனங்களையும் அவர்கள் சொல்லவுமாட்டார்கள்.'' (242)

''அவர்களை நிந்தைசெய்தாலும், ஸ்தோத்ரம் செய்தாலும் அவர்களுடைய ஸ்வபாவம் மாருது. இருவிதத்திலும் தங்களுடைய கொள்கைகளையும் மாற்றிக்கொள்கிறதில்லை. அவர்களுக்கு மமகாரம் அஹங்காராதிகள் கிடையாது. ஸதா என் பாதபங்கஜங்களை தியானித்தவண்ண மிருப்பார்கள். அப்பேற்

பட்ட ஸாது ஜனங்கள் எனக்குப் பிராணபிரியர்கள். அவர்களே குணங்களின் கோவில். அவர்கள் தாங்களும் சுகமாகவிருப்பதுடன் மற்றவர்களுக்கும் சுகத்தையும், ஆறுதலையும் கொடுப்பவர்களாகவிருக்கிறுர்கள். நான் ஸதா அவர்களிடம் வசித்து வருகிறேன்.'' (243)

[தியானம்

திருவேங்கடவா, ஸத்வகுணம் நிறைந்த மிகப் பெரியோர்கள் இடைவிடாமல் உமது திருவடிகளையே தியானம் செய்கின்றனர். அவர்களுக்கு என்ன பலன் வேண்டும் என்று அவர்களைக் கேட்டால், ராமா, வேதநாராயணு, பரபிரும்மமே, உன்னுடையதும், திருமாமகளின் அமிர்த கடாக்ஷமும் வேண்டுமென்று சொல்லுவார்கள். உன்னுடைய கருணை பொங்கியதும் சிறிது சிவந்ததுமான கடைக் கண்களின் கடாக்ஷத்தினுல் யேற்படும் குளிர நோக்கு பிறவிக் கடலைக் கடத்தும் என்று சொல்லுவார்கள். பெருமை மிக்க மணவாளமாமுனிகளால், ''இந்த திவ்ய சரணுரவிந்தங்கள் மிக்க உயர்ந்தவை; சரணம் புகுந்தவர்களை மோக்ஷமடைவிக்க வல்லமை'' என்று அருளப்பட்டதை அந்தப் பெரியோர்கள் காட்டிக் கொடுப்பார்கள். அப்பேறற்பட்ட மகிமை பெற்ற உனது ஸ்ரீவேங்கடேச சரணங்களை நான் சரணமடைகிறேன். ஸ்ரீராமச்சந்திரா, ராகவா, ஸகலலோகாதாரா, என்னிடம் எப்போது வருவாய்? என் பெயரைச் சொன்னுல், உனக்கு ஏன் இவ்வளவு வெறுப்பு? நீதான், என் தாய்தந்தை, குரு, ஸர்வமும். எங்கேயாவது தாயார் பிள்ளையை அடித்தால், அந்த பிள்ளை தாயின் முலைப்பாலையும் தாயின் காலையும்விட்டு விடுமா? தனது நாயகன் கோபித்துக்கொண்டு அடிக்கட்டுமே; ஸதியான ஸ்திரீ அவனை விட்டுவிடுவாளா? பரமபாவனு, ஸ்ரீராமா, சுந்தரவதனு, சரசாபதரா, ஸாகேதராமா, உனது தாஸன், தியாகராஜ துளசிதாஸன், நாரதசிஷ்யன் வேதவியாஸ சுகாதிகளின் வழியில் ஊர்ந்துவருபவன் என்கிற தயையைக் கூட என்னிடம் காட்டமாட்டாயா? ஸ்ரீராமா கிருபை செய்.]

''பரதா, அசத்துக்களின் இயற்கை ஸ்வபாவங்களைச் சொல்கிறேன். இந்த துஷ்டர்களின் ஸம்பந்தசேர்க்கையை மறந்தும் கூட அடையக்கூடாது. அவர்களைத் தூர விலக்கவேண்டும். அவர்களுடைய சேர்க்கை ஸதா பிறர்களுக்குத் துக்கத்தைத் தரும். ஒரு துஷ்டபசுவின் சேர்க்கையால் உத்தம ஜாதி கபிலைப்

பசு எவ்விதம் கெட்டுவிடுமோ, அதைப்போல துஷ்ட ஸ்வபாவ முள்ள மனிதர்கள் ஸாதுக்களையும் கெடுத்துவிடுகிறார்கள்.'' (244)

''துஷ்டர்களின் ஹ்ருதயத்தில் கடும்தாபங்கள் இருக்கின்றன பிறர்களின் ஐஸ்வர்யங்களைக் கண்டு, அவர்களுடைய மனம் கோபத்தினால் கொதிக்கிறது. அவர்களுக்கு பரநிந்தை மிகவும் பிடித்தமாயிருக்கிறது. பாதையில் யதேச்சையாக கிடைக்கப் பெற்ற பெரும் தனக் குவியலைக் கண்டு, எவ்விதம் பரமதரித்திரன் ஆனந்தம் அடைவானோ அதைப்போல துஷ்டர்கள் பிறர்களின் தாழ்ந்த நிலையைக் கண்டு, மிக்க ஆனந்தப்படுவார்கள்.'' (ஸ்ரீராமா, அவர்களுடைய சேர்க்கை ஸம்பந்தத்தை எனக்கு ஒருக்காலும் அளிக்காதே. இதிலும் உனது கிருபைதான் வேண்டும்.) (245)

''அவர்களுக்கு காமம், க்ரோதம், மதம், லோபம் இருக்கிற படியால் அவர்களிடம் பூததயை கிடையாது. அவர்கள் கபட ஹிருதயமுள்ளவர்கள். வஞ்சக புத்தி உள்ளவர்கள். அவர்கள் பாபங்களுக்கு யிருப்பிடம். காரணமின்றி அவர்கள் விரோதம் செலுத்துவார்கள். அவர்களுக்கு ஹிதத்தைச் செய்த போதிலும் நன்றி கெட்டவர்களாக ஸதா கெடுதலைச் செய்வார்கள்.'' (246)

''அவர்கள் பொய்யைத்தான் எல்லாவற்றிலும் சொல்லுவார்கள். அவர்கள் கொடுப்பது பொய்யான சாமான்கள். அவர்கள் வாங்குவதும் பொய்யான சாமான்கள். அவர்கள் சாப்பிடுவதும் பொய் சொல்லுவதற்காகத்தான். சாதாரணமாக அவர்கள் அரை வயிற்றுக்குச் சாப்பிட்டிருப்பார்கள். அவர்கள் சொல்வதோ, ''இன்று விருந்து சாப்பாடு சாப்பிட்டு விட்டு வந்திருக்கிறேன்'', என்று அண்டப் புளுகு சொல்வார்கள். அவர்கள் அழகாகவும் மதுரமாகவும் வசனங்களைச் சொல்லி, ஆட்களை ஏமாற்றுவார்கள். அவர்களுடைய நெஞ்சு மயிலைப் போல கடினமானது. மயில் பார்ப்பதற்கு அழகாக விருக்கிறது. ஆனால் அது கொடும் நஞ்சுள்ள பாம்பைத் தானே விழுங்குகிறது. அதைப் போல துஷ்டர்கள் ஈவு இரக்கமில்லாதவர்கள். அவர்களை நம்பக் கூடாது.'' (247)

''அவர்கள் பரத்ரோஹம், மித்ரத்ரோஹம் செய்வதில் மிக ஸமர்த்தர்கள். பரஸ்திரி கமனம் உள்ளவர்கள். பிறர் சொத்தில் ஆசை உள்ளவர்கள். பிறர்களுடைய அபவாதங்களில் பங்கு எடுத்துக் கொள்வார்கள். அவர்கள் மானிடர்களாக அவதரித்து, பாப மயமாக விருக்கிறார்கள். அவர்கள் பாபத்தைச் செய்யும்

ராக்ஷஸர்கள், மனித வேஷம் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று சொல்லும்படி நடந்து கொள்வார்கள்.'' (248)

''அவர்களுக்கு லோபம் தான் கம்பளம். அவர்களுக்கு லோபம் தான் படுக்கை. அவர்கள் மிருகத்தைப் போல ஸதா காம சுகங்களில் ஈடுபட்டு, காலத்தை வீணாகக் கழிப்பார்கள். அவர்கள் மிருகங்களைப் போல கண்டபடி சாப்பிட்டுக் கொண்டு, திரிவார்கள். அவர்களுக்கு யமலோகம், யமதண்டனை இவைகளில் பயம் கிடையாது. எவர்களாவது உயர்ந்த பதவி அடைந்தார்கள் அல்லது எவர்களுக்காவது மேன்மையான பட்டம் பதவி அந்தஸ்து வந்தது என்று அவர்கள் கேட்பார்களானால், அவர்களுக்கு துக்ககரமான ஸ்வாஸம் வந்து விடும். அப்போது அவர்களைப் பார்த்தால் மூச்சடைப்பு வந்து விட்டதோ என்று சொல்லும்படியிருக்கும்.'' (249)

''அந்த துஷ்டர்கள் பிறருக்கு ஏதாவது ஆபத்து உண்டானால், அதில் சந்தோஷ மடைகிறார்கள். அவர்கள் கொக்கரித்துக் கொண்டு, ''நான் அப்போதே சொன்னேனே, இவனுடைய பக்தி எல்லாம் வேஷம். இது மாதிரி நடக்கும் என்று எனக்கு முன்னாலேயே தெரியும்'', என்று சொல்லி ஏளனம் செய்வார்கள். அப்போது அவர்களைக் கண்டால் ஜகத் ஸாம்ராஜ்யம் அடைந்த ஸார்வ பௌம சக்கிரவர்த்தியைப் போலக் காணப்படுவார்கள்.'' (250)

''அவர்கள் எப்பொழுதும் தங்கள் காரியங்களில் ஊக்க முள்ளவர்கள். அவர்களுக்கு தங்கள் சொந்த பரிவாரங்களிடம் சண்டையும் விரோதமும் உண்டு. ஸதா தங்களுடைய ஆசைகளையே பெரிதாக நினைத்துக் கொண்டு, அதில் முயற்சியுள்ளவர்களாக, லோபத்தினால் கவரப்பட்டு, சில சமயங்களில் அதிகமான க்ரோதத்தை அடைகிறார்கள்.'' (251)

''அவர்களுக்கு மாதா, பிதா, குரு, பிராம்மண சரணங்களில் பக்தி ஈடுபாடு கிடையாது. அவர்களை துஷ்ட ஹ்ருதயமுள்ள அசத்துக்கள் அலக்ஷ்யம் செய்வார்கள். தாங்கள் கெட்டது மின்றி, தங்களை நம்பியிருக்கும் பந்து பரிவாரங்களையும் அவர்கள் கெடுத்து விடுகிறார்கள். அதி மோக வசமடைந்து பிறர்களுக்குத் துரோஹம் செய்கிறார்கள். யாராவது இவ்விதம் செய்யாதே என்று அவர்களைக் கண்டித்தால் ''நீங்கள் ஒன்றும் சொல்ல வேண்டாம்; எனக்கு எல்லாம் தெரியும்'' என்று வாதாடிக் கொண்டு, ஸாதுக்களின் சங்கச் சேர்க்கையை அறவே

ஒழிக்கிறுர்கள். அதனுல் அவர்கள் கரையேற்றப் படாமல் அழிந்து போகிருர்கள். அவர்களுக்கு இதனுல் ஹரி பகவானின் பெருமைகளும், சரணுகத தர்மத்தின் நுட்பங்களும் தெரிகிற தில்லே. அதனுல் பகவத் கிருபையையும் அவர்கள் அடையாமல், குலத்துடன் நாசமடைகிருர்கள்.'' (கருணு மயமான ஸ்ரீமந் நாராயணரின் பாதங்களே அவர்கள் அடைகிருர்களில்லே.) (252)

''அவர்கள் அவ குணங்களுக்கு ஸமுத்திரத்தைப் போல விருக்கிருர்கள். மந்த புத்தியுள்ளவர்கள். விஷய போகங் களில் இச்சையுள்ள காமிகள். ரஜஸ்தமஸ் குணங்களால் ஆக்ரமிக்கப்பட்டவர்களாகவும், வேத வசனங்களே நிந்தனே செய்யும் புருஷர்களாகவுமிருக்கிருர்கள். பரதனத்தில் ஆசை யுள்ளவர்கள். பரத்ரோஹம் அவர்களுடைய விசேஷமான குணம். அதிலும் விப்ர துரோஹம் மிக முக்கியம். அவர் களுக்கு டம்பம் ரொம்ப பிடித்தமாக விருக்கும். அவர்களுடைய நடத்தையும் கபடமாகவுள்ளது. ஆனுல் வெளியில் பார்த்தால் அழகான வேஷம், நல்ல நடத்தை உள்ளவர்களாக தோன்று வார்கள்.'' (253)

''இவ்விதமான துஷ்ட சித்தம் படைத்தவர்கள் மானிடர் களாக ஸத்ய யுகத்திலும், திரேதா யுகத்திலும் அவதரிக்கவில்லே. துவாபர யுகத்தில் சில பேர்கள் தானிருந்தார்கள். ஆனுல் கலி யுகத்திலோ அவர்களுடைய எண்ணிக்கை மிக மிக அதிகம். இவர்கள் பல கும்பலாக கலியுகத்தில் சஞ்சரிக்கிருர்கள்'' (254)

''அன்புள்ள பரதா, பிறர்களுடைய சுகத்தையும் க்ஷேமத் தையும் நாடுவதைவிட வேறு பெரிய தர்மம் ஒன்றுமில்லே. பிறர் களுக்கு ஹிம்சை செய்வதைவிட வேறு பெரிய அதர்மம் ஒன்று மில்லே. இதுதான் நீசமானதும் மஹா பாபமுமாக விருக்கிறது. என் பிரிய பரதா, பிறர்களுக்கு இன்னல்களேச் செய்யாதே. இதைத்தான் ஸமஸ்த புராணங்களும் வேதங்களும் நிர்ணயம் செய்கின்றன. இது தான் அவைகளுடைய ஸாரமான சித் தாந்தம்'', என்று வித்வான்கள் அறிகிருர்கள்.'' (255)

[தியானம்

வரத வேங்கடேசா, லக்ஷ்மி நிவாஸா, நாராயணு, நீதானே எனக்குக் கதி. நான் உன்னேயன்றி வேறிடம் புகல் எங்கு செல்வேன்? நிரவத்ய குண ஏகஸிந்தோ, நீதான் எனக்கு ஸம்சார ஸமுத்திரத்திற்கு ஏகஸேது. பக்த போக்யனே, உன்

நிஜ வைபவங்களை யாவரால் அறிய முடியும்? இயற்கையாகவே அன்புள்ள என்னிடம் ஸதா தயை காட்ட வேண்டும். திருமகள் உறைவிடம் நீயாதலால் குணக்கடலாகவும், குற்றமற்றவனாகவும் இருக்கிறாய். உங்கள் இருவர்களுடைய பெருமைகளையே புகழ்வது எனது வாழ்க்கை ஜீவனமாக விருக்கட்டும். தயை செய்யுங்கள்.]

"எந்த மனிதர்கள் பிறர்களுக்குத் துக்கத்தைச் செய்வதையே, தொழிலாக உள்ளவர்களோ, அவர்களுக்கு ஸம்சாரம் எனப்படும் ஜன்மமிருத்யு சுழல்கள் மிக்க ஆழமான ஸமுத்திரமாக விருக்கிறது. அவர்களுக்கு ஸேதுவோ, ஓடமோ, ஓடக்காரனோ காணப்படுகிறதாகவில்லை. அதிபயங்கரமாக விருக்கும் ஸம்சாரத்தில் அவர்கள் மூழ்கிக் கஷ்டப்படுகிறார்கள். மஹா மோஹத்திற்கு அடிமையாகி அவர்கள் ஸதா கமலேசனாகிற என்னுடைய பதங்களை விட்டு, மற்றவைகளையே பெரும் தனமாகக் கருதி, மிக்க சிரமப்படுகிறார்கள். அதிலேயே முனைந்து நிற்கும் ஸ்வார்த்த பராயணர்களாகிற அவர்கள் லோபத்தினால் பிறர்களுக்கு ஹிம்சை செய்கிறார்கள். அவர்களுக்கு பரலோக சிந்தனையே கிடையாது." (256)

"ஹே பரதா, லக்ஷ்மணா, சத்ருக்னா, பிரியமான ஆஞ்சநேயா, அப்பேற்பட்ட துஷ்டர்களை ஸம்ஹரிப்பதற்கு, நான் காலரூபியாகிற ஸுதர்சனத்தை வலது கையில் ஸதா தரித்துக் கொண்டிருக்கிறேன். அவரவர்களின் சுப அசுப காரியங்களுக்கு தக்கபடி நான் பலன் கொடுத்தும், தண்டனை செய்தும், அவர்களை நல்வழி திருப்பியும், அவர்களிடமும் அனுக்ரஹ உள்ளத்துடனும் இருக்கிறேன். இதைத் தெரிந்து கொண்டுதான் வித்வான்கள், (நாரதர் போன்ற) ஸாதுக்கள், ஸம்சார தாபங்களை ஒழிப்பதற்கு, எனது வேங்கடேச பாதங்களை சுட்டிக்காட்டி, "அச்யுதனாகிற என்னை ஆராதியுங்கள். கோவிந்தனாகிற என்னிடம் பக்தி செலுத்துங்கள். ஜனார்த்தனரான என்னிடம் அபராதங்களை மன்னிக்கும்படி க்ஷமையைப் பிரார்த்தியுங்கள். விஷ்ணுவாகிற என்னிடம் கருணையைப் பிரார்த்தியுங்கள். இந்திரமிந்திரனாகிற என்னிடம் வேண்டியதைக் கேளுங்கள். ஜகத்பதியான என்னிடம் ஸகல கர்மபலன்களை தியாகம் செய்யுங்கள். யக்ஞபதியான என்னை யாகங்களாலும், தவத்தினாலும் பூஜை செய்யுங்கள். "பரம்தாம்" எனப்படும் லக்ஷ்மி நாதனாகிற என்னிடம் மனத்தைச் செலுத்துங்கள். ஹரிபகவானாகிற என்

னிடம் முக்தியை யாசியுங்கள். யோகேஸனுகிற என்னிடம் சந்தோஷம் கொண்டு ஸ்துதி செய்யுங்கள். என்னை விட்டு யாரால் என்ன சொல்லமுடியும்? என்ன செய்யமுடியும்? எனது கருணாமய ஸ்வரூபத்தை அறிந்து பூஜித்து வாருங்கள்'' என்று சொல்லுகிருர்கள். (அப்பேற்பட்ட மஹாராஜாவாகிற ஸ்ரீராமனை சப்தரிஷிகள், நாரதர் போன்ற பூர்வாசாரியர்களை முன்னிட்டு, நமஸ்கரித்து, வாஸுதேவா, குருவாயூர் அப்பா, எங்களிடமும் கருணை காட்டவேண்டும் என்று அடிக்கடி அடிக்கடி பிரார்த்திக்கிறேன்.) (257)

''அவர்கள் எது சுப, எது அசுப கர்மங்களின் பலன்களைத் தருமோ, அவைகளின் பலன்களில் பற்றுதல் இல்லாமல் செய்து கொண்டு, தேவதைகள், மனுஷ்யர்கள், ரிஷிகளின் நாயகனுகிற என்னையே ஏகமாகப் பராயணம் செய்துகொண்டு, என்னை ஆஸ்ரயித்து, என்னையே வந்தடைகிருர்கள். அவர்களுக்கு நானே தஞ்சமாகவும், உபாயமாகவும், பலனுகவுமிருக்கிறேன்.'' இந்தவிதமாக என் பிரபு ஸ்ரீராமன், சாதுக்களின் குணுதிசயங்களையும், ''துஷ்டர்களின் இயற்கையான ஸ்வபாவங்களையும் சொன்னுர். இந்த குணங்களின் ஸாரங்களை எவர்கள் கிரஹித்துக் கொள்கிருர்களோ, அவர்கள் ஜன்மச்சுழல்களில் விழுந்து நசித்துப் பேகிறதில்லை.'' (258)

''என் பிரியர்களே நன்ருகக் கேளுங்கள். மாயையினுல் செய்யப்படும் குணங்களும், தோஷங்களும் அநேகம். இந்த மாயையினுல் செய்யப்படும் சேஷ்டிதங்களை விவரிப்பதும் மிகக் கடினம். விவேகத்தினுல் என்னுடைய நிஜ கருணாமய ஸ்வரூபத்தை அறிந்து கொள்பவர்கள் தோஷங்களையோ குணங்களையோ கவனிப்பதில்லை. அவிவேகிகள்தான் இவைகளைக் கவனிப்பார்கள். ஆகையினுல் ஒன்றிலும் பற்றுதல் இல்லாமல் என் பாதங்களையே நம்பி பரமபுருஷார்த்தமாக வாழ வேண்டும்.'' (259)

ஸகல சஹோதரர்களும், பிரபுவின் ஸ்ரீ முகத்தினுல் எல்லாவற்றையும் கேட்டு சந்தோஷமடைந்தார்கள். அவர்களுக்கு சீதாராம பாதங்களில் பக்தி வளர்ந்தது. அவர்கள் அடிக்கடி ஸ்ரீராம பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். இதில் பரம சந்தோஷம் அடைந்தவர் ஹநுமான்ஜி. அவருடைய ஹ்ருதயத்தில் பக்தி வெள்ளம் பொங்கியது. (260)

[தியானம்

நாராயணு, உமாமஹேஸ்வரர்களின் ஐக்ய ஸ்வரூபமே, நீதானே ஜகம், விஸ்வம், ஸர்வ பூதாத்மா, ஆஞ்சநேயரிடமுள்ள நாராயண பக்தி, சீதாராம விஸ்வாசம், சூக்ஷ்மபுத்தி, காரிய ஸாமர்த்தியம் அப்பா, ஆச்சரியப்படும்படியும், தியாகராஜாதிகள் முதற்கொண்டு ஆகா, என்ன பக்தி, ராமகிருபை என்கிறது இதுதாணு என்று வியக்கும்படி யிருக்கின்றது. பிரபோ, ஸ்ரீராமச் சந்திரா, உனது கல்யாண குணவிசேஷங்களை ஆஞ்சநேயாதி கள் பாடிக் கேட்கும்போது, "ஆகா, என்ன ஆனந்தம் உண்டா கிறது". இந்த பக்தி எவ்விதம் உண்டாகிறது? சீதாராமா, நீயே சொல். உமையின் விஸ்வாசத்தையும், சங்கரரிடமுள்ள பரம பக்தியையும் போல அல்லவா விருக்கிறது. லக்ஷ்மிதேவி யாகிற சீதை கூட ஆச்சரியப்பட்டு, ஹனுமத் வசனங்களால் திருப்தி அடைந்தாளே. ஜய சஞ்சீவினியே, சங்கடம், ஆபத்து அடைந்தவர்களைக் காப்பாற்றும் நிபுணரே, உமது பிரேமை யும், அனன்ய பக்தியுடன் கூட விளங்கும் தயை உள்ளமும், என்னைப் பரவசம் செய்கிறது. இந்த ராமபக்தியைப் பார்த்தால் ஸ்மரணை செய்தால், என் கண் இமைகள் மூடமாட்டாமல், ராம ஸ்வரூபம் இதுதாணு, இதுதாணு கருணைமய அழகு என்று சொல் லும்படி யிருக்கிறது. லக்ஷ்மணனுக்கு பிரிய ரங்கநாயகி ஸமேத ரங்கநாதா, பெரிய உதார மனமுள்ள பரதன் கூட ஆச்சரியப் பட்டானே. பரம ஞானமூர்த்தியான குஹப்பெருமான் கூட, ஆஞ்சநேய பக்திப்பிரேமையை மெச்சும்படி ஆச்சரியகரமாக வல்லவோ விருக்கிறது. சத்ருக்னன் கூட ராம வசனப்படி நடந்துகொள்வாணு? சபரியின் கையிலிருந்து உணவு அருந்திய ஸ்ரீராமா, உனது தயவினுல் ஆஞ்சநேயரின் கிருபையும், அனுக்ரஹமும் கிடைக்க வேண்டும். வானர சேனைகள் சமுத் திரத்தை தாண்டினது போல, நானும் இந்த ஸம்சார சமுத் திரத்தை ஆஞ்சநேய கிருபையினுல் தாண்ட வேண்டும். பரம அபராதியான எனக்கும், துளசிதாஸ, தியாகராஜாதிகளுக்கு கிடைத்த இன்ப ஆனந்தம் கிடைக்க வேண்டும்.]

அதற்குப் பிறகு ரகுபதி தனது மாளிகைக்குச் சென்றார். இந்தவிதமாக என் பிரபு ஆனந்தராமன், மஹாலக்ஷ்மியாகிற சீதையுடன் தினமும் புதிது புதிதான லீலைகளைச் செய்து கொண்டு, ஸகல ஜகத்தையும் இன்புறச் செய்தார். அந்த பிரபு விடம் அடிக்கடி அடிக்கடி எனது குருஸ்வாமியாகிற நாரத

பகவான் வந்து போய்க் கொண்டிருந்தார். அடிக்கடி ஸ்ரீ சீதா ராம சரித்திரத்தை, ஸ்ரீ சீதாராம லக்ஷ்மண பரத சத்ருக்ன ஆஞ்சநேய ஸந்நிதியில் பாடி இன்புற்ருர். (ஹே சீதாபதே, என்னையும் நீதான் அனுக்ரஹம் செய்யவேண்டும்.) (261)

நாரத பகவான் தினம் தினம் ஸ்ரீ ராமச்சந்திரனைப் பாரத்து இன்புறவார். ஸ்ரீ ராம சரித்திரத்தைப் புதுப்புது கோணங்களில் பாடி இன்புறுவார். சீதாராம லீலைகள் பிரும்ம லோகத்தில் வாழும் சரஸ்வதி, பிரும்மாவிற்கு மஹா ஆனந்தத்தை அளித்தன. ஸ்ரீராம சரிதத்தின் அதிசயங்கள், ஆச்சரியகரமான செய்கைகள் அவருக்கு பிரும்மானந்தத்தை அளித்தது. அதனுல் கனதிருப்தி அடைந்த பிரும்மா, நாரதரையும், ஸனகாதி முனிவர்களையும் கூப்பிட்டு, ஸ்ரீராம சீதாதேவியின் கல்யாண குணங்களை வர்ணிக்கும்படி அடிக்கடி ஆக்ஞையிடுவார். (262)

[தியானம்

மஹாலக்ஷ்மி நாராயணு, சீதாராமா, சுலபரே, பரம அபராதிகளும் உம்முடைய க்ஷமையை விரும்பி உம்மிடம் வருகிருர்கள் என்று நினைக்கும்போதும், அவர்களையும் நீ சுலபமாக அனுக்ரஹிக்கும்போதும், எவ்விதம் நான் உனது உதாரமனத்தை புகழாமலிருக்க முடியும்? உம்மை நாரதரையும் மார்க்கண்டேய ரிஷியையும் லோபாமுத்திரை அகஸ்தியபகவானையும் முன்னிட்டு சரணம் அடைகிறேன். ஹே ராமா, நாரதபகவானுல் ஆராதிக்கப் படுபவரே, நாராயண ஹரிபகவானே, நீதான் எங்களது ஆஸ்ரயம். நாரத கானலோலா, நதஜன பரிபாலா, கிருபகுண சீலா, நீரதஸமலீலா, உம்முடைய குணகீர்த்திகளை நாரத வால்மீகிபகவான் சொல்லும்போது, தியாகராஜ துளசிதாஸாதிகள் ஆனந்த கீர்த்தனம் செய்யும்போது, சுகர் ஸனகாதிகள் அடிக்கடி ஸ்மரணை செய்து இன்புறும்போது, அந்த ஆனந்த இன்பங்கள் எனக்கும் கிடைக்கக் கூடாதா என்று நானும் நினைக்கிறேன். பிரபோ, என்னுடைய பிரேமையும் ஆர்த்தியும் உனக்குப் புரியவில்லையா? விஜய கோதண்டபாணி, நாரத வால்மீகி ஆஞ்சநேயாதிகளாலும், மஹரிஷிகளாலும் உனது தாஸ்ய சஹோதரர்களாலும், சீதாதேவியுடன் நீ சூழப்பட்டிருக்கும் போது, உயர்ந்த பட்டுப் பீதாம்பரங்கள் ஆபரணுதிகள், ஸுகந்த பரிமளவாசனை திரவியங்களை நீ அணிந்துகொண்டிருக்கும் போது, உம்முடைய உத்தமமான தரிசனம் எனக்கு கிடைக்குமா?

பராசரர், இந்திராதிதேவர்கள், தேவமஹிஷிகள் உன்னைப் புகழும் போது; பிரும்மா ருத்ராதிகள் ஆனந்தமாகப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, ஊர்வசி ரம்பை கிருதாசி முதலானவர்கள் பாடி ஆனந்தமாக நடனமாடும்போது, அவர்களுடைய ஆனந்தங்களை யாராலும் வர்ணிக்கமுடியுமோ? ஹே கோதண்டபாணி, கல்யாணராமா, மஹாலக்ஷ்மி பிரபோ, உன்னுடைய கடைக்கண் வீக்ஷண்யங்கள் எங்கள்மீது விழுமா? எங்களுக்கு உம்முடைய பாக்யம் கிடைக்குமா? எவ்வளவு காலம் நாங்கள் காக்கவேண்டும் என்று நீ ஸங்கல்பித்திருக்கிருய்?]

ஸனகாதிமுனிவர்கள், நாரதாதி மஹரிஷிகள் பிரும்மசபையில் ராமகுண கீர்த்திகளைப் பாடி ஸகலரையும் இன்புறச் செய்தார்கள். நாரதபகவான் பாடும்போது, ஸனகாதிமுனிவர்கள் நியமநிஷ்டைகளை விட்டுவிட்டு, ஸமாதியில் யேற்படும் ஆனந்தநிலையை அடைவதைப் போல அடைந்தார்கள். ஶ்ரீராமகுண கீர்த்திகளை ஸ்ரவணம் செய்வது நியமநிஷ்டைகளைச் செய்வதுபோல என்று அவர்கள் கருதினுர்கள். அவர்கள் ஆதார பூர்ணமாக ராமகதையைக் கேட்கும்போது அவர்களுடைய மனம், பக்திமயமாக மாறியது. (ஹே சீதாராமா, ஆஞ்சநேய பிரபோ, எங்களையும் நீதான் காப்பாற்றவேண்டும்.) (263)

ஸனகாதி முனீஸ்வரர்கள் ஜீவன் முக்தர்களாகவும் பிரும்மவாதிகளாகவு மிருப்பவர்கள். ஸதா நாராயண பரபிரும்மத்தைத் தியானித்துக்கொண்டு வாழும் யோகீஸ்வரர்கள். அப்பேற்பட்ட பிரும்ம நிஷ்டர்களே தங்களது நியமநிஷ்டங்களைத் தியாகம் செய்துவிட்டு, ஶ்ரீராம கதாம்ருதத்தில் ஈடுபட்டு, காலத்தைக் கழிப்பதைப் பார்த்தால், அவர்களுடைய ஹரிகதா ஸ்ரவணம் நிச்சயமாக அவர்களுடைய ஹ்ருதயத்தை கல்லாக ஆக்கிவிட்டிருக்கும். இல்லாதபோனுல் அவர்கள் தங்களது நியமநிஷ்டங்களை ஒருக்காலும் தியாகம் செய்யமாட்டார்கள். (264)

ஒருசமயம் ரகுநாத் தனக்கு குருஜியாகிற வசிஷ்டபகவானை அழைத்தார். அத்துடன் அவர் பல பிரும்மரிஷிகளையும் அழைத்திருந்தார். அயோத்தியாபுரிவாசிகளும் ஶ்ரீராமனைப் பார்ப்பதற்கு வந்தனர். ராஜதர்பார் ஹாலில் மஹாராஜா ஶ்ரீராமச்சந்திரனைப் பார்க்க வஸிஷ்டபகவான் பிராமண ஸ்ரேஷ்டர்களுடன் வந்திருந்தார். அந்தசமயம் என்பிரபு சுசீலர் ஶ்ரீராமச்சந்திரன் தனது பக்தர்களின், பவரோகத்தைப் போக்குவதற்கு சில உயர்ந்த வார்த்தைகளைச் சொன்னுர். (265)

  

[தியானம்

ஹே தீனபந்து, தயாளு, ஸ்ரீராமச்சந்திரா, நீ யாரிடமிருந்து உனது சௌசீல்யத்தையும் வாத்ஸல்யத்தையும் கற்றுக் கொண்டாய்? அதைக் கொஞ்சம் சற்று விபரமாகத் தெரியப் படுத்தவேண்டும். நீ நாராயணனுடைய சகோதரியாகிற உமை யிடமிருந்தா அல்லது பரமசிவனின் உள்ளத்தின் அன்புப் பெருக்காகவிருக்கும் கங்கையினின்ரு, அல்லது பகீரதனைப் போலவிருக்கும் ராஜரிஷிகளின் தவத்தின் மகிமையினுலா, அல்லது உனது பட்டமஹிஷி யிருக்கிருளே, அந்த மஹா பாக்ய வதி, அஷ்டதிக் கஜங்களால் பூஜிக்கப்பட்டு, தங்கக்கலசங்களால் அம்ருதவர்ஷம் செய்யப்பட்ட மஹாலக்ஷ்மியின் அம்சமான சீதையினிடமிருந்தா, அதை எனக்குச் சொல். அதையாவது நீ சொல்லவேண்டாம். உன் கிருபையாவது எனக்குக் கிடைக்குமா? உன் உள்ளம் என்னையும் சிந்தித்துப் பார்க்குமா? உன்ஞல் செய்யப்படும் தர்மம் ஆசரணை என்கிற கைகளால் அனு ஸந்திக்கப்படும் மஹாதர்மம் என்விஷயத்தில் அன்புடன் இருக்குமா? விருஷகேதுவான சம்பு உன்னிடம் செய்யும் பக்தி விஸ்வாசத்தின் மஹா அர்த்தமாகவிருக்கும் தயாளு, ராமபத்ரா, சீதாநாயகா, எங்களிடம் கிருபையுடன் இரு.]

"ஸகலரும் நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள். அயோத்தியாபுரிவாசிகளே, இதை நன்ருகக் கேளுங்கள். நான் மமதையினுலோ, ஸ்வ அபிமானத்தினுலோ, ஏதோ சொல்லு கிறேன் என்று நினைத்துக்கொள்ளவேண்டாம். நான் ஒரு மஹா ராஜா, மஹாபிரபு என்று அதிகாரதோரணையினுலும் இந்த வார்த்தைகளைச் சொல்லவில்லை. உங்களுக்கு எது பிடிக்கிறதோ அதைச் செய்யுங்கள்." (266)

"எந்த மனிதன் என் வார்த்தைகளை சிரத்தையுடன் கேட்டு, அதன்படி நடக்கிருனே, அவனே எனக்குப் பிரியதமமான சேவகன். அவனே என் ஆக்ஞையின் பிரகாரம் நடப்பவனு கிருன். ஹே சஹோதரர்களே, நீங்கள் அநீதியைச் செய்யக் கூடாது என்று நான் உபதேசம் செய்துகொண்டு, நானே அநீதி செய்தாலும், சொன்னுலும் அதையும் பயப்படாமல் நீங்கள் என்னிடம் சொல்லலாம். என்னையும் தைர்யமாக நீங்கள் அடக்கலாம் என்று நான் உங்களிடம் வினய பூர்வமாகச் சொல்லிக்கொள்கிறேன்." (267)

[தியானம்

ஸ்ரீ நாராயணு, ராமாசீதர, ஆதித்யரே, நீரே இந்திரன், நீரே ருத்ரர், நீரே விஷ்ணு, நீரே பிரஜாபதி, நீரே அக்னி, நீரே ஸூக்ஷ்மமான மனம், நீரே ஸாஸ்வதமான பிரும்மம், நீர் யாருடைய வசத்தில் நிரந்தரமாகவிருக்கிறீர்? அதையாவது சொல்லும். விருக்ஷகேதுவின் வசத்தில்தான் உமக்கு மனம் அதிகம். அவ்விதம் உமக்குப் பிரியமிருக்கும்போது, உம்மால் வார்த்தையினுலும் செய்கையினுலும் எது செய்யவேண்டுமோ, அதை நீரே செய்வீர். துராத்மாக்களைத் தண்டிப்பதில் மிக்க ஊக்கமுள்ளவரே, தீயச்செய்கையில் என்மனத்தை புகவிடாதபடி நீர்தான் என்னைக் காத்தருளவேண்டும்.]

"மனிதன் மஹாபாக்யத்தைச் செய்து, மானிடதேகத்தை அடைந்திருக்கிருன். தவம், தர்மம்செய்வதற்கே வாய்க்கப்பட்ட இந்த மனுஷ்யதேகம் தேவர்களுக்கும் கிட்டாதபடி மிக்க அரிய தாகவிருக்கிறது. ஆகவே மனுஷ்யசரீரம் மிக்க துர்லபம். அப்பேற்பட்ட பரமதுர்லபமான சரீரம் தவத்திற்கு ஸாதன மானது. மோக்ஷம் என்னும் பரமபதத்தை அடைவிக்கக் கூடியது. இதை அடைந்ததும், மனிதன் பரலோகத்திற்குத் தனக்குரியதைத் தேடமுடியாதபோனுல் அவன் மிக்க அபாக்ய முள்ளவனுகிருன்." (268)

"அது மாத்திரமா. அவன் யமலோகத்திற்குச் சென்று, தனது தலையில் அடித்துக் கொள்கிருன். "ஐயோ, நான் ஏமாந்து போய்விட்டேனே," என்று ஏங்கி, பச்சாதாபப்படு கிருன். அதனுல் அவன் நாளடைவில் சுத்தமாகி, காலாந் தரத்தில் (கர்மத்தையே வாகனமாகக் கொண்டு, தான் செய்த கர்மங்களின் பலன்களை அனுபவிப்பனுக,) தனது துஷ்கர்மங் களையும் காலத்தையும் ஈஸ்வரனையும் வைய ஆரம்பிக்கிருன்." (269)

"சஹோதரர்களே, இந்த மானிட சரீரத்தை அடைந்த பின்பு, விஷய போகங்கள் மாத்திரம் இதனுடைய ஏக மாத்திர மான பலன் என்று கருத வேண்டாம். தேவலோகத்தின் சுகங் களும் ஸ்வல்பகால அனுபவமாகவும் முடிவில் துக்கத்தையே தருவதாகவுமிருக்கின்றன. எந்த மனிதர்கள் மனுஷ்ய சரீரத்தை அடைந்த பின்பு விஷய போகங்களில் மனத்தை ஈடுபடச் செய்கிருர்களோ, அவர்கள் மூர்க்கர்கள். நல்ல அம்ருதத்தை விட்டு விட்டு, விஷயத்தை அடைவதைப் போல, தவத்தை

விட்டு விட்டு விஷய யோகங்களில் மனம் கொண்டு ஈடுபாட்டை அடைகிறார்கள்.' (270)

"அவர்கள் ஸர்வத்தையும் கொடுக்கும் சிந்தாமணியை விலைக்கு வாங்குவது போல அவர்கள் மிக்க துச்சமான இன்பங்களை அடைகிறார்கள். அவர்கள் அவிநாசியான ஜீவாத்மாவை பரமாத்மாவுடன் ஸம்பந்தம் செய்து கொள்ளாமல், ஜன்ம மரணச் சுழல்களில் அகப்பட்டுக் கொண்டு, எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவராசிகளின் நான்கு ஸ்வரூபங்களான திர்யக் முதலான நான்கு வகையான யோனிகளில் பிறப்புக்களை அடைந்து பரிதவிக்கிறார்கள்." (271)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி பிரபோ, சீதாராமா, ராமா, உன்னுடைய மனதில் எதை தியானித்துக் கொண்டிருக்கிறாய்? மந்திரத்தை தியானம் செய்கிறீரா? அல்லது உம்முடைய நிஜ வைகுண்ட ஸ்வரூபத்தை ஸ்மரணை செய்கிறீரா? அல்லது உமது குருஸ்வரூபத்தை நினைத்துப் பார்க்கிறீரா? தியானத்திற்கு மந்திரமாக விளங்கும்உம்முடைய பெயரையே உச்சரித்துக் கொண்டிருக்கிறீரா? அன்று ராமானுஜர் திருக்கோஷ்டியூரில் நம்பியையும் அவருடைய குருமூர்த்தியான ஆளவந்தாரையும் நினைத்துக் கொண்டிருந்தாரே, அதைப்போல நீர்பரமபதனாகிற ஸ்ரீமந்அநிருத்த நாராயணனை நினைத்துக்கொண்டிருக்கிறீரா? அல்லது நாரதருடைய பக்தி வளத்தையும், அல்லது குருகூர் சடகோபனின் மனோபாவத்தைத்தான் நினைக்கிறீரோ? "ராம தனம்," "ராமநிதி," என்று சொல்லப்படும் தனிப் பொருள் செல்வத்தைச் சிறப்பிக்க, ஆசாரியர்களுக்கெல்லாம் ஆசார்யர் என்று அயோத்தி ஜனங்கள் மதிக்கும்படி, பரமாசார்யர் என்கிற பெயருக்கு ஏற்ப எல்லாவற்றிற்கும் மேலான தர்மத்தைச் சுட்டிக்காட்ட நினைத்து "பரம தார்மிகர்" என்கிற பெயரை அடைய நினைத்தீரோ? "கீதாசார்யர்" என்கிற பெயரை அடைந்த கிருஷ்ணனைப் போல, ராம தர்சனம் என்கிற தர்மத்திற்குக் குருவாக நீர் ஆனீரோ? எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நீர் தான் எனக்கு தஞ்சம்.]

"அந்த நித்ய ஸம்சாரிகள் மாயையினால் தூண்டப்பட்டு, கால தர்மத்தினாலும், கர்ம ஸ்வபாவத்தினாலும் முக்குணங்களாலும் ஏவப்பட்டவர்களாக அவர்களுடைய ஜீவாத்மா மேல் நோக்கிப் போகும் பரமாம் கதியை அடையாமல், கீழேயே

சஞ்சரித்துக் கொண்டு, அழிந்து போய் விடுகின்றனர். ஹரி பகவான், நிர்ஹேது கிருபையினல் ஒரு சமயத்தில் கருணை வசம் அடைந்து மனிதனுக்கு நரதேகம் கொடுக்கிருன். அந்த சமயம் அந்த ஜீவாத்மா தனது தேகத்தை ஸாதனமாகக் கொண்டு தன்னை வந்தடைகிருனு என்று அவன் எதிர் பார்க்கிருன்.'' (272)

''அந்த நரதேகம் கொண்ட ஜீவாத்மா ஸம்சார தாபங்களி லிருந்து விடுபட தவத்திலுைம் மன அடக்கத்தாலும் தேகத்தை ஸாதனமாகக் கொண்டு என்னை அடையாத போனல், அவன் நிஜமாகவே நஷ்டப்பட்டுப் போகிருன். ஆகையினுல் பவசாக ரத்திற்கு மனுஷ்ய தேகம் ஓடத்தைப் போலவும், எனது அனுக் ரஹம் அனுகூலமான வாயுவைப் போலவும், இருக்கின்றன. அந்த திடமான ஓடத்தை என்னிடம் சேர்க்கும் ஓடக்காரன் கருணையையே ஸ்வரூபமாக உடைய ஸத்குருவைப் போலவு மிருக்கிருன். அப்பேற்பட்ட சுலபமாகக் கிடைக்கப் பெருத ஸத் குருவும் என்னுடைய பரமானுக்ரஹத்தால் கிடைக்கப் பெறு கிறது'' ''ஹே, ராமா, என்னிடமும் நீர் தயை செய்ய மாட்டீரா?'' (273)

''எந்த மனிதர்கள் இவ்விதமான ஸாதனத்தை அடைந்த போதிலும் பவஸாகரத்தைத் தாண்ட முடியாத போனல், அந்த அபாக்யர்கள் நிச்சயமாக கிருதக்ஞதை யில்லாதவர்களாக ஆவார்கள். அவர்கள் மந்த புத்தியுடன் கூடியவர்கள். அவர்கள் ஆத்மஹத்தியை நிச்சயமாகச் செய்தவர்கள் ஆவார்கள். அவர்களுக்கு நல்ல கதியை அடையவிக்க ஸந்தர்ப்பம் இருந்தும், அவர்கள் அதைப் பயன் படுத்திக் கொள்ளவில்லை, என்று நான் நிச்சயமாகவும், திடமாகவும் சொல்வேன்.'' (274)

''எந்த மனிதர்கள் பரலோகத்திலும் இந்த உலகத்திலும் சுகத்தை அடைய விரும்புகிருர்களோ, அவர்களின் வசனங்களை மனதில் கவனமாக வாங்கிக் கொள்ள வேண்டும். ஹே சஹோதரர்களே, எனது பக்தியையே சுலபமான மார்க்கம்என்று தெரிந்து கொண்டு இகலோகத்திலும் பரலோகத்திலும் சுகத்தை அடைய முயற்சியுங்கள். இந்த பக்தி மார்க்கத்தின் பெருமை யானது வேதங்களிலும் புராணங்களிலும் விரிவாகச் சொல்லப் பட்டிருக்கிறது.'' (275)

''இன்னுமும் கேளுங்கள். ஞானமும் பலவிதமாக விருக் கிறது. அதை அடைவதும் மிக்க கடினம். அதற்கு அநேக

விக்னங்கள் ஏற்படுகின்றன. ஸாதனங்களும் மிக்க கடினம். சபல சித்தமுள்ள மனத்திற்கு அதை அடைவதும் மிக்க சிரமமாக விருக்கிறது. கடின கஷ்டத்திற்குப் பின்பும் அதை சித்தி பண்ணுவதும் மிக சிரமமாகவுள்ளது. பக்தி யில்லாதவன் என்னுடைய பிரியத்தை சம்பாதிக்கிறவனுகவில்லை ஆதலால் என்னிடம் பக்தியைச் செலுத்துங்கள்.'' (276)

[தியானம்

நாராயணு, ஸித்த லக்ஷ்மி சஹித மஹாதீர்த்த நாராயணு, சரணம் சரணம். உன் கிருபை ஸர்வ சாதாரணமா? உன் கிருபை கிடைக்காத போனுல் ஒரு க்ஷணமுமாவது வாழ முடியுமா? ஹே பிரபோ, உனது கிருபையை அடைவதற்கு உனது கிருபையே தானே வேண்டும். உனக்கு எதைச் செய்தால் பிடிக்கும்? ஸர்வ ஜீவ ராசிகளும் உனது சரீரமாகவும் மாயை உனக்கு அதீனமாக விருப்பதாலும், வேதங்கள் புராணங் களில் சொல்லப்பட்ட தர்மங்களும் அதன் ஆசரணைகளும் உன்னுல் ஒருவனுலேயே பூர்ணமாக அறியப்பட்டு அனுஷ்டிக்கப் பட்டு, உனது திருப்தியையே அங்க அடையாளமாகக் கொண் டிருக்கும் போது, ஸர்வ சாதாரணமாக என் போன்ற மனுஷ்யர் களால் யாது செய்ய முடியும்? நாரத வியாஸாதிகளும் உன்னிடம் அபஜய மடைந்திருக்கும் போது, ஏன், உனது மஹிஷியான சீதையும் உன்னையே ஸர்வ அவஸ்தைகளிலும் நம்பியிருந்தும், அவள் பட்ட கஷ்டத்தை நினைத்துப் பார்க்கும் போது, உனது கிருபையும் பரத்வத்தைக் காட்டிலும் மிக்கக் கொடியதாகவும் கடினமாகவும் ஸர்வ சுலபமாக அடைய முடியாத படிக்கும் விளங்குகிறதல்லவா? அன்று சொன்னுளே, குந்தி, உனது நினைவு, உனது சரணம், உனது நாம ஜபங்கள், உன் ஸம்பந்தச் சேர்க்கையான ஆசரணைகள், கர்மங்களாகிற சேஷ்டிதங்கள் இவைகள் யாவும் இல்லாவிடில் மற்ற ஐஸ்வர்யங்கள் இருந்தும் யாது பிரயோசனம்? உன்னுல் உபதேசிக்கப்பட்ட ஞான முத்தமம் என்று அறியப்படும் பரம வைஷ்ணவ தர்மம் இருக் கின்றதே ஞானத்தினுல் மட்டும் உம்மை அறியத்தக்கவர் என்று சொல்லவும் முடிகிறதல்லை. ஆசார்ய பிரபாவத்தாலும் பாகவத கைங்கர்யத்தாலும் உன்னை நித்யமாக அடைய முடியும் என்று சொல்லுகிருர்கள். அதுவும் உனது கிருபையால்தான் அல்லவோ கிடைக்கக்கூடும். ஏகதர், த்விதர், திரதர், பிரஹஸ்பதி வஸிஷ்டர், அர்வாவஸு, பராவஸு, யவக்ரீதர், தர்ம

புத்ராதிகள், விபீஷண, அம்பரீஷ, பிரஹ்லாத, நாரததும்புரு தியாகராஜாதிகளின் வாழ்க்கையும், திருமங்கை ஆழ்வார், திருப்பாணழ்வார் ஆகியவர்களின் சரித்திரங்களும், வைஷ்ணவ சீலமாகிற உனது ஸங்கல்பத்தையே அடிப்படையாகக் கொண்டது. அப்பேற்பட்ட உமது திருஉள்ளம் என் விஷயத்தில் கருணையுடன் இருக்குமா?]

"பக்திமார்க்கம் நேர்வழியாகவும், ராஜயோக மார்க்கமாகவுமிருக்கிறது. அதுவே ஸகல சுகங்களுக்கும் இருப்பிடம். ஆனல் அது ஸத்ஸங்கம் ஒன்றினுல் மாத்திரம் தான் அடையக்கூடியது. மஹா புண்யம் செய்தால் ஒழிய அதை எளிதில் அடைய முடியாது. ஸத்ஸங்கம் ஒன்றுதான் ஜன்மம்ருத்யு சுழல்களை நாசம் செய்யக்கூடியது." (277)

"ஹே ஸாது ஜனங்களே, ஜகத்தில் புண்யம் என்பது ஒன்றே ஒன்றுதான். அதற்குச் சமானம் வேறு எதுவும் கிடையாது. அது இதுதான். மனம் கர்மம் வசனம் ஆகியவைகளால் பிராம்மண சரணங்களை நமஸ்கரித்து பூஜை செய்ய வேண்டியது. கபடம் வஞ்சகம் ஆகியவற்றைத் தியாகம் செய்துவிட்டு, விப்ர சரணங்களை பூஜை செய்யுங்கள். பிராம்மண ஸேவையினுல் தான் தேவர்கள் சந்தோஷப்படுகிருர்கள். தேவர்கள் சந்தோஷப்படுவதற்குக் காரணம் முனீஸ்வரர்களும் சந்தோஷப்படுவதால்தான்" ஆகையால் தேவர்களின் ப்ரீதிக்கும், முனிஜனங்களின் ப்ரீதிக்கும், பிராம்மணர்களை ஆராதியுங்கள்." (278)

[தியானம்

முரரரி, கிருஷ்ண, ராமா, சீதா பிரபோ, குருவாயூர் அப்பா, சேஷநாராயண, நீர் சுத்த ஸத்வமாக விருக்கிறீர். உம்மிடத்தில் பாரபக்ஷம், பற்றுதல் என்கிற பேச்சே கிடையாது. ஐஸ்வர்யம், யசஸ், ஸ்ரீ, வீர்யம், ஞானம், அஸங்கம் ஆகிற ஆறு குணங்கள் பொருந்தியிருப்பதால் பகவான் என்கிற சப்தத்திற்கு பொருளாகவிருக்கிறீர். உம்முடைய கருணைமட்டும் கிடைத்துவிட்டால், உமது ஸ்வரூபமாகிற பரமாம் கதியை அடையவிக்கிறீர். தாங்கள் நிக்ரஹ அனுக்ரஹசக்திகளை உடையதால் உம்மை அடைந்த ஜீவர்கள் உம்மையே ஏகமாக வரித்து, ஆனந்தத்தை அடைகிருர்கள். நீரோ ஆத்மா ராமனுக, உவமையில்லாத கல்யாண குணங்களின் சேர்க்கையின் ஏகஸாரமாக

ரகுகுலத்திலும், சூரகுலத்திலும் உதித்தவராக விருக்கிறீர். யது, ரகுகுல ஸ்ரேஷ்டா, கொடுமையான துக்கம் எனப்படும் சம்சாரம் மிகவும் பொல்லாதது, என்று அறிவில்லாத எண்ணத்தால் நினைக்கப்பட்டது. மார்க்கண்டேயாதிகளின் ஞானத்தில் வரும் சிஷ்டனுக்கும், நம்மாழ்வார் பந்ததியில் வரும் வைஷ்ணவனுக்கும், தாங்கள் செய்த ஸ்ருஷ்டியனது ஆனந்தத்தை அல்லவோ தருகிறது. ஜீவர்கள் சித் ஆனந்தத்தால் உள்ளும் வெளியும் நிறைந்ததும் மிக மதுரமானதும் தங்கள் திவ்யமங்கள விக்ரஹத்தை கண்களைக்கொண்டும் காதுகளைக்கொண்டும், பானம் செய்து பரமரஸ ஸுதா என்கிற ஆனந்தப் பிரவாஹத்தில் எவ்விதம் விளையாடுகிருர்களோ, அதைப்போல நானும் ஆசைப்படுகிறேன். ஹே ஹரே, விஷ்ணோ, என்னிடமும் தயைசெய்ய மாட்டீரா? உம்மையே நான் நம்பியிருக்கிறேன், என்று நீர் அறிய மாட்டீரா? ஸ்ரீதேவிஸதா அங்கா ஸங்காவாக விருக்கும் உமது சங்கல்பம் என்னிடம் தயையுடன் கூடிய காலசக்ரமாக விருக்கக்கூடாதா? ஹே ஸுதர்சனரே, என்னிடம் ஓடிவாரும்.]

''என் பிரிய மித்ரர்களே, இன்னும் ஒரு அதிரஹஸ்யத்தை நான் சொல்லுகிறேன். அதையும் கேளுங்கள். நான் எனது கரங்களை கூப்பிக்கொண்டு, சொல்வதால் அதிக கவனம்கொண்டு கேளுங்கள். ஸ்ரீ உமையுடன் கூடிய சங்கர பகவானை பக்தி செய்து ஆராதித்து, நன்மனத்துடன் அவருடைய கிருபையை அடையாவிடில், என்னிடம் பக்தி துளிக்கூட ஏற்படாது. இது ஸத்யம்.'' (279)

''இனிமேலாவது உங்களுக்குப் புரிந்ததா? பக்தி மார்க்கத்தில் என்ன பிரயாசை இருக்கிறது? இந்த பக்தியோகத்தில் நியமநிஷ்டைகள் அடங்கிய மன அடக்கமோ, ஜபதபங்களோ, உபவாஸம் முதலிய இந்திரிய நிக்ரஹங்களும் அவசியம் இல்லை. ஒன்றே மட்டும் மிக அவசியம். ஸரள ஸ்வபாவத்துடன் கபடமின்றி மஹா விஸ்வாசத்துடன் யத்ருச்சா லாபத்தில் ஸந்துஷ்டியுடன் என்னை ஆராதித்து வாருங்கள். நானும் அவர்களிடம் பூர்ண அனுக்ரஹத்துடன் ஸதா வாழ்ந்து கொண்டிருப்பேன்.'' (280)

''என்னுடைய நிஜதாஸ்ய பக்தன் என்று சொல்லிக் கொள்பவன் மனுஷ்ய ஸ்துதிசெய்துகொண்டு, நர ஸ்துதியில் ஜீவனம் செய்பவனாக விருந்தால், அவனுக்கு என்னிடம் மஹத்தான விஸ்வாசம் எவ்விதம் ஏற்படும்? நீங்களே சொல்லுங்கள்.

நானே அவனுக்கு ஆதாரபலமாக விருக்கும்போது என்னைவிட்டு நிர்பலமுள்ள மனிதர்களிடம் விஸ்வாஸ நம்பிக்கையை வைத்து, அவர்களை ஸ்துதி செய்துகொண்டு வாழ்வானாகில் அவனைப் பற்றி நான் மீண்டும் ஏது செய்யக்கூடும்? ஹே சஹோதரர்களே, நான் இனிச் சொல்லப்போகும் ஆசரணையில் மனம்கொண்டு கவனம் செலுத்துங்கள். அந்த மனிதர்களிடம் தான், நான் பூர்ணமாக வசித்துவருகிறேன்.'' (281)

[தியானம்

பரமேஷ்டி குருவே, விபோ, ரமாவல்லபா, உம்மிடம் வைக்கப்படும் பக்திபிரேமை தங்களுடைய கதாம்ருதத்தில் ஈடுபடச்செய்து, அந்த ஆனந்த அனுபவத்தில் தானாகவே ஸித்தி அடையச் செய்கிறது. முடிவில் உம்மை ஸாந்நித்யமாகக் கொண்ட விமலப்ரபோத பதவி என்று சொல்லக்கூடிய பிரும்ம ஞானமார்க்கத்தை அடையவிக்கிறது. அதுமாத்திரமா, குருவாயூர் அப்பா, நாரதபகவானால் ஆராதிக்கப்படும் காலரே உம்முடைய திருப்பாதங்களில் லக்ஷ்மி தேவியைப் போல ஆஸ்ரயமாக அடைவதற்கும், பிரேமை, ஆனந்த ரஸாயனமாகவும் சபலமில்லாத திடமான சித்தத்தை உடையதாகவும், அதன் பலத்தினாலே, லக்ஷ்மி தேவியின் பிரியத்தை ஸ்திரமாக சம்பாதிப் பதிலும் எனக்கு உதவுகின்றது. நாராயண ப்ரியையாகிற உமது சீதாலக்ஷ்மி எனது மனமலத்தைப் போக்கி, ஆஹா, எவ்வித மான சுகஸ்பர்ச ஆனந்தம் என்று சொல்லும்படியாகவும் ஸகல துக்கங்களையும் போக்குவதுமான உம்முடைய மூர்த்தி ஸ்வரூபத்தை நேரில்கண்டு அனுபவிக்கும்படி உதவுகிறது. எங்கும் நிறைந்த விஷ்ணோ, விபோ, நீர் எப்போது அனுக்ரஹ சங்கல்பம் கொண்டு, ஆனந்தப் பெருக்கிலிருந்து உண்டான சீதபாஷ்ப அம்ருதத்தால் என்னைக் கடாக்ஷிக்கப்போகிறீர்?]

''ஒருவரிடமும் வைரபாவத்துடன் இல்லாமல் இருத்தல் வேண்டும். எந்த வஸ்துவிலும் ஆசையுடன் இருத்தலும், யாரிடமும் விரோதமான மனத்துடன் சண்டை செய்தலும், எவரிடமும் பயத்தை உண்டுபண்ணக்கூடிய ஹிம்சையைத் தொழிலையும் விடவேண்டும். எட்பொழுதும் எல்லாப்பிராணி களிடமும் துரோஹம் வஞ்சனையு மின்றி அன்புடன் இருத்தல் முடிவில் சுகத்தைத்தரும். பத்து திக்குக்களிலும் அவனுக்கு ஸ்ரேயசைத் தரக்கூடியது. நாளடைவில் சுகந்தமான புருஷனாக

அவன் ஆகிவிடுகிருன். எவன் நிஷ்காம புத்தியுடன் தனது கர்மாக்களைச் செய்துகொண்டிருக்கிருனே, எவனுக்கு தன்னுடைய வீடு, கிரஹம், தன் சொத்து என்று சொல்லும்படி நினைவும் இல்லையோ, எவனுக்கு மானமும் அவமானமும் சமமாக விருக்கிறதோ, எவன் கெட்டமனத்துடன் பாபத்தைச் செய்தபோதிலும் அதன்பிறகு பச்சாதாபத்தினுலும், பிராயச்சித்தத்தினுலும், பிரபத்தி யோகத்தினுலும் பகவானுடைய காருண்யத்தை எதிர்பார்ப்பதினுல் பாபஹீனனுகி விடுகிருனே, எவனுக்கு கிரோதமின்மையும், மாத்ஸர்ய மின்மையும், லோபமில்லாமலிருத்தலும், என்னைப் பற்றிய விஷயங்களில் அசுபமான மதியுமில்லாமலிருக்கிருனே, அவனே நான் விரும்பித் தேடும் நிபுண வித்வானுக விருக்கிருன்.'' (282)

'' அப்பேற்பட்ட மஹானுபாவனுக்கு ஸாது ஜனங்களிடம் ஸதா மிகப் பிரியம் இருக்கும். அவனுக்கு விஷய போகங்களும் திருணத்திற்கு சமானமாக விருக்கும். அப்பேற்பட்ட பக்திமானுக்கு, முக்தியாகிற மோக்ஷ பதமும் பெரிதாக விருக்காது. அவன் ஸாதுவாகி, ஸதா என்னையே நினைப்பவனுக என்னிடம் பக்தியை வளர்ப்பவனுகவும் ஆகி விடுகிருன். அந்த பக்தியின் ஐஸ்வர்யத்தினுல் கெட்ட கர்மங்களையும் விலக்கிக் கொண்டு, விபரீத புத்தியினுல் யேற்படும் தர்க்க வாதங்களை விட்டவனுகவும், மூர்க்க ஸ்வபாவத்திலிருந்து விலகியவனுகவும் ஸதா ஹிதகாமியாக ஸகல சேதன சேதனங்களுக்கும் விளங்குகிருன்.'' (283)

[தியானம்

நாராயணுே, விஷ்ணுே, ராமா, கிருஷ்ணு, கோவிந்தா, கோபிஜன வல்லபா, ஹேவிபோ, நீர் தானே என் பிரபு. நீர் தானே பரம புருஷர். நீர் எல்லாவற்றிற்கும் மேலானவரும், ஸர்வ மங்கள லக்ஷணங்களையும் குண ஐஸ்வர்ய விபூதிகளையும் உடைய என் தாயான மஹாலக்ஷ்மியும் விரும்பத்தக்க பரமேஸ்வரராக விளங்குகிறீர். ஸ்வயம் பிரகாசமான ஜ்யோதிஸே, அர்ச்சராதி மார்க்கத்தில் முதற்படியாக விருப்பவரே, மரீசி என்று அழைக்கப்படுபவரே, நாஸத்யன் தஸ்ரன் என்கிற அஸ்வினி தேவர்களே, நீர் தானே வேதத்தின் வாயாக விருக்கிறீர். அக்னி ஸ்வரூபமான பிராம்மணரே, எங்களிடமும் தயை காட்டும். பிறவிக் குருடர்களான எங்களைப் போன்ற மூடர்

களுக்கு மாசற்ற உமது திவ்ய ஸ்வரூபத்தை தயையுடன் வெளிப் படுத்தி எங்களை ரக்ஷிக்க மாட்டீரா? மருத்கேஹா தீசா, குரு வாயூர் அப்பா, வரதா, ராவணாரி, கம்ஸ தமனா, என் மன தேக நோய்களைப் போக்கி, என்னை வெகு சீக்கிரத்தில் உனது தயைக்குப் பாத்திரனாக்க வேண்டும். ஸர்வ திக்ஷேபணரே, பரபிரும்மமே, பரம் ஜ்யோதிஸே, தேவ தேவரே, தங்களுக்கு தயை எப்பொழுது உண்டாகின்றதோ, அது வரையில் உமது சங்கல்பத்திற்கு உட்பட்டவனாக, ஹே பரமாத்மா, மஹா ஸுதர் சனரே, ஜ்யோதிர் கணேஸ்வரரே, மஹா துருவரே, நாரத வியாஸ, மார்க்கண்டேயாதிகளால் ஸதா ஸ்துதி செய்யப்படும் தங்களது உத்தம திருவடிகளை எனது சக்திக்குச் செய்யத் தக்கபடி நன்றாக சுக்ருத நமஸ்காரம், ஸ்தோத்ரம், அர்ச்சனை, பாதஸேவனம் முதலிய பத்து அங்கங்களைக் கொண்ட பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு ராமானுஜ பந்ததியில் வரும் என்னிடம் கருணை செய்ய மாட்டீரா? பிரபோ, வாஸுதேவா, ஸங்கர் ஷணரே, பிரத்யும்னரே, அநிருத்தரே, ஸச்சிதானந்த மயமான உமது ஸ்வரூபம் என்னிடம் ஆவிர்பவிக்க வேண்டும்.]

"ரோமாஞ்சம் அடைந்தவனாகவும். ஆனந்தக் கண்ணீர் பெருக்கியவனாகவும், ஸகலரையும் வருத்தப் படத்தக்க ஆதியாத் மிக துக்கங்களை மறந்தவனாகவும், அளவற்ற கவலைகள் வியாதிகள் முதலியவைகளால் கவரப்படாமல் ஸதா தனது உள்ளத்தில் ஸச்சிதானந்தமய ரூபராக என்னுடைய நிஜ காருண்ய ஸ்வரூபத்தை ஸதா தியானித்துக் கொண்டு, ஸகல ஜீவராசிகளிடமும் அன்பு செலுத்திக் கொண்டு, என்னையும் திருமாமகளையும், எனது அடியார்களையும் விஷயமாகக் கொண்ட என்னுடைய பரிபூர்ண கல்யாண குணங்களின் விபவங்களின் ஆனந்த ரஸாயனத்தைக் குடிப்பதில் ருசியுள்ள வனாக, ஹே ஸாது ஜனங்களே, நீங்கள் காலத்தைக் கழிக்க வேண்டும். அயோத்யாபுரி வாசிகளே, நாராயண நாமத்தைப் பராயணமாகக் கொண்டு ஸதா காலத்தைக் கழியுங்கள். பிறப் பினாலோ, ஐஸ்வர்யத்தினாலோ, வித்வத்தினாலோ, பலம் முதலிய விபவங்களினாலோ, என்னிடமோ, என் பக்தர் களிடமோ, க்ரோதத்தையும் கர்வத்தையும் ஒருக்காலும் வெளியிட வேண்டாம். இவ்விதம் ஸ்வாபிமானத்தைத் துறந்து பாரதந்தரியம் கொண்டவர்களாக அனன்ய கதிவிரதம் பூண்டு, சரணாகதி தர்மத்தை ஆஸ்ரயித்தவர்களாக என்னையே பரம பிர

யோசனமாக வந்து வந்தடையுங்கள். ஸர்வ ஸ்ரேஷ்டஞன என்னிடம் ஏகாந்த பக்தியுடன் ஸர்வ ஐஸ்வர்ய காமாதிகளைத் தியாகம் செய்துவிட்டு, மஹா மோஹம், மாத்ஸர்யம், லோபம், அசுபமான மதியினுல் யேற்படும் அஹங்கார மமகாராதிகளை த்யாஜ்யம் செய்துவிட்டு, (அர்ஜுனன் திரௌபதி, கஜேந்திரன், யசோதை, வியாஸ பகவான், நாரத தியாகராஜாதிகளைப் போலவும், சிவசக்தியின் ஐக்ய ஸ்வரூபமான பகவான் ஆஞ்ச நேயரைப் போலவும், கருடன், அனந்தன், விஷ்வக் ஸேனர், மஹாஸுதர்சனரைப் போன்ற நித்யஸூரிகளைப் போலவும்) எனது கைங்கர்ய பக்தியைப் பிரார்த்தித்துக் கொண்டு ஸதா எனது திருவடிகளில் சக்திக்குத் தக்கவாறு நமஸ்காராதிகளைச் செய்து கொண்டு பூஜித்து வாருங்கள். பாவராக தாளத்துடன் என் குணப் பெருக்குக்களை ஆனந்தக் கீர்த்தனம் செய்து கொண்டு, வாக்கேயக்காரர்களான பிறர் ஆனந்தமாகப் பாடி இன்புறும் போது தானும் ஆனந்தமடைந்து, லஜ்ஜையின்றி, வாய்விட்டு, (நாரத சுக ஸனகாதிகளைப் போலவும்) எங்கள் விஷயத்தில் ஆத்மதிருப்தி அடைந்த்வர்களாகவும், (நம்மாழ்வார் நாத முனிகளைப்போல) ஆனந்தநிலையை இந்த ஜன்மத்திலேயே அடையுங்கள். அப்பேற்பட்ட ராம பக்தர்கள் (துளசிதாஸ பிரஹ்லாத, துருவனைப் போல) நித்ய நிரவதிசய ஸச்சிதானந்த மய பிரும்ம சுகத்தை அடைகிருர்கள். அவர்களே என்னுடைய தாஸர்களாகவும், பிறர்களுக்கு ஆனந்தத்தை அளிப்பவர் களாகவும், ஸ்வயமாகவே ஸந்தேஹமின்றி பரமாத்மரூப, பரமானந்த ராசியாகவும் விளங்குகிருர்கள். அவர்களே (நாராயணீயத்தை இயற்றிய நாராயண பட்டத்திரி போன்ற) மஹா பாக்யசாலிகள். அவர்களே எனது கிருபைக்கு ஸதா பாத்ரமானவர்கள். அவர்களுடைய உள்ளத்தில் நான் ஸதா வசித்துக்கொண்டிருக்கிறேன். அப்பேற்பட்ட மஹானுபாவர்கள் எனக்கு மிக்கவும் பிடித்தவர்கள்,'' என்று சொல்லி முடித்தார். (284)

ஸ்ரீ ராமச்சந்திரனுடைய அம்ருத மயமான வசனங்களை (தேவரிஷிகளும், மஹரிஷிகளும், தேவர்களும்) மஹா பாக்ய மடைந்த ஸாகேத புரிவாசிகளும் ஆனந்தமயமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். (என் பிரபு, கோவிந்தன், கோபீஜன வல்லபன்), ரமாரமணன், பரம காருண்ய வசமடைந்த கிருபா தாமன், மதுரபாஷி, பூர்வபாஷி, ஸர்வ ஜனபக்த பிரியன், சரணுகத வத்ஸலன், சார்ங்கதன்வா, வனமாலி, சங்கம் சக்ரம்

கதை, நளினம் முதலியவைகளை அணிந்து கொண்டு, ஆஞ்சநேயாதிகளால் ஸேவிக்கப்படும் ஆத்மாராமன், காருண்ய பாவத்தினுல், ஸர்வ ரக்ஷகத்வத்தை விரதமாகக்கொண்ட தர்ம நிஷ்டன், தசரத புத்ரன், ஜனகரின் ஜாமாதா, சீதாலோலன், என் நன்மைக்காகவும், ஸகலரின் நன்மைக்காகவும், தனது நிஜ ஸ்வரூபத்தை பிரகடனப்படுத்தினுர். ராமபதம், (கிருஷ்ணபதம் நாராாயணன பதம், வைகுண்ட பதம்) எனப்படும் உத்தம மார்க்கத்தை வெளிப்படுத்திய மஹா புண்யர், (என்னிடம் தயை செய்ய மாட்டாரா? பராசர மைத்ரேய ஸம்வாதம் போன்றதும், ஆசார்ய சிஷ்ய மனோபாவத்தை உடையதும், ராமானுஜரின் உள்ளத்தில் தோன்றும் உதார நன்மையுடன் கூடி விளங்குபவதுமான அந்த புனிதமான ஶ்ரீராமவசனங்கள் புருஷோத்தமனின் நிஜஸ்வரூபத்தை விளக்கிக் காட்டின. துளசிதாஸரின் மரியாதா புருஷோத்தமராமனின் தர்மத்தின் ரக்ஷணத்தையும் காருண்யத்தையும் விளக்கிக் காட்டி விமர்சனம் செய்தன.) அந்த மஹா பாக்யவான்கள் பரபரப்புடன் ஶ்ரீராமச்சந்திரனிடம் ஓடிவந்தார்கள், "ஹே பிரபு, (விபோ, லக்ஷ்மிநாராயணு, ஆதிதேவா, புராணரிஷியே,) நீங்கள்தானே எங்களுக்குத் தாயார். நீங்கள் தானே எங்களுக்குப் பிதா; பரமபுருஷரே, நீரேதான் எங்களுக்கு (ஹயக்ரீவரான) குரு. நீரே எங்களுடைய பந்துஜனம், எங்களைக் கட்டிக்காக்கும் ஆத்மபந்துவும் நீரேதான். ஹே க்ருபாநிதான், உம்மைவிட்டு நாங்கள் யாரைத்தஞ்சமாக அடைவோம்? நீர்தான் எங்கள் பிராணன்களைத் தரிக்கும் பிராண த்ருக். உம்மை நாங்கள் எங்கள் பிராணனைவிட மிக அதிகமாக நேசிக்கிறோம்" (285)

"ஹே ராமா, தசரதபுத்ரா, சீதாபதே, உங்களுக்காக நாங்கள் வாழ்கிறோம். சரணுகதவத்ஸலா, எங்களுடைய ஆதி ஆத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிக துக்கங்களை அபஹரிக்கும் ஹரிபகவானே, எங்களுக்கு ஸதா ஹிதத்தை சங்கல்பம் செய்து கொண்டிருக்கும் கிருதக்ஞரே, பிரணதார்த்திஹரரே, உமக்கல்லவா இந்த சரீரம், பிராணன், தனம், வீடு, மனைவி, புத்ரன், புத்ரி, வித்யை ஆகிய ஐஸ்வர்யங்கள் உமக்காகவல்லவோ ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. உம்மைத் தவிர, எங்களிடம் அதிகக் கருணைகொண்டு, யார் இவ்விதம் உபதேசிப்பார்கள்? ஸாகேதராமா, நீர் இல்லாவிடில் எங்களால் ஒரு க்ஷணமாவது வாழ முடியுமோ? இவ்விதம் எங்களிடம் பரம அனுக்ரஹம் கொண்டு, சிக்ஷைபோதிப்பது உமக்கேதகும். ஹே ஜகந்நாதரே, ஜகத்

குரோ, சாதாரண மாதாவும், பிதாவும் ஸ்வயம் பிரயோசனமாகத் தங்களது புத்ரர்களை வளர்க்கிருர்கள். நீரோ பரோபஹார்த்தம் எங்களுக்காக வாழ்ந்துகொண்டிருக்கிறீர். எங்களுக்கு சிக்ஷை செய்துகொண்டு எங்களை நற்பொருளாக ஆக்கிவிட்டீர். உமக்குச் செய்யப்படும் ஒவ்வொரு நமஸ்காரமும் எங்களை மாயப் பிறவியில் சிக்கவைப்பதில்லை. உமக்கு ஆயிரம் தடவைகள் நாங்கள் கிருதக்ஞையுடன் நமஸ்காரங்கள் செய்கிரும்.'' (286)

[தியானம்

ராமாசீதா, உன்னைவிட்டு எனக்கு யார் குலதனமாகவிருக்கக் கூடும்? கராரி, முராரி, ராவணரி, ஜகத்பதே, விஸ்வநாயகா, உன்னை நான்மாத்திரமா அவ்விதம் சொல்கிறேன் என்று நினைக்கிருயோ? உனது மகிமைகளை பரிபூர்ணமாகத் தெரிந்த யாவரும் சொல்லத்தான் சொல்வார்கள். நாரத பரம்பரையில் வரும் எனக்கு எப்படி அப்பா வேறுவிதமாகத் தோன்றும்? நீயே சொல். உன்னை ஸர்வகாலத்திலும் எனது ஜீவனமாகவைத்து நான் வாழ்ந்துகொண்டிருப்பது, ஸர்வாந்தரியாமி என்கிற பட்டப் பெயர், விருதுகொண்ட உனக்குமாத்திரமா தெரியாமல் எப்படிப் போகும்? ஹே கஜரக்ஷக, பரதாக்ரஜா, லக்ஷ்மணபூர்வஜா, சத்ருக்னபிரியா, ராகவா, உன்னை தியாகராஜர், ஸர்வோன்னதர், ஸ்வயம்பிரகாசர், ரமணீயகரன், தரணிசசாங்கலோசனன், ஜானகீஸன் என்று பலவிதங்களாகக் கூறியபோதுகூட, அவரிடமும் எவ்வளவு காலம் பராமுகனகவிருந்தாய் என்று நான் சொல்லியா உனக்குத் தெரியவேண்டும்? உனது மன்மாகிற ருதுகாலம் ஏற்பட்டால்தானே நான் சந்தோஷமடையக் கூடும்? மாதவா, சீதாவர நாயகா, பரமாத்புத சரித்திரத்தை உடைய தினகரகுலபூஷண, கிருஷ்ணசந்திரா, நான் உன்னை ஒருவனையே நம்பியிருக்கிறேன் என்று இவர்களைச் சொல்வதிலிருந்து நீ தெரிந்துகொள்ளாதபோனல், உன்னை என்ன குறை சொல்லமுடியும்? உனக்கு ஸுஜன பரிபாலா, நிச்சயமான பாப ஹிமசண்ட சூர்யன், மாதுர்யபிரியன், ஸுஸ்வரகான ப்ரியன், அஜருத்ர ஸகலதேவ வந்திதன், நிருபம சௌர்யன், ஆஞ்சநேயாதிகளால் வணங்கப்படும் ஆனந்த கந்தமூர்த்தி, சுந்தர ஸுரவர்யன், மஹாலக்ஷ்மிநாதன், என்று பலதடவைகள் உன் அழகையும், குணகாம்பிரியத்தையும், பாபரஹித தியாகராஜ ஹ்ருதயத்துடன், ஹே துளசிவனப் ப்ரவேசா, பரக்கப் பரக்கச் சொல்லியும் உனக்கு என்னிடம் மாத்திரம் தயை இன்னமும்

பிறக்கவில்லையே! நிகிலாதாரா, ஸகலஜகத் ஸ்வாமின், சியாமள நாதா, ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்ட க்ஷீராப்திவாஸா எனது குற்றங்களைப் பாராமல் என்னிடம் நீயாக ஓடிவர மாட்டாயா ?]

("பரந்தாமா, பூர்வாசார்யர்கள் உன்னை ஒருவித காரணமு முன்றி நிரஹேதுக கிருபையினால் அடையலாம் என்று சொல்லு கிறார்கள். ஜீவன் விமுகனாக விருந்தபோதிலும், ஸ்ருஷ்டி அவதாரம் முதலியவற்றாலே அந்த ஜீவனை உஜ்ஜீவிக்கச் செய்வதற்கு, ஒருவனைப் பிடிப்பதற்கு ஊரை வளைப்பதைப்போல கர்மபலத்தைத் தவிர, கிருபாபலமும் அனுபவித்தே தீரவேண்டும் என்கிற நியதியைப்போல, ஹே பகவான் நீர் உமது ஸ்வாதந்திரி யத்தைவிட்டு; மேன்மேலும் கிருபையை பொங்கும்படி "கிருஷி பண்ணிப் போகிறது" என்று சொல்லுகிறார்களே, அப்பேற்பட்ட கிருபாமூர்த்தியை இன்றுநாங்கள் கண்டோம்.) அசுரர்களின் சத்ருவே, தேவர்களின் மித்ரனே, இந்த ஸம்சாரம் துஷ்கர்மத் தினால் யேற்படும் பாபம் பயம்சூழ்ந்திருக்கப் பெற்றிருக்கும் போது, நீரே வலுவில் கிருபாகுணத்துடன் பெருகத் தொடங்குவீ ராகில், கேட்பாரற்ற ஸர்வ ஸ்வதந்திரனான உம்மை யாவரால் புரிந்துகொள்ள முடியும்? ஹே கருணாம்புதே, பரம உபகா ரார்த்தம், லோக ஹிதத்திற்கு இவ்விதம் ஜகத்தில் அடிக்கடி அடிக்கடி அவதாரம் செய்கிறீர். உமக்கு ஸமமாக நீரே ஆவீர். உம்மைப்போல உதார ஹ்ருதயம் படைத்தவர்கள் உம்முடைய பக்தர்களே ஆவார்கள். நீங்களும் உம்முடைய பக்தர்களும் சேதனர்களின் பாபகர்மங்களைப் பாராமல், "ஐயோ, இவனுக்கு இன்னமும் ஸம்சாரபயம் தொடங்குமாகில் என்ன செய்வோம் என்று அச்சமுண்டாகி, இவனையும், ஸ்ரீயப்பதியான பெருமாளும் கைவிட்டுவிட்டால் இவன் கதி என்ன ஆவது, நாம் சும்மா விருக்கக் கூடாது,' என்று பாபியான அவனையும் அங்கீகரித்து "மரணமானால் வைகுண்டம் திண்ணம்," என்று சொல்லி நிர்ப் பயமாகவிருக்க உதவுகிறது உம்முடைய நிர்ஹேதுக கிருபை யன்றோ? அப்பேற்பட்ட பரமாசார்யர்கள் உம்மைப் போலவும், உம்மையும் விடவும், ஸ்வாமி, ஜீவர்களை உஜ்ஜீவிப்பதில் ஸமர்த் தர்கள் அன்றோ? ஆகையால் ஸச்சிதாத்மக அநிலேசா, பயக்ருத், பயநாசனரே, இந்த ஜகம் முழுவதும் பலகாலம் தேடிப் பார்த்தும் உமக்கு ஈடாகவோ உம்முடைய பக்தர்களுக்கு ஈடாகவோ யார் தான் இருக்கக்கூடும்? உங்கள் இருவர்களுடைய குணமேன்மை களை எவ்வளவு தடவைகள் கீர்த்தனம் செய்தபோதிலும் முடிவடை

கிறதில்லை. இந்த உலகில் உங்கள் இருவர்களையும் தவிர வேறு மற்ற எவர்களும் ஸ்வார்த்திகளாகவேவிருக்கின்றனர். அவர்கள் பிரியம் செய்வது அவர்களின் நன்மைக்காகவே அன்றி, வேறு ஒரு காரணமும் கிடையாது. அப்பேற்பட்டவர்களுக்கு ஸ்வப்னத் தில் கூட "பரமாத்ம" மனோபாவநினைவு துளிக்கூட கிடை யாது," என்று பாஷ்பவாரிகளை உதிர்த்துக்கொண்டு அந்த மஹா பாக்யமுள்ள அயோத்தியா ஜனங்கள் பிரபு ராகவனிடம் தங்களை நிவேதனம் செய்துகொண்டார்கள். (287)

அவர்களுடைய அத்புதமான வசனங்கள் பிரேமை ரஸாயன மாக விருந்தன. என் பிரபு ரகுநாதன் அந்த வார்த்தைகளைக் கேட்டு, ஹ்ருதயத்தில் ஆனந்தம் கொண்டார். அந்த மஹானு பாவர்கள் ராமச்சந்திரனுடைய உபதேசங்களைப் பெற்றுக் கொண்டு, அவைகளை நினைத்துக்கொண்டும், பிரபுவினிடம் விடைபெற்றுக்கொண்டு, தங்களது வீடுகளை அடைந்தார்கள். (288)

பரம ஸந்துஷ்டியை அடைந்த பகவான் சங்கரர் உமையைப் பார்த்துச் சொன்னார். "என் பிரியமுள்ள உமாதேவியே, இந்த அயோத்யாபுரியில் வசித்துவரும் புருஷர்கள், ஸ்திரிகள் யாவரும் க்ருதபுண்யர்கள். கிருதார்த்த ஸ்வரூபம் உள்ளவர்கள். பாப பயங்களை முற்றும் துறந்தவர்கள். பகவான் ராமச்சந்திரனுடைய பரிபூர்ண கிருபைக்குப் பாத்திரமானவர்கள். பகவான் ராமச்சந் திரனுடைய அருட்பிரஸாதத்தினால் நிவர்த்திக்கப்பட வேண்டிய வையான அவித்யா, கர்மவாஸனாருசி, பிரகிருதி ஸம்பந்தங்கள் யாவும் முற்றிலும் நீங்கியவர்கள். ("ஸர்வபாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி," என்கிற) பகவத் அபயஹேது வசனத்திற்கு வில க்ஷணமாகவுள்ள அருட்பிரஸாதத்தை ஞானபூர்வமாக பகவான் பரமபுருஷன், நாராயணரால் உபதேசம் செய்யப்பட்டவர்கள். அவர்கள் "பரபிரும்மம் மஹத்" என்கிற சப்த ரிஷிகளால் அறியப் படுபவரும், சச்சிதானந்த கன ஆனந்தரூபியாக விளங்கும் பிரபு, ரகுநாயகனைத் தங்களுடன் கூட வசிக்கும் அயோத்யாபுரிவாசியாக வும், அரசனாகவும், ஸர்வ ஜனரக்ஷகனாகவும், அடைந்த மஹா புண்யவான்கள்." ("ஹே ரகுநாயகா, ஜகதீஸ்வரா, ஸதா உனது குண கீர்த்திகளையும் உனது அடியார்களின் குண மேன்மைகளை யும் கீர்த்தனம் செய்கின்ற என்னை நீதான், ஹே ஜானகீஸா, ரமேசா, காத்தருள வேண்டும்.") (289)

[தியானம்

நாராயணு, ராமாசீதா, மாதவா, மருதபுராதீசா, நீரே மூக்தி. மஹா பிரளயத்தில் யோகநித்ரை செய்யும்பொழுது மாயை உம்மிடம் லயித்திருந்தது. அப்பொழுது பிரபஞ்சமும் இல்லே. ஜனனமரண ஸ்வரூபமான ஸம்சாரமும் இல்லே. மோக்ஷமும் இல்லே. பகலும் இரவும் கிடையாது. அந்தக் காலத்தில் நீர் ஒருவரே, ஸச்சிதானந்த பிரகாசாத்மாவாக விளங்கினீர். அப்பொழுது தாங்கள் உம்முடைய ஸ்வஸ்வரூபத்தை ஆனந்தித்துக் கொண்டிருந்தீர். ஹ்ருஷிகேசரே, ஸ்ரீதரரே, உமக்கு ஸ்ருஷ்டி செய்யவேண்டும் என்கிற சங்கல்பம் தோன்றியவுடன் மாயை தானுகவே க்ஷோபத்தை அடைந்து, ஸத்வம் ரஜஸ்தமஸ் ஆகிய குணங்களுடனும், காலமும் கர்மமும் ஜீவ ஸமூஹங்களும் ஆவிர்பவித்து, மாயைக்கு ஸஹாயத்தைச் செய்தன. அப்பொழுது தாங்கள் ஸர்வ சாக்ஷியாக, மாயையில் பிரவேசிக்காத ஸ்வரூபத்துடன் விளங்கினீர். நாராயணு, அவ்யயரே, ஜகதாதிபரே, முகுந்தா, உம்மால் பலவிதங்களாகவிருக்கும் மாயையின் பிரதி பிம்பமாகவிருக்கும் ஜீவனுள்ளும் பிரவேசிக்கப்பட்டது. பிறகு மாயையே உம்முடைய ப்ரேரணேயினுல் புத்தி மஹத்தத்வத்தை ஸ்ருஷ்டித்தது. ஹே பிரபோ, கிருஷ்ணு, உம்முடைய ப்ரேரணே யினுல் மஹத்தத்வம் தமோகுணம் நிறைந்துள்ள ஜீவாத்மாவினிடம் “நான் மனுஷ்யன்” என்கிற வேறுபாடான அறிவை உண்டுபண்ணி, அஹங்காரத்தை ஸ்ருஷ்டி செய்தது. இந்த அஹங்காரம் குணங்களின் ஸம்பந்தத்தால் மனம், புத்தி, அஹங்காரம் இவைகளுடன் கூடிய சித்தத்தையும், இந்திரியங்களேயும் சப்தத்தையும், பிரணவ நாத சப்தத்திலிருந்து ஐந்து பூதங்களேயும், இந்திரிய அபிமான தேவதைகளேயும் உண்டாக்கியது. இவைகளின் ஐக்ய ஸ்வரூபமாக தாங்களும் ஆதிசக்தி தேவியாகிற மஹாலக்ஷ்மியும் கிரியா சக்தியாக ஆவிர்பவித்து, ஒவ்வொரு தேவதைகளேயும் ஒன்றுக்கொன்று கூட்டிச் சேர்த்து, ஸ்வர்ண மயமான பிரும்மாண்டத்தை ஸ்ருஷ்டித்தீர். அந்த பிரும்மாண்டம்தான் தங்களுடைய சரீரமாகிற விராட் ரூபத்தை அடைந்திருக்கிறது. இவ்விதம் ஸகல ஜீவர்களிடமும் அந்தர்மியாகவும் விராட் புருஷனுகவும் விளங்கும் ஹ்ருஷிகேசா, ஹே விஷ்ணே, கோதண்டராமா, விபோ, மருத்புராதீஸா, தாங்கள்தான் தங்களேச் சரணமடைந்திருக்கும் என்னே ஸமஸ்த ரோகங்களிலிருந்தும் காப்பாற்ற வேண்டும்.]

ஒரு சமயம் பகவான் ஸ்ரீராமச்சந்திரன் ஆத்மா ராமனுக ஸ்வஸ்வரூபத்தை ரமித்துக்கொண்டிருந்த சமயம், வஸிஷ்ட முனிவர் அவ்விடம் வந்து சேர்ந்தார். ஸ்ரீவத்ஸதாமனுகிற பரந் தாமன், ஹிரண்யகர்ப்பர், ஸகலருக்கும் பாரபக்ஷமின்றி சுகத்தை அளிக்கும் வள்ளல் இருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தார். பக வான் ரகுநாயகன் அவரை மிக்க மரியாதையுடன் வரவேற்று, அவருடைய பாத சரணங்களை அலம்பி, விப்ர சரணங்களில் படிந்து ஓடும் மஹா தீர்த்தத்தைத் தன்மீது ப்ரோக்ஷித்துக் கொண்டார். (ஹே வஸிஷ்ட பிரியா, விப்ரப்ரியா, என்னிடமும் வஸிஷ்டரின் சிஷ்யன் என்று அனுதாபம் காட்டவேண்டும்.) (290)

மஹா விரதமுள்ள வஸிஷ்டர் தனது கரகமலங்களைக் கூப் பிக்கொண்டு, ஸ்ரீராமனைப் பார்த்துச் சொன்னுர். "மாதவா, ராகவா, கிருபா ஸாகரமே, எனது பிரார்த்தனையைக் கேள். உம் முடைய பரஸ்வரூபத்தை ஓரளவு அறிந்துகொண்ட நான், உம் முடைய மானுஷ்ய சேஷ்டிதங்களின் ஆசரணைகள், தர்ம விஸ் வாஸம், தர்மத்தை அனுஷ்டிப்பவர்களிடம் நீர் காட்டும் அபார பக்தி, அதிமானுஷ்யமானதும், அப்ராகிருதமான செய்கைகளை யும் கண்டு நான் தங்களிடம் எனது ஹ்ருதயத்தைப் பரிபூர்ண மாக அர்ப்பித்துவிட்டேன். உம்முடைய அப்ராக்ருத ஸௌந் தர்ய அழகில் அபாரமாக மோஹமடைந்திருக்கிறேன். ஹேபிரபு, உம்முடைய தாஸன் இவ்விதம் சொல்லுகிறேன் என்று தாங்கள் நினைத்துக்கொள்ள வேண்டாம்." (291)

[தியானம்

நாராயணு, கேசவா, சக்ரதரா, சக்ரபாணே, உம்முடைய விராட் ஸ்வரூபம் எப்போதும் ஸ்மரிக்கத்தக்கது. சதுர்தச புவனங்களும் அதில் அடங்கிய ஜீவராசிகளும், உமது சரீரத்தின் வெவ்வேறு இடங்களில் காண்பிக்கப்படுகின்றன. அந்த அங்கங் களே பிராம்மண முதலிய வர்ணங்களையும் ஸ்ருஷ்டிப்பதாக விருக்கின்றன. உமது நெற்றி புருவங்களே பிரும்மாவின் வீடா கவும், மூச்சுக் காற்று வேதங்களாகவும், கேசபாசங்கள் மேகங்க ளாகவும், ஹ்ருதயபுண்டரம் ஸத்வாதி குணங்களை உடைய ஸாம் யாவஸ்தையாகிற பிரதானமாகவும், வஸ்திரங்கள் இரண்டு ஸந்தி யைகளாகவும், வாக்கு பறவைக் கூட்டங்களாகவும், சித்தர்கள் ஸப்தஸ்வரங்களாகவும், பின்பக்கம் அதர்மமாகவும் மனது சந்திர ணுகவும், ரோமங்கள் மரங்களாகவும் இருக்கின்றன. அம்பு

ஜாக்ஷா, விராட், ஸ்ரீமானே, ஜகத் நாராயணு, ஸதா உமது அந்தராத்ம ஸ்வரூபத்தையும், சுத்த ஸத்வத்தையும், ஸதா ஸ்மரிக்கும் என்னிடம் கருணை காட்டி, எனது ஸமஸ்த ரோகங்களை நீக்கி, "உம்முடைய பக்தன்" என்று சொல்லும்படி கிருத கிருத்யனுக ஆக்கவேண்டும்.]

"பிரபோ, தேவா, ஸ்வயம்பிரகாசரே, உம்முடைய மகிமைகள் அபாரமாகவிருக்கின்றபடியால், அவைகள் எல்லையற்று விளங்குகின்றன. பகவான், முகுந்தா, அநாத ஸம்ஸ்ரயரே, ஸவிதா, ஸ்ரீநிகேதனுகவிருக்கும் உம்முடைய பிரபாவங்களை அனுதிகாலமாக வந்திருக்கும் வேதங்களும், பூர்ணமாக அறிகிற தில்லை. அவ்விதமிருக்கும்போது, நான் எவ்விதம் சொல்லக் கூடும்? ஹே விஷ்ணு, ஸர்வவரேண்யம், வரதா, என்னுல் செய்யப்படும் புரோஹிதம் என்கிற கர்மா மிக்க நீசமான கர்மமாக விருக்கிறது. பரஜீவன வாழ்க்கையினுல் மிக்க தாஸ்யத் தன்மையுடன்கூடி விளங்குகிறது. வேதங்களும் புராணங்களும் ஸ்மிருதிகளும் இந்தத் தொழிலை நிந்தனை செய்கின்றன." (292)

"நான் இந்தத் தொழிலைப்பற்றி கவலையுடன் சிந்தித்துக் கொண்டிருக்கும் சமயம், பிரும்மா என்னிடம் வந்து, "புத்ரா, கவலைப்படாதே. இந்த தொழிலினுல் கொஞ்ச நாள் கழித்து உனக்கு மஹத்தான லாபம் யேற்படும். பரமாத்மா கேசவர், கௌஸல்யா புத்ரனுக அயோத்தியில் அவதரிப்பார். மனுஷ்ய ரூபத்துடனிருக்கும் அந்த பரபிரும்மம் ரகுகுலபூஷணனுக விளங்குவார். அவர் பிராம்மணர்களைத் தேவதையாக பூஜிக்கும் தர்மாத்மாவாக விருப்பார். அவர் தனது பரிஜனங்களைக் காப்பாற்றும் ஸ்வபாவம் உள்ளவராகவுமிருப்பார்" என்று சொன்னுர். (293)

"அப்பொழுதுதான் என் மனதில் ஒரே ஒரு ஆசை எழுந்தது. "மஹா விரதங்கள், யோகம், ஸாங்கியம் முதலிய யோக முறைகள், ஜபயக்ஞங்கள், தானம், தர்மம் முதலிய ஆசரணைகள் ஆகிய இவைகளையே சாதனமாகக் கொண்டு, விஷ்ணு பகவானை ஆராதித்து, திரைலோக்யத்திலும் உத்தம உத்தம ஸ்தானமாகிற தங்களுடைய அச்யுத முகுந்த சரணங்களை இந்த தொழிலினுலேயே நான் அடைவேன்" என்று சங்கல்பித்துக் கொண்டேன். ஹே விஸ்வேசா, கங்காதேவி உற்பத்தியான உம்முடைய பாதங்களையே பிரும்மதனமாகக் கருதுவேன். இந்த புரோகிதத் தொழிலினுல் நான் மேன்மையை அடைவேன் என்று மஹா சங்கல்பம் செய்துகொண்டு, இதையே பரம தர்ம

மாக இதுவரை ஆசரணே செய்து வந்திருக்கிறேன். நாராயணு, பிராம்மணர்களே கௌரவிக்கும் ராகவா, அயோத்யா ராமா, அப்போது முதல் நீர்தான் எனது உள்ளத்தின் நிஜமந்திரமாக விளங்குகிறீர்.'' (294)

''ஜபம் தபம் நியமநிஷ்டைகள், ஸமாதி முதலிய யோக அங்கங்கள், ஸ்வதர்மங்கள், வர்ணுஸ்ரம தர்மங்கள், இன்னும் அநேகவிதமான சுபகாரியங்கள், ஸர்வ ஜீவராசிகளிலும் உம்முடைய ஸ்வரூபத்தைப் பார்த்தல் என்கிற ஞானம், மனித வாழ்க்கையில் ஹிம்சை யில்லாமல் ஸகல சேதன சேதனர் களிடமும் காட்டும் பூத தயை, மன அடக்கம், இந்திரிய அடக்கம் முதலிய சமதமாதி குணங்கள், தீர்த்த ஸ்நானங்கள், ஸாது ஜனங்கனின் சேர்க்கை ஸம்பந்தங்கள், வேதங்களில் சொல்லப் பட்டவையும், ஸாதுக்களால் பரம்பரை பரம்பரையாக அனுஷ்டிக் கப்பட்டு வரும் ஸகல தர்மங்களும் (295)

நாராயணு, பிரபோ, தர்மதுரந்தரரே, அநேக ஆகம புராணங்கள், இதிஹாஸங்களில் சொல்லப்பட்டதுமான மந்திர யந்திர தந்திரங்கள், வேதபுராணங்களின் ஸ்ரவணம் ஆகிய எல்லாவற்றுக்கும் ஒரே ஒரு பலன்தான் சொல்லப்படுகிறது. அது தங்களுடைய அச்யுத பதங்களே அடையச் செய்வதற்கு அவைகள் ஏணியைப் போல ஸாதனமாக விருக்கிறது. அதுவே தங்களுடைய பாதபங்கஜங்களில் பிரேமையை வளர்க்கும் ஸாதனமாக விருக்கிறது. (திரிவிக்ரமா, உருகாயா, விஷ்ணே, மஹா துருவரே, ஹரிபகவானே,) அப்பேற்பட்ட மஹா பலனுக விருக்கும் தங்களுடைய பாதபங்கஜங்களே ஸந்ததமும் ஆராதித்து, தங்களே நான் ஸதா சந்தோஷிப்பிக்க வேண்டும். (கோவிந்தரே, திரைலோக்யத்திலும் அதிதுர்லபமாக விருக்கும் தங்களது நாமதேயத்தை ஸதா ஜபித்துக்கொண்டு, தங்களே ஆராதித்து நிரந்தரம் ஸந்தோஷத்தை அடைவேனுக.'' (நான் செய்த கர்மாக்களின் பலனுகவும், தங்களுடைய திருப்தியின் காரணமாகவும் எனக்கு இந்த மஹா பிரேமையை வரமாக அருளவேண்டும். வரதா, அச்யுதா, ஜனுர்த்தனரே, அக்ரரே, பரந்தாமா, ஹரிபகவானே, வாஸுதேவா, ஐந்திரமிந்தரனே, ஜகத்பதி, யோகேஸரே, ஜகந்நாதா, புருஷரே, ஸநாதனரே, கிருபை செய்யவேண்டும்.) (296)

''ஹே பிரபோ, எங்கேயாவது அழுக்கை அழுக்கினுல் துடைத்தால், அழுக்கு போய்விடுமா? எங்கேயாவது ஸ்வாமி,

ஜலத்தை மத்தினால் கடைவதினால் வெண்ணையை அடைய முடியுமா? இந்தப் பிரகாரம், ஜானகீஸா, ரகுநாத்ஜி, நிர்மல மான ப்ரேமை பக்தியாகிற சுத்த ஜலத்தினால் அல்லவோ, மன அழுக்கு (மன இருளும்) போகக்கூடும்?'' (அந்த நிர்மலமான பக்தி உமது கிருபா வர்ஷத்தினால் அல்லவோ யேற்படுகிறது.) (297)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, வைகுண்டபதி, லக்ஷ்மி பிரபோ, உம்முடைய திருநாமம் எனக்கு கங்கை மாதிரி, ஸர்வ பாவன மாக விருக்கிறது. வஸிஷ்ட பிரும்மாதி தேவர்கள் உம்மை அடைந்து எதை வேண்டுகிறார்கள் தெரியுமா? ராமா, அவர்கள் ஸகல ஜனங்களையும் உன் மாதம் செய்யும் மனோஹரமான மின்னல் கொடி போன்ற திருமேனியால் சக்கிர ஸ்வரூபமாக விருக்கும் பத்து திக்குகளை பிரகாசிக்கச் செய்து கொண்டும், ஜ்வாலையினால் சூழப்பட்டவளும், காரண ஜலத்தில் வசிப்பவளும், பரபிரும்ம பரம் ஜ்யோதி ஸ்வரூபமாவிருக்கும் மஹாலக்ஷ்மி தேவி, ஸ்வயம் லக்ஷ்யத்தினால் மஹா உத்ஸாகம் கொண்டு, உம்முடைய பாதாம்புஜங்களைப் பஜிப்பது ஒன்றினாலேயே மனம் நிறைந்தவளாகக் காணப்படுகிறாளே, அந்த பாதாம்புஜ பதத்தை அல்லவா அவர்கள் விரும்புகிறார்கள். ஹே ஹிரண்ய கர்ப்பரே, ஸ்ரீவத்ஸாங்கனே, விபுவே, சங்கம், சக்ரம், கதை, பத்மம், சாரங்கம், நந்தகம், முஸலம், பாசம் ஆகிய ஆயுதங்களைத் தாங்கும் அழகான புஜமண்டலத்தை உடைய மஹாவிஷ்ணுவே, உமது பாதாரவிந்தத்தில் விழுந்து வணங்கும் கிருதார்த்தர்கள் பரமென்றும், அபரமென்றும் சொல்லக்கூடிய த்வைதாத்வைத தங்களுடைய ஸ்வரூப விஷயமான நிஜ ஞானத்தை அல்லவா வரமாக பிரார்த்திக்கிறார்கள். அப்படிப் பட்ட ஸாது ஜனங்கள் மீண்டும் தங்கள் பாதகமலங்களில் பஜித்து ஸம்சாரத்தில் வசிப்பவர்களாக விருந்தும், பந்தம் யேற்படாமல், ஸர்வ ஜாக்கிரதையுடன் தங்களைக் காப்பாற்றிக் கொண்டு, தங்களைப் போலவும், தங்கள் நாமத்தைப் போலவும், ஸர்வ புவனபாவனியாகிற கங்கையைப் போலவும், மஹா தீர்த்தர்களாக விளங்குகிறார்கள். ஹே கூடமாக வசிக்கும்ஹரி பகவான், அந்த ஸாதுக்கள் உமது பிரேரணையால் உம்மிடத்தில் வைக்கப்பட்ட பிரேமை அன்பினால் மாத்திரம் வாழ்பவர்களாக, சாந்தர்களாகவும், பிரும்ம நிஷ்டை உள்ளவர்களாகவும், லோக

பாவனர்களாகவும், ஸர்வ ஸங்க தியாகம் செய்தவர்களாகவும், கங்கையைப் போல உமது திருவடிகளை தங்களது ஹ்ருதய புண்டரத்தில் தரிப்பவர்களாகவும், ருத்ரரை சரீரமாக உடையவர் களாகவும், ஜகத்ஹிதத்தில் ஆத்ம சிந்தனை உள்ளவர்களாகவும், ஸகல கிலேசங்களையும் பொறுத்துக்கொண்டு, உலக சஞ்சீவினி யாகவும், ஸர்வ பிஷக்காகவும் (வைத்யர்களாகவும்) விளங்கு கிறார்கள். அப்பேற்பட்ட மஹாத்மாக்களுடைய ஸம்பந்தமும், அனுக்ரஹமும், உமது கருணையையும், "திரிபதகா" எனப்படும் பாகீரதியின் கருணையும் எனக்கு ஸதா சித்திக்க வேண்டும்.]

"பிரபு, உமது ஸரோஜ பாதங்களிலும், உமது தாஸர்களிட மும் அனன்ய பக்தி செலுத்துபவனல்லவோ, எல்லாவற்றையும் அறிந்த ஸர்வக்ஞனாகிறான், அவனே தத்வ சாஸ்திரங்களின் முடிவை அறிந்த ஞானபண்டிதனாகவும், ஆசாரம் அனுஷ்டானங் கள் நிறைந்த வித்வானாகவும் கருதப்படுகிறான். அவனே யாவரும் போற்றத் தகுந்த கல்யாண குணங்களின் நிதியாகக் கருதப்படு கிறான். அவனே அகண்டமான விக்ஞானம், ஸுக்ஞான சீலனாகக் கருதப்படுகிறான். அவனே ஸர்வ காரியங்களில் ஸமர்த்தனாக விளங்குகிறான். சுருக்கமாக சொல்லுங்கால், ஸர்வ சுபலக்ஷணங்களுடன் அவன் விளங்குகிறான்." (298)

"பரந்தாமா, முராரிபு, உம்முடைய நிஜஞானத்தையும், நிஜ பக்தியையும், உம்மைப் பற்றிய கைங்கர்ய வாக்கியங்களையும், ப்ரீதி விஸ்வாசத்தையும், உம்முடைய பதாப்ஜங்களில் தினம் தினம், நிமிஷம் நிமிஷம், பெருகும் கங்காபிரவாஹம் மாதிரி பொங்கி வழியும் அனன்ய பரமா பக்தியையல்லவா என் போன்ற சேதனர்களுக்கு அளிக்கவேண்டும். ஹிரண்யகர்ப்பரே, உருகா யரே, உமது கிருபையினால் யதார்த்தமான "த்வாதாத்வைத பவத் ஸ்வரூபபரம்" எனப்படும் யதார்த்த ஞானத்தை அடைந்த வன் அல்லவோ ஸர்வ ஜீவர்களுக்கும் மேலாக விளங்கும் வரிஷ்ட ஸர்வக்ஞ ஞானியாகிறான். அவனே தங்கள் விஷயத்தை பூர்ண மாக அறிந்த தத்வஞானியாகிறான். நாராயணா, விஸ்வதஃ பரம் பரமம் பிரபும், பரமாத்மா, புருஷரே, ஆதித்ய வர்ணரே, அம்ருதரே, தமஸஃ பரஸ்தாத், என்னும் பிரளய காலத்தில், ஏகோ ஸவை நாராயண ஆஸீத என்று இருந்தவரும், ஸநாத னரும், புராண ரிஷியும், ஹிரண்ய கர்ப்பரான பிரும்மாவினால் ஒரு சமயம் வேதங்களை இழந்த போது, "கண்ணிழந்தேன், தனமிழந்தேன்" என்று கேசவதனத்தை மிக்க கண்ணீர்விட்டுப்

பிரார்த்தித்த போது, ஹயக்ரீவ அநிருத்த நாராயணராக காக்ஷி அளித்த பிரபோ, மஹாதேவ தேவரே; மஹாத்மாவே, உம்மை அறிந்து உமது கிருபையை ஸம்பாதித்தவன் அல்லவோ கவி யென்றும், புத்திமான் என்றும், வித்வான் என்றும் புகழப் படுகிறான். அவனே லக்ஷ்மிதேவி வாஸம் செய்யும் குணசீலன், என்றும் அழைக்கப்படுகிறான். அவனே ஜகத் ஹிதத்திற்கு வேண்டிய அகண்டமான விக்ஞான ஸுக்ஞானத்தை அடைந்த ஸ்ரீஸம்பன்னனாக ஆகிறான். அவனே எல்லாவற்றிலும் அதிசய மான சக்தி, வீர்யம், காரியங்களை விரைவாகச் செய்யும் திறமை, ஆபத்தில் காட்ட வேண்டிய பரபரப்புயில்லாமை, நிதானம், த்ருதி, எல்லாவற்றையும் நடத்த ஸாமர்த்தியம், ஆகிய மகிமை களைப் பெற்ற தக்ஷராகிறான். ஸர்வ சாஸ்திர லக்ஷ்ய லக்ஷணங்களை அறிந்தவனாகிறான். அப்பேற்பட்ட லக்ஷ்மி ஸம்பத்தைக் சொடுக்கக் கூடியதும், லக்ஷ்மியினால் ஸ்பர்ச்சிக்கப் பட்டதும், சிவந்ததும், கங்கையின் உற்பத்தி ஸ்தானமாகிற தங்களுடைய ஸரோஜ பதாப்ஜங்களில் ரதிராகம் கொண்டவனாக ஸர்வாவஸ்தைகளிலும் கைங்கர்யம் செய்பவனாக, "உமது கிருபையை அடைந்தவனாக, நான் விளங்க வேண்டும். ஸ்ரீ ரங்கநாதபத ஸ்ரீயை எனக்கு தந்தருள வேண்டும். காயத்ரி தேவதையின் பிரகாசமே, என்னிடம் கிருபை பாலிக்க வேண்டும். ஸாவித்திரி தேவியின் மஹார்த்தமே, தாங்கள் எனக்கு ஸித்திக்க வேண்டும்," என்று பிரார்த்தித்தவண்ணமாக விருக்கிறான்." (299)

"ஜகந்நாதரே, ஸ்ரீ சீதா ராமச்சந்திரா, மானிட ஸ்வரூபம் கொண்ட தாங்கள் என்னிடம் என் விருப்பத்தை நிச்சயமாக அறிவீர்கள். உமது ப்ரீதியினால் ஸந்தோஷத்தில் ஆழ்ந்து, தங்களது கிருபையினால் ஸ்வீகரிக்கப்பட்டு, கிருதார்த்தனாக ஸர்வ காலத்திலும் ஸர்வ அவஸ்தைகளிலும் விளங்கும் பொருட்டு, எனக்கு தங்களுடைய பாத கமலங்களில் யேற்படும் பிரேமை பக்தி என்னால் எடுக்கப்படும் ஒவ்வொரு ஜன்மத்திலும் ஏற்பட வேண்டும். ஒவ்வொரு வாழ்க்கையிலும் உம்முடைய பாத ஸேவை, ஸ்ரீ பாத கைங்கர்ய அனுவர்த்தி யேற்பட வேண்டும். உமது ப்ரீதியை ஸதா விருத்தி செய்யும் பிரேமை பக்தி யேற்பட வேண்டும்." இவ்விதம் சொல்லிக்கொண்டு போன பகவான் வஸிஷ்டர், (மஹா விரதங்கள் கொண்ட பிரும்ம ரிஷி, விஸ்வாமித்திர பிரியர், வேத நிதியான பராசரரின் பிதா வுக்கும் பிதா, பிரும்ம புத்ரர், அருந்ததியின் கணவர்) ராமசீதா

ப்ரீதியை அடைவதற்கு ஸ்ரீ புருஷோத்தம ராமனை விழுந்து விழுந்து நமஸ்கரித்தார். பிரபுவும் அவரை வாரி அணைத்து இறுகத் தழுவி கரகமலத்தினுல் ஸ்பரிசித்து, உச்சி மோந்து அனுக்ரஹித்தார். (300)

அதன் பிறகு வஸிஷ்ட மஹா முனிவர், ''ஸர்வ வரிஷ்டன்'', அதிப்ரீதியுடன் தனது கிரஹத்திற்கு வந்து சேர்ந்தார். அவருடைய மனம் ஸ்ரீ சீதாராம திருவடிகளில் பூர்ணமாக பதிந் திருந்தது. (ஸ்ரீ வத்ஸாங்க ஸ்ரீதர கௌஸ்துப க்ரீடிஹாரி, நாராயணரின் கிருபையைப் பூர்ணமாக அடைந்ததின் லாபத்தை உணர்ந்தவராகவும் கிருத கிருத்யராகவும், மஹா வீர்யமுள்ள வஸிஷ்ட பகவான் காணப்பட்டார்.) அவரைக் கடாக்ஷித்த பின்பு, ஆஸ்ரிதர்களுக்கு சுகத்தைத் தரக்கூடிய ஸ்ரீ ராமன் தனது பிரியமான சேவகரான ஹனுமான்ஜியையும் பரதாதி சஹோதரர்களையும் அழைத்துக் கொண்டு தனது அந்தப்புரத்திற்குச் சென்று விட்டார். (301)

[தியானம்

நாராயணு, சக்ரபாணி, காலமூர்த்தி, நீர் ஆதியில் ஸ்வ ஆனந்த ரூபமாக யோக நித்ரையில் மூழ்கியிருந்த போது, உமது ஆக்ஞையின்படி தங்களுடைய கால சக்தி ஆயிரம் சதுர் யுகங்கள் கழிந்த பின்பு தங்களை எழுப்பியது. அப்போது ஜலகர்ப்பாசயமாகிற தாங்கள் உலக ஸ்ருஷ்டியின் ஸங்கல்பம் கொண்டவராக முதலில் பத்மத்தை தங்களது நாபியிலிருந்து ஆவிர்பவிக்கச் செய்தீர். ஹே ரத்ன கர்ப்பரே, ஸுநாபரே, பத்ம கர்ப்பரே, நன்ருக அலர்ந்த இதழ்களை உடைய அந்த காரண ஸரோஜ புஷ்பத்தில் ஸமஸ்த வேத ராசிகளை உடைய பத்ம ஜன்மா என்றும் சொல்லும்படி பிரும்மதேவர் உண்டானுர். அவர் தங்களையும், பத்மயோனி என்று சொல்லக்கூடிய மஹா லக்ஷ்மியையும், புகழ் பெற்ற வசனங்களால் துதி செய்து தனது ஸ்ருஷ்டியைச் செய்தார். அப்பொழுது கால சக்தியான தங்க ளுடைய ஸுதர்சனம் அவரைக் காப்பாற்றியது. ஹே ஜ்யோதி ஷாம்பதியே, உமக்கு அக்னி, ஸுர்யன், ஸோமன் நேத்ரங்களாக விருக்கின்றன. நீரே காரண ஜலமாகவுமிருக்கிறீர். நீரே ஸர்வ பூதாத்மாகவுமிருக்கிறீர். ஸஹஸ்ர கிரணங்களை உடைய சக்ரபாணி, அச்யுத பிரியரே, ஸர்வாஸ்திரங்களையும் பக்ஷிக்கும் யோக நாராயணரே, பிரியரே, நீரே ஸர்வ சாக்ஷி யாகவும், ஸர்வ போக்தாவாகவும், ஸத்யம் ஸத்வமாகவும், அகில

யக்ஞஸ்வரூபமாகவும், யக்ஞபுக்காகவுமிருக்கிறீர். ஹே பர மாத்மா, பத்ம கர்ப்பரே, அனந்த மகிமைகளைப் பெற்ற குருவா யூர் அப்பா, விஷ்ணோ, என்னிடம் ஸதா கருணையுடன் எனது குற்றங்களை க்ஷமித்து கொண்டு ஸந்துஷ்டியுடன் இரும்.]

இன்னொரு சமயம் என் பிரபு மஹா கிருபாளு ஸ்ரீராமச் சந்திரன் அயோத்யாபுரியின் வெளியில் சென்றார். அந்த சமயம் ஸர்வ ஸ்ரேஷ்டமான ராஜலக்ஷ்மியின் சின்னங்களாகிற அஸ்வம், ரதம், யானைகள் முதலியவற்றையுடைய என் பிரபு யானைகளையும் ரதங்களையும் அஸ்வங்களையும் வரவழைத்தார். அவர் ஒவ்வொன்றையும் கருணையுடன் கடாக்ஷித்துச் கொண்டு, யார் யார் எதை வேண்டினார்களோ, அதை முறைப்படி தானம் செய்தார். (302)

ஸம்சாரத்தில் ஸகல கடுந்தாபங்களைப் போக்கும் விஸ்ராமர், என் பிரபு அந்த ரகு நாயகன் அவைகளைக் கொடுப்பதினால் யேற்பட்ட சிரமத்தைப் போக்குவதற்காக ஒரு சீதளமான இடத் திற்கு இளைப்பாறுவதற்குச் சென்றார். அந்தவிடம் பூத்த மாஞ் சோலையாக விருந்தது நிஜ பக்தனாகிற பரதன் தனது பட்டு வஸ்திரத்தை விரித்தான். அதன் மேல் என் பிரபு உட்கார்ந்து கொண்டார். சகல பிராதாக்களும் அவருக்குச் சேவை செய்ய ஆரம்பித்தார்கள். (303)

அந்த சமயம் ஸகல ஆஸ்ரிதர்களின் துக்கங்களைப் போக்கும் மாருத ஸுதனாகிற ஹனுமான்ஜி பிரபுவுக்கு விசிறி வீசி, இளம் காற்றை உண்டு பண்ணினார் அந்த மஹானுடைய விரிந்த புஷ்கராக்ஷங்களிலிருந்து, புளகாங்கித சரீரத்துடன் யிருந்த அந்த மஹாத்மாவினுடைய லோசனங்களிலிருந்து, ஆனந்த பாஷ்பங்கள், ஸ்வஅனுபவத்தால் யேற்பட்ட பிரேமாதிசயத்தினால் ஊறும் ஆனந்த பாஷ்பங்கள், உதிர ஆரம்பித்தன. ஹனுமானைப் போல மஹாபாக்யம் படைத்த மஹாத்மா எவரும் இருக்க முடியாது. அந்த மஹானுபாவனைப் போல சீதாராம சரணங் களில் அதிக ப்ரேமை ஈடுபாடு யாவருக்கும் இருக்க முடியாது; இருக்கப்போவது மில்லை. எக்காலத்திலும் இருக்கப் போவது மில்லை. சிவன் உமையிடம் சொல்லுகிறார். "கிரிஜா, ஹனுமான் ஜியைப் போல ப்ரீதி உள்ளவன், ராமபக்தி, ராம கைங்கர்யத்தில் ஈடுபாடு உடையவன் யாரும் இருக்க முடியாது. அடிக்கடி அடிக்கடி பிரபு அவருடைய நிஜதாஸ்ய பக்தியை ஸ்வயமாக ஸ்ரீமுகமாகப் பிரகடனப்படுத்தி அந்த ஹனுமான்ஜியை இன்

புறுத்தினர். ஹனுமான்ஜியோ பரம வைகாரி புருஷனைப்போல ராம கைங்கர்யம், ராம ப்ரீதி ஒன்றையே நினைத்து இன்புற்றார். (304)

[தியானம்

நாராயணா, பகவான் விஷ்ணுவே, மஹா ஸுதர்சனரே, நீர் தானே பகவானுடைய பரம் ஜ்யோதிஷ் என்று சொல்லப்படுகிறீர். நீர் தான் மனம், ஸங்கல்பம் யென்று சொல்லப்படுகிறீர். உம்முடைய பிரியத்தினால் அல்லவோ புத்தி பகவானுடைய பதாப்ஜங்களில் ஈடுபாட்டை அடைகிறது. உம்முடைய சக்தி தேஜஸ் வீர்யம் மிக்க மிக்க பிரபலமானது. தேவசத்ருக்களை அழிப்பதின் பொருட்டு பகவான் விஷ்ணுவினால் ஏவப்பட்ட ஸுதர்சனரே, ஸுநாபரே, நீர் தைத்ய, தானவ சைன்யங்களில் புகுந்து அவர்களின் சேனைகளையும் மதத்தையும் நாசம் செய்கிறீர். நீர் ஸாதுக்களை வாழச் செய்கிறீர். ஸாதுக்கள் வாழ்வதால் தர்மங்களும் வேதங்களும் நிரந்தரமாக வாழ்கின்றன. அதனால் பிராம்மணர்களும் வேதவித்துக்களும் காப்பாற்றப்பட்டு லோக கல்யாணார்த்தம் ஸர்வமங்களமாக விருக்கிறது. நாங்களும் உம்முடைய ப்ரீதியினால் ஸர்வ குணாஸ்ரயர்களாக விளங்குகிறோம். ஹே நாராயணா, வாஸுதேவரே, விஷ்ணோ, காருண்ய மூர்த்தி, என்னிடமும் என் குடும்பத்தினிடமும் ஸர்வகாருண்யத்துடனிருக்கவேண்டும். தயாபூர்ணமாக விருக்கவேண்டும்.]

அதுதான் நல்ல சமயம் என்று கருதி விஷ்ணு பக்தரான நாரதர் அவ்விடம் வந்து சேர்ந்தார். அவருடைய கரத்தில் வீணையிருந்தது. அந்த மஹானுபாவன் அதிமதுரமான குரலில் பாவராக தாளத்துடன் ராம கீர்த்திகளடங்கிய சீதாராம சரித்திரத்தை ஸுஸ்வரமாகப்பாடி ஆனந்தம் பண்ணிவித்தார். அவர் பாடும்பொழுது, அவருடைய ராஜீவ நயனங்களிலிருந்து அம்ருத பக்திதாரைகள் உதிர்ந்த வண்ணமிருந்தன. அந்த ப்ரேமா பக்தி ஆச்சர்யமாகவும் அற்புதமாகவுமிருந்தது. ஒவ்வொரு சமயத்திலும் அவருடைய அனுபவ ஆனந்தங்கள் புதிது புதிதாக விருந்தன. அவருடைய வார்த்தைகள் மஹா கிருதக்ஞையுடன் அவருடைய கண்டத்திலிருந்து வெளிவந்தன. (305)

## நாரத பகவானின் ஸ்துதி

(1)

மாமவலோக்ய பங்கஜ லோசன
க்ருபா விலோகனி ஸோச் விமோசன
நீலதாமரஸ ஸ்யாம காம அரி
ஹ்ருதய கஞ்ச மகரந்த மதுபஹரி

(2)

ஜாதுதான பருத் பல பஞ்ஜன
முனிஸஜ்ஜன ரஞ்ஜன அக கஞ்ஜன
பூஸுர ஸஸிநவ வ்ருந்த பலாஹக்
அஸரண் சரணதீன ஜனகாஹக.

(3)

புஜபல விபுல பாரமஹி கண்டித
கரதூஷண விராத வதபண்டித
ராவணரி சுகரூப பூபவர
ஜயதசரத குலகுமுத ஸுதாகர.

(4)

ஸுஜன புராண விதித நிக மாகம
காவத ஸுர முனி ஸந்த ஸமாகம
காருணிக வ்யலீக மத கண்டன
ஸப்விதி குஸல கோசல மண்டன.

(5)

கலிமல மதன நாம மமதாஹன
துளசிதாஸ ப்ரபு பாஹி ப்ரணத ஜன.

"ஹே பிரபு, பங்கஜலோசனு, என்னைப் பார்த்து அனுக்ரஹம் செய்யும். கிருபாதிருஷ்டியுடன் என்னை அனுக்ரஹம் செய்யும். ஸர்வ ஆபத்துக்களையும் விமோசனம் செய்யும் ஹரி பகவானே, என்னையும் உமது தாஸனுக ஸ்வீகரித்துக்கொண்டு, எனது பயங்களைப் போக்கி, என்னை அனுக்ரஹம் செய்ய வேண்டும். நீலோத்பலம் போன்ற ஸ்யாமசுந்தரா, காமத்தை வென்ற உமா மஹேஸ்வரர்களின் ஹ்ருதய பங்கஜத்தின் மகரந்த ரஸத்தைப் பருகும் மதுவண்டுபோல ஸதா ஆனந்தமடைந்திருக்கிறீர். அந்த ஆனந்த திருஷ்டியால் என்னையும் அனுக்ரஹிக்க வேண்டும். உமது கிருபாதிருஷ்டி என்மீது விழட்டும்." (306)

"உம்மால் ராக்ஷஸர்களின் பலம் அபஹரிக்கப்பட்டு, பூர்ண மாக அழிக்கப்பட்டது. நீர் ஸாது ஸஜ்ஜனங்களை பாதுகாக்கும் விஷயத்தில் மிக்க சிரத்தையுள்ளவராக விருக்கிறீர். அவர்களுடைய பாபங்களை நாசம் செய்வதிலும் மிக்க ஊக்கமுள்ள மனமுள்ளவராகவிருக்கிறீர். பூஸுரர்களான பிராம்மணர்கள் என்கிற வயல்களுக்குப் புதிய மேகவர்ஷத்தைப் பொழியும் ஸாது ஜனஸம்ரக்ஷகனுக விருக்கும் ரகுகுல ராமா, விப்ரபிரியா, விப்ரஸேவிதா, (விஸ்வாமித்திர வஸிஷ்ட தியாகராஜ வால்மீகி வ்யாஸாதிகளால் ஸேவிக்கப்பட்ட பிரமுகரே, ராஜரிஷியே, மார்க்கண்டேய அகஸ்திய அத்ரியாதிகளால் ஆராதிக்கப்படும் ரெங்கதாமரே, அசரண்ய சரணம் சரணம் மஹம் பிரபத்யே என்று ராமானுஜன் சொல்லியதுபோல,) நான் உம்மை அனன்யகதியாக சரணம் அடைந்துள்ளேன். நீர்தான் எனது ரக்ஷகர் என்று வரித்துவிட்டேன். உமது தயையின் ஒன்றினுலேயே நான் வாழ விரும்புகிறேன். தீனர்களை மித்ரனுகவும், ரக்ஷண பொறுப்பையும் வலுவிலேயே ஏற்றுக்கொள்ளும் தர்ம விக்ரஹவானே, மஹாத்மா, சரணுகதி அடைந்திருக்கும் என்னையும் ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும்." (307)

"தாங்கள் தங்களது புஜபலபராக்ரமத்தினுல் பிருதிவியின் பூபாரங்களை ஒழித்து, அதில் வர்ணுஸ்ரம தர்மங்களையும் உத்தம ஆசரணைகளையும் கற்பித்து, அதன்படி நடந்து ஸர்வ ஸ்ரேஷ்டமான புருஷோத்தம ராமனுக விளங்குகிறீர். யக்ஞேசரே, யக்ஞபதியே, யக்ஞரே, யக்ஞமே உம்மால் மிக்க யுத்த ஸாமர்த்தியமுள்ள கரன், தூஷணன், விராதன் ஆகிய அரக்கர்கள் அழிக்கப்பட்டனர். ராவண, கும்பகர்ண, இந்திரஜித் முதலியவர்களையும் அழித்து, பூதளத்திற்கும் சகல சராசரங்களுக்கும் சுகத்தை அளித்த அரச சிகாமணியே, பூபவரனே, தசரத குலமாகிற குமுத புஷ்பத்தை மலரவைக்கும் சதபிஷக் சந்திரனே, உமக்கு ஸதா மங்கள ஜயங்கள் யேற்படட்டும். ராமசுதாகரனே, அம்ருதரே, ஆனந்த ஸ்வரூபரே, பிரும்மாவானவர் ஸ்ருஷ்டி தொடக்கத்தின் சமயம் எவ்விதம் தங்களது அனுக்ரஹம் ஒன்றையே பிரார்த்தித்தாரோ, அதைப்போல கமலோத்பவ கமல நயனு, புஜகசயனு, ஸாக்ஷாத் நாராயணு, ரெங்கபிரபோ, உமது தயை ஒன்றுதான் எனக்கு வேண்டும்." (308)

"கௌஸ்துபமணி பூஷணு, ஸ்ரீவத்ஸ ஸ்ரீதராங்கா, ஸ்ரீபதே, உம்முடைய புகழும் திருமாமகளின் புகழும் அல்லவோ, வேதோப நிஷத்துக்களாலும், புராண இதிஹாஸங்களாலும்,

நிகம ஆகமங்களாலும் அளவற்ற வைபவத்துடன் கீர்த்தனம் செய்யப்படுகின்றன. ஹே லக்ஷ்மீபதே, சீதாநாயகா, தேவர்களும், முனீஸ்வரர்களும், சாதுஜனங்களும், அவைகளையே ஆதாரமாகக்கொண்டு, உங்களைக் கீர்த்தனம் செய்து புகழ்கிருர்கள். ஹரி பகவானே, உம்முடைய கருணை அபாரமானது. என் திருஷ்டி மார்க்கத்தைத் தாங்கள் அடைந்தீர்கள் என்பது எனது பரமபோக்யம், பரமபாக்யம். அநேக கல்யாண குணங்களையுடைய வைகுண்டபதி, பிரும்மா முதலானவர்களுக்கு ஸாமர்த்தியமான புத்தியை வரமாகக் கொடுத்த வெங்கடேச வரதா, என்னிடம் தாங்கள் கருணைகொண்டு ரக்ஷித்தருள வேண்டும். கோஸலாதீஸரே, என்னுடைய க்ஷேமங்களிலும் காருண்ய பாவத்துடன் கருத்துக்சொள்ளவேண்டும். என்னையும் ஸந்தோஷமடைந்த மனம் உள்ளவனுக ஆக்கவேண்டும் எனது தாபத்ரயங்களையும் பொய்யான மதங்களையும் அழித்து, உமது அனுக்ரஹத்தைப் பெறவேண்டியவனுக, தாங்கள் சிந்தனை செய்ய வேண்டும். அயோத்யாபுரி பூஷணு, (குருமருத்புராதீசா,) கருணை மிகுதியினுல் மிக்க சிவந்த பெரும் கண்களை உடைய மாதவா, ராஜீவாக்ஷா, தங்களுடைய கடைக்கண் வீக்ஷணங்களால் குளிர்ந்து கடாக்ஷித்து, சீக்கிரமாகவே எங்களைக் காப்பாற்றவேண்டும்.'' (309)

''ஹே ராமா, (சீதாராமா, ரகுராமா, ஆனந்த ராமா) தங்களுடைய திருநாமம் ஒன்றே கலிகாலத்தின் மலத்தைப் போக்கும் சஞ்சீவினியாகவும் கங்கையாகவு மிருக்கிறது. மமதைகளையும் ஸர்வ பாபங்களை எரிக்கும் ஸுதர்சன சக்ரமாக யிருக்கிறது.'' ''ஹே துளசிதாஸரைக் காப்பாற்றிய புண்ணிய ஸாகேத ராமா, நாரத பிரபோ, உம்மை சரணமடைந்திருக்கும் என்னையும் என் குடும்பத்தையும் ரக்ஷித்தருளவேண்டும். கருணை மிகுதியால் சீக்கிரமாகவே காப்பாற்றவேண்டும்.'' (310)

[தியானம்

பரம்புருஷா, ஸ்ரீமந் நாராயணு, ஜகத் த்ராணரே, அச்யுதரே நீரே ஜ்யோதிஷாம்பதி, நீரே ஆதிப்பிரான், நீரே பிரும்மாவையும் ஸ்ருஷ்டித்தீர். அதன் பிறகு பிரும்மா தங்கள் சரணங்களையே தியானிக்கும் ஸனகரையும், ஸநந்தனரையும், ஸனுதன முனியையும் ஸனத் குமாரரையும் ஸ்ருஷ்டித்தார். அதன் பிறகு அவர் ஏகாதசருத்ரர்களையும் ஸ்ருஷ்டித்தார். ருத்ரரால் ஸ்ருஷ்

டிக்கப்பட்ட பூதகணங்களின் பயத்தினால் "அவரை, பிரஜைகளை ஸ்ருஷ்டிக்க வேண்டாம், உலகத்தின் மங்களத்திற்காக தவத்தைப் புரிவாயாக" என்று பிரம்மா சொன்னார். அதன் பிறகு பிரும்மா சப்த ரிஷிகளையும் அவர்களுள் தங்கள் பாதங்களுக்கு அடிமை விரதம் பூண்டவரும், என் குருநாதரும், வியாஸ மித்ரரும், தியாகராஜ வால்மிகாதிகளால் மிக்க சிரத்தையுடன் ஆராதிக்கப்படுபவரும், துளசிதாஸருக்கு ஹிதம் செய்பவரும், பாகவத தர்மத்தை வளர்த்து, அக்ரகண்யராக விருக்கும் பகவான் நாரதரை பிரும்மதேவர் ஸ்ருஷ்டித்தார். இவ்விதம் சிறப்புள்ள குருநாதரை உடைய எனக்கு ஹே, குருவாயூர் அப்பா, தங்கள் கிருபையினாலும் பூர்வாசாரியர்களின் பிரஸாத அனுக்ரஹத்தாலும் மயக்கம், அஹங்காரம் மமகாரம், ஆசை, கோபம், பயம் ஆகிற அறிவு ஐந்து விதமான அக்ஞான விருத்தி யேற்பட வேண்டாம். நாரதபகவானால் சிக்ஷிக்கப்பெற்ற நான் அந்த அக்ஞானம் விலகுவதற்காக தங்களுடைய சரணங்களையே ஸதா ஸ்மரித்துக் கொண்டிருக்கிறேன். ஹே ராமா, தசரத புத்ரா, கௌஸல்யையின் ஸுப்ரஜரே, சீதா நாயகா, ஸௌசீல்யம் என்கிற கல்யாண குணத்தையே மூலவிரதமாகக் கொண்டிருக்கும் கோஸலாதிபா, ஸர்வஸத்வ குணாஸ்ரயா, ஸர்வபூதானும் பதி, உமது மகிமை கடல்போன்றது. உம்முடைய மனத்தின் சங்கல்பத்தால் இந்திரருத்ராதிகளும் வசிக்கும் லோகங்களும் முழ்கிவிடுகின்றன. இவ்விதம் பரத்வ மகிமை வாய்ந்த நாராயணா, நீ ஸௌசீல்யம் என்கிற கல்யாண குணத்தினால் வானரங்களையும் ஆதரித்து அன்பு காட்டினாய். தர்ம வத்ஸலா, என்னிடமும் அதே கருணையையும் காட்டவேண்டும். மனுசதரூபைக்கு அனுக்ரஹித்த மஹா புருஷா, மஹானுபாவாய மஹா விபூதபதயே நம:|

ஸ்ரீ நாரதபகவான் அதிபிரேமை வசம் அடைந்தவராக பகவானுடைய ஸௌசீல்ய, வாத்ஸல்ய, காருண்ய, மாதுர்ய, ஐஸ்வர்ய, ஸத்வகுணாதிசயங்களையும், அப்ராகிருதமான சேஷ்டிதங்களையும் மங்கள கீர்த்தனம் செய்து, பகவானுடைய ஸந்நிதானத்தில் ஸாக்ஷாத்தாகப் பாடி ஆடி மகிழ்ந்து, பரபிரும்ம சேஷ நாராயணனை திருப்தி செய்தார். மஹா பாக்கியவான். மஹா கிருதக்ஞர். (அந்த மஹாத்மாவிற்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் அடிக்கடி அடிக்கடி செய்கிறேன். அவருடைய உதார ஹ்ருதயத்தைப் புகழ்ந்து, புகழ்ந்து பாடி இன்புறுகிறேன். "ஹே நாரதபகவானே, உமது தயையினால்

எனது தமஸாதி குணங்கள் விலகி, என் மனது பிரகாசமடைய வேண்டும். ஸர்வ ஸுகந்தப் பிரியரே, என்னிடமும் தயை செய்யவேண்டும். நாரதருடைய பிரபுத்வத்தையும் அவரால் பிரஹ்லாத, துருவ, அம்பரீஷ மஹாத்மாக்களிடம் காட்டப்பட்ட உதார ஹ்ருதயத்தையும், வால்மீகி தியாகராஜாதிகளிடம் காட்டப் பட்ட கருணையையும், ஜகத்லக்ஷ்மியின் ஹிதத்தையும், ஸதா அவர் நினைப்பவரும் ஆகிய ஸகல குணோத்மங்கள் அந்த மஹாத் மாவிற்கு பரம சோபிதத்தை விளக்கி பிரகடனச் செய்கின்றன.) அப்பேற்பட்ட நாரதர் பரமசோபன மூர்த்தி, ஆனந்த கந்த ஸ்ரீ சீதாராம மூர்த்தியை, ஸமஸ்த பரிவாரங்களுடன் ராஜ கோலத்துடன் வீற்றிருக்கும் ராஜரிஷியான அயோத்தியா ராமச்சந்திர பத்ரமூர்த்தியின் பாத சரணங்களை ஹ்ருதயத்தில் தாரணை செய்துகொண்டு, திரிதாமரும், ஸரஸ்வதியின் புருஷரும், ஆதிஸ்ருஷ்டி கர்த்தாவும், அப்ஜஸம்பவருமான பிரும்மதேவரிடம் சென்றார். (311)

(உமையிடம் உபதேசபூர்வமாக உதார ஹ்ருதயத்துடனும் சொல்லி ஸ்ரீராமபிரும்மத்தை ஸதா அனுபவித்துக் கொண் டிருக்கும் மஹேசரை நான் வணங்குகிறேன். ஸர்வ புவனங் களின் மங்களத்திற்காக ஸதா தவவாழ்க்கையில் ஈடுபட்டவர் களும், விக்னேஸ்வரர், குஹன் முதலியோர்களுக்குப் பிதாவுமான பகவான் சம்பு உமாதேவி, என் குருநாதர்கள் மாதாபிதாக்கள், ஸர்வவிதபந்து மித்ரர்கள் மஹா காருண்ய உள்ளம்படைத்த ஆதி தம்பதிகள் நிஜசிவசக்தியின் ஐக்யஸ்வரூபம் கொண்ட உத்தம ஸ்ரேஷ்டர்களை, நான் அடிக்கடி அடிக்கடி சுக்ருத நமஸ்கார பிரதக்ஷிணைகள் செய்கிறேன்.) அப்பேற்பட்ட மஹேஸ்வரர், விருடிபிரியர், உமா காந்தர், அத்யாச்சர்ய புத்தி யுடன் பரம ப்ரீதிகொண்டவராக, உமையின் தலையில் பிரேமை அனுக்ரஹ உள்ளத்துடன், கரஸ்பரிசம் செய்துகொண்டு, உமை யைப் பார்த்து மீண்டும் அனுக்ரஹத்துடன் சொல்ல ஆரம் பித்தார். "கிரிஜா, நன்றாகக் கேள். இவ்விதமாக இந்த ராம சுதா ஆவிர்பவித்தது. என்னுடைய புத்தி பிரகாசத்திற்கு ஏற்ப நான் உனக்கு ராமசுதா, ஸ்ரீமத்ராமாயணமாகிற ஆதிகாவ் யத்தை முழுவதும் விஸ்தாரமாகச் சொல்லி, அனுகிரஹித்தேன். பரமேஸ்வரி, ஸர்வமங்கள கரேஸ்வரி, புவனமங்கள தாயகி, சிவே, ஸர்வார்த்த ஸாதிகே, திரியம்பிகே, மங்கள கௌரி, நாராயணி, இந்த அனந்தமான ராம சரிதம் அபாரமானதும் ஆழமுள்ள கடல் போன்றதும், அதன் மகிமைகளை பலகல்ப

காலம் கோடிக்கணக்கான சரஸ்வதிதேவியும், வேதரூபியாகிற வரும், ஆயிரம் நாவு படைத்துள்ள ஆதிசேஷனும், ஸ்ருதி களாலும் பாடப்பெற்றும் இந்த உத்தம சரிதமானது பூர்த்தி அடைகிறதில்லை.'' (312)

''என் பிரபு பகவான் ஸ்ரீராமன் அனந்தமான கல்யாண குணமகிமைகளை உடைய புருஷோத்தம புருஷன், ஸ்ரேஷ்டர். பாரபக்ஷமில்லாத ஸ்ரீயப்பதியான நாராயண மூர்த்தி. அவருடைய குணங்களுக்கு யேற்றபடி நாமாக்களும் அநேகம். அந்த நாமாக்களுக்கு ஏற்ப அவர் செய்த அவதாரங்களும் அநேகம். அவர் செய்த ஒவ்வொரு அவதாரத்திலும் அவரால் செய்யப்பட்ட சுபகர்மாக்கள் அநேக கோடிக் கணக்காக விருக்கின்றன. ஸர்வகர்மாக்களும் லோகத்திற்கு மங்களத்தை விளைவிப்பதாக விருக்கின்றன. மஹா ஜலங்களின் திவிலை களையும் எண்ணிவிடலாம்; ப்ருத்வியின் தூசிரஜஸ்களையும் நாம் எண்ணிவிடக்கூடும். பரமாத்ம புருஷோத்தம ராமனின், என் பிரபு துளசிதாஸரின் ரகுபதியின், சரித்திரத்தை முழுவதும் விஸ்தரிக்க முடிகிறதில்லை. பலகாலம் பல தடவைகள் செய்த போதிலும் அந்த உத்தம ராமசரிதமானஸத்தின் குணகீர்த்தி களைப் பூர்த்தியாகச் சொல்ல முடிகிறதில்லை.'' (313)

''விசுத்த ஆத்மாவுடன் கேட்கப்பட்ட ஹரிபகவானுடைய புண்யஸ்ரவண கதாம்ருதம் ஸ்ரீவைகுண்டத்தை அடைய விக்கிறது. ''ஹே உமா, அனபாயினி, மஹா நாராயண தத்வமே, இதை சிரத்தையுடன் கேள். நாராயண பக்தியை விளைவிக்கக் கூடியதாக விருக்கிறது. நான் இந்த உத்தம கதையை உனக்கு விளக்கிச் சொன்னேன். இந்த கதாம்ருதத் தையே காகபுசுண்டி கருடபகவானுக்குச் சொன்னார்.'' (காகபு சுண்டியையும் கருடபகவானையும் நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். இவர்களை எனது திருஷ்டி பதத்திற்குக் கொண்டுவந்த பகவான் துளசி தாஸரையும் நான் வினய பூர்வமாக ஸதாசார்ய சிஷ்யபாவத்துடன் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன்.) (314)

[தியானம்

நாராயணா, மஹா வராஹரே, கோவிந்தரே, ராஜகோபாலா, கோவிதாம்பதியே, பூமிநாயகா, சரணம் சரணம். ஹே பிரபோ, ஸனகாதிகளுக்கு தர்சனம் வரம் அளித்த புண்ய மூர்த்தியே,

உம்முடைய லோகத்தில் கோபம் கிடையாது. த்வேஷம் இல்லை. பாரபக்ஷமில்லை. உமது மனம் பிராம்மணர்களிடம் ஸதா அனுக்ரஹ உள்ளத்துடன் இருக்கின்றது. சீதா பிரபோ, மாருத ஸுதபிரபோ, தாங்கள் என் விஷயத்தில் கருணை காட்ட வேண்டும். ராஜஸேகரா, பூபவரனே, முனிமானஸார்ச்சித சரண, ராமய்யா, பங்கஜஸதன, சீதையிடம் காண்பிக்கப்பட்ட ஸரஸ விநோதா, உனக்கு என் சங்கடங்கள் தெரியாதா? ஹே உமா மஹேஸ்வர பிரியா, உன்னை ஸர்வாந்தர்யாமி யென்று பலபேர்கள் சொல்லுகிறார்கள். நீ வராஹ சர்மஸ்லோகத்திலும், கடற்கரையிலும், அர்ஜுனனுடையத் தேர்த்தட்டிலும், பிராட்டியிடமும் சொல்லியதும், அதைப் பிராட்டி பல தடவைகள் வெளிப்படுத்தியதும், எனது பூர்வாசார்யர்கள் பலதடவைகள் எனக்கு உபதேசித்த வார்த்தைகளையும் நான் நினைத்துப் பார்த்தது போல, நீயும் நினைத்துப் பார். ஸ்ருங்கார சேகரா, ஸுரவைரி ராஜபங்கா, ஸுஜன ஹ்ருத்குமுத பராஜா, மங்கள ஏகரூபா, ஜிதரதிராஜ, கங்காஜனகா, தியாகராஜ துளசிதாஸ பாலிதா, ஸ்வரக்ஷையை தியாஜ்யம் செய்து உன்னையும் பிராட்டி மூலமாகவும் பூர்வாசார்யர்கள் ஸந்நிதியில் சரணம் செய்திருக்கிறேன்'' என்று சொல்லி சரணமடைந்திருக்கும் என்னைக் கடாக்ஷிக்கமாட்டாயா? எவ்வளவு காலம் நான் பொறுத்திருக்கிறேன் என்று உமக்குத் தெரியாதா?]

''என் பிரியமுள்ள பவானி, என் பிரபு நாராயண ஆத்மகரான ஸ்ரீராமச்சந்திரனின் பரந்த கல்யாண குணங்களில் உனக்கு சிலவற்றை என்னால் முடிந்தவரை சொன்னேன் இன்னமும் நான் உனக்கு எதைச் சொல்லவேண்டும்? நீயே சொல்.'' என்று உபாய உபேய ராமநாமாவைப் பஜித்து ஸித்திசெய்த என் பிரபு கங்காதரனுகிற சம்பு பகவான், தீனர்களின் பரமமித்ரன், உமா ரமணன், பாகவத தர்மத்தின் பெருமைகளையும் அறிந்தவர், சக்தி தேவதையின் ஆத்மபிரியன், ஸுர அசுரன் என்று பாரபக்ஷம் பாராத கிருபாளு, சங்கரபகவான் சொன்னார். உமாதேவி ஸகல கதையையும் ஆனந்த அம்ருத பிரவாஹத்துடன் கேட்டு இன்புற்றாள். பரதேவதை (ஸுப்ரமண்யரின் மாதா, என் குல தைவம், குரு, ஸர்வவித பந்து, எனது ஐஸ்வர்யம், எனக்குக் கிடைத்த மஹா சுக்ருத பிராம்மண ஆசீர்வாதங்களின் மஹா பிரஸாதம்), சிரித்துக்கொண்டு கேட்டுக்கொண்டிருந்தாள். ஜகஜ் ஜனனி, பார்வதிதேவி மிக்க சிரத்தையுடன் வினயபூர்வமாக எல்லாவற்றையும் அதிக கவனத்துடன் கேட்டாள். அப்பொழுது

அந்த நாதரூபஸுந்தரி அதி வினயத்துடன் வசனங்களை பிரபுவினிடம் ஸமர்ப்பிக்கலானாள். (315)

"திரிபுராரி, நான் உம்மால் பரம ப்ரீதியினால் தன்யனாக்கப் பட்டேன். இன்றே உமது மஹா கிருபையாகிற மஹா பிரஸாதத்தை பரம தனமாக அடைந்திருக்கிறேன். என்னால் ஜன்ம ம்ருத்தியு பயங்களை ஒழிக்கக்கூடிய ஸ்ரீராம குணங்களை தங்களால் பரம உதாரமனத்துடன் உபதேச பூர்வமாக சிக்ஷிக்கப்பட மஹாபாக்யம் பெற்றேன்." (316)

"ஹே கிருபாதாம், கிருபா நிகேதன், உம்முடைய கிருபானுக்ரஹத்தால் நான் இன்று கிருதகிருத்யையாக ஆக்கப் பட்டேன். என்னுடைய மஹா மோஹங்களும் நாசம் அடைந்து விட்டன. பிரபு, பகவான், சீதாராமனுடைய அனந்தமான பிரதாபங்களை தங்களுடைய திருமுகமண்டலத்தால் அனுக்ரஹிக்கப் பாக்யம் பெற்றவளானேன். நான் தங்களுடைய பரமானுக்ரஹத்தால் ஸச்சிதானந்த ஸந்தோஹ ஆனந்த கந்தமூர்த்தியாகிற ஸ்ரீவைகுண்டபதியான ராமகிருபைக்கு பாத்திரமானேன்." (317)

"திரிபுவன நாதரே, மஹேஸ்வரரே திரிபுராரி, திரிபுராந்தகரே தங்களுடைய ஸ்ரீமுகத்திலிருந்து பிரவர்த்திக்கும் அம்ருதரஸ பானமாகிற ரகுவீரனுடைய கதாம்ருதத்தை, தங்களுடைய முகமண்டலமாகிற சந்திரனின் அம்ருத கிரணங்களைப் போல குளிர்ந்துவருவதும் ஸர்வ தாபங்களை சமனம் செய்யக்கூடியதுமான ஸ்ரீராம கதாம்ருதத்தை தங்களுடைய பிரும்மவாக்கினால் சொல்லக் கேட்டேன். ஹே மஹாபுத்திமானே, மதிதீரரே, உம்மைப்போல மஹா கஷ்டங்களிலும் மஹா ஆபத்துகளிலும் ராமவிஸ்வாஸம் என்கிற விரதம்பூண்டு, ராமனையே சரணமடைந்திருக்கும் மஹாபுண்யமான பிரபு யாரும் இருக்க முடியாது. என் மனம் தங்களுடைய வாக்குக்களை மீண்டும் மீண்டும் கேட்பதில் மிக்க ஆசையுடன் இருக்கிறது. எனது புண்ய ஸ்ரவணம் தங்களுடைய வசனங்களில் இன்னும் திருப்தியை அடையவில்லை." (318)

"பிரபோ, ராமசரித்திரம் பரமநிதியாகவும் அபாரமாகவும், மஹா விஸ்தீர்ணம் ஆழம், பரிமாணம் கொண்டதாகவிருக்கிறபடியால், காலவரை, தேசவரை, ஆகிய அளவுகளையும் தாண்டியபடியால், நான் அடிக்கடி அடிக்கடி உங்களிடமிருந்து கேட்பதாலும் என்மனம் திருப்தி அடையாது. அடையவே அடையாது. "ராமரஸம்" விசேஷமான ரஸாயனம். அதைக் குடிப்பவர்

கள் விசேஷமான லாபத்தை அடைகிறார்கள். மஹாமுனிவர்களான மார்க்கண்டேய நாரதாதி சுகபிரும்மாதி மஹரிஷிகளும் ஜீவன்முக்தர்களான பிரும்மரிஷிகளும் ஸப்தரிஷிகளும் இந்த உத்தம உத்தம கதாம்ருதத்தைக் கேட்டு ஹரிஸ்மரணம் செய்து கொண்டு, ஸதா ஹரிபகவானின் கல்யாண குணங்களைக் கேட்டும் பிறர்களுக்கும் சொல்லியும் நிரந்தரம் ஆனந்தத்தை அடைகிறார்கள்.'' (319)

''ராமகதையினால் க்ரூர கஷ்டங்களை உடைய இந்த பவ ஸாகரம் மிக சுலபமாகத் தாண்டப்படுகிறது. இந்த ஸம்சார தாபங்களுக்கு ராமகதை ஒரு பெரிய பலமுள்ள தோணியைப் போலவும், ஆபத்துக்களிலிருந்து விடுவிக்கும் ஆதி வராஹ மூர்த்தியைப் போலவுமிருக்கிறது. விஷயங்களின் போகங்களையே பெரிதாக நினைத்து வாழும் சாதாரண ஸம்சாரிகளுக்குக் கூட ஹரிபகவானின் கல்யாண குணோத்தமங்களைக் கொண்ட ஸ்ரீமத்ராமாயணம் கேட்பதற்கும் ஆனந்தத்தைக் கொடுத்து அவர்களுடைய மனதையும் உல்லாசப்படுத்துகிறது.'' (உமா, நீதான் எனக்கு மார்க்கதரிசி. மார்க்கபந்து. சிவஸந்நிதியில் உன்னை அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) (320)

[தியானம்

ராமா, சீதாநாயகா, ரகுவரனே, கதாபாணி, சக்ரதாரி, மதுரிபு, நீ எந்த மனோபாவத்தினால் ஹிரண்யாக்ஷனைக் கொன்றாய்? எந்த அவசரத்தில் உனது கைநுனிகள் அவனது காதுகளை ஸ்பர்சித்து அவனைக் கொல்வித்தாய் என்பதை மஹரிஷிகள் அல்லவா அதன் மர்மத்தை அறிகிறார்கள். பரத்துக்குப் பரம் என்று சொல்லக்கூடியவரும், ஸர்வகுணாஸ்ரயங்கள் கொண்ட தங்களுடைய சக்திதேவியாகிற மஹாலக்ஷ்மிக்கு நாதனாகவும், சாஸ்வதமான ஐஸ்வர்ய ஸம்பத்துக்களை உடைய தங்களுடைய பரத்வ ஐஸ்வர்யங்களை மஹரிஷிகள் அல்லவா அறிகிறார்கள். ஹே விஷ்ணு, உமது யோகமகிமையால் அல்லவா, பிருத்வியும், ஆகாயமும், சந்திர சூர்ய கிரஹங்களும், நக்ஷத்திரங்களும், வாயுதிசைகளும், மஹோததிகளும் ஸகல பிரபஞ்சங்களும் பிரும்ம, ருத்ராதி தேவர்களும் அவரவர்களின் ஸ்தானங்களில் நிரந்தரமாக நிறுவப்பட்டிருக்கிறார்கள். ஹே வாஸுதேவா, ஸுரேஸ்வரரே, வரதா, ஜகதீஸா, உம்முடைய பரரூபம் மஹத்தானது. சகலவிஸ்வமும் தங்களுடைய ஸ்தூல

ரூபமல்லவோ. ஹே யக்ஞ வராஹரே, காயத்ரீ தேவதை, தங்களுடைய ஸூக்ஷ்ம ஸ்வரூபம் ஸம்சாரமாகிற ப்ருத்வி மண்டலம் முழுவதும் வியாபித்திருக்கின்றது. அந்த ஸூக்ஷ்ம ரூபத்திலும் அதி ஸூக்ஷ்ம ஸ்வரூபம் பின்ன பின்ன ரூபத்துடன் ஸர்வ பூதங்களாகவும், சகல சேதனு சேதனங்களாகவும் அவைகளில் ஊடுருவிப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அகோசரமான அந்தராத்மாவாகவும், ஸர்வமும் சேர்ந்து தங்களுடைய பரமாத்ம ரூபமாகவும் விளங்குகிறது. ஹே மஹத் பூதரே, ஸர்வ பூதோத்பவரே, இவ்விதம் அசிந்தநீயமாகவும் அநிர்வசனீயமாகவும் பிரகாசிக்கும் தங்களுடைய விராட்ஸ்வரூபத்தை, பரத்துக்குப் பரமாகவிருக்கும் புருஷோத்தம ஸ்வரூபத்திற்கு நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். சங்கு சக்ர கதாப்ஜம் பிரஸூரஸூமுஸலம் சாப பாசாங்குச அஸ்திரங்களுடன் ரதாங்கபாணியாகவிருக்கும் உம்மை ஸகல புருஷர்களுக்கும் மிக்க ஸ்ரேஷ்டமானவராகவும் அகோசரமான ரூபமுள்ளவராகவும், வாணி மனஸ் முதலியவைகளுக்குப் பரமாக விருப்பவராகவும், ஞானுக்கினியாகிற உம்முடைய பராசக்தி ஒருவளால் மட்டும் முழுவதும் அடையாளங்களுடன் அறியப்பட்டவராக நான் அறிகிறேன். அப்பேற்பட்ட பராசக்தியுடன் கூடிய விஜய விபோ, யக்ஞவராஹா மாதவி, பரமபுருஷா, முனீந்தரர்களான நாரதவியாஸ சுகாதிகளாலும், என்குருநாதர்களான பராசரர் பிரஹ்லாத, தியாகராஜ, பூர்வாசார்யர்களால் காண்பிக்கப்பட்ட மார்க்கத்தில் வரும் என்னை, எங்களை உங்களது திருஷ்டி கோசரத்திலிருக்கும்படி அனுக்ரஹிக்கமாட்டீர்களா? உங்களது கருணை ஒன்றினுல் மட்டும் என்னுடைய அபராதங்களை க்ஷமிக்க முடியும். ஸகலகர்ம பலமாகவிருக்கும் நீங்கள் ஸம்ரக்ஷிக்காது போனுல், எனது மோஹங்களும் கிலேசதாபங்களும் எவ்விதம் சமனம் அடையும்? பிருத்விபாலா, மஹாகாயா, வாதாலயபதே, நீதான் எனக்குத் தஞ்சம்.]

"இந்த ஜகத்தில் தங்களுடைய பிரபுவான ரகுநாதனுடைய அளவற்ற குணகீர்த்திகளை ஸ்ரவணம் செய்யாதவன் எவன் இருக்கக்கூடும்? விசேஷமான மகிமைகளை உடைய ரகுபதியின் மஹோன்னத கீர்த்தி பிரபாவங்களை யாரால் உணராமலிருக்க முடியும்? எவன் ஒருவன் அவ்விதம் அந்த புண்யஸ்ரவண கீர்த்தி பிரபாவங்களைக் கேட்க மனமில்லாமலிருக்கிருனே, அவன் நிஜமாகவே ஆத்மாகள்ளனுகிருன். நன்றிக் கொன்றவனுகவும், மூர்க்கனுகவும் ஆகிவிடுகிருன். (பிரபோ, தங்களுடைய கிருபை

யும் அவனுக்குத்தான் ஏற்பட வேண்டும். அவனுடைய ஸகல மாயைகளையும் அக்ஞானங்களையும் மஹா மோஹங்களையும் ஒழிக்கவேண்டும். உமது அனுக்ரஹம் ஒன்றினுல்தான் அவன் க்ஷேமமடைய முடியும். திரிபுராரி, ஆசுதோஷி, மஹாகிருபாளு, ஈசரே, ஈசானரே, தங்களது கிருபை அந்த அபாக்யர்களுக்கு வேண்டும்.'') (321)

''ஹே நாதா, தாங்கள் கிருபை கூர்ந்து உலக க்ஷேமத்திற்காக, ஹரிபகவானுடைய சரித்திரத்தை உத்தமபக்தி பாவத்தினுல் மிக்க சிரத்தையுடனும் உதார ஹ்ருதயத்துடனும் வள்ளல் பெருமானுகத் தாங்கள் அளித்தீர். ஸ்வாமி, தீனபந்து, தங்கள் திருமுக மண்டலத்தினுல் அருள்கூர்ந்து, எனக்கு சொல்லக் கேட்டேன். நான்தான் மஹா பாக்யவதி. பரமேஸ்வரரே, தங்களுடைய பரமானுக்ரஹத்தால் அமிதசுக பலத்தை அடைந்தேன். தாங்கள் சொன்னீர்களே ஒரு வார்த்தை. இந்த கதையை காகபுசுண்டி கருடராஜனுக்கு உபதேசித்தருளினுர் என்று சொன்னீர்களே.'' (322)

''காக்கையின் சரீரத்தைக் கொண்ட காகபுசுண்டிக்கு வைராக்யம், ஞானம், விக்ஞானம் ஆகிய ஸத்மார்க்கங்களில்திருடமாகவும், பகவான் ரகுபதியிடம் அமித பக்தியும் எவ்விதம் ஏற்பட்டது? இதில் எனக்கு பரம ஸந்தேகம் இருந்து வருகிறது. அதையும் பிரபு, தாங்கள் கிருபை கூர்ந்து தெரிவிக்க வேண்டும்.'' (323)

''ஹே, திரிபுராரி, தங்களுக்குத் தெரியும். ஆயிரக்கணக்கான மனிதர்களில் ஒரு மனிதன் தர்மத்தில் சிரத்தையுள்ளவனுகப் பிறக்கிருன். அப்பேற்பட்ட கோடிக்கணக்கான தர்மசீலர்களுள் ஒரே ஒரு மனிதன் விஷயபோகங்களில் விமுகனுகவிருக்கிருன். அவன்தான் வைராக்ய உள்ளம் படைத்தவனுக விளங்குகிருன்.'' (324)

'' அப்பேற்பட்ட கோடி வைராக்யர்களில் ஒரே ஒருவன்தான் பகவானுடைய சேர்க்கை ஸம்பந்தமாகிற சரணுகதி சாஸ்திரம் எனப்படும் ஸம்யக்ஞானத்தை ஸத்ஸம்பிரதாயமாக குருமுகமாக அடைகிருன்,'' என்று வேதங்கள் கோஷிக்கின்றன. அப்பேற்பட்ட ஸம்யக்ஞானத்தை அடைந்த கோடி (வைஷ்ணவர்களில்) புருஷர்களில் ஒரே ஒருவன்தான் ஜீவன் முக்தனுகிருன்; ஸஹ்ருத் என்னும்படி ஸஹ்ருதய ஸ்நேக உள்ளம் படைத்தவனுகவிருக்

கிருன். அவனே இந்த உலகிலே மோக்ஷத்தை அடைந்த ஜீவன் முக்தனுகிருன்.'' (325)

''அப்பேற்பட்ட ஆயிரக்கணக்கான ஸஹ்ருதய ஜீவன் முக்தர்களில் ஸதா பகவதாஸ்ரயம், ஸதா பகவத் ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டு, மெய்சிலிர்த்து ராமநாமம் என்று சொன்னவுடனே ஆனந்த பாஷ்பங்களை உதிர்க்கிறவன் மஹானுபாவன் மிகமிக துர்லபம் அன்ருே? ஏனெனில் அவனே ராம பிரும்மத்திடம் ஸதாமனம் வாக்குகாயம் ஆகியவைகளில் லயித்து வினய பக்தி பூர்வமாக விளங்குகிருன். அப்பேற்பட்ட வினய ஸம்பத் உள்ள ''வைஷ்ணவ தர்மசீலன்,'' மஹா வைராக்யத்தைக் கொண்ட தர்மாத்மா, பகவானுடைய கைங்கர்யத்தை ஸ்வயம் பிரயோசனமாகச் செய்யவேண்டும் என்கிற பரமஞானி, ஜீவன் முக்தனுகவும் ஸதா ராமபிரும்ம பராயணமாக வாழும் உத்தமபக்த சீலனுகிருன்.'' (326)

''இவர்கள் அனைவர்களிலும், ஹே ஸுரராயா, தேவாதி தேவா, மஹாதேவா, ராமபக்தி என்கிற ராஜபாட்டையில் மஹா சுலபமாகச் சென்றுகொண்டு, ஹரிபக்தி, ஹரிஸ்மரணம், ஹரியின் பாதஸேவை இவைகளில் ருசியை வர்த்தித்துக்கொண்டு, ஹே விஸ்வநாதா, காசீசா, கங்காதரா, கபர்தின், ஜடாதாரி, எவ்விதம் நீசஜாதியில் பிறந்த ஒரு காக்கை, ஸகல மோகங்களையும் தியாஜ்யம் செய்துவிட்டு, மஹாபாக்யத்தை அடைந்தது? அதை தயவு செய்து விபரமாகச் சொல்லவேண்டும்.'' (327)

''உமாநாதா, பரம்நாதரே, கிருபாளு, தங்கள் ஒருவரையே நான் மிகச்சிறந்த ராம பக்தனுகக் கருதியிருந்தேன். தங்களைப் போலவே ராமஏக பராயணமாக வாழ்ந்துவரும் காகபுசுண்டி தங்களைப் போலவே ஸத்குணுஸ்ரயங்கள் கொண்டவராகவும், தீர மதியுள்ளவராகவும், தமஸாதி குணங்களாகிற, அறிவு மயக்கம் எனப்படும் அவித்யை, மமகாரம், அஹங்காரம், ஆசை, கோபம், பயம் ஆகிற அக்ஞான வியாபாரத்தை யில்லாதவராக அந்த மஹாத்மா எவ்விதம் வாயஸரூபத்தில் விளங்குகிருர்? அவரால் ஏன் இந்த காக்கையின் உருவம் அடையப்பெற்றது?'' (328)

''பரமபவித்திரமான இந்த சரித்திரத்தை தாங்கள் கிருபையுடன் சொல்லவேண்டும். மன்மதரை எரித்து காமத்தை வென்றவரே, மஹா கிருபாளு, இதை தாங்கள் விஸ்தரித்துச் சொல்லவேண்டும். இதை தங்களிடமிருந்து கேட்பதில் எனக்கு மிக

ஆசையும் ஆர்வமுமிருக்கிறது. கிருபை செய்யவேண்டும்.'' (329)

[தியானம்

நாராயணு, கபீராத்மா, சீதாராமா, வாயுபுத்திர மந்திரேசா, உன் தயை மிகமிகப் பெரியது. நாரதரை அக்ரகண்யராகவும், பிரஹ்லாத பராசர, தியாகராஜ துளசிதாஸ வந்திதா, யயாதி அஷ்டகன், சிபி, பிரவர்த்தனன் ஆகிய ராஜ ரிஷிகளைப்போல நீ வாழ்ந்து வந்தாயே. உன்னுடைய ''ராமமுனிபதம்'' எவ்வாறு ராமதாஸர்களால் அடையப்படுகிறது? அன்று விருத்திராஸுரன், மகவானுகிற இந்திரனுக்கு நாராயண கவசத்தை உபதேசிக்கும் போது, உனது நாராயண நாமத்தின் வீர்யங்களைப் பலவிதமாகப் புகழ்ந்தான். அதேமாதிரி, பிரஹ்லாதன் தனது தைத்யமித்ரர்களிடம் பேசும்போது, ''தர்மம், அர்த்தம், காமம் என்பவைகளை விட்டுவிட்டு, ''மோக்ஷம்'' என்கிற மஹா விருக்ஷத்தை ஆஸ்ரயிங்கள். இந்த ஸம்சாரம் அஸாரமானது. ஸர்வ ஜீவராசிகளிடமும் ஸமத்வம் எனப்படும் ஸர்வத்திர ஸமதிருஷ்டியைச் செய்து வாருங்கள். அதுவே அச்யுத பகவானுடைய ஆராதனம். பிரும்மஸ்வரூபமாகிற மஹாவிருக்ஷத்தை அண்டினுவிட்டு, நிச்சயமாக மஹத்பலம் உங்களுக்கு ஸம்பவிக்கும்,'' என்ருன். அதேமாதிரி, யயாதியினுல் காட்டப்பட்ட ஸத்யத்தின் பெருமையையும், சிபியினுல் நிரூபணம் செய்யப்பட்ட தானத்தின் பெருமையையும், ஸகல ஜீவராசிகளிடமும் காட்டப்படவேண்டிய தயை அனுக்ரோசமும், அதர்மத்தில் லஜ்ஜையும், பொறுமையையும், தைரியமும், பிராம்மண, பசு, வேதங்களில் அன்பு காட்டுதலும், தர்மத்தில் உறுதியான நம்பிக்கையையும் கர்மாக்களில் உத்ஸாஹமும் அல்லவோ, ஹே பிரபு, தங்களுடைய மன அடக்கத்திற்கும் இந்திரியங்களின் பிரகாசத்திற்கும் காரணமாக விருந்தன. ஹே விஸ்வ ரக்ஷகா, மஹா புருஷா, துருவனைப் போல தங்களுடைய பாத பத்மங்களை நம்பி வாழும் வைஷ்ணவ ராம தாஸர்கள், கிருஷ்ண தாஸர்கள் தங்கள் ப்ரீதியையே பரம புருஷார்த்தமாக நம்பி வாழ்கிருர்கள். ஒரு பசு தன் வத்ஸத்தினிடம் எவ்விதம் பாலைக் கொடுத்து, அதை ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றி, பரமானுகிரஹத்தைச் செய்கிறதோ, அதைப் போல அர்ஜுன பிரியா, என்னையும் ரக்ஷித்தருள மாட்டாயா ?]

மஹாதேவியாகிற ஹைமவதி, உமாதேவி திரிபுராரியைப்பார்த்து மீண்டும் அஞ்சலி செய்து கொண்டு சொன்னுள்,

"ஹே பிரபோ, மஹா (வைஷ்ணவ) ஞானத்தை உடையவரும், விஷ்ணு பகவானுடைய அந்தரங்க சேவகனும், ஸ்தோத்ரச் சந்தோமயமாக விருக்கும் கருட பகவான், மஹா விநய ஸம்பன்னன், பக்தர்களுக்கு ஸதா ஹிதம் செய்யும் மஹானுபாவன் பக்ஷிகளுக்குள் ஸாம்ராட்டாக விளங்குகிறனே. எப்பொழுதும் பரம ப்ரீதியுடன் அஞ்சலி பந்தத்துடன் பகவானுடைய ஆக்ஞையை ஸதா எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் மஹா மேதாவி, அறிவு மயக்கமில்லாதவனும் (வாலகில்யர்களின் ஜ்யோதி ஸ்வரூபம் கொண்ட மஹாத்மா, காஸ்யப புத்ரன்,) ஸதா பகவத் ஸாந்நித்யத்தை அடைந்த மஹா பாக்யவான், அப்பேற்பட்ட பக்ஷி மஹாராஜன், கருடன், பிரும்ம முனீஸ்வரர்களின் சேர்க்கை ஸம்பந்தத்தைத் துறந்து, ஒருகாக்கையினிடம் உபதேசம் பெற்றுக்கொண்டான்; (அதுவும் நாராயணரின் அம்சமான பகவான் விஷ்ணுவின் பெருமைகளைப் பற்றி, நைமி சாரண்ய வனத்தில் சஞ்சரிக்கும் மஹா பாகவத உத்தமர்களுக்கு அருளிச் சொல்லிய மஹானுபாவன்), அவன் ஒரு வாயஸத்தினிடம்அடக்க பூர்வமாக ராம கதையைப் பற்றி உபதேசமாகக் கேட்டிருக்கிருன் என்று தாங்கள் சொல்வது மஹா ஆச்சர்யமாக விருக்கிறதே. தயவு செய்து இதைப் பரி பூர்ணமாக விளக்க வேண்டும்." (330)

"இதைப் பற்றிய காகபுசுண்டி கருட ஸம்வாதங்கள் எந்த விதமாக யேற்பட்டன? அவர்கள் இருவர்களுடைய ஹரிபக்தியை முழுவதும் தாங்களே பூர்ணமாக அறிவீர்கள். என் மீது கிருபை கூர்ந்து அனுக்ரஹிக்க வேண்டும்." உமை நமஸ்கரித்து இந்த கேள்வியை பகவான் சம்புவினிடம் கேட்டாள். கௌரியின் ஸத்யமான வசனங்களை பிரபு சம்பு பகவான் கேட்டார். உண்மையாகவும், மஹா அறிவு வினய ஸம்பத்துடனும் சரளமாகவும் மதுரமாகவும், மிக்க மரியாதை பூர்ணமாக விருந்ததைப் பற்றி என் பிரபு சிந்தித்துக் கொண்டு, மீண்டும் உமையிடம் பெரிய தத்வத்தை விளக்குவதைப் போல ஸம்பாஷித்தார், (அப்பேற்பட்ட கருணாமூர்த்திகளான உமா மஹேஸ்வரர்களை, காகபுசுண்டி கருடனை முன்னிட்டு நான் ஆயிரம் நமஸ்காரங்களைச் செய்கிறேன்.) (331)

"ஹே ஸதிதேவியே, நிஜமாகவே நீ தன்யை. மஹா பாக்யம் உள்ளவள். உன் புத்தியும் அத்யந்த பவித்திரமாகவும் களங்கமில்லாததாகவுமிருக்கிறது. உனக்கு ரகுபதியின் பாத சரணங்களில் அதிக ப்ரீதி யேற்பட்டிருக்கிறது. ரகுபதியின்

சரித்திரத்தைப் போன்ற பவித்திரமான இன்னொரு பரம பாவன மான சரித்திரத்தையும் கேள். அதைக் கேட்பதால் உனக்கு பிரேமை, அறிவு மயக்கம் ஆகியவை மறைந்து விடும். ஸம் சாரத்தின் மஹா க்லேசங்களும் மறைந்து போய்விடும்.'' (332)

''அது மாத்திரமல்ல. பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய பாத சரணங்களில் உனக்கு அனன்ய பக்தி ப்ரேமை யேற்படும். அந்த மஹா விஸ்வாஸம் ஏற்பட்டால் அன்றி மனிதர்கள் பவ ஸாகரத்தை பிரயாசையின்றி சுலபமாகத் தாண்டிவிட முடியாது.'' (333)

''நீ சொல்லியபடி மஹா புத்திமானான கருடன், தான் பக்ஷி ராஜா வென்று பாராமல், மஹா வினய நம்ரதிகளுடன் ஒரு சமயம் காகபுசுண்டியை அண்டி இவ்விதமாக பிரஸ்னம் ரூப மாக கேள்விசெய்தான். உமாதேவி, தன் மனத்தை ஒருமைப் படுத்திக்கொண்டு, மிக்க மரியாதை பூர்ணமாக இவ்விதம் கேட் டாள்.'' (334)

''பிரியமுள்ள ஸுமுகி, ஸுலோசனி, உனக்குச் சொன்ன இந்த ராம கதையிருக்கிறதே, பவமோசனி, ஸகல சம்சார தாபங்களை அடக்கும் சக்தியுள்ளது. அப்பேற்பட்ட உத்தம பிரஸங்கத்தை நான் எவ்விதம் எந்த சந்தர்ப்பத்தில் கேட்டேன், என்பதை முதலில் நான் சொல்லுகிறேன். முந்திய பிறப்பில் நீ தக்ஷகுமாரியாகப் பிறந்து, உனக்கு ஸதீ என்கிற நாமதேயம் யேற்பட்டிருந்தது என்பது உனக்கு ஞாபக மிருக்கலாம்.'' (335)

''உனக்கு உன் பிதாவான தக்ஷனால் அவமானம் நேர்ந்த பொழுது, அதைப் பொறுக்க மாட்டாமல் நீ பிராணனைத் தியாகம் செய்து விட்டாய். அப்பொழுது உனக்கு அத்யந்த க்ரோதம் யேற்பட்டிருக்கிறது. அதன் விளைவாக என்னுடைய பரிவாரங்கள் தக்ஷனுடைய யக்ஞத்தை நாசம் செய்தனர். அதன் கதையின் விபரங்கள் முழுவதும் உனக்குத் தெரிந் திருக்கும்.'' (336)

''அப்பொழுது என் மனத்திலுள்ள வருத்தம் தாங்க முடியாமலிருந்தது. பயமும் ஏற்பட்டு நான் மஹா வருத்தத்தில் மூழ்கித் தவித்துக் கொண்டிருந்தேன். என் பிரியே, உன்னை விட்டு தேகம் மனத்தினால் கூட அரைக்ஷணமும் பிரியாது வாழ்ந்து வந்த எனக்கு மஹாதுக்கம் யேற்பட்டு, உனது வியோகத்தினால், என் பிரிய உமா, மனம் கலங்கினேன். தீனனாக ஆனேன். திசைகள் முதற் கொண்டு அறிய முடியாத

படி அறிவு இழந்தேன். கோரமான விரஹ தாபத்தில் தவிக்கிற வனாக நான் மதியிழந்தவனாக காடு வனாந்திரம், மலைகுகை பிரதேசங்கள், நதி தீரங்கள், தடாகங்கள் பாத சாரியாக நடந்து கொண்டு, உன்னைப் பற்றியே சிந்தனை செய்து கொண்டு, புலம்பிச் சென்று கொண்டிருந்தேன்.'' (''ஹே சங்கரபகவானே, ஸ்ரீ ராமனைப் போல நீர் உமா அன்வேஷணாகச் சென்றீரே. நீரே மஹாபாக்யசாலி. உம்முடைய பக்தி பிரேமையும், உமையிடம் கொண்டிருக்கும் காதலும், ஏகாந்த பக்தியும் வியக்கத்தக்கது. கங்காதரரே, உம்முடைய பரிசுத்த உள்ளத்தை நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன் '') (337)

'' அவ்விதம் சென்று கொண்டிருக்கும் போது நான் உத்தர மேருவுக்கு வந்து சேர்ந்தேன். அந்த ஸுமேருவிற்கு வடக்கில் கொஞ்ச தூரம் சென்றேன். அங்கே நீல நிறமுள்ள நீலபர்வதம் ஒன்றிருந்தது. வெகு தூரத்திலிருந்து பார்ப்பதற்கு வெகு நேர்த்தியாக விருந்தது. அதனுடைய சிகரம் ஸ்வர்ணமயமாக விருந்தது. பார்க்கப் பார்க்க மனோஹரமாக நான்கு சிகரங்கள் இருந்தன. அதை நோக்கிச் சென்று நான் அதன் அழகை அனுபவித்தேன். என் மனத்திற்கு ரொம்ப பிடித்தமாக விருந்தது, அந்தக் காக்ஷி.'' (338)

[தியானம்

நாராயணா, நாரத மார்க்கண்டேயாதிகள் சுகபிரும்மம் முதலியவர்கள் உனது பக்தியைத்தான் பெரிதாக விரும்பி னார்கள். அதற்குக் காரணம் அது உத்தராயண மார்க்கத்திற்குக் காரணமாகிறது. அந்த உத்தம பதாப்ஜங்களே அறிய வேண்டியது. அவைகளையே உபாய உபேயமாகக் கொண்டு வாழ்வதுதான் யோகம். அதுவே பரமார்த்திகமான பகவானிடம் ஜீவனாகிற புருஷனை அடைய விக்கிறது. அந்த ஜீவனும் மாயையினால் விடப்பட்டு, இருபத்து நான்கு தத்வங்களாகிற மூலபிரக்ருதி, மஹத் தத்வம், அஹங்காரம், ஐந்துதன் மாத்திரைகள், ஐந்து மஹாபூதங்கள், மனது, பத்து இந்திரியங் களுடன் பிரிவு கொண்ட பிரக்ருதி ஸம்பந்தத்திலிருந்து பற்றுதலை அடையாதவனாக, நிஜ தத்வ ஞானம் என்பதால் ஸித்தியை அடையச் செய்கிறது. கருடாரூடா, காலமூர்த்தி, மஹா உரகன் மீது சயனித்திருக்கும் ஸ்ரீ ரங்கபதே, தேவ ஹூதிக்கும், கௌஸல்யை, தேவகி, யசோதை அதிதி போன்ற மஹா பாக்யமடைந்த ஸ்திரிகளுக்கும் மோக்ஷ ஞானத்தை உப

தேசித்த பரமாத்மா, என்னிடமும் கருணை கொண்டு, எனது பக்தியை தங்களிடமும் வளர்க்கும்படி செய்ய வேண்டும். பக்தி யோகம் நிஷ்காமமாகச் செய்யப்படுவதால், கங்கை நதியைப் போல சித்த விருத்தியை பிரவாஹம் போல பெருகச் செய்து, ஸம்சார தாபங்களை நாசமடையச் செய்கிறது. தமாலம் போன்ற காந்தியுள்ள சுபாங்கரே, வேத வியாஸ பகவானால், "த்யேயம் நாராயணம் ஸர்வதா" என்று சொல்லப்பட்ட வைகுண்டபதி, குருபவன புரேசா, நீர் தான் எனக்கு தஞ்சம். உமது பாதார விந்தங்களே எனக்கு ஸகலபய விநேத்ரி, ஸர்வ காமோப நேத்ரீ தாங்களே அவைகளை அருள் புரிய வேண்டும்.]

"அந்த நீலபர்வதத்தில் ஒவ்வொரு திசையிலும் அழகானதும் விசாலமானதுமான ஒரு பெரிய மரம் இருந்தது. அவை பீபல் மரம் (அரசமரம்) பதரி மரமும், (இலந்தை மரம்) ஆலமரமும், மாமரமும் ஆக நான்கு இருந்தன. அந்த பர்வதத்தின் மேல் அழகான ஒரு குளமிருந்தது. அந்த சோபன அடையாளங்களுடன் விளங்கும் இயற்கை அழகுகள் மனத்தைக் கவருகின்றதாக விருந்தன. பார்க்கப் பார்க்க நவயௌவன அழகுடன் அவைகள் பிரகாசித்தன." (339)

"அங்கே மஹர சீதளமானதும், அமலமானதும், சாப்பிடுவதற்கு மிக்க மதுரமாகவும் ஜலமிருந்தது. அங்கே பல வர்ணங்களுடன் பத்மங்கள் பூத்து நிரம்பிக் காணப்பட்டன. ஹம்ஸ கணங்கள் மதுரமான ஸ்வரங்களுடன் ஸம்பாஷித்துக் கொண்டும் அழகாய் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. அநேக அழகான வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டு ஆனந்தமாக சஞ்சரித்தன. (340)

"அங்கே அழகான பர்வதத்தின் மீது அந்த காகபுசுண்டி என்கிற வாயஸம் வசித்து வந்தது. அதன் ஆயுஸ் சிரஞ்சீவியாக, அது கல்பாந்தங்களில் கூட மரணமடையாதபடி, வாழ்ந்து வந்தது. அப்பேற்பட்ட மனோஹரமான இடத்தில் மாயையினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட மோஹமோ, குணதோஷங்களோ, காமாதி அவிவேகங்களோ, (341)

இன்னும் ஜகத்தில் காணப்படும் ஸமஸ்த பிராக்ருத்ய தோஷங்களும் காணப்படவில்லை. அந்த பர்வதத்தின் சமீபத்திற்கு வராதபடி அந்த இடம் சிறந்து விளங்கியது. அப்பேற்பட்ட இடத்தில் ஹரிபகவானைப் பூஜித்துக்கொண்டு அந்த

காக்கை வசித்து வந்தது. என் பிரிய உமாதேவி, மிக்க சிரத்தையுடனும் அனுராகத்துடனும் இதைக் கேள்.'' (342)

''அரசமரத்தின் கீழே அந்த காக்கை தியானம் செய்து கொண்டிருந்தது. ஆலமரத்தின் கீழ் அது ஜபயக்ஞம் செய்தது. மாமரத்தின் கீழ் மானஸ பூஜையாகிற ஹரி ஸ்மரணை செய்தது. அந்த மஹாத்மாவாகிற காக்கைக்கு ஹரி பஜனையைத் தவிர வேறு ஒரு காரியமும் இல்லை''. (343)

''அது ஆலமரத்தின் கீழ் ஹரி கதை விசேஷங்களைப் பிரஸங்கம் செய்து கொண்டிருந்தது. அப்போது அநேகம் பக்ஷிகள் இந்த கதை பிரவசனங்களைக் கேட்பதற்கு வருவதுண்டு. அப்பொழுது அந்த மஹா பாக்யமுள்ள காக்கை ராம சரித மானஸம் என்கிற கதாம்ருதத்தை வெகு மரியாதை சிரத்தையுடன், பிரேமை பூர்வமாகச் சொல்லித் தானும் ஆனந்தித்துக்கொண்டு மற்றவர்களையும் ஆனந்தப்படுத்தியது.'' (344)

''அந்த விடத்திலிருந்த குளத்தில் உள்ள ஹம்ஸங்கள் நிர்மலமான மனத்துடனும், அதிதீக்ஷ்ணய புத்தியுடன் நிரந்தரம் அந்த கதாம்ருதங்களைப் பருகி இன்பமடைந்தன. நானும் அந்த விடத்திற்குச் சென்று பார்த்தேன். அங்கு போனதும் என்னையுமறியாமல் என் மனத்திலும் விசேஷமான ஆனந்தம் பொங்கி வழிந்தது''. (345)

''நானும் ஒரு ஹம்ஸத்தின் உருவத்தைத் தரித்துக் கொண்டு, அந்த விடத்தில் ஹம்ஸங்களுடன் வசித்துக்கொண்டு, அடிக்கடி அடிக்கடி ஸ்ரீ ரகுபதியின் கதாம்ருதங்களை சிரத்தையுடன் கேட்டு, அனுபவித்துக் கொண்டிருந்தேன். கொஞ்ச காலம் கழிந்த பின்பு, நான் கைலாஸத்திற்குச் சென்றேன்''. (346)

''கிரிஜா, இதுவரை உனக்கு எந்த சமயம், இந்த இதிஹாஸத்தை காகபுசுண்டி வசித்து வந்த இடத்திற்குச் சென்று கேட்டதைப் பற்றிச் சொன்னேன். இப்பொழுது என்ன காரணத்தினால் பக்ஷி குல ராஜனான கருட மஹாராஜன் அந்த காக்கையிடம் சென்றான், என்கிறதைப் பற்றிச் சொல்லுகிறேன். கவனமாகக் கேள்''. (347)

[தியானம்

ஹே கங்கே, திரிபதகா, சிவே, மஹா புண்யா, உன்னை அடைந்தால் அல்லவோ பகவானுடைய பாதங்களை அடைய

முடியும். ஹிமாத்ரி, சைலராஜதனயே, குஹமாதா, உனது மஹா கிருபையை அடைந்தல்லவோ நான் ஸாதுக்களின் பாத ரஜஸ்களையும், நாராயணரின் உத்தம பாதங்களையும் அடையமுடியும். என் குருநாதரான பீஷ்மரின் மாதாவே, வஸு பத்னியே, உனது கடைக்கண் திருஷ்டியினால் பித்ருக்கள் சாப விமோசனமடைகிறார்கள். தேவர்கள், பக்ஷி, மனுஷ்ய, யக்ஷ, ராக்ஷஸ, கின்னரர்கள், சகல சராசரங்களும் ஆனந்தமடைகிறார்கள். பாகீரதி, ருத்ரபிரியே, பரம பாகவதர்களின் சேர்க்கை ஸம்பந்தம் பெற்ற பாவன ஸலிலே, மஹா தீர்த்தமே, உனது நினைவினால் ஜபம், யக்ஞம், யோகம், தவம் எல்லாம் சித்தி அடைகிறது. திரிபுவனேஸ்வரி, திரிபதகா, ஜாஹ்னவி, ரமா, சரஸ்வதி, உமா ஸேவித மஹா தீர்த்தே, கோமுகி, உனது பெருமைகளை அறியவேண்டுமானால், ஜடாதரரான சம்பு பகவான்தான் சொல்லவேண்டும். ராமேஸ்வர கங்காதீர்த்தமே, ஸாகர பத்னியே, உனது பரத்வமும், சௌலப்யமும் மிக மிக அத்புதமானது. உனது திருவடி ஸம்பந்தமில்லாமல் அச்யுத பாதங்களை அடையவே முடியாது. நீதானே விஷ்ணுவின் பாதமாக விருக்கிறாய். நாராயண பாதத்திலிருந்து பிரவாஹம் செய்த மங்கள மூர்த்தி, உனது பாதை சிம்சுமார துருவ சக்கிரத்தின் வழியாக விருக்கிறது. ஹே ஸர்வகதே, சிவமூர்த்னி, ஹிமாத்ரி, உனது ஸ்பரிசம், தர்சனம், நாமதேயம் இஷ்டங்களைப் பூர்த்தி செய்கிறது. கங்கே, விப்ரகிருபா, ஸர்வ பூதப்ரதிஷ்டா, உனக்கு ஸர்வ திசைகளும் கதியாக விருக்கிறது. விஸ்வதோயமே, என்னிடம் ஸதா கிருபையுடன் இருக்கவேண்டும்.]

"ரகுநாதன் சீதாதேவிக்காக யுத்தம் செய்து கொண்டிருந்தார். அந்த லீலைகளையும், மஹா சரித்திரத்தையும் மனதில் ஸ்மரித்துக் கொண்டிருந்தேன். இந்திரஜித்துடன் யுத்தம் செய்து கொண்டிருக்கும் போது, பகவான் ஸ்ரீ ராமச்சந்திரன் தன் ஸ்வய இச்சையினால் நாகபாசத்தினால் கட்டுண்டப்பட்டார். அதை நினைப்பதற்கே லஜ்ஜையாக விருக்கிறது. ஸர்வ மாயன், கதமாயன், மாமாயன் ஸர்வ ஸ்வதந்தரரான பகவான் தனது பரத்வத்தை மறந்து எதற்காக இந்திரஜித்தின் நாகபாசத்திற்கு ஸ்வ சங்கல்பத்தினால் வசப்பட்டார் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தபோது, பகவான் நாரதர் கருடனிடம் வந்து அவனை யுத்தகளத்திற்கு அனுப்பி வைத்தார்". (348)

"உரகங்களின் பந்தங்களை கருட மஹாராஜன் அறுத்து எரிந்தான். பகவான் ஸ்ரீராமச்சந்திரனும், லக்ஷ்மணனும் நாக

பாசங்களிலிருந்து விடுபட்டனர். அப்பொழுது கருடனுக்கு விஷம் போல ஒரு சந்தேகம் எழுந்தது. அது அவனுடைய ஹ்ருதயத்தை வாட்டியது. ஸர்வ ஸ்ரேஷ்டனுன நம் பிரபு எவ்விதம் சர்ப்பங்களால் பீடிக்கப்பட்டார்? பலவிதமாக ஆராய்ந்து பார்த்து கருடன் (ரஜஸ்குணத்திஞல் யேவப்பட்டு, அதஞல்) அறிவு மயக்கம் அடைந்தான். இதை நினைத்துப் பார்க்கப் பார்க்க அவனுக்கு பெரிய விசாரம் ஏற்பட்டது. மஹா மோஹமும் ஏற்பட்டது.'' (349)

''எனக்கு சாக்ஷாத்தாக தன் விபவங்களைப் பற்றி ஸ்ரீ முக மாக உபதேசித்து அருளிய நாராயணர், என் பெருமாள், அநிர்வசனீயஞக விருக்கிருர். அவர் ஸர்வ வ்யாபகர். ஸத்யமானவரும், ஒருவித விகாரமற்ற பரபிரும்மமாக விருக் கிருர். மனம் வாக்குக்கு எட்டாத அகோசரமான மூர்த்தி. அப்பேற்பட்ட காலாதீமகஞகிற என் பிரபு அழிவில்லாத அவ்யயர், ஆதியும் அந்தமுமில்லாத பரமசிவமூர்த்தி. மாயை எவருக்கு அடங்கி, எவருடைய ஆக்ஞையை மிக்க சிரத்தை யுடன் நடத்துகிறதோ, அந்த பரம ஆதிப்பிரான் எவ்விதம் இம்மாதிரி அவஸ்தையில் ஈடுபட்டார்? அந்த மஹாத்மாதானே ஸ்வயமாக ''அவதாரம் செய்யப்போகிறேன்'' என்று பிரும்ம தேவரிடமும் பூமியிடமும் சொன்னுரே, அந்த மூர்த்தியா இவ்விதம் ஸர்வ சாதாரண மனிதனைப்போல நடிப்பார்? நான் இன்னும் அந்த மஹாத்மாவின் பிரபாவங்களை பூர்ணமாக உணரவில்லையே? என்ன செய்வேன்?'' (350)

''எந்த பரம்பொருளின் நாம உச்சாரணத்திஞல் மனிதர் கள் ''பவஸாகரம்'' என்று சொல்லப்படும் சம்சாரத்தைத் தாண்டுகிருர்களோ, அந்த பரமாத்மாவான ஸ்ரீராமனுக்கு இந்த நாக பாசங்கள் மிக மிக துச்சமானவைகளல்லவா? ஸம்சார பந்தங்கள் ஸ்ரீராமநாம உச்சரிப்பதிஞலே நசித்துப் போய்விடு கின்றன. அப்பேற்பட்ட அந்த மஹாத்மாவுக்கு இந்த ராக்ஷஸர் கள் சர்ப்ப பாசங்களை ஏவி பந்தனம் செய்திருப்பது மிக மிக ஆச்சரியமாகவிருக்கிறது''. (351)

இவ்விதம் கருடன் மதிமயங்கி தனக்குள் பலவிதமாக எண்ணத் தலைப்பட்டான். அவனுடைய பிரமை அதிகரிக்க, அதிகரிக்க மனம் இருண்டு போய், ஞானபிரகாசமடையவில்லை. ஆஞல் தனது சந்தேகத்தைப் போக்கிக்கொள்வதற்கு சந்தர்ப்பம் யேற்படாமல் அவன் மிகவும் சிரமப்பட்டான். நாளடைவில்

அவனுக்கு துக்கம் அதிகரித்தது. மோஹத்தினுல் பயபீதியை அடைந்தான். பகவானுடைய பாரிஷிதனுக விருந்தும், அவரைப் பற்றிய ஞானம் முழுவதும் தெரிந்திருந்தும், அவனுக்கு ஏற்பட்ட சந்தேகமும், தர்க்க புத்தியும் அதிகரிக்க அவன் மஹா மோஹத்தை அடைந்து, பரபிரும்மத்தை முன்போலஎங்கும் காணவில்லை''. (352)

" அது மாத்திரமா, உமா, பரம பாகவதனுன அந்த மஹாத்மாவான கருடன் தன்னையே நிந்தித்துக்கொண்டவனுகவும், அபாக்யவனுகவும், கருதிக்கொண்டு, பரம வியாகுலத்தை அடைந்திருந்தான். ஒரு நாள் அவனுடைய வருத்தம் எல்லை மீறிப் போய்விட்டது. அவனுக்கு என்ன செய்வது என்று தெரியாமல் நாரத ரிஷியிடம் சென்ருன். அந்த மஹாமுனியிடம் தனது சந்தேகத்தை தெரிவித்து, அவருடைய நற் ஆசியை வேண்டினுன் விஷ்ணு பக்தனுகிற கருடன். அதைக் கேட்ட நாரத முனிவருக்கு கருடனின்மீது இரக்கம் பிறந்தது. நாரதர் சொன்னுர். "கருடா, வருத்தப்படாதே. இது ராமச்சந்திர னுடைய பிரபலமான மாயை. அவருடைய ஸங்கல்பத்தால் இந்த ஸந்தேகமாகிற மாயை உனக்கு யேற்பட்டிருக்கிறது.''(353)

''கருடா, இப்பேற்பட்ட ஸந்தேகம், மஹாமோஹம் உனக்கு மாத்திரமில்லை. என்னைப் போன்ற ஞானிகளுக்கும், சித்தத் தடுமாற்றம் சிலசமயங்களில் ஏற்படுகிறது. இடைவிடாது யோக சக்தியினுல் தங்கள் மனதை ஸ்ரீராம பாதங்களில் ஏகமாத்திரமாக ஈடுபடச் செய்து வாழும் ஜீவன் முக்தர்களுக்குக்கூட இப்பேற் பட்ட மதிமயக்கம் ஏற்படுகிறது. அந்த பரமாத்மாவினுல் நானும் பல தடவைகள் உன்மாதிரி அவதிக்கு உட்படுத்தப்பட்டிருக் கிறேன். அந்த மாதிரி சமயங்களில் பரமாத்மாவின் தயை ஒன்று தான் நமக்கு வேண்டும். பக்ஷி ராஜனே, துக்கத்தை விட்டு, பகவானுடைய தயைக்குப் பாத்திரமாகி, எந்த மாயையினுல் நான் அவதிப்பட்டேனே, அதேமாதிரி நீயும் அதிலிருந்து விடு பட வேண்டும்.'' (354)

"கருடா, இப்பொழுது உன்னைப் பார்த்தால் மஹா மோஹத்தினுல் தாக்குண்டப்பட்டவனுக நீ அவதிப்பட்டுக் கொண்டு காணப்படுகிருய். இந்த மஹா மோஹத்தை அழிப்ப தற்கு நான் சக்தியற்றவனுக விருக்கிறேன். பக்ஷி ராஜா, நீ பிரம்ம லோகத்திற்குச் சென்று பிரும்மாவிடம் உனது கஷ்டங் களைச் சொல். அவர் உனக்கு வழி காட்டுவார். அதன்படி செய்'' என்ருர். (355)

[தியானம்

நாகணைமேல் பள்ளிக்கொண்ட நாராயணா, நரன் என்கிற பிரும்மாவை ஸதா பக்கத்தில் வைத்துக்கொண்டிருக்கும் பரமேசா, நரநாராயணர்களே, கிருஷ்ணார்ஜுனர்களே, உங்களை "சரணே சரண்" என்று ஏகசிந்தையாக எவ்விதம் குருகூர் சடகோபனும், உத்தானபாதனுடைய புத்ரனாகிற துருவனும் அடைந்தார்களோ, அதுமாதிரி நானும் வந்து அடைகிறேன். கருட வாஹனரே, கருடத்வஜரே, ஸர்வேஸ்வரராகிய உமக்கு மிகச் சிறப்பான அடையாளம் கருடத்வஜம் அல்லவா? என் செய்கைகள், சிந்தனைகள், ஹே விஷ்ணோ, ஸ்ரீயப்பதி, "எல்லாம் கைகொள் சக்கிரத்து என் கனிவாய் எம்பெருமனே, உனக்கல்லவோ," என்று கைகள்கூப்பிச் சொல்கிறேன். பரமபத நாதரே, உமது பாதங்களை அணைத்துத் தாங்கும் எனக்கு அறிவு மயக்கம் ஏற்படவேண்டாம். ஸத்வரஜஸ் தமஸாதி குணங்களால் பற்றப்படாத நிர்குணரே, வாஸுதேவமயமாக ஸர்வ உலகிலும் தாங்கள் காணப்படுகிறீர். நீர் எப்போதும் பதரி க்ஷேத்ரத்தில் உலகங்களின் நன்மைக்காக மேலான யோகத்தை தவம் என்கிற விரதம் பூண்டு நரோத்தமன் என்கிற நரனுடன் கைங்கர்யலக்ஷ்மி ஸாந்நித்யத்தில் ஸதா செய்துகொண்டிருக்கிறீர். அஷ்டாக்ஷரமே உருவாகக்கொண்ட பதரி நாராயணா, தங்களது இரண்டாவது ரூபமாகிற அந்ருத்த நாராயணன் ஸகல ஸ்தாவர ஜங்கமங்களான பொருள்கள் எல்லாவற்றையும் படைக்கிறார். ஸங்கர்ஷணன் என்கிற தங்களுடைய மூன்றுவது ரூபம் படைக்கப்பட்ட ஸ்தாவரங்கள், ஜங்கமங்களடங்கிய ஜகத்தை அழிக்கச் செய்கிறது. பிரபோ, நாரதபிரியரே, முனிமானஸரே, இந்த ரூபம் தமக்குத்தாமே ஆதாரமாகவும், மாயையினால் உலகத்தை மயக்கச் செய்து, அழிப்பதாகவுமிருக்கிறது. அச்யுதரே, கோவிந்தரே, பிரணதபால், தங்களுடைய நான்காவது ரூபம் உலகத்திற்கு விருத்தியைக் கொடுக்கும் பிரத்யும்ன மூர்த்தியாக விளங்குகிறது. ஸௌலப்யம், ஔதார்யம், தயை முதலிய குணங்களுடன் கூடிய காமரே, காமப்ரதரே, இந்த நான்கு உருவங்களுடன் அகோசரமாகவும் அந்தர்யாமியாகவும் ஸர்வ வ்யாபகமாகவும் இருக்கிறீர். நீரே ஸர்வ உலகங்களுக்கும், ஆதார பீஜமாகவும் சக்தியாகவுமிருக்கிறீர். நீரே அக்னி, நீரே வேதங்கள், நீரே ஞானம், நீரே ஆனந்தம். அறிவையே கண்ணாகக் கொண்டவர்கள் எப்போதும் மனத்தை உம்மிடமே அர்ப்பித்தவர்கள் உம்மை அறிகிறார்கள். நீரே காரணமாகவும் பரம

ஹேதுவாகவும் காரியமாகிற ஜகத்தாகவும் இருக்கிறீர். நீர் எல்லாப் பிராணிகளிடத்திலும் வசிக்கும் ஆத்மாவாகிற அந்தர்யாமி எனப்படும் வாஸுதேவ ஸ்வரூபம், நீரே புத்தியாகிற அநிருத்த ஸ்வரூபம், அகங்காரமாகிற ஸங்கர்ஷண வடிவமாகவும், மனமாகிற பிரத்யும்னராகவும் நீர் விளங்குகிறீர். நீரே ஆதியில் உண்டான பத்மமாகவும் அதில் உண்டாகிய பிரும்மாவாகவும் சிவனுகவும் சுப்பிரமணியராகவுமிருக்கிறீர். உம்முடைய நான்கு பாகங்களையும் நான்கு மூர்த்திகளையும் அடிக்கடி சரணமடைந்து நமஸ்கரிக்கிறேன். என்மீது தயை செய்யவேண்டும்.]

"நாரதருடைய வசனப்படி பக்ஷி ராஜனுன கருடன் ராமனின் குணபிரபாவங்களை கிர்த்தனம் செய்துகொண்டு பிரும்மாவினிடம் சென்ருன். ஹே உமா, ஹரி பகவானுடைய மாயாபலம் மிகப் பொல்லாதது. அதை அதிகிரமிப்பது மிக்க கடினம். நாரதரும் ஹரிபகவானுடைய குண பிரபாவங்களை கீர்த்தனம் செய்துகொண்டு அவருடைய மாயையின் விநோதங்களை சிந்தித்துக்கொண்டு சென்ருர்." (356)

"கருடனும் பிரும்மாவினிடம் சென்று தனது சந்தேகங்களை ஒன்று விடாமல் பிரும்மாவுக்குச் சொன்னுன். தன்னுடைய பயத்தையும் அவன் விளக்கிச் சொன்னுன். பிரும்மாவும் ரகுபதியின் மாயை விளையாட்டுக்களைப் புரிந்து கொள்பவராக தனது தலையை ஆட்டி, அவருடைய பிரதாபங்களை முழுவதும் அறியாதவராக யிருந்தபோதிலும் தன்னுடைய ப்ரேமை பக்தியை வளர்த்துக் கொண்டார்." (357)

பிரும்மாவும் மிக்க சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார். அவருக்கு விசாரம் ஏற்பட்டது. பகவான் விஷ்ணுவினுடைய மாயா விலாஸங்கள் கவிகளையும் வேத சாஸ்திரங்களில் தேர்ந்த மஹா பண்டிதர்களையும், தத்வங்களை அறிந்துகொண்ட ஞானிகளையும் ஆக்ரமித்துவிட்டிருக்கின்றன. அவர்களுக்கே அது புரியாதபடி ஆகிவிடுகிறது. பகவான் விஷ்ணுவின் மாயையின் பிரபாவங்கள் எல்லையில்லாதவை. நானும் பலதடவைகள் ஏமாந்து போயிருக்கிறேன்." (358)

"நானே இந்த சராசரங்களனைத்தையும் ஸ்ருஷ்டி செய்திருக்கிறேன். இவனே பக்ஷிகளுக்கு மாத்திரம் அரசன். ஆகையால் இவனும் விஷ்ணு பகவானுடைய மோஹத்திற்கு வசமாவதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. இவ்விதமாக பகவான் பிரும்மா தனக்குள் சிந்திப்பவராக கருடனை நோக்கிச் சொன்னுர்: "கருடா, பகவான் மஹேசருக்கு பிரபு ஸ்ரீராமனுடைய பிரபுத்வங்கள்

நன்ருகத் தெரியும். நீ அவஸ்யம் அவரிடம் சென்று, உனது சந்தேகங்களைத் தெரிவித்து, நிவர்த்தி செய்துகொள்.'' (359)

''வைநதேயரே, சங்கர பகவானிடம் செல். அவரை வேண்டிக்கொள். பிள்ளாய், கஸ்யபபுத்ரனே, வருத்தப்படாதே. உன்னுடைய ஸம்சயங்கள் நசித்துவிடும். பகவான் சங்கரர் கருணமூர்த்தி, உன்மீது அவருக்கு தயை ஏற்படும்,'' என்று சொல்லி ஆஸ்வாசப்படுத்திஞர். அதன்படி கருட பகவான் சங்கரரிடம் வந்து சேர்ந்தான்.'' (360)

''பரமக்லேசங்களை அனுபவிப்பதால் ஏற்படும் நிவிருத்தி ஆசையினுல் தூண்டப்பட்டு, எந்த விடத்தில் நமக்கு ஹரி பகவானின் உதவி கிடைக்கும் என்று ஏங்கிக்கொண்டு, பக்ஷி சமுதாயத்திற்கே அரச ஸாம்ராட்டாக விருக்கும் கருடன் மிக்க மரியாதையுடன் என்னிடம் வந்து எனது அணைப்பை நாடி வந்தான். அவன் வந்த சமயம் நான் குபேரனுடைய வீட்டை நோக்கிச் சென்றுகொண்டிருந்தேன். அப்போது நீ கைலாஸத்தில் பிறந்து விளையாடிக்கொண்டிருந்தாய்.'' (361)

''என்னை வந்து அடைந்த கருடன் எனது சரணங்களைப் பற்றிக் கொண்டான். உமா, மிக்க வினயபூர்வமாக அவன் தனது விருத்தாந்தங்களைக்கூறி, மீண்டும் என்னைப் பிரார்த்தித்தான். பவானி, அவனுடைய வினய நம்ரதைகள் அனன்ய கதித்வம் ஆகிய எல்லாவற்றையும் புரிந்துகொண்டேன். மிருதுவான வாணியினுல் என்னை ஸ்துதி செய்துகொண்டு தனது ஆத்ம கதையை முழுவதும் சொன்னுன். பத்ரே, பவானி, அவனுக்கு என்னிடம் எப்பொழுதும் பிரேமை உண்டு. இப்பொழுது எனது தயையும் அவன் ஸம்பாதித்து விட்டான். அவனிடம் தயாபூர்ணனுக நான் சொல்ல ஆரம்பித்தேன்,'' (362)

''கருடா, நீ என்னை நடுமார்க்கத்தில் சந்தித்திருக்கிருய். நான் உனது சந்தேகங்களை எவ்விதம் நாசம் செய்யக்கூடும்? இப்பேற்பட்ட மஹா சந்தேகங்கள் ஸாதுக்களின் ஸங்கத்தை அடைந்து பலகாலம் அவர்களுடன் வாழ்ந்து வந்தால்தான் நாசமடையும்.'' (363)

''அது மாத்திரமல்ல. புண்ய ஸ்ரவண கீர்த்தனம் என்று சொல்லப்படும் ஹரி பகவானின் புண்ய கீர்த்திகளை கானம் செய்யும் ஸாதுக்களை அண்டி, நீ கேட்க வேண்டும். பகவான் ராமச்சந்திரனுடைய அனந்தமான கீர்த்தி பிரபாவங்களை முனி ஜனங்கள் பலவிதமாகப் பாடி ஆனந்தித்திருக்கிருர்கள். எந்த மஹா பிரபுவுக்கு ஆதிமத்யம், அந்தம் இல்லையோ, எவர் சாஸ்

வதமோ, புராணரோ, அஜரோ, வைகுண்டபதியோ, அந்த பிரபு பகவான் ஸ்ரீராமச்சந்திரனுகவல்லவோ விருக்கிருர். அவருடைய பிரதிபாத்யமான குண கீர்த்திகளை ஸ்வரராக தாளத்துடன் பல மகான்கள், பலவிதங்களாகவும் (முக்கியமாக ஒன்பது வித ஸம்பந்தங்கள் கொண்டவர்களாக) பல தடவைகளில் கீர்த்தனம் செய்கிருர்கள்.'' (364)

"நான் உன்னை ஒரு இடத்திற்கு அனுப்புகிறேன். அங்கே பிரதி தினமும் பகவான் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய கதாம்ருதம் சொல்லப்படுகிறது. அந்த விடத்திற்குப் போய்ச் சென்று, ராம கதாம்ருதத்தை தினமும் பருகிவா. அதைக் கேட்க ஆரம்பித்தவுடன் உனது ஸகல சந்தேகங்களும் நாசமடையும். உனக்கு ஸ்ரீராமஸீதா சரணங்களில் அதிபவித்திரமான அனன்யார்ஹ சேஷத்வம் பூண்ட ஏகசித்த பக்தி ஏற்படும். சந்தேகமில்லை. கவலைப்படாதே.'' (365)

[தியானம்

நாராயணு, வாதகேஹ ஈசா, மதுரிபு. கங்கை போன்ற உனது திருவடித் தாமரைகளை ஆத்ம பாவத்தை அடைந்த ஸாதுக்களாகிற துளஸிதாஸ, தியாகராஜ, நாரத, வியாஸாதிகள் காகபுசுண்டி மஹேஸ்வரர் உமா முதலியவர்கள் ஸதா ஆஸ்ரயம் செய்து கொண்டு வாழ்ந்து வருகிருர்கள். அப்பேற்பட்ட ஸாதுக்களின் சேர்க்கையைப் பெற்ற மஹாபாக்யம், உள்ளவர்கள் பரிக்ஷித்து எவ்விதம் சுகப்பிரும்ம ரிஷியை ஆஸ்ரயித்து பிராம்மண சாபத்திலிருந்து விடுபட்டு, உத்தம கதியை அடைந்தானே, (அதைப்போல உத்தம சேர்க்கையை அடைந்த நானும்) (எனது) தாபங்களிலிருந்து விடுபடவேண்டும் என்று நினைத்து தங்களை சரண் அடைகிருர்கள். சுகர் எவ்விதம் யத்ருச்சையாக உனது மஹாகிருபையினுல் பரிக்ஷித்திற்குத் தோன்றினுரோ, அதைப் போல உனது கிருபையும் எனக்கும் தோன்ற வேண்டும். ரகுபதி, ஸாத்வ தாம்பதியே, புருஷன் என்று அறியக்கூடிய மஹா புருஷரே, உம்மை அடிக்கடி அடிக்கடி ஸத்பாவத்தினுல் நமஸ்கரிக்கும் என்னை அனுக்ரஹிக்க மாட்டீரா? எவ்வளவு காலம் நான் பொறுத்திருக்க வேண்டும்? உம்முடைய மாயைகளோ அனந்தம். பிருதுவே, நீர் யக்ஞம் செய்த போது, உம்மை விஷ்ணுவென்று தெரிந்து கொள்ளாமல் அந்த யக்ஞத்தைத் தடுத்த பொழுது, நீரே ஆவிர்பவிக்கவில்லையா? திரிதாமா, உம்மைக் கீர்த்தனம் செய்து கொண்டும், ஸ்மரணம் செய்து கொண்டும், உம்மை ஸதா பார்த்துக்

கொண்டும், உமக்கு நமஸ்காராதிகளை செய்து கொண்டும், உமது மஹாபுண்ய கீர்த்திகளை ஸ்ரவணம் செய்து கொண்டும், பிறர்களுக்குப் போதித்து ஆனந்தமடையும் மஹா ஸாதுக்கள் தங்கள் கலிகல்மஷங்களைப் போக்கிய வண்ணமிருக்கிறார்கள். அந்த ஸாதுக்களை ஆஸ்ரயம் செய்யும் மஹா பாக்கியர்கள் கங்கையைப் போலப் புனிதமாக்கப்படுகிறார்கள். ஹே பகவான், ஸ்ரீயப்பதி, யக்ஞபதி, ப்ரஜாபதி, லோகபதி, தராபதி, விஷ்ணு பகவானே, ஸதாம்பதி, என் விஷயத்தில் நீர் சந்தோஷ மடைய வேண்டும். ஸுபத்ரரே, ரிஷபரே, வேத வியாஸரே, வாஸு தேவரே, முகுந்தரே, வஸுதாதிபரே, என் விஷயத்தில் கிருபை செய்ய வேண்டும்.]

"ககேசா, கருடா, பக்ஷிபதி, விஷ்ணு பகவானின் பரம பிரியனே, நான் சொல்லித் தெரியவேண்டியது ஒன்றேதான். ஸாது ஸங்கமின்றியும், ஹரிகதை ஸ்ரவணமின்றியும். மஹா மோஹங்கள் நாசமடையா. அவைகள் நாசமடையாமல் பகவான் ஸ்ரீ ராமச்சந்திரனிடம் பக்தி அனுராகம் ஏற்படுகிற தில்லை. த்ருடமான பக்தி, ஸ்ரீராம சரணங்களில் ஈடுபாடு, ஸாதுக்களின் அனுக்ரஹத்தாலும் குருவின் உபதேசத்தாலும் அடையப்படுகிறது. அவைகளே மஹா மோஹங்களை நாசம் செய்கின்றன." (366)

"கருடா, சந்தோ மயமாக விருக்கும் பக்ஷி ராஜா, ராம பக்தி என்கிற மஹா ஸம்பத்தை அடைவதற்கு யோகம், தபம், மஹாஞானம், வைராக்யம் ஆகியவைகளும் உதவுகின்றன. ஸ்ரீ ரகுபதியின் பாத சரணங்களில் யேற்படும் அனுராகம் உத்தம பக்தியையே கவசமாகக் கொண்டிருக்கிறது. ஸுமேருவுக்கு வடக்கு திசையில் அழகான நீலகிரி என்று சொல்லப்படும் நீல பர்வதம் ஒன்று இருக்கிறது. அங்கே பரம சுசீல நடத்தையுள்ள காகபுசுண்டி என்கிற காக்கை வாழ்ந்து வருகிறது." (367)

"அந்த மஹா பாக்யவான் ராமபக்தி என்னும் மார்க்கத்தில் மஹா பிரவீணன், நிபுணத்வம் வாய்ந்தவன். அவன் மஹா ஞானி. ஸர்வ ஸத்வ குணங்கள் கொண்டவன் பல காலமாக வாழ்ந்து வருகிறான். அந்த புண்யாத்மாவுக்கு ராம கதையை ஸதா பிரவசனம் செய்வதே ஜீவனமாக விருக்கிறது. அந்த சமயம் பலவிதமான பக்ஷிகள் அநேக மரியாதை சிரத்தையுடன் அந்த ராம கதாம்ருதத்தைப் பருக ஓடி வருகின்றன." (368)

"நீ அங்கு சென்று மிக்க மரியாதையுடன் ஹரி பகவானின் கல்யாண குணங்கள் பூர்ணமாக நிறைந்துள்ள ராம கதாம்ரு

தத்தை ரிஷிகளுள் ரிஷபரான காகபுசுண்டியிடமிருந்து மிக்க வினய சிரத்தையுடன் கேட்டுவா. ஷோடச ஆத்மகனாக விருக்கும் பகவான் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய பரந்த கீர்த்திகள் அடங்கிய மஹா புருஷனுடைய கதாம்ருதத்தை தினமும் பருகிவா. (ஷோடச தத்வங்களாகிற மனம், ஐந்து ஞான இந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து பிராணன்கள், ஆகியவை) ஹே கபதி, நாளடைவில் உனது மஹா மோகங்களும் நாசமடையும். உனது ஸந்தாபங்களும் குறைந்து ஆனந்த பூர்ணனாக நீ விளங்குவாய். கவலைப் படாதே, '' என்று அவனைத் தேற்றினேன்.'' உமா, அவன் இந்த விதமாக காகபுசுண்டியிடம் போவதற்கு நான் காரணமாக விருந்தேன். அவனும் காக புசுண்டியின் பெருமைகளை எனது வாயினால் உணர்த்தப்பட்டு, என்னை அடிக்கடி அடிக்கடி சுக்ருத நமஸ்காரங்கள் செய்து விட்டு, மஹா சந்தோஷத்துடன் சென்றான்.'' (369)

'' என் பிரியமுள்ள உமா, என் பிரபு ரகுபதி, தரணிபதி மஹா கிருபா நிதி, விஷ்ணு பகவான், மஹா புண்ய ஸ்லோகன், அறிவினால் சரியாகப் புரிந்து கொள்ள முடியாதவன்; அவருடைய கிருபை யாருக்கு ஸித்திக்கின்றதோ, எவ்விதம் ஸித்திக்கின்றதோ, அதனுடைய மர்மத்தைத் தெரிந்து கொள்வதற்கு யாவராலும் முடியாது. அவரை அவருடைய கிருபை ஒன்றினால் தான் அடைய முடியும். ஸாதுக்கள், பாபிகள் என்கிற வித்தியாஸம் பாராட்டாத என் பிரபு, கலிகல்மஷங்களை நாசம் செய்யும் மஹா தீர்த்தர், பாரபக்ஷமின்றி ஸர்வ ஜனங்களையும், ஸர்வ சராசரங்களையும் காப்பாற்றும் உத்தம ஸ்லோகன். ஆகையினால் நானே அவனுக்கு உபதேசம் செய்யவில்லை. ரகுபதியின் கிருபையினால் அவனுடைய மன நோயின் மர்மத்தைப் புரிந்து கொண்டேன். ஸ்வஅபிமானத்தினால் கருடன் பகவான் ஸ்ரீ ராமனுக்கு ஏதாவது அபராதம் செய்திருக்கக் கூடும். கிருபா நிதியாகிற பகவானுக்கு தன் தாஸன் அவ்விதம் தோஷமடையக்கூடாது என்று நினைத்து, அவரே இவனுக்கு புத்தி புகட்டுவதற்கு இந்த மாதிரி நினைத்திருக்க வேண்டும். இவ்விதம் நான் புரிந்து கொள்ளுவதற்கு, அவரே எனக்குக் கிருபை செய்திருக்கிறார். கதாப்ருதரான வாஸுதேவருடைய கிருபை ஒன்றினால் தான் அவருடைய ஸங்கல்பங்களைப் புரிந்து கொண்டவனாக விருக்கிறேன்.'' (370)

'' கருடனுக்கு நானே நேரில் உபதேசம் செய்யாமலிருப்பதற்கு இன்னொரு காரணமும் இருக்கிறது. அதையும் தெரிந்து

கொள். ஒரு பக்ஷி மற்றொரு பக்ஷியினுல் தான் விஷயங்களை நன்ருகத் தெரிந்து கொள்ள முடியும். பவானி, என் பிரிய சகி, பிரபுவினுடைய மாயை மிக்க பலமுள்ளது. சகல சராசரங்களையும் ஸ்ருஷ்டித்த நாராயணரின் திவ்ய லீலைகளை அவருடைய ஸங்கல்பத்தாலன்றி எவ்விதம் தெரிந்து கொள்ள முடியும்? பெரிய ஞானியாக விருந்த போதிலும், அந்த மாயையிலிருந்து தப்பமுடியாது. அவருடைய கிருபா ஸங்கல்பம் ஒன்றினுல்தான் மஹா மோஹங்களிலிருந்து ஒருவன் விடுபடக்கூடும்." (371)

"மஹாபாகவத ஸ்ரேஷ்டன், வேதோமயன் சந்தோமயன் பரமவைஷ்ணவ ஞானி, பாகவதபிரியன், பரமவினய ஸம்பத் உள்ளவன், மஹாவிஷ்ணுவின் சிறந்த பக்தன், வைஷ்ணவ ஆசார்யர்களுள் சிரோண்மணியாக விளங்கும் உத்தம ஆசார்யன், நியம நிஷ்டைகள் உள்ள மஹா தபஸ்வி, திரிபுவன பதி பக்ஷிராஜன், ஸுபர்ணர், மஹேந்திர ஸமவிக்ரமன், விஷ்ணுவின் கொடியாகவும், வாகனமாகவுமிருப்பவன், உத்தம உத்தம புண்யசீலன், அவனே அந்த பரபிரும்ம நாராயணனுடைய மாயாலீலைகளைப் புரிந்துகொள்ள முடியாமல் தவிக்கும்போது, சர்வசாதாரண மானிடர்களைப் பற்றிச் சொல்லும்போது மிக்க அறிவின்மை, மூர்க்கத்தனம்தான். அவர்கள் எவ்விதம் ஸ்ரீராமச்சந்திரனுடைய லீலாவிநோதங்களை அறிந்துகொள்ள முடியும்?" (ஹே குருவாயூரப்பா, கருடனைப் போல மார்க்கண்டேய ரிஷியும் உமது கிருபைக்குப் பாத்திரமானுர். உம்முடைய மாயாஜாலங்கள் என்னையும் மோஹிக்கும்படி செய்கின்றன. உம்மையே நம்பி வாழும் என்னையும் உமது மாயைகளிலிருந்து விடுபடச் செய்யவேண்டும். கிருஷ்ணு, கோவிந்தா, கோபிஜனவல்லபா, பரமபுருஷா, பரமாத்மா, ஸம்ரக்ஷித்து, உமது பொருளாக ஆக்கிக்கொள்ள வேண்டும். ஓம்நமோ பகவதே மஹா ஸுதர்சனய தீப்த்ரே, ஸுநாபரே, ஸ்ரீகர்ப்பரே, நீர்தான் என்னை ரக்ஷிக்கவேண்டும். மாருதபுரீசா.) (372)

## மாஸ பாராயணம் 28ஆவது நிறுத்தம்

[தியானம்

நாராயணு, வாதாலபுரீசா, கேசவமூர்த்தியே, விஷ்ணு பகவானே சரணம் சரணம். ருத்திரபகவானுல் உபதேசிக்கப் பட்ட பிராசேதஸ் ஸ்ரீகோவிந்தனைப் பலவிதமாக ஆராதித்த போது தாங்கள் அஷ்ட புஜங்களுடன் சங்குசக்ர, கதாப்ஜம்,

சார்ங்கம் நந்தகி, முஸலம், கலப்பை முதலிய ஆயுதங்களோடு ஆவிர்பவித்தீர். அவர்கள் வரங்கள் ஒன்றும் வேண்டாமலிருக்க தாங்களே வலுவில் தங்களுடைய பதத்தை வரமாகத் தந்தீர்கள். வரதா, சாஸ்வதமான உங்களுடைய புகழ்கீர்த்திகள் வற்றப் படாத ஸாகரம்போல அல்லவாவிருக்கிறது. அப்பேற்பட்ட அசேஷஜகதః பரமம் பிரபுவான உம்மை பிராசேதஸ் வம்சத்தில் உதித்த வால்மீகிரிஷியை முன்னிட்டுக் கொண்டு, சரணமடைகிறேன். ஜகந்நாதரே, உம்முடைய ஜ்யோதி ஸ்வரூபம் அனுபமாகவும் அனந்தமாயிருக்கிறது. ஸமுத்திரத்தைப் போல அபாரமாகவும் காம்பீர்யமாகவும் பரந்தும் காலவரையில் கணக்கிட முடியாதபடி ஆனந்தமாகவிருக்கிறது. ஹே காலத்மன், நீர் பித்ருரூபமாகவும், தேவரூபமாகவும், அம்ருதத்தைப் பானம் செய்வதால் ஸோமாத்மன் என்று சொல்லப்படுகிறீர். ஆகாயத்தில் தீவிரமான தீக்ஷ்ண ஸ்வரூபத்தில் பிரகாசித்துக் கொண்டு, இருட்டுக்களை பக்ஷித்துக்கொண்டு, தர்ம மார்க்கமாக ஜலங்களை உறிஞ்சிக்கொண்டு, ஓஷதிகளாக வர்ஷிக்கும் ஸூர்யாத்மாவாகவும், தாராகணங்களுக்கு நடுநாயகமான பரம் ஜ்யோதி ஸ்வரூபமாகவிருக்கிறீர். ஹே ஜகத்பதி, சப்தாதிகளுக்குப் பரமாகவிருக்கும் நாராயணா, ராமசீதா, நீர் அக்னிரூபமாக ஸர்வ தேவபித்ரு கணங்களுக்கு ஆஹூதி செய்யப்படும் ஹவ்யகவ்யங்களைப் புஜிக்கும் பாவகமுகமாக ஸ்வாஹா ஸ்வதா என்கிற அக்னி ஸ்வரூபமான விஷ்ணுபகவானை நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பிரபோ, நீர் ஸர்வகதியுடன் வாயு ஆத்மாவாகவும், ஆகாசத்தில் ஸர்வசக்தியுடன் சஞ்சரிக்கிறீர். கிருஷ்ணா, ஹ்ருஷிகேசா, விஸ்வகோப்தா, நீரே பிருத்வி ஆகாசமாகவும், அந்தக்கரணத்தில் விஸ்வாத்மாவாகவும் இருக்கிறீர். நீர் பிரக்ருதியாகவிருந்தாலும், விசுத்த ஆத்மாவாகவும், முக்குணங்களால் பற்றப்படாத அகுணராகவுமிருக்கிறீர். ஆத்மரூபியாகவிருக்கும் தேவா, புருஷோத்தமா, நிரஞ்சன ராமசீதா, அகோசர மூர்த்திகளே, என்னுடைய பயங்களையும் பிராந்திகளையும், நித்ரை முதலிய தாமஸ ராஜஸ குணங்களையும் அஸம்பாவிதமான வியவஹாரங்களையும் நசிக்கும்படி செய்து, தங்களுடைய விஷ்ணுபதமாகிற பரமபதத்திற்கு அழைத்துச் செல்லவேண்டும். ஹே வாயுவாஹனரே, பரமேசரே, ஸர்வஸ்வரூபரே, நான் அனுதரவாகவிருக்கிறேன். நீரே என்னை தயையினால் ஸ்வீகரிக்க வேண்டும்.]

"பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய மாயை யாவரையும் மயக்க சக்தியுள்ளது. சிவன், பிரும்மா முதலியவர்களும் அதற்கு வசப்பட்டுப் போகிறார்கள். அவர்களே அவ்விதமாகும்போது, சாதாரண மனிதர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமா. அதனால் தான் மஹா வித்வான்களாகிற முனீந்திரர்கள் அம்மாயையிலிருந்து விடுபட, ஸதா விஷ்ணுபகவானாகிற கேசவமூர்த்தியினுடைய பதாப்ஜங்களைப் பஜித்துவருகிறார்கள்." (அப்பேற்பட்ட மஹாவிஷ்ணுவுக்கு வாதாலபுரீசருக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். ஜகந்நாதரே, சரணம்.) (373)

"கருடனும் காகபுசுண்டி இருந்த இடத்திற்குச் சென்றான். அங்கே ராமபக்தி பரிபூர்ணமாகவிருக்கும் காகபுசுண்டியைத் தர்சனம்செய்தான். அவர் வாழ்ந்துவந்த நீலபர்வதத்தைப் பார்த்து மனம் சந்தோஷம்கொண்டான். அவனுடைய மாயா மோஹங்களும் பயங்களும் கவலைகளும் நாசம் அடைந்தன. அவன் மிக்கபிரஸன்ன மனத்துடன் பிரகாசித்தான்." (374)

"தினமும் அந்த தடாகத்தில் ஸ்நானம் செய்வான். நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்வான். பிரஸன்ன ஹ்ருதயத்துடன் கருடன் அரசமரத்திற்குச் செல்வான். அங்கே மிகவும் வயது வாய்ந்த பக்ஷிகளும் வருவது வழக்கமாகவிருந்தது. காகபுசுண்டி ராமகதை சொல்வதைக் கேட்க ஆவலுடன் அவைகள் வந்தன." (375)

"ஒருநாள் எல்லா பக்ஷிகளும் வந்து சேர்ந்துவிட்டன. காகபுசுண்டி ராமகதையை ஆரம்பத்திலிருந்து சொல்லுவதற்கு முயற்சித்தார். அந்த ஆரம்ப வேளையில் பக்ஷிராஜனான கருடனும் அந்தவிடத்திற்கு வந்துசேர்ந்தான். பக்ஷி ஸமுதாயத்திற்கே சாம்ராஜ்ய சக்கரவர்த்தியாக விளங்கும் கருடனுடைய வரவை வாயஸக் கூட்டங்கள், இதர பக்ஷிக் கூட்டங்களைக் கொண்ட காகபுசுண்டியின் ஸமாஜம் மிக்க மரியாதையுடன் அவனை வரவேற்றன." (376)

"பக்ஷிராஜனான கருடனும் அவர்கள் எல்லோருக்கும் தனது வந்தனத்தையும் நமஸ்காரங்களையும் தெரிவித்தான். காகபுசுண்டியும் கருடனுடைய க்ஷேம விலாஸங்களை விசாரித்து, தனது வந்தனங்களையும் சொல்லி, கருடனுக்கு உத்தமமான ஆஸனத்தைக் கொடுத்து, நல்வரவு சொன்னார். காகபுசுண்டி மிக்கபரிவுடன் கருடனைப் புகழ்ந்து, மதுரமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார்." (377)

"ஹே நாதரே, ககராஜரே, பக்ஷிராஜரே, நான் தங்கள் வரவினுல் கிருதார்த்தனுக ஆக்கப்பட்டேன். தங்களுடைய தரிசனத்தினுல் மஹாபுண்யனுக ஆக்கப்பட்டேன். தாங்கள் என்னை என்ன செய்யச் சொல்வதாக ஆக்ஞையிடுகிறீர்களோ, அதை நான் உடனேயே செய்து முடிக்கிறவனுகவிருக்கிறேன். பிரபு, தாங்கள் என்ன காரியத்திற்காக இவ்விடம் எழுந்திருக்கிறீர்கள்? அதை முதலில் தாங்கள் சொல்லவேண்டும்," என்று வினயபூர்வமாகச் சொன்ன காகபுசுண்டியைப் பார்த்து, (378)

என் பிரபு ஸுபர்ணர், மஹாமேதாவி, வாயுவாஹனர், எம் பெருமானை தரிசிக்கும் தனது திருக்கரங்களை குவித்துக்கொண்டு, மனம் பூர்ணமான அன்புடன் பிரகாசிக்க, அதிகோமளமான வசனங்களைச் சொல்லலானுர். "பிரபு, தாங்கள்தானே கிருதார்த்த ரூபராகவும், க்ருதபுண்யராகவும் இருக்கிறீர். தங்களுடைய விமலகீர்த்திகள் எங்கும் பரவி, பிரபு உமா மஹேஸ்வரர்கள் ஸ்வயமாக தங்கள் ஸ்ரீமுகத்தினுல் தங்களைப் புகழும்படி நிஜ உத்தம ஸ்தானத்தை அடைந்திருக்கிறீர்கள். தங்களைப் பகவான் சம்பு ஸதா புகழ்ந்தவண்ணமாக விருக்கிருர்." (379)

"என் அருமை தந்தாய், தாங்கள் தயவுசெய்து கேட்க வேண்டும். நான் தங்களைத் தேடிவந்த காரணத்தை முதலில் சொல்லிவிடுகிறேன். நான் தங்களை தரிசிக்கவந்தேன். இந்த இடத்திற்கு வந்ததிலிருந்து என் மன அபிலாஷைகள் பூர்த்தி அடைந்துவிட்டன. தங்களுடைய உத்தமதர்சனம் எனக்குக் கிடைத்திருக்கிறது. தங்களுடைய பரமபாவனமான ஆஸ்ரமத்தை கண்டேன். என்னுடைய மோஹங்களும், ஸம்சயங்களும், அறிவு மயக்கம், ப்ரமை முதலிய யாவும் பறந்து ஓடிவிட்டன." (380)

"பிதாவே, தாங்கள் மனமுவந்து அத்யந்தபாவனமான ஸ்ரீராமச்சந்திரனுடைய கதையை ஆரம்பத்திலிருந்து எனக்குச் சொல்லவேண்டும்." ராமகதாம்ருதம் "எனக்கும் இங்குள்ள அனைவருக்கும் சுகத்தைத் தரக்கூடியதாக விருக்கிறது. எங்களுடைய துக்கக் கூட்டங்களை நாசம் செய்வதாகவுமிருக்கிறது. ஹே பிரபு, நான் அடிக்கடி அடிக்கடி தங்களை நமஸ்கரித்து பிரார்த்தித்துக் கொள்கிறேன்." (381)

"கருடனுடைய வசனங்கள் பரமவினயத்துடன் ஸமர்ப்பிக்கப்பட்டன. அந்த உத்தம வசனங்களை காகபுசுண்டி, யாவற்றையும் கேட்ட காகபுசுண்டி மனத்தில் சந்தோஷம் கொண்டார். கருடனுடைய வார்த்தைகள் களங்கமற்ற மனத்திலிருந்து வெளி

  

வந்தவை, ஸரளமானவை, அதிவினயத்துடன் ஸமர்ப்பிக்கப்பட்டவை என்று புரிந்துகொண்டார். கேட்பதற்கும் ஸ்மரிப்பதற்கும், வைஷ்ணவ தாஸ்ய பாவங்களைச் சொல்லும் அர்த்தபுஷ்டியுள்ள வசனங்கள். மஹாபுண்ய ஸம்பத்துகளை வாரி வழங்குவதாகவுமிருக்கும் உத்தம வசனங்கள். காகபுசுண்டியுடன் ஸகல பக்ஷி ஸமாஜமும் பக்ஷிராஜனின் வார்த்தைகளைக் கேட்டனர். அவைகள் தங்களுக்குள் எண்ணமிட்டன. "பக்ஷிராஜனான கருடனே பகவான் விஷ்ணுவின் அந்தரங்க பக்தன்." இதை நினைத்துப் பார்த்த காகபுசுண்டிக்கு உத்ஸாஹ ஆனந்தங்கள் பொங்க ஆரம்பித்தன. கருடனுடைய வரவை பிரபு ரகுபதியின் கிருபையென்று நினைப்பவாக, என் பிரபு ஆசார்யர், ஆத்மாராமன், ஸகலலோகாபிராமனுடைய அம்ருத ஸாகரம்போல பரந்து வீற்றிருக்கும் குணகீர்த்திகளை (தியாகராஜ, துளசிதாஸர்களைப்போல) பாவராக ஸ்வரலயத்துடன் ஸுஸ்வரமாக கீர்த்தனம் செய்ய ஆரம்பித்தார்." (382)

"பவானி, முதன் முதலில் அந்த மஹாத்மா ராமசரித மானஸ ஸரோவரின் ஸ்வரூபத்தை விஸ்தரிக்க ஆரம்பித்தார். அதன்பிறகு அவர் நாரத பகவானுடைய அபாரமான மோஹங்களைச் சொன்னார். அதன்பிறகு அவர் ராவண அவதாரத்தை விளக்கிச் சொன்னார்." (383)

மீண்டும் பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய அவதார ரஹஸ்யங்களையும், பல அவதாரங்களையும் விஸ்தரிக்க ஆரம்பித்தார். ஸ்ரீராமச்சந்திரனுடைய பால லீலைகளை ஒன்றுவிடாமல் சொல்ல ஆரம்பித்தார். "ஹே பாலராமா, உன்னுடைய சௌலப்யம் கடல்போல மிக்க ஆழமானது. (உன்னை தசரதர் கௌஸல்யை, காகபுசுண்டி, கருட மஹாராஜன், அயோத்தி ஜனங்கள், ராம பக்தர்களின் கோஷ்டி ஆகியவர்களை புறம்வைத்து நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன்). பாலராமா, நீதான் என்னையும் கிருதார்த்தனாக ஆக்கவேண்டும்." (384)

[தியானம்

நாராயணா, ஸ்ரீரிஷபரே, வாதாலய ஈசரே, வாதபுரீசா, வாதபுரீநாதா, குருவாயூரப்பா, உனது கிருபையின்றி எவ்விதம் அப்பா நான் த்வந்தங்களிலிருந்து விடுபட முடியும்? ஹம்ஸரே, ராஜபரம ஹம்ஸரே, காலரே, நீரே காலாத்மனாக ஸகலத்தையும் பக்ஷித்து மீண்டும் அவைகளை உற்பத்தி செய்கிறீர். ஸோம ஸூரிய அக்னி நேத்ரரே, நீரே அவ்யக்தமான ஸம்ஸ்தானமாகவும்

வ்யக்தமான விபுவாகவுமிருக்கிறீர். ப்ருத்வியாகவும் பரமாணு வாகவும் இருக்கும் பிரபோ, உம்முடைய மஹத்தான குணங்களை கீர்த்தனம் செய்யவே முடியாது. நீரே ருது, நீரே பக்ஷம், மாஸமும் ஸம்வத்ஸரமும் நீரே. ஸர்வதர்சனரே, த்வாதச ஆதித்யரே, ஹவ்யகவ்ய வாஹனரே, ஸர்வஜ்யோதி ஸ்வரூபமாகவிருப்பவரே, தாராபதியே, நீரே குணமயமாக விருக்கிறீர். கல்பமாகவும், யுகமாகவுமிருக்கும் காலபுருஷரே, மஹாயோகியே, விஸ்வ யோனியே, நீரே உஷக்காலமாகவும் ஸந்தியையாகவுமிருக்கிறீர். பிரும்மாவின் ஆயுட் காலமாகிற பரார்த்தமாகவுமிருக்கிறீர். நீரே கல்பமாகவும் இருக்கிறீர். ஸ்வேத வராஹ கல்பரே, யக்ஞவராஹரே, பரமாணுஸ்வ ரூபத்திலிருந்து இரண்டு பரார்த்த ஸ்வ ரூபங்களும் தங்களிடமே லயித்து இருப்பதால், நீரே காலத்திற்கும் ஈஸ்வரராகவிருக்கிறீர். ஸுதர்சனரே, ஸர்வத்ருக், ஸர்வ பிரபு, ஸர்வ காரண காரணரே, விஷ்ணோ, உம்முடைய பரம்தாம் எனப்படும் வைகுண்ட லோகத்தை அழிவற்றதாகவும், ஸநாதன மாகவும், நித்ய ஸ்ரீநித்ய மங்களங்களுடன் விளங்குவதாகவும் ஸதா நான் ஸ்மரிக்கிறேன். மஹாத்மா, மஹாபுருஷரே, உம்முடைய பரம்தாம் என்கிற அந்தரங்கதாம், ஸ்ரீயப்பதி நாராயண பாதங்களை நான் அடிக்கடி அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.]

பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய பால சரித்திரத்தை விதி பிரகாரம் முழு விபரங்களுடன் என்பிரபு காகபுசுண்டி கருட மஹாராஜனுக்கு அருளிச்செய்தார். பிரபுவின் பாலலீலைகளைச் சொல்லும் போது, (எவ்விதம் பரிக்ஷித்து சுகபிரும்ம பிரவசனத்தால், உத்ஸாஹமடைந்தாரோ, அதைப்போல) கருட மஹாராஜா கௌஸல்யா புத்ரனுகிற பகவான் ஸ்ரீராமனிடம் மிக்க மன ஈடுபாடு கொண்டவராக தமது அக்ஞானத்தை விலக்கிக்கொண்டு, பகவானுடைய கல்யாண குண விபவங்களை ரசித்துக்கொண்டு இன்புற்றார். இதுவரை காகபுசுண்டியை உபேக்ஷை செய்தது பற்றி பச்சாதாபப்பட்டார். அதன்பிறகு காகபுசுண்டி ரிஷி ரிஷபரான விஸ்வாமித்ரரின் விருத்தாந்தங்களைச் சொல்லி, அவருடைய அயோத்தி ஆகமனத்தையும், ராம லக்ஷ்மணர்களின் உதவியால் யாக ஸம்ரக்ஷணத்தைப் பற்றியும் விவரித்தார். கங்காவதாரத்திலிருந்து ஸ்ரீரகுவீரனுக்கும் சீதாதேவிக்கும் நடந்த திருக்கல்யாண உத்ஸவத்தை முழுவதும் சொன்னார். "ஹேசீதா ராமா, சூர்யகுலத்தில் அவதரித்து, ரிஷி விஸ்வாமித்ரரிடம் பிரியத்தைச் சொரிந்து, ஜனகரின் ஸுதாவாகிற ஜானகியை பக்தர்

களின் சுகத்திற்காக மணந்தாயே, உங்களுடைய பரம பவித்திர மானதும், உங்களுக்கு அழியாத கீர்த்திகளைத் தருவதும், எங்களுக்கு மங்களங்களைத் தருவதுமாகிற உம்முடைய திருக் கல்யாண உத்ஸவம் எங்களுடைய தியானத்தில் இருக்கக்கடவது; விஸ்வாமித்திரர், ஜனகர், வஸிஷ்டர், சதானந்தர் போன்ற மஹ ரிஷிகள் பரமபுருஷரான தங்களுடைய பாதாரவிந்தத்தை ஸதா ஸ்மரித்து இன்புறுவதற்கு தாங்களே காரணமானீர். தங்களுடைய கிருபையே அவர்களுக்குப் பரிபூர்ணமாகக் கிடைத்தது.'' (அப்பேற்பட்ட மஹா கிருபாளுவாகிற ராமசீதா தம்பதிகளை, ஆதி தம்பதிகளான லக்ஷ்மி நாராயணனை நான் உமா மஹேஸ் வரர்களை முன்னிட்டு, அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்). (385)

அதன்பிறகு, ராமர் அயோத்தி ஆகமனம் செய்ததும், அவ ருடைய ராஜ்யாபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் எடுத் துச் சொன்னார். அதன்பிறகு ராஜா தசரதருடைய ராஜ்யாபி ஷேக ஆசை பங்கம் ஆனது பற்றியும், சீதா ராம லக்ஷ்மணர் களின் விஸ்லேஷ துக்கங்களும், கோபத்தினால் யேற்பட்ட லக்ஷ் மண வசனங்களையும், அவைகளை அடக்கின ராம ஸம்வாதங் களையும் என் பிரபு காகபுசுண்டி எடுத்துச் சொன்னார். (386)

ஸ்ரீராமனுடைய வனம் செல்லுதல், குஹனுடைய நட்பு, கங்காநதி தீரத்தில் வாசம், பிரயாகைக்குச் சென்று அங்கு தங்கு தல், வால்மீகி மஹரிஷியைச் சந்தித்தல், அவருடைய ஆக்ஞை யின்படி பகவான் சீதை லக்ஷ்மணனுடன் சித்ரகூடத்திற்குச் சென்று அங்கு தங்கியிருத்தல் அடங்கிய விருத்தாந்தங்களைச் சொன்னார். (387)

மந்திரியாகிற சுமந்தரருடைய அயோத்தி திரும்புதல், ராஜா தசரதரின் மரணம், பரதன் மாமா வீட்டிலிருந்து அயோத்திக்குத் திரும்புதல், அவனுடைய பித்ருபக்தி முதலிய வற்றை வர்ணித்தார். தகப்பனாரின் கடைசி அந்திம கிரியை களைச் செய்த பின்பு, பரதன் அயோத்யாபுரிவாசிகளுடன் சுகங் களை வாரிக் கொடுக்கும் பகவான் ராமச்சந்திரன் இருக்கும் வாசஸ்தலமாகிற சித்ரகூடத்திற்கு வந்ததைப்பற்றி வர்ணித்தார். (388)

பித்ரு காரியங்களை முடித்தபின்பு ஸ்ரீரகுநாதன் பல தர்மங் களை பரதனுக்கு உபதேசித்து, பித்ருவாக்ய பரிபாலனம் யெனப் படும் தர்மத்தின் ஸ்ரேஷ்டத்தை மீண்டும் உபதேசித்தார். அதன் படி நடந்த பரதன் அயோத்திக்குத் திரும்பிப் போவதற்கு நிச்ச யித்தலும், ராம சீதா ஸங்கல்பத்தின்படி பாதுகைகளை அயோத்

திக்கு பரதன் எழுந்தருளிப்பண்ணச் செய்தலும், பாதுகா பட்டாபிஷேகத்தின் விருத்தாந்தங்களையும் சொன்னார். நந்தி கிராமத்தில் பரதனுடைய தவ வாழ்க்கையைப் பற்றியும் சத்ருக்னனுடைய ப்ராத்ரு பக்தியையும் பற்றி விஸ்தரித்துவிட்டு அதன்பிறகு பகவான் சீதாராம லக்ஷ்மணர்களின் அத்ரி அனுஸூயா ஆஸ்ரமத்திற்கு விஜயம்செய்ததைப் பற்றியும் விவரித்துச் சொன்னார். அனுஸூயா அத்ரி தம்பதிகளிடம் சீதா ராமன் காட்டிய பிரேமை விஸ்வாசத்தையும் விவரித்துச் சொன்னார். (389)

எவ்விதம் விராதவதம் ஏற்பட்டது? எவ்விதம் பிரபுவின் சாக்ஷாத்காரத்தின் முன்பு ஸரபங்க மஹரிஷி தனது தேகத்தை அக்னியில் தியாகம் செய்தார், ஆகிய விருத்தாந்தங்களைச் சொன்ன பின்பு, பிரபு அகஸ்திய சிஷ்யரான ஸூதீக்ஷ்ணரைக் கண்டதும், அவருடைய பக்திப் பிரேமையை சாக்ஷாத்தாகப் பார்த்து அங்கீகரித்து அனுக்ரஹித்ததையும், என் பிரபு காகபுசுண்டி மஹாராஜா கருடனுக்குச் சொன்னார். அதன் பிறகு உமா மஹேஸ்வரர்களை ஆராதிக்கும் லோபாமுத்ரையின் கணவரும் பிரும்மரிஷியுமான அகஸ்திய ஆஸ்ரமத்திற்கு ஆகமனம் செய்ததையும் எடுத்துச் சொன்னார். ("அத்ரி, அகஸ்திய, அனுஸூயா, லோபாமுத்ரார்ச்சித சீதாராம தம்பதிகளை, நான் கருடன், காகபுசுண்டியை முன்னிட்டு, "வைகுண்டபதி" என்று சொல்லி நமஸ்கரிக்கிறேன். கிருபாளு, நீங்கள்தான் எங்களையும் அனுக்ரஹிக்க வேண்டும்.) (390)

[தியானம்

ஹே ராமா, சீதா பிரபோ, குருகேஹநாதா, புவனநாதா, ஸிந்துசாயின், உன்னைக் கிம்புருஷம் என்கிற தீவீபத்தில் வாயு ஸூதனுகிற ஹனுமான்ஜி ஸதா பூஜித்து வருகிறாராமே. அப்பேற்பட்ட மஹானுபாவனுடைய ஸத்பக்தி, யாவரையும் மிஞ்சி நிற்கிறது. ஜிதக்ரோதரே, பிராம்மணப்ரியரே, ஸர்வ தீர்த்தமயமாக விருக்கும் ராஜரிஷியே, தர்மத்தில் விஸ்வாசம் வைத்து, உத்தம விதிகளுடன் ஸ்ரேஷ்டமான பொன், பூமி, கபிலைப்பசு, அன்னபானதிகள், வஸ்திரம், ஆபரணங்கள், அஸ்வகஜங்கள், ரதங்கள் முதலியவைகளைத் தானம் செய்து, தற்பெருமை செய்து கொள்ளாத ராஜரிஷியே, ஸத்யத்திலும், மன சுசியிலும், கர்ம சுசியிலும், தேக சுசியிலும் தேர்ச்சி பெற்ற மஹானுபாவரே, சீதாபிராட்டியின் நாயகா, உமது பெருமைகளை

நினைத்துப் பார்ப்பவனுக்கு யமலோகம், தோல்வி, அபஜயம், பாபங்கள், பயங்கள் ஒன்றும் ஏற்படுகிறதில்லை. சங்கர்ஷணரே, பதிதபாவனரே, நரஹரி, விஷ்ணோ, நான் ஓம் ஹரியே நமః என்று ஸதா தங்கள் பெயரையே உத்கோஷிக்கிறேன். நீர்தான் மஹா கிருபையுடன் என்னை ஸாதுக்களின் ஸமாஜத்தில் சேர்க்க வேண்டும். அகஸ்திய, லோபாமுத்ரார்ச்சித ராமசீதா லக்ஷ்மணா, என்னையும் உங்கள் பொருளாக ஆட்கொள்ள வேண்டும்.]

"அதன் பிறகு அகஸ்திய தம்பதிகளால் நன்கு உபசரிக்கப் பட்ட ராம சீதா தம்பதிகள், லக்ஷ்மணனுடன் தண்டக வனத் திற்குச் சென்றார்கள். அதன் பிறகு காகபுசுண்டி, ஜடாயு பக்ஷி ராஜனுடன் பிரபு ஸ்நேக ஸம்பந்தம் செய்து கொண்டதைச் சொன்னார். அதன் பிறகு பிரபு பஞ்சவடியில் எவ்விதம் வாசம் செய்தார் என்பதைச் சொன்னார். எவ்விதம் அந்த உத்தம வாஸத்தினால் யேற்பட்ட நன்மைகளை, ராக்ஷஸர்களால் யேற் பட்ட பயங்களைப் போக்கியதைப் பற்றியும் விஸ்தரித்துச் சொன்னார். ("ஸாது ஜன ஸம்ரக்ஷக ஜானகிராமா, லக்ஷ்மணா, என்னையும் நீங்கள்தான் ஆட்கொள்ள வேண்டும்".) (391)

"பஞ்ச வடி தீர்த்தத்தில் மஹா புனிதமான லக்ஷ்மண னுக்கு, பிரபு உத்தமமான உபதேச விருத்தாந்தத்தைச் செய்த தைபற்றிச் சொன்னார். அதன் பிறகு சூர்ப்பனகை என்கிற ராக்ஷஸியின் வருதலையும், அவளுடைய அங்கஹீனத்தையும் சொல்லிவிட்டு, அதனால் யேற்பட்ட கரதூஷணாதிகளின் வதத்தையும் பற்றிச் சொன்னார். அந்த சமாசாரத்தைக் கேட்ட ராவணனுக்கு கோபம் ஏற்பட்டதையும் பற்றி அவர் கருட னுக்குச் சொன்னார்". (392)

"ராவணனின் திட்டத்தின்படி மாரீசனிடம் சென்றதும், இரண்டு பேர்களின் ஸம்வாதங்களும், அதன் பிறகு அவர்களால் மாயை சீதை அபஹரிக்கப்பட்டதும், சீதையின் பிரிவினால் யேற் பட்ட ஸ்ரீ ரகுவீரனுடைய விரஹதாபங்கள் அடங்கிய விருத்தாந் தங்களையும் காகபுசுண்டி கருடனுக்குச் சொன்னார்.' (393)

"அதன் பிறகு பிரபு ஜடாயுவின் மரணஸ்திதியைக் கண்ட தும், அதனுடன் ஸம்பாஷித்ததும், அதற்கு வேண்டிய உத்தரக் கிரியைகளைச் செய்ததையும் பற்றி காகபுசுண்டி சொன்னார். அதன் பிறகு கபந்தனுடைய வதத்தையும், சபரியின் ஆஸ்ரமத் திற்குச் சென்றதையும், அவளால் நன்கு உபசரிக்கப்பட்டு, அவளுக்கு பிரபு உத்தம கதியைக் கொடுத்த விபரங்களையும் காகசுண்டி கருடனுக்குச் சொன்னார். அதன் பிறகு அவர்

லக்ஷ்மணனுடன் பம்பா தீரத்திற்கு வந்தது பற்றியும் சொன்னார்.'' (394)

[தியானம்

ஜகந்நாதரே, சீதாராமா, ஸத்ய பராக்ரமா, கிருஷ்ணு, நாராயணு, மஹாலக்ஷ்மி பிரபோ, உம்முடைய அவதாரத்தின் மகிமையினால், நாமமகிமை அல்லவோ எங்களுக்கு கிடைக்கிறது. உம்முடைய நாமஸ்மரணையினால் அஜாமிளன் நரகத்திலிருந்து காப்பாற்றப்பட்டான். அப்போது நாராயண படர்களுக்கும், யமபடர்களுக்கும் நடந்த ஸம்வாதத்தில், நாராயண படர்களின் வாக்யங்கள் மிக்க பிரசித்தமானவை. ஸ்வயம் பிரகாசமான தேவா, வாதாலய நாதா, அயோத்யாபுரீசா, கிருஷ்ணு, ராமா, உத்தவரை ஸம்ரக்ஷித்த யதுநந்தனு, காகபுசுண்டி, துளசிதாஸ, தியாகராஜாதிகளை ஸம்ரக்ஷித்த ரகுநந்தனு, கருடனுக்கு மஹா மோஹத்தை அழித்த லோகாபிராமா, பயத்தால் மெய்மறந்து, அஜாமிளன் ஹரிபகவானின் நாமத்தை உச்சரித்ததால், அவனால் ஆயிரம் கோடி ஜன்மங்களில் செய்யப்பட்ட பாபக் கூட்டங்களுக்குப் பிராயசித்தம் செய்யப்பட்டது. ஸ்ருதிகளாலும், ஸ்மிருதிகளாலும் விதிக்கப்பட்ட விரதம் முதலியவைகள் பாபத்தைப் போக்கடிக்கின்றன. ஆனால் அவைகள் பாப வாஸனைகளை நாசம் செய்கிறதில்லை. அனந்தஸேவை, நாராயண கைங்கர்யம், ராமநாம ஜபம், நாராயண பக்தர்களின் ஸேவை ஆகியவை பாவத்தையும், பாப வாஸனைகளையும், இரண்டையும் ஒரே சமயத்தில் நாசம் செய்கின்றன. அக்னி விறகுகளை எரிப்பது போலவும், மருந்து ரோகங்களை நாசம் செய்வது போலவும், புத்தி பூர்வமாக யில்லாவிட்டாலும் கூட முகுந்தனுடைய பெயரைச் சொல்லுதல் மனிதர்களுடைய பாபங்களை நாசம் செய்து, ஸாதுக்களின் சேர்க்கை ஸம்பந்தத்தை அடையவிக்கிறது. ஹே ராமா, கிருஷ்ணு, பரசின்மயாத்மனே, யமன் உனது பெயரைச் சொன்ன பக்தர்களிடமும், உனது பாகவதர்களிடமும், பக்தி செலுத்துகிறவர்களிடமும் தன்னுடைய கிங்கரர்களை அணுகச் சொல்வதில்லை. அதனால் அல்லவோ தர்மபுத்ரர், நாரதர், உத்தவர், கருடன் போன்ற மஹாத்மாக்கள் கிருதாஞ்சலியுடன் தங்களுடைய சரணாரவிந்தங்களையே உபாஸித்துக் கொண்டு, தங்களுடைய புண்ய கீர்த்திகளை ஸதா ஹனுமான்ஜியைப்போல கானம் செய்து வருகிறார்கள். உம்முடைய வசனப்படி, ஹே கிருஷ்ணு, ஸர்வ பூதங்களிடமும் உன்னுடைய

ஸ்வரூபம் என்கிற பாவனே வரும் வரையில், உன் பாதங்களையே மனம், வாக்கு, காயம் ஆகியவைகளால் உபாஸித்து வரவேண்டும். ஸர்வம் பிரும்மாத்மகம், வாஸுதேவமயம் என்கிற விக்ஞானம் கிடைக்கும் வரையில், ஸர்வ பூதங்களும், சேதனு சேதனங்களும் தங்களுடைய ஸ்வரூபம் என்கிற ஸர்வ பாவம் ஏற்படும் வரையில், ஸத்வம் ரஜஸ்தமஸாதி குணங்களிலிருந்து விடுபடமுடியாது. கர்மபந்தங்கள், அதனுல் யேற்படும் மாயை ஆகியவைகளிலிருந்து விடுபடமுடியாது. எந்த பக்தன் பரம வைஷ்ணவ ஞானத்துடன் சகல காரியங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு, பகவத் ஸங்கல்பத்தின்படி வாழ்கின்ருர்களோ, பகவத் திருப்தி ஒன்றையே பரமபலமாக வாழ்ந்து வரும் உத்தம பாகவதோத்தமர்களான அவர்கள் புத்திமான்களில், சிறந்தவர்கள் ஆவார்கள். அவர்கள் அனுஷ்டிக்கும் மஹா விஸ்வாசமே பரம தர்மம், அவர்களே மஹா வைராக்யம் படைத்த மனிதர்கள். அவர்களே மனிதர்களுள் தெய்வத்தன்மை வாய்ந்தவர்கள். நிஜமாகிற வாழ்க்கையை மானிட சரீரத்துடன் அவர்கள் வாழ்ந்து வந்த போதிலும், அவர்களே ஸத்யமானதும், அம்ருதம் என்று சொல்லப்படும் நாராயண பதத்தை ஸதா ஆஸ்ரயித்தவர்களாக பரம வைஷ்ணவ தர்மத்தைக் கடைப்பிடித்து, விஷ்ணு பதத்தை இந்த ஜன்மத்திலேயே அடைகிருர்கள். அப்பேற்பட்ட காருண்ய மூர்த்திகளாகிற வைஷ்ணவ சீலர்களே, நான் காகபுசுண்டி, உத்தவர், துருவன், துளசிதாஸ, தியாகராஜர், கருடனைப் புறம் வைத்து நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஹனுமான்ஜி, நாரதரே, வால்மீகி பகவானே, நீங்கள் கிருபை செய்யவேண்டும்.]

காகபுசுண்டி மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். "நாரதருடைய விஜயம், பிரபு நாரதருக்கு பம்பாதீரத்தில் பாகவத தர்மத்தின் பெருமைகளையும், ராமநாம மகிமைகளையும் எடுத்துச் சொன்னதைப் பற்றியும் சொன்னுர். அதன் பிறகு பிரபு ஸர்வஸ்ரேஷ்ட ராமபக்தனுகிற மாருதியைக் கண்டதும், அதன் பிறகு மாருதியினுல் உண்டுபண்ணப்பட்ட சுக்ரீவ ஸ்நேகத்தையும், வாலியினுடைய வதத்தையும் பற்றி எடுத்துச் சொன்னுர்". (395)

"அதன் பிறகு சுக்ரீவ பட்டாபிஷேகம், பிரபுவின் பிர ஸ்ரவணகிரியில் மழைக்காலத்தில் வாசம் செய்ததைப் பற்றி எடுத்துச்சொன்னுர். அதன் பிறகு காகபுசுண்டி வர்ஷசரத்ருது காலத்தின் வருதலையும், ஸ்ரீராமன் லக்ஷ்மணனுடன் கூட

சீதையின் நினைவாக விருந்ததைப் பற்றியும் அதனுல் ஏற்பட்டதும், சுக்ரீவனுடைய ராஜபோகங்களின் இச்சையினுல் யேற்பட்ட மறதியையும், ராம கார்யத்தில் விமுகனுக ஆனது பற்றியும், கருடனுக்கு எடுத்துச்சொன்னுர். சுக்ரீவனுடைய நடத்தையினுல் ஸ்ரீராமனுக்கு யேற்பட்ட கோபமும், அதனுல் லக்ஷ்மணன் கோபமூண்டு, சுக்ரீவனுக்குப் பயத்தை உண்டு பண்ணிய விருத்தாந்தங்களையும் பற்றிச் சொன்னுர்.'' (396)

"அதன் பிறகு கபிகளுக்கு ராஜாவான சுக்ரீவன் தனது தவறை உணர்ந்து, வானரர்களை ராம காரியத்திற்கு அனுப்பி வைத்தது, அவர்களிடம் சீதையைத் தேடுவதில் ஆக்ஞை செய்தது, ஸர்வதிசைகளிலும் வானரங்களை அனுப்பிய விருத்தாந்தங்களையும் எடுத்துச் சொன்னுர். தெற்குப்பக்க மாகச் சென்ற வானரங்கள் ஒரு குகையில் நுழைந்ததையும், அதனுல் ஏற்பட்டதும், யத்ருச்சையாக லாபத்தை அடை வித்ததான ஸம்பாதியின் தர்சனத்தையும் பற்றி காகபுசுண்டி கருடனுக்குச் சொன்னுர்.'' (397)

"மீண்டும் ராமகதாம்ருதத்தை எடுத்துச் சொல்பவரான காகபுசுண்டி கருடனுக்கு ஸம்பாதியின் பூர்வவிபரங்களையும் சொல்லி, அந்த ஸம்பாதியின் வசனப்படி பவனபுத்திரனை ஹனுமான்ஜி சமுத்திரத்தைத் தாண்டி சீதையைக் காண முயற்சித்ததையும் பற்றிச் சொன்னுர். ஹனுமான்ஜி அபார மான சமுத்திரத்தைத் தாண்டி லங்கைக்குச் சென்று பலவிடங் களில் தேவியான சீதையைத் தேடி அலைந்த விபரங்களையும் சொன்னுர்.'' (398)

"அதன்பிறகு ஹனுமான் அசோகவனத்தை அடைந்ததும், தேவியைப்பார்த்து ஸம்பாஷித்த விபரங்களையும், அவளுக்கு தைரியம் செய்ததையும் பற்றிச் சொன்னுர். இதைத் தெரிந்து கொண்ட ராவணன் ஹனுமாரைப் பிடிக்க ஆக்ஞை செய்த தையும், லங்கையை அக்னியால் ஹனுமான்ஜி எரித்ததையும், அதன்பிறகு ஆஞ்சநேயர் மீண்டும் சமுத்திரத்தைத் தாண்டி வானரர்களை அடைந்து, அவர்களுடன் ரகுராயிடம் சென்று வைதேஹியின் க்ஷேம விலாஸங்களையும் ஆர்த்திகளையும் பிரபு வினிடம் மாருதி ஸமர்ப்பித்த விருத்தாந்தங்கள் முழுவதையும் காகபுசுண்டி கருடனுக்குச் சொன்னுர்.'' (அப்பேற்பட்ட மஹா கார்யங்களைச் செய்த ஹனுமான்ஜியை கருடன், காகபுசுண்டியை புறம்வைத்து நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.

ஹனுமான்ஜி, நீதான் எங்களையும் ஸம்ரக்ஷிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.) (399)

[தியானம்

ராமா, கிருஷ்ணு, சீதாபதே, நாராயணு, நீர் ராமகிருஷ்ண அவதாரங்களில் காட்டிய பிராம்மண ப்ரியம் வெகு சிலாகிக்கத் தக்கதாக விருருக்கிறது. ஹே வாதால ஈசா, தவமுள்ள பிராம் மணர்களின் மகிமை அரசனைவிட மேலானது என்று நீங்கள் நினைத்து, பிராம்மணர்களைப் பூஜித்தீர்கள். பிராம்மணர் களின் நிக்ரஹத்தினுல் அசுரர்கள் கடல்நீரில் இன்னமும் கிடக் கின்றனர். பிராம்மணர்களின் அனுகிரஹத்தால் தேவர்கள் ஸ்வர்க்கத்தில் வசிக்கின்றனர். ஹே விப்ரபிரியா, இதற்காக அல்லவோ நீர் ப்ருகுபதத்தை உமது வலது மார்பில் எப்போதும் தரிக்கிறீர். ஸ்ரீவத்ஸ சின்னத்தை உடைய ஸ்ரீராமா, கிருஷ்ணு, பிராம்மணர்களைப் பகைத்துக்கொண்டு, இந்த உலகில் ஒரு க்ஷணமும் வாழமுடியாது. பிராம்மணர்களுக்கு வாக்கேபலம்; அதனுல் பிரஹஸ்பதி மஹேந்திரனுல் ஸன்மானிக்கப்படு கிறுர். சுக்ராசாரியார் அசுரர்களால் வெகுமானிக்கப்படுகிறுர். பிராம்மணர்களிடம் முகத்தினின்று சாஸ்திரத்தைக் கேட்டு, நடப்பதுதான் பூலோகத்திலுள்ள அமிருதம். தேவாஸுர யுத்தத்தில் மஹேந்திரன் விருத்ராஸுரனிடமிருந்து நாராயண கவசத்தின் மந்திரத்தைப் பெற்றுக்கொண்டு, பிராம்மண அனுக்ரஹம் பெற்று, விருத்ரனைக் கொன்று மஹேந்திர பதவியை அடைந்தான். அதுமாதிரி, சித்ரகேதுவும் நாராயண பதத்தை அடைந்தது பிராம்மண ஆசீர்வாதத்தாலும், நாராயணனை உபாஸித்ததாலும் அல்லவோ காரணம். திதியும் கெட்ட எண்ண முள்ளவளாக விரதம் செய்த போதிலும், பிராம்மண பூஜை யினுலும் நாராயணரை ஆஸ்ரயித்ததாலும், மஹேந்திரனுக்கு உதவி செய்யும் மருத்துக்களைப் பெற்றுள். சந்திரன் பிராம் மணர்களைப் பற்றிச் சொல்லும் போது, பிராம்மணர்களுக்கு சொல்லே அஸ்திரம் என்ருன். பிராம்மணர்கள் கோபத்தை விட்டு, தவ வாழ்க்கையுடன் மன இந்திரிய அடக்கத்தால் ஸம தர்சினர்களாக மேன்மையை அடைகிறுர்கள். கடல் உப்பானதும் சந்திரனிடத்தில் களங்கமும், தேவேந்திரன் ஆயிரம் பெண் குறி களால் அடையாளம் செய்யப்பட்டிருப்பதும் பிராம்மண சாபத்தால் ஏற்பட்டது அன்ருே? அதே இந்திரன் பிராம்மண ராகிய பிரஹஸ்பதியை பூஜித்து, பிராம்மணர்களின் பிரபாவத்

திறலேயே ஆயிரம் கண்ணுள்ளவனுன். புகழையும், செல்வத்தையும், புண்ணிய லோகங்களையும் விரும்பும் மனிதன் பரிசுத்தமும் அடக்க முள்ளவனுகவும், பிராம்மணர்களின் சொற்களின் படி நிற்க வேண்டும். ப்ருகு, அங்கீரஸ், பரத்வாஜர், ஆகிய பிராம்மணர்கள் சக்தி வாய்ந்தவர்களாக விருந்தார்கள். பிராம்மணர்களிடம் தோற்பதே நன்மை. இவ்வுலக மனத்தையும் அழிப்பதும், ஒரு பிரும்மஹத்தி செய்வதும் சமம் என்று சொல்லலாம். பிரும்மஹத்தி பெரும் பாவம் என்று மஹரிஷிகள் சொல்லுகிறுர்கள். காற்றை கைப்பிடியினுல் பிடிக்கலாம். பூமியைத் தலையினுல் தாங்கலாம். சந்திரனையும் கைகளால் பிடிக்கலாம். பிராம்மணர்களை மட்டும் வெல்ல முடியாது. பிராம்மணர்களின் சக்திகளினுல் தான் உலகங்கள் தாங்கப்படுகின்றன என்று வேத வியாஸர் சொல்கிறுர். உலகங்களைக் காப்பாற்றும் பிராம்மண ஸ்ரேஷ்டர்களை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஹே ராமா, உன் அன்பினுல் பிராம்மண சாபம், பிராம்மணர்களிடம் பகை ஆகியவை யேற்படாமல் என்னை ஸம்ரக்ஷிக்க வேண்டும். பிராம்மணர்களின் அனுக்ரஹத்தையும் நான் பெறவேண்டி சுக்ர, அகஸ்திய, பிரஹஸ்பதியே, நீங்கள் கிருபை செய்ய வேண்டும்.]

"ரகுவீரன் வானர கரடி சேனைகளுடன் லங்கை நோக்கிப் புறப்பட்டது; ஸமுத்திரக் கரையில் வந்து சேர்ந்தது. அங்கே ஸமுத்திரக்கரையில் தங்கிக்கொண்டிருக்கும்போது, விபீஷணனை சந்தித்தது. அதன் பிறகு பரந்த சமுத்திரத்தை நிக்ரஹம் செய்வதற்கு யத்தனித்தது, ஆகிய விருத்தாந்தங்களைச் சொன்னுர்." (400)

"ஸாகரத்தைப் பந்தனம் செய்து, அணையைக் கட்டி சகல வானர சேனைகளுடன் அபாரமான சமுத்திரத்தை ஸ்ரீ ராமன் தாண்டிச் சென்ற விருத்தாந்தங்களைச் சொன்னுர். லங்கையை அடைந்ததும், பகவான் பிராம்மண வதத்திற்காகப் பயந்து, வாலி குமாரனும் வீர ஸ்ரேஷ்டனுமாகிற அங்கதனனை தூதுக்கு அனுப்பிய விருத்தாந்தத்தைச் சொன்னுர். யுத்தம் தான் சிறந்தது என்று முடிவுக்கு வந்த ராவணனுடன் போர் புரிந்த சமயம், (401)

ராக்ஷஸர்களுக்கும் வானரங்களுக்கும் யேற்பட்ட யுத்த விபரங்களை காகபுசுண்டி கருடனுக்குச் சொன்னுர். அநேக விதங்களாலும் அவர்கள் யுத்தம் செய்ததைப் பற்றி விவரித்துச் சொன்னுர். அதன் பிறகு கும்பகர்ணனுடைய வீரபிரதாபங்கள்,

மேகநாதனுடைய பலத்தினுல் யேற்பட்ட நஷ்டங்கள், அவர் களுடைய பௌருஷச் செய்கைகள், அதன் பிறகு அவர்க ளுடைய ஸம்ஹாரம், மரணம் முதலிய விருத்தாந்தங்களை கருட னுக்கு காகசுபுண்டி சொன்னுர்.'' (402)

"இவ்விதம் ராக்ஷஸர்களின் ஸமூஹங்கள் அழிக்கப்பட்ட வுடன் ஸ்ரீ ரகுபதியுடன் ராவணன் தானே நேரில் யுத்தம் செய்ய முன்வந்த விபரங்களை காகபுசுண்டி சொன்னுர். பலவிதங்களாகச் சண்டை செய்து, ராவணன் ஸ்ரீ ராமனுல் கொல்லப்பட்ட விருத் தாந்தங்களையும், அவனுடைய மரணத்தினுல் ஏற்பட்ட மந்தோ தரியின் விலலாபங்களையும், ராக்ஷஸஸ்திரிகளின் துக்கங்களையும் பற்றிச் சொன்னுர். அதன் பிறகு காகபுசுண்டி கருடனுக்கு விபீஷண பட்டாபிஷேகத்தையும், அதனுல் யேற்பட்ட தேவர் களின் சந்தோஷத்தையும் பற்றிச் சொன்னுர்.'' (அப்பேற்பட்ட கோதண்டராமனுக்கு பிரஹஸ்பதியை முன்னிட்டு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (403)

[தியானம்

நாராயணு, பிரஹ்லாத பிரியா, கிருபாத்மான், விஸ்வாத்மன், ஸர்வபக்த ஜனப்ரியா, பவனபுரவாஸின், ரெங்கபதே, நீர் ஸர்வஸ் வதந்திரன், உம்முடைய ஸங்கல்பம் யாவரையும் மீறக்கூடியது. கர்மத்தினுலும், பக்தி, ஞான, பிரபத்தி மார்க்கங்களில் தாங்கள் அடையப்பட்டாலும், தங்களுடைய மனஸங்கல்பம் கருணை யையே கவசமாகக் கொண்டபடியால், யாவரையும் திகைக்க வைக்கிறது. உமது ஜகம் என்கிற உலகம் உமக்கு மிக்க பிரிய மாக விருக்கிறபடியால், நீர் எப்பொழுதும் ஜகத் ஹிதத்திற் காகவே பாடுபடுகிறீர். அதனுல் ஸ்வதந்திரராக காணப்படு கிறீர். வைஷ்ணவ ஆசாரியர்கள் உமது கிருபையை உமது கிருபையினுலேயே அடையவேண்டுமாதலால் உமது ப்ரீதியையே குறிக்கோளாக ஆஸ்ரயித்து வாழ்ந்து வந்தார்கள். நாரதர் போன்ற மஹாத்மாக்களும், உமது கிருபா ஸங்கல்பத்திற்கு ஒத்த படி வாழ்ந்து வந்தார்கள். ஹே ஸரஸிருஹ நயனு, சீதாராமா, உமது கிருபையை அடைந்து விட்டால், மீன் தனது பரிவாரங் களுடன் எவ்விதம் கனதிருப்தியை அடையுமோ, அதுபோல தியாகராஜாதிகள் போன்ற பக்தர்கள் ஆனந்த மடைகிருர்கள். உதாரமனத்தை திடரென்று பெற்ற புரந்தர தாஸர் தனது சகல நிதிச் செல்வங்களைப் பங்கிட்டுவிட்டு, ஸர்வஸ்வதந்தரராக உம்மை அடைவதற்கு எவ்விதம் ஆனந்த பூர்வமாகச் சென்ருரோ,

அதைப்போல மட்டற்ற ஆனந்தத்தை உனது தாஸர்களான ஆஞ்சநேயாதிகள் அடைந்திருக்கிறார்கள். ஹே ஜகத்ஹித ராமா, கோதண்டபாணி, ராஜீவாக்ஷா, பவனுதா, ரமணீயசரிதா, ஸஜ்ஜன ஜீவனா, கருடபுஜங்க ஸேவிதா, அதனால் மாதுர்ய மஹா ருசிகரமான விருந்தையோ, தங்கம், ரத்னம் போன்ற நிதிகளையோ தேடி அலையாமல், உன்னையே நம்பி வாழும் ஸாது ஜனங்கள் ராஜ சிம்மாஸனத்தைக்கூட விரும்பாமல், பிரும்மேந்திர பதவிகளைக்கூட லக்ஷ்யம் செய்யாமல், பிரஹ்லாதனைப்போல தீரமதியினால் ஆராய்ந்து, உமது கிருபையை அடைவதற்கு ஸாது ஜனங்களையே அடைந்து, உமது பாதங்களையே பூஜிக்கிறார்கள். உம்மையே எனது தாய்ப் பசுவாக நான் கருதியிருக்கும்போது, எனது பசி, என்னுடைய தேவை எல்லாம் ஸர்வக்ஞ பட்டம் பெற்ற உமக்குத் தெரிந்திருக்கும்போது, பரதனையும், கருடனையும், உமா மஹேஸ்வர நாரத வியாஸாதிகளையும், பிரஹ்லாதனையும், துருவனையும், அம்பரீஷனையும் கஷ்டப்படுத்தியதுபோல பிரபு, என்னையும் துன்பப் படுத்தாதே. கோக்களுக்கு கோக்களே தஞ்சம் என்கிற நியதிப்படி, ஸாதுக்களுக்கு தஞ்சம் ஸாது ஜனங்களே ; என்னையும் உங்கள் பொருளாக ஸ்வீகரித்துக்கொண்டு, ரக்ஷிக்கமாட்டீர்களா ?]

''விபீஷண பட்டாபிஷேகத்திற்குப் பின்பு அனபாயினியாகிற சீதாதேவி ஸ்ரீராமனுடைய சேர்க்கை ஸந்திப்பை அடைந்தாள். தேவர்கள் பலவிதமாக சீதா ரகுபதியைப் புகழ்ந்து, ஸ்துதி கீதம் பாடினார்கள். தங்களுடைய கர அஞ்சலிகளினால் அவர்களை வணங்கி, சுக்ருத நமஸ்காராதிகளைச் செய்து, புஷ்பங்களை அர்ச்சித்தார்கள். அதன் பிறகு பிரபு ரகுராமன் வானரங்களுடன் புஷ்பக விமானத்தில் ஏறி அயோத்தியை அடைந்தார்கள். அங்கிருந்து என் பிரபு நரசிம்மமூர்த்தி, கிருபாநிகேதன், விஸ்வாத்மன், மஹா கிருபைகொண்டு, ஸர்வபுவன ரக்ஷகத்துடன், ஸர்வஜன ரக்ஷகத்தையும் செய்து வருகிறார்.'' (அப்பேற்பட்ட ஸரஸி ருஹநயன, சீதாராம தம்பதிகளுக்கு நாரதரை முன்னிட்டு நான் ஸதா நமஸ்கரித்துக்கொண்டு வருகிறேன். ஹே ஜகத்ஹித சீதாராமா, என்னிடமும் கிருபை செய்யுங்கள்.) (404)

''எந்த பிரகாரம் பிரபு அயோத்தியை அடைவதற்கு முன் ஆஞ்சநேயரை முதலில் அனுப்பியதையும், பிற்பாடு அவர் பரத சத்ருக்னாதிகளைக் கண்டு ஆனந்தித்து அந்த ஸகல விபரங்களையும் சொல்லிவிட்டு, அதன் பிறகு மஹாபாகவத உத்தமரான காகபுசுண்டி கருட மஹாராஜருக்கு ஸ்ரீசீதாராம ராஜ்ய பட்டாபி

ஷேக மஹோத்ஸவத்தை எடுத்துச் சொன்னார். அதன் பிறகு காகபுசுண்டி எவ்விதம் அயோத்யா ராமன் ராஜ நீதிப்படி அரசாண்டு வந்தார் என்கிற விபரங்களையும் கருடனுக்குச் சொன்னார்.'' சிவன் பார்வதியிடம் சொன்னார்: ''உமா, அயோத்யாபுரியில் வாழ்ந்துவந்த ராஜ ரிஷிகளைப்பற்றியும், அவர்களால் அனுஷ்டிக்கப்பட்ட ராஜ தர்மங்களைப்பற்றியும் அநேக பிரகாரம் காகபுசுண்டி கருடனுக்கு விவரித்தார்.'' (405)

தியானம்

ராமா, நாராயணா, சீதாபதே, நரசிம்ம மூர்த்தியே, உன்னை ப்ரஹ்லாதன், ஹிரண்யகசிபின் வதத்தின் சமயம் எவ்விதம் கண்டானோ, அதைப்போல அல்லவா, உன் மஹா பக்தனாகிற கருடன் உன்னை அடையாளங்களால் தெரிந்து கொண்டான். உக்ரருக்கு உக்ரராகவும், பக்தருக்கு பரம பத்ர மூர்த்தியாகவும், தேஜோமயமாக ஜ்வலிக்கும் பரம்ஜ்யோதிஷ் ரூபமாகவும், ஸர்வதோமுகம், ஸர்வதோகதி, உள்ளவராகவும், ம்ருத்யுவுக்கு ம்ருத்யுவாகவும் அல்லவோ அவன் உன்னைக் கண்டான். பிரஹ்லாத கருடப்ரியா, ஸர்வபக்த பிரியா, உம்முடைய பரத்வ ஸ்வரூபம் ஸ்மரிக்கவே முடியாதபடி விருக்கிறது. பக்தர்களைக் காப்பாற்றும் பொருட்டு நீர் ஏதோ வியாஜமாகக்கொண்டு அவதாரம் செய்வதும், அந்த அவதாரத்தில் நீர் லீலை நாடகம் நடத்துவதும் அத்புதமாக விருக்கிறது. பரம ஆச்சர்ய அத்புத நரசிம்ம வடிவைக்கொண்ட நரசிங்கா, ஸ்ரீ நிருசிம்மதாபனி முதலிய உபநிஷத்துக்களால் கானம் செய்யப்படும் சுத்த ஸத்வமே, புருஷ சப்தத்தினால் அறியப்படும் ஆதிப்பிரானுக்கு, நான் நம்மாழ்வாரை முதலாகவைத்து, நமஸ்கரிக்கிறேன். ஹே ஸ்ரீரங்கபதே, திரிலோகேசரே, திரிதாமரே, பிரும்மாவினால் புகழப்பட்ட பரமேசரே, கல்பந்தோறும் தோன்றி ஆக்கி, காப்பாற்றி அழிக்கும் சக்திகளை படைக்கும் திரிசக்தி ஆத்மாவே, நீர் விசுத்த ஆத்மா. கேவலம் ஞான ஸ்வரூபமாக விருப்பவர். நீரே ஸர்வ வாஸுதேவ மயமாகவும், ஸர்வாந்தர்யாமியாகவும், ஜகம் முழுவதும் வியாபித்திருக்கிறீர். நீரே ஸத்யம். நீரே பூர்ணமான பிரும்மம், அனந்தம்; ஆதிமத்யமில்லாத மஹா புருஷரும் நீரே. நிர்குணம் என்று சொல்லும்படி பிராக்ருத குணங்களால் பற்றப்படாத பரமாத்மா. உமக்கு ஈடு யாரும் இல்லாத அத்வயர். ரிஷிகளும், கருடன் போன்ற மஹாத்மாக்களும், வேதங்களைப் பிரமாணமாக வைத்து சாஸ்வதமான

உம்மை இந்திரிய மன அடக்கங்களால் உபாஸித்து, புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். வாயுவாஹனரே, வேதவாஹனரே, நீரே மோக்ஷத்வாரம், ப்ரஜாத்வரம், ஸ்வர்க்கத்வாரமாக இருக்கிறீர். ஸதசித் ஆத்மாவே, உம்முடைய முதல் அவதாரம் பரம புருஷஅவதாரமாகச் சொல்லப்படுகிறது. அதற்குப் பின் காலம், ஸ்வபாவம், ஸதஸன்மானம், காரணம் காரியம் ஆகிற பிரக்ருதி மனம் ஆகியவை ஐம்பூதங்கள், திரவியங்கள், முக்குணங்கள், இந்திரியங்கள் உம்முடைய விராட் ஸ்வரூபம். அந்த விராட் ஸ்வரூபத்திலும் தாங்கள் சீதையாகிற மஹாலக்ஷ்மியுடன் ஸர்வ ஸ்வதந்தரராக ஸ்வராட்டாக விருக்கிறீர்கள். அதோக்ஷஜா, ஜகத்பதி, பிரும்மா, சிவன் முதலானவர்களுக்கும் முந்தியவனே, நீர் ஸர்வ பிராணிங்களுக்கும் ஸ்வாமியாகவுமிருக்கிறீர். உம்முடைய ஸங்கல்பத்தை யாவரும் தாண்ட முடியாது. அதே மாதிரி உம்முடைய மஹத்வத்தை யாவராலும் பூர்ணமாக அறிய முடியாது. அவதார காலங்களில் ஏற்படும் உம்முடைய லீலைகளையும், அதன் மர்மங்களையும் அறிய முடியாது. உம்மைப் பஜிப்பதாலேயேதான் ஸகலரும் மஹத்தான ஐஸ்வர்ய ஸ்ரீ: ஹரி: விபூதி, இன்னும் எவை மிக்க உத்தம பாக்கியங்களாக விருக்கின்றனவோ அவைகளை அடைகிறார்கள். நாரதாதிகளால் புகழப்படும் பரபிரும்ம ஸ்வரூபமே, உம்முடைய மகிமைகள் மஹான்களால் உபதேசிக்கப்பட்டல்லவோ நான் என் ஸ்ரோத்திரங்களின் அழுக்குக்களைப் போக்கிக்கொள்ள முடியும். உம்முடைய அம்ருதமயமான புண்ய கீர்த்திகளே எனக்கு அம்ருதத்தைக் கொடுக்கட்டும்.]

"இந்தவிதமாக காகபுசுண்டி கருடனுக்கு ஹரிபகவானுடைய கதாம்ருதத்தைச் சொல்லித் தானும் இன்பத்துடன் அதை மற்ற பக்ஷிகளுடன் பருகி ஆனந்தமடைந்தார்." (அப்பேற்பட்ட மஹாகிருபாளுவும் பரமகுருவாகிய காகபுசுண்டியை நான் ஆயிரம்தடவைகள் நமஸ்கரிக்கிறேன், ஹரிஸ்மரணம் செய்கிறேன்.) "பவானி, நீ கேட்டபடி நான் உனக்கு எல்லா விருத்தாந்தங்களையும் சொன்னேன்" என்று பகவான் சங்கரர் சொன்னார். "அப்பொழுது பரம உத்ஸாஹம் கொண்ட கருடன் காகபுசுண்டியை மீண்டும் வினயத்துடன் வசனங்களைச் சொன்னான்." (406)

"ரகுநந்தனுடைய சரித்திரம் முழுவதையும் ஸ்வாமி, தங்களிடமிருந்து கேட்டு அறிந்து, நான் தன்யனானேன். என்னுடைய சந்தேகங்களும், மஹா மோஹங்களும் நீங்கிவிட்டன.

வாயஸ திலகமே, இப்பொழுது தங்களுடைய கிருபையினுல் ஸ்ரீராம சரணங்களில் எனக்கு பக்திப்ரேமை உண்டாகியிருக் கிறது. என் வார்த்தைகளையும் தாங்கள் கேட்கவேண்டும்.'' (407)

"பிரபு ஸ்ரீராமன் ரணகளத்தில் நாகபாசத்தினுல் கட்டப் பட்டு மூர்ச்சையடைந்ததை நான் பார்த்தேன். அந்த அவஸ்தை யில் நான் பிரபுவைப் பார்த்தபடியால், எனக்கு மோஹங்கள் ஏற்பட்டன. தாங்கள் சொல்லியபடி ஸ்ரீராமன் பரசின்மய ஆனந்த ஸ்வரூபியல்லவோ, அவருக்கு பிராகிருத வியாகுலங்கள் எவ்விதம் ஏற்படும்? அவர் என்ன காரணத்தினுல் அவ்விதம் சாதாரண மனிதனைப் போல துர்கதியை அடைந்தார்?'' (408)

"அவருடைய மானுஷ்ய சேஷ்டிதங்களைக் கண்டு, நான் அவரிடம் கொண்டுள்ள அனுராகத்தினுல் இவ்விதம் மனம் வியாகுலப்பட்டுக் கொண்டிருந்தேன். என் மனதில் கனமான சந்தேகங்களும், அதனுல் பயங்களும் ஏற்பட்டன. மனபிரமை ஏற்பட்டு, எனது நன்மையை விரும்பி, நான் பலகாலம் பலவிடங் களுக்குச் சென்று அலைந்து திரிந்தேன். கிருபாநிதியாகிற தங்க ளுடைய அனுக்ரஹ பிரஸாதத்தினுல் எனக்கு பெரும் நன்மை இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது.'' (409)

"எந்த மனிதன் சூரியவெப்பம் தாங்கமுடியாமல் தவிக் கிருனே, அவனுக்கு விருக்ஷத்தின் அடியில் சிறிதுநேரம் இளைப்பாறுதலால் சிரமம் நீங்குகிறது. அந்தமாதிரி மோஹ ஸந்தாபம் எனக்கு ஏற்பட்டிராவிடில், ஸ்வாமி நான் தங்களைப் பார்க்கவும் இவ்விடம் வந்திருக்கவும் நேர்ந்திருக்காது.'' (410)

"இவ்விடம் தங்களைத் தர்சனம் செய்ததால், பிரபு, தீனபந்து, பகவான் ஹரியினுடைய கதாவிசேஷங்களைக் கேட்க முடிந்தது. தாங்களும் என்மீது கிருபைகூர்ந்து, விதிப்படி ஸ்ரீசீதாராம கதாம்ருதத்தை, விசித்திரமாயுள்ள ஸம்பவங்கள் கொண்ட ராமகதையை முழுவதும் எங்களுக்குச் சொன்னீர். வேதசாஸ்திர புராண ஆகமங்களும் ஹரிகதையின் மேன்மை களையே கோஷிக்கின்றன. இதையே ஸித்த புருஷர்களும், முனீஸ்வரர்களும் கோஷிக்கிருர்கள். இதில் சந்தேகமே இல்லை.'' (411)

"ஸ்ரீராமனுடைய கிருபை இல்லாவிடில், மனிதனுக்கு சுத்த மனமுள்ள ஸாதுக்களின் சேர்க்கை கிடைக்காது. கிடைக்கிறது மில்லை. ராமகிருபை எனக்கு இருந்தபடியால், பிரபு, தங்க ளுடைய தர்சனம் எனக்கு பாக்யவசத்தால் கிடைத்தது. அதே

ராமபிரஸாதத்திஞல், தங்களுடைய பரம அனுக்ரஹத்திஞல் என்னுடைய சித்தபிரமைகளும் நாசமடைந்துவிட்டன. நான் தங்களால் தன்யஞக ஆக்கப்பட்டேன்,'' என்று வினயபூர்வமாக கருடன் சொல்லிவிட்டு, காகபுசுண்டியை நமஸ்கரித்து, பிரதக்ஷிணம் செய்து ஸகல பக்ஷிகளுக்கு முன்பு கௌரவித்தான். பரம வைஷ்ணவன் பாகவத ப்ரேமையிஞல் எவ்விதம் கலங்குவாஞே, அதைப்போல மஹாகிருதக்ஞையுடன் கருடன் விளங்கிஞன். (412)

பக்ஷிராஜஞன கருடனுடைய பரமவினய ஸம்பத்துள்ள வசனங்களையும் பிரேமையுடன் கலந்த ஆசார்ய சிஷ்ய, பாகவத பக்தியையும் காகபுசுண்டி கண்டார். அவருடைய சரீரம் புளகாங்கிதமடைந்தது. அவருடைய பரிபூர்ண லோசனங்களிலிருந்து ஆனந்தபாஷ்பக் கண்ணீர்கள் உதிர்ந்தன. மனம் சந்தோஷத்தால் இன்பமுற்றது. அதைப் பார்த்த ஸகல பக்ஷிசமூகங்களும் சந்தோஷத்தை அடைந்தார்கள். (413)

சிவன் பார்வதியிடம் மீண்டும் சொன்ஞர். ''உமா, அழகான மதிபடைத்தவர்கள், அழகான ஆசார நடத்தையுள்ளவர்கள், தேகசுத்தி, மனசுத்தி, கர்மசுத்தி உள்ளவர்கள் ராமகதையில் விருப்பமுள்ளவர்களாகத் தானிருப்பார்கள். அவர்கள் ஹரிபகவானின் மஹத்வம் பொருந்தய கதைகளைக் கேட்டுப் பருக ஆனந்தமுள்ளவர்கள், அவ்விதம் உத்தமகுணங்களை உடைய ஹரிதாஸர்கள் எங்கு இருக்கிருர்களோ, அவர்களைக் கண்டதும் பரமாசார்யர்கள், ''இவர்களே நமது ரகசியங்களையும் உபதேச மந்திரங்களையும் பெற யோக்கிமான புருஷர்கள்'' என்று மதித்து, நம்பி, விஸ்வாசித்து, அவர்களுக்கு மிகமிக ரகசிய அர்த்தங்களை பிரகடனம் செய்து, பிரஸாதிக்கிருர்கள். கருடனைப்போன்ற மஹாமேதாவியும், ஆசாரம் நியமங்கள் கொண்ட ஹரிபக்தன் கிடைப்பது அரிதல்லவா?'' (414)

''மஹா சாமர்த்தியம் படைத்த காகபுசுண்டி மீண்டும் சொன்ஞர். ''பக்ஷிராஜரே, உம்மிடம் எனக்கு பரமபக்தி, ப்ரேமை, விஸ்வாஸம் உண்டு என்று தங்களுக்குத் தெரியும்.'' அதுமாதிரி, பிரபோ, தங்களுக்கு பகவான் ஸ்ரீராமசந்திரனிடம் ஆழ்ந்த அன்பும், விஸ்வாஸமும் உண்டு யென்பதை நான் முற்றும் அறிவேன்; உலகமும் அறியும். தாங்கள் பகவான் ஸ்ரீராமச்சந்திரனுக்கு கிருபாபாத்திரம் அல்லவோ?'' (415)

''பிரபோ, தங்களுக்கு சம்சயமோ, அறிவு மயக்கமோ கிடையாது. தங்களைப்போல வினய ஸம்பத்துள்ள ஹரிபக்தர்கள்

மாயைக்கு வசப்படமாட்டார்கள்; பிரபு ராமச்சந்திரன் என்னிடம் கிருபைகொண்டு தங்கள் வரவினாலும், தரிசனத்தாலும், என்னை அனுக்ஹரம் செய்ய உள்ளம் கொண்டார் என்றுதான் நான் நினைக்கிறேன். பக்ஷிராஜரே, ரகுபதியினுடைய மேன்மையை விளக்கும் திருவிளையாடல்களில் இதுவும் ஒன்றே.'' (416)

[தியானம்

அம்மா காமாக்ஷி, கருணாகடாக்ஷி, உனது சேர்க்கை அனுக்ரஹம்தானே மனிதனை மன அடக்கம் என்கிற தபஸ்ஸாகிற ரஜஸ் தம குணங்களிலிருந்து விடுதலையை அடையச் செய்கிறது. பகவான் வேதவியாஸர், கருடன், நாரதர், கஜேந்திரன், உமா, சம்பு ஆகியோர்களால் அனுபவிக்கப்பட்ட சிரமங்களும் துக்கங்களும் என்னைத் திகைக்கவைக்கின்றன. அதோக்ஷஜா, ஸரஸிருஹநயனா, ராகாசசிவதனா, உனது மாயையிலிருந்து யாவரும் தப்பமுடியாது போலிருக்கிறது. அதேபோல உமது கிருபையிலிருந்து எவரும் தப்பமுடியாது என்று நினைக்கிறேன். கிருஷ்ணானுஸ்மரணம், என்பது உம்மால் ஏற்படவேண்டுமானால், அது ஸாதுக்களின் ஸங்கம் ஒன்றினாலேதான் ஏற்படும். வாஸுதேவதீமஹி நமோ பகவதே துப்யம் நாராயணா வித்மஹி, பிரத்யும்ன அநிருத்த ஸங்கர்ஷண ஓம் நமோ மஹா பகவதே விஷ்ணவே நமః என்று அனுஸந்திக்கும் என்னைப் பார். கடாக்ஷித்து அருளு. ஜபம், மந்திரம், தந்திரம் ஆகியவைகளால் அடையக்கூடிய கருணாஸ்வந்தா, உன்னை நம்பிய நிஜதாஸர்கள் ஒருக்காலும் கேட்டை அடைகிறதில்லை. உனது கிருபை ஒன்றினாலே ஸாதுஜனங்கள் காமலோபாதி தோஷங்களை விலக்கி முகுந்தஸேவையாகிற உன் தாஸர்களைச் சேவைசெய்து, அவர்களுடைய கிருபையினால் சாந்தி எனப்படும் மஹாயோகத்தை அடைகிறார்கள். மன அடக்கம் என்று சொல்லப்படும் இந்திரிய மன அடக்கத்தினால் ஜன்மகர்ம ரஹஸ்யங்களை அறிந்து, அச்யுத பதங்களை வரித்து, வந்து அடைகிறார்கள். நாரதமஹரிஷி தேவதத்தம் என்கிற தம்புராவை மீட்டி, பாவராக ஸ்வர லய மூர்ச்சனைகளால் ஹரிபகவானின் குணக்கீர்த்திகளைப் பாடி தானும் இன்பமுற்று, நித்ய ஸஞ்சாரிகளாகிற எங்களையும் ஆனந்தம் செய்கிறார் அல்லவோ? அப்பேற்பட்ட நாரத, வியாஸ, தியாகராஜ, கருட அனந்த, விஷ்வக்ஸேனாதிகளுக்கு நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். வாதால ஈசா, என்னிடமும் பூர்ண கிருபையுடனும் கருணையாகவுமிருக்கவேண்டும்.]

''பக்ஷிகளுள் மிகமிக உத்தமமான ஸுபர்ணரே, பகவானுடைய அந்தரங்க தாஸர்களுள் நிஜதாஸரான தங்களுக்கு மஹா மோஹமோ, அறிவு மயக்கமோ எவ்விதம் ஏற்படும்? ஆசார்யர்களுள் பரமேஷ்டி ஆசார்யராக விளங்கும் கருத்மான், பன்னக ஆபரணரே, இந்த வினய வார்த்தைகளும் மரியாதை பூர்ணமானதும், கருணையுள்ளத்துடன் கூடிய தங்களுடைய வசனங்களும், ஹரிதாஸர்களுள் மிக்க ஸ்ரேஷ்டமான தங்களுக்கே பொருந்தும். இதில் நான் ஆச்சர்யப்படுவதற்கு ஒன்றுமில்லை. தங்களுடைய தேகத்தின் ஒவ்வொரு அணுவும் ரஜஸ்தமஸ் ஆகிற குணங்களிலிருந்து விடுபட்டு, காமலோபாதி தோஷங்களிலிருந்து விடுபட்டு, பிரபு, (நாரத பகவானைப் போலவும், வியாஸ பகவானைப்போலவும்,) சுத்தஸத்வமாக தாங்கள் விளங்குகின்றீர். வேதவாஹனரே, உம்முடைய அறிவு பாற்கடலைப்போல சுத்தமானதாகவும், தெளிவுற்றதாகவும், லக்ஷ்மி நாராயணன் ஸதா வாஸம் செய்யும் வேதோமயம் சந்தோமயமாக விருக்கிறது. உம்முடைய அறிவுக்கு ஏற்ப, ''முகுந்தசேவை'' என்று போற்றப்படும் உம்முடைய பாகவத, வைஷ்ணவ பிரேமை உமக்கு பகவானால் கொடுக்கப்பட்ட விலக்ஷணமானதும், மிகமிக விசேஷமான ஸ்வரூபமல்லவோ.? காஸ்யப புத்ரரே, பகவான் விஷ்ணுவிற்கு வாஹனமாகவும், கொடியாகவும் அலங்கரிக்கும் அம்ருதரே, நீர் அல்லவோ காய்த்திரி தேவியின் பொருள், அர்த்தம். (வாலகில்யர்களின் தவ வலிமையினால் விருத்தி செய்யப்பட்ட கருட மஹாராஜரே, வேதாத்மாவே,) உம்மை அறிந்தல்லவோ பகவானைத் தர்சனம் செய்ய முடியும். (வாயு வாஹனரே, நாரத மஹரிஷி, பகவான் சம்பு, விரிஞ்சி, ஸனகாதி முனிவர்களும், வேதவியாஸர் போன்ற) முனிநாயகர்களும் பகவானுடைய மாயையினால் க்லேசங்களை அனுபவித்திருக்கிறார்கள். அதேமாதிரி அவர்களும் பகவானுடைய கிருபையையும் அபரிமிதமாக அடைந்திருக்கிறார்கள். தங்களைப் போன்ற ஹரிதாஸர்களுக்கு முகுந்தனாகிற நாராயணரால் ஏற்படுத்தப்பட்ட மஹத்தான கருணையென்று இதை நாம் நினைத்துக்கொள்ள வேண்டும்.'' (417)

''ஸர்வகதி, ஸர்வஸ்வாமி, ஸர்வஸ்வதந்த்ரரான பரபிரும்ம நாராயணன் யாருக்குத்தான் மோஹத்தினாலும் காமத்தினாலும் லோபத்தினாலும் ஏற்படும் க்லேசங்களைக் கொடுக்கவில்லை? பலகாலங்களில் பலஸாது ஜனங்கள் விவேக சூன்யர்களாகி, மோஹவசமடைந்து குருடர்களாக ஆகிவிவிட்டிருக்கிறார்கள்.

ஸ்வாமி, இதுவரையிலும் ஜகத்தில் பகவானுடைய மாயை யினுல் ஏற்படும் மோஹத்தினுல் சூத்திரப் பாவையைப்போல, மனிதன் நாட்டியம் ஆடச்செய்யப்படுகிருன் அன்ருே? அசூயையினுல் எவனுக்கு மதம் ஏற்படாமலிருக்கிறது? அதேபோல காமத்தினுலும் க்ரோதத்தினுலும் மனமானது எவனுக்கு அக்னி ஜ்வாலையைப்போல தாபம் அடையாமலிருக் கிறது?'' (418)

'' இந்த ஜகம் முழுவதும் ஸ்ருஷ்டி காலத்திலிருந்து, நாம் கேள்விப்பட்டிருக்கிருேம். மஹாசாஸ்திர ஞானம் படைத்த மேதாவிகள், ஜபதபாதிகளில் ஸித்திபெற்ற மஹா தபஸ்விகள், தேவர்கள், ஸர்வ தர்சனர்களாக விளங்கும் கவிஸ்ரேஷ்டர்கள் பரபிரும்ம ஞானத்தை அடைந்த வேதவித்வான்கள், ஸத்பதா சார நியமசீலர்கள், ஆகிய ஸகலருக்கும் லோபம் என்கிற மஹா க்லேசம் யேற்பட்டு, அவர்களும் மிக்க சிரமத்தை அடைந்திருக் கிருர்கள். இந்த ஸம்ஸார துக்கங்களை அவர்களும் லோபத்தினுல் அடைந்து, அவைகளின் தாபங்களிலிருந்து இளைப்பாறுவதற்கு பகவானுடைய பதங்களையே நாடியிருக்கிருர்கள்.'' (419)

''ஸ்வாமி, லக்ஷ்மீத்வத்தினுல் மதம் ஏறி, வக்ரமான நடத்தை யுள்ளவர்கள் இந்த ஜகத்தில் யார் இல்லை? அதேமாதிரி பிரபுத் வத்தினுல் அறிவு மயங்கி, கண்ணிழந்தவர்களாக யார் இதுவரை காணப்படவில்லை? அதைப்போல ம்ருகலோசனியாகிற கண் ணழகைப் பாணமாகக்கொண்ட யுவதி ஸ்திரியினுல் காயப்படாத எந்த புருஷன் இல்லை?'' (420)

'' பிரபு, பதகேஸ்வரரே, நீதிமானே, புத்திமானே, ஸர்வ ஸுலபரே, நாராயண பாதங்களால் அடையாளம் செய்யப்பட்ட துடைகளையுடைய விஷ்ணு வாஹனரே, ஸகல சேதன சேத னங்கள் யாவரும் முக்குணங்களால் ஆக்கப்பட்டவர்கள் அன்ருே? நம் எல்லோருக்கும் குண தோஷங்கள் எவ்விதம் இல் லாமலிருக்க முடியும் ஸ்வாமி? இந்த சரீரம் எவ்விதம் கபம், வாதம், பித்தம் ஆகிய முக்குணங்களால் ஸரியான நிலையில் நிறுத் தப்படுகிறதோ, அதைப்போல இந்த ஸத்வரஜஸ்தமஸாதி குண தோஷங்களும் ஒன்று சேர்ந்து, ஒருமிக்க நிலையில் மனிதனை வாழச் செய்கின்றன. அப்பேற்பட்ட தோஷ மலினமாயுள்ள ஜீவாத்மாவுக்கு, மானம் அவமானம், மதம் மன அடக்கம், அஹங் காரம், வினயம், யௌவனம் ஆகிய எல்லாம் ஏற்படத்தானே செய் யும்? யௌவனம் என்கிற ஜ்வரத்தினுல் தாக்கப்படாத புருஷனே ஸ்திரியோ யார் இருக்கிருர்கள்? அதேமாதிரி மமதையின் வேகத்

1486—16

தினாலும், விஷயபோக இச்சையினாலும், எவனுடைய சுபமான யசஸ் நாசமடையாமல் காப்பாற்றப்பட்டிருக்கிறது?'' (421)

"பிரபோ, (மாதலியின் நண்பரே,) (ஸுமுகனுக்கு ஆயுள் தானம் செய்த) கருடரே, மாத்ஸர்யம் அசூயை ஆகிற களங்கத்தினால் அவதிப்படாதவன் யார் இருக்கிறார்கள்? சம்சாரத்தில் ஏற்படும் மஹத்தான கஷ்ட சோகத்தினால் மூழ்கிப் போகாதவன் யார் இருக்கிறான்? (மஹா மேதாவியும், தர்ம சிந்தனையுமுள்ள யுதிஷ்டிரரும் பிராத்ரு, ஞாதி, குருவதத்தினால் மஹாசோகத்தை அடையவில்லையா?) கவலையாகிற சிந்தை என்னும் பாம்பினால் கடிக்கப்படாதவன் இந்த ஸம்சாரத்தில் யார் இருக்கிறார்கள்? இந்த ஜகம் முழுவதும், ஸ்வாமி, அப்படித்தான் இருக்கிறது. தோஷங்கள் மலிவாகவும், குணங்கள் ரத்னங்களைப்போல அரியதாகவுமிருக்கின்றன. இது பகவானுடைய மாயையினால் ஏற்படுத்தப்படுகிறது. அது உள்ளும் புறமும் வியாபித்து மனிதனையும் இந்த ஜகம் முழுவதையும் வாட்டுகிறது.'' ("ஹே காமாக்ஷி, கருணைகடாக்ஷி, உனது அனுக்ரஹம் ஒன்றினாலேயே நான் இந்த மாயையின் தாபங்களிலிருந்து விடுபடவேண்டும். கஞ்சதளாயாக்ஷி, உனது ஸங்கல்பம் என் விஷயத்திலும் குளிர்ந்து ரக்ஷையாக விருக்கட்டும். முகுந்தப் பிரியனாகிற என்னை நீதான் ஸம்ரக்ஷிக்கவேண்டும். உன்ஸத்வ குணங்களையேபாடி, மரியாதைக்குரிய உனது பாதங்களையே நம்பி, ஹே மாயதாரி, மஹானுபாவே, தியாகராஜ, ஸ்யாம சாஸ்திரி, தீக்ஷதர், பாஸ்கரராயர், ஆஞ்சநேயாதிகளால் கானம் செய்யப்படும் திரிபுரசுந்தரி, பாலாம்பிகே, மன்மதனை உண்டாக்கிய என்தாயே, தயாபரி, மோக்ஷதாரிணி, திரிஜகதேஸ்வரி, முகஜிதவிதுபிம்பா, வாதிபுர ஈஸ்வரி, பகவதி, கனகாம்பரி, ராஜிதமணிகணபூஷணி, மதகஜ ராஜகமனி, லோகசங்கரி, கௌரி, பராத்பரி, ஜகன்ரக்ஷகி, உன்னை நம்பி நான் வாழ்ந்து வருகிறேனே. மஹரிஷிகளான பெரியோர்கள், ஹே மஹாலக்ஷ்மி அம்மா, இந்திராதேவி, உன்னை நம்பி உன்நாம ஜபத்தைச் செய்வது அல்லவோ முக்தி மார்க்கமாகவும், ராஜபாதையாகவும், ராஜஸேகரனாகிற ஸ்ரீமந் நாராயண திருவடிகளை அடைவிப்பதாகவும் சொல்லுகிறார்கள். ஹே த்யாக ராஜ மனோஹரி, சீதே, நாராயணி, உமா, என்னையும் நீதானே ஸம்ரக்ஷிக்க வேண்டும். நானும் உன்னைச் சேர்ந்தவன் அல்லவோ? மாதவி, வைஷ்ணவி, உனது மகிமைகள் அனந்தமல்லவோ?'') (422)

[தியானம்

நாராயணு, ஸஹதர்ம சாரிணி, பகவதி, உன்னை அண்டி கிருபையை வேண்டினுல் அல்லவோ, மனிதனே, தேவனே, யக்ஷனே ராக்ஷஸனே, உரககின்னனரர்களோ, மாயையிலிருந்து விடுபட்டு, மோக்ஷத்தை அடையமுடியும். எம்பெருமானுக்கு விலக்ஷண அடையாளமாக அமைந்துள்ள லக்ஷ்மியே, சீதே, நீவிபூதி உடமைகளில் பகவானைப் போல உரிமை கொண்டவள். ஆனுல் முகுந்தனை கணவனுக வரித்து அந்த நாராயணனை ஸம்ஸ்ரயித்தவளாதலால் நீ மனமுவந்து பகவானுக்கு சேஷப் பட்டவளாக நீயே நியமித்துக் கொள்கிருய். இத்தகைய நிலை பெற்ற நீ உலகசராசரங்களை பகவானுடைய மனே நிலைக்கு ஏற்ப ஸம்ரக்ஷிக்கிருய் என்ருலும், உன்னுடைய பரிபூர்ண தயை எங்கு போயிற்று? உன்னை பராசராதிகள் ஸர்வ பூதங்களுக்கும் ஈஸ்வரி என்று சொல்லுவதால், நீயும் முகுந்தனைச் சார்ந்தவளாக விருப்பதாலும், இந்த ஸகல சராசரங்களை நியமனம் செய்பவ ளாகவும், பகவானையும் ப்ரேரணை பண்ணும் ஆதி சக்தி தேவதை யாகவும் விளங்குகின்ருய். மஹாலக்ஷ்மியே, ஸ்ருதிகளால் புகழப் படும் உனது திருநாமங்களை எவன் பஜிக்கிருனே, அந்த மஹானுபாவன் பாபமாகிற காற்றினுல் இயக்கப்படும் பிறவி யாகிற ஜன்ம சக்கிரத்தால் சுழலுவதில்லையே. பகவானுக்கு உள்ளடங்கிய நீயும் பகவானைப் போல நிரூபிக்கும் தர்மமாய் உள்ளடங்கி நிற்கின்ற நிலையாகவிருக்கிருய். உன்னை அடைந்து புண்யம் பாபம் ஆகிற இருவகை கர்மங்களையும் விட்டொழிந்து உனது நாம பிரபாவத்தால் எங்களை வினைகளை முற்றிலும் தீர்க்கவேண்டும். அதனுல் ஸ்வயம்பு முனிவர் உன்னை ஸம்சாரார்ணவதாரிணி; நம்மாழ்வார் பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே என்றும்; ஸ்ரீஸூக்தியில் பட்டர் "பரமம் பதம் வாவி தீர்ய" என்று திருவாக்கும் அருளிச் செய்திருக்கிருர்கள். ஹே பத்ரே, அதனுல் வேதாந்த தேசிகர், "த்வத் ஸம்ப்ரீத்யை விஹரதி ஹரௌ ஸம்முகீநாம் ச்ருதிநாம் பாவாரூடௌ பகவதிः யுவாம் தம்பதி தைவதம் நः, உனது மகிழ்ச்சிக்காக விளை யாடும் எம்பெருமானிடம் நோக்கம் கொண்ட வேதங்களுடைய கருத்தில் ஏறிக்கொண்டு ஏக விஷயமாகிற உங்களது பதத்தை, அந்த நாராயண மஹாலக்ஷ்மி நித்ய தம்பதிகளாகிற நீங்கள் இருவர்களும் எங்களுக்குக் காண்பித்து தெய்வமாகிறீர்கள்," என்று சொன்னர். இவ்விதம் குரு பரம்பரையில் வரும் எனக்கு, தேவி, உன் கிருபை எப்போது கிடைக்கும்? வைநதேயரே,

அம்ருதத்தைக் கொண்டு வந்து, உமது தாயாகிய வினதையை சத்ருவினிடமிருந்து விடுதலை அளித்தீரே. நீர் மனம் வைத்தால்தான், மஹாலக்ஷ்மி நாராயணனின் கிருபையாகிற அம்ருதம் கிடைக்கும். உம்மைப் புறமாக வைத்து நித்ய தம்பதிகளை நான் ஆஸ்ரயிக்கிறேன்.]

"ஆசையாகிற மனோரதமும் ஒரு புழுவைப் போல விருக்ஷத்திற்குச் சமமான சரீரத்தை அரித்து நாசம் செய்கிறது. இந்த ஸம்சார முழுவதும் தேடிப் பார்த்தும், என் பிரபு, வைநதேயரே, அம்ருதத்தைக் கொண்டு வந்த ஸுபர்ணரே, எங்கேயாவது மனோரதங்கள் ஆகிற ஆசையில்லாதவன் இருக்கிறானா? அப்பேற்பட்ட ஆசையை வென்ற தீரன் இருக்கிறானா? அப்பேற்பட்ட ஆசையை வென்ற தீரன் இருக்கிறான் என்று நாம் இதுவரை கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. ஜகந்நாதருடைய வாஹனரே, பிள்ளையைப் பற்றியும், புத்ரியையைப் பற்றியும், வித்யை தனம் முதலிய ஐஸ்வர்ய விபவங்களைப் பற்றியும், லோகத்தில் மிக்க க்யாதியுடனும் விமல கீர்த்தியுடனும் வாழ்வது பற்றியும், ஆகிற மூன்று வித பிரபல இச்சைகளில் ஜகம் முழுவதும் ஊன்றியிருப்பதால், இந்தப் பரந்த உலகில் எவனுடைய ஸுமதியானது, நல்ல புத்தியானது, இவைகளின் பேரிலுள்ள ஆசையினால் கெடுக்கப்படாமல் இல்லை? நீரோ மஹா அறிவு படைத்தவராதலால், யோசித்துச் சொல்லும். பிரபு உம்மைத் தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்." (423)

"இவைகள் எல்லாம் மாயையின் மிக்க பலவான்களான பரிவாரங்கள். இவைகளின் மகிமைகள் அபாரமாக விருக்கிறபடியால், யாவராலும் அவைகளை வர்ணிக்கவே முடியாது. பகவான் சம்புவும், நான்முகரும் இந்த மாயையைக் கண்டு பயப்படத்தான் செய்கிறார்கள். அவர்களே அவ்விதம் கிலேசம் அனுபவிக்கும் போது, சாதாரண மனிதர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?" (424)

"மஹா மாயையின் பிரசண்டமானதும் மிக உக்ரமான ஸேனைகள் இந்த ஸம்சாரம் முழுவதும் பரவியிருக்கின்றன. காமம், க்ரோதம், லோபம் ஆகியவைகள் மாயையின் ஸேனாபதிகள்; டம்பம், கபடம் (வஞ்சனை), பாஷண்டிகள் (நாஸ்திகத்தை வாதாடுபவர்கள்) அவர்களுக்கு யுத்த வீரர்கள்." (425)

"அப்பேற்பட்ட மஹாமாயை ரகு வீரனுக்கு கட்டுப்பட்டு நடக்கும் தாசியாக விருக்கிறாள். அவளுடைய பிரபாவங்களை முழுவதும் அறியமுடியாத போனாலும் அவளை ஒரு விதமாகப்

புரிந்து கொண்டுவிட்டால், அவள் மித்யையைப் போல உரு இழந்துவிடுகிருள். அவளை அறிந்து கொள்வதும், அவளுடைய பிடியிலிருந்து தப்புவதும், பகவான் ராமசந்திரனுடைய கிருபை ஒன்றினுல் தவிர, வேருெரு வழி ஒன்றுமில்லை; என் நாதரே, ராம கிருபையின்றி மாயையை அறிந்து கொள்ளவும் முடிகிற தில்லை. இதை நான் ஸத்யமாகக் கோஷித்து நிச்சயமாகச் சொல்வேன்.'' (426)

''ராமச்சந்திரனுடைய ஆக்ஞைப்படி நடக்கும் அந்த மாயை ஜகம் முழுவதையும் ஆட்டிவைக்கிருள். அந்த மாயா தேவியின் வழிகளும் போக்குகளும் யாருக்கும் புலப்படுகிற தில்லை. பக்ஷிராஜரே, ஆனுல் அந்த மாயா தேவி தனது பரிவாரங்களுடன் பிரபுவின் கண்புருவங்களின் நெருப்பிற்கு பயப்பட்டு நடப்பவளாக, நாடக மேடையில் நடிக்கும் நடிகை மாதிரி, ஜகம் முழுவதிலும் நடிக்கிருள்.'' (427)

''எந்த மஹானுபாவன் சச்சிதானந்த கனமயமாக விருக்கும் என் பிரபு ஸ்ரீராமனை, மற்றவர்களைப் போல ஜனியாத அஜர் என்கிற நாராயணனை, விக்ஞான ஸ்வரூபி, தேக பலம், மனோ பலம், ஆத்ம பலம் ஆகிய பலம் வீர்யங்களுக்கு தாமர், சராசரங் களனைத்தையும் தாங்கும் வீர்யமுள்ளவர், பிரளயகாலத்தில் அழிந்துபோன சராசரங்களின் வித்துக்களுக்கு ஆதாரமாக விருக்கும் ஸ்ரீதாமர், ஸர்வ வ்யாபகரான விஷ்ணு பகவான், ஸர்வாந்தர்யாமியாகிற வ்யாப்ய நாராயணர், வாஸுதேவர், அகண்டசச்சிதானந்த பிரும்மம், தேச வரை, கால வரை ஸ்வரூப அளவு, கல்யாண குணங்களுக்குக் கணக்கு முடிவு பெருத அனந்தர், என் பிரபு ரகுநாயகன், சீதாரமணன் ஸம்பூர்ண சக்தி மதாம் ஸ்ரேஷ்டர், பிரும்ம ருத்ராதி தேவர்கள் அனைவர்களுக்கும் தேவதேவர், பரமேஸ்வரர் பூர்ணமான ஐஸ்வர்யம், ஸ்ரீதேவி, தர்மம், கீர்த்தி, வைராக்யம், மோக்ஷம் ஆகிற ஆறு குணங்கள் உள்ள பகவான்;'' (428)

''குற்றங்கள் அனைத்தையும் ஒழித்த அகுணர், மஹத், பிரும்மம் முதலிய சப்தங்களால் அறியப்படக் கூடிய அத்புதர், வாக்கு ஆகிற சப்த பிரும்மத்திற்கும், இந்திரியங்களுக்குப் புலப் படாமலும், அனுமான பிரும்மம் ஆகிய எல்லாவற்றிற்கும் மேலாக விளங்கும் பரபிரும்மம், பழகினவன் பழகாதவன், ஆவல் அதிகம் உள்ளவன் அதிகமில்லாதவன், பாபி புண்யாத்மா, தேவன் அசுரன் என்றும் வித்யாஸம் முதலியவற்றைப் பாராமல், ஒரே விதமான கௌரவம் கொடுக்கும் ஸமதர்சி, தோஷங்கள் இல்லாத

அனவத்யர், யாவராலும் மீறப்படாத ஆக்ஞையை உடைய வைகுண்ட பதியாகிற அஜிதர், பரத்வத்தை மறந்து சௌலப்ய, வாத்ஸல்ய, சௌசீல்ய குணங்களால் பிரகாசிக்கும் மமதை ரஹிதர், பேத புத்தி அற்ற நிர்மமர், ஞான வடிவாய் எங்கும் உள்ள நிராகாரர், மயக்க மற்ற நிர்மோஹர், முக்காலத்திலும் இருக்கும் நித்யர், அவித்யை மாயை இவைகளின் ஸம்பந்தமற்ற நிரஞ்சனர், சுகத்தைக் கொடுக்கும் ஸந்தோஹ லக்ஷ்மியின் நாதர், என் பிரபு ஸ்ரீராமன். (429)

"பிராக்ருத குணங்களால் பற்றப்படாதவர், ஸர்வ ஸ்வாமி, ஸர்வஸமர்த்தர், ஸதா ஸர்வ சாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக்கும் ஸர்வாந்தர்யாமி, ஸுபர்ணர், பிரம்மம் எனப்படும் பிரமாண பிரமேயங்களனைத்தையும் உடைய ப்ரம்மமீ, விகாரமில்லாத ஸத்யர், என்றும் சாஸ்வதமான அவிநாசி பிரும்மம் என்று சொல்லப்படும் ஸர்வஸ்வதந்தர பரபிரும்ம புருஷோத்தம ராமன், அந்த பிரபுவினிடம் மோஹம் எவ்விதம் ஏற்படும்? எங்கேயாவது மாத்யான்னிக சூர்யனைநோக்கி, அந்தகார இருட்டுக் கும்பல்கள் செல்லுமா?" (430)

"ஹே கருடமஹாராஜரே, பக்தர்களின் நன்மையை உத்தேசித்து, ஏதாவது ஒரு வியாஜத்தினால் தன்னைத்தானே அவதாரம் செய்துகொள்ளும் பகவான், என்பிரபு, ராமசசந்திரன் பூமியில் புவனமங்களார்த்தம் மானிட சரீரத்தை எடுத்தார்; அவர் சாதாண மனிதனைப்போல நடித்தார்; அவர் மானுஷ்ய சேஷ்டிதங்களைத் செய்தார். பிராகிருத குணங்களைக் கொண்ட மானிடனைப் போல நடித்துக்காட்டினார். அப்பேற்பட்ட பரம பவித்திரமான சீதாராம நாடகத்தில், (431)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மியின் பிரபுவான வாதால ஈசா, பிரபோ விஷ்ணோ, தாங்கள் காமம், மதம், க்ரோதம் முதலிய தோஷங்களற்று ஸர்வஸத்வகுண கல்யாண சீலராகவிருப்பதால், என்தாய் மஹாலக்ஷ்மி உன்னை "அகலகில்லேன்," என்று உன்னிடம் உறைந்திருக்கிறாள். அப்பேற்பட்ட கமலே, நீயல்லவோ தன்வந்திரியாகிற பகவானிடம் அம்ருதமாகவிருக்கிறாய். விஷ்ணோர் தேவத்வேதேவதேஹேயம் மனுஷ்யத்வோ மானுஷீ: இவ்விதம் தேஹானுரூபம் வைகரோத்யேஷாத் மதஸ்தனும்," என்று பராசரர் சொல்லியபடி பகவானுக்கு மனோனுகூலையாக திருமேனிக்குத் தக்கவாறு நீயும் உனது திருமேனியை அமைத்துக்

கொள்கிருய். ஹே விஷ்ணுபத்னி, மஹாலக்ஷ்மி அம்மா, அலர் மேல்மங்கையே, உன்னை எனது ரக்ஷணத்திற்கும் பகவானுக்குத் துணைசெய்யும் ஸஹகாரியாகவுமல்லவோ நீ ஒத்த வடிவம் கொண்டவளாக "ப்ராத்வம்" (அனுகூலையாக) ஒவ்வொரு அவதாரத்திலும் வடிவம்கொள்கிருய். அப்பேற்பட்ட மஹாலக்ஷ்மிக்கு நான் நமஸ்கரிக்கிறேன். அவதாரங்கள் தோன்றும் பிரிவின்றி பிராட்டி எம்பெருமானேடு ஒத்து, பாற்கடலில் அலைகளைப் போல பின்தொடருகிருள். சூர்யனுடைய பிரபையைப் போலவும் அக்னியின் ஸ்வாஹா தேவியாகிற தீக்ஷ்ண்யம் போலவும் அவதாரம் எடுக்கிருள். அப்பேற்பட்ட பிராட்டியின் அம்ருத திருஷ்டியினுல்தான் நான் கடைத்தேறப்பட வேண்டும்.]

"ஒரு நாடக அரங்கில் எவ்விதம் ஒரு வேஷதாரி பல வேஷங்களைத் தரித்துக்கொண்டு, ந்ருதியநாடகம் செய்கிருனே, அதைப் போல எம்பெருமானும் பிராட்டியும் சேர்ந்து நடிக்கிருர்கள். இது அவர்கள் செய்யும் லீலைகள். இதில் என்ன மனேபாவமிருக்கிறது என்று யாருக்குச் சரியாகத் தெரியும்? ஒருவருக்குமே தெரிய நியாயமில்லை." (432)

"கருட மஹாராஜரே, இவ்விதம் ரகுபதி சீதாதேவியுடன் லீலாநாடகம் செய்கிருர்; அவர்கள் ராஷஸர்களை விசேஷமாக மோஹித்தும், பக்தர்களை விசேஷமாக ரக்ஷித்தும், சுகங்களைக் கொடுப்பவராகவும் விளங்குகிருர்கள். விஷயகாமிகள் இருக்கிருர்களே, மலினமந்த புத்திபடைத்தவர்கள், அவர்கள் பிரபுவின் மஹத்வங்களை அறியாமல் தங்களைப்போல பிரபுவுக்கும் மோஹத்தை ஆரோபிக்கிருர்கள்." (433)

"காமாலை நோயினுல் பீடிக்கப்படும் ஒருவனுக்கு பார்ப்பதெல்லாம் மஞ்சளாகத் தோன்றும். அவனுக்கு தனது நயனங்களின் தோஷங்கள் ஒன்றும் தெரியவராது. அவனுக்கு எதைப் பார்த்தாலும், சந்திரனைப்போல மஞ்சளாகத் தோன்றும். பக்ஷி ராஜரே, எப்பொழுது ஒருவனுக்கு திசைகளின் அடையாளங்கள் தெரியவில்லையோ, அவ்விதம் திசை பிரமையேற்படும் அவனுக்கு தினேசனுகிற சூரியன் மேற்கில் உதயமாகிருன் என்றுதான் தோன்றும்." (434)

"ஒருவன் ஓடத்தில் ஏறிக்கொண்டு தன்னை ஸ்திரமாக நினைப்பவனுகவும், சகல ஜகம் முழுவதும் நடந்து சென்று கொண்டிருப்பதாகவும் நினைப்பான். அவனுக்கு அப்படி எண்ணம் உதிப்பதற்கு மோஹத்தைவிட வேறு ஒரு காரணமில்லை. பாலர்கள் தங்களைத்தானே சுற்றி வளைந்து விளையாடும்

போது, பக்கத்திலிருக்கும் கட்டிடங்களையும் சுழன்று வருவதாக பிரமை அடைகிறார்களல்லவா? வாஸ்தவத்தில் கட்டிடங்கள் அவைகளின் ஸ்தானத்திலேதான் அசைவற்று நிற்கின்றன. ஆனால் அந்த பாலர்கள் அவைகளும் சுற்றுகின்றன என்று சொல்லி பரஸ்பரம் விளையாட்டினால் பொய் சொல்லுகிறார்கள் அன்றோ?'' (435)

"கருட மஹாராஜரே, பகவான் ஹரியினிடத்தில் மோஹத்தை ஆரோபிப்பதும், இதேமாதிரிதான். பகவானிடம் ஸ்வப்னத்தில்கூட தோஷம் இருக்கச் சொல்வது அக்ஞானத்தின் பிரஸங்கத்தைத்தவிர வேறு ஒன்றுமில்லை; எந்த அபாக்யவான்கள் மாயாவசமடைந்து, மதிமந்தர்களாக அலைகிறார்களோ, அவர்களின் ஹ்ருதயத்தில் பல மாயைத் திரைகள் படர்ந்து அநேக பிரகாரம் அவர்களை வாட்டுகின்றன.'' (436)

"அப்பேற்பட்ட மூர்க்கர்கள் மன இருள் அடைந்தவர்களாக எதையும் ஸம்சயம் செய்கிறார்கள். அதனால் அவர்கள் நிஜ தோஷங்களை ஸ்ரீராமனின் பேரில் அக்ஞானத்தினால் ஆரோபிக்கிறார்கள்.'' (437)

"எவர்கள் காமக்ரோதமதலோபங்களினால் தாக்குண்டு அவதிப்படுகிறார்களோ, ஸதா தங்கள் கிரஹ விஷயங்களில் ஈடுபட்டுக்கொண்டு, வைராக்ய மனத்தை அடையாதவர்களாகவிருக்கிறார்களோ, அவர்களால் பிரபு ரகுபதியின் ஞான ஸ்வரூபத்தை எவ்விதம் அறியப்படும்? எந்த மூர்க்கர்கள் அந்தகாரரூபியாகிற பாழுங் கிணற்றில் விழுந்து தவிக்கிறார்களோ, அவர்களால் ராமனின் நிஜ ஸ்வரூபத்தை எவ்விதம் அறியப்பட முடியும்?'' (438)

"பரப்ரும்மத்தின் நிர்குண ஸ்வரூபம், ஜபதபாதிகள் மூலம் யாவும் எவ்வாறு சுலபமாக அறியக்கூடும்? அதேபோல, பகவானுடைய பரத்வமும் கல்யாண குணங்களும், சௌசீல்ய வாத்ஸல்யாதி குணோத்தமங்களிலும், அதிலும் அவதார காலங்களில் காட்டப்படும் விசேஷமான ஸர்வ ஸ்வதந்திரத்வமும், சுத்த ஸத்வ ஸகுண ஸ்வரூபங்களையும் முழுவதையும் தெரிந்துகொள்ளுவது மிகக் கடினம். இதனாலேயே பிரபு, பக்ஷிராஜரே, பல இதிஹாஸங்களையும், பிரபுவின் சுகந்தமான கீர்த்தி பிரபாவங்கள் அடங்கின பல புண்ய சரித்திரங்களையும் கேட்ட முனீஸ்வரர்கள் சில சமயம் திகைத்துப்போய், பிரமை அடைகிறார்கள். அவர்களும் மனம் கலங்கிவிடுகிறார்கள்.'' (439)

"பக்ஷி ராஜனுன கருட மஹாராஜரே, இன்னொரு தடவை நான் தங்களுக்கு விக்ஞாபிக்கிறேன். தாங்கள் கவனத்துடன் கேட்கவேண்டும். ரகுபதியின் பிரபுத்வங்கள் அனந்தமாக விருக்கின்றன. நான் என் புத்திக்குத் தக்கபடி அந்த கதையைச் சொன்னேன். பிரபோ, நானே மோஹத்தின் வசம் அடைந்து, மஹா பயங்கரமான அனுபவங்களை ஒரு சமயம் அனுபவித்தேன். அந்த விபரங்களையும் நான் உமக்குச் சொல்கிறேன். அவைகளையும் தாங்கள் கேட்கவேண்டும்." (440)

[தியானம்

அம்ருதே, பரமேஸ்வரி, மஹாலக்ஷ்மி அம்மா, உன்னை வாத நிகேத நாதன் ஸந்நிதியில் கருடனை புறம் வைத்து ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். காமதேவனின் ரிபுவான மஹேசர் கூட உன்னுல் வெல்லப்பட்டு, உம்முடைய மோஹினி அவதாரத்தினுல் மனம் கலங்கினவராக, ரேதஸ்ஸை விட்டவரானுர். காமம் யேற்படுவதற்கு கர்ம ஸம்பந்தமே காரணமாகச் சொல்லுகிருர்கள். ஆதலால் கர்மங்களைத் தொலைக்க, ஆத்மாவைக் கண்டு பிடிக்கவேண்டுமென்று சொல்லுகிருர்கள். ஆத்மாவைக்கண்டு அனுபவிப்பதற்கு அதற்கு விரோதியான கர்மங்களின் ஸம்பந்தங்களை அற்றுப் போவதலை யோகீஸ்வரர்கள் விரும்புகிருர்கள். ஆத்ம விரோதியான கர்ம ஸம்பந்தத்திற்குக் காரணம் அவித்யையாகிற அக்ஞானம் என்று சொல்லப்படுகிறது. ஆத்மாவில்லாத தேகத்தை ஆத்மாவாகப் பார்த்தல் "அக்ஞானம்" என்று தொன்று தொட்டு சொல்லுகிருர்கள். அசுரர்களிடமும் தயை செய்த வாதாலபுரீஸா, ஸ்வர்பானுவே, வீரபாஹுவே, சார்ங்கதன்வா, ஸ்வவசரே, இந்த அவித்யை ஒழிவதற்குக் காரணம் பிரகிருதி ஸம்பந்தமாதலால், அதையும் விடவேண்டும் என்று யோகிகள் சொல்லுகிருர்கள். பிரகிருதியை ஞான விரோதி என்று சொல்லப்போமானுல், மூன்று குணங்களாகிற ஸத்வரஜஸ் தமஸ் ஆகியவை பிராப்ய பிராபக விரோதிகளாகி விடுகின்றன. இவ்விதமான ஆத்ம ஸ்வரூபம் இயற்கையிலேயே உமாமஹேஸ்வரதத்வமாகிற ஞான ஆனந்த லக்ஷணமாக வுள்ளது. அந்த ஐக்யநிலை ஆத்மாவிற்கு சரீர சம்பந்தத்தாலே மறைக்கப்பட்டிருக்கிறபடியால் ஆத்மாவில் நாட்டம் ஏற்படுகிறதில்லை. இந்திரிய நிக்ரஹம் செய்தவனும், மனத்தை அடக்கினவனுமோ, அக்ஞானத்தாலே கர்மம், கர்மத்தாலே அசித் ஆகிற பிரகிருதி ஸம்பந்தத்தைவிட யத்தனிக்கிருர்கள். பேரருளாளா,

பதகேஸ்வரரே, ஸுபர்ணரே, ஒருவனுக்கு பிரகிருதி ஸம்பந்தம் விலகி, ஆத்ம ஸம்பந்தம் எனப் பேறு கிடைக்கவேண்டுமானல், பிராட்டியின் பேரருளால்தான் கிடைக்கப்பெறும் என்று வேதாந்த தேசிகர் முதலிய மஹாயோகிகள் சொல்லுகிருர்கள். விஷ்ணுகாந்தே, பெருமாள் திருவுள்ளத்துக்கு ஏற்ப அவதாரம் செய்யும் என் அம்மா, தாயே, எனது புருஷகாரத்திற்கு தேவைப் படக் கூடிய இந்திரிய மன நிக்ரஹத்தைக் கொடுத்து என்னை நித்ய தம்பதிகளான உங்கள் இருவர்களுக்கும் அபிமதவிஷய மாகயிருக்கை பண்ணு. என் தாயே, பரதேவதே, பிரகிருதி விகிருதி என்று சொல்லப்படும் மால் இனியவளே, உனது தயையை அல்லவோ நான் யாசிக்கிறேன்.]

''என் அருமைப் பிள்ளாய், பதகேஸ்வரரே, நீர் சீதாராம தம்பதிகளின் கிருபையை அடைந்து விட்டீர், மஹா உத்தம நித்ய தம்பதிகளின் பசுமையான கீர்த்தி குண ஸுதாவை நீர், (பகவான் மோஹினி அவதாரத்தில் தேவர்களுக்கும் ஸ்வர்பானு போன்ற அசுரர்களுக்கும் அம்ருதத்தைக் கொடுத்து, ஆனந்தப் படுத்தி, கெட்ட எண்ணமுள்ள அசுரர்களை வதைத்த மாதிரி,) உமது மஹா மோஹங்களை அழித்து, உமக்கு ஸர்வ காலத் திலும் மன இந்திரிய அடக்கம் கொண்ட விவேக ஞானத்தையும் அதனுல் சித்சுக ஆனந்தத்தையும் அடைவதற்கு, நான் பிரீதி யுடன் உமக்கு ஸூக்ஷ்மங்களடைங்கின எனது சொந்த இதிஹா ஸத்தைச் சொல்லுகிறேன். இதிலிருந்து தாங்கள் என்னைப் பூர்ணமாக நம்பவேண்டியிருக்க, எனது விருத்தாந்தங்களை ஒன்றையும் விடாமல், மறைக்காமல், நான் உண்மையாகச் சொல்கிறேன். இது பரம ரஹஸ்யம், மனோஹரமானதும், தேக ஆத்ம தத்வத்தின் நிஜஸம்பந்தத்தை அறிவிக்கக் கூடிய மார்க் கத்தை, ஸ்வாமி, உமக்கு உபதேசிக்கிறேன்.'' (441)

''முதலில் பிரபு, ஸ்ரீராமச்சந்திரனுடைய இயற்கையானதும் ஸஹஜமானதுமான ஞான ஆனந்த லக்ஷணமுள்ள ஸ்வபாவத் தைக் கேளுங்கள். அந்த மஹானுபாவர் அபிமதமாக ஸ்வ இச்சையுடன் நடக்கும் மதம் பிடித்தவர்களை, ஸ்வரூபம் இழந்த வைஷ்ணவர்களை, அபிமானிக்கிறதில்லை. ஏனெனில் அவர்கள் தேகம் ஆத்மாவைவிடப் பெரியது என்று நினைப்பவர்கள். சரீர சம்பத்ததாலேயே வரும் அபிமானம் ஜன்ம மரண ரூப ஸம்சாரத்திற்கு மூலமான காரணம். அதனுல் பிரகிருதி ஸம்பந்தம் பெற்ற ஜீவன் அறிவை யிழந்து இயற்கையான ஆனந்த ரூபத்திலிருந்து நழுவினவனுக, அநேக பிரகாரமான

கிலேசங்களையும் துக்கங்களையும் ஸமஸ்த சோக வருத்தங்களையும் அனுபவிக்கிறான்.'' (442)

'' பிள்ளாய், அப்பேற்பட்ட ஸ்வாபிமானிகளை கிருபாநிதியான பிரபு திருத்திப் பணி கொள்ளுகிறார். அவர்களுக்கு அந்த தேக ஆத்ம ஸம்பந்தத்தை நிரூபிப்பது போல, அவனுக்கு புத்தி புகட்டுகிறார். தனது ஸேவகர்களிடம் அவர் அபிமானம் கொண்டவராக அவனுடைய மமதையை அடக்கி, அவனைத் திருத்திப் பணி கொள்கிறார். கிருபாநிதியான என் பிரபு, சிசுவின் உடம்பில் புண் ஏற்பட்டால், நல்ல எண்ணமுள்ள தாயார் தனது ஹ்ருதயத்தை கல்லைப்போல கடினமாக்கிக் கொண்டு, அந்த புண்ணைத் திறந்து விடுகிறாள் அல்லவா?'' (443)

'' குழந்தைக்கு ஆரம்பத்தில் வலி ஏற்படுவதால் அது கத்தித் தீர்த்தாலும், தாயாரானவள் அதை பொருட்படுத்துகிறதில்லை. நாளடைவில் ரோகத்தின் பீடை அடங்கின பின்பு, தாயாரும் குழந்தையும் சந்தோஷத்தை அடைகிறார்கள். இது சிறு குழந்தைக்கு தாயார் செய்யும் ஹிதம்.'' (444)

'' அதைப் போல பிரபு ரகுபதி தனது நிஜதாஸர்களுடைய குறைகளைப் போக்குவதற்கு அவனுடைய ஸ்வாபிமானத்தை நாசம் செய்கிறார். அவனுக்கு, பகவான் ஒருவன் இருந்து எல்லோரையும் நடத்தி வைக்கிறான் என்கிற எண்ணத்தை புகட்டுகிறார். அப்பேற்பட்ட மஹாகிருபாளுவாகிறவரும், (எனது ஆசாரியரான துளசிதாஸரின் பிரபுவுமான) ஸ்ரீராமச்சந்திரனை விட்டுவிட்டு, நாம் ஏன் ப்ரமை வசம் அடைந்து அவரைப் பஜிக்காமல் இருக்கவேண்டும்!'' ('' ஹே மனஸே, பிரபு ராமச்சந்திரனை விட்டு உனக்கு வேறு ஒரு கிருபாளு இருக்கமுடியாது; உனது மதி மயக்கத்தைத் தியாகம் செய்துவிட்டு, அவரையே பஜிப்பாயாக.'') (445)

'' பக்ஷிராஜ கருடரே, இன்னமும் கேளும். பிரபு ராமச்சந்திரனுடைய கிருபையைப் பற்றியும் என்னுடைய மதிமயக்கத்தையும் பற்றிக் கேளும். நான் சொல்லுவதை கவனமாகக் கேளும். எப்போது எப்போது பிரபு ஸ்ரீராமன் மனித சரீரம் எடுத்து அவதாரம் செய்கிறாரோ, அந்த அந்த சமயங்களில் அவர் பக்தர்களைக் காரண ஹேதுவாகக் கொண்டு பல லீலைகளைச் செய்கிறார்.'' (446)

'' நான் எந்த எந்த சமயங்களில் அயோத்யாபுரிக்குச் செல்லுகிறேனோ அந்த சமயங்களில் அவருடைய பால சரித்திரத்தில் செய்து காட்டிய பால லீலைகளைக் கண்டு மிக்க ஆனந்தப்படு

கிறேன். அவருடைய பிறந்ததின ராம நவமி ஜன்ம உத்ஸவத்தைக் காண்பதற்கு அடிக்கடி ஆசைப்படுகிறேன். பகவானுடைய பால்ய லீலைகளின் ஆனந்தங்களையே ஸ்மரித்து ஆனந்தமடைபவனாக நான் ஐந்து வர்ஷங்கள் அயோத்தியிலேயே தங்கி விடுகிறேன்.'' (447)

''என்னுடைய இஷ்ட தைவம் பால ராமன்தான். அவருடைய சேவைகள் நிறைந்த திவ்ய மங்கள விக்ரஹம் கோடிக் கோடி காம தேவர்களுக்கு மேலாகவும் ஒப்பிட முடியாமல் ஸர்வ ஸ்ரேஷ்டமாகவுமிருக்கிறது. ஹே உரகாரி, சர்ப்பங்களைப் புஜிப்பவரே, பிரபுவினுடைய திவ்யமான சுந்தரவதனத்தைப் பார்த்து, ரமித்துக்கொண்டு, என்னுடைய லோசனங்களின் ஸுபலமான திருஷ்டி ஆனந்தத்தைப் பரிபூர்ணமாக நான் அடைகிறேன். பிரபுவின் திவ்ய அழகு எனது நேத்திரங்களுக்குப் பரிபூர்ண ஆனந்தத்தைக் கொடுக்கிறது.'' (448)

''மஹா ராஜரே, நான் சிறியவாயஸத்தின் ரூபத்தைத் தரித்துக் கொண்டு, என் பிரபுவின் சமீபம் போய்ச் சேர்ந்து, அவருடைய பால லீலைகளை நேரில் கண்டு ஆனந்திக்கிறேன்.'' (449)

''அவர் எங்கு எங்கு செல்லுகிருரோ, நானும் அவருடன் சென்று உச்சிஷ்டத்தை (சாப்பிட்டது போக மிச்சமிருப்பதை) நான் சாப்பிடுவேன். அவரும் எனக்கு ஆகாரத்தை வீசி எறிவார். அதையும் நான் சாப்பிடுவேன்.'' (450)

''ஒரு சமயம் என் பிரபு ரகுவீரன் அதிசயிக்கும்படி பால சரித்தர லீலைகளைச் செய்தார்.'' அந்த புண்ய சரித்திரத்தின் லீலைகளை ஸ்மரித்த மாத்திரத்தில் ஸ்ரீகாகபுசுண்டியின் சரீரம் பிரேமை ஆனந்தம் தாங்கமுடியாமல், அவர் புளகாங்கித மடைந்தார். (451)

காகபுசுண்டி மீண்டும் சொன்னுர். ''கருட மஹாராஜரே, பதகேஸ்வரரே, தயவு செய்து கேளும். ராமசரித்திரம் அவருடைய பக்தர்களை இன்புறச் செய்கிறது. அயோத்தியிலிருக்கும் ராஜமஹால் மிக்க அழகானதாகவும் ஒவ்வொரு விதத்திலும் அதி உன்னதமாகவு மிருக்கிறது. அது தங்கத்தால் கட்டப்பட்டதாகவும், ரத்ன மணிகளால் அலங்கரிக்கப் பட்டதாகவும் சிறப்புடன் விளங்குகிறது.'' (452)

''அந்த சுந்தரமான அரண்மனையின் வெளிமுற்றம் வர்ணனை செய்ய முடியாதபடி மிக்க அழகுடன் விளங்குகிறது. அந்தவிடத்திற்கு பிரபு தன் தம்பிமார்களுடன் விளையாடுவதற்கு தினமும் வருவார். அங்கே என்பிரபு தனது தாய்மார்களின்

சந்தோஷத்திற்காக விநோதமான விளையாட்டுகளைச் செய்வார். அவர் அந்த முற்றத்தில் நடமாடுவார். அப்போது நான் அவர் சமீபம் சென்று அவரைத் தரிசிப்பேன்.'' (453)

"மரகத மணியின் நிறத்தைப் போல அவருடைய பசுமையான சரீரம் அதிகோமளமான அங்கங்களுடன் பிரகாசிக்கும். ஒவ்வொரு அங்கத்தின் அழகைப்பற்றிச் சொல்லித்தான் ஆக வேண்டும். சுபாங்கரான அவருடைய ஒவ்வொரு அங்கத்திலும் காமதேவனின் சோபைகளைவிட அதிஉன்னதமான அழகு ஜ்வலிக்கும். அவருடைய ராஜீவ சரணங்கள் அப்போது அருணோதயத்தில் மலர்ந்த செந்தாமரையைப்போல விகஸித்து பிரகாசிக்கும். அவருடைய பாதசரணங்கள் மிருதுவானதாகவும், பங்கஜ மலரைப் போல ருசிகரமாயிருக்கும்; அதில் நளினமான விரல்கள்; நகங்களின் ஜ்யோதிகள் சந்திரனுடைய காந்திகளையும் வெட்கப்படச் செய்யும்.'' (அந்த மிருதுவான ராம பதாப்ஜங்களை கருடன் காகபுசுண்டியைப் புறமாகவைத்து நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (454)

[தியானம்

நாராயணி, மஹாலக்ஷ்மி, நித்யகல்யாணி, பரமசிவகாமினி, தேவி, ஜகன்மோஹனு, ஜகன்மாதா, ராஜஸ்ரீ, காமாக்ஷி, நிர்வாண சுகப்ரதாயினி, உன்னுடைய பிரபை தேஜோமயமாக விருக்கிறது. வாமனுவதாரத்தில் சுக்ராசார்யரால் துரிதமாக எதிர்கொண்டு வரவேற்கப்பட்ட மனோஹரமான பகவானுடைய ரூபம் உன்னுல் ஆஸ்ரயிக்கப்பட்டிருந்தபடியால் அல்லவோ தேஜோமயமாக விளங்கியது. மிகுந்த பக்தியுடன் மஹா சுக்ருதம் செய்த பலிச்சக்ரவர்த்தி தங்கள் திருவடிகளை அலம்பி, எல்லாத் தீர்த்தங்களையும் தீர்த்தமாக்கும் மஹா தீர்த்தமாகிற அந்த ஜலத்தை, எந்த பாதசரணங்களின் கங்கா ஜலத்தை என்பிரபு பரமசிவன் தன் தலையில் தாங்கி, சுமக்குகின்ருரோ, அப்பேற்பட்ட பாததீர்த்தத்தை, பலி, அசுரனுகவிருந்தும் கூட, பிரஹ்லாத வம்சத்தில் ஜனித்த படியாலும், சுக்ராசார்யரை குருவாக வரித்திருந்தபடியாலும், பிராம்மணர்களிடம் அன்பு செலுத்தி, பூஜை செய்ததாலும், ஹேவிபோ, குருபுராலய, முராரிபு, அடைந்தான். அப்பேற்பட்ட சுபாஸ்ரயமான பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹம், நீலதோயத மத்யஸ்தாத் வித்யுல்லே கேவபாஸ்வரா, என்கிறபடி மின்னல் கொடியைப் போல விளங்கும் உனது தேஜஸால் அல்லவோ, காரணமா

கிறது. கௌஸல்யைக்கும் அதிதிக்கும், தேவகி, யசோதைக்கும் பிரும்ம தேஜஸ் என்று சொல்லப்படும் காயத்திரியின் தேஜஸ் ஸினுல், அப்ரமேயம் ஹிதத் தேஜ: யஸ்யஸா ஜனகாத்மஜா, என்று சொல்லும்படி, "ஹே பகவதி, உனது திருவடிகளின் செப்பஞ்சியை அடையாளமாகக் கொண்ட பகவானுடைய பூர்ண அழகு ஏகலக்ஷ்யமாக என்னுல் துதிக்கப்படுகிறது." ஹே பரமேஸ்வரி, காத்யாயனி, நான் பலவாக ஆகக்கடவேன் என்று தனது இஷ்டப்படி நாராயணர் நினைக்க ஆரம்பித்தவுடன் பரிபூர்ணமான தேஜோமயமான உனது ஸ்வரூபம் பரப்ரும் மத்தை அடைந்து, சேதன அசேதனங்களுக்கு சரீரம் கொடுப் பது போல, நீ நாராயணி, மாதவி, மார்க்கண்டேயரால் வணங் கப்பட்ட ஜகன்மாதாவே, நாராயணருக்கு சரீரத்தைக் கொடுத்து நாராயணன் என்கிற பரமாத்மாவை "தேஹி" என்று சொல் லும்படி, உடலுடன் கூடிய காரண பிரும்மமாக விருக்கிருய். அதனுல் அல்லவோ நீங்கள் இருவர்களும் ஜகத் கல்யாணம் என்று சொல்லப்படுகிறீர்கள். தாமோதரா, உபேந்திரரே, திருவேங்கடமுடையானே, ஸ்ரீவத்ஸமார்பனே, ஸ்ரீதரனே, சேதனு சேதனங்கள் ஒடுங்கிய பிரும்மம் விரிவடைந்தாலும் உங்கள் இருவர்களுக்கும் விகாரம் என்கிற மாறுபாடு ஏற்படுகிற தில்லை. அதனுல் மாதவா, ஹ்ருஷிகேசா, தாங்கள் இருவர்களும் ஸத்யம், ஸத்வம் என்று சொல்லப்படுகிறீர்கள். நூலை விரித்தும் அதுமாதிரி ஒடுக்கும் சிலந்திப்பூச்சியைப் போலவும், தோகையை விரித்துச் சுருக்கும் மயிலைப் போலவும் இருக்கிறீர்கள். அந்த லக்ஷ்மி ஸம்பந்தம் பெற்ற பிரும்மம், என் ஸமாதிக்கு ஏக லக்ஷ்ய மாக விருக்கிறது. காரணத்வாதிகளைவிட ஔபாதிகமான காரணத்வாதிகளை உடைய பிரும்மா முதலானவர்களும், தங்களையே உபாஸிக்கிறபடியால், ஹே அர்ஜுன ஸகாவே, துளசி ஸகாவே, கருடவாஹனரே, வாமனரே, காஸ்யப புத்ரரே, நம்மாழ்வார், பட்டர் முதலியவர்களால் போற்றப்படும் ஸ்ரீவத்ஸ ஸ்ரீதரரே, உமக்கு லக்ஷ்மி சம்பந்தமாகிற ஜகத்தும், சரீரமும், ஸ்ரீயப்பதித்வமும், அஸாதாரணமான லக்ஷணங்கள் அன்றோ. வேதங்களும் முராரியின் மார்பில் பிராட்டியின் திருவடியடை யாளங்களைக் கண்டு யத்பாத சின்னஸ்தரந்தி, நாராயண னுடைய பரதத்வத்தை நிர்ணயம் செய்கின்றன. அப்பேற்பட்ட பிராட்டியாகிற ஜானகி ஸம்பந்தத்தைக் கொண்ட ராமனை நான் கருட பிரமுகாதிகளை வைத்து ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.]

"அந்த மஹா பாதங்களில், பலி, பரமேஸ்வரன் முதலியவர்களால் தரிசிக்கப்படும் கங்கை தீர்த்தம் போல மஹா தீர்த்த உற்பத்தி ஸ்தானமாக விளங்கும் பாதாப்ஜங்களில், கருட மஹாராஜரே, ஜகந்நாதருடைய ஸ்ரீயப்பதித்வத்தை விலக்ஷணமாகக் காட்டும் (வஜ்ரம், அங்குசம், த்வஜம், கமலம்) ஆகிய நான்கு புருஷோத்தம லக்ஷணங்கள் அழகாகவும், மஹா தேஜஸ்ஸுடனும் பிரகாசித்தன. அவருடைய பாதசரணங்களில் கணீர் கணீர் என்று ஒலிக்கும் அழகான கொலுசுகள் அலங்கரித்தன. ஸப்தஸ்வரங்களை மதுரமாக பாவராகத்துடன் ஒலித்துக்கொண்டு, பிரபுவினுடைய நடை அழகை மேன்மைப் படுத்தின. அழகான தங்க அரிஞ்ஞளும் சலங்கையும் அவருடைய இடுப்பை அலங்கரித்தது. அவைகளில் ரத்னமயமான மணிகளும், மாணிக்கங்களும் பொதைக்கப்பட்டிருந்தன. அந்த கடிசூத்ரம் அழகான சப்தப் பெருக்குடன் காதுகளுக்கும், கண்களுக்கும், மனத்திற்கும் மதுரமாக விருக்கும்படி பிரகாசித்தன." (455)

"அவருடைய வயிற்றுப் பிரதேசத்தில் மூன்று ரேகைகள் போல மடிப்புக்கள் அழகாக விருந்தன. அவருடைய நாபி ஆழமாகவும், கம்பீரமாகவும் இருந்தது. அவருடைய விசாலமான வக்ஷஸ்தலத்தில் அநேக பிரகாரம் ஆபரண மணிமுத்துக்களும், சிறு குழந்தைக்கு ஏற்ப, பட்டு வஸ்திரமும் வெகு சோபிதமாக விருந்தன." (456)

"அவருடைய கைகளும், விரல்களும், அவைகளில் உள்ள நகங்களும் சிவப்பாகவும், மிக்க மனோஹரமாகவும் இருந்தன. அவருடைய விசாலமானதும் மிக்க அழகானதுமான புஜங்களில் அழகான ஆபரணங்கள் அலங்கரிக்கப்பட்டிருந்தன. பால சிம்மத்தைப் போல தோள்களும், சங்கு போல கழுத்தும், அதில் மூன்று ரேகைகளுடன் வெகு நேர்த்தியாக விருந்தன. அவருடைய முகம் மிக்க மிக்க அழகாயும் அழகின் அருளாகவும், அதன் எல்லை போலவும் அதிசோபிதமாக விருந்தது." (457)

"அவருடைய மழலைச் சொற்கள் இனிமையாகவும் மதுரமாகவும் அழகாயுமிருந்தன. அவருடைய சிகப்பான உதடுகள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. இரண்டு இரண்டு பற்கள் மேல் தாடையிலும் கீழ்தாடையிலும் அழகாகவும், சிறியதாகவும், ஜ்வலிக்கும் முத்துக்களைப் போலவுமிருந்தன. அவருடைய கன்ன பிரதேசங்கள் பளபளப்பாகவும் லலிதமாகவுமிருந்தன. அவருடைய மூக்கு நவசம்பகபுஷ்பத்தைப் போல தீர்க்கமாகவும்

மனோஹரமாகவுமிருந்தது. அவருடைய மந்தஸ்மித சிரிப்பு சகல தாபங்களையும் அழிக்கக் கூடியதாகவும், சந்திரனுடைய காந்தியை விட மிக்க மதுரமாகவுமிருந்தது.'' (458)

''அந்த மஹா பிரபுவினுடைய லோசனங்கள் நீலகமல புஷ்பங்களைப் போல அழகாகவிருந்தன. அவைகளால் ஒரு தடவை யாவராவது கடாக்ஷிக்கப்பட்டால், ''பவமோசனம்'' ஏற்படுகிறது. அவருடைய நெற்றியின்மீது அழகான கஸ்தூரி திலகம் பிரகாசித்தது. அவருடைய காதுகள் ஸமமாகவும், அழகாயுமிருந்தன. அவருடைய கேச பாசங்கள் கருப்பாகவும், அடர்த்தியாகவும் சுருளாகவும் அலைகள் போலவும் படர்ந்து தொங்கின. ''(ஹே ராம், உனது தரிசனம் எப்போது எனக்கு கிடைக்கும்?'' (459)

[தியானம்

ராவணனைக் கொன்ற ராவணாரியின் ஜானகி, அம்மா நீ தானே தர்மஸேது என்று வேதாந்த தேசிகரால் அழைக்கப்படுகிறாய். ஹேஸித்த லக்ஷ்மியே, நீ தானே பகவானுடைய கருத்தாகவுமிருக்கிறாய். ஹே லக்ஷ்மி, உனது பாரதந்திரியமான ஜீவனமும் பகவானிடம் இருப்பதாலே, எங்களை பூர்ணகாமர்களாக ஆக்குகிறது. ஸர்வலக்ஷண ஸம்பன்னா, ஜகன் மாதா, பலியினால் அளிக்கப்பட்ட திரிபத ஸாம்ராஜ்ய லக்ஷ்மியே, நீ தானே எனக்கும் கங்கைக்கும் மாதாவாகிறாய். பகவானுடைய பாதங்களை ஆஸ்ரயிக்கும் பக்தர்களையும் காக்கிறாய். தேவி, நாராயணி, உன்னிடம் செய்யப்படும் பிரபத்தி அநிஷ்ட நிவிருத்தியையும், இஷ்டப் பிராப்தியையும் கொடுக்கும் ஸித்தி க்ஷேத்ரமாக விளங்குகிறது. உன்னுடைய பாதபத்மங்கள் மோக்ஷ பரியந்தம் எங்களை அழைத்துச் செல்லுகின்றன. ஹே இந்திரா, வாஸுதேவ மஹிஷி, ரெங்கநாயகி, புருஷகாரமாகப் பண்ணும் சரணாகதியை ஏற்று எம்பெருமானை எனது பிரபத்திக்கு உபாயமாக அமைக்கிறாய். உன்னிடம் செய்யும் சரணாகதி இன்னொரு பலனாகிற மோக்ஷம் பெறுதலையும் அடையவிப்பதாக விருக்கிறது. ''ஸம்சாரபந்த ஸ்திதிமோக்ஷ ஹேது,'' என்கிறபடி மோக்ஷமளித்தல் எம்பெருமானுக்கே உரியது என்றாலும் உனது திருவுள்ளப்படி அல்லவோ, அவனும் மோக்ஷமளிக்கிறான். பராசரர் விமுக்தி பலதாயினி என்றும், நம்மாழ்வார் ''வேரி மாருத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே,'' என்றும், நான் உன் நிஜஸ்வரூபத்தை அறிந்து வேதாந்த தேசிகரை புறம்

வைத்து உனது பாதபத்மங்களை ஸேவித்து, வாஸுதேவ பதங்களில் ஸதா நிலைத்து இருக்க விரும்பி சரணமடைகிறேன். திருவேங்கடவா, மொய்த்த பூஞ்சோலை யானே, கிருபை செய். வாதால ஈசா, நீதான் எனக்குத் தஞ்சம்.]

"அழகாக நெய்யப்பட்டதும், மிக மிக மிருதுவானபட்டுப் பீதாம்பரம் ஒன்று பிரபுவின் நளினமான சரீரத்தின்மேல் போடப்பட்டிருந்தது. அந்த மஞ்சள் நிறமுள்ள பீதாம்பரம் சியாமள சரீரத்துடன் இருக்கும் ரகு நந்தனின் அழகின் சோபைகளை பல விதமாகத் தூக்கிக் காண்பித்தது. ஆனந்தக் களிப்பினால் ஏற்படும் அவருடைய மதுரமான குரல்கள் என் மனத்தை அபஹரிப்பதாக எப்பொழுதும் இருக்கின்றன. அவருடைய கண்களின் வீக்ஷண்யங்களும் என்னை ஆனந்தப் பரவசம் செய்கின்றன. அந்த ரூப சௌந்தரிய அழகு குவியல்களை நான் பார்த்து அவருடைய மாதுரிய பேச்சுக்களைக் கேட்டு, என் சித்தம் ஸதா அவைகளிலேயே ஈடுபாடு அடைந்திருக்கின்றன. கருடரே, (பலிசக்கிரவர்த்தியை வருணபாசத்தினால் கட்டிய விஷ்ணுவின் அந்தரங்கப் பிரியரே, வேதாத்மாவே,) என்னைப்போல ராஜா தசரதரும் வெளிமுற்றத்தில் உட்கார்ந்து கொண்டு பிரபுவின் நடை அழகைப் பார்த்து ரமித்துக் கொண்டு இன்புறுவார். அப்போது அந்த மஹா பிரபு தனது பிரதிபிம்பத்தின் நிழலைக் கண்டு, ஆச்சரியப்படுபவராக எங்கள் இன்பத்திற்காக நாட்டியம் ஆடுபவர் போல உபகாரியாக விருப்பார்." (460)

"அவருடைய பால லீலைகளை ஸ்மரிக்கும் போதே எனக்கு அவரிடம் பரம மோஹத்தை உண்டு பண்ணுகின்றன. அந்த உத்தம சரித்திரத்தை வர்ணனை செய்வதற்கே, எனக்கு லஜ்ஜை கூட ஏற்படுகிறது. அவர் மஹா சப்தம் செய்து கொண்டு என்னைக் கைகளால் பிடிப்பதற்கு ஓடிவருவார். நான் கொஞ்ச தூரம் தாவிச் செல்வேன். அப்போது அவர் எனக்குத் தின்பண்டத்தைக் காண்பித்து அருகில் வரும்படி கை செய்து அழைப்பார்." (461)

[தியானம்

நாராயணி, பரமேஸ்வரி, ஹிமகிரிதனயே, உமா, உனது கிருபையினால் தான் அம்மா ஒருவன் ஞானத்தை அடைகிறான். ஹேஹைமவதி, மஹேந்திரனுக்கு நீ தானே பரருபிம்மத்தின் ஸ்வரூபத்தை உபதேசித்தாய். அந்த ஸ்வரூபம் ஞான வடிவாகக் கொண்டதல்லவா! அந்த ஞான ஸ்வரூபத்தை மத்ஸ அவதாரத்

தின் சமயம் பிரும்மாவும் ஸப்தரிஷிகளும் மார்க்கண்டேயரும், வைவஸ்வத மனுவும், சத்யவ்ரதன் என்கிற பாண்டிய அரசனும் பார்த்தார்கள் அல்லவா? பிரபஞ்ச நாகாரபதே, நாரதாதிரிஷி களுக்கு ஏற்பட்ட உமது ஞானமும் ரொம்ப பிரஸித்தமல்லவோ? அகஸ்தியமாமுனிவர்களும், பிரஹஸ்பதியும், சுக்ராசார்யரும் அந்த ஞான ஸ்வரூபத்தை அல்லவோ மிகப் புகழ்கிறார்கள். அந்த ஞான ஸ்வருபமும் உமக்குச் செய்யப்படுவதும் உம்மையே விஷயமாகக் கொண்டதுமான ஆராதனை என்று சொல்லப்படும் கர்மத்தையே அனுசரித்துச் செல்லுகிறது. அப்பேற்பட்ட கர்ம ஞானமும், பல கர்மாக்களுக்கு அப்புறமும், பல கோடி கோடி கணக்கான ஜன்மங்களுக்கு அப்பாலும், அது வும் உனது கிருபை ஒன்றினால் தான் அடையப்படுவதாக விருக் கிறது. இப்பேற்பட்ட பரம் க்லேசங்களுக்குப் பின் அடையப் படும் ஞானத்தைவிட, உனக்கு அடங்கினவனாக, உனது சங்கல்ப திருவுள்ளப்படி நடக்க நிச்சயித்திருக்கும் என்னையும் உனது கிருபையினால் ஆட்கொள்ளமாட்டாயா? உன்னையே நம்பினவனை, ஹே ஹேமவதி, ராம சீதா, கைவிடத் தீர்மானித்து விட்டாயா? சரி. உனது இஷ்டப்படியே செய்யும். ஸ்ரீதரா, வாமனா, குருவாயூரப்பா, உன் பாதங்களே தஞ்சம்.]

"நான் அவரை அடைய விருப்பத்துடன் வருவேன். நான் வருவதை விட அவரே எனக்கு கிருபை அருள் செய்யும் நோக்கத்துடன் என்னிடம் ஓடி வருவார். (மழை பயிரைத் தேடி வருவதைப் போலவும், குரு சிஷ்யனைத்தேடிக் கண்டு பிடிப்பதைப் போலவும், தாய்ப்பசு தனது இளம் கன்றை நோக்கி கண்ணீர் விட்டு இரங்கி, முலைப்பாலை வழிய விடுவது போலவும், தந்தையும் தாயும், புத்ரனையும் புத்ரியையும் தேடி வருவது போலவும், காம தேனு தனது வத்ஸங்களைத் கண்டு மனமுருகி சசீபதியான மஹேந்திரனிடம் தயையை வேண்டுவது போலவும்,) என் பிரபு பக்தவத்ஸலன், தீனபந்து, தீனதயாளு, ஆர்த்திகல்பன், ஆபத்ஸகா என்னிடம் வந்து, என்னை மனம் குளிரக் கடாக்ஷித்து, அனுக்ரஹிப்பார். என்னைப் பார்த்து சிரிப்பார். நான் பயத்துடனே அவரிடம் செல்வேன்; விலகிக் கொள்வேன். நான் தூரம் சென்றதும் அவர் என்னைப் பார்த்து அழுவார். (நான் இவன் பக்கம் வந்து அணைத்துக்கொள்ள விரும் பினால், இவன் நம்மை விட்டு ஓடிப்போகிறானே என்று நினைத்து மனத்தில் சங்கடப்படுவார்.) கருடரே, பிரபு இவ்விதம் கருணை காட்டின போதிலும் நான் எனது அபராதங்களையே நினைப்பவ

ஞகவே, அவருக்குப் பயப்படுவேன். "பயக்ருத்" என்று சொல்லப்படும் ஹயக்ரீவர், க்ரோத பூர்ணமாக விருந்தாலும் ஞான ஸ்வரூபியாக விருக்கிறபடியால், எனது பயங்களைத் தெளியவைத்து, என்னிடம் வாத்ஸல்யம் காட்ட விரும்புவார். அதைப் புரிந்து கொண்ட நான் அவருடைய பாத சரணங்களில் (ஜயந்தனைப் போல) சரணமடைந்து, அவருடைய கிருபையை வேண்டி நிற்பேன். அவரும் என்னைக் கால்களால் ஸ்பரிசம் செய்து அனுக்ரஹிப்பார். உடனே அவர் ஓட யத்தனிப்பார். நானும் அவரைத் தொடர்வேன். அவரும் எனக்கு சைகை காட்டிக் கொண்டு "ஓடிவா", என்னிடம் வந்து ஒட்டிக்கொள்", என்று என்னை ஆக்ஞை செய்துகொண்டிருப்பார். நானும் அவர் சமீபம் செல்வேன். நான் பார்த்துக்கொண்டிருக்கும்போது, அவர் அந்தர்த்யானம் செய்வதுபோல, ஓடிவிடுவார், கிருபாளு." (462)

"கருடரே, இவர் இவ்விதம் சாதாரண மானிட சிசுவைப் போல லீலைகள் செய்வதைப் பார்த்ததும், அவரிடம் எனக்கும் மோஹம் பிறந்தது. அந்த மோஹத்தின் விளைவாக எனக்கும் சம்சயம் வளர்ந்தது. சச்சிதானந்தமயமாக விளங்கும் என் பிரபு சீதாராமன் இவ்விதமாக சாதாரண பாலகனைப்போல சேஷ்டிதங்களைச் செய்வாரா?" (463)

"பக்ஷி ராஜரே, இங்கே நன்ருக கவனமாகக் கேளும். இந்த சந்தேகம் வளர்ந்ததும், ரகுபதியினல் ஆணை செய்யப்பட்டு, அதன்படி நடக்கும் மாயையும் என்னைச் சூழ்ந்து கொண்டது. ரகுபதியினுடைய கிருபையினல் அந்த மாயை எனக்குக் க்லேசங்களை உண்டுபண்ணவில்லை. மற்ற நித்ய ஸம்சாரிகளைப்போல என்னையும் ஜனனமரண சுழல்களில் அகப்பட்டுக்கொண்டு, அவதிப்பட வைக்கவில்லை." (464)

"என்னைக் கட்டிக்காக்கும் நாதரே, இந்த மாறுதலுக்கு ஒரு காரணமும் என்னுல் கண்டுகொள்ள முடியவில்லை. ஹரி வாஹனரே, ஸாவதானமாக நான் சொல்வதைக் கேளும். என் பிரபு சீதாபதி ஶ்ரீராமன் அகண்டமான ஞான ஸ்வரூபம். ஆனல் சகல சேதன சேதனங்கள் அடங்கிய ஸகல சராசரங்களும் மாயையின் ஆதீனத்துக்கு உட்பட்டவர்கள்." (465)

"ஸ்வாமி, தாங்களே பதில் சொல்லும். ஜீவன்களுக்கு ஏகரஸமாகிற அகண்ட ஞானம் எனப்படும் ஸ்வரூபம் இருக்குமாயின், அப்பேற்பட்ட ஜீவர்களுக்கும் ஈஸ்வரருக்கும் பேதம் (வித்யாஸம்) என்ன இருக்கக்கூடும்? அபிமானம் என்னும்

குணத்தினால் ஜீவன் தன் ஸ்வரூப லாபத்தை அடையாமல் மாயைக்கு உட்படுகிறான். ஆனால் முக்குணங்களுக்குப் பொக்கிஷமாக விருக்கும் மாயையோ அந்த ஈஸ்வரனைக் கண்டு பயப்படுகிறாள்.'' (466)

'' அதனால் ஜீவாத்மா பாரதந்தர்யம் உள்ளவனாகிவிடுகிறான். அதற்கு மாறாக பகவானே ஸர்வ ஸ்வதந்திரமாக விருக்கிறார். ஜீவாத்மாக்கள் அநேகம். ஸ்ரீபதியான ரமாரமணனாகிற பகவான் ஸர்வ ஜீவர்களை மேய்க்கும் நியந்தாவாக விருக்கிறார். அவருக்கு ஈடாகவோ சரிசமமாகவோ எவருமில்லை. இந்த பேதமும் மாயையினால்தான் ஏற்படுகிறது. அந்த பேதமும் பகவானுடைய கிருபை ஒன்றினால்தான் நாசமடைகிறது. அதைப் போக்குவதற்கு ஹரிபஜனம் செய்வதைத் தவிர வேறு உபாயம் ஒன்றுமில்லை. அதை விட்டு வேறு வழியுமில்லை.'' (467)

'' என்பிரபு ஸ்ரீராமச்சந்திரனைப் பஜித்து, மோக்ஷ மார்க்கத்தை அடையாமல் போனால், எந்த மனிதனும் வால், கொம்பில்லாத மிருகம்தான். அவன் மனிதனே இல்லை. மோக்ஷமாகிற நிர்வாணபதத்தை அவன் அடையாதபோனால் அவன் ஞானவானாக ஆகமாட்டான். அதனால் ஸ்ரீராமச்சந்திரனைப் பஜிப்பது ஒன்றினால்தான் அவன் ஞானமாகிற நிர்வாண பதத்தை அடைய யோக்யனாகிறான்.'' (468)

'' ஷோடச கலைகளுடன் பரிபூர்ண சந்திரன் ஸகல தாரா கணங்களின் ஸமுதாயங்களுடன் சேர்ந்து உதயமாகட்டும்; ஸகல மலைகளின் மேலிருக்கும் வனங்களும் அக்னிக்கு இரையாகி அழியட்டும். சூரியன் உதயமாகாதவரை இரவாகிற அந்தகாரம் அழியவே அழியாது. ஹே பிரபு, ஞானம் என்கிற சூரியன் உதயமாகாதவரை, மனஇருளும் அந்தகாரமும் நாசமடையாது.'' (469)

'' கருட மஹாராஜரே, ஹரிஸ்மரணை, ஹரிபஜனை ஆகியவை வைகளைச் செய்வதைவிட ஜீவாத்மாவுக்கு தனது க்லேசங்களைப் போக்குவதற்கு வழிமார்க்கம் வேறு ஒன்றும் கிடையாது. பகவானுடைய தாஸர்களை வழிபட்டு அவர்களுக்கு ஸேவை செய்வதால் நாளடைவில் மோஹாந்தகாரமாகிற அவித்யை நாசமடைகிறது. பகவானுடைய ப்ரேரணையினால்தான் பிரும்மவித்யை அடையப்படுகிறது.'' (470)

[தியானம்

நாராயண மஹாபிரபோ, சீதாராமா, பரேசா, குருவாயூரப்பா, பன்னகசயனா, கருத்மானுடைய ஈசரே, ஸுதர்சனரே,

தாமோதரா, நீர் பக்தனுடைய தாஸன் என்று உம்மாலேயே பறைசாற்றப்படுகிறீர். அந்த பக்தன் யார், அவனுடைய நிஜ ஸ்வரூபம் என்னவென்பதை உம்மாலேதான் சொல்லக்கூடும்? நாபாகனுடைய பிள்ளையான அம்பரீஷன் துர்வாஸருடைய கோபத்தை ஸம்பாதித்துக்கொண்டான். அதனால் அவன் பயப்பட்டானே ஒழிய, அவர்மீது யாதொரு தீயச் செயலையும் செய்ய விரும்பவில்லை. அவனும் உம்மைப் பிரார்த்தித்து துர்வாஸரிடமிருந்து ரக்ஷையை வேண்டினனா? அதுவுமில்லை. அவன் பிரார்த்திக்காமலே நீர் உம்முடைய சுதர்சனம் எனப்படும் கால சக்கிரத்தை அனுப்பினீர். அம்பரீஷன் அப்போது துர்வாசருடைய ரக்ஷணத்தை உம்முடைய கால சக்கிரத்தினிடமிருந்து வரமாகப் பிரார்த்தித்தான். அப்பேற்பட்ட பரம அபராதிகளிடமும் காட்டப்படும் நிர்ஹேதுகிருபை என்னும் விசேஷணத்தால், நீர் பக்த தாஸன் என்று சொல்லப்படுகிறீர். பரதனும் எது சக்தியுள்ளது எது அசக்தியுள்ளது, என்று தனக்குள் சிந்தித்தானே, அதுவுமில்லை. ஈஸ்வர சங்கல்பம் யாவராலும் மீறத்தகாதது என்று மஹாவிஸ்வாசத்துடன், பக்தி ப்ரேமையுடன் மஹா வினயமாக உம்மைக் குருகிருபா கடாக்ஷத்தினலும், பிராட்டியின் அனுக்ரஹ உள்ளத்தாலும் ஆராதித்து உம்மையே கடைசியில் பெற்றான். பகவத் கைங்கர்யம், பாகவத ப்ரேமை, பகவத்பக்தி, ஆசார்ய கடாக்ஷம் ஈஸ்வரகிருபை ஆகிய எல்லாம் காலசக்கிரம் என்கிற தர்மத்தினல் கட்டப்பட்டிருக்கிறது. கோவிந்தா, உன்னுடைய தயையின்றி, யாவராலும் வாழமுடியுமா? தியாகராஜாதிகள் உன் சரணங்களையே தயைசெய்பவை யென்று நம்பி வாழ்ந்தார்களே. உமா சங்கரரும் உனது நாமதேயம்தான் தயை செய்யக் கூடியது என்று மஹாவிஸ்வாசத்துடன் உம்மை ஆராதித்தார்கள். பரதன் உமது ப்ரீதி ஒன்றையே தயையாகக் கருதினன். வஸிஷ்டாதி முனிவர்கள் உனது கைங்கர்யம்தான் உனது தயையை அடையவிக்கும் என்று திடமாக நம்பி உன்னை ஆராதித்தார்கள். கருடன், நாகமாகிற ஆதிசேஷன் இன்னும் அநேக வைஷ்ணவசீலர்கள் பாகவதப்ரேமை உனது கிருபையை விளைவிக்கும் என்று நம்பிவாழ்ந்தார்கள். சீதாராமா, உன்பக்தன், உன்தாஸன், உன்கிருபையை வேண்டிநிற்கும் நான் எவ்விதம் உங்களுடைய வரப்பிரஸாதத்தை அடைவேன்? ''ஸர்வக்ஞர்'' பட்டம்பெற்ற நீ எனது குறைகளை அறிந்து எனக்கு ஒரு வழி செய்யமாட்டாயா? லஜ்ஜையைவிட்டு, உன்னைத்தானே சரணம் அடைந்திருக்கிறேன். உன் மனத்ருப்திக்காகவே கர்மஞான

பக்தி உபாயங்களைச் செய்கிறேன். அப்படியிருந்தும் நீதானே உனது கிருபையினால் என்னை ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும். உனது விஷயமாகிற கருணையை அடைந்தபின்பு நான் எதை வேண்டக்கூடும்? ஸ்ரீதரா, தாமோதரா, ஆஞ்சநேய நாரத பிரமுகாதிகளால் ஸேவிக்கப்படும் ஸ்ரீமந்நாராயணா, தஞ்சம் ]

"கருத்மானே, பகவானுடைய நிஜதாஸன் என்று அறியப் படுகிறவனிடம் ஆத்மஞானம் என்று சொல்லப்படும் பரபிரும்ம ஸ்வரூபம் எந்தக் காலத்திலும் நஷ்டமாகிவிடுகிறதில்லை. அப்பேற்பட்ட நிஜ பக்தனுக்கு தான் வேறு மற்ற ஜீவாத்மாக்கள் வேறு, பசு, பக்ஷி, தாவரம் உள்பட வேறு, என்கிற வேற்றுமை புத்தி உண்டாகிறதில்லை. தனக்கு எது ஹிதம் என்று அவர்கள் நினைக்கிறார்களோ அதுவே மற்றவர்களுக்கும் ஹிதம் என்று அவர்கள் நம்பி, ஸர்வம் வாஸுதேவமயமாக சகல சராசரங் களைப் பார்த்து, தர்மபராயணமாக வாழ்கிறார்கள். அபேத புத்தி யுடன் வாழும் ஜீவர்கள் பாரதந்திரியத்துடன் ஈஸ்வர கிருபையை ஸதா நாடுபவர்களாக், அவர்கள் ஸதா பரமாத்மாவை தியானித்து, அவருடைய பிரீதி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, பரமாத்மாவிடம் பக்தி, தவம், வினயம் ஆகிற ஸம்பத்துக்களுடன் நிஜ தாஸர்களாக, பாகவதப்ரேமை, பகவத் கைங்கர்யம், ஆசார்ய கைங்கர்யம் ஆகிற ஸன்மார்க்கங் களில் பிரவர்த்திக்கிறார்கள். எப்பொழுது பாரதந்தர்யம் மலின மாகக் காணப்படுகிறதோ, அப்பொழுது பிரமை ஏற்படுகிறது. அப்பொழுது ரரமன் நம்மைப் பார்த்து நகைக்கிறார். அது அவருடைய திருவிளையாடல். பிரபு, இன்னும் ஒரு விசேஷ சரித்திரம் சொல்லுகிறேன். அதையும் தயவு செய்து கேளும். (471)

அந்த மர்மத்தையும் சொல்லிவிடுகிறேன். அந்த விளை யாட்டின் ருசியையும் கருடமஹாராஜரே, நீர் கேளும். இந்த மர்மத்தைப்பற்றி ஸ்ரீராமனுடைய தம்பிமார்களும் அறியார்கள். அவர்களுடைய தாயாரும், தகப்பனாரும் அறியமாட்டார்கள். ஒரு நாள் என் பிரபு நீலமேக ஸ்யாமளன், பரமசோபிதமாக விருந்தார். அவருடைய கரகமலங்களும், பாதசரணங்களும் மிக்க சிகப்பாக விருந்தன. அந்த காக்ஷி மிக்க மனோஹரமாக விருந்தது. அவர் பாலரூபத்துடன் தவிழ்ந்து ஓடிவந்து என்னைப் பிடிப்பதற்கு தனது சிவந்த திருக்கரங்களை நீட்டினார். (472)

"அவருக்குப் பயந்து நான் ஓடினேன். சர்ப்பங்களுக்கு எதிரியே, உரகாரி, இந்த ஆச்சரியத்தைக் கேளும். பிரபு

ஸ்ரீராமனுடைய கரகமலங்கள் வளர்ந்து கொண்டே என்னைப் பின்தொடர்ந்தன. நான் உயரக் கிளம்பினேன். அந்தக் கைகளும் என்னைத் தொடர்ந்து ஆகாயத்தில் எழும்பி என்னைப் பிடிக்க என் பக்கத்தில் வந்தன ''. (473)

'' நான் பிரும்மலோகம் சென்றேன். அங்கேயும் அந்த கரகமலங்கள் என்னைப் பிடிப்பது போல வந்தன. அருமை நாதரே, ஸ்ரீராமனுடைய புஜங்களுக்கும் எனக்கும் இரண்டே இரண்டு அங்குலங்கள்தான் இடைவெளி யிருந்தன''. (474)

'' பூலோகத்தின் ஸப்தாவரணங்களைப் பிளந்து கொண்டு, நான் வெகு வேகமாகப் பறந்து சென்று கொண்டிருந்தேன். என்ன ஆச்சரியம்! அங்கேயும் பிரபுவினுடைய திவ்யபுஜங்கள் என்னைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்தன. அந்த திருக்கரங்களைக் கண்டு, நான் பயந்து போய்விட்டேன். அதிக வியாகுலமடைந்தேன் ''. (475)

'' எனக்கு பயம் அதிகரிக்க அதிகரிக்க, நான் என் கண்களை இறுக மூடிக்கொண்டேன். அவ்விதம் சில விநாடிகள் இருந்தேன். அதன் பிறகு என் கண்களைத் திறந்து பார்த்தேன். நான் கோஸலபுரியாகிற அயோத்தியில் இருக்கக் கண்டேன். என்னைப் பார்த்து அவர் சிரித்துக் கொண்டார். அவர் சிரிக்கும் போதே நான் அவருடைய வாயில் நுழைந்து போவதைக் கண்டேன் '' (476)

'' பக்ஷிக்கூட்டங்களுக்கு அரசனே, நான் கண்ட அதிசயங்களைக் கேளும். அவருடைய வயிற்றில் பல பிரும்மாண்டங்களைக் கண்டேன். அநேக விசித்திரமான லோகங்களையும் கண்டேன். ஒவ்வொரு உலகமும் மற்றொன்றையும் விட மிக நேர்த்தியாக படைக்கப்பட்டிருந்தது. '' (477)

'' நான் கோடிக்கணக்கான பிரும்மாக்களையும் கிரீசர்களையும் (சிவனையும்) பார்த்தேன். கணக்கற்ற சூரியன், சந்திரன், தாராகணங்களையும் கண்டேன். கணக்கற்ற லோகபாலர்களையும் யமனையும் காலனையும் கண்டேன். இவர்களைத் தவிர நான் கணக்கற்ற விசாலமான மலைகளையும் பூமிகளையும் பார்த்தேன்.''

'' கணக்கற்ற சமுத்திரங்களையும், நதிகளையும் குளம் குட்டைகளையும் அபாரமாகப் பார்த்தேன். தவிர, இன்னும் அநேக ஸ்ருஷ்டிகளையும், ஒவ்வொன்றையும் விஸ்தாரமாகப் பார்த்தேன். எங்கு பார்த்தாலும், தேவர்களும் முனிகணங்களும், ஸித்தர்களும், நாகர்களும், மனுஷ்ய கின்னரர்களும்

இன்னும் நானுப் பிரகாரமான சேதனு சேதனர்களையும் ஜீவஸ்வ ரூபமாக நான் கண்டேன்.'' (478)

''இவைகளைத் தவிர என்னுல் எவை இதற்கு முன்பு பார்க்கப்படவில்லையோ, கேட்கப்படவில்லையோ, மனத்தில் கூட ஸ்மரிக்க முடியவில்லையோ, அநேக அத்புத ஸ்ருஷ்டி களையும் நான் பார்த்தேன். அவைகளின் ஸ்ருஷ்டி வெகு அத்புதமாகவும் வர்ணனைக்கு மீறியபடி அழகாயுமிருந்தன, அத்புதமாகவுமிருந்தன.'' (479)

''நான் ஒவ்வொரு பிரும்மாண்டத்திலும் நான் நூறு வர்ஷங்கள் வசித்தேன். இந்த விதிப்படி நான் அநேக அண்ட கடா ஹங்களைக் கண்டு, அலைந்து திரிந்தேன்.'' (480)

[தியானம்

ஹேராமாசீதா, நாராயணு, மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீபதி, சாந்தமூர்த்தியே, காந்தமுர்த்தியே, நீரே விசால புத்தியை உடைய வியாஸ்ராகவும், ஸரஸ்வதி தேவியின் ஸாரமாக வும், அபாந்தரதமர் என்கிற ரிஷியாகவும் இருக்கிறீர். உம் முடைய வாக்கிலிருந்து உண்டான ''போ'' என்கிற நாத பிரும்மம் ஸகலத்தையும் ஸகல காலங்களிலும் அறிவதாக விருக்கிறது. நீர் ஸத்ய ரூபியாகவும், சரணுகத தர்ம விரதத்தை உடையவராகவும், தேவர்களுக்கு ஆதியும் விகாரமற்ற வருமான நாராயணராகவும், என் கிலேசங்களைப் போக்கும் தன்வந்திரி யாகவுமிருக்கிறீர். ஹெ அம்ருதரே, நீரே ஸாவித்திரியாகிற ஸர்வ ஸ்ருதிபராயணமாக விருக்கிறீர். உம்முடைய தவம், யமம், நியமம் உலகில் பிரஸித்தமாக விருக்கிறது. அதனுல் நீர் அரசனுகப் பிறந்தாலும் ரிஷி வாழ்க்கையைக் கொண்டதால் அஹிம்சா மூர்த்தியாகவும், ஸத்ய துரந்தரராகவும் காணப்படு கிறீர். சரசாபதரரே, நீர் உலகங்களைக் காப்பாற்றுகிற வராகவும், மற்றவர்களால் அவமதிக்கப் படாதவராகவும், ரகுகுலத்தின் த்வஜம்போல விளங்குகிறீர். ராஜ ரிஷியே, உம்முடையதவக் கோலத்தையே பரதனும் பின் பற்றி பதினுன்கு வருஷங்கள் அயோத்தியை உமது சார்பில் அளிக்கப்பட்ட பாதுகைகளின் ராஜ்ய பாரத்தை நடத்தினுன். அப்பேற்பட்ட பரம பாகவதர்களின் வாழ்க்கையை தியாகராஜாதி மஹான் களும் நடத்திக் காட்டினுர்கள். மும்மூர்த்திகளின் ஸ்வரூபமாக விருக்கும் ராம நாராயணு, உன்னைத் தியாகராஜ, ஆஞ்சநேய பரதாதி வழிகளில் சஞ்சரித்து வரும் என்னை எவ்வளவு காலம்

பொறுக்கும்படி ஸங்கல்பம் செய்வாய்? தாமஸகுணங்களை உடைய மானுஷ்யர்களிடமிருந்து தூரவிலகிச் செல்லும் ஸஜ்ஜன பாரிஜதமே, லஜ்ஜையில்லாமல் நான் உன்பக்தன் நிஜதாஸன் என்று சொல்லிக் கொண்டால் போதுமா? "கோதவ்" என்கிற மட்டமான தானியத்தை விதைத்தால் நல்ல தானியம் கிடைக்குமா? கருப்பு நிறமுள்ள கிளிஞ்சல்களிலிருந்து விலை உயர்ந்த முத்து கிடைக்குமா? என் அந்தராத்மா உன்னையே பெரும் பொக்கிஷமாக வரித்தும், எனது குண விபாகத்தினாலும் பூர்வ கர்ம வாசனையினாலும் நான் க்லேசங்களை அனுபவிப்பதற்கு யோக்யனாக ஆகிறேன். என்னால் செய்யப்பட்ட பூர்வ கர்மாக்கள் உனது பெருமையை அறிய முடியாதபடி தடங்கலாக விருக்கின்றன. அதனால் உன்னைக் குறைசொல்லி நான் மன நிம்மதியை அடைய முடியுமா? பரதன், தியாகராஜர் அனுப வித்த க்லேசங்களைப் பார்த்தால், அற்பசக்தியுள்ள என்னிடம் மஹத்தான தோஷங்கள் மலிந்து விளங்குகின்றன. அதனால் உனது கிருபையை அடைவதற்கு அருகதையில்லை என்று சொல்லும்படி அல்லவா விருக்கிறது. ஆனால் உன் ஹ்ருதயத்தை தியாகராஜாதிகள் வெண்ணெயைவிட மிகமிக மிருது வானது என்று சொல்லுகிறார்களே. நாரதருடைய சிஷ்யனான அவருடைய வசனம் பொய்யல்லவே. உனது கிருபையும் எனக்கு ஸித்திக்கவில்லை என்று தெரிந்தும்கூட, ஸ்வாமி, தியாகராஜ ஸம்ரக்ஷகா, பரதாக்ரஜா, கிரிஜா ரமணவந்திதா, சீதாபதே, என்னைப்போல லஜ்ஜையின்றி ராமபக்தன், ராம தாஸன் என்று டம்பத்துடன் பறைசாற்றிக்கொள்ளும் எனக்கு என்ன விமோசனம் இருக்கக்கூடும்? வேதசாஸ்திர புராண புருஷா, வியாஸ பகவானே, சரஸ்வதி தனயரே, நீரே எனக்கு மன இருளைப்போக்கும் ஸத்குருவாகிறீர். அபாந்தரதமர் என்கிற பெயரால் ஜ்வலிக்கும் தன்வந்தரியே, வாதால ஈசா, பவனபுர ஈசா, குருவாயூரப்பா, எனது ரோகங்களையும் கிலேசங் களையும் நீர்தான் போக்கவேண்டும்.]

"ஒவ்வொருலோகத்திலும் பிரத்யேகமாக ஒரு பிரும்மா, பின்ன பின்னமாக விருக்கும் விஷ்ணு, மஹேசாதிகள் இருக்கக் கண்டேன். ஒவ்வொரு லோகத்திலும், மனு, திக்பாலர்கள், மனுஷ்யர்கள், கந்தர்வ, பூதபிசாசங்கள், வேதாளங்கள், கின்னரர்கள், ராக்ஷஸர்கள், பசுபக்ஷி, ஸர்ப்பங்கள் வசிப்பதைக் கண்டேன்." (481)

"தேவகணங்களைக் கண்டேன். தைத்யகணங்களையும் கண்டேன். இன்னும் நானு ஜாதியர்களையும், ஸகல ஜீவர்களையும் வெவ்வேறு பிரகாரமாக முகம் தோற்றமுடைய பல சேதனு சேதனர்களைக் கண்டேன். பூமி, நதி, ஸமுத்திரம், குளம் குட்டை, அநேக பர்வதங்கள், அதே மாதிரி ஸகல பிரபஞ்சங்களையும் ஒவ்வொன்றும் மற்றவைகளைவிட மாறுபட்டனவாக விருப்பத்தையும் கண்டேன்." (482)

"ஒவ்வொரு அண்டகோசத்திலும் என்னுடைய நிஜஸ்வரூபம் பலவிதங்களில் உயர்ந்ததாகவும் அநேக. விதங்களாகவுமிருந்தது. ஒவ்வொரு அண்டத்திலும் பிரத்யேகமான அயோத்தியாபுரி இருந்தது. அதில் சரயுநதியும் விதவிதமான நரநாரிகளுமிருந்தனர்." (483)

"என் அருமைப்பிள்ளாய், நன்ருகக்கேள். தசரதர் கௌஸல்யை, பரதன் முதலிய சஹோதரர்கள் விதவிதமான ரூபம் எடுத்துக்கொண்டு, அங்கே விளங்கினுர்கள். ஒவ்வொரு பிரும்மாண்டத்திலும் நான் பிரத்யேகமான ராம அவதாரத்தைப் பார்த்தேன். அங்கே அவருடைய பால லீலைகளையும் கண்டேன்." (484)

"ஹரிவாஹனரே, நான்பார்த்த ஒவ்வொரு பொருளுக்கும் விசித்திரமானதும், விசேஷ லக்ஷணங்கள் உள்ளதாகவுமிருந்தன. இந்த மாதிரி நான் சஞ்சரித்த ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும் கண்டேன். நானும் கணக்கற்ற பிரும்மாண்டங்களில் அலைந்து திரிந்தேன். ஆனுல் என்பிரபு ஸ்ரீராமச்சந்திரனைப் போல மற்ருெரு ராமச்சந்திரனை நான் காணவில்லை." (485)

"எங்குபார்த்தாலும் என்பிரபு சிறிய பாலகனுக விருக்கக் கண்டேன். அதே சோபையுடன் கூடிய முகம், தேககாந்திகள், அதே கிருபாளுவின் கருணை கடாக்ஷங்கள்கொண்ட ஸ்ரீரகுவீரனையும் நான் பார்த்தேன். நான் மோஹம் கொண்டவனுக, காற்றுமாதிரி சஞ்சரிக்கும் போது, எங்கு பார்த்தாலும், அந்த பிரபுவை சிறுபாலகனுகக் கண்டேன்." (486)

"நான் இவ்விதம் பல பிரும்மாண்டங்களில் அலைந்து திரியும் போது, நூறு கல்பங்கள் ஒடிச்சென்றுவிட்டன. அதன் பிறகு பல விடங்களுக்குச் சென்று சுற்றி அலைந்து திரிந்த பின்பு, நான் என்னுடைய நிஜஆஸ்ரமத்திற்கு வந்து சேர்ந்தேன். அங்கே சிலகாலம் வசித்து வந்தேன்." (487)

"ஒரு நாள் என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் அயோத்யாபுரியில் ஜனனம் எடுத்திருக்கிறார் என்கிற விஷயத்தைக் கேட்டேன். என் பிரேமை பொங்கி எழுந்தது. என் மனதில் குறை ஒன்று மில்லை. நான் சந்தோஷத்துடன் துள்ளிக் குதித்து ஓடினேன். அயோத்திக்கு வந்து பிரபுவினுடைய ஜன்மோத்ஸவத்தைக் கண்டேன். அந்த மஹோத்ஸவத்தை ஏற்கனவே உமக்கு முதலி லிருந்து இதுவரை கதை சொல்லியபடி நான் பார்த்து ஆனந் தித்தேன்". (488)

"கருடமஹாராஜரே, இந்தவிதமாக நான் ஸ்ரீராமனுடைய வயிற்றில் அநேக உலகங்களைப் பார்த்தேன். நான் கண்கூடாகப் பார்த்து, பல உலகங்களைப் பார்த்த பின்பேதான் அவரை அறிய முடிந்தது அவைகளை வர்ணிப்பது முடியாத காரியமாக விருக் கிறது. நான் அங்கேயும் அழகான பிறப்பையுடைய சக்கிரவர்த்தி திருக்குமாரனாகிற ஸ்ரீராமனைப் பார்த்தேன். என் பிரபு மாயைக் கும் ஈஸ்வரர், பரமகிருபாளு, ஸர்வசக்தி, தேஜஸ், ஐஸ்வர்யாதி குணங்களைக் கொண்ட பகவானை என் ஊனக்கண்களால் கண்டேன்". (489)

"எனக்குள் அடிக்கடி அடிக்கடி சிந்தனை யேற்பட்டது. என் புத்தி மோஹம் என்கிற சகதியில் அகப்பட்டுக்கொண்டு, தவித்தது. நான் ஸகலத்தையும் ஒரு மணி நேர அவகாசத்தில் கண்டேன். என் மனத்திலும் மோஹம் எழுந்தது. பயம் என்னை வந்து அடைந்தது. நான் பிரமை அடைந்துவிட்டேன் பிரபோ". (490)

"நான் இவ்விதம் கிலேசங்களை அனுபவித்துக்கொண்டிருக் கும்போது, கிருபாளுவாகிற என் பிரபு நகைத்துக்கொண்டு என் னைப் பார்த்தார். அவருடைய சிரிப்பில் மாயை நர்த்தனமாடிக் கொண்டிருந்தாள். தீர மதியைக் கொண்ட ஸுபர்ணரே, கருட மஹாராஜரே, கருத்மானே, நான் சொல்வதைக் கேளும். அவர் சிரித்துக் கொண்டிருக்கும் போதே, நான் அவருடைய உதரத்தி லிருந்து வாயின் வழியாக வெளியே வந்தேன்". (491)

"அப்பொழுதும் கூட என் பிரபு என்னைக் கண்டதும் பாலவிளையாட்டுக்களைச் செய்யத் தலைப்பட்டார். இப்பேற்பட்ட பகவான் ஸர்வ சாதாரணக் குழந்தையைப் போல விளையாடு கிறாரே என்று மனதில் ஆராய்ந்து பார்த்தேன். கோடி கோடி கணக்காக என் மனத்திற்குள் சிந்தனை செய்து பார்த்து விட்டேன். என் மனதில் சாந்தி ஏற்படவில்லை. நான் அமைதியை இழந்தேன்". (492)

"அந்த பால லீலைகளைப் பார்ப்பவனாகவும், அவருடைய மஹத்வங்களையும் நினைப்பவனாகவும், எனது ஸ்வய நிலையை இழந்தேன். அவ்விதம் நான் நினைக்கும் போதே, நான் மூர்ச்சை அடைந்தேன். என் சரீரத்தைப் பற்றிய நினைவையும் நான் இழந்தேன். பூமியில் விழுந்தேன். என் முகம் தரையில் படிந்திருந்தது. நான் என்னையுமறியாமல் வாய்விட்டுக் கதறினேன். "பிரபோ, சரணாகத ரக்ஷகா, என்னைக் காப்பாற்று; என்னைக் காப்பாற்று" என்று வாய்விட்டுக் கதறினேன். அதற்கு மேல் வார்த்தைகள் என் தொண்டையிலிருந்து வெளிவர மறுத்தன". (493)

[தியானம்

நாராயணா, பரமேஸ்வரா, சீதாபதே, பகவானே அடக்கம் என்று சொல்லுகிறார்களே; அதனுடைய லக்ஷணங்களை அறிகிறவன்தான் ஸித்திபெறுகிறான். அவனே பயமில்லாதவனாக உலகம் முழுவதும் சஞ்சரிக்கிறான். அந்த அடக்கம் என்கிறது தமம் என்று சொல்லப்படுகிறது. தமமாகிற இந்திரிய அடக்கம், பொறுமை, தைரியம், கொல்லாமை, ஸமபுத்தி, ஸத்யம், ருஜுவாயிருப்பது, இந்திரியங்களை எல்லாம் வெல்லுதல், பசி, குறி, தாகம் ஆகியவைகளை அடக்குதல், ஸாமர்த்தியம், மிருதுவாயிருப்பது, வெட்கம், சபலமில்லாமை, தீனத்தன மில்லாமை, கோபமில்லாமை, சந்தோஷம், இன்சொல், துன்பம் செய்யாமை, அசூயையின்மை, பெரியோர்களைப் பூஜிப்பது, பிராணிகளிடம் தயை செய்தல், கோட் சொல்லாமை, ஆகிய இவைகளின் சேர்க்கைகள் தமமாகும். அப்பேற்பட்டவனைக் கண்டு சகல சராசரங்களும் பயப்படுகிறதில்லை. பெரிய லாபத்தில் அதிக சந்தோஷப்படாமலும், பெரிய கஷ்டத்திலும் அதி சோர்வு அடையாமலும், காமத்தையும் கோபத்தையும் வென்று, நியமத்தால் அவிவேகத்தை அழித்து, தைர்யத்துடன் பரமாத்மாவை நம்புகிறவன் தமம் என்னும் ஸம்பத்தை உடையவனாகிறான். தமம் எங்கு வசிக்கிறதோ, அதுதான் அவனுக்கு ஆஸ்ரமமும் அரண்யமும் ஆகும். அப்பேற்பட்ட தமசீலர்களான பரதன், தியாகராஜர், கருடன், காகபுசுண்டி, துளசிதாஸர் ஆகிய மஹான்களை நான் ஆராதித்து, சீதாராம திருவடிகளை சரணமடைகிறேன். ராமய்யா, நீர்தான் என்னை ஸம்ரக்ஷிக்க வேண்டும்.]

"அதன் பிறகு பிரபு என்னை, (பரதனைக் கண்டு ஆனந்தப் படுவதுபோல,) மிக்க பரிவு அன்புடன் பார்த்தார். அவருடைய கடாக்ஷ விக்ஷேண்யத்தினால் மாயையின் பிரபாவங்கள் ஒடுங்க ஆரம்பித்தன. (பிரஹ்லாதனுடைய தலையின்மேல் லக்ஷ்மி நரசிம்மன் தனது கரகமலங்களை வைத்து, எவ்விதம் அனுக்ர ஹித்தாரோ, அதைப்போல) என் பிரபு, ரகோத்தமன் தன் னுடைய கரகமலங்களை என் தலையின்மீது வைத்து, அனுக்ர ஹித்தார். அவருடைய கரஸ்பர்சம் யேற்பட்டவுடன், என் னுடைய ஸகல துக்கங்களும் பறந்துவிட்டன. தமம் உள்ள வனைப்போல நான் பரமசுகத்தை அடைந்தேன். நான் ஸித்தி பெற்றவனாக, பெருமாளுடைய கிருபையினால் ஆக்கப்பட்டேன். தீனதயாளு, என் பிரபு என்னுடைய ஸம்பூர்ண துக்கங்களையும் அபஹரித்துவிட்டார்." (494)

"கருடரே, என் பிரபு ஸ்ரீராமன் அவனை நம்பிய ஸகல தாஸர்களுடைய துக்கங்களைப் போக்குபவர், கிருபாமயமான ஸமுத்திரம், அந்த பிரபு எனக்கு ஸர்வ காலங்களிலும் சுகத்தை அளிப்பதற்காக எனது மஹா மோஹங்களைப் போக்கினார். நான் முன்னால் சொல்லப்பட்ட அவருடைய பிரபுத்வங்களை நினைப்பவராக, என் மனம் பெரும் ஆனந்த ஹர்ஷத்தால் சுமை கொண்டு ஸதா விளங்கிற்று." (495)

"என் பிரபு பக்தவத்ஸலர், பக்தர்களுக்குப் பராதீனன். அவருடைய ப்ரேமையை நான் நினைக்க நினைக்க, என் ஹ்ருத யத்தில் அதிகப் பாசம், பக்தி உற்பத்தியாகி, பெருகிற்று". இவ் விதம் சொல்லும்போது அந்த மஹானுபாவருக்கு சரீரம் புளகாங் கிதமடைந்து, நயனங்களிலிருந்து புனிதமான பாஷ்பங்கள் ஆனந்த மிகுதியால் உதிர்ந்துகொண்டிருந்தன. அப்பொழுது காகபுசுண்டி பிரேமையுடன் கைகளை அஞ்சலி செய்துகொண்டு பிரபுவுக்கு நமஸ்காரங்களைச் செய்தார். (496)

"அந்த வார்த்தைகளைக் கேட்ட பிரபு என்னை மிக்க பிரியத் துடன் பார்த்தார். என்னுடைய தீனமான குரலைக் கேட்டார். என்னுடைய நிஜதாஸ வினய நம்ரதிகளை ஸ்வீகரித்தார். மிக்க கம்பீரமான மேகத்வனியில் ரமாநிவாஸர், ஸ்ரீயப்பதியான ஸ்ரீநிவாஸர், மிருதுவான வசனங்களால் என்னை சுகப்படுத்தும் நோக்கத்துடன் சொல்ல ஆரம்பித்தார்." (497)

"காகபுசுண்டி, நான் அத்யந்த பிரஸன்னமாக விருக் கிறேன். உனக்கு ஏதாவது வரம் கொடுப்பதற்கு சித்தமாயிருக் கிறேன். எனது தர்சனம் வீண் போகாதது. உனக்கு வேண்டிய

வரத்தைப் பெற்றுக்கொள். அணிமாதி சித்திகள் வேண்டுமா, அபாரமான ருத்திகளுடன் கூடிய செல்வப் பெருக்குகள் வேண்டுமா, அல்லது ஸம்பூர்ண சுகத்தைத்தரும் மோக்ஷபதம் வேண்டுமா?'' (498)

''ஞானம், பரமாத்மாவைப்பற்றிய விவேகம், விரக்தியாகிற வைராக்யம், தத்வ ஞானமாகிற விக்ஞானம், இன்னும் அநேக உத்தமமான கல்யாண குணங்கள், முனிவர்களுக்கும் கிடைக்கப் பெருததும், மிகமிக துர்லபமானதுமான ஸத்வ குணச் சேர்க்கைகள் வேண்டுமா, அவைகள் எல்லாவற்றையும் இன்று உனக்குக் கொடுக்க சித்தமாயிருக்கிறேன். இதில் சந்தேகம் ஒன்றும் வேண்டாம். எதைக் கேட்டாலும் கொடுக்க சித்தமாயிருக்கிறேன்,'' என்று பிரபு கட்டளையிட்டார். (499)

''பிரபுவின் வசனங்களையும், அவருடைய கிருபையையும் அத்துடன் பரிமளிக்கும் சுத்தமான அன்புப் ப்ரேமையையும் நான் கண்டேன். என் மனதில் தீர ஆராய்ந்துப் பார்த்தேன். ஆம், என் பிரபு சகல சுகங்களையும் அளிப்பதற்கு சித்தமாயிருக்கிருர். ஸத்யமான வசனங்கள் இவை. ஆனால் அவருடைய பாதாரவிந்தங்களில் ஈடுபடும் பக்தியைமாத்திரம் கொடுப்பதாக அவர் சொல்லவில்லை.'' (500)

''பகவானிடம் பக்தியில்லாத ஸகல குணோத்தமங்களும் ஸகல சுகங்களும் எவ்விதம் பயன்படும்? லவணம் இல்லாத போஜன பதார்த்தங்கள் ருசிக்குமா? பிரபுவை பக்தியுடன் பஜனைசெய்யாமல், இவ்வளவு சுகங்களையும் அடைந்து யாது பயன்? பகவானிடம் அன்புசெலுத்தாமல் இவைகள் அனைத்துமிருந்தும் சுகத்தை தரமாட்டா. இவ்விதம் நான் விசாரணை செய்துகொண்டு, ககராஜரே, பக்ஷிராஜரே, நான் பகவானிடம் பதில் சொன்னேன்.'' (501)

''பிரபோ, தாங்கள் என்னிடம் பிரஸன்னமடைந்து, ''வரம் பெற்றுக்கொள்,'' என்று ஆக்ஞையிடுகிறீர். நான் தங்களுக்கு மிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். கிருபாளு, தாங்கள் என்னிடம் எப்போதும் இதே அனுக்ரஹ புத்தியுடன் இருக்கவேண்டும். ஸ்வாமி, தங்கள் இஷ்டப்படி நான் வரம்கேட்டுப் பெற்றுக்கொள்கிறேன். பிரபோ, தாங்கள் அந்தர்யாமியாகவிருப்பதால் என் மனோபீஷ்டங்களை நன்கு அறிவீர். உதார ஹ்ருதயமுள்ள பிரபோ, (502)

''அகண்டமானதும், என்றும் வற்ருததும், அனன்ய ப்ரயோசனமாகவிருக்கக் கூடியதும், விசுத்தமானதும், வேதங்க

ளாலும் புராணங்களாலும் மிக்க ஸ்லாக்கியமாகவும் எந்த அனன்ய பக்தி புகழப்படுகின்றதோ, அப்பேற்பட்ட அசஞ்சல மான, த்ருடபக்தியை, பிரபு, எனக்கு அருளவேண்டும். பிரபு, ஸதா யோகீஸ்வரர்கள் தியானித்து, அடைய முயற்சி செய்து கொண்டிருக்கிறார்களே, அவ்விதம் முயற்சித்தும், ஒரு சிலபேர் கள் மாத்திரம் சித்தி அடைந்து மிக்க பாக்கியசாலிகளாகவிருக் கிறார்களே, அப்பேற்பட்ட ப்ரேமாபக்தியை, ஹே பிரபு, தங்க ளுடைய பதாப்ஜங்களில் வர்த்திக்கும் ப்ரேமாபக்தியை, தந்தருள வேண்டும். மேலும் எந்த ப்ரேமாபக்தியினால், பிரபுவின் கிருபை யாகிற பிரஸாதத்தை நான் நிரந்தரமாக அடையக்கூடுமோ, அப் பேற்பட்ட அனுத்தமமான பக்தியை எனக்கு வரமாக தந்தருள வேண்டும்.'' (503)

''பக்த கல்பதரு, பாக்யஸூரதேனு, சரணாகதரக்ஷகா, கிருபாஸிந்து, சுகதாம், என்பிரபு ஸ்ரீசீதா ராமச்சந்திரா, என் னிடம் தயை செய்யவேண்டும். பிரபோ, தங்களிடமும், சீதா பிராட்டியிடமும் விசேஷமான பரமபக்தியாகிற நிஜபக்தி எனக்கு ஏற்படவேண்டும். உம்முடைய பாதங்களை சரணம் அடைந் திருக்கும் என்னிடம் ஸதா கிருபாபரிபூரணராக தாங்கள் இருக்க வேண்டும்'' என்று காகபுசுண்டி வேண்டிக் கொண்டார். (504)

அதைக் கேட்ட ரகுகுலநாயகன், வரசுகதாயகன், ''அப்படியே ஆகட்டும்,'' என்று ஆமோதித்து எனக்கு வரப் பிரஸாதம் செய்தார். அவருடைய வசனங்கள் எனக்கு பரம ஆனந்தத்தை அளித்தன. என்பிரபு மீண்டும் சொன்னார். ''வாயஸமே, நீமஹா சூக்ஷ்ம புத்திபடைத்த புத்திமான். இயற்கையாகவே உன்னிடம் இது நிலைத்துநிற்கிறது. இம்மாதிரி வரம் யாவராலும், இதுவரை வேண்டப்படவில்லை. நானும் வரதானம் செய்யவில்லை.'' (505)

''சகல சுகங்களுக்கும் மூலஸ்தானம் என்னிடம் வைத் திருக்கும் பக்தி ஒன்றுதான். அதையே நீ வரமாகக் கேட்டு விட்டாய். இந்த ஜகம்முழுவதிலும் உனக்கு ஸமமான பாக்ய முள்ளவர்கள் யாரும் இல்லை; இருக்கவும் முடியாது. எந்த முனீஸ்வரர்கள் கோடிக் கணக்கான ஜபங்கள், யோகங்களாகிற அக்னியில் தங்கள்சரீரங்களை வாட்டுகிறார்களோ, அவர்களுக்கும் கிடைக்கப்பெறாத அனன்ய பக்தியை நீ வரமாக அடைந்திருக் கிறாய். அவர்களைவிட நீதான் மஹாபாக்யசாலி.'' (506)

''அப்பேற்பட்ட உத்தம பக்தியை வரமாக அடைந்திருக் கிறாய். உனது கெட்டிக்காரதனத்தை நான் மிகவும் மெச்சுகிறேன்.

நிஜமாகவே நான் அதிக ஆச்சர்ய மடைகிறேன். உனது சாமர்த்தியம் எனக்கு மிகவும் பிடித்தமாயிருக்கிறது. பக்ஷியே, உன்னிடம் நான் அதிக பிரஸன்னமாக விருக்கிறேன். என்னுடைய வரப் பிரஸாதத்தினுல் உனக்கு ஸகல சுகங்களேயும் மங்களங்களேயும் கொடுக்கக் கூடிய உத்தம கல்யாண குணங்கள் உன் ஹ்ருதயத்தில் ஸதா வசிக்கட்டும்.'' (507)

பக்தி, ஞானம், விக்ஞானம், வைராக்யம், யோகம், என்னுடைய லீலேகளிலும், அவைகளின் மர்மரஹஸ்யங்களிலும் மன ஈடுபாடு, ருசி, அவைகளின் உட்பிரிவுகள் ஆகிய எல்லாம் என்பிரஸாதத்தால் உனக்கு சுலப்மாகவும் ஸ்வபாவமாகவே தெளிவாகித் தோன்றட்டும். அவைகளுக்காக ஸாதனங்கள், அப்பியாஸங்கள், யாதொன்றும் உனக்கு செய்ய வேண்டிய அவசியம் இருக்காது. அவைகளாகவே உன்னிடம் வந்து சேரும்.'' (508)

[தியானம்

சக்ரபாணே, ப்ருகுபதே, பரசுராமா, உம்முடைய பித்ரு பக்தி, மாத்ருபக்தி, சஹோதரபக்தி, பிராம்மணபக்தி, எல்லாம் ரொம்ப பிரஸித்தமானது. ஆஸ்ரித கல்பதரு, சீதாபதே, குவலயதளநயனு, உம்மைத்தானே தர்மாத்மாவென்று தியாக ராஜாதிகள் புகழ்கிருர்கள். அவ்விதம் பெயர் பெற்றிருந்தும், என் விஷயத்தில் மாத்திரம் உமக்கு அனுதாபம் கிடையாதா? பிரபு, உம்மைத்தானே பதிதபாவனன் என்று சொல்லுகிருர்கள். அதன் அர்த்தம் மாத்திரம் உமக்குப் புரியாமல் இருப்பதற்கு என்ன காரணம்? நான் உம்மைத் தவிர கதி கிடையாது என்று சொல்லிக் கதறும்போது, நீர் மாத்திரம், உமக்கு ஆயிரம் காதுகள் யிருந்தபோதிலும், ஏன் என் பிரார்த்தனேயை கேட்க வில்லே? கமலாநாயகா, தியாகராஜ ரக்ஷகா, மானவ ராமா, என்னேக் காப்பாற்றுவது உமக்குப் பெரிய சுமையாக விருக்கிறதா? என்னே ஸம்ரக்ஷிப்பது, எனக்கு ஆயிரம் ஆயிரம் கண்களேக் கொடுத்து உமது ரூப செளந்தர்யங்களேக் கண்கொள்ளாக் காக்ஷியாக வர்ஷிப்பது உமக்கு சரியாகத் தோன்றவில்லேயா? பரதனேப் போல ஞானத்தையும், உமையைப்போல அடக்கத்தையும், நாரதரைப்போல பரஹிதத்தையும் அடையாமல், தியாகராஜரைப் போல பூஜை கீர்த்தனமாலே, அர்ச்சனே முதலியவைகளால் பஜிக்காமல் வீண் வாழ்க்கை நான் நடுத்துகிறேன் என்று உமக்கு சம்சயமா? ராமா, சீதாபதே, கருடனேப் போன்ற தாஸர்களே ஐக்யமாக்கிக்கொண்ட நாராயணு உம்மை நம்பி வாழும்

என்னிடம் தோஷங்களைக் காணலாமா? என்னிடம் மாத்திரம் உம்முடைய மாயா ஜாலங்கள் ஏற்பட வேண்டுமா? உமது பாதங்களையே பரமபோக்யமாக அனுபவித்து வரும் எனக்கு யார் உம்மிடம் வந்து தடை செய்கிறார்கள்? நாரதர், வியாஸர், சுகர், அகஸ்தியர், வஸிஷ்ட, விஸ்வாமித்திரர் போன்ற மஹான்கள் உதார ஹிருதயர்கள் அல்லவா? அவர்களுடைய வசனங்களுக்கு நீரும் சீதையும் செவி சாய்த்துக் கேட்பீர்களே? என் விஷயத்தில் உமக்கு இந்தபேத புத்தி ஏற்படவேண்டாம். ராஜனுதா, ஸ்ரீ சீதாராமா, ஸச்சிதானந்த சித்மூர்த்தியே, அர்ஜுன சகாவாகிற என்னிடம் கிருபை செய்யும். பவனபுரேசா, வாதாலயேசா, குருவாயூரப்பா, சங்கு சக்ரபாணி, வனமாலி, கதாக்ரஜா, அப்ஜஸம்பவா, தயை செய். தயை செய். சுத்தஸத்வ மூர்த்தி, பாஹிமாம்.]

"மாயையினால் யேற்படக்கூடிய பிரமை, மஹா மோஹம், அதனால் யேற்படும் கிலேசங்கள் உன்னை வந்து அடையாது. காகபுசுண்டி, என்னைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள். நான் அனாதி—கால வரை இல்லாதவர். ஜ்யேஷ்டர். பூர்வர், ஸநாதனர், புராண ரிஷி. மற்றவர்களைப்போல எனக்கு ஜனன மரணங்கள் கிடையாது. எனது சங்கல்பத்தினால் நான் தோன்றி மறையும் அஜன்மா. பிராகிருதஸம்பந்தமுள்ள ஸத்வரஜஸ் தமஸாதி குணங்கள் என்னிடம் பிரவர்த்திப்பதில்லை. அவைகள் என்னால் சங்கல்ப்பிக்கப்படுகின்றன. சகல கல்யாண குணங்கள், வாத்ஸல்ய, ஸௌலப்யாதி, பரத்வ குணங்கள் கொண்ட பரபிரம்மம் நான். ஞானம், ஆனந்தம் ஆகியவைகளே எனது நிஜஸ்வரூபம்." (509)

"காக்கையே, நன்றாகக் கேள். நான் பக்தர்களிடம் அதிகப் பிரியம் காட்டுகிறவன். ஸர்வத்திர காலங்களிலும் நான் அவர்களுக்கு ஹிதத்தைச் செய்பவன். இதை நீ ஸ்மரித்துக்கொண்டு, கர்மத்தினாலும், வசனங்களாலும், மனத்தினாலும் என்னுடைய ஸரோஜபதங்களை ஸதா அனுவர்த்தி செய்துகொண்டு, அசஞ்சலமான பிரேமா பக்தியுடன் என்னை ஆராதித்து வருவாயாக." (510)

"இப்பொழுதும் என்னால் சொல்லப்படுவதும் சுபமானதும் மங்களங்களைக் கொடுக்கக்கூடியதும், விமலமானதுமான வார்த்தைகளைக் கவனித்துக்கேள். இவைகளையே ஸத்யமான வாக்குக்களாகவும், சுப பலன்களை தருவதாகவும், வேத ஆகம நிகமங்களில் சொல்லப்பட்டதாகவும் அறிந்து கேள். இவை

களையே நிஜமான ஸத்ஸம்பிரதாயம் என்று சொல்லப்படும் ஸித்தாந்தம் என்று அறிந்து கேள். இதைக் கேட்டு, மனதில் நன்ருகத் தெரிந்துகொண்டு, என்னை ஸதா பஜித்து வா.'' (511)

"இந்த ஸம்சார முழுவதும் என்னுடைய மாயையிலிருந்து உண்டாகி யிருக்கிறது. இதில் அநேக பிரகாரமாக சகல சராசரங் களும் அடங்கி வாழ்கின்றன. ஆகையினுல் சகல சேதனு சேதனங்களிடமும் எனக்கு ஸமமான பிரியமிருக்கிறது. ஏனெனில் ஸகலரும் என்னிடமிருந்து உற்பத்தியானவர்கள். ஆனுலும் அவர்கள் எல்லோரிடத்திலும் விட எனக்கு மனிதர் களிடமே அதிக பிரியம் யேற்படுகிறது.'' (512)

"மனுஷ்யர்களில் பிராம்மணர்களிடமும், பிராம்மணர்களில் வேதங்களைத் தரிக்கிற வேதவித்துக்களிடமும், அவர்களில் வேதங்களில் சொல்லியபடி தர்மங்களை அனுஷ்டிப்பவர்களிடமும், அவர்களிலும் வைராக்கியம் படைத்தவர்களிடமும், அவர் களிலும் ஞானிகளிடமும், அந்த ஞானிகளிலும் விக்ஞானம் கொண்ட வைஷ்ணவர்களிடமும் எனக்கு அதிகப் பிரியம்.'' (513)

"அப்பேற்பட்ட வைஷ்ணவர்களைவிட என்னிடம் பக்தி கொண்டு, என் ப்ரீதியையே நிஜ வாழ்வாகக் கொண்ட வைஷ்ணவ தாஸர்களிடம் நான் அதிகப்பிரியம் காட்டுகிறவன். அந்த வைஷ்ணவ தாஸர்களிலும், என்னை அனன்ய கதியாக உபாஸித்துவரும் ஏகாந்திகளாகிற ஆஸ்திகர்களிடம் நான் அதிகப் பிரியம் செலுத்துகிறேன். என் பிரியமான வாயஸமே, நான் மீண்டும் மீண்டும் ஸத்யத்தோடு உத்கோஷிக்கிறேன். என்னுடைய பாதங்களையே நம்பி வாழும் நிஜ சேவகர்களிடம் நான் காட்டும் அன்புப் பிரேமை, வேறு எவர்களிடமும் இல்லை. நான் அப்பேற்பட்ட பக்தர்களுக்கு பராதீனன். அவர்களின் வசம் பூரணமாக விருக்கிறேன்.'' (514)

பக்தியின்றி என்னை எவனும் வழிபட்டாலும், பிரும்மா இருந்தாலும் சரி, அவனிடமும், சகல சேதனு சேதனர்களிடமும் காட்டும் பிரியத்தைத்தான் நான் காண்பிப்பேன். பக்தியுடன் இருக்கும் அதிநீசத்தனமான ஐந்து இருக்கட்டும்; அதனிடம் நான் என் பிராணனுக்குச் சமமாக பிரியமாக விருக்கிறேன். இதுதான் நான் கோஷிக்கும் ஸம்பிரதாயம்''. (515)

''காகபுசுண்டி, தேகசுசி, மனத்தில் சுசியாகவிருக்கும் சீலன், சுசீலமான ஆசார நடத்தையுள்ளவன், ''நான் பெரியவன்'', ''நான் செய்வதுதான் தர்மம்'' என்கிற அஹங்கார மமகார

மில்லாதவனும் வினயசம்பத்துக்கள் கொண்ட புத்திமான் இருக்கிருனே, அவனே என்னுடைய நிஜ சேவகன். அப்பேற்பட்டவனிடம் யார்தான் அன்பு செலுத்தமாட்டார்கள்? நீயே சொல். நான் மீண்டும் சொல்லுவதைக் கவனித்துக் கேள். வேதங்களும் புராணங்களும் இந்த நீதியைத்தான் உத்கோஷிக்கின்றன.'' (516)

''பிதா ஒருவராகத்தான் இருக்கிருர். ஆனுல் அவனுடைய புத்ரர்களோ பலவிதமாக பல குணங்களுடன், வெவ்வேறு ஸ்வபாவங்களுடனும் ஆசரணைகளுடனுமிருக்கிருர்கள். அவர்களில் சிலர் பண்டிதர்களாகவும், சிலர் தபஸ்விகளாகவும், இன்னும் சிலர் ஞானிகளாகவும், சிலர் பணம்படைத்த தனவான்களாகவும், சிலர் சூரர்களாகவும், சிலர் தானம் செய்வதில் நிபுணர்களாகவுமிருக்கிருர்கள்.'' (517)

''அவர்களில் இன்னும் சிலர் ஸர்வக்ஞராகவும், இன்னும் சிலர் தர்மபராயணர்களாகவுமிருக்கிருர்கள். இவர்கள் எல்லோருக்கும் பிதா ஒருவர்தானே. இவர்கள் அனைவரிடமும் பிதாவின் அன்பும் ப்ரேமையும் ஸமமாக விருக்கிறது. அவ்விதமிருந்தும், எந்த புத்ரன் தனது பிதாவை வசனம், மனம், கர்மம் ஆகியவைகளால் பக்தி பண்ணி ஏகாக்ர சித்தத்துடன் பூஜை செய்து வருகிருனே, அந்த ஸத்புத்ரன் ஸ்வப்னத்தில்கூட தன் பிதாவைத் தவிர வேறு ஒரு எண்ணமோ, தர்ம சிந்தனேயோ இல்லாமல் இருக்கிருனே'' (518)

''அப்பேற்பட்ட நிஜ புத்ரனுகிற அவனிடம் அவனது பிதா தனது பிராணனைப்போல நேசிக்கிருர் அன்ருே? அவன் மற்ற புத்ரர்களைவிட பல விதங்களிலும் அக்ஞானத்துடன் இருந்துவிட்டுப் போகட்டும்; அவனிடம்தான் பிதா தனது முழு அன்பைச் செலுத்துகிருர். இதுமாதிரி, சகல சராசரங்களும், பசு, பக்ஷி, தேவ, மனுஷ்ய, அசுர ஸமேத ஸர்வத்திர சேதன சேதனர்களும் ''என் ஸ்ருஷ்டி,'' என்று நினைத்து நான் அவர்கள் எல்லோரிடமும் சமமாக முழு அன்பை செலுத்துகிறேன். எனக்கு பாரபக்ஷம் கிடையாது.'' (519)

''இன்னமும் சொல்வானேன்? அகில விஸ்வத்திலும் எது எது என்னிடமிருந்து உற்பத்தியாகி இருக்கின்றதோ, அவைகள் எல்லாவற்றிலும் நான் ஏறக்குறைய ஒரே அளவுடன் அன்பு செலுத்துகிறேன். ஆனுல் இந்த ஜகத்தில் எந்த மஹானுபாவன் ஸ்வஅபிமானம், மமகார அஹங்கார மதங்களை தியாஜ்யம் செய்துவிட்டு, என்மீது நம்பிக்கைகொண்டு மஹா மோஹங்களி

லிருந்து விடுதலை அடைந்தவனாக, என்னையே பரமார்த்தம், பரமாராத்யன் என்று நினைத்துப் பூஜித்து, மனம், வசனம், கர்மங்கள் இத்யாதிகளால் எனது ப்ரீதியையே அவனது ஆத்ம திருப்தியாக, அனன்ய ப்ரயோசனமாக பஜித்து வருகிறான்.'' (520)

[தியானம்

நாராயணா, சீதாபிரபோ, உனது தாஸர்கள் என்று நீ ஸ்வீகரிக்கிறீரே, அவர்களுடைய லக்ஷணங்கள் யாது? நாரத, வியாஸ, ஆஞ்சநேயாதிகளையும், சங்கர, ராமானுஜ, மாத்வா சார்யார் போன்ற மஹானுபாவர்களையும், துளசிதாஸ, தியாக ராஜர், ஸ்யாமா சாஸ்திரி, தீக்ஷதர் போன்ற மஹாத்மாக்களையும், பீஷ்மர், தர்மர் போன்றவர்களையும், ஏகாந்திகள் என்று சொல்லு கிறார்களே. அப்பேற்பட்ட ஐகாந்திக பக்திமான்களுடைய ஸ்வரூபம், லக்ஷணம், குண விபவங்கள் யாது என்று என்னால் அறிய முடியவில்லையே. ராமா, என்னைப் போன்ற மானிட ஜன்மத்தை அடைந்தவர்கள் அற்ப காரியங்களில் மனச்சோர்வை அடைகிறார்கள். அவர்களுக்கு பெரிய துக்கங்கள், அவமானங் கள், சகிக்கமுடியாமல் இருக்கின்றன. வாழ்க்கையில் சுகபோகங் களை அனுபவிப்பதையும், பிறர் மதிக்கும்படி வாழ்க்கை நடத்து வதிலும், பரிஸ்ரமமின்றி உத்தம ஐஸ்வர்யங்களை அடைவதிலும், அவைகளை அஜாக்ரதையாகிற தெய்வசங்கல்பத்தால் இழக்க நேரிடும்போது கனமான வருத்தங்களையும் அடைந்து, ஈஸ்வர பராதீனன் என்று பகிரங்கமாக அறிவிக்கப்பட்ட பின்பும், மனம கலங்குகிறார்கள். ராமா, அவ்விதமாக உயர்ந்த ஐகாந்திக பக்தி லக்ஷணங்கள் இல்லாத சாதாரண வாழ்க்கையை நடத்தும் பரம் ஸம்சாரியாகிற என்னிடம் எவ்விதம் உனதுகிருபை ஸம்பவிக்கப் போகிறது? மஹாவிஸ்வாஸம் என்கிற யாகத்தில் நம்பிக்கை இல் லாதவர்களிடம் உன்மனது எவ்விதம் செல்லப்போகிறது? யாதவ குல ரக்ஷகா, முரளிதரா, சூரஸேனா, பவனபுரபதே, ''மாம்சரணம் வ்ரஜ,'' ''அஹம் ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி,'' என்று அர்ஜுனனுக்கு என்ன மஹாகிருபையுடன் தன்னைச் சுட்டிக் காட்டிக்கொடுத்த கிருஷ்ணா, காலநேமி நிஹாவீரா, ஸர்வலோக தயாநிதே, நீர்தானே லக்ஷ்மிபதியான நாராயணர். நீர்தானே ஞானவைராக்கிய பக்திதான நிபுணன். தியாகராஜவினுதா, ஆகமநிகமாதீத சரித்திரா, பூஸுரா, எப்போது உன்கருணை யாகிற திருஷ்டிபதம் எங்கள்மீதுவிழும்? தேவகியின் கர்ப்பத்தில்

வசித்த கிருஷ்ணமுராரே, ரோஹிணியின் கர்ப்பத்தில் தேவகியின் ஏழாவது கர்ப்பமாகிற ஆதிசேஷனைக் கொண்டுபோய் வைத்த யோகமாயையின் பிதாவே, ராமுனியே, உனது தயை எப்போது கிடைக்கும்? ஸச்சிதானந்தமூர்த்தியே, கிருபை செய்.]

"புருஷனாகவிருக்கட்டும், ஸ்திரியாகவி ருக்கட்டும், நபும்ஸனாக விருக்கட்டும், அதேமாதிரி உயிருள்ள வஸ்துவாகவிருக்கட்டும்; உயிரில்லாத பொருளாகவிருக்கட்டும். கபடமின்றி, எவன் ஒருவன் ஸர்வபாவத்தினால் ஆத்மபூதனாக, ஸர்வத்ர வாஸுதேவ மயம், என்று நினைத்து என்னைப் பகவத் ஆராதனைசெய்கிறானோ, அவனே எனக்கு பரம ப்ரியனாகிறான். அவனிடமும் நான் ஸர்வ பாவத்துடன் தோழமை கொண்டாடுகிறேன்." (521)

"பக்ஷியே, நான் மீண்டும் மீண்டும் சத்யத்தையே உனக்குச் சொல்லுகிறேன். அனன்ய பக்தியுடன் என்னைப் பூஜைசெய்பவனிடம், அந்த விஷ்ணுசேவகனிடம் நான் பிராண ப்ரியனாகவிருக்கிறேன். இந்தவிதமாக நீ மனத்தில் ஸங்கல்பித்து, புத்தியினால் ஆராய்ந்து பார்த்து ஸ்வ அபிமானத்தில் யேற்படும், ஸகல ஆசைகள், நம்பிக்கைகள் முதலியவைகளைத் தியாஜ்யம் செய்துவிட்டு, அனன்ய போக்யத்வமாக என்னைப் பஜித்துவருவாயாக." (522)

"உன்னிடம் காலமோ, ம்ருத்யுவோ ஸம்பவிக்காது. நிரந்தரமும் என்னை ஸ்மரணை செய்துகொள். எப்பொழுதும் என்னைப் பஜித்துவா. நான் உன்னை ஸதா ரக்ஷித்துவருவேன்," என்று என்பிரபு அம்ருதவசனங்களைச் சொன்னார். கர்ண ரஸாயனம் போலவிருக்கும் இந்த அம்ருதவசனங்களை நான் திருப்தி அடையாமல் கேட்டுக்கொண்டிருந்தேன். மஹா கிருபாளு, என்மனது என்னையுமறியாமல் அதிஹர்ஷத்தினால் ஆனந்தநிலையை அடைந்தது. என்தேகம் புளகாங்கிதமடைந்து இன்ப ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டிருந்தது." (523)

"நான் சுக ஆனந்தங்களை அனுபவிக்கும்போது என் மனமும் காதுகளும் அவைகளை அறிந்துகொண்டு சந்தோஷத்தை அடைந்தன. என் நாக்கினால் அந்த அம்ருதசுவையை வர்ணனை செய்யமுடியாதபடி இன்பநிலை அடையப்பெற்றது. பிரபுவினுடைய அதிசோபை பொருந்திய முகாம்புஜத்தின் ஆனந்தத்தை எனது நேத்ரங்கள் அனுபவித்துக் கொண்டிருந்தன. ராமகிருபை ஒன்றினால் மாத்திரம் அடையப்பெறும் இந்த அனுத்தமமான நேத்ரானந்தத்தை என் பாக்யமுள்ள லோசனங்களால் எவ்விதம் வர்ணிக்கமுடியும்? அவைகளுக்குத்

தான் சொல்லுவதற்கு வாய் இல்லையே, வாணியாகிற குரல் இல்லையே.'' (524)

"இந்தவிதமாக என்பிரபு உத்தம ஸ்லோகன், உத்தம உத்தமன், (விஸ்வாமித்ர யாகரக்ஷணத்திற்காக கௌசிக முனியைப் பின்தொடர்ந்து சென்ற வினயமூர்த்தி, ஜனகராஜரின் மகளைப் பாணிகிரஹணம் செய்வதற்காக மிதிலைக்குக் கால்நடையாகச் சென்றவன், சீதையுடன் சேர்ந்திருக்கும்போது ப்ருகு ஸுதனு கிற பரசுராமனின் கர்வத்தைப் போக்கின மஹாவிக்ரமன், தந்தை சொல்லுக்காக சீதை லக்ஷ்மணனுடன் வனம் சென்ற ராமன், தீனதயாளு, விராதனைக் கொன்ற வனசரராமன், வனத்தில் வசிக்கும் ரிஷிகளுக்கு அபயப்ரதானம் கொடுத்த சார்ங்கதன்வா,, காகாசூரனை ரக்ஷித்த தீனபந்து, வாலியைக் கொன்ற மஹாவீரன், சமுத்திர ராஜனை ஒரு பாணத்தினுல் அடக்கின ஸேது ராமன், விபீஷணனை ரக்ஷித்த சரணுகதவத்ஸலன், ராவணனைக் கொன்ற பின்பு, வானரங்களையும் கரடிகளையும் "ஸகாக்களே, உங்கள் உதவியினுல் நான் வெற்றியடைந்தேன்,'' என்று பறை சாற்றிக்கொண்ட பரமவினயமூர்த்தி, சுக்ரீவஸம்ரக்ஷகன், ஸாது ஜனப்ரியன், லங்காநகர ராஜ்யத்தை விபீஷணனுக்கு முடி சூட்டிய அயோத்யா ராமன், தசரத புத்ரன், பரதனை நந்தி கிராமத்தில் பதினுன்கு வர்ஷங்களுக்குப் பின்பு தழுவிய சௌசீல்ய ராமன், லக்ஷ்மணன், சத்ருக்னன் ஆகியவர்களிடம் விசேஷ ப்ரேமை செலுத்திய கௌஸல்யா புத்ரன், சீதையுடன் கோஸல சிம்மாஸனத்தில் ஏறிய சக்கரவர்த்தி திருக்குமாரன், என் புருஷோத்தம ராமன், ஆகம ஸ்ருதிகளால் கானம் செய்யப்படும் ஆனந்தகந்த மூர்த்தி, நாரத, வால்மீகி, தியாகராஜாதிகளால் ஸ்வரராகதாள மூர்ச்சனைகளுடன் ஆனந்த கீர்த்தனம் செய்யப்படும் நாதாத்மகன், உமா மஹேஸ்வரர்களால் வந்தனம் செய்யப்படும் என் பிரபு சச்சிதானந்தமய ராமன், பரமபாகவத ப்ரியன், நாதாசலதீபன், நிர்விஹாரன், நிரஞ்சனன், நிருபமன், ஸாகர சயன நாராயணன், கருணுமூர்த்தி, ராமகிருபாளு, யோகி ஹ்ருதயன், தேவஹிதன், தீனரக்ஷகன், ஆபத்ஸகா,) சரசா பதரன், என் பிரபு ராமபத்ர மூர்த்தி, பல விதங்களாகப் பல தடவைகள் எனக்கு உபதேசம் செய்துவிட்டு, நான் சுக ஆனந்தங்களை அனுபவித்துக்கொண்டிருக்கும்போதே, என் பிரபுவை தர்சனம் செய்துகொண்டிருக்கும்போதே, அவருடைய பால்ய லீலைகளை என் பிரபு மீண்டும் பழையபடி எனது சந்தோஷத்திற்காக செய்துகொண்டிருந்தார். கருட மஹாராஜரே, நான் அவ

ருடைய சௌலப்ய வாத்ஸல்யாதி மஹத்வங்களை எவ்விதம் வர்ணிப்பேன்? ''இவ்விதம் மஹாத்மாவான கருடனிடம் காகபுசுண்டி அனுராகத்துடன் சொல்லிக்கொண்டு, ஆனந்தமடையும்போது, அவருடைய நயனங்களிலிருந்து ஆனந்த பாஷ்பங்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. அவரால் மேலேபேசமுடியாமல் தொண்டையும் தழுதழுத்தது. வார்த்தைகள் வெளிவர மறுத்தன. குரல் தடைப் பட்டது. (அதேமாதிரி, காகபுசுண்டியும் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியிடம் வார்த்தை சொல்லிக்கொண்டிருந்த சமயம், பகவான் பால ராமனுக்கு கருணையினுல் கண்கள் கலங்கியிருந்தன.) என் பிரபு தனது முகத்தை திருப்பிக்கொண்டு, சிறு குழந்தை கத்துவது போல, ''அம்மா, எனக்கு பசிக்கிறது'' என்று கத்தினுர். (அப்பேற்பட்ட பாலராமமூர்த்தியை, நான், காகபுசுண்டி கருடனை புறம் வைத்து, ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். ராமா, சீதாபிரபோ, என் மங்கள மூர்த்தியே, உன் கிருபை, தர்சனம், அம்ருத வசனங்கள், உன் தோழமை, உனக்கு அடிமைத்தனம் செய்வது ஆகியவை எப்போது எனக்கு கிடைக்கும்? (525)

''குழந்தை பசியினுல் கலங்குவதைக் கேட்ட மஹா பாக்யவதியான கௌஸல்யாதேவி பிரபுவினிடம் ஓடிவந்தாள். குழந்தையை தனது ஹ்ருதயத்துடன் தழுவிக்கொண்டு, அந்த புண்யவதி மிருதுவான வசனங்களால் சமாதானப்படுத்தினுள். தனது மடியில் அமரவைத்துக்கொண்டு, குழந்தைக்குப் பால் கொடுத்தாள். ஸுர ஸரிதையாகிற கங்கையை உற்பத்தி பண்ணின திரு விக்ரமனுடைய பாதங்களைத் தடவி முத்தமிட்டுக்கொண்டு, அந்த பாதரேணுக்களை தலையில் கங்காதரன்மாதிரி பூஷணமாக அணிந்துகொண்டாள் அந்த பரம பாக்யவதி. குழந்தையை மேலும் ஆனந்தப்படுத்தி, லலிதமாக தூங்கப்பண்ணுவதற்காக மங்களகீதம் பாடினுள். பரம பாக்யவதியான கௌஸல்யாதேவி மானிட சேஷ்டிதங்களைச் செய்யும் ரகுபதியை ஆனந்தப்படுத்தி, தானும் இன்ப ஆனந்தத்தை அடைந்தாள்.'' (526)

''எந்த பரமார்த்த சுகமாகிற ஹரிபகவானின் பாத ஸ்பரிசங்களை திரிபுராரி தனது மூர்த்தனத்தில் தரித்துக்கொண்டு, ஸதா ஹரிபகவானைத் தியானித்துக்கொண்டு இருக்கிருரோ, அப்பேற்பட்ட பரம மங்களமூர்த்தி, அசுபமான சின்னங்களுடன் வேஷங்களாகிற ஸ்மசானவாஸம், பூதபிசாசங்களின் சேர்க்கை, தலைமண்டை ஓடுகள், நாகாபாரணங்கள், பஸ்மத்

தினுல் தேகம் முழுவதும் பூசப்பட்டிருப்பது, புலித்தோல் முதலியவைகளைத் தரித்துக்கொண்டிருந்தாலும், தனது நிஜ மங்கள சுகமான சீதாராம திருவடிகளை ஸதா சிந்தித்துத்துக் கொண்டிருக்கிருரோ, அந்தமாதிரி, மஹாபாக்யம் படைத்த அயோத்யா புரவாசிகள், நரநாரிகள், தங்களுடைய இன்ப போகங்களிலிருந்து நிவிருத்தியடைந்து, ஸர்வ கல்யாண மூர்த்தியாகிற ஸ்ரீராம பாதங்களையே ஸ்மரித்துக்கொண்டு, ஆனந்த இன்பநிலையை அடைந்தார்கள். நிரந்தரமாக அடைந்துகொண்டிருக்கிருர்கள். கருடரே, ஆனந்த இன்ப மடைந்தார்கள்.'' (527)

''அவர்கள் அனுபவித்த சுக ஆனந்தங்களை யாவராலாவது வர்ணிக்கக்கூடுமா? ஸ்வப்னத்தில் ஒருதடவை அந்த பேரானந்தத்தை அனுபவித்துவிட்டால் போதுமே. பக்ஷிராஜரே, அப்போதுகூட அந்த மஹானுபாவன் பிரும்ம சுகத்தைக்கூட நல்ல மதியினுல் தியாஜ்யம் செய்துவிடுவான். பிரபு, அப்பேற் பட்ட ஸஜ்ஜனபுருஷன் மஹாபாக்யவசத்தினுல் ஸ்வப்ன அவஸ்தையிலிருந்து நிஜ ஆனந்தத்தை, ஜாக்ரதை, துரியா வஸ்தையிலும், ஸுக்ஷுப்தியிலும் அடைந்துவிட்டால், அவ னுடைய பரம பாக்ய அனுபவங்களை மனத்தினுலும் ஸ்மரிக்கக் கூடுமா? நீரே சொல்லும்.'' (528)

''நான் அடைந்த ஆனந்தநிலைக்கு எல்லையில்லை, பிரபு. அதனுல் நான் சிலகாலம் அயோத்தியில் தங்கி வாழ்ந்து வந்தேன். அடிக்கடி மாம்பழம்போல இனிக்கும் ஸ்ரீராமச்சந்திர பாலமூர்த்தியின் விநோதமான பால லீலைகளைக்கண்டு, களித்து இன்புற்றேன். அந்த மஹாத்மாவாகிற ஸ்ரீராமனுடைய வரப்பிரஸாதத்தினுல் என்னுடைய பக்தியும் வளர ஆரம்பித்தது. நான் அடிக்கடி அடிக்கடி பிரபுவின் உத்தம ஸுரஸரிதாவைப் போலவிருக்கும் திவ்ய சரணங்களை நமஸ்கரித்துவிட்டு, எனது ஆஸ்ரமத்திற்கு வந்து சேர்ந்தேன்.'' (529)

''கருட கிருபாளு, மஹா மேதாவியான பக்ஷி ராஜரே, எந்த நிமிஷத்திலிருந்து பிரபு என்னைப் பொருளாக்கி, தன்னிடம் ஸ்வீகரித்துக் கொண்டாரோ, அந்த க்ஷணத்திலிருந்து ரகு நாயகனுடைய மஹா கிருபையினுல் மாயை என்னை திகைக்க வைக்கிறதில்லை. பிரபு ஹரிபகவானுல் மாயையின் பிரபாவம் எனது ஸுமதியை கலக்குகிறதில்லை. நான் அதன் இஷ்டப்படி நாட்யம் ஆடுகிறதில்லை. அப்பேற்பட்ட குப்தமான சரித்திரத்தை

நான் உமக்கு உள்ளது உள்ளபடி சொல்லித் தீர்த்தேன். இனி நான் உங்களிடம் ஒன்றும் மறைக்க விரும்பவில்லை.'' (530)

''ககேசா, (பறவையரசே!), இப்பொழுது நான் என்னுடைய நிஜ அனுபவங்களைச் சொல்லுகிறேன். அதையும் தயவு செய்து கேட்கவேண்டும். ஹரிபகவானை ஆராதியாமல் மனிதனுடைய க்லேசங்கள் நாசமடையாது. பக்ஷிராஜரே, ராமகிருபை ஒன்றினால் மாத்திரம் பிரபு, ராமனுடைய பிரபுத்வங்களை அறிய முடியும். பகவான் ராமச்சந்திரன் முழுமதியுடன் தனது பிராட்டியான சீதையுடன் ஒருவனை ஸ்வீகரிக்க வேண்டும் என்று சங்கல்பித்தால் ஒழிய, யாவராலும் அவருடைய கிருபையை சுலபமாக அடைய முடியாது. சீதா ராமனுடைய கிருபை ஒன்றினால் மாத்திரமே சீதாராமனை அடைய முடியும்'' (531)

''பிரபுவின் பரத்வ, சௌலப்ய, சௌசீல்ய குணங்களை நன்றாகப் புரிந்து கொள்ளாமல் பிரபுவினிடம் விஸ்வாஸ நம்பிக்கை ஏற்படாது; பிரபுவினிடம் விஸ்வாஸ நம்பிக்கை ஏற்படாமல் பிரபுவினிடம் பரபக்தி, பரஞானம், பரமாபக்தி ஏற்படாது. பரபக்தி, பரஞானம், பரமாபக்தி ஏற்படாமல், பிரபுவினிடம் ஸம்பந்தம் நிலைக்கிறதில்லை. ககபதி, பக்ஷிராஜரே, ஜலத்தைப் பிளந்தும், கடைந்தும், ஹிம்சித்தும், அதனுடைய வாசனை முதலிய சேர்க்கை ஸம்பந்தம், பிசின் மாதிரியோ, வெண்ணெய் மாதிரியோ ஏதாவது ஒட்டிக்கொள்ளுகிறதோ, இல்லை. அதுபோல, பரமாபக்தி இல்லாமல், ஸ்ரீசீதாராம ஸம்பந்தம் நின்று நிலைக்கிறதில்லை. இதை நன்றாகத் தெரிந்து கொள்ளும் பிரபு.'' (532)

[தியானம்

ராமா, கிருஷ்ண, பரேசா, உபேந்திரரே, ப்ருஸ்னி ஸீதபஸ் என்பவர்களிடம் குழந்தையாகப் பிறந்த ப்ருஸ்னிகர்ப்பரே, அதிதி, காஸ்யபருக்குப் பிறந்த வாமனரே, மனு, சதரூபை ஆகிறவர்களுக்குப் பிறந்த ஸ்ரீராமரே, தேவகி வாஸுதேவருக்குப் பிறந்த வாஸுதேவரே, சரணம் சரணம். காகபுசுண்டிக்கும் கௌஸல்யைக்கும், நந்தகோபன், யசோதை ஆகியவர்களுக்கும் மார்க்கண்டேய ரிஷிக்கும், ஸத்யவ்ரதன் என்கிற பாண்டிய னுக்கும், பாலரூபமாக காக்ஷி அளித்த மஹானுபாவா, உம்மை வேதவியாஸர், சுகர் சொல்லியபடி பரமாராத்யனாக பூஜிக்கிறேன். அதனால் அல்லவோ தியாகராஜர் ''நீரஜாக்ஷா, ஸ்ரீராமய்யா,

பட்டாபிஷேக ராமச்சந்திரா, உன்னை ஒருதடவை பார்த்தபின்பு நான் வேறு ஒரு தெய்வத்தை நாடுவேனு? உன்னைப்பற்றிய விஷயமாயிருந்தால் நான் பாடுவேன்; ஆடுவேன்; உன்னைவிட்டு மற்றயாவரும் எனக்கு வேண்டாம்; ஹே சியாம சுந்தராங்கா, ஸகலமும் நீதானே எனக்கு. ஏனென்று கேட்பாயோ? நீ தாமஸரஹித குணஸாந்திரன்; துஷ்டமனத்துடைய அசுரர் களின் கர்வத்தைப் போக்குகிறவன். சிஷ்டஜன ஹ்ருதய விஹாரன்; அதனுல் நான் உன்னை ஒருவனைத்தானே இஷ்ட தைவம் என்று கடைப்பிடித்தேன்'' என்று சொன்னுர். அவரைப் போல சீதாராமா, நாரத, வியாஸ, சுகபிரும்மத்திஞல் காட்டப் பட்ட மஹா பொருளே, நந்தகோபன், யசோதை வீட்டிலும் கௌஸல்யா, தசரதர் அரண்மனையிலும் அலங்கரித்த ஸ்ரீமானே, உன் பாலரூபத்திலும், உனது ஹிருதய வக்ஷஸ்தலத்தில் லஜ்ஜை யுடன் வீற்றிருக்கும் மஹா லக்ஷ்மியின் கடாக்ஷ வீக்ஷண்யமும், உங்களுடைய திருஷ்டிபதமும், எனக்கு எப்போது நிரந்தர மாகக் கிடைக்கும்? மருதாபுரீசா, குருவாயூரப்பா, ஸாகேதராமா, ரங்கபதே, பாலராமச்சந்திரா, உன்தயை எனக்கு எப்போது கிடைக்கும்? கருடமஹாராஜரே, காஸ்யபபுத்ரரே, உம்மால்தான் ஏற்படவேண்டும். உம்மையும் நான் சரணமடைந்திருக்கிறேன்.]

''மஹாராஜரே, மஹாகுருவின் அனுக்ரஹத்திஞல் ஒழிய எங்கேயாவது ஞானம் ஸித்திக்குமா? பிரபோ, பற்றுதலற்ற மனத்துடன் ராமார்ப்பணம் செய்வது என்கிற ஸத்ய விரதமாகிற வைராக்யத்திஞல் அல்லவோ அந்த ஞானமும் சோபிதமடையக் கூடும்? இல்லாத போனுல் பரிஸ்ரமத்துடன் சம்பாதிக்கப்பட்ட ஞானமும் வியர்த்தம்தானே? இந்த மர்மத்தைத்தானே வேதங்களும், புராணங்களும் கோஷிக்கின்றன. ஹரி பக்தி என்கிற பாக்யம் ஒன்றிஞல் அல்லவா, தேக சுகம், மன சுகம் ஆகிய நித்ய சுகம் நிரந்தரமாக ஏற்படக்கூடும். அதனுல் அல்லவோ (தியாகராஜர் போன்ற) மஹான்களாலும், பாகவத உத்தமர்களாலும், என் பிரபு ஸ்ரீராமன் ஸதா ராக ரத்னமாலை களால் அலங்கரிக்கப்பட்டு, ஆனந்தமாக கீர்த்தனம் செய்யப் படுகிருர்.'' (533)

''என் அருமைப் பிள்ளாய், மனமாகிற ஸங்கல்பம் சீதா ராமனைத் தியானித்துக்கொண்டு, அதில் ஏற்படும் விஸ்ராமம் என்கிற சாந்தியை அடைவதால் அல்லவா மனிதனுக்கு இயற்கை யாகவே ஸந்தோஷம் ஏற்பட்டு நிலைத்திடும். இல்லாவிடில் அவ னுக்கு ஸஹஜமான ஸந்தோஷம் எவ்விதம் ஏற்படும்? பிரபு, மஹா

ராஜரே நீர் கோடிக் கோடி கணக்கான உபாயங்களைச் செய்து பாரும். அல்ப ஆயுட்காலம் முழுவதிலும், அநேக பிறப்புக்கள் எடுத்தும் செய்துபாரும்? ஜலமில்லாமல் ஓடம் போகக்கூடுமா? ஜலபிரவாஹத்தின் மகிமையினால் அல்லவா அக்கரை அடைய முடியும்?'' (534)

''மன சாந்தியால் ஏற்படும் ஆத்மதிருப்தி இல்லாத போனால் எவ்விதம் ஐயா, காமம் எனப்படும் ஸங்கல்பம் நாசமடையும்? காமமாகிற ஸங்கல்பத்தை எவ்விதம் அழிக்கக்கூடும்? ராம கிருபையின்றி காமங்கள் நாசமடையா. எங்கேயாவது விருக்ஷம் (மரம்) க்ஷேத்திரமின்றி (பூதளமின்றி) வளரக்கூடுமா?'' (535)

''ஸத்ஸங்கத்தினால் ஏற்படும் விக்ஞானம் ஒன்றினால் அல்லவோ பாகவத பிரேமையும், ஸமதிருஷ்டியும் ஏற்படும்? ஆகாசமில்லாமல், (இடைவெளி யில்லாமல்) ஒருவன் நகரக் கூடுமா? பிரபு, சிரத்தையில்லாமல் தர்ம ஆசரணைகள் கைகூடுமா? ப்ருத்விதத்வமின்றி வாசனைகள் ஏற்படுமா?'' (536)

''காஸ்யபபுத்ரரே, தவ வாழ்க்கையின்றி தேஜஸ் ஆத்மபலம், வீர்யம் முதலியவற்றை விஸ்தரிக்க முடியுமா? இந்த ஸம்சாரம் முழுவதிலும் தேடிப்பாரும். தண்ணீர் தத்வமில்லாமல் ரஸத்தை ருசிபார்க்க முடியுமா? வித்வான்களை ஸேவை செய்யாமல், ஸதாசார சீல நடத்தை ஏற்படுமா? ஹே கோஸாயி, அக்னி தத்வமில்லாமல், ரூபம் தேஜஸ் ஏற்படுமா?'' (537)

''மனம் நிஜசுகத்தை அடைய வேண்டுமானால், தீரபுத்தி யுடன் ஆத்மானுபவம் ஏற்பட்டால்தானே அடையக்கூடும்? இல்லாவிடில் மனம் எவ்விதம் சாந்தியடைந்து சந்தோஷத்தைக் கொடுக்கும்? வாயு தத்வமின்றி ஸ்பர்சம் எப்படி அறியக்கூடும்? நம்பிக்கை, பூர்ண விஸ்வாசமின்றி மனிதனுக்கு ஸித்தி எவ்விதம் ஏற்படும்? பிரபு, இந்த மாதிரி ஹரிபஜனம் இல்லாத போனால், எப்படி ஜன்ம மிருத்யு பயங்கள் நாசமடையக்கூடும்?'' (538)

''மஹா விஸ்வாசமின்றி பரபக்தி எப்படி ஸம்பவிக்கும்? பரபக்தியுடன் பஜிக்காதவரை பிரபு ஸ்ரீராமன் மனம் இளகுவாரா? ஸ்ரீராம கிருபையின்றி எந்த ஜீவனும் ஸ்வப்னத் தில் கூட மன விஸ்ராந்தியை அடையமுடியுமா?'' (539)

''தீரபுத்தியுள்ள கருடரே, நான் சொல்லுவதை மனதில் தீர விசாரித்து அறிந்து கொள்ளும். ஸம்பூர்ண குதர்க்க வாதத்தையும், ஸகல சந்தோஷங்களையும் தியாஜ்யம் செய்து விடும். ரகுவீரனை மன உண்மையுடன் பூஜித்து வாரும். என்

பிரபு ராமன், கருணாகரன், அழகிற்கும் சுகங்களுக்கும் பொக்கிஷம், அவனைப் பூர்ண பக்தியுடன் பூஜித்து வாரும்.'' (540)

"ஹே பக்ஷி ராஜரே, என்னை ஆட்கொள்ள வந்த கருட மூர்த்தியே, நான் புத்திக்குத் தோன்றின பிரகாரம் பிரபுவின் பிரதாபங்களையும் மகிமைகளையும் கானம் செய்தேன். நான் இந்த விஷயத்தில் யுக்தியினாலோ, அறிவின் பலத்தினாலோ ஒன்றும் சொல்லிவிடவில்லை. நான் எனது கண்களால் பார்த்து நிஜமாக ஆனந்த இன்பத்தை அடைந்து, ஒன்றையும் ஒளிக்காமல் தங்களுக்குச் சொன்னேன்.'' (541)

"ஸ்ரீ ரகுநாதனுடைய மகிமைகளும், நாமங்களும், ரூபங்களும் கல்யாண குணங்களும், ஸகலமும் அபாரமாகவும் அனந்தமாகவுமிருக்கின்றன. அதைப்போல ரகுநாதனும் அபரிமிதமாக கல்யாண குணங்களுடன் பிரகாசிக்கிறார். அவ்விதமிருந்தும் முனிகணங்களும், யோகீஸ்வரர்களும் தங்கள் தங்கள் நிஜமதிக்கு ஏற்ப, ஹரிபகவானுடைய குணங்களைப் பாடுகிறார்கள். வேதங்களும், சேஷபகவானும், சிவபெருமானும் அவைகளைப் பூர்ணமாகப் பாடிமுடிக்க முடிகிறதில்லை. அவ்விதமாக பிரபுவினுடைய மகிமைகள் அனந்தமாகவும், விஸ்தாரமாகவும், வர்ணனைகளுக்கு மீறியுமிருக்கின்றன.'' (542)

[தியானம்

மங்களங்களைக் கொடுக்கும் பகவதி, மாயை என்று யாவராலும் சொல்லப்படும் நீ பகவானுடைய ஸங்கல்பமாக விருக்கிறாய். உனது பிடிகளிலிருந்து நழுவி மோக்ஷமடைகிறவன் பகவானுடைய திருப்தி ஒன்றுக்கே வாழ்ந்தவனாக விருக்கவேண்டும். ஸ்ரீ ராமனுடைய பாதபங்கஜங்களையே நம்பி வாழ்பவன் ஆசை என்னும் சங்கல்பத்தை தியாகம் செய்கிறான். அவனுடைய மனம் எப்போதும் கர்மங்களைச் செய்து கொண்டிருந்தும், கர்மங்களின் பலன் ஈஸ்வரனுடைய அனுக்ரஹம் என்று நம்பி, தோல்வியினால் வாட்டமடையாமல் வாழ்கிறான். ஹேயதுகுல கிருஷ்ணா, ரகுகுலராமா, உன்னுடைய ஸம்பந்தம் பெறவேண்டுமானால் காசீபுரீஸ்வரியாகிற அன்ன பூர்ணாவின் அனுக்ரஹம் தான்வேண்டும். யசோதை, கௌஸல்யா தேவகி ஆகியவர்கள் மஹாபாக்யம் செய்தவர்கள். ஹே சுந்தர, தசரதநந்தன, யசோதைநந்தன, பசுபாலர்களாகிற நந்த கோப யசோதையிடம் என்ன ஸங்கல்பத்துடன் சென்றாயோ, அது மாதிரி என்னிடமும் வரமாட்டாயா? பரிக்ஷித்தும்

காகபுசுண்டியும் வியந்து போகும்படி பால லீலைகளைச் செய்தாயே. அது மாதிரி எனக்கும் பாக்யம் கிடைக்குமா?; உன் கருணையின் விசேஷம் பெறும் பக்தி ஆராதனையினால் மாத்திரம் அடையக்கூடுமா? இல்லை. தேவாதி ஈசனுக விருக்கும் நீர்யோக மாயையை தனது சங்கல்பமாக வைத்துக் கொண்டிருக்கிறீர். பிரபு, அஷ்டபுஜங்கள் உள்ள உன் சஹோதரி மனம் ஒப்பி தனது சுந்தர பாதங்களை என் மனதில் அமிழ்த்தினால் அல்லவோ, நான் பூர்ண சிந்தனையுடன் உன் பாதங்களை நினைக்க முடிகிறது. பிரலம்பன், பகாசுரன், கம்ஸன் முதலியோர்களைக் கொன்ற பாலகிருஷ்ணா, முத்துமணிகளாலும் மகரந்த ரஸம் ஆகியவைகளால் அலங்கரிக்கப்பட்ட கிருஷ்ணா, ராமா, ஜாகரூக, உன்னை நம்பி அடைந்தவர்களின் ஹிதத்தை ஸங்கல்பிக்கும் யோகினுதா, வேத ஆகமங்களால் புகழப்படும் ரகு குல, யதுகுல உத்தமா, உன்னைப் பஜிப்பது அல்லவோ மஹா பாக்யம், நாராயணா, மஹாலஷ்மி நாயகா, சீதா பிரபு, தேவகி

நந்தனா.]

"பிரபு, நீரும், உம்மைப்போல பல பக்ஷிகளும் கொசு போன்ற சிறிய பூச்சிகளும் ஆகாயத்தில் துள்ளி எழும்பி பறக்கின்றன. உங்களாலோ அல்லது அவர்களாலோ ஆகாயத்தின் அக்கரை அடையப்படுகின்றதா? அது மாதிரி ரகுபதியின் மகிமைகளும் அனந்தம். அவைகளும் அறிய முடியாதபடி பரந்தும் விஸ்தீர்ணமாக விருக்கின்றன. என் பிள்ளாய், அது ஆழமான சமுத்திரமாக விருக்கின்றது. அதைத்தாண்டிச் செல்வது மிக்க கடினம்." (543)

"ககேசரே, ராமனுடைய திவ்யமேனி, சௌந்தர்ய அழகுகள் கோடிக்கணக்கான மன்மதர்களின் அழகுக் குவியல்களை ஏகமாத்திரமாகக் கொண்டது. அது போல சத்ருக்களை அழிப்பதில் அவருடைய பலம் அமிதமாக விருக்கின்றது. அது போல பிரபுவினுடைய ஐஸ்வர்ய விலாஸங்கள் கோடிக் கணக்கான மஹேந்திரர்களுக்குச் சமமாக விருக்கின்றன. அவருடைய ஸ்தானமும், வாசஸ்தலமும் அனந்தகோடி ஆகாசங்களைப்போல பரந்திருக்கிறது." (544)

"அவருடைய தேகபலமும் கோடிக்கணக்கான வாயுதேவர்களின் பலத்தைவிடவும் சிறந்து விளங்குகிறது. அவருடைய பிரகாசமும், தேஜஸும் கோடி சூர்யதேஜஸ்ஸைவிட மிகச் சிறந்தது. அவருடைய சீதளமான பார்வைகள் கோடிக் கணக்கான

சந்திரர்களுடைய குளிர்ச்சியைவிட சீதளமானது. பிரபு, அவருடைய திருஷ்டி கடைக்கண் வீக்ஷண்யம் பட்டுவிட்டால், அது ஸம்சாரத்தின் ஸமஸ்த தாபங்களையும் பயங்களையும் போக்குகின்றது.'' (545)

"கோடிகால தேவர்களைப் போல அவருடைய ஆக்ஞையை யாவரும் மீறமுடியாதபடிக்கும் கடினமாகவும், நிச்சயமாக ஸம்பவிக்கக் கூடியதாகவுமிருக்கிறது. பிறருடைய சக்திகள் அவருடைய சக்திகளைத் தடுக்கமாட்டாமல் உடைந்துபோகின்றன—அவர் பாவிகளால் பிரவேசிக்க முடியாதபடி மூடிக்கொண்டிருப்பவர். கோடிக்கணக்கான தூமகேதுகளின் பிரபாவங்களைக்கொண்டவர் என்பிரபு, பகவான் ஸ்ரீராமச்சந்திரன். யாவராலும் தாண்டமுடியாத கட்டளையை உடைய துராதர்ஷர்.'' (546)

''கோடிக் கணக்கான பாதாளலோகங்களைப் போல ஆழ்ந்திருக்கும் ஆழமுள்ளவர் என்பிரபு ஸ்ரீராமன். கோடிக் கணக்கான யமராஜர்களைப் போல பயங்கர ரூபமுள்ளவர். அனந்த கோடி தீர்த்தங்களுக்குச் சமமாக ஸ்மரித்தமாத்திரத்தில் கங்கை, புஷ்கரம் போல பாபங்களைப் போக்கும் தீர்த்தகரர். பரம பாவனமானவர் என்பிரபு ஸ்ரீராமன். அவருடைய நாமமாகிற ''ஸ்ரீராம'' என்கிற திருமந்திரம் அகில பாபங்களையும், பயங்களையும் நாசம் செய்வதற்குப் பிரபாவம் வாய்ந்தது.'' (547)

'கோடிக் கணக்கான ஹிமகிரியைப்போல அவருடைய நிலை ஸ்திரமாக, அசைக்க முடியாதபடிவிருக்கிறது. அவருடைய கம்பீரமான தோற்றம் கோடிக்கணக்கான ஸமுத்திரங்களையும் மீறியது. கடல்போல மிக்க ஆழ்ந்திருப்பதினால், அவரை யாவராலும் கலக்க முடியாது. கோடிக்கணக்கான காமதேனுக்களைப் போல எதைக் கேட்டாலும் கொடுக்கக் கூடிய பெரும்வள்ளல் அன்றோ என்பிரபு ஸ்ரீராமமூர்த்தி. பகவானாகிற என்பிரபு ஸ்ரீராமன் சகலகாம அபீஷ்டங்களை குறைவின்றி பூர்த்திசெய்யும் காமதாயகர்.'' (548)

''கோடிக்கணக்கான சாரதாதேவிகளைப் போல என்பிரபு ஸ்ரீராமன் அதிசாமர்த்தியம் வாய்ந்தவர். கோடிக்கணக்கான பிரும்மதேவர்களைப்போல ஸ்ருஷ்டி காரியத்தில் என்பிரபு ஸ்ரீராமமூர்த்தி அதிநிபுணத்வம் வாய்ந்தவர். அதேபோல என்பிரபு கோடிக்கணக்கான விஷ்ணுபகவான்களைப் போல காப்பாற்றும் சக்தியுள்ளவர் என்பிரபு ஸ்ரீராமமூர்த்தி கோடிக்கணக்கான ருத்ரர்களைப்போல ஸம்ஹாரம் செய்வதிலும் அதிஸமர்த்தர்.'' (549)

"கோடிக்கணக்கான குபேரர்களைப்போல மிகுந்த தனம் ஐஸ்வர்யங்கள் கொண்டவர் என்பிரபு ஸ்ரீராமபத்ரமூர்த்தி. அதே மாதிரி என்பிரபு கோடிக்கணக்கான மாயாதேவிகளைப் போல பிரபஞ்சங்களை ஸ்ருஷ்டிசெய்விப்பவர். லோகங்களைத் தாங்குவதில் கோடிக்கணக்கான ஆதிசேஷர்களுக்கு ஸமமான பாரத்ருதர். அதிகமாகச் சொல்லிப் பயன் யாது? என்பிரபு ரகுராமன் நிரவதி நிருபம ஜகதீசர். சக்தி, பல, தேஜஸ், ஞானம், வீர்யம், ஐஸ்வர்யம் இத்யாதிகளில் அவருக்கு ஸமமானவர் யாரும் இல்லை. இருக்கவும் முடியாது. அவர் எல்லையற்ற மகிமையுள்ளவர். அவரை நாம் வாக்குக்களால் அறியமுடியாது." [அப்பேற்பட்ட ஸகல கல்யாண குணவிபவங்களைக் கொண்ட சீதாராமமூர்த்தி களை நான் காகபுசுண்டி, கருடன் முதலியோரை புறம்வைத்து ஆயிரம் நமஸ்காரங்களைச் செய்கிறேன். அவர் எங்களைக் காப்பாற்றவேண்டும்.]" (550)

[தியானம்

பிரபு, நாரத பகவானுடைய சிஷ்யனுகிற எனக்கு என் ஆத்ம ஜ்யோதியை அணைத்துவிட்டாயே. திக்குக்கள் தெரியாத படி, என் மனம் குலைந்து, ராஜ ஹம்ஸத்தையிழந்த ஆண் ஹம்ஸம் தவிப்பதுபோல அல்லவா நான் பரிதபிக்கிறேன். எனக்கு குருநாதர் போல யார் வந்து என் கண்களைத் திறந்து விடுவார்கள்? என்னுடைய ஐஸ்வர்யங்கள் பாழடைந்து போகட்டும். உனது திருவுள்ளப்படி நான் நடக்கவேண்டும் என்று நீ நினைப்பது சரிதான். அதை யாராவது மறுத்துக் கூற முடியுமா? உனக்கே அடிமை விரதம் பூண்டு உன் ஆத்ம திருப்தியையே எனது குறிக்கோளாக நான் வாழ்ந்தால் மட்டும் போதுமா? பிரபு ராமகிருபாளு, நாராயணு, அச்சுதா, சீதை, ஆஞ்சநேயர், பரதன், லக்ஷ்மணுதிகள் அனவரதமும் தேடி அலைந்து திரியும் உமது பதாப்ஜங்கள் உமது கிருபையின்றி சுலபமாக அடைய முடியுமா? ஆத்மா ராமர்களான உமா மஹேஸ்வரர்கள், வஸிஷ்ட, தசரதாதிகள் அனுபவித்த மனக்லே சங்களை விடவா எங்களுடைய க்லேசங்கள் பெரிதாக விருக்கக் கூடும்? அயோத்யா ராமா, சீதையின் ஸஹாயா, உன்னைப் பரிபூர்ணன் என்று தியாகராஜாதிகள் ஸ்துதி செய்கிறார்களே. அது நிஜமாக வேஷதாரணமில்லையே; இருக்க முடியாதே. ஹே காமாக்ஷி, உன்னையே நம்பிவாழும் உனது குழந்தையாகிய நான், நீ எனக்குத் தாய் என்றும் அறிவாயே. ஹே கஞ்சதளாயதாக்ஷி,

உனது நிஜஸ்வரூபம் கருணை ஒன்றே என்று பரக்கப்பரக்கப் பாடியும், உன்னையே நம்பியும், உனது ஸம்பந்தத்தை ஏகபோகமாக அனுபவித்தும், உனது நிஜஞான வைராக்யத்தை ஒருவிதமாகப் புரிந்து கொண்டும், எனக்கு ஏன் அம்மா தயக்கமும், சோகமும் மன பிராந்தியும், அபாக்யங்களும், அசுபங்களும் ஏற்படுகின்றன? ராஜராஜேஸ்வரி, கஞ்சி காமாக்ஷி, உத்தராயணம் சுக்லபக்ஷம் நவமி இரவு என்கிற விஷயங்களை நீயல்லவோ திட்டமிட்டு வைத்திருக்கிறாய். நீயல்லவோ அந்தர்யாமியாய் என்னை ஸுஷும்ணையில் பிரவர்த்திக்கச் செய்கிறாய். உனது நற்சம்பந்தம் பெற்றபடியால் நற்கதியான மோக்ஷமும், ஆத்ம சாந்தியும், சீதாராம பாக்யமும் கிடைப்பது அரிது என்று சொல்ல முடியாது. உன்னிடமுள்ள பக்திகளின் காரணமாக நாங்களும் சீதாராமனுடைய வரபக்தர்கள் என்று சொல்லும்படி ஆகி விட்டதே. அம்மா, அது உனது திருவுள்ளக் கடாக்ஷம் அன்றோ?]

"என் பிரபு ஸ்ரீராமச்சந்திரனுக்கு யாது உபமானமாகச் சொல்லக்கூடும். யாராவது அவருக்குச் சரியாகச் சமானமாகச் சொல்லும்படி குணவிபவங்களை உடைத்தவர்களாகவிருக்கிறார்களா? ஆனால் ஒரு உபமானம் சொல்லக்கூடும். அதையே வேதங்களும் பறைசாற்றி கோஷிக்கின்றன. பகவான் சீதாராமச்சந்திரர்களுக்கு சீதாராமச்சந்திரனே ஸமமான உபமானம். எங்கேயாவது கோடிக் கோடிக்கணக்கான மின்மினிப் பூச்சிகளை ஒரு சூரியனுக்கு நிகராகச் சொல்லிவிடக் கூடுமா? அவ்வளவு சுலபமான காரியமா? சூரியனும் அவ்வளவு மிகவும் லேசான பிரபுவா? இந்த பிரகாரம் முனிஸ்ரேஷ்டர்கள் தங்களுடைய விமலமான மதியையும், நிஜசிரத்தைகளையும், ஆத்ம விலாஸங்களையும், ஹரி பகவானுகிற தங்களுடைய குணோத்தமங்களில் ஆனந்த பூர்வமாக ஈடுபாடு உடையவர்களாகிறார்கள். அவ்வித மிருக்கினும் என் பிரபு ஸ்ரீராமன் அவர்களுடைய தோஷங்களை மறந்து, பரிபூர்ணகாமனாக அவர்களுடைய மனோபாவங்களையும் உள்ளன்பையும் அறிந்து, அதிகிருபையுடன் அதிவினயத்துடன், உள்ளன்புடன் காத்து ரக்ஷித்து அவர்களுக்கு ஆத்ம சாந்தியாகிற தேக, மன சுகத்தை அளிக்கிறார். அப்பேற்பட்ட சுலபரை, கிருபாளுவை, ஹே கருடரே, எங்கு பார்க்க முடியும்? (551)

"என் பிரபு சீதாநாயகன் ஸ்ரீராமன் அமித கல்யாண குணசாகரன். அவருடைய குணவிபவங்களின் சிறப்புக்கள் முழுவதும் காணறிய முடியாதபடி, மிக்கப் பரந்ததும், ஆழ

முள்ளதாகவும், கருணைமய ஸமுத்திரமாக விளங்குகின்றது. ராம சுக்ருதங்களின் பலனாக நான் ஸாதுக்களிடம் எந்த குண விபவங்களைக் கேட்டேனோ, அவைகளை நான் அறிந்து கொண்டபடி உமக்குச் சொன்னேன்.'' (552)

''ஸ்ரீராமச்சந்திரன் ஸகலருக்கும், தன்னை அண்டினவர்களுக்கும் சுகத்தை வள்ளலாக வாரி அளிக்கிறார். அவரே கருணையின் பொக்கிஷம். ஆகையினால் மதம், மமதையாகிற ஸ்வ அபிமானம், '' நான் பெரியவன் '' என்கிற பொய் ஞானம் ஆகியவைகளைத் தியாஜ்யம் செய்துவிட்டு, ஹே மூடமனமே, ஜானகி நாதனாகிற சீதாபிரபுவை, ஸ்ரீராமனை பஜித்து வா. நிஜபக்தியுடன் பூஜித்து வா. கொடியதான கர்வத்துடன் கங்கை, காவேரி ஆகிய நதிகளில் ஸ்நானம் செய்த போதிலும், அந்த ஸ்நானம் என்ன பயனைக் கொடுக்கும்? (ஸோமயாஜி என்று சொல்லப்படுபவன், காமம், க்ரோதம் இவைகளால் வழி தப்பிப் போய் தவம் செய்தபோதிலும், அவனுடைய தவம் அவனைக் காப்பாற்றுமா? ஸோமிதை என்னும் யாகதீக்ஷை பட்டம் பெற்றவனுடைய நாரி, அவனுடன் இருந்து யாகத்திற்கு உதவாமல் கற்பு நெறியிலிருந்து வழுவினால், அவளுடன் சேர்ந்து செய்யும் அவனுடைய யாகமும் பலன் அளிக்குமா? அளிக்காது.) அதுபோல ஹே மூடநெஞ்சே, நீ சுத்தமில்லாமல் ஆடம்பரத்துக்காகச் செய்யும் எந்த ராம ஆராதனைகளும் பயன்களைத் தராது. (அப்பேற்பட்ட ஆத்மா ராமனாகிற காக புசுண்டியை, கருடனை புறம் வைத்து நானும், ராஜலக்ஷ்மியும், குழந்தைகளும் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறோம்) (553)

காகபுசுண்டியின் அழகு மிகுந்ததும், அன்புப் பெருக்குடன் கூடியதும், ஆழ்ந்த நம்பிக்கை, விஸ்வாசம் ஊட்டுவதுமான வசனங்களை என் பிரபு தீனரக்ஷகனாகிற கருடமஹாராஜர் ஸாவதானமாகவும், கவனமாகவும், எல்லாவற்றையும் கேட்டார். அவருடைய மனம் சந்தோஷத்தினால் பொங்கி, தேகம் புல்லரித்தது. அவருடைய ஆனந்தப்பெருக்கால், தன்னுடைய இறக்கைகளை முழுவதையும் அவர் விரித்துக்கொண்டு காகபுசுண்டியின் முன்பு நர்த்தனமாடினார். அதி அத்புத ஆனந்தத்தினால் அவருடைய பெரிய கண்களிலிருந்து கண்ணீர் தாரைகள் வழிந்து ஓடின. அவருடைய மனம் ஸ்ரீரகுபதியின் பாதசரணங்களை நாடியது. மஹாபிரபுவான ஆஞ்சநேயர் ஸதா வருடி இன்பமடையும் அந்த சீதாராம சரணாரவிந்தங்களில் அவருடைய மனம் பதிந்தவுடன், அந்த காக்ஷி பார்ப்பதற்கும், ஸ்மரிப்பதற்

கும் இன்பவெள்ளத்தை ஊட்டிப் பெருக்குவதாக விருந்தது. (554)

பகவான் கருடமஹாராஜருக்கு தன்னுடைய பழைய மோஹத்தை நினைத்துப் பார்ப்பதில் வெட்கமும், லஜ்ஜையும் ஏற்பட்டது. "நான் பகவான் ஸ்ரீராமச்சந்திரனை சாதாரண மனிதன் என்று நம்பினது மஹா அபராதமாகிவிட்டது." மிக்க பச்சாதாபத்தினால் அவர் வாட்டமடைந்தவராகக் காணப் பட்டார். "அனாதியான புருஷராகிய என் பிரபு ஸ்ரீராமச் சந்திரனை நான் மனிதத்தன்மையுடன் பாவித்தேனே. பரம அபசாரத்திற்கு இலக்காகிவிட்டேனே." இந்த நினைவுகள் எழும்ப எழும்ப, அவருடைய மனம் கசிந்து வெட்கத்தினால் மூழ்கிவிட்டது. "பரம காருண்யகரான பிரபுவின் மஹத்வங்களை ஞானபூர்வமாக இந்த காகபுசுண்டியின் வசனங்களால் கேட்க முடிந்ததைப்பற்றி நினைக்க, நினைக்க அவருடைய மனம் கிருதக்ஞையினால் எரிக்கப்பட்டு, "ஐயோ, நான் மோசம் போகத் தெரிந்தேனே. எனக்கும், சகல பிரபஞ்சங்களுக்கும் பிதாவாக விருக்கும் ஆதிநாராயணனே ஸ்ரீராமனாக அவதரித் திருக்கிறார். அவருடைய புகழ்பெற்ற வாழ்க்கை சம்பவங்களை நாம் இந்த காகபுசுண்டியின் வசனங்களால், இழந்த சம்பத்தை மீண்டும் பெறுவதுபோலபெறப் பெற்றோம். ஆகா, அவருடைய கருணையே கருணை. இந்த நினைவுகள் வர, பிரபு கருடமஹாராஜர் காகபுசுண்டியின் திவ்ய பாதசரணங்களில் விழுந்து நமஸ் கரித்தார். அவரைப் பிரதக்ஷணம் செய்து, மீண்டும் மீண்டும் நமஸ்கரித்தார். அந்த ஞானதிவாகரனை ஸ்ரீராமனுக்குச் சமமாக பிரேமையுடன் பூஜித்தார். கைகளைக் கூப்பி அஞ்சலி செய்து கொண்டு சிஷ்ய பாவனையுடன் அவரை வணங்கினார். (555)

[தியானம்

நாராயணா, ராமா, சீதா, உன் கிருபை உனது சங்கல்பமாக விருக்கிறது. உன்னுடன் வெகுகாலம் பழகிய உன் தர்மபத்தினி யாகிற சீதையும் உனது அன்பர்களாகிற உமை மஹேஸ்வரர் களும் அதை அறிவார்கள். பரதனும் பதினான்கு வருஷங்கள் உனது சங்கல்பத்திற்கு கட்டுப்பட்டான். நாராயணா, உன்னுடைய கிருபை இவ்விதமிருக்குமாயின் நான் எவ்விதம் அதற்குப் பாத்திரமாவேன்? எப்போது உனது தரிசனமும், ஆறுதலும் கிடைக்கும்? யசோதை, அர்ஜுனர், உமா மஹேஸ்வரர், கருடன் அனந்தன் முதலியவர்களின் வாழ்க்கை

சரித்திரத்தைப் பார்த்தால், நீயாகவல்லவோ அவர்களிடம் வந்து ஒட்டிக்கொண்டாய். அவர்கள் செய்த தவறுகளுக்கும் ஸ்வபாவமாகவே மன்னிக்கும் புத்தியோடு வந்தாயே. அந்த புத்தியை என்னிடம் காண்பிப்பாயா? உனது பரத்வ விபவங்களைப் பற்றி நான் சிந்திப்பதால் யாது பிரயோஜனம்? அவைகளால் எனக்கு என்னலாபம் இருக்கக்கூடும்? துருவனையும் கட்டிக்காத்த நாராயணா, உனது திருவடிகளையே ஸதா தாங்கும் கருடர் போன்ற மஹானுபாவர்கள் "மோஹமடைந்தார்கள்" என்று சொல்வது உண்மையா? கருடன், அனந்தன், விஷ்வக்ஸேனாதிகள் உன்னுடைய அந்தரங்க அடிமைகள் அல்லவா? அவர்கள் அறிய வேண்டியது, அனுபவிக்கவேண்டியது, அடையவேண்டியது, யாது இருக்கிறது? அவர்களுடைய தெளிவு பெற்ற நிலையே இதற்கு சான்றாகிறதல்லவா? தேவநாயகா, வரதராஜா, பக்தனிடம் உமக்குள்ள ப்ரீதி, மஹத் என்று சொல்லுகிறார்கள். கருடனைப்போல, உன்னாலேயே நான் காப்பாற்றப்பட வேண்டியவன்; கருணைக்கடலே, உன்னாலேயே, எனது பாபங்களைப் போக்க நினைப்பவன். சீதையை ஆலிங்கனம் செய்து கொள்ளும்போதும், ராமா, உம்முடைய இயற்கையான மரகத திருமேனி விளக்கொளியைப் போல பிரகாசிக்கின்றது என்று சொல்கிறார்கள். அப்போது என் விஷயத்தில் மாத்திரம் தயைசெய்யமாட்டாயா? கிருபாளு. நீயே எனக்கு பதில்சொல்.]

"பரமகுரு வரப்பிரஸாதமின்றி ஸம்சாரம் என்கிற அக்ஞானச் சுழலை யாவராலும் தாண்ட முடியுமா? இதுவரை யாராவது குருபிரஸாதமின்றி ஸம்சாரத்தின் அக்கரையைத் தாண்டியிருக்கிறார்களா? பிரும்மாவானாலும் சரி, பகவான் சங்கரனாலும் சரி, இவர்களுக்குச் சமமாக நான் இருக்கக்கூடுமா?" நான் விரும்பினாலும் அவர்களைப்போல ஆகிவிட முடியுமா? இவ்விதம் ஆழ்ந்த யோசனையினால் கலங்கப்பட்ட கருடபகவான் உணர்ச்சி வசமடைந்தவராக காகபுசண்டியிடம் வினயமாக வார்த்தைகளை ஸமர்ப்பிக்கலானார். பகவான் விஷ்ணுவின் பாதங்களால் அடையாளம் செய்யப்பட்ட பரமவைஷ்ணவ ஆசார்யன், என்பிரபு வைநதேயன், பாகவத, ஸம்ரக்ஷகன், தனது உச்ச நிலையை மறந்து வாயஸங்களில் மிக்க ஸ்ரேஷ்டமான காகபுசுண்டியினிடம் அதிவினயத்துடன் பொற்போன்ற வசனங்களை அருளினார். (என்போன்ற மதம்பிடித்த அக்ஞானிகளுக்கு அந்த வார்த்தைகள் நிரதிசய பேரின்பத்தைக் கொடுப்பதற்காகவல்லவோ, அவ்விதம் அந்த பக்ஷிராஜர் கருணைகாட்டி, மார்க்க

தரிசியாக விளங்கினர்.) "பிரபு, ஸ்வாமி, தாங்கள் எனக்கு பேருபகாரம் செய்திருக்கிறீர்கள். ஸம்சயம் என்கிற மஹா சர்ப்பம் என்னைச் சுற்றிவளைத்திருந்தது. நான் ஸர்ப்பத்தை பக்ஷிப்பதில் சாமர்த்தியம் உள்ளவன்தான் என்றாலும், இந்த ஸம்சய ஸர்ப்பம் என்னை மிக்க உபத்ரவத்தில் மாட்டிவைத்திருந்தது. (தேகபலம்கொண்ட என்னைப்போல் விருப்பவனுக்கு) ஞான பலமுள்ள உம்மால் இந்த ஸர்ப்பமும் கொல்லப்பட்டது. மோஹம் எனப்படும் அக்ஞானம், இருள், (எனது பலத்தினால் இறுமாப்பு அடைந்திருந்த) என்னிடம் கடுமையான சோதனை செய்துவிட்டது. அதனால் ஆத்மபலமுள்ள தங்களையும் இந்த விஷயத்தில் நான் காணமுடிந்தது. நான் தங்களுக்கு மிக்க கடமைப்பட்டிருக்கிறேன். தங்களுடைய அருளால் குதர்க்க புத்தியும், இறுமாப்பும் என்னைவிட்டு அகன்றுவிட்டது." (556)

"நான் தங்களை "கருடனுக்கும்" நன்மை செய்தவனாகவும், எனது அக்ஞான இருளாகிற சர்ப்பத்திற்குப் பாம்பாட்டியைப் போலவும், "காருடி" என்கிற மந்திரத்தைப்போலவும் வசீகரணம் செய்யும் ஆத்ம குருவாகவும், ரகு நாயகருடைய அருட்பிரஸாதமாகவும் பார்க்கிறேன். பிரபோ, ஆத்ம குருவே, தங்களுடைய மகிமையினால் நான் மஹா மோஹங்களிலிருந்து விடுபட்டு, மஹா சுகத்தை அடைந்தேன். உம்முடைய மஹா கிருபையினால் நான் வர ஸ்ரீராம பக்தனாக நிரந்தரமாக அடையாளம் செய்யப்பட்டு பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய அனுத்தமமான ரஹஸ்ய மகிமைகளை என்னால் அறியமுடிந்தது. ("ஒகமாட ஒகபாண ஒகபத்னி ஆகியவற்றை விரதமாகக் கொண்ட ஸ்ரீராமா, தியாகராஜாதிகளைப் போல ஏக சித்தம் கொண்டவனும், உமது திருவடிகளையே சாந்தி பராயணம் என்று நம்பி நிலையான மனமுள்ளவனும், திருமா மகளுடன் சேர்ந்த உனது திவ்ய திருமேனி ஸ்வரூபத்தை எப்போதும் காணப்பெறும் பாக்யம் பெற்றவனாகவும் நான் என்றும் இருப்பேன். நான் உங்களுக்கு தாஸன், உங்கள் தாஸர்களுக்குத் தாஸன் என்று நீங்கள் ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டும். என் மெய் நிலையை, ஐயா, பரம்பொருளே, நீங்கள் என்றும் மறக்கக்கூடாது.) உங்களால் நீண்ட ஆயுளையும், சிறந்த அமரத்வமாகிற மோக்ஷத்தையும் புகழையும் கொடுக்கப்பட்டாலும், உங்களுடைய பதாப்ஜங்களின் ஸம்பந்தத்திலிருந்து நான் எந்தக் காரணத்தினாலும் நழுவி விடக்கூடாது, என்று தாங்கள் கிருபை கூர்ந்து அருளவேண்டும்." (557)

இவ்விதம் பலவிதமாக பகவான் கருட மஹாராஜர் ஸ்ரீராமனைத் துதிப்பது போல காகபுசுண்டியை துதித்தார். பல விதங்களால் அவரைப் புகழ்ந்தார். பல தடவைகள் விழுந்து நமஸ்கரித்தார். பிரதக்ஷிணம் செய்தார். வினயமான பல சொற்களைச் சொன்னார். அதிப்ரேமையுடன் வார்த்தைகளை மீண்டும் மீண்டும் சொன்னார். (558)

"பிரபோ, ஸ்வாமி, மஹாகுரோ, நான் அவிவேகத்தினால் பல கேள்விகளைக் கேட்டுவிட்டேன். தங்களையும் பரிசோதித்து விட்டேன். கிருபாஸிந்து, தாங்கள் கிருபை கூர்ந்து என்னைத் தங்களுடைய நிஜதாஸன் என்று ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டும். தாங்களும் என்னுடைய சந்தேகங்களை மிக்க அருள் கொண்டு போக்கி, எனக்கு ஆத்ம உபதேசத்தையும் செய்திருக்கிறீர். நான் இன்று தங்களுடைய மொழிகளின் அருட் பிரஸாதத்தினால் சம்சயங்கள் அறுக்கப்பட்டு, கிருதார்த்தனாக ஆக்கப்பட்டேன்." (559)

"ஸ்வாமி, தங்களுக்குத் தெரியாத விஷயங்கள் ஒன்றுமில்லை. தாங்கள் ஸர்வக்ஞர். (பரா, அபரா என்கிற தத்வங்களை முழுவதும் சந்தேகமின்றி கற்றறிந்தவர்.) மாயை, மஹாமோஹம் ஆகியவைகளிலிருந்து விடுபட்டவர். தீனர்களை, தம்மைப் போல ஆக்க நல்லெண்ணம் கொண்ட உத்தம புத்தியை விசால ஹ்ருதயத்துடன் கொண்டவர். உம்முடைய மனம் வசனங்களுக்குயேற்ப, உம்முடைய ஆசாரங்களும் ஒத்து நிற்கின்றன. அது மாத்திரமா ஸ்வாமி, எல்லோராலும் அடையக் கூடியபடி சுலபராகவும் ஸரளஸ்வபாவங்களுடனும் தாங்கள் விளங்குகிறீர். தாங்கள் பேரின்ப ஞானத்திற்குப் பொக்கிஷம். விஷயப்பற்றுக் களிலிருந்து விடுபட்ட பரம வைராக்ய புருஷன். ஆத்ம ஞானமாகிற விக்ஞானம், ஸுக்ஞானம் என்கிற பூஷணங்களைக் கொண்ட ஸத்ஸம்பிரதாய மார்க்கதரிசி. ஹே பிரபு, இவ்விதம் தாங்கள் ஸ்ரீரகு நாயகனுக்கு நிஜதாஸராக விருக்கிறீர். பகவானும் தங்களுடைய பக்தி ப்ரேமைகளுக்குக் கட்டுப்பட்டவராகவும் இருக்கிறார். இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை." (560)

"பிரபு, தாங்கள் இவ்விதம் உத்தம சம்பத்துக்கள் அடைந்திருந்த போதிலும், எந்தக் காரணத்தினால் வாயஸத்தின் சரீரத்தை தரித்துக் கொண்டிருக்கிறீர்? பக்ஷிகளுள் மிக்க மேன்மையடைந்தவரே, இந்த விபரங்களை முழுவதும் சொல்லவேண்டும். அத்துடன் பிரபு, தாங்கள் இந்த உத்தமமானதும், மிக்க

அழகான ஸரோவரை எவ்விதம் அடைந்தீர்கள்? அந்த விபரங்களையும் கிருபை கூர்ந்து எனக்குச் சொல்லவேண்டும்.'' (561)

''பிரபோ, இன்னொரு விஷயத்தையும் கேளும். பிரபு சிவன் என்னிடம் தங்களுடைய பெருமைகளைப் பற்றிச் சொல்லும்போது, ''கருடா, காகபுசுண்டி மஹா பிரளயத்திலும் நாசமடையாதவர்,'' என்று சொன்னார். என் பிரபு உமாமஹேஸ்வரர் சொன்ன சொல் தவருதவர். அவருடைய வசனங்கள் எக்காலத்திலும் ஸத்யமானவை. ஆகையினால் தாங்கள் என் மனத்தில் தோன்றிய இந்த சந்தேகத்தையும் போக்கவேண்டும்.'' (562)

''ஏனென்று கேட்பீர்களோ, ஸ்வாமி, நாகர்கள், மனுஷ்யர்கள், தேவர்கள், ஸ்தாவரஜங்கமங்கள் யாவரும் காலத்தினால் தாக்கப்படுபவர்கள். காலத்தை யாவரும் அதிகிரமிக்க முடிகிறதில்லை. கோடிக்கணக்கான அண்ட கடாஹங்கள் பிரளய காலத்தில் நாசமடைந்து லயமடைகின்றன. அவ்விதம் கொடும் வேகத்துடன் சஞ்சரிக்கும் கால சக்கிரம் தங்களிடம் மாத்திரம் அணுகிறதில்லை.'' (563)

''தங்களை அந்த காலசக்ரம் வியாபிக்கிறதில்லை. ஹே ஆயுஷ்மன், இதற்கு யாது காரணம்? கிருபாளு, இந்த அறிவும், ஞானமும், அழியாத் தன்மையும், மற்றும் இதர பிரபாவங்களும் தங்களுக்கு எவ்விதம் கிடைத்தன? யோக பலத்தினால் அடையப் பெற்றதா? அந்த விவரங்களையும் முழுவதும் சொல்ல வேண்டும்.'' (564)

''தங்களுடைய ஆஸ்ரமத்தை அடைந்ததினால் என்னுடைய மோஹங்களும் பிரமையும் நீங்கிவிட்டன. இதற்குக் காரணம் என்னவென்று எனக்குப் புரியவில்லை. என்னைக் கட்டிக்காக்க வந்த கிருபாளு, மிக்க அனுக்கிரஹ புத்தியுடன் தாங்கள் சொல்ல வேண்டும்.'' (565)

சிவன் பார்வதியிடம் சொன்னார். ''உமா, கருடனுடைய வசனங்களைக் கேட்ட காகபுசுண்டி மிக்க ஆனந்த மடைந்தார். உள்ளன்புடன் கருடனுடைய கேள்விகளுக்கு காகபுசுண்டி பதில் சொல்ல ஆரம்பித்தார்.'' ''சர்ப்பங்களின் சத்ருவே, நான் இன்று மிக்க பாக்யமடைந்தவனுகிறேன். இன்றுதான் நான் தங்களால் பூர்ணமாக கௌரவிக்கப்பட்டேன். தங்களுடைய வினுக்கள் என்னைக் குதூகலம் செய்விக்கின்றன.'' (566)

''தங்களுடைய வினுக்களை நினைத்துப் பார்க்கும்போது, எனக்கு பல ஜன்மங்களுடைய நினைவுகள் ஒன்று போல சங்கிலித் தொடராக வருகின்றன. நான் தங்களிடம் என்

னுடைய ஆத்மகதையின் முழு விவரங்களையும் ஒன்றுவிடாமல் சொல்லிவிடுகிறேன். பிரபு, மிக்க மரியாதையுடனும், எல்லா வற்றையும் ஸாவதானமாகக் கேளும்'' (567)

"அநேக விதமான ஜபதபங்கள், யக்ஞங்கள், மன அடக்க மாகிற சமம், இந்திரிய அடக்கமாகிற தமம், அநேக விரதங்கள், தானதர்மங்கள், வைராக்ய புத்தி, விஷயங்களிலிருந்து விடுபடுதல், பரமாத்மாவே பெரும் தனம் என்கிற பெரும் புத்தி யாகிற விக்ஞானம், மஹா விஸ்வாசம் கொண்ட ஸுக்ஞானம், அந்த பேரின்பப் பொருளை அடைவதற்கு யோக ஸாதனங்கள், பிரபத்தி போன்ற உபாயங்கள் எல்லாம் ராமகிருபையினால் ஏற்படுகிறது. எனக்கு யேற்பட்ட அவைகளின் பலனாக ரகுபதி யினிடம் ப்ரேமை, அதிகரிக்க, அதிகரிக்க, சீதாராம பதாப்ஜங் களின் நிழலை அடைவதே ஏகபலனாக கிடைத்துள்ள மாபெரும் பயன். ஸ்வாமி, ராமசரணர விந்தங்களைத் தவிர ஐஸ்வர்ய கல்யா ணங்களைக் கொடுப்பவை வேறு ஒன்றுமில்லை. அவைகளை ஒருக் கால் அடைந்தபோதிலும், அவை நீடித்திருக்காது. ஆகையினால் ராமபதாப்ஜங்களின் மகிமையினால் எனக்கு அவைகள் நிரந்தர மாகவே இருக்கின்றன.'' (568)

"பிரபு, இந்த உத்தமமான வாயஸ சரீரத்தினால் ஸ்ரீராம சரணாரவிந்தங்களில் எனக்குப் பக்தி பிரேமை ஏற்பட்டது. ஆகையினால் பிரபு, இந்த சரீரத்தில் எனக்கு ஆழ்ந்த பிரேமை ஏற்பட்டிருக்கிறது. எவர்களுக்கு எது அதிகமாக பிடித்திருக் கின்றதோ, அதை அவர்கள் பெரும் மமதையுடன் அன்பு போஷணம் செய்து வருகிறார்கள். இந்த விஷயம் தங்களுக்கு நன்றாகத் தெரியும்.'' ("ஹே ராமா, ராஜஸம்பத்தை அடைந்து இழந்தவனிடம் உனது கிருபை எவ்விதம் வரப்போகிறது? எப்போது வரப்போகிறது? தாக்ஷாயணி மாதிரி யிருந்த தர்மபத்னி எவ்விதம் என்னிடம் மீண்டும் வருவாள்? நான் வேதவியாஸரைப் போல, சுகரை ஸதா நிழலாகப் பார்க்கப் போகிறேனா? அல்லது ரதியைப்போல மன்மதனை நேரில் காணப்போகிறேனா? என்னிடம் மாத்திரம் உமது தயையாகிற பூர்ணகும்பம் நிறையவில்லை. உமது ஸாந்நித்யம் கிடைக்க வில்லை. சதா உமது திருவடிகளையே நம்பி வாழ்ந்து வரும் என்னிடம் உம்முடைய விரதமாகிற ஏகபாணம், ஏகவசனம், ஏகபத்னி, ஏக நினைவு பலிக்கவில்லை. நான் தியாகராஜரைப் போலவே நிஜமாகவே பாக்யவானில்லை. எனது பக்தி பிரேமை, தாஸ்யம் எல்லாம் வீண். நான் சொல்லிக்கொள்ளும் வார்த்தை

களும் வீண் டம்பம். என்னுடைய சப்தங்களும், வசனங்களும் நிஜமாகவே நாதரூபசுந்தரியாகிற சீதையின் காதுகளில் விழ வில்லை. எனது பாக்யங்கள் மிக்க குறைவு. இதுவும் ராம கிருபை. ஆச்சரியம்.'') (569)

[தியானம்

ஹே லக்ஷ்மிநாராயணு, சீதாராமா, உங்கள் கருணையை வேண்டி வந்திருக்கும் புத்ரனைப் பாருங்கள். பிராட்டி சந்நிதியில் விழுந்த காகம் உயிர்பெற்றது. ஆனுல் நானே? பாற்கடலில் எழுந்த மங்கையின் கண்நோக்குக்கள் சகல திக்குகளிலும் சுழன்று பாய்ந்து ஓடின. ஏன்? தனது நாயகனுகிற மஹா விஷ்ணுவை காணென காண ஓடித்தாவி அந்த மங்கள ரூபத்தை அணைத்தன. ஆனுல் என் விஷயத்திலோ? தேவி, பராசக்தி, ஆத்மேஸ்வரி, கிருஹேஸ்வரி, உனது ஸாந்நித்யத்தை நான் அடைந்ததும், ரெங்கநாயகி, வரதநாச்சியாரே, அலர்மேல் மங்கையே, ஞானதயாபூர்ணகாமாக்ஷி, உனது திருவிழிகள் கீழ்நோக்கி, சரணுகதனை எதிர்பார்த்து நோக்கியும், என் விஷயத்தில் உமது கருணை சோபிக்கவில்லை. ராஜராஜேஸ்வரி, சீதே, சிம்சுபா மரத்தின் மீது அமர்ந்த ஆஞ்சநேயரைப் பார்க்க, உனது நிமிர்ந்த விழி நோக்குக்கள் உனது மனத்தை கலக்கின. ஆனுல் ராவணனை நோக்காமல் உன் திருவிழிகள் உனது பாதங்களையே பார்த்தன. அந்த சூக்ஷ்மம் தெரிந்து தானே காகம் தலைப்பெற்றது. பராசராதி முனிஜனங்கள் உன்னைப்பற்றி பாடும்போது, உன்மீல்ய நேத்ராம் என்றும், விகஸித்த தாமரைப் போலே, சர்வ திக்குக்களிலும் மலர்கின்றன என்று அழகுறச் சொல்லுகிருர்களே. ஹே ஸுநயனு, ஸுமத்யமா, ஸுபூதி, சாருநேத்ரா, அயோத்யா ராமனின் கருணுதயிதே, உனது அழகும், போக்கும், நடத்தைகளும் திரிகுணுதீதம் என்று சொல்லப்போனுலும், உன்னைப் பூர்ண மாகத் தெரிந்துகொள்ள முடியுமோ? ராமனை திரிகுணுதீதன் என்று தியாகராஜர் சொல்லுகிருர். சிடுக்கண்டேன், முணுக் கென்று அபராதசயமுலன், குற்றச்சுமைகளைப் பொறுக்கிறவன் ஸ்ரீராமன் என்றும் சொன்னுரே தியாகராஜர். பிரும்மசாரி வேஷத் தில் வந்து மாவலியை வஞ்சித்துவிட்டாரே. அது வைகுந்த ஸ்வரூபமல்லவோ? அதுபோல காமம்போன்ற மிக்கப் பேச்சுக் களைப் பேசி, பிரும்மாவும் தன் தலை ஒன்றை யிழந்தாரே. அதுவும் நாராயணரின் லீலைதானே. ஆனுல் ஒன்றையும் செய்துவிடாமல்,

அபராதங்களையே செய்திட்ட ராக்ஷஸிகளையும், காகாசுரனையும் காப்பாற்றிய சீதே, ராஜமாதங்கி, ஜனகபுத்ரி, கருணாஜலதே, மஹாலக்ஷ்மி அம்மா, என் மீது உனது தயாபூர்ண விழிகள் விழவில்லையே? நான் யாது செய்வேன்?]

"பன்னகங்களைச் சாப்பிடும் கருட பகவானே, வேதங்களாலும், நீதி சாஸ்திரங்களாலும் ஸஜ்ஜனங்களாலும் ஒரே ஒரு விஷயம் கோஷிக்கப்படுகின்றன. அதிநீசமான பிறப்பை அடைந்திருந்தபோதிலும், அந்த ஜீவன் அத்யந்த ப்ரீதிக்குப் பாத்திரமாவான். அவனுக்கும் பரம அன்பு காட்டவேண்டும். அதுவே அவனை ஸம்ரக்ஷிக்கும் பரமஹிதம். அதுவே சீதாரமணனுக்குப் பிடித்த திருவுள்ளம்." (570)

"பட்டுப்பூச்சி நிஜமாகவே ஒரு புழுவாக விருக்கின்றது. ஆனால் அதன் சரீரத்திலிருந்து வெளிவரும் பட்டினால் பீதாம்பரம் நெய்யப்படுகின்றது. அந்தக் காரணத்தினால் அது பரம அபவித்திரமாக விருந்த போதிலும், மனிதர்களால் வளர்க்கப்பட்டு, போஷிக்கப்படுகிறது." (571)

"ஒரு ஜீவன் நற்கதியை அடையவேண்டும் என்று ஸ்வார்த்தமான எண்ணம் கொள்ளுவானாகில், அதற்கு ஒரே ஒரு மார்க்கம்தான் இருக்கிறது. மனம், கர்மம், வசனம் ஆகியவைகளால் ஸ்ரீசீதாராம பாதங்களை சரணமடைந்து ஸதா பஜிக்க வேண்டும். (ஆஞ்சநேய நாரதாதிகளைப் போல ஸதா பஜித்து வாழவேண்டும். பரத, லக்ஷ்மண, சத்ருக்ன, வஸிஷ்ட, விஸ்வாமித்திர பிரமுகாதிகளைப்போல ராம கைங்கர்யத்தை அண்டிப் பிழைக்கவேண்டும். பகவான் சங்கரர் உமையைப்போல ராம நாம ஜபத்தைச் செய்து உய்யவேண்டும்.) இதைத் தவிர வித்வான்கள் ஆத்ம உஜ்ஜீவனத்திற்கு வேறு வழியைக் காணவில்லை. அதனால் பிரபு, எனக்கு இந்த வாயஸ சரீரம் பரம பவித்திரமாக உள்ளது. இந்த உத்தம சரீரத்தை அடைந்துதானே நான் ஓங்காரப் பொருளாகிற ஸ்ரீராமச்சந்திரனை பஜனை செய்தேன். அதனால் இந்த சரீரத்தின்மீது எனக்கு அத்யந்த ப்ரேமை யிருக்கிறது." (572)

"பரந்தாமனாகிற ஸ்ரீசீதாராமனிடம் அன்பு, பக்தி, ப்ரேமை செலுத்ாதவன், ஸ்ரீராமசீதாவினிடம் அவன் விமுகனாக வாழ்ந்து வந்தால், அவனுடைய ஜன்மம் வீணே. அவன் அனுத்தமமான ஸம்பத்துக்களை உடைய பிரும்மாவின் சரீரத்தை அடைந்திருக்கட்டும். ஹிரண்யவர்ணம் பெற்று அதிசோபிதையாக அவன்

இருக்கட்டும். கவிகளும், வித்வான்களும் அவனை ஒருக்காலும் புகழ்கிறதில்லை. பிரபு, இந்த காக்கையின் உடம்பினால் "ராம பக்தி," எனப்படும் ஸாம்ராஜ்யத்தை நான் அடையப்பெற்றேன். (அன்று தியாகராஜாதிகள் கோஷித்துச் சொன்னார்களே, "ராமா, சீதாராமா, மனிதனுக்கு எத்தனை நாளானாலும் ஆசை அகலாது. ஏனோ, என்னிடம் உனது மாயையை செலுத்தாதே. நீலவர்ணா, நான் பாபங்களுக்கு இருப்பிடம். என் ஏக்கத்தைத் தீர்த்து, பாப பயத்தைப் போக்கி, உனக்கென அணிபட்டு பீதாம் பரம்போல என்னைத் தாங்கிக்கொள். கிருபாளு, கனக சைல, பீதாம்பரனே, உனது ஸ்வபாவம், வழக்கம், விரதம், தீக்ஷையைப் போல என்னைக் காப்பாற்று. இவ்வளவு ஜனக்கூட்டத்தில் என்னை கைலாகு கொடுத்து, கராவலம்பனம் செய்து என்னைக் கரை யேற்று. இதுதான் சமயம்,'' என்று எப்போதும் பிரபுவினிடம் வேண்ட வேண்டும், என் பிரபு கராரியிடம் வேண்ட வேண்டும்;) நான் திரும்பவும் திரும்பவும் சொல்லுகிறேன். "எனக்கு வேறு கதி ஒன்றுமில்லை. பூமியில் யாரையும் நான் வேண்டேன். சீதா ரமணா, சத்ருபீமா, பீமநுதா, சதநாமராமா, காமவைரியாகிற சிவபெருமான் துதிக்கும் தாரகமே, என் உள்ளத்திற்கு ஓடி வருவாய்") அப்பேற்பட்ட ராமபக்தியை அளித்த இந்த சரீரம், ஸ்வாமி, எனக்குப் பரமயோக்யமாக விருக்கிறது" (573)

"ஆகையினால் எனது மரணம் என் இச்சையில் இருக்கிறது. (மார்க்கண்டேய ரிஷியைப்போல நான் வாழ்ந்து வருகிறேன்.) பிரபோ, ஆனாலும் நான் மரணமடைய விரும்ப வில்லை. (நம்மாழ்வாரைப் போல) நின்ற நிலையாக விருக்க நான் விரும்புகிறேன். ஏன் தெரியுமா ஸ்வாமி? வேதங்களால் பல முறை கானம் செய்யப்பட்டிருக்கின்ற விஷயம் ஒன்றே ஒரு விஷயம் தான். சரீரத்தை விட்டு விட்டு, ஆத்மாவினால் ஒன்றையும் பஜிக்க முடிகிறதில்லை. ஆகையினால் சரீர ஸம்ரக்ஷணம் மகத்தான ஐஸ்வர்யம். ஐந்து பூதங்கள் அடங்கிய சரீரமே உத்தமஸாதனம். ஸ்வாமி, நானும் தங்களைப் போல மஹா மோஹத்தினால் தாக்கப்பட்டு, அந்தகாரத்தில் மூழ்கி, விடுதலை அடையாமல் அவதிப்பட்டேன். அப்பொழுது நான் ராம விமுகனாகவிருந்தேன். எனக்கு சுகம் எவ்விதம் கிடைக்கப் பெறும்? தாங்களே சொல்லுங்கள். எல்லையில்லாத துன்பங்களை நானும் அடைந்தேன்." (574)

[தியானம்

மாருத குரு புரிவாஸா, அகில முக்திவரதாயகா, ஸ்ரீமந் நாராயணு, கிருஷ்ணு, ராமா, ரங்கபதே, உன் பாதங்களை நோக்கி சரணமடைந்திருக்கும் என்னுடைய ஸமஸ்த ரோகங்களையும் நீதான் போக்கவேண்டும். ரமாபதி, நீலமாமணி, உன்னை அறிவது தானே மோக்ஷ ஹேது. ஆத்மாவும் புத்தியும் இயற்கையாகவே வேருனவையும் எப்பொழுதும் ஒன்ருேடொன்று சேர்ந்தனவை யாயுமிருக்கின்றன. குணங்கள் ஆத்மாவை அறிகிறதில்லை. ஆனல் ஆத்மா அவைகளை அறிகிருன். புத்தியின் கதிகள் குணங்களாக பிரவர்த்திக்கின்றன. இவைகளில் ஒன்று குணங்களைப் படைக்கின்றது; மற்ருென்று படைப்பதில்லை. ஆத்மா வானது குணங்களைப் பார்ப்பதாகவும், நினைக்கிறபடி அவைகளில் பற்றுதலையும் அடைகிறது. புத்தியானது குணங்களை ஸ்ருஷ்டிக் கின்றது. ஜீவன் அபிமானியாகிருன். அந்த புத்திக்கும் ஜீவனுக்கும் இவ்விதமான சேர்க்கை நிலையுள்ளது. இந்திரீயங்கள் பெரிய தீபம் போலவும், புத்தி அந்த தீபத்தின் பிரகாசம் போலவு மிருக்கிறது. சிலந்தியானது இயற்கையாகவே நூலைப்படைப்பது போல ஸ்வபாவ ஸித்தமாயுள்ளவை. ஆகையால் குணங்கள் நாசத்தை அடையக்கூடியவை. வித்வானுனவன் மிக்க அப்யாஸத் தினல் புத்திக்கும் ஆத்மாவுக்குமுள்ள வித்யாஸத்தை அறிந்து, மத்ஸயம் தண்ணீரில் இருப்பது போல, ஒன்ருகவும் வேருகவு மிருந்து கொண்டு, குணங்களில் பிரவர்த்திக்கிறதில்லை. உறுதி யான புத்தியினுல் ஹ்ருதய முடிச்சை அவிழ்த்துவிட்டு பரமாத்மா விடம் சோகமில்லாதவனுகவும், ஸம்சய மற்றவனுகவுமிருக் கிருன். வித்வான்கள் ஞான யோக மயமான மேட்டுப் பிரதேசத்தை அடைந்து, ஆத்ம ஞானமுள்ளவர்களாக, ஞான த்தீதையே ஸம்சாரக் கடலில் தோணியாக வைத்து, அக்கரையை அடைகிருர்கள். வித்வான்களுக்கு பயமோ மோஹமோ ஏற்படு கிறதில்லை. மோக்ஷம் என்பது ஸமமான தன்மை அன்ருே? முன் ஜன்மங்களில் செய்த கர்மாக்களை, ஞானயோகமாகிற வழியில், பரமாத்மாவின் கிருபையினுல், வித்வான் அழிக்கிருன். அப்பேற்பட்ட வித்வான் பிறர் செய்த அநிஷ்டத்தை தூஷிப்பது, தான் அதைச் செய்வது ஆகிய இரண்டையும் செய்யமாட்டான். இதை அறிவது தானே, புருஷன் ஆத்மா இவர்களின் விஷயத்தை அறிவது தானே, அத்யாத்ம சாஸ்திரம் என்று சொல்லப்படுகின்றது. இவ்விதம் ஞானமூர்த்திகளாக

விளங்கும் காகபுசுண்டி கருட மஹாத்மாக்களுக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன் ]

"அநேக ஜன்மங்களை அடைந்து, தோஷமுள்ள அநேக கர்மாக்களைச் செய்து, பாவத்துடன் கூடிய புத்தியை அடைந்தேன். பிரபு, நாளடைவில் பகவத் கிருபையினால், ஞானம் என்கிற மேட்டுப் பிரதேசத்தை அடைந்து, அத்யாத்ம சாஸ்திரத்தை உணர்ந்து, யோகங்கள், ஜபதபாதிகள், தானம் முதலியவைகளைச் செய்ய ஆரம்பித்தேன். ஹேககேசரே, நான் சொல்வது முழுவதும் உண்மை. ஜகத்தில் எந்த எந்த யோனிகள் இருக்கின்றனவோ, அவைகள் எல்லாவற்றிலும் நான் ஜன்மம் பெற்றேன். என்னால் ஒரு யோனியும் வர்ஜிக்கப் கப்படவில்லை. இவ்விதம் பிரமை அடைந்தவனாக ஜன்மச் சுழல்களில் அகப்பட்டு, நான் தவித்தேன். பல தடவைகள் தவித்தேன்." (575)

"கோஸாயி, என்னால் ஸகல விதமான கர்மங்களும் வேதங்களில் சொல்லப்பட்ட பிரகாரம் செய்யப்பட்டன. ஆனால் என்னால் இந்த வாயஸ ஜன்மம் எடுத்தவரை சுகம் அடையப் படவில்லை. ஹேநாதரே, எனக்கு பல ஜன்மங்கள் ஞாபகமிருக்கின்றன. இதில் தாங்கள் ஆச்சரியப்பட வேண்டாம். பகவான் சம்புவின் பிரஸாதத்தினால், பாக்கிய வசமாக நான் எனது மதியை மஹா மோஹத்திலிருந்து காப்பாற்றி வருகிறேன். எனக்கு மதிமயக்கம் ஒன்றும் யேற்படுகிறதில்லை." (576)

"பக்ஷிகளின் ஈஸ்வரரே, நான் எனது முதல் ஜன்மத்தில் நடந்த சம்பவங்களைச் சொல்லுகிறேன். அதைக்கேட்ட மாத்திரத்தில் பிரபு ராமசந்திரனுடைய பாதங்களில் அனுராகம் ஏற்படுகிறது. உடனேயே ஸகலதுக்கங்களும் நாசமடைகின்றன." (577)

"பிரபோ, முன்பு ஒரு கல்பத்தில் கலியுகத்தில் பாபக் கூட்டங்கள் எங்கு பார்த்தாலும் மலிந்துகிடந்தன. அப்பொழுது புருஷர்களும் ஸ்திரிகளும் அதர்மங்களைச் செய்பவர்களாகவும், வேதங்களுக்கு விருத்தமாகவும் நடந்து வந்தார்கள்." (578)

"அந்த சமயம், அந்த கலியுகத்தில், நான் கோஸலபுரியில் சூத்ரனாகப் பிறந்தேன். அந்த ஜன்மத்தில் மனம் கர்மம், வசனம் ஆகியவைகளில் பகவான் சம்புவினுடைய சேவகனாக விருந்தேன். மற்றத் தெய்வங்களை நிந்தை செய்து கொண்டு, பரம அபிமானியாக வாழ்ந்து வந்தேன்." (579)

"என்னிடம் நிறைய தனங்கள் இருந்தன. அதனால் நான் மிக்க உன்மத்தம் பிடித்தவனாக விருந்தேன். என்னுடைய புத்திதீக்ஷ்ண்யத்தினால் பிறர்களுடைய புகழை அழித்தேன். விசாலமான டம்பம் கொண்டவனாகி விருந்தேன். இவ்வளவு அவகுணங்கள் கொண்டிருந்த போதிலும், நான் ரகுபதியின் ராஜதானியாகிற அயோத்தியில், வாஸம் செய்து வந்தேன். அப்பொழுது கூட அந்த அயோத்யா ராமனின் பெரும் புகழையும் மகிமைகளையும் அறிய முடியாதபடி விருந்தேன்." (580)

"இப்பொழுது எனக்கு அயோத்தி வாஸத்தின் பெருமைகளைப் பற்றி நன்றாகத் தெரியும். வேத ஆகம புராணங்களில் சொல்லியபடி நான் முழுவதையும் அறிகிறேன். ராம கிருபாளுவின் பிரஸாதத்தினால் நான் அவருடைய பக்தனாகி விட்டேன். அதனால் அல்லவோ ஜன்மம் எடுக்கவேண்டுமானால் அயோத்தியில் ஜன்மம் எடுக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். ராம பராயண வாழ்க்கை அந்த அயோத்தியில் எடுக்கப்படும் ஜன்மம் ஒன்றினாலே சித்தித்து விடுகிறது, பிரபு." (581)

"எந்த நிமிஷத்தில் அயோத்தியின் பிரபாவங்கள் ஜீவனுக்குத் தெரிய வருகின்றனவோ, அதே நேரத்தில் ராம ரகுபதி தனுஷ்பாணங்களுடன் கையில் ஏந்திக் கொண்டு அவனுடைய ஹ்ருதயபுண்டரத்தில் வசித்து வருகிறார். பிரபுவினுடைய ரக்ஷணத்தை அந்த நிமிஷத்திலிருந்தே அவன் அடைந்து விடுகிறான். பாம்புகளுக்கு எதிரியே, அந்த கலிகாலம் மிக்கக் கொடியதாக விருந்தது. ஸகல நரநாரிகளும் பாவங்களைச் செய்து கொண்டு, பகவத் குணானுபவங்களில் ஈடுபாடு இல்லாதவர்களாக வாழ்ந்து வந்தார்கள்." (582)

"கலியுகத்தின் ஸகல பாபங்களினால் ஸகல தர்மங்களும் அழிந்து முழுகிவிட்டன. நல்ல நெறிநூல்களும் அழித்து விட்டன. எங்கு பார்த்தாலும் துஷ்டர்கள் டம்பமாக தங்கள் தங்கள் மதங்களையும் கொள்கைகளையும் பிரகடனப்படுத்திக் கொண்டு, தங்களுக்குத் தோன்றியவாறு தர்மங்களை ஆசரணை செய்து கொண்டு, குதர்க்க வழிகளில் சென்று கொண்டிருந்தார்கள்." (583)

"அதனால் ஸகல ஜனங்களும் மோஹ வசமடைந்தார்கள். சுபகர்மங்களை விட்டு விட்டு, லோபத்தினால் தாக்குண்டப் பட்டவர்களானார்கள். ஹரிபகவானின் புண்யமான வாஹனரே,

தயவு செய்து கேளும். அந்த கலியுகத்தில் நடைபெற்ற தர்மங்களில் சிலவற்றை நான் சொல்லுகிறேன்.'' (584)

'' நான்கு ஆஸ்ரம தர்மங்கள் ஆசரணை செய்யப்படவில்லை. வர்ணாஸ்ரம தர்மங்களும் அழிந்துபோய் விட்டன. சகலஸ்திரி புருஷர்களும் வேதங்களுக்கு விரோதமாக நடந்து வந்தார்கள். பிராம்மணர்கள் வேதங்களை விற்கத் தலைப்பட்டார்கள். அரசன் பிரஜைகளை தொந்தரவு செய்தான். ஆகம நிகமங்களின் அனுசாஸனங்களை யாவரும் லக்ஷியம் செய்யவில்லை.'' (585)

''எவனுக்கு எது பிடித்தமாகவிருக்கின்றதோ, அதுதான் அவனுக்கு மார்க்கம். எவனொருவன் தற்பெருமையாக தன்னை விளம்பரபடுத்திக் கொள்கிறானோ, அவனே பண்டிதன் என்று போற்றப்பட்டான். அவனே பிறர்களைப் பழித்துக்கொண்டு பரபீடையாக விருந்தான். டம்பத்தினாலும், பொய்ப் பேச்சுக்களினாலும் காரியங்களாலும் பிறர்களை ஏமாற்றி வாழ்ந்து வருபவர்களை ஜனங்கள் ஸாதுஜனங்கள் என்று மதித்தார்கள்'' (586)

'' எவன் பிறர்களுடைய தனத்தை அபஹரித்தானோ, அவனே சாதுர்யமுள்ள புத்திமானாக விளங்கினான். எவன் டம்பத்துடன் ஆசரணைகள் செய்து வந்தானோ அவனையே மிக்க ஆசாரமுள்ள சீல புருஷன் என்று ஜனங்கள் மதித்தார்கள். எவன் ஒருவன் பொய் பிரசாரங்களைச் செய்து கொண்டு, பிறர்களை ஏமாற்றி வாழ்ந்து வந்தானோ, அவனையே ஸத்புருஷன், அவனுடைய வழக்கங்களே ஸத்பதா சாரம் என்று நம்பினார்கள். அவனே கலியுகத்தில் பெருமையுள்ள குணவானாகவிருந்தான்'' (587)

'' எந்த புருஷர்கள் ஆசாரமின்றி, வேதமார்க்கங்களிலிருந்து நழுவி, ஸ்வயம் பிரயோசனமாக வாழ்ந்துவந்தார்களோ, அவர்களையே கலியுகத்தில் பரம தீர்த்த பாவனர்கள், பெரும் ஞான வைராக்ய உள்ளம் படைத்தவர்கள் என்று யாவரும் கருதினார்கள். எவர்களிடம் நீளமான நகங்களும் ஜடா முகுடங்களும் இருந்தனவோ, அவர்களே அந்த கலியுகத்திற்கு மிக்க பிரசித்தமான தபஸ்விகளாகச் சொல்லப்பட்டார்கள்.'' (588)

'' அவர்களுடைய வேஷங்களும் அமங்களங்களாகவும் அசுபமாகவுமிருந்தன. அவர்களுடைய ஆபரணங்களும், சாப்பிடும் ஆகார நியமங்களும் வரிசைகளும் மிக்க வெறுப்பாகவிருந்தன. எதை அணியக்கூடாதோ, அதை அணிந்தார்கள். எதை சாப்பிடக்கூடாதோ, அதைச் சாப்பிட்டார்கள். அவ்விதமிருந்தும்

அவர்களையே பரமயோகிகள் என்றும், அவர்களே சித்தபுருஷர் களென்றும், அவர்களே கலியுகத்தில் பூஜிக்கத் தகுந்தவர்கள் என்றும் சொல்லப்பட்டார்கள்.'' (589)

''எவர்கள் பிறர்களுக்கு அபகாரம் செய்துகொண்டு, பர பிடை பரநிந்தை செய்து வந்தார்களோ, அந்த மனிதர்களையே கௌரவம் ஸம்மானம் பெறுவதற்கு யோக்கியர்கள் என்று கருதி ஞர்கள். அந்த கலிகாலத்தில் மனம், வசனம், கர்மம் ஆகிய மூன்றிலும் பொய் பேசிக்கொண்டு, ''இதை சாதித்துவிடுவேன்,'' என்று வாய் வீச்சுடன் பிறர்களை வஞ்சிப்பதற்காக ஏமாற்றி வாழ்ந்து வந்தார்களோ, அவர்களையே கலியுகத்தின் பிரும்மா என்று போற்றி வந்தார்கள்.'' (590)

''கோஸாயி, ஸகல புருஷர்களும் ஸ்திரிகளிடம் விசேஷமாக அடங்கியவர்களாகவும், குரங்காட்டியின் எண்ணப்படி நர்த் தனம் செய்யும் குரங்கைப் போல நடந்து வந்தார்கள். சூத்ரர்கள் வேதப்பிராம்மணர்களுக்கு உபதேசம் செய்யத் தலைப் பட்டார்கள். அவர்கள் பூணூலை அணிந்துகொண்டு, செய்யத் தகாத காரியங்களைச் செய்து கொண்டு தானம் வாங்குதலையும் விப்ரர்களைப்போல செய்து வந்தார்கள். அப்பா, அந்த கலி காலம் மிகமிகமோசமாகவிருந்தது. அதை இப்போது நினைப்ப தற்கே மிக பயமாகவிருக்கிறது.'' (591)

[தியானம்

பரமேஸ்வரி, சம்போ, நாராயணு, சீதாராமா, கிருஷ்ணு சர ணம். உமது நாமம் ''கிருஷ்'' என்கிற தாதுவிலிருந்தும், ''ண'' என்கிற எழுத்திலிருந்தும் ஸத், ஆனந்தம் என்கிற ஸ்வரூபமாக உடையதாக, ''கிருஷ்ணு'' நாமதேயம் என்று ஏற்படுகிறது; அது போல ராமா, உன் நாமமும், உன்னைப்பற்றி சிந்திப்பவர்களின் பாபங்களை ஹரம் செய்வதால் யேற்படக்கூடிய மகிமை பொருந் திய ஹரி நாமமும், எப்பொழுதும் என் மனதை விட்டு அகலாம லிருக்கட்டும். ஸ்வாமி, தங்களுடைய கிருபையால் நான் சோகம், பயம், மோஹம் அடையாமலிருப்பேனுக. சுகமும், துக்கமும் நசிக்கக்கூடியது; நீடித்திருப்பதில்லை; பிறர்களுடைய சுகமும் எனக்கு ஆசையை உண்டுபண்ணுது; அவர்களின் தன லாபமும் அழியக்கூடியது; பரலோகத்தில் உறவினர், செல்வம், நல்ல குலம், கல்வி, மந்திரங்கள், பலம் ஆகிய யாவையும் மனிதனை துக்கத்திலிருந்து காக்கத் திறமை உள்ளவை அல்ல. அதனுல் மனிதன் நல்ல சீலம் ஒன்றினுல்தான் சாந்தியை அடை

கிறன். கர்வத்தை அடையாமல், சோகம், பயம், கர்வம் ஆகியவைகளை அனுபவியாமல், ஸாக்ஷி போல பார்த்துக் கொண்டிருப்பவன், தனத்தையும், காமத்தையும் தள்ளிவிட்டு சஞ்சரிக்கும் மனிதன் கலிகாலத்தில் வருந்துகிறதில்லை. அம்ருத பானம் செய்தவனைப் போல, இகத்திலோ, பரத்திலோ, மரணத்திலோ, அதர்மத்திலோ, லோபத்திலோ பயமில்லாமல், அறிவு என்கிற கண்களால் பார்த்துக்கொண்டு, பகவத் சிந்தனை யினால் நாராயணரைத் தியானம் பண்ணுவதால் சோகமடைகிற தில்லை. இந்த உண்மைகளையே சகல ஆஸ்ரம தர்மங்களும் உபதேசிக்கின்றன. மித்ரர்களை அனுக்ரஹிப்பதையும், சத்ருக் களை அடக்கினதாலும், தர்மார்த்த காமங்களில் புத்தியைச் செலுத்துவதாலும், சிரேயஸ் என்று வித்வான்கள் சொல்லு கிறார்கள். ஆனால் எது மோக்ஷ ஸாதனமோ அதுதான் சந்தேக மில்லாத ஸ்வரூபத்தை உடைத்ததாக விருக்கிறது. ஸர்வ பிராணிகளுடைய நன்மையில் மனத்தைச் செலுத்துபவன் தவம் ஒன்றினாலேயே இவ்வுலகிலும், பரலோகத்திலும் மிகுதியான ஸ்ரேயஸை அடைகிறான். ஆஞ்சநேயா, நாரதரே உங்களுடைய அனுக்ரஹத்தினால் நானும் சோகமில்லாதவனாகவும், பயமற்ற வனாகவும், மரணமில்லாதவனாகவும் இருக்கவேண்டும்.]

"ஸகல புருஷர்களும் காமத்தினாலும், லோபத்தினாலும் மதிமயக்கம் கொண்டு, க்ரோத மூர்ச்சிதர்களானார்கள். தேவதை களையும், விப்ர வித்வான்களையும், ஸாது ஜனங்களையும் யாவரும் பூஜிப்பதில்லை. ஸ்வய அபிமானமுள்ள ஸ்திரிகள் துஷ்ட ஹ்ருதயம் கொண்டு, அடக்கமில்லாதவர்களாக, குணக்கடல் போன்ற தங்களுடைய பதிகளைத் தியாஜ்யம் செய்துவிட்டு, பரபுருஷர்களை நாடிவந்தார்கள்." (592)

"சௌபாக்ய சின்னமுள்ள ஸ்திரிகள் ஆபரணங்களை விட்டுவிட்டு, தபஸ்வினிகள் மாதிரி, ஆபரணங்களின்றி சஞ்சரித் தார்கள். ஆனால் விதவைகளோ நவ, நவநாகரீக ஆபரணங் களால் தங்களை சிங்காரம் செய்து கொண்டார்கள். குரு சிஷ்ய பாவங்களும் மாறிப்போய், ஒருவர் குருடனாகவும், மற்றவர் செவிடனாகவும் தோன்றினார்கள். சிஷ்யன் குருவின் உபதே சத்தை வெகுமானிக்கிறதில்லை; குருவும் சிஷ்யனின் மனோ வியாதிகளைப் போக்கவுமில்லை." (593)

"குருவினுடைய எண்ணம் ஒன்றே ஒன்றுதான். சிஷ்ய னுடைய பணத்தைப் பறிக்க வேண்டியது; ஆனால் அவனுடைய துக்கங்களை சமனம் செய்வதற்கில்லை. அப்பேற்பட்ட குரு கோர

மான நரகத்தை அடைகிறன். மாதா பிதாக்கள் தங்கள் குழந்தைகளை அழைத்து சிக்ஷை போதித்தார்கள். அந்த சிக்ஷையின் சாராம்சமும் நோக்கமும் ஒன்றுதான். வயிற்றை வளர்ப்பதற்கு என்ன தர்மங்கள் ஆஸ்ரயிக்கப்பட வேண்டும் என்கிற ஒரு விஷயத்தைப் பற்றியே அவர்களுக்குப் போதிக்கப் பட்டது.'' (594)

''ஸ்திரிகள் புருஷர்களின் பேச்சுக்களை கவனித்துப் பார்த்தால், அவைகள் பிரும்ம ஞானம் ஒன்றையே பற்றி யிருக்கும்; ஆனல் அவர்களுடைய நடத்தையோ க்ரோதம் நிறைந்ததாகவும், அவர்கள் சிறிய லாபத்திற்காக பிரும்மஹத்தியையோ, குருவைக் கொலை பண்ணுவதையோ தயங்கமாட்டார்கள்.'' (595)

''சூத்ரர்கள் பிராம்மணர்களிடம் விவாதத்திற்கு வருவார்கள்; அதிகமாகப் போனல், ''நாங்கள் உங்களைவிடத் தாழ்ந்தவர்களா?'' என்று விவாதிப்பார்கள். ''விப்ரவரன் என்று சொல்லிக்கொள்கிறீர்களே, நீங்கள் பிரும்ம ஞானத்தை அறிவீர்களா? உங்களுக்கு என்ன வித்யை தெரியும்?'' என்று சொல்லிக் கொண்டு, முகத்தைக் கோணலாக வைத்துக்கொள்வார்கள்.'' (596)

''பரஸ்திரிகளை அபஹரிப்பதில் கெட்டிக்காரர்களாக அவர்கள் இருப்பார்கள்; மோஹம், துரோஹம், மமதை ஆகியவைகளில் எவர்கள் வெகு சாமார்த்தியமுள்ளவர்களாகக் காணப் படுகிறர்களோ, அவர்களையே மஹா ஞானம்படைத்த அபேத வாதிகளாகவும் ஜனங்கள் மதித்துவந்தார்கள். ஸர்வத்தையும் ஒன்ருகக் கருதும் ஸ்ரேஷ்டமான வித்வான்கள் என்று அவர்கள் சொல்லப்பட்டார்கள். இந்த மாதிரி நான் கலியுகத்தில் அநியாயங்களைப் பார்த்திருக்கிறேன்.'' (597)

''அப்பேற்பட்ட மோசக்காரர்கள், வஞ்சகர்கள் தங்களைத் தாங்களே பாழ்படுத்திக்கொண்டதைத் தவிர, அவர்களை அண்டின ஸாது ஜனங்களையும் நஷ்டப்படுத்தி, ஸத்பதத்திலிருந்து நழுவச் செய்தார்கள். எந்த மனிதர்கள் வேதங்களை நிந்தித்தும், வேத மார்க்கங்களையும் ஆசாரங்களையும் நிந்தித்தும், வாழ்க்கை நடத்துகிறர்களோ, அந்த ஜனங்கள் கல்பங்கள் தோறும் ஒவ்வொரு நரகத்தில் விழுந்து கஷ்டப்படுகிறர்கள்.'' (598)

''வர்ணங்களில் மிக்கத் தாழ்மையுள்ளவர்கள், எண்ணெய் விற்பவர்கள், குசவர்கள், சண்டாளர்கள் (நாயின் மாம்சத்தைப் புஜிப்பவர்கள்), பீலர்கள், கோலர்கள், மரம் வெட்டி, கள் இறக்கு

பவர்கள், ஆகிய அனைவரும் தங்கள் மனைவிகள் இறந்த பின்பு கிருஹம், ஸம்பத் ஆகியவைகளைத் தியாஜ்யம் செய்து விட்டு, தலைகளை மொட்டை அடித்துக் கொண்டு, ஸந்யாசிகளைப்போல வேஷம் தரித்துக் கொள்வார்கள்.'' (599)

''அவர்கள் பிராம்மணர்களால் பூஜிக்கப்படுவதை விரும்புகிறார்கள். இந்த விதமாக அவர்களும், அந்த பிராம்மணர்களும் தங்கள் ஆசாரங்களிலிருந்து நழுவி, பாழடைந்து போகிறார்கள், விப்ரர்களைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. அவர்கள் வேதங்களையும், நித்ய கர்மாக்களையும் செய்வதில்லை; லோபம் படைத்தவர்களாகவும், காமிகளாகவும், முர்க்கர்களாகவும் நீச ஜாதியில் உதித்த பெண்களை மணம் புரிந்துகொண்டவர்களாகவுமிருப்பார்கள்.'' (600)

''சூத்திரர்கள் பலவிதமான ஜபதபங்களைச் செய்துகொண்டும், கடினமான விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டும் இருப்பார்கள். வேத வியாஸரைப்போல தங்களை நினைத்துக் கொண்டு, புராணங்களையும் இதிஹாஸங்களையும் அவர்கள் பிரவசனம் சொல்லி வருவார்கள். ஸகலரும் தங்கள் இஷ்டங்களைப் போல அனுஷ்டானங்களைச் செய்து கொண்டு, அதையே வேதங்களில் சொல்லியிருக்கின்றது என்று சாதித்து நடிப்பார்கள். மொத்தத்தில் அவர்கள் செய்யும் அநீதிகள் அபாரமாகவும், வர்ணிக்க முடியாதபடி அகிலமாகவும் இருக்கின்றன.'' (601)

''கலியுகத்தில் ஸகலவர்ணங்களும் ஜாதிஸங்கரணம் செய்து கொண்டு, லோகமரியாதை, சாஸ்திர மரியாதை ஆகிய கட்டுப்பாடு வியவஸ்தையிலிருந்து நழுவி விடுகிறார்கள். அவர்கள் பாபாத்மாக்கள். நிரந்தரம் பாபங்களைச் செய்து கொண்டு, அதன் பலனாக துக்கங்களையும், பயங்களையும், ரோகங்களையும், சோகங்களையும் பிரிய வஸ்துக்களிலிருந்து வியோகத்தையும் (பிரிவதை) அடைகிறார்கள்.'' (602)

[தியானம்

ஹே ராமாசீதா, மஹாவிஷ்ணோ, நாராயணா, மஹாலக்ஷ்மி, உங்களை வினதாசுதனாகிற கருடனை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். ஹே கருட மஹாராஜரே, வைஷ்ணவ பாகவதர்களில் உம்மை எளிதாக அடையாளம் செய்யக்கூடும். கனநாக பாசங்களிலிருந்து, மஹாபாகவதோத்தமனான பிரஹ்லாதனை விடுவித்த மஹாபிரபு நீர் அன்றோ? உம்முடைய தொடைகளும், தோள்

களும், கைகளும், உள்ளங்கால்களும் விஷ்ணுவினுல் அடையாளம் செய்யப்பட்டிருக்கின்றன. மஹாலக்ஷ்மியாகிற வைஷ்ணவியின் வாஹனமே, உமக்குள்ள விஷ்ணுபக்தி ஆச்சர்யகரமுள்ளது. ஹரி வாகனரே, உமக்கு "இதுதான் சமயம்," என்று தோன்றி பகவான் நாராயணரை எங்களிடம் சேர்க்கமாட்டாயா? வைஷ்ணவதாஸப் பிரியரே, ஸுமுகனை அலங்காரமாக பாதங்களில் அணிந்திருப்ப வரே, உம்முடைய தயையின்றி எனக்கு சீதாராம தர்சனம், லக்ஷ்மி நாதனுகிற மஹாவிஷ்ணுவின் சுபதர்சனம் எவ்விதம் கிடைக்கும்? அதிம்ருதுதர ஸத்யபாஷணம் செய்பவன், அகிலாண்டநாதன் சீதாபிரபு, என்று தியாகராஜாதிகளால் தியானம் செய்யப்படும் ராமசீதாவை நான் எப்போது பார்ப்பேன்? மரகதங்களையும் மேருபர்வதமும் போல சரீர திருமேனியை உடைய என் பிரபுவை நான் எப்போது பார்ப்பேன்? ஹே ராமா, சீதா, உங்களுடைய பாதாப்ஜங்களைக் காணும் ஆசைகளினுல் தகிக்கப்பட்ட என் மனது சரிவர நினைக்கமாட்டேன்கிறது. ஸ்ரீ தியாகராஜாதிகளால் சேவிக்கப்பட்ட பிரபு, கருடரே, ஸகர மஹாராஜனுக்கு உம்மால் உபதேசித்தபடி, மோக்ஷம் என்கிற பற்றுதல் அற்ற புத்தியால் அல்லவோ மனிதன் சுகம் அடையமுடியும். பற்றுதலுள்ள புத்தி யுள்ளவனும், நிலையில்லாத மனமுடையவனுமான புருஷன் சீர்திருத்தமுடியாதவன். ஸ்நேகமாகிற கயிற்ருல் கட்டுண்ட மூடன் மோக்ஷத்திற்கு அருகதையில்லை. பிராணியானது தானே உண்டாகிறது; தானே விருத்தி அடைகிறது; தானுகவே சுக துக்கங்களையும் மரணத்தையுமடைகின்றது. ஹே குருவாயூரப்பா கிருஷ்ணு, கோதண்டராமா, சீதா, உன்கிருபையினுல் பற்றுத லற்ற மனமும் புத்தியும் எனக்கு ஏற்படவேண்டும்.]

கருடனுக்கு மீண்டும் காகபுசுண்டி சொன்னுர். "கருட மஹாராஜரே, வேதங்களால் ஒப்புக்கொள்ளப்பட்டதும், விவேகத் தையும், வைராக்யம் எனப்படும் பற்றுதலற்ற வாழ்க்கையும் மோக்ஷசுகத்தையும் தரக்கூடியதும், ஸாதுக்களால் அனுஷ்டிக்கப் படுவதுமான ஒரே ஒரு மார்க்கம்தானிருக்கிறது. அந்த மார்க்கம் ஹரிபக்தி ஒன்றினுல்தான் ஏற்படும். ஹரிபகவானுடைய பக்தி யேற்பட்டபின்பு, மனுஷ்யன் மனுஷ்ய ஜன்மம் ஸாரமற்றது என்று அறிகிருன். இந்த உலகத்தில் எந்த தேகிக்குப் பசிதாகம் முதலான நிலைமைகளும், க்ரோதமும், லோபமும், மோஹமும் ஜயிக்கப்பட்டிருக்கின்றனவோ, நல்ல மனமுள்ள அவன் முக்தனே. மோக்ஷத்தில் செலுத்தப்பட்ட புத்தியானது ஞானத் தினுல் உண்டான குணங்களோடு வாழ்க்கையை நடத்தி முக்த

ளுகிருன். ஆனுல் கலியுகத்திலோ ஹரிபக்தியில்லாமல் மோஹ மாகிற பற்றுதல் என்கிற ஸ்நேகத்தால் கட்டப்பட்டு, "மோஹவச மடைந்து", மனிதர்கள் வேதங்களில் சொல்லப்படாத தர்மங் களைப் புதிதுபுதிதாக கற்பனை செய்கிருர்கள்." (603)

"வைராகிகள் என்று தங்களைப் பறைசெய்து கொள்ளு கிறவர்கள் மிகுந்த பிரயத்னத்தால் தனத்தைத் தேடுகிருர்கள். மாளிகைகளைக் கட்டி அவைகளைச் சிறந்த சாமான்களால் அலங் கரிக்கிருர்கள். அவர்களிடம் வைராக்யபக்தி, விஷயங்களில் பற்றுதலில்லாமை கிடையாது. தபஸ்விகள் இவ்விதம் தனவான் களாகவும், கிருஹஸ்தர்கள், தரித்திரர்களாகவும் இருக்கிருர்கள். அன்புள்ள பிள்ளாய், கலியுகத்தின் லீலைகளை இவ்விதம் வர்ணிக்க முடியாதபடி அதிகமாக இருக்கின்றன," (604)

குலபத்னிகள், பதிவிரதைகள் தங்களுடைய புருஷர்களால் வீட்டைவிட்டு வெளியில் துரத்தி அடிக்கப்படுகிருர்கள். அவர்கள் குலவழக்கங்களையும், தர்மங்களையும் விட்டுவிட்டு, தாசிகளை கிருஹத்தில் வைத்துக்கொண்டு, நல்ல ஆசாரங்களைத் துறந்துவிடுகிருர்கள். புத்ரர்கள் தங்கள் தாய் தகப்பனை லக்ஷியம் செய்கிறதில்லை. எந்த சமயத்திலிருந்து புருஷர்கள் பத்னிகளின் உறவினர்களை வீட்டில் அழைத்து வந்து அவர்களைப் பூஜிக் கிருர்களோ, அந்த சமயத்திலிருந்து அவர்கள் தங்கள் தாய் தகப்பனை லக்ஷியம் செய்கிறதில்லை. அவர்களைக் கடிந்து விழுகிருர்கள்." (605)

"மாமனுர், மாமியார், பத்னியின் உறவினர்கள் எப்போது இவனிடம் அன்பு வைக்கிருர்களோ, அப்போதிலிருந்து அவர்கள் இவனுடைய மனுஷ்யர்களை, சத்ருக்களாகப் பார்க் கிருர்கள். அரசர்களும் பாபங்கள் நிறைந்துள்ளவர்களாகவும், தர்மங்களைத் துறந்தவர்களாகவும், தண்ட நீதியைச் சரியாகச் செலுத்தாமல், அவர்கள் பிரஜைகளை அநியாயமாகச் சிக்ஷிக் கிருர்கள்." (606)

"தனவந்தர்கள் நீசஜாதியில் பிறந்தவர்களாக விருந்தும், பெருமையுள்ள குலீனர்களைப் போல நடத்தப்படுகிருர்கள். பிராம்மணன் பூணூல் ஒன்றினுலேயே அறியப்படுகிருன். தபஸ்வினுடைய தேகம் வஸ்திரம் இல்லாமை ஒன்றினுல் மாத்திரம் அறியப்படுகிறதாக விருக்கிறது. எவர்கள் வேதங் களையும், புராணங்களையும் வெகுமானிக்கிறதில்லையோ, அவர் களே கலியுகத்தில் ஹரி தாஸர்களாகவும், ஸாது ஜனங்களாக வும் மதிக்கப்படுகிருர்கள்." (607)

"கவிகளும், பாடகர்களும் ஏராளமாக விருக்கிருர்கள். ஆனுல் அவர்களை ஸம்மானம் செய்யும் தனவான்கள் கலியுகத்தில் கேட்கப்படுகிறதில்லை. பிறர்களின் குணதோஷங்களைச் சொல்லுபவர்கள் ஏராளமாக விருக்கிருர்கள். ஆனுல் குணவான்களோ யாரும் அகப்படுகிறதாகவில்லை. கலிகாலத்தில் துர்பிக்ஷம் அதிகமாக ஏற்படுகிறது. ஆகார வசதிகள் இல்லாதபடி அநேக ஜனங்கள் மரிக்கிருர்கள்.'' (608)

"பக்ஷிகளின் அரசரே, இன்னமும் கேளும். கலியுகத்தில் கபடமும், மூர்க்கத்தனமும், டம்பமும், த்வேஷமும், பொய் பிரசாரங்களும், பாஷண்டி மதமும் அதிகம். அதனுல் எங்கு பார்த்தாலும், கலிகாலத்தில் காமம், க்ரோதம், லோபம் பரவி, அகண்டமாக கலிகாலத்தில் இருக்கிறது.'' (609)

"மனிதர்கள் ஜபம், தபம், யக்ஞம், விரதம், தானம், இன்னும் அநேக தர்மங்களை தாமஸ பாவத்தினுல் செய்கிருர்கள். அக்ஞானம், அனுராகம், மோக்ஷம், அஜாக்ரதை, கர்வம், பயம், ஸம்ருத்தி யில்லாமை, தீனனுக விருத்தல், அதிக மோகம், ஸ்வப்னம், சோம்பல் என்னும் பலவிதமான தமஸின் குணங்கள் உண்டாகின்றன. இந்திரன் காலாகாலத்தில் மழை பெய்விக்கிறதில்லை. பூமியில் ஜலம் வறண்டு போய், அன்னங்களைக் கொடுக்கும் தானியங்கள் உண்டாகிறதில்லை.'' (610)

"ஸ்திரி ஜனங்கள் மங்களகரமாக ஆபரணங்களை அணிகிறதில்லை. அவர்களுக்கு பசி அதிகமாக ஏற்பட்டு, அதிகமாக தின்கிருர்கள். அவர்களிடம் தனம் இல்லாத போதிலும், அவர்களுக்கு ஆசைகளும், மமதையும் அதிகமாக விருக்கின்றன. அந்த மூர்க்க ஸ்திரிகள் சௌபாக்ய சுகங்களை அடைய விரும்புகிருர்கள். ஆனுல் அவர்களுக்கு தர்மத்தில் புத்தி செல்லுகிறதில்லை. அவர்களுடைய புத்தியும் அற்பமாகவும், மூர்க்கத்தனமாகவுமிருக்கிறது. அவர்களிடம் நளின ஸ்வபாவம் ஒன்றுமில்லை.'' (611)

"மனிதர்கள் வியாதிகளால் பீடிக்கப்படுகிருர்கள். அவர்களுக்குப் போகங்கள் கிட்டுகிறதாகவில்லை. ஒருவித காரணமுமில்லாமல் அபிமானிகளாக, கோபத்தையும், விரோதத்தையும் அடைகிருர்கள். அவர்களுடைய ஆயுளும் அற்பமாகவும், ஐந்து பத்து வர்ஷங்களாகவும், மிகக் குறைவாகவும் இருக்கின்றது. ஆனுல் அவர்களுடைய கர்வமும், பேச்சுக்களும் அவர்கள் கல்பம் தோறும் ஆயுள் உள்ளவர்களைப் போலவும், நாசமடையாதவர்களைப் போலவும் பேசிக்கொள்வார்கள்.'' (612)

"கலிகாலத்தில் மனிதர்களின் நடத்தைகள் அதிவிபரீத மாகப் போகின்றன. மங்கை, பெண் என்றும் பாராமல் மிகமிக மோசமாக நடந்து கொள்ளுகிருர்கள். லோகத்தில் சந்தோஷம், மனதிருப்தி ஆகியவைகள் ஒன்றும் கிடையாது. விவேக புத்தியு மில்லை. குளிர்ந்த மனோபாவமும் சமத்வமான உள்ளமும் கிடை யாது. நல்ல ஜாதியில் பிறந்தவர்களும், கெட்ட ஜாதியில் பிறந்தவர்களும், ஸ்வயமானத்தைவிட்டு, பிச்சை எடுக்க ஆரம்பிக்கிருர்கள்." (613)

[தியானம்

ஹே காமாக்ஷி, சீதே, உனது தயை என்னிடம் பரிபூர்ண மாக இல்லையா? உனது பிரிவினுல் எவ்வளவு மனம் நொந்து போயிருக்கிறேன், என்பதை நீ அறிவாயா? சுத்தஸத்வமே, சாந்தை ஸ்வரூபியே, ஸ்ரீமந்நாராயணபிரியே, ராமனிடமுள்ள உன் அன்பு மிக்க விசேஷமானதுதான். ஆனுல் உனது கருத் துக்கள் உலகத்தையும் அதில் அடங்கிய சகல ஜீவராசிகளையும் செழிக்கவைக்க வேண்டுமென்பதற்காகவல்லவோ ஏற்பட்டது? நான் அவ்வித மில்லாதபோனுல் உன்னை அடைவேனு? பாபங் களில் நான் மிக்கத் தேர்ந்தவன், ஞானசூன்யம், ஸ்நேக பாசத் தினுல் கட்டப்பட்டிருக்கும் எனக்கு ஏது அம்மா சாந்தி பராயணம்? நான் ஆசைப்படுவதோ யோகிகளுக்கும் கிடைக்கப் பெருத உத்தம கதி. ராமபக்தி என்கிற ஸாம்ராஜ்ய மிருக்கிறதே, அதில் நீ தானே முதற் ஸ்தானத்தை வகிக்கிருய். உன்னைத் தியானம் செய்வதால் அல்லவோ ஸ்ரீராமபதங்களை அடைய முடியும். தியாகராஜாதிகள் இந்த ராமபக்தியைப்பற்றிச் சொல்லும்போது, ராமபக்தி என்கிற மகத்தான ஐஸ்வர்யத்தை ஜனங்களுக்குக் காட்டிக் கொடுப்பதற்காக வைகுண்டத்தி லிருந்து மஹாலக்ஷ்மியாகிய சீதையே அவதரித்தாள் என்றும், அன்று யசோதைக்கு பரம ஸௌலப்யம் வாயைத் திறப்பதுபோல, தனது விஸ்வரூபத்தை முழுவதும் சிறு பாலக ஞகிற கண்ணன் காண்பித்தாரே, அந்த விநோதங்களை நான் கேட்க, பகவான் கருணை கொண்டுவிட்டால் எதைத்தான் அவர் செய்யமாட்டாதவராவர் என்று தோன்றுகிறது. அந்தக் கருணை என்கிற பகவானுடைய ஸ்வரூபம் உனது ஸ்வரூபமல்லவோ! ஹெ பகவன், பரம அபராதியான எனக்கு தியாகராஜ நாரதாதி களைப்போல ஆனந்தம் கிடைக்குமா? ராஜலக்ஷ்மி, ராஜதிலகா, ராஜ்யதாயினி.]

"அப்பா கருட மஹாராஜரே, ஸம்ஸத ஜனங்களும், உயர்ந்தவர்களும் தாழ்ந்தவர்களும், தானம் கேட்பதையும், அசூயை அடைவதையும், கடும் வசனங்களால் பிறர்களைப் புண் படுத்துகிறவர்களாகவுமிருக்கிறார்கள். அவர்கள் மனதிருப்தி யில்லாதபடியால் பேராசை கொண்டவர்களாகவுமிருக்கிறார்கள். அவர்களிடம் ஸமபுத்தி மறைந்துவிட்டது. அவர்கள் எல்லாவித துக்கங்களையும் அகால மரணத்தால் ஏற்படும் கஷ்டங்களையும் சகித்து, சோகமுள்ளவர்களாகவு மிருந்துகொண்டு, வெகுசீக்கி ரத்தில் தங்களுடைய மரணத்தையும் தேடிக்கொண்டார்கள். அவர்களிடம் வர்ணாஸ்ரம தர்மம் கொஞ்சம்கூட காணப்படு கிறதில்லை." (614)

"இந்திரிய அடக்கம் என்கிற தமம், தானம், தயை, மோக்ஷ ஞானம் ஆகியவை அவர்களிடமில்லை. மூர்க்கத்தனமும் பர வஞ்சனையும்தான் அவர்களுடைய குலதனம். புருஷர்களும் ஸ்திரிகளும் தங்களுடைய சரீரங்களை நன்றாகப் போஷிப்பதில் கவனம் செலுத்துகிறார்கள். நிந்தை செய்வதில் மிக்க சாமர்த்திய முள்ளவர்கள். ஜகம் முழுவதும் இவர்களால் வியாபிக்கப்பட் டிருக்கிறது." (615)

"வ்யாலாரி, சர்ப்பங்களைப் பூஜிக்கும் கருடரே, இன்னும் கலியின் சேஷ்டி தங்களைக் கேளும். கலி காலத்தில் பாபங்களும் அவகுணங்களும் நிறைந்து பூர்ணமாக விருக்கின்றன. அவ் விதமிருந்த போதிலும் கலியுகத்தில் அதிக பிரயாசையின்றி பவபந்தங்களிலிருந்து விடுதலை அடைவதற்கு மார்க்கங்களும் வழிகளும் பல இருக்கின்றன." (616)

"ஸத்ய யுகமாகிற கிருதயுகத்திலும், த்ரேதா, துவாபர யுகங் களிலும் ஆத்மாவின் உத்தமகதி, தெய்வபூஜை, யக்ஞம், யோகம் ஆகிற சாதனங்களினால் அடையப்படுகிறது. அந்த உத்தமகதி கலியுகத்தில் ஹரிநாம பிரபாவம் ஒன்றினாலே எல்லோராலும் அடையப்படுகிறது." (617)

"கிருதயுகத்தில் சகலரும் யோகிகளாகவும், விக்ஞானம் கொண்டவர்களாகவுமிருந்தார்கள். அவர்கள் ஹரிபகவானைத் தியானம் செய்து, பவபந்தங்களிலிருந்து விடுபட்டார்கள். திரேதாயுகத்தில் ஜனங்கள் விதவிதமான யாகயக்ஞங்களைச் செய்து, அந்தகர்மாக்களை பிரபுவின் ப்ரீதிக்காகவும், பலன்களை பிரபுவின் பாதங்களில் அர்ப்பணம் செய்து பவசாகரத்தைத் தாண்டினார்கள்." (618)

"துவாபர யுகத்தில் ஸ்ரீ ரகுபதியின் சரணங்களை அண்டி பிரபத்தியோகமாகிற கர்ம ஞான பக்தியினால் ஏற்படும் ஸித்தோபாயத்தால் பிரபுவின் சரணங்களையே பலனாக அடைந்தார்கள். ஹேகருட மஹாராஜரே, கலியுகத்தில் ஹரிபகவானின் குணோத்தமங்களை சுத்தமான மனத்தினால் ஸுஸ்வரமாக பாவராகதாளத்துடன் ஆடிப்பாடி பவசாகரத்தின் அக்கரையை அடைகிறார்கள்." (ராமகதா ஸுதாரஸம் எனப்படும் ஸ்ரீமத் ராமாயணம், கிருஷ்ண கதாம்ருதம் எனப்படும் மஹாபாரதம் ஸ்ரீபாகவதம் ஆகிய கிரந்தங்களில் காணப்படும் ஹரிபகவானுடைய புண்ய கீர்த்திகளைப்பாடி தர்மாதி ஸகல புருஷார்த்தங்களையும், சௌக்யம், ஆனந்தம், சௌர்யம் ஆகியவைகளையும் அடைகிறார்கள். கர்மபந்தங்களிலிருந்து விடுபட்டு, பாபங்கள் அழியப்பட்டு, தியாகராஜாதி, தர்மபுத்ராதி மஹா புருஷர்களைப்போல, உத்தமகதியை அடைகிறார்கள்.") (619)

"கருடமஹாராஜரே, கலியுகத்தில் ஜனங்களுக்கு யோகமும் அவசியமில்லை; ஞானமும் வேண்டாம். ஒரே ஒரு ஆதாரத்தின் பலத்தினால், நாம் ஸகல நன்மைகளையும் அடையலாம். அந்த ஏகமார்க்கம் ஸ்ரீராமச்சந்திர பகவானுடைய குணோத்தமங்களை மனப்பூர்வமாகப்பாடி ஆனந்த மடைவதுதான்." ("ஹேசீதாபதே, உங்களை நம்பினவர்கள் இதுவரை யாராவது கெட்டிருக்கிறார்களா? உனது நாமமகிமை சகல லோகாபிராம தாரகமாக விளங்குகிறது. ஹேராமா, பாமரஜன தூரா, வரகுணமிருதுபாஷணா, சுபாங்கா, முனிஹ்ருதயானந்தா, ஸகுண ஸ்ரீ தசரத பூபாலா, நாரத, பரமசிவ, வால்மீகி, தியாகராஜ, கம்பர், துளசிதாஸ ஹ்ருதயானந்த கரா, கனகமய பூஷணா, ஸௌமித்திரி, பரதன் சத்ருக்ன மாருதி ஆகியவர்களால் சேவிக்கப்படும் சீதாராமா, என் விஷயத்தில் மாத்திரம் உனக்கு ஏன் அப்பா அவ்வளவு அசிரத்தை? எனது பாபங்களையும் துர்செயல்களையும் மறக்க மாட்டாயா? என்னை ரக்ஷிப்பதில் மனம் கொள்ளமாட்டாயா? நீங்கள் தானே, சீதாராமா, எங்கள் கதி. பரமதயாளோ, சுந்தரா, பிரும்மா, உமை சிவன், மஹேந்திரர்களால் பூஜிக்கப்படும் ஆனந்த கந்தமூர்த்தி, உன் பாதபங்கஜங்களை எங்களது ஆராதனைக்குத் தரமாட்டாயா? பதிதபாவனா, திரிதசநாதா, ஸ்ரீ ராமா, நீ தானே எனது ஜீவன ஆஸ்ரயம். ஏகமாத்திரமான ஆதார பலம். வாழ்க்கை நாதத்திற்கு ஆதாரஸ்ருதி. அம்புஜாக்ஷா, எனது தௌர் பாக்யங்களாகிற மேகக் கூட்டங்களை விரட்டுவதற்கு பீம பலமுள்ள சண்ட மாருதா, என்னை இவ்விதம்

கஷ்டப்படுத்துவது உனது சுபமான நாம ரூப கீர்த்திகளுக்கும், உனது கோதண்ட ஹஸ்தங்களுக்கும் ஸரஸிருஹ நயனங்களுக்கும், விசாலமான வக்ஷஸ்தலத்திற்கும் அழகல்ல. நீயே சீதா தேவியை வேண்டுமானுல் கேட்டுப்பார்.'') ஹே கருட பகவானே, ஸகல ஆசைகளை தியாஜ்யம் செய்து விட்டு, ஒரே ஒரு ஆஸ்ரயத்திஞல் ராம தாரகத்தைப் பஜித்து, ப்ரேமைஸகிதம் ஸ்ரீராமனுடைய சுபமான குணக்கீர்த்திகளைப்பாடி ஆனந்த மடையும்.'' (620)

'' இந்த வசனங்களில் நம்பிக்கை உள்ளவன், (துளசிதாஸ, தியாகராஜ, கம்பர் வசனங்களில் நம்பிக்கை உள்ளவன்தான்,) ஸம்சாரக்கடலைத் தாண்டுகிருன். இதில் மனக்கலக்கம் ஒன்றும் வேண்டாம். பகவான் சீதாபதியினுடைய நாமபிரபாவங்கள் கலியுகத்தில் பிரத்யக்ஷமாகக் காணப்படுகின்றன. கலிகாலத்தில் ஒரே ஒரு நன்மை மிக்க பயனை விளைவிக்கிறது. மனத்தில் ஏற்படும் பாபங்கள் மனிதனைத் தொடருகிறதில்லை. ஆனுல் மனத்தில் ஏற்படும் புண்ணிய எண்ணங்கள் மனிதனைப் பவித்திரமாக ஆக்குகின்றன. இதுதான் கலியுகத்தின் சிறந்ததும் புனிதமானதுமான பிரதாபம்.'' (621)

'' மனுஷ்யனுக்கு மஹா விஸ்வாசம் யேற்பட வேண்டும். அவ்விதம் ஏற்படின், அதைப்போல ஸம்பத் கலிகாலத்தில் வேறு ஒன்றுமில்லை. ஏனெனில் கலியுகத்தில் ஸ்ரீராமச்சந்திரனுடைய விமலமான குணகீர்த்திகளை மனிதர்கள் பாடி, நாமதாரகத்தை ஜபித்து, ஒருவித பரிஸ்ரமமின்றி, ஸம்சார ரூபியாகிற மஹார்ணவத்தை சுலபமாகத் தாண்டுகிருர்கள்.'' (622)

'' தர்மத்திற்கு ஸத்யம், பூததயை, தவம், தானம் ஆகிய நான்கு பாதங்கள் உண்டு. அவைகள் ஒவ்வொன்ருக ஒவ்வொரு யுகத்தில் மறைய ஆரம்பித்தன. கலியுகத்தில் தானரூபியாகிற ஏகபாதம்தான் இருப்பதாகத் தெரிகிறது. எந்த வழியிலாவது செய்தாலும், தானம் ஸகல கல்யாணங்களையும் மங்களங்களையும் தருகிறது.'' (623)

'' ஸ்ரீராமனுடைய மாயையின் பிரபாவத்திஞல் ஸகலருடைய ஹ்ருதயத்திலும் தர்மத்தைப் பற்றிய எண்ணங்கள் உதிக்கின்றன. அவருடைய தூண்டுதலால் ஸகல தர்மங்களையும் ஜனங்கள் அனுஷ்டிக்கிருர்கள். சுத்த ஸத்வம், ஸமபுத்தி, ஆத்ம நிக்ஷேபணம் என்கிற விக்ஞானம், மனத்தில் எப்பொழுதும் சுசியாக விருத்தல் ஆகியவை ஸத்ய யுகத்தின் லக்ஷணங்களாக விருந்தன.'' (624)

[தியானம்

ஹே ராமா, சீதா, சரணம் சரணம், நாராயணா, மஹாலக்ஷ்மி பிரபோ சரணம். மனிதன் ஸ்ரேயசை அடைய விரும்புவானுகில், தர்மார்த்த காம மோக்ஷங்களில், முதலில் தர்மத்தைக் கௌரவிக்க வேண்டும். பிற்பாடு மோக்ஷமாகிற ஞானத்தை அடைய முயற்சி செய்யவேண்டும். தர்மத்திற்கும் மேலானதான மோக்ஷம் எனப் படும் விஷ்ணுவின் பாதங்களை அடையவேண்டும். ஹிம்சையில் லாமல் எப்பொழுதும் மனிதனைக் காக்கக்கூடிய கர்மாக்களைச் செய்யவேண்டும். கர்ம மார்க்கத்தில் ஏறி மோக்ஷ மார்க்கத்தை அடைந்து, பகவான் விஷ்ணுவை அடைய வேண்டும். கொடிய கர்மங்களை விட்டு, சுத்தமான கர்மாக்களால் ஜரையற்ற மோக்ஷ பதம் எனப்படும் விஷ்ணுவின் பதத்தை அடைய வேண்டும். இவ்விதமாக பராசரர் ஜனகருக்கு உபதேசித்தார். அதையே தியாகராஜரும் எனக்கு உபதேசித்தார். ஹே ராமா, ஓங்கார தாமா, சீதையும், நீயும் எனக்கு சுத்தமான பிரேமையைக் கொடுக்க வேண்டும். ஏனென்று கேட்பாயோ? நான் செய்யும் கர்மாக்கள் அனைத்தும் உன் பிரியத்திற்காகத்தானே செய் கிறேன். என்னை மனக்கஷ்டத்திற்கு உள்ளாக்காதே. நான்கு பேர்கள் பரிகசிக்கும்படி செய்யாதே. உன்னைத் தவிர எனக்கு கதி வேறு என்ன இருக்கிறது. நீயே சொல். நீயும் என்னை நிராகரித்து விட்டால் வேறு புகல் எனக்கு இல்லையே. காசிபதி யாகிற மஹேஸ்வரர் தொழும் சீதாபதி, என்னை விட்டுவிடாதே.]

"ஸத்வகுணங்கள் அதிகமாகவும், ரஜோகுணம் குறைவாக வும்; சுத்த கர்மங்களில் ஆசையும் பற்றுதலும், திரேதாயுகத்தின் தர்ம லக்ஷணங்களாக்விருந்தன. ரஜோகுணம் அதிகமாகவும், ஸத்வகுணம் குறைந்ததாகவும், குறைவான தாமஸகுணமும், துவாபரயுகத்தின் தர்ம லக்ஷங்களாகவிருந்தன. இதனுல் மனத் தில் சந்தோஷமும், பயமும் மாறிமாறி வருவது ஸஹஜமாக விருந்தது." (625)

"தாமஸகுணம் அதிகமாகவும், ரஜோகுணம் குறைவாகவும் எல்லோரிடமும், எல்லா ஜீவராசிகளிடமும் வைரம், விரோத மாகிற பேதபுத்தி ஏற்படுகிறதே, அது கலியுகத்தின் பிரபாவம் என்று அறிந்துகொள்ளும். வித்வான்கள் இவ்விதமாக யுகதர்மங் களை அறிவார்கள். அவைகளை அடையாளங்களுடன் அறிந்து கொண்டு, ஹிம்சையில்லாததும், அதர்மமில்லாததுமான கர்மாக் களை தியாஜ்யம் செய்துவிட்டு, தர்மமாகிறதும், ஜரையற்றது மான மோக்ஷத்தை அடைகிறுர்கள். அவர்கள் மனக்கவலைகளைத்

தள்ளி கிரமமாக சுத்தகர்ம மார்க்கத்தில் ஏறி, சிரத்தையுள்ளவர்களாகவும், எப்போதும் மனம் அடங்கினவர்களாகவும், நாளடைவில் விஷ்ணுவின் ஆராதனை ஒன்றையே அவலம்பித்தவர்களாகி, அதர்மத்தைவிட்டு, ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள்.'' (626)

''எந்த மஹானுபாவர்களுக்கு ஸ்ரீரகுநாதனுடைய பவித்திரமான பாதசரணங்களில் ப்ரேமை பக்தி அதிகமாகவிருக்கிறதோ, அவர்களிடம் காலதர்மங்கள், யுகதர்மங்கள் ஒன்றையும் செய்யமாட்டா. ஹே பக்ஷிராஜரே, கபடநாடகம், இந்திரஜாலம், பொய்க்கால் குதிரைபோல விகடங்கள் யாவையும், மாயைகளின் பலங்களாக அறியக்கடவீர். அவைகள் ராமசேவகனிடம் ஒன்றும் பலிக்கமாட்டாது. ஜாலவித்யைக் காண்பிக்கும் மந்திரவாதியின் பிரபாவங்கள் பிரபுவினுடைய சேவகனிடம் ஒன்றும் பலிக்கிறதில்லை அல்லவா?'' (627)

''ஹரிபகவானுடைய மாயையினால் செய்யப்படும் தோஷங்களோ, குணங்களோ, ஸ்ரீஹரிபகவானை ஆராதியாமல் அழிகிறதில்லை. பிரபு, இதை நன்றாக தீரவிசாரித்துக் கொண்டு ஸகல காமங்களையும் ஆசைகளையும் தள்ளிவிட்டு, நிஷ்காம பக்தியினால் ஸ்ரீராமச்சந்திரனிடம் பக்தி செலுத்தவேண்டும்.'' (628)

''பக்ஷிராஜரே, நான் அப்பேற்பட்ட கலிகாலத்தில் பல வர்ஷங்கள் அயோத்தியில் வசித்துவந்தேன். ஒரு சமயம் அயோத்தியில் துர்பிக்ஷம் ஏற்பட்டது. அந்தசமயம் நான் அயோத்தியைவிட்டு வெளிக் கிளம்பினேன்.'' (629)

''பாம்புகளுக்கு சத்ருவே, நான் உஜ்ஜயினிக்குச் சென்றேன். அங்கு போகும்போது, நான் தீனனாகவும் மலினமாகவும், தரித்திரனாகவும், துக்கங்களை அனுபவிக்கிறவனாகவு மிருந்தேன். கொஞ்சகாலம் கழிந்தபின்பு கொஞ்சம் ஸம்பத் வர ஆரம்பித்தது. அந்த தனத்தினால் நான் மீண்டும் பகவான் சங்கரரை ஆராதிக்க ஆரம்பித்தேன்.'' (630)

''அங்கே ஒரு வேதவித்தான பிராம்மணன் இருந்தான். அவன் ஸதா சிவபூஜை செய்துகொண்டிருந்தான். அவனுக்கு சிவபூஜையைத் தவிர வேறு ஒரு கார்யமும் இல்லை. அவன் பரம சாது. பிரும்மஞானம் உள்ள அவன் தினமும் சம்புவை ஆராதிப்பான். ஆனால் அவன் ஹரிபகவானை நிந்தனை செய்பவனாக இல்லை.'' (631)

''நான் கபட எண்ணத்துடன் அவனை ஸேவை செய்து வந்தேன். அந்த பிராம்மணன் பரமதயாளு. நீதிசாஸ்திரத்தில்

தேர்ந்தவனாகவிருந்தான். ஸ்வாமி, சரியாகக் கேளும். அவன் என்னைப் புத்ரனுக்குச் சமமாக மதித்து என்னைப் போஷித்து வந்தேன். விஷய அறிவுகளை அவன் எனக்குப் புகட்டினான்.'' (632)

'' அந்த பிராம்மணனால் எனக்கு சிவதீக்ஷை கொடுக்கப் பட்டது. அவரால் எனக்கு பரமசுபங்களைத் தரும் உபதேசம் அளிக்கப்பட்டது. சிவன் கோயிலில் நான் சிவமந்திரத்தை உச்சரிக்க ஆரம்பித்தேன். என் ஹ்ருதயத்தில் அஹங்காரமும் டம்பமும் வளர ஆரம்பித்தது. '' (633)

'' ஸ்வாமி, நானோ துஷ்டன், ஜாதியிலும், பாபங்களிலிலும் மிக்கக் கெட்டவன். என்புத்தி மோஹாந்த காரத்தில் அழுந்தி யிருந்தபடியால் விப்ரர்களையும் விஷ்ணுபக்தர்களையும் கண்டால் த்வேஷ புத்தியுடன் இருப்பேன். அவர்களுக்குத் துரோஹம் செய்ய ஆரம்பித்தேன். '' (634)

'' என் குருமஹாராஜருக்கு என்னுடைய நடத்தையைக் கண்டு, மனவருத்தம் ஏற்பட்டது. அடிக்கடி என்னை அவர் சிக்ஷிக்க ஆரம்பித்தார். எனது ஆசரணைகளை மாற்றும்படி வற்புறுத்தினார். அவருடைய சிக்ஷைகள் எனக்குப் பிடித்தமா யில்லை. நான் கிரோத முர்ச்சிதனாக அவரிடமிருந்தேன். ஸ்வாமி, டம்பமாக வாழ்ந்து வந்த எனக்கு அவருடைய நீதி உபதேசங்கள் ஒன்றும் பலிக்கவில்லை.'' (635)

'' ஒரு தடவை என்குரு என்னை அழைத்துப் பல விதங்களால் போதித்தார். பல நீதிகளைச் சொன்னார். '' புத்ரா, சிவபக்தி யினால் ஏற்படக்கூடியது ஒன்றே ஒன்றுதான். அது ராமபக்தி. அதனால் ஸ்ரீராமபாதங்களில் அசஞ்சலமான பக்தியும், விஸ்வாஸ மும் ஏற்படும்.'' (636)

'' புத்ரா, பிரும்மாவும், சிவனும் ஸ்ரீராமசந்திரனையே வழி படுகிறார்கள். அவர்களே அவரை உபாஸிக்கும்போது சாதாரண மனிதர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? முட்டாளே, பிரும்மாவும் பகவான் சம்புவும் மிக்க அனுராகத்துடன் ஸ்ரீராமனை வழிபடும்போது, நீ மாத்திரம் துரோஹசிந்தனையுடன் அவரிட மிருந்தால் உனக்கு சுகம் எவ்விதம் ஏற்படும்? (637)

என்குரு '' சிவன் '' அவரே '' ஹரிபகவானுடைய சேவகன்,'' என்று சொன்னார், பக்ஷிராஜரே, அந்த வார்த்தைகளைக் கேட்டதும் என்னுடைய ஹ்ருதயம் கோபத்தால் ஜ்வலித்தது. (638)

" நீச ஜாதியில் பிறந்திருந்தாலும், அல்ப வித்யையினால் மிக்க கர்வமடைந்திருந்தபடியாலும் நான் அவரை மதிக்கவில்லை. ஒரு சர்ப்பம் பால் கொண்டு வளர்க்கப்பட்டாலும், அது தன் விஷத்தை இழக்காது. அதுபோல நான் எனது இயற்கை ஸ்வபாவங்களை மறக்கவில்லை. நீச ஜாதியில் பிறந்தவனுக்கு ஹிதோபதேசங்கள் நற்பயனை விளைவிக்குமா?'' (639)

[தியானம்

ஹேராமாசீதா, நாராயணா, மஹாபிரபோ, மஹாலக்ஷ்மி, உங்களை நான் பராசரர், தியாகராஜர், ஜனகர் ஆகியவர்களை புறம்வைத்து சரணம் அடைகிறேன். ராமசீதா, உங்களை தரிசித்தவர்கள் மஹாபாக்கியர்கள். உங்களுடைய அழகைப் பருகினவர்களுக்கு அதைவிட அம்ருதம் கூட ருசியுள்ளதாகவிருக்கிறது என்று சொல்பவர்களாகக் காணப்படவில்லை. ஹேராமச்சந்திரா, உன்னுடைய கருணை நிறைந்த விழிகள் சந்திரனின் குளிர்ந்த கிரணங்களைவிட தாபத்ரயங்களைப் போக்கும் கல்யாண குளிர்ச்சியாகவிருக்கின்றன. ஐயா, வேதங்களும், தேவர்களும், சாஸ்திரங்களும் உன் பெருமைகளை அறிய முடிகிறதில்லை. உன்னுடைய பாஹுபலம், பாஹுபலத்தினால் கர்வமடைந்த அரசர்களை அழிக்கின்றது. நாகராஜபூஷணா, கருடஸேவிதா, தியாகராஜரால் உனது மகிமைகள் அனந்தமாகப் பாடப் பெற்றும் அவைகளைப் பூர்த்தியாகச் சொல்லப்பட முடியவில்லை. உம்முடைய ஞானம் இல்லாவிடில் மற்ற எல்லா ஸம்பத்துக்களிருந்தும் அவன் நிஜமாகவே ஏழைதான். அக்ஞானத்திற்கு நிகராக இரண்டாவது பகையில்லை. உத்தமமான மானிடப் பிறப்பை அடைந்த ஜனங்கள் தர்மத்தை வெறுப்பவர்களாக விருந்தார்களேயானால், அவர்களும் தாழ்ந்துதான் போகிறார்கள். ஸத் பாத்திரத்தில் தானம் செய்வதுபோல, முயற்சியினால் செய்யப்பட்ட சுபகர்மங்களால் தன்னைத்தானே உயர்த்திக்கொண்டு, வேதங்கள் பிரமாணங்கள் என்று உறுதிகொண்டு, ராமசீதா சரணங்களில் அதிகப் ப்ரேமையை வைத்து பூஜித்து வரவேண்டும். ஹே மனஸே, ஸ்ரீராம பாதங்களே உனக்கு பாக்யத்தைத் தரக்கூடியவை. உனது ஆசையைத் தூரத்தள்ளி, கர்மபல தியாகத்தினால் ராமனுடைய கருணையை வேண்டு. தேவாதீசா, சுந்தரா, தசரத நந்தனா, காசீசரான உமாபதிக்கு ஆத்மபந்துவே, நீயே எனக்கு கதி. ஜாகரூக, ஸதாகதி ஜஹித, யோகினுத, தியாகராஜர்

போன்ற பாகவதர்களைக் காக்கும் ரக்ஷகா, நீதான் என்னையும் ரக்ஷிக்கவேண்டும்.]

"தற்பெருமை, ஸ்வ அபிமானம் கொண்டவனும், குதர்க்க புத்தியை உடையவனும், துர்பாக்யதசையை அடைந்தவனும், நீச ஜாதியிலும் பிறந்த எனக்கு குருவினிடம் க்ருதக்ஞை அன்பு செலுத்துவதற்குப் பதிலாக, குருவினிடம் அசூயையும் கோபமும் வளர்ந்தது. பிரபு, கருட மஹாராஜரே, குருத்ரோஹ புத்தியும் வளர ஆரம்பித்தது. என் குரு என்னுடைய மாறுதல் களையும் கண்டும் என்னிடம் இரக்கம் காட்டினார். பரமதயாளு, என்னிடம் அவருக்கு லவலேசமும் அன்பு குறையவில்லை. அவர் என்னை விட்டுவிடவும் எண்ணவில்லை. பெருமுயற்சியுடன் அடிக்கடி என்னைக் காண்பவராக எனக்கு ஆத்ம உபதேசங் களைச் செய்ய ஆரம்பித்தார்." (640)

"நீச ஜாதியில் பிறந்தவன் ஒருவன் எப்பொழுதாவது உத்தமகதியை அடைகிறானோ, இல்லை, அவனுடைய முதல் காரியம் ஒன்றே ஒன்றுதான். அவனுடைய மஹா உபகாரியை எவ்விதமாவது நாசமடையச் செய்யவேண்டும்; அவனைக் கொல்ல வேண்டும் என்பதேதான். பிரபு, இப்பொழுதுதான் ஸ்வாரஸ்ய மான கட்டம் ஆரம்பமாகிறது. நன்றாகக் கேளும். அக்னி புகையை உண்டாக்குகிறது. ஆனால் அதே புகை மேகமாக மாறி விட்ட பின்பு அக்னியை அணைத்துவிடுகிறதல்லவா? அதுமாதிரி தனம், பதவி முதலியவைகளை அடைந்த நான் என் குருவை கெட்ட எண்ணத்துடன் வெறுக்க ஆரம்பித்தேன்." (641)

"தூசிகள் ரஸ்தாவில் நிராதாரமாகப் பூமியில் சிதறிக் கிடக்கின்றன. வழிப்போக்கர்களின் செருப்புக்களால் அவைகள் ஸதா மிதிக்கப்படுகின்றன. மாருதத்தினால் அந்த தூசிகள் மேலே கிளம்பப்பட்டால், அவைகளின் முதற் காரியம் அரசனின் நேத்ரங்களையே மூடி, அவனுடைய முகுடத்தையும் கீழே தள்ளி சாய்த்துவிடுகின்றன தல்லவா!" (642)

"பக்ஷி மஹாராஜரே தயவுசெய்து கேளும். புத்திமான்கள், நீச ஜாதி ஜனங்களை தங்களிடம் சேர்த்துக்கொள்ளுகிறதில்லை. புத்திமான்களும் வித்வான்களும் சொல்லுகிறார்கள். "துஷ்டர் களிடம் கலகம் செய்வது நன்மையைத் தராது; அதேமாதிரி அவர்களிடமும் ப்ரேமையையும் செலுத்தக் கூடாது." (643)

"கோஸாயி, என்னைப்போன்ற பக்தர்களைக் கட்டிக்காக்கும் கிருபாளு, அவர்களிடம் ஸதா உதாஸீனனாக விருக்கவேண்டும். கெட்ட நாயை எவ்விதம் தூரத்தள்ளி விலக்கவேண்டுமோ,

அவ்விதம் அவர்களை முயற்சியுடன் விலக்கவேண்டும். நானும் மிக துஷ்டனுக விருந்தேன். கபட புத்தியுடனும் குதர்க்கமாக வும், தர்க்கவாதியாகவும் நான் இருந்தேன். பல தடவைகள் குரு எனக்கு ஹிதத்தைச் சொல்லியபோதிலும் அவைகள் என் காதுகளில் விழவில்லை. ஸ்வாமி, அந்த நாட்களை நினைக்கும் போதே, என் மனம் பதறுகிறது.'' (644)

''ஒருசமயம் நான் சிவன் கோவிலில் சிவநாமத்தை ஜபித்துக்கொண்டிருந்தேன். அந்த சமயம் கிருபாளுவாகிற என் குருநாதர் என்னிடம் வந்தார். அவரை நான் கண்டு கொள்ளாதவனுகவும், உதாஸீனனுகவும் உடனே எழுந்து பிரணமம் செய்யாதவனுகவும் இருந்தேன்.'' (645)

''பாருங்கள் ஸ்வாமி. என் குருநாதர் அதற்காக வருந்த வில்லை. என்னிடம் கோபப்படவில்லை. லவலேசமும் அவருக்கு என்னிடம் அப்ரியமில்லை. ஸ்வாமி, குருவுக்கு அவமரியாதை செய்வது மஹா பாதகம்; அதனுல் பாபாத்மாக்களைத் தண்டிக்கும் மஹா தேவருக்கு அது பிடிக்கவில்லை. அவருடைய கோபம் தீயைப்போல வளர்ந்தது. (646)

''கோவிலில் ஒரு ஆகாசவாணி அப்போது கேட்கப்பட்டது. ''பாக்கியத்தைக் கொன்றவனே, அயோக்யனே, ஸ்வஅபிமானம் கொண்ட கெட்ட நடத்தை உள்ளவனே, உன் குருவுக்கு உன்னிடம் கோபமில்லாத போதிலும் நான் அவரைப்போல கிருபாளுவல்ல. உன் குரு யதார்த்த ஞானத்தை அடைந்து என்னையே நம்பியிருக்கிறபடியால் அவர் உனக்கு நன்மையைச் செய்யவேண்டு மென்று நினைப்பினும்; என்மனம் அதற்கு இடம் கொடுக்காது.'' (647)

''மூர்க்கனே, நான் உனக்கு சாபம் தருகிறேன். நீதிக்கு விரோதமாக நடப்பது என் மனத்திற்கு உகந்ததில்லை; துஷ்டா, நான் உன்னைத் தண்டியாது போனுல் என்னுடைய வேத மார்க்கங் களும் நியாய நடத்தைகளும் அழிந்துபோகும்.'' (648)

''அடேதுஷ்டா, நீ குருவை அவமதித்தபடியால் கோடி யுகங்கள் ரௌரவ நரகத்தில் அமிழ்ந்து, கஷ்டத்தை அனு பவித்து, அதற்குப் பின்பு பசுபக்ஷி ஆகிற திர்யக் ஜாதியில் பிறவியை அடைவாய். பதினுயிரம் வர்ஷங்கள் அந்த ஜன்மங் களின் கஷ்டங்களை அடைவாய்.'' (649)

''அடே பாபி, இன்னமும் மலைப்பாம்பைப் போல அசை யாமல் குருவுக்கு முன்னுல் உட்கார்ந்து கொண்டிருக்கிருயே. உன்புத்தி பாபத்திலிருந்து இன்னமும் விலகவில்லை. பாபாத்மா,

நீ ஸர்ப்பமாக ஆவாய். அதமாதமனே, உடனேயே ஸர்ப்பமாக மாறி, ஒரு பெரிய விருக்ஷத்தின் பொந்தில் வாழ்ந்துகொண்டு வா,'' என்று மீண்டும் ஆகாய வாணி கேட்கப்பட்டது. (650)

சங்கர பகவானுடைய சாபத்தை என்குரு கேட்டார். 'ஹா ஹா, இது என்ன கஷ்டம். என் சிஷ்யனுக்கா இவ்வளவு மஹத்தான கஷ்டம்!'' என்று கதறிவிட்டார். அப்போது நான். அத்யந்த பயத்தினுல் நடுநடுங்கிக் கொண்டிருந்தேன். அவருக்கு என்னிடம் அனுகம்பை உண்டாகியது. என் கேவல ஸ்திதியைக் கண்டு, என்பிரபு குருநாதர் எனக்காக மிக்க பச்சாதாபப்பட்டார்.'' (651)

[தியானம்

குருவாயூரப்பா, தாமோதரா, நாராயணு, ராமா சீதா, சரணம் சரணம். உங்களை அடைந்த சம்பு, உமை தங்கள் பக்தர்களாயினும், அவர்கள் உங்களை ஆராதியாமல் போனுல் மிகுந்த கோபத்தை அடைகிருர்களே. நளகூபரனும் மணிக்ரீவனும் சிவபூசையினுல் உத்தம ஸம்பத்துக்களை அடைந்தும், ஹரிபக்தர்களாக இல்லாதபடியால் நாரதபகவானிடமிருந்து சாபத்தைப் பெற்றனர். குபேரனுடைய தாசர்களாக விருந்தும் அவர்களுக்கும் ஹரிபக்தி என்கிற பேறு கிடைக்கவில்லை என்கிறதை நினைக்க ஆச்சர்யமாக விருக்கிறது. ஹே சீதே, அதேபோல உனது தாஸ்யரான மார்க்கண்டேய முனிவர் உமா மஹேஸ்வரர்களைப் பூஜித்துத்தானே ஹரிபக்தியை வரமாகக் கேட்டு, அதை அடைந்தார். நாராயணு, ராமா, கிருஷ்ணு, தாமோதரா, உனது நாமமகிமைகள் அல்லவோ அப்பேற்பட்ட ஹரிபக்தியைக் கொடுக்கச் செய்கிறது. தயாஸாகரா, ராக ரஹிதா, சரசாபதரா, பராத்பரா, உனது ருசியைக் கண்டவர்கள் ஸ்திரி, புத்ரன், தனம், புகழ், எல்லாவற்றையும் விட்டுவிடுவார்கள். உன்னையே கதியாக வாழ்ந்த தியாகராஜாதிகள் இரவும் பகலும் உன் நாமத்தையே ஜபித்தார்கள். நானும் அவ்விதமாக உன்னை அடைந்தேன். கருணையோடு நீ என்னை ரக்ஷிக்க மாட்டாயா?]

'' மஹா கிருபாளுவாகிற என் குருநாதர் அத்யந்த பச்சாதாபத்தினுல் பகவான் சம்புவை சாஷ்டாங்கமாக சுக்ருத பிரணமம் செய்து, கைகளை அஞ்சலி செய்துகொண்டு, மஹா வினயத்துடன் எனக்காகச் சொல்ல ஆரம்பித்தார். '' பிரபு, ஆசுதோஷி, உமா மஹேஸ்வரா,'' என்று சொல்லும்போதே,

அவருடைய தொண்டை அடைத்துப்போய், வார்த்தைகள் வெளிவர மறுத்தன.'' (652)

## சங்கர பகவானைப்பற்றிய ஸ்துதி

### ருத்ராஷ்டகம்

(1)

நமாமி ஈசம் ஈசான நிர்வாணரூபம்
விபும் வ்யாபகம் ப்ரஹ்ம வேதஸ்வரூபம்
நிஜம் நிர்குணம் நிர்விகல்பம் நிரீஹம்
சிதாகாஸ மாகாஸவாஸம் பஜேஹம்.

(2)

நீராகாரர் மோகார மூலம் துரீயம்
கிராக்ஞான கோதீத மீசம் கிரீஸம்
கராலம் மஹாகால காலம் க்ருபாளம்
குணகார ஸம்சார பாரம் நதோஹம்.

(3)

துஷா ராத்ரி ஸம்காஸ கௌரம் கபீரம்
மனோபூத கோடி ப்ரபா ஸ்ரீசரீரம்
ஸ்புரன் மௌளி கல்லோ லினீசாரு கங்கா
லஸத் பால பாலேந்து கண்டே புஜங்கா.

(4)

சலத் குண்டலம் ப்ரஸ-ெ நேத்ரம் விசாலம்
பிரஸன்னனம் நீலகண்டம் தயாளம்
ம்ருகாதீ சசர்மாம்பரம் முண்டமாலம்
ப்ரியம் சங்கரம் ஸர்வநாதம் பஜாமி.

(5)

ப்ரசண்டம் ப்ரகிருஷ்டம் ப்ரகல்பம் பரேசம்
அகண்டம் அஜம் பானுகோடி ப்ரகாசம்
த்ரய: சூல நிர்மூலனம் சூல பாணிம்
பஜேஹம் பவானீபதிம் பாவகம்யம்.

(6)

கலாதீத கல்யாண கல்பாந்த காரீ
ஸதா ஸஜ்ஜனனந்த தாதா புராரீ
சிதானந்த ஸம்தோஹ மோஹா பஹாரி
ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ மன்மதாரி.

(7)

நயாவத் உமாநாத பாதார விந்தம்
பஜந்தீஹ லோகே பரே வாநராணும்
நதாவத் சுகம் சாந்தி ஸந்தாப நாசம்
ப்ரஸீத ப்ரபோ ஸர்வபூதாதி வாஸம்.

(8)

நஜாநுமி யோகம் ஜபம் நைவ பூஜாம்
நதோஹம் ஸதா ஸர்வதா சம்பு துப்யம்
ஜராஜன்ம துக்கௌக தாதப்யமானம்
ப்ரபோ பாஹி ஆபந் நமாமி மீச சம்போ.

மீண்டும் தன்னை தைர்யத்திஞல் ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு அவர் சொல்ல ஆரம்பித்தார். "பகவான், நீர்தானே மோக்ஷ ஞானம் என்று சொல்லப்படும் ஸ்ரேயஸ். ஸம்சாரமாகிற பெரிய பிரவாகத்தில் பற்றற்றிருப்பது என்று சொல்லப்படும் பரமானகதி உம்மால் அல்லவோ அடையப்படுகிறது. ஈசரே, ஈசானரே, மஹாவிபுவே, நிர்வாணரூபரே, தயை செய்ய வேண்டும். ஸர்வாத்மா, வ்யாபகரே, பிரும்மவாதியே, வேதங்களைப் பரிபாலிக்கும் வேத ஸ்வரூபரே, உமக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். உம்மிடம் மாயையாகிற தமஸ் ரஜஸ் ஸாதி குணங்கள் ஏது? பிரபு, நீரே ஸ்ரீராமனுடைய நிஜபக்தன். உமக்கு பேதஞானம் கிடையாது. நீரே நிர்விகல்பர். ஆசைகள், பற்றுதல்கள் உமக்கு ஒன்றும் கிடையாது. உம்மையே யாவரும் வேண்டும்படி ஸர்வபலமாக விருக்கிறீர். ஆகாசம் எனப்படும் திக்குக்களை வஸ்திரமாக அணிந்துகொண்டு, ஸர்வாந்தர்யாமியாகி, எல்லோரையும் அவரவர்களின் கர்மங்களில் ப்ரேரணை செய்துகொண்டு, நீர் தண்ட நீதியைச் செலுத்துகிறீர். சித் ஆகாச ரூபியே, நீரே வ்யாப்யமாகவும், வ்யாபகமாகவுமிருக்கிறீர். உம்மோடு சேர்ந்த உமாதேவியே ஸகல பிரபஞ்சமாகிற பிருத்வியாக விருக்கிருள். அப்பேற்பட்ட ஜகத்மாதா பிதாவாகிற பார்வதி பரமேஸ்வரர்களுக்கு நான் ஆயிரம் நமஸ்காராதிகளைச் செய்கிறேன்." (கணேசன், குஹன் ஆகியவர்களுக்குத் தாய்தந்தையே, அவர்களைப்போல நானும் உங்களுடைய பாலகன்.") (653)

"உம்மை அரூபி என்றும் சொல்லுகிருர்கள். உம்முடைய ஸ்வரூபம் எல்லாக் குணங்களையும் அதிக்ரமித்து, மேம்பட்ட சுத்த ஸத்வமுள்ள ஞானமயமாகவும், போதமயமாகவும், சச்சிதானந்த

மயமாகவுமிருக்கிறது. பிரணவஸ்வரூபியே, ஓங்காரதாமா, உமையுடன்கூடிய நீர் ஸதா துர்யாவஸ்தையில் பிரும்ம மயமாக வும் நாதமயமாகவுமிருக்கிறீர். (அப்பேற்பட்ட உமா மஹேஸ்வரர் களுக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன்.) ஸ்வாமி, நீர் வாக்குக் களுக்கும், இந்திரியங்களுக்கும், புத்தியாகிற ஞானத்திற்கும் அதீதர். கீரீஸரே, கைலாஸபதி, உக்ரஸ்வரூபரே, பீமரே, மஹா காலரே, காலத்திற்கும் ம்ருத்யுவாகிற மஹா பைரவரே, உம்மைக் கிருபாளுவென்று சொல்லி நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய் கிறேன். உம்மை வணங்கி உமது இஷ்டப்படி நடப்பவனுக்கு நீர் உதாரண குணங்களால் புகழும்படி ஸர்வ ஸம்பத் பிரதாய கராக விருக்கிறீர். பிரபு, உம்மை அண்டி பூஜித்துவரும் மானிடர்கள் ஸம்சாரமாகிற ஆழ்ந்த கடலைத் தாண்டுகிறார்கள். உம்மை வழிபடுவதால் நாங்கள் கிருதார்த்தர்களாக ஆகிறோம். அப்பேற்பட்ட பரமேஸ்வரருக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.'' (654)

''பிரபு, நீர் ஹிமாசலத்திற்குச் சமானமாக சிகப்பு வர்ணத் துடனும், கம்பீரமாகவும் காக்ஷி அளிக்கிறீர். உம்முடைய சரீர லாவண்யங்கள், சுபாங்கங்கள், கல்யாண சுந்தரேஸ்வரரே, கோடிக்கணக்கான காமதேவர்களின் ஜ்யோதிஸ் பிரபை காந்தி ஆகிய எல்லாவற்றையும் அபஹரிக்கும்படிக்கும், மனத்திற்கு மிக்க பிடித்ததாகவு மிருக்கின்றன. உம்முடைய சிரத்தின்மேல் சுந்தரமான கங்கை உட்கார்ந்துகொண்டிருக்கிறாள். அந்த அழ கான நதி எல்லோரையும் பாவன மாக்குகிறாள். உம்முடைய நெற்றியில் இரண்டாம்பிறைச் சந்திரனும், கண்டத்தில் சர்ப்ப மும் ஆபரணங்களாக விருக்கின்றன.'' (655)

''உம்முடைய காது குண்டலங்கள் அழகாகவும், பளபளப் பாகவுமிருக்கின்றன. அழகான புருவங்களுடன் தாமரை புஷ்பத் திற்குச் சமமானதும், விசாலமானதுமான தங்களுடைய நேத்ரங் கள் பக்தர்களின் மனதைக் குளிரவைக்கின்றன. எப்பொழுதும் சந்தோஷத்தால் மலர்ந்த முகம், ஹே நீலகண்டரே, தயாளு, என்னிடம் பரிபூர்ண கிருபையுடன் இருக்கவேண்டுமென்று நான் அடிக்கடி அடிக்கடி பிரார்த்திக்கிறேன். சிம்மத்தின் தோலால் போர்த்திய ஆடையும், கபாலங்களால் செய்யப்பட்ட மாலையும், தங்களுக்கு ஆபரணங்களாக விருக்கின்றன. இவ்விதம் காணப்படும் என் பிரிய பகவானான சங்கரரை, என் நாதராகவும், ஸர்வ நாதராகவும் பஜிக்கிறேன். அவர் என்னை கருணையோடு அனுக்ரஹிக்க வேண்டும்.'' (656)

[தியானம்

ஹே உமா சம்போ, உங்களை ஞானம், கருணை என்று சொல்லுகிறார்களே. அது நிஜமா ஸ்வாமி? மஹேசா, உம்மை விருஷபத்வஜர், விருஷபவாஹனர் என்கிற பெயர்களால் தர்மத்தை வாஹனமாகவும், கொடியாகவும் கொண்டவர் என்று சொல்லுகிறார்களே. அந்த தர்மத்தின் மர்மம் என்ன ஸ்வாமி? அந்த நாமங்களின் மர்மங்கள் என்ன ஸ்வாமி? உம்மை ஜைகீஷவ்யர், அஸிதர், தேவலர், ஆணிமாண்டவ்யர், உபமன்யு, தண்டி, சுகர், சுக்ரர், போன்ற மஹாத்மாக்கள் ஆயிரத்தெட்டு நாமங்களால் புகழ்கிறார்களே. அந்த நாமாக்களால் புகழப்பட்ட சாந்தரே, யோகிகளுக்கும், ரிஷிகளுக்கும், தேவர்களுக்கும் நாதரே, உம்மையே லலிதாதேவியின் நாதரான சதாசிவன் என்று சொல்லுகிறார்களே. பிரபு, நீர் மங்களகரமான பசுபதியாகவும், எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும், அளவற்ற மகிமைகள் உள்ளவராகவுமிருக்கிறீர் என்று புகழ்கிறார்களே. ஹே உமாபதி, ஆயிரம் தலைகள் உள்ளவரே, விராட்புருஷரே, என்னிடமும் தங்கள் பக்தன் என்று கருணை காட்டவேண்டும்.]

"ஸ்வாமி, நீர் ஸம்ஹார காலத்தில் எல்லாப் பிராணிகளையும் அழச்செய்யும் பிரசண்டமான ருத்ரர் என்று சொல்லப்படுகிறீர். பிரபு, உம்மையே தேவர்களுக்கும் மேலானவராகவும், ஸகல ஜீவர்களுக்கும் பிராணரூபராக விருந்துகொண்டு, ஸூத்ராத்மாவைப் போல நீர் விளங்குகிறீர். உமாமஹேசா, உம்மை பிரகாசாத்மாவாகிற தேஜஸ்வி என்றும், தேவர்களுக்குப் பதியான பரமேஸ்வரர் என்றும், ஸகல ஜீவராசிகளும் துதிக்கிறார்கள். உம்முடைய ஆக்ஞா சக்ரமானது அகண்டமாக விருக்கிறது. மங்களங்களை அளிக்கும் சம்பு பகவானே, நீரே ஜனன மரணமில்லாத அஜர். உம்முடைய மகிமைகள் அனந்தமாக பானுகோடி ஸ்வரூபமாக விருக்கின்றன. ஸ்வயம்பிரகாசாத்மா, தம்மாலேயே மேன்மை அடைந்த ஸ்வயம் ஸ்ரேஷ்டரே, உம்முடைய மூன்று முகமுள்ள சூலம் மூன்றுவித தாபங்களைப் போக்குகின்றன. சூலபாணி, பவானியினுடைய ஆத்மபந்துவே, அடிக்கடி அடிக்கடி உங்கள் இருவர்களையும் நமஸ்கரிக்கும் என்னிடம் அனுக்ரஹ உள்ளத்துடன் இருக்கவேண்டும்." (657)

"கலை யென்னும் காலத்தின் சிறிய பிரிவுக்கும், காலத்தின் பெரிய பிரிவுக்கும் அதீதராக விருக்கும் பிரபோ, மஹா காலரே, நீரே காலஸ்வரூபி; நீரே புண்ய பாவங்களின் பலனைக்

கொடுப்பவர். நீரே சித்ரகுப்தனுக விருக்கிறீர். நீர் அமங்கள மான ஸ்வரூபத்துடனிருந்தாலும், பஸ்மம், நாகம், புலி, ஆடை போன்றவைகளை அணிந்திருந்தாலும், பிசாசங்கள், வேதாளங் கள் போன்றவர்களிடம் கூடியிருந்தாலும், மயானத்தில் வசித்து வந்தாலும், தாங்கள் ஸர்வ ஜீவராசிகளிடமும் நல்ல எண்ணத் துடன் ஸதா காணப்படுகிறீர். நீர், எல்லாப் பிராணிகளின் பயங் களைப்போக்கி, உலகங்களை வாழவைக்கும்கல்யாண ரூபராகவிருக் கிறீர். முக்கண்ணரே, கல்பாந்தகாரி, உம்மை உமையை முன் னிட்டு, ஸஜ்ஜனங்களாகிற கௌதம, வஸிஷ்ட, அகஸ்திய மஹ ரிஷிகளின் புகழ்பெற்ற வாக்கியங்களால் பூஜித்து, நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஹேதிரிபுராரி, புறம் என்கிற சரீரத்திற்கு புருஷராகவிருப்பவரே, எனக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணும் திரிதசஸ்ரேஷ்டரே, உம்முடைய உருவம் ஆக்னேய ரூபமாகவும் ஸௌம்யரூபம் விஷ்ணுவாகவும் இருக்கிறது. நீங்கள் இரு வர்களும் கூடிய காலரூபம் மஹாகாலராகிய உம்மிடத்திலும் நிலைத்திருக்கிறது. அப்பேற்பட்ட இரு உருவங்களுக்கும் நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பசுபதி, சித் ஆனந்தரே, நீரே சந்தோஹ லக்ஷ்மியைக் கொடுக்கும் மஹா கிருபாளு. நீரே எல்லாருடைய மோஹத்தை அபஹரிக்கும் ஹரர். எங்களிடம் கிருபைகூர்ந்து அன்புடன் ஸதா இருக்க வேண்டும். பிரபோ, காமனை வென்ற காமாந்தகரே, எங்களிடம் அனுக்ரஹ புத்தியுடன் இரும்.'' (658)

''உமாநாதா, எதுவரை மனுஷ்யர்கள் தங்கள் பாதங்களில் சரணமடைந்து தினந்தோறும் பஜிக்கிறுர்கள் இல்லையோ, அதுவரை அவர்கள் இகத்திலும் பரத்திலும் சுகத்தையோ சாந்தியையோ அடைகிறதில்லை. அவர்களுக்கு மூன்று வித தாபங்களும் அழிகிறதில்லை. அவர்களுக்கு உத்தமமான தேக சுகமும் மனசாந்தியும் ஏற்படுகிறதில்லை. ஸர்வபூதநிவாஸா, பிரபோ, சங்கர பகவான், எங்களிடம் சந்தோஷமடைய வேண்டும்.'' (659)

''ஸ்வாமி எனக்கு யோகம், ஸாதனமுறைகள் யாவும் தெரி யாது. ஜபங்களும் பூஜாவிதிகளும் தெரியாது. சம்போ, ஸதா நாங்கள் தங்களை நமஸ்கரிக்கிறோம். ஹேபிரபோ. ஜரை, ம்ருத்யு இவைகளால் வாட்டப்படும் துக்கங்களுக்கு நீர் ஔஷத மாகவும், பேஷஜராதாகவுமிருக்கிறீர். எங்கள் துக்கங்களையும் நாசம் செய்து, எங்களையும் ரக்ஷை செய்யவேண்டும், பிரபோ, சம்போ, தங்களை அடிக்கடி அடிக்கடி நமஸ்காரம் செய்யும்

எங்களை நீங்கள் தான் அனுகிரஹிக்க வேண்டும். உம்முடைய உதவியை எப்போதும் நாடியிருக்கும் எங்களிடம் தயையுடனும் கிருபையுடனும் தாங்கள் ஸதா இருக்கவேண்டும்.'' (660)

"கருடரே, இவ்விதம் என்னுடைய குருமஹாராஜாவால் "ருத்திராஷ்டகம்'' என்று பெரும் புகழுடன் சொல்லப்படும் ருத்திர ஸ்துதி செய்யப்பட்டது. அதனால் பகவான் ஹரர் சந்தோஷமடைந்தார். இந்த "ருத்ராஷ்டகம்,'' என்று சொல்லப்படும் ஸ்துதியைப் பக்தியுடன் எந்த மனிதர்கள் படிக்கிறார்களோ, அவர்களிடம் சம்புபகவான் சந்தோஷமடைகிறார்.'' (661)

"ஸர்வக்ஞரான சம்புபகவான் என் குருதேவருடைய நமஸ்காரங்களையும் ஸ்துதிகளையும் ஏற்றுக் கொண்டார். பிராம்மணரை அனுக்ரஹ உள்ளத்துடன் பார்த்தார். அப்பொழுது அந்த கோவிலில் புதிதான ஆகாசவாணி கேட்கப்பட்டது. "ஹே பிராம்மணரே, என்னிடம் வரம் வாங்கிக்கொள்ளும்.'' (662)

"என்குருநாதர் சொன்னார், "ஸ்வாமி, தாங்கள் தீனனை என்னிடம் ப்ரீதி கொண்டிருப்பது மிக்க சந்தோஷம். உம்முடைய நிஜமான சரணாரவிந்தங்களில் என்றும் மாறாத அசஞ்சலமான பக்திப்ரேமை ஏற்பட வேண்டும்,'' என்கிற வரதானம் செய்துவிட்டு, நான் மிக்கவினயத்துடன் கேட்கப் போகும் இன்னொரு வரத்தையும் தயவுசெய்து அளிக்க வேண்டும்.'' (663)

"பிரபோ, தங்களுடைய மாயையின் வசத்தை அடைந்தவனும், அதனால் ஸ்வரூபஞானத்தையிழந்து ஜடம்போலவிருக்கும் என் சிஷ்யனிடம் கோபமும் க்ரோதமும் கொள்ள வேண்டாம். கிருபாஸிந்து, பகவானகிற தாங்கள் அவனிடம் கிருபைசெய்ய வேண்டும்,'' என்று சங்கரபகவானை என் சார்பில் கேட்டுவிட்டு அவர் விழுந்து நமஸ்கரித்து, என்னையும் நமஸ்கரிக்கும்படி ஆக்ஞையிட்டார்.'' (664)

"தீனதயாளுவாகிற சங்கரபகவான் கிருபையின் வசம் அடைந்தவராகத் தோன்றினார். அப்பொழுதும் மீண்டும் அந்த பிராம்மணர் சொன்னார். "ஸ்வாமி, இவனிடம் தயை செய்து இவனுடைய குற்றங்களை மன்னிக்க வேண்டும். ஹே சம்பு நாதரே, தங்களால் இவனுக்கு கொடுத்த சாபம் சீக்கிரமாகவே முடிவடைந்து, இவனுக்கு விமோசனம் ஏற்படும்படி அனுக்ரஹம் செய்யவேண்டும்.'' (665)

"கிருபாநிதான், தாங்கள் பெரிய மனது கொண்டு, இவனுக்கும் மங்களங்களை நினைக்க வேண்டும்." இந்தவிதமாக பிறர்களுக்கு ஹிதம் செய்யும் என் குருநாதரின் வசனங்களைக் கேட்டதும், மீண்டும் ஒரு ஆகாசவாணி கேட்கப்பட்டது. "நீ கேட்கிறபடி இவனும் நன்மைகளை அடைவான்." (666)

"இவனுடைய கடுமையான பாபச் செய்கைகளை நானே நேரில் கண்டிருந்தும், அதனுல் நான் அதிக கோபத்தின் வசமடைந்திருந்த போதிலும், உம்முடைய இச்சையினுல் நான் இவனுக்கும் விசேஷ அனுக்ரஹம் செய்கிறேன்." (667)

"பிராம்மணு, எவன் ஒருவன் க்ஷமையுடன் விளங்குவானே, அதேமாதிரி பிறர்களுக்கு உபகாரம் செய்வானே, அவனிடம் நான் கரனைக் கொன்ற பகவான் ஸ்ரீராமச்சந்திரனிடம் பிரியம் செலுத்துவது போல, பிரியம் செலுத்துகிறேன். பிராம்மணு, என்னுடைய சாபம் வீண் போகாது. இவன் ஆயிரக்கணக்கான ஜன்மங்களை எடுத்து அவதிப்படுவான்." (668)

"ஒவ்வொரு ஜன்மத்திலும், மரணத்திலும் ஜீவனுக்கு ஏற்படும் துக்கங்களும் ஸந்தாபங்களும் இவனுக்கு என்னுடைய அனுக்ரஹத்தினுல் ஏற்படாது. இவனுக்கு ஸ்வல்பமாகக் கூட ஸந்தாபங்கள் ஏற்படாமல், ஜன்மாந்திர ஞானமும் இவனுக்கு ஏற்படும்" என்று சொல்லிவந்த பிரபு, என்னைப் பார்த்து, "சூத்ரனே, கேள். எனது வசனங்கள் ஒருக்காலும் பொய்யாகாதவை." (669)

"முதலில் உன்னுடைய ஜன்மம் ரகுபதி அவதரித்த அயோத்தியில் ஏற்படும். அதன் பிறகு உன் ஜன்ம வாழ்க்கை எனது சேவையிலும், மனம் என் ஸ்வரூபத்திலும் லயிக்கும். அயோத்யாபுரியின் பிரபாவத்தாலும், என் கிருபையினுலும் உன்னுடைய ஹ்ருதயத்தில் ராமபக்தி ஏற்படும்." (670)

[தியானம்

நாராயணு, சீதாராமா, கிருஷ்ணு, முராரி, லக்ஷ்மீபதி, உன்னுடைய பிருந்தாவன சரணங்களை தியாகராஜருக்கும், நாரதருக்கும், கோபாலர்களுக்கும் கொடுத்தது போல, எனக்கும் கொடு அப்பா. உன்னுடைய ஸம்பந்தம் பெற்ற கோபாலர்கள் உத்தமமான ஆனந்த போகங்களை அடைந்தார்கள். அதே கோபாலர்களும் அவைகளைத் தங்கள் பிரிவினுல் இழக்கவேண்டியதாயிற்று. கோபிகைகளும் இழந்தார்கள். இதனுல் மிகவும் வருத்தமடைந்த அந்த பக்தர்கள், உமது நாமகதையின் ஸ்ரவணங்

களினால் தங்களுடைய மனத்தை தேர்த்திக் கொண்டார்கள். நாரத, பிரஹ்லாத, தியாகராஜாதிகளும் அவ்விதம் கலக்க மடைந்து, கடைசியில் தங்களுடைய பாதங்களையே நம்பி வாழ்ந்தவர்களாக ஆறுதல் அடைந்தார்கள். ஸ்வாமி, எனக்கு ஆறுதல் எவ்விதம் யேற்படும்? ஜனன மரண பயங்களை நினைக்கும் போதே, பயமாக விருக்கின்றனவே. அவைகளை அனுபவிக்கும் போது, என் மிருதுவானதும், கோழை நெஞ்சுள்ளதும் அதை எவ்விதம் சகிக்கும்? த்வந்தங்களில் விடுபடும் மனிதன் நிஜமாகவே தீரனாக விருக்கவேண்டும். அதற்கு உன் கிருபையும், லக்ஷ்மியாகிற சக்தி தேவதையின் கிருபையின்றி எனது மாயா மோஹங்களும், அக்ஞானங்களும் எவ்விதம் தீரும்? மஹாசார்யர்களின் பிரஸாதமும் அதற்கு தேவையல்லவோ? எப்போது எனக்கு ஸம்பவிக்கும்?'']

"என் தோழர்களே, கேளுங்கள். என் வார்த்தைகள் ஒருக்காலும் பொய்யாகாதவை. பிராம்மண சேவை, பிராம்மண பூஜை ஆகியவை பகவானைத் திருப்தி அடையச் செய்கிறது. அதுமாதிரி, பிராம்மணனை அவமானம் செய்வது பகவானின் கோபத்திற்குள்ளாக்குகிறது. ஸாதுக்களைப் பூஜிப்பது அனந்தனாகிற விஷ்ணுபகவானைத் திருப்தி செய்கிறபடியால், பகவானைப் பூஜிப்பது போலாகிறது. ஆகையால் ஸாதுக்களை, பகவானை ஆராதிப்பது போல பஜிக்க வேண்டும்." (671)

"இந்திரனுடைய வஜ்ரம், என்னுடைய மூன்று கண்களை உடைய திரிசூலம், காலனுடைய தண்டம், ஹரிபகவானுடைய காலசக்ரம் ஆகியவைகளை அழிக்கமுடியாது. ஆனால் விப்ரர்களிடம் துரோஹம் செய்வதானால் அவைகளும் அக்னியில் பஸ்மமாகிவிடுகின்றன." (672)

"இம்மாதிரி ஞானத்தை மனதில் வாங்கிக்கொள். பிறகு ஜகத்தில் உன்னால் அடையமுடியாத ஸம்பத்துக்கள் துர்லபம் என்று ஒன்றையும் சொல்லுவதற்கில்லை. ஆகையினால் பிராம்மண துரோஹியாக ஆகிவிடாதே. இத்துடன் என்னுடைய ஆசீர்வாதங்களையும் பெற்றுக்கொள். நீ எங்கு வேண்டுமானாலும் சஞ்சரிக்கலாம். ஸர்வத்ரகதி உனக்கு ஏற்படும். உன் போக்குக்களை யாவரும் தடைசெய்ய முடியாது." இவ்விதம் சம்புபகவான் எனக்கு வரங்கள் கொடுத்து அருளிச்செய்தார். கருட மஹாராஜரே, பகவான் சம்பு மஹாகிருபாளு." (673)

பகவான் சம்புவினுடைய வசனங்கள் ஆகாசவாணிமூலமாக என்னாலும், என்குருநாதராலும் கேட்கப்பட்டன. என் குருநாதர்

இவைகளைக் கேட்டு, மிக்க சந்தோஷமடைந்தார். "அவ்விதமே உனக்கு ஏற்படட்டும்" என்று என்னை ஆசீர்வாதம் செய்தார். அதன்பிறகு அவர் எனக்குப் பல உபதேசங்களைச் செய்தார். சிவபெருமானுடைய பாதசரணங்களைத் தரித்துக்கொண்டு, என் பிரபு குருநாதர் என்னிடம் விடைபெற்றுக் கொண்டு தனது கிரஹம் போய்ச் சேர்ந்தார்." (ஹே உமா மஹேஸ்வரர்களே, எனக்கு உங்கள் கிருபையினால் குருப்பிரஸாதம் ஏற்பட வேண்டும்.) (674)

"காலத்தின் ப்ரேரணையினால் நான் சர்ப்ப உருவை அடைந்து, விந்தியாசலத்தில் பிறந்தேன். கொஞ்சகாலம் கழிந்த பின்பு ஒருவித பரிஸ்ரமமின்றி நான் சர்ப்பத்தின் உடலைத் தியாகம் செய்தேன்." (675)

"ஹரிவாகனரே, பகவான் சங்கரரால் அனுக்ரஹித்தபடி நான் எந்த எந்த ஜன்மத்தை அடைந்து மரித்தேனோ, அந்தசமயம் ஒவ்வொன்றிலும் ஒருவித கஷ்டமின்றி நான் எனது சரீரத்தைத் தியாகம் செய்தேன். அனாயாஸமாக மரணமடைந்தேன். எவ்விதம் மனிதன் பழைய கந்தாடையை ஜீர்ணமானபின்பு உதறித் தள்ளுவானோ, அதைப்போல நான் சரீரத்தைவிட்டு, புதிதான ஆடையை அணிவானோ, அதுபோல புதிதான சரீரத்தை அடைந்தேன்." (676)

"இந்தவிதமாக பகவான் சம்புவினால் வேதங்களின் ரக்ஷை செய்யப்பட்டது. நானும் மஹா கிலேசங்களிலிருந்து விடுபட்டேன். பக்ஷிராஜரே, இந்தவிதமாக நான் பல சரீரங்களை எடுத்தும், தியாகம் செய்தும், பகவான் சம்புவின் கிருபையினால் பூர்வஞானம் என்னைவிட்டு அகலவில்லை." (677)

"என்னால் திர்யக் (பக்ஷி) யோனிகளும், தேவதைகள், மனுஷ்யர்கள் ஆகியவர்களின் ஜன்மங்களும் அடையப் பெற்றன. ஒவ்வொரு ஜன்மத்திலும் நான் சிவகிருபையினால் ராமபக்தியைச் செய்துகொண்டு வந்தேன். இவ்விதம் நான் சுகத்தை அடைந்த போதிலும், என்னால் மனத்தில் தைத்த ஒரு சூலத்தின் கடும் வேதனையை மாத்திரம் மறக்கமுடியவில்லை. என் குருநாதருடைய கோமளமான மனத்தையும், சுசீலமான நடத்தையையும், எனக்கு அவர் செய்த பேருபகாரத்தையும் என்னால் மறக்கவேமுடியவில்லை. அவைகளை நான் நினைத்துக்கொண்டு வருத்தப்பட்டவனாக விருந்தேன்." (678)

"கடைசியில் நான் பிராம்மண ஜன்மத்தை அடைந்தேன். பிராம்மண ஜன்மம் வேதபுராணங்களால் அதிதுர்லபமாகக்

கிடைக்கக்கூடிய ஜன்மம் என்று தங்களுக்குத் தெரிந்திருக்கும். நான் சிறுபாலனுகவிருந்த சமயம், ரகுநாயகன் எந்த எந்த இடங்களில் திவ்யமான லீலைகளைச் செய்தாரோ, அந்த இடங்களில் மற்ற பாலகர்களோடு ராமகதையாகிற சீதாராம விளையாட்டுக்களை விளையாடுவேன். ஒவ்வொரு சமயமும் ரகுநந்தனின் திருவிளையாடல்களை அவர்களுடன் விளையாட்டுக்களால் நடத்திக் காண்பேன்.'' (679)

''கொஞ்ச காலத்திற்குப் பின்பு என் பிதா எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தார். அவர் சொல்லிய பாடங்களை நான் அறிந்து கொண்டேன்; கவனமாகக் கேட்டுக் கொண்டேன். தீர விசாரித்துப் புரிந்து கொண்டேன். இருந்தாலும் என் மனம் படிப்பில் ஆசையில்லாததாக விருந்தது. என் பூர்வ வாஸனையின்படி எனக்கு கேவலம் ஸ்ரீராம சரணங்கள் ஒன்றிலேயே பற்றுதலுடன் யிருந்து, என் நினைவுகள் ஸதா அவைகளில் லயித்து இருந்துவந்தன.'' (680)

''கருட மஹாராஜரே, நீரே சொல்லும், எந்த முட்டாளாவது காமதேனுவை விட்டுவிட்டு, கழுதைப் பாலைக் குடிக்க விரும்புவானு? என்னிடம் என் பிதா அதிக அன்பு கொண்டிருந்தார். அதன் காரணமாக அவர் எனக்காக சிரமப்பட்டார். ஆனுல் அவருடைய முயற்சிகள் பலனைக் கொடுக்கவில்லை. என் பிதாவும் என் இஷ்டப்படி விட்டுவிட்டார்.'' (681)

''கொஞ்ச நாட்களுக்குப் பின்பு என் பிதாவும் காலவசத்தினுல் மரணமடைந்தார். அந்த சமயம் நான் பக்தர்களைக் காப்பாற்றும் ஸ்ரீராமச்சந்திரனைப் பஜிப்பதற்காக வனம் சென்றேன். வனத்தில் எங்கு எங்கு முனீஸ்வரர்கள் இருந்தார்களோ, அங்கு அவர்களுடைய ஆஸ்ரமங்களுக்குச் சென்று அவர்களை சந்தித்து வணங்கினேன்.'' (682)

''கருட மஹாராஜரே, அவர்களிடமிருந்து நான் ராமனுடைய குணுமிருதங்களைக் கேட்டுப் பருக ஆரம்பித்தேன். அவர்கள் அந்த ராம கதா ஸுதாவைச் சொல்லச் சொல்ல, நான் இன்பமுற்று அவைகளைப் பருக ஆரம்பித்தேன். இந்த விதமாக நான் ஹரிபகவானுடைய குணேத்தமங்களை முழுவதும் சிரவணம் செய்து, அனுபவிக்க ஆரம்பித்தேன். பகவான் சிவபெருமானுடைய வரப்பிரஸாதத்தினுல் நான் எங்கு விரும்பினுலும் தங்கு தடையின்றி செல்ல ஆரம்பித்தேன். என்னுடைய கதி ஸர்வத்ர இடங்களுக்கும் செல்லும்படியிருந்தது.'' (683)

[தியானம்

ராமா சீதா, தாசரதி, சீதாபிரபோ, நாராயணு, மஹாலக்ஷ்மி நாதா சரணம் சரணம், "உனக்கு ஒப்பான தெய்வம் யார் இருக்கக்கூடும்?" என்று தியாகராஜர் உன்னையே பார்த்துக் கேட்கிறுர். ஏன் என்று தெரியவில்லையா? உன்னுடைய பரஸ்வ ரூபம், அர்ச்சா விபவஸ்வரூபம் கருணை ஒன்றினுலே தான் ஆக்கப்பட்டிருக்கிறது என்கிறதால் அல்லவா உன்னை அவ்விதம் சொல்லுகிறுர்.? உனக்கு வீடு பெருங்கடல்; உனது மனைவி வைதேஹி; உன் ஆயுதம் கோதண்டம்; கிரீஸாதி பிரமன், இந்திரன், சந்திரன், சூரியன் ஆகியவர்கள் வானரர்களாய் அவதரித்து உனக்கு ஸேவை செய்ய வந்தார்கள்; சங்கம், சக்ரம், ஆதிசேஷன் ஆகியோர் உனது தம்பிகளாய் அவதரித்தார்கள். சிவசக்தியின் ஐக்கிய ஸ்வரூபமாகிற ஆஞ்சநேயர் உனது தாஸ்ய ஞகவும் கிங்கரஞகவும் அவதரித்தார். துளசி, தியாகராஜ, கம்பர், வேத வியாஸ, வால்மீகி ரிஷிகள் உன்னைத் துதிபாடும் கவிகளாக அவதரித்தார்கள். நீயோ ராஜ ரிஷியாகவும், நாரதப்பிரியராகவும் வாழ்ந்து வந்தாய். இதைவிட உனக்கு வேண்டிய பெருமைகள் என்ன இருக்கமுடியும்? அதனுல் தியாகராஜர் உன்னைப்பற்றிச் சொல்லும் போது, மும்மூர்த்திகளும் ஒன்றுகூட புகழ்ந்திடும் ராமனுகவும், ஸ்ரீராம குணமே தராசில் வைத்தால் அது சரி நில்பக லேதனி, உன் தட்டுக்குச் சமமாக எதுவுமில்லையென்று சொல்லுகிறுரே, அந்த தியாகராஜ மஹானைப் பணிந்த எனக்கு உன்னுடைய உத்தம தரிசனம் எப்போது கிடைக்கும்?]

நாளடைவில் எனக்கு பவபந்தங்களாகிற மனைவி, கிருஹம், புத்ரபுத்ரி, தனங்கள், மானம் கௌரவம் ஆகியவை என்னைவிட்டு நீங்க ஆரம்பித்தன. ஆனுல் ஒரே ஒரு ஆசைதான் அதி தீவிரமாக வளர்ந்து வந்தது. என் ஜன்மம் ஸ்ரீ சீதாராம ஆஞ்சநேய, லக்ஷ்மண, பரதசத்ருக்ன சரணங்களை எப்போது பார்க்கும்? (நான் எப்போது மேருமலைக்குச் சமமான தைரிய முள்ள கலியுக வரதனை, ரகுவீரனைப் பார்ப்பேன்? என்னைக் கிட்ட கிட்டவைக்கும்; ஒய்யாரமாக நடக்கும்; மேகம் போன்ற காந்தியையும் கம்பீரத்தையும் உடைய என்பிரபு ஸ்ரீராமனை நான் எப்போது காண்பேன்? தீயமனிதர்களைப் பிளப்பவனும், கேசபாசங்கள் அலைகளைப் போல சரிந்து வழியும் அழகுள்ள தலையையும், அதன்மேல் கிரீடத்தையும் அணிந்த) ஸ்ரீராமன் எப்போது என்முன் தோன்றுவார்? ராஜதிலகத்தை அணிந்து கொண்ட ஸ்ரீராமன், கண்ணுடியைப் போன்ற பளபளப்

பாகவுள்ள கன்னப் பிரதேசங்களுடன் சோபிதமான முகத்துடன் கனக பூஷணங்களுடன் ஸ்ரீ சீதையாகிற பிரியதாமினியுடன் எப்போது காக்ஷி கொடுப்பார்? என்கிற ஆசையுடன் வளர்ந்துவந்த நான், "என் ஜன்மம் சபலமடையவில்லையே," என்று வருத்தப்படத் துவங்கிவிட்டேன்." (684)

"நான் யார் யாரிடமோ ஸ்ரீராமனைப்பற்றியும் அவருடைய தர்சனபாக்கியம் அடைவதைப்பற்றியும் கேட்டேன். அவர்கள் எல்லோரும் "ஸ்ரீராமன் ஸர்வ பூதமயமாகவும், ஸர்வாஸூ நிலையராகவுமிருக்கிறார்," என்று பதில் அளித்தார்கள். அப்பேற்பட்ட ஸர்வ வியாபகர், நிர்குணமயஸ்வரூபம் என்மனத்திற்கு ஆசையைத் தரவில்லை. என் மனம் (ஸ்ரீமத்ராமானுஜர் காட்டிய) ஸகுண பிரும்மத்தில் நிலைகொண்டு, அதிப்ரீதியை வளர்த்தது. ஆம். அந்த ஆஜானு பாஹூக்களை உடையவரும் கமலையும், ஆஞ்சநேயாதிகளும் வருடும் திவ்யபதாப்ஜங்களையும் என்மனம் உணர்ந்து, என் கண்கள் கண்டு, என் கரங்கள் ஸ்பர்சிக்க விரும்பியன. ஹா சீதாராம், எனக்கு கிருபை செய்ய மாட்டாயா?" (685)

"சங்கரபகவானுடைய அருட்பிரஸாதத்தினால் எனது குருநாதருடைய வசனங்கள் என் மனத்தைவிட்டு அகலவில்லை. "அடிக்கடி அடிக்கடி ஸ்ரீராம சரணங்களில் மனத்தைப் பதிய வைத்துக்கொள்" என்கிற வசனங்கள் என்னிடம் தினமும் ஆசையை வளர்த்திக்கொண்டு, பிரதிதினமும் புதுப்புது ஆனந்தங்களை என்மனம் அனுபவிக்க ஆரம்பித்தது. ரகுபதியின் குற்றமற்ற கீர்த்திகளை தினமும் நான் ஸப்தஸ்வரங்களுடன் கூடிய ராக தாளத்துடன் நாரத ஆஞ்சநேயாதிகளைப் போல சுத்தமான மனத்துடன் கீர்த்தனம் செய்து இன்புற்றேன்." (686)

"ஸூமேரு பர்வதத்தின் சிகரத்தின் மேல் ஒரு வடவிருக்ஷம் இருந்தது. அங்கு லோமச முனிவர் வசித்து வந்தார். ஒரு நாள் நான் அவருடைய சரணங்களில் விழுந்து நமஸ்கரித்தேன். அவருடைய கருணையை வேண்டி தீனமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தேன்." (687)

"ஹே பக்ஷிராஜரே, அவர் என் வார்த்தைகளைக் கேட்டார். என் மனோபாவத்தை அறிந்தார். எனது வினயநம்ரதிகளைக் கண்டுகொண்டார். மஹா கிருபாளுவாகிற என்பிரபு லோமசர் மீண்டும் என்னைக் கேட்டார். "பிராம்மணா, இங்கு என்ன காரியமாக வந்திருக்கிறாய்?" (688)

அப்பொழுது நான் பதில் சொன்னேன். "கிருபாநிதி, தாங்கள் ஸர்வக்ஞர், பகவான். எனக்கு ஸகுண பிரும்மத்தின் ஆராதனையைப் பற்றி சிக்ஷிக்கவேண்டும். அதன் முறைகளையும் சொல்லவேண்டும்." (689)

"பக்ஷிராஜரே, அப்பொது முனீஸ்வரரான லோமசர் ரகுபதியின் கல்யாண குணங்களைப் பற்றிச் சொன்னூர். அவர் எனக்குள்ள சிரத்தையையும் ஆசையையும் கண்டார். பிரும்மரிஷியாகிற அவர் என்னை ராமமந்திர தாரகத்தைப் பெற அருகதையுள்ள பாத்திரமாகக் கருதி, எனக்கு உபதேசம் செய்ய எண்ணம் கொண்டார்." (690)

"அவர் அத்யந்த கிருபையினுல் பிரும்மத்தைப்பற்றி உபதேசித்தார். அவர் சொல்லிய ஒவ்வொரு வார்த்தை வசனங்களையும் நான் சொல்லுகிறேன். "பிரும்மத்திற்கு நம்மைப்போல ஜனனம் கிடையாது. அத்வைதம் என்று சொல்லப்படுகிறது. நிர்குணமென்றும், ஹ்ருதயத்தில் வசிக்கும் அந்தர்யாமியாகவும் அறியப்படுகிறது. பிரும்மத்தைப் புத்தியினுல் அளவிட முடியாது. அதற்கு விருப்பம் ஒன்றும் கிடையாது. நாமமும் அதற்கு தனியாக கிடையாது. குறிப்பிட்ட ரூபமாகவுமில்லை. ஸ்வய அனுபவத்தினுல் மட்டும் அறியக்கூடியது. அகண்டமானது. அதற்கு உபமானம் சொல்ல முடியாதபடி தனிப்பட்டு கேவலமாக விளங்குகிறது." (691)

"பிரும்மத்தை மனத்தினுலும் இந்திரியங்களாலும் அறிய முடியாது. அதற்கு தோஷங்கள் கிடையாது. அமலனுதிப் பிரான். அதற்கு நாசம் கிடையாது. ஜனன மரணம் ஆகிற மாறுதல்களும் விகாரங்களும் அதற்கு ஏற்படுவதில்லை. அதனுடைய மகிமைகள் கால அளவிலோ, பரிணுமத்தினுலோ, அளவிட முடியாதபடி அனந்தமாக விருக்கின்றன. அத்யந்த சுகத்தை வாரிக் கொடுப்பதாக விருக்கிறது. வேதங்கள் அதைப் பலவிதமாக புகழ்ந்து கூறுகின்றன. தத்வமஸி, நீயே அது என்கிருப்போலும், ஜலமும் அந்த ஜலத்தின்மேல் படரும் அலைகளும் எவ்விதம் இருக்கின்றனவோ, அதுபோல உனக்கும் அந்த பிரும்மத்திற்கும் பேதம் கிடையாது." (692)

"என் பிரபு லோமசர் எனக்குப் பல விதங்களாக உபதேசம் செய்தார். அவரால் பல தடவைகள் சொல்லப்பட்டும், என் ஹ்ருதயம் நிர்குண பிரும்மத்தை அறியமுடியவில்லை. ஒரு நாள் நான் முனிவரிடம் சென்று, தலைவணங்கி, அஞ்சலி பந்தத்துடன் சொன்னேன். "ஸ்வாமி, முனீஸ்வரரே, தாங்கள் எனக்கு

ஸகுண பிரும்மத்தைப்பற்றிய உபதேசத்தைச் செய்யவேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கொண்டேன். (693)

''ஸ்வாமி, என் மனம் ராமபக்தியில் மிக்க ஈடுபாட்டை அடைந்திருக்கிறது. (ஜலத்திற்கும் மீனுக்கும் உள்ள ஸ்நேக பாசத்துடன்) என் மனம் ராமபக்தியில் ஆசையுடனிருக்கிறது. மிக்கக் கெட்டிக்காரராகிய தாங்கள் என்னுடைய ஆசையைப் பூர்த்தி செய்யவேண்டும். எனக்கும் ஸ்ரீராமனுக்கும் உள்ள உறவு பிரிக்க முடியாதது என்று அறிந்துகொண்டும், என்னிடம் தயை செலுத்தியும், பிரபு எனக்கு ஸ்ரீரகுநாதனின் தர்சனம் கிடைக்கும்படி அருள் செய்யவேண்டும். அதற்கு ஏதாவது உபாயம் தாங்கள் செய்யவேண்டும். எனது பூர்ணமான லோசனங்களால் பரிபூர்ண காமனுகிற ஸ்ரீராமனை, ராஜ ஸேகரனை, ரகுகுலபூஷணனை தர்சனம் செய்யும்படி எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்.'' (694)

''ஸ்வாமி, எனது பூர்ணமான நேத்ரங்கள் நிரம்பப்பட்டு, எனது பிரபு அயோத்யா ஈசனுகிற தாசரதி ராமனைப் பார்த்து விட்டு, நான் தங்களிடம் நிர்குண பிரும்மத்தைப்பற்றிய உபதே சத்தை அடைகிறேன். என்னைத் தாங்கள் கிருதார்த்தனுக்க வேண்டும்'' என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டேன். அதைக் கேட்ட அந்த முனிவர் மீண்டும் எனக்கு ஹரிபகவானுடைய குணம்ருதங்களைப்பற்றிச் சொல்லி, ஸகுண பிரும்மத்தின் குறை களைச் சொல்லி, நிர்குணபிரும்மத்தின் பெருமைகளையும் எனக்கு எடுத்துச் சொன்னார்.'' (695)

[தியானம்

ராமாசீதா, கோவிந்தா, உன்னை பிரும்மா முதலானவர்கள் கூட அறியமுடியாமல், உனது ஆத்ம பலத்தைச் சோதிக்க முயன்றிருக்கிறார்கள். விஸ்வபதே, ஜகத்தே, மாருதபுரீசா, கன்றுகளையும் கோபாலர்களையும் பிரித்து ஒரு வருஷம் வரை காத்திருந்த பிரும்மதேவர் கடைசியில் தனது தவறை உணர்ந்த போது, நீ அவருக்கு, ஒவ்வொரு கோபாலரையும் உன்னைப்போல நான்கு கைகள், கேயூர, கடகங்களுடன் பிரகாசிக்கும் கிருஷ்ண உருவத்தைக் காண்பித்தாய். தியாகராஜர் போன்ற மஹான் களுக்கு பெண் உருவமுள்ள சீதையாகவும், கௌரியாகவும், சரஸ்வதியாகவும், ஐந்து பூதங்களில் உறைந்து கிடக்கும் அந்தர் யாமியாகவும், மும்மூர்த்திகளாகவும், கோதண்டராமனுகவும், தம்பிகளுடனும், ஆஞ்சநேய, பிரமுகாதிகளுடனும் காக்ஷி

அளித்தாய். எனக்கு எப்போது எவ்விதம் காக்ஷி அளிப்பாய்? வத்ஸமார்த்தாண்டா, ஸ்ரீ ராஜகோபாலா, தீரா, பவஸாகரோத் தரணீ, ராமஸாரதரா, போகேந்திரசாயின், ஸ்ரீ தாந்தா, ஜகதாத்மா, ரகுராமா, பரமாத்மா, நாரத, வியாஸாதிகளை முன்னிட்டு வணங்கும் என்னை நீயும், சீதையும்தானே ரக்ஷிக்க வேண்டும். ஜ்யோதிர்மய அகண்டைகரூபா, ராமபூதேசா, ஸர்வகிரஹ ஆதார பூதா, ஸச்சிதானந்தமய ஸ்வரூபா, யோகி ஜனஹ்ருதய ஆனந்தா, ராமபோகிஸாயி, கிருஷ்ண ரஸபூர்ண நேத்ரா, அன்யத்ரம் உன்னை விட்டு இல்லை; உன்னை விட்டு எனக்கு கதி இல்லை. ஜானகி பதி என்று வணங்கும் என்னை ஸ்வீகரிக்கமாட்டாயா?]

"அப்பொழுது ராமதர்சனத்தில் திருஷ்ணை கொண்ட நான் அவருடைய நிர்குண கொள்கைகளை கண்டனம் செய்து, ஸகுண பிரும்மத்தின் உத்தம குணோத்தமங்களைச் சொல்ல ஆரம்பித்தேன். அவரால் சொல்லப்பட்ட ஒவ்வொரு வாதத் திற்கும் பிரதி உத்தரம் கொடுத்து, நான் அவருடன் வாதாடி னேன். கருடமஹாராஜரே, அவரால் இதைத் தாங்க முடிய வில்லை. மிக்க க்ரோதம் கொண்டு, அவர் என்னை முழித்துப் பார்த்தார்." (696)

"அப்பொழுது வருத்தமடைந்த நான் அவரிடம் மிக்க தாழ்மையுடன் சொன்னேன். "ஸ்வாமி, தாங்கள் என் மீது தாபப்படவேண்டாம். அவமானத்தைப் பொறுக்கமுடியாத ஞானியிடம் கூட கோபமும், க்ரோதமும் ஏற்படுகிறது. மிக்க குளிர்ச்சியாகவுள்ள சந்தனக்கட்டையை அழுத்தித் தேய்த்தால், அக்னி ஏற்படுகிறது ஸர்வ ஸஹஜமன்றோ?" (697)

"அப்பொழுதும் கூட என் பிரபு என்னுடன் வாதாடினர். அவர் தன் கோபத்தையும், க்ரோதத்தையும் விடவில்லை. பலவிதங்களால் நிர்குண பிரும்மத்தின் ஞானத்தை விவாதித்து, அடிக்கடி அடிக்கடி நிரூபணம் செய்தார்." நான் எனக்குள் எண்ண ஆரம்பித்தேன். "இந்த இரண்டு பிரும்மங்களின் ஸ்வரூபங்களை அடிக்கடி அடிக்கடி சிந்திப்பவனாக, ஸதா பரபிரும்ம ஞானத்தில் ஆழ்ந்திருந்தேன். அநேகவிதங்களாக பகவானின் ஆத்ம ஸ்வரூபத்தை (அன்று பிரும்மதேவர் கன்று களையும், கோபாலர்களையும் குகையில் அடைத்து வைத்து, எவ்விதம் காண ஆசை கொண்டாரோ, அதைப்போல) நான் அறிய விரும்பினேன்." (698)

"வேற்றுமை கொண்ட த்வைத புத்தி, அக்ஞானத்தினுல் ஏற்படும் பேதபுத்தி ஆகியவைகளால் அன்ருே, கோபம், க்ரோதம் ஏற்படுகிறது. (அன்று பிரும்மதேவர் கோபாலர்களை யும், கன்றுகளையும், ஸகல ஜகத்தையும் ஒரே கிருஷ்ண மயமாக பார்த்தாரே, அதுபோல) நாமும் இந்த ஜகம் முழுவதையும் ஸகுண பிரும்மமயமாக ஏன் பார்க்கக்கூடாது? மாயையின் வசம் அடைந்த ஜீவன், ஆத்ம ஸ்வரூபத்தை யிழந்தவனுக, தன்னை ஈஸ்வரனுக, "ஹம்ஸோஹம்," "அஹமஸ்மி," "ஸோஹமஸ்மி," "பிரும்மாஹமஸ்மி" என்று தன்னை பாவித்துக் கொள்கிருன். அதேபோல ஜடசேதனங்களும் ஈஸ்வரமயமாக ஆகக் கூடுமோ?" (699)

"நான் ஸர்வஹிதகாமியாக விருந்து, ஸர்வலோக யோக க்ஷேமத்தை அனுஸந்திப்பேனுகில், என்னுல் பிறர்களுக்கு எவ்விதம் துக்கம் ஏற்படப்போகிறது? என்னைப்போல மற்றவர்களும் செய்வாராகில், ஸம்சார துக்கம் எவ்விதம் ஏற்படும்? மனேன்மணியாகிற சிந்தாமணியைக் கையில் வைத்துக்கொண்டு, ஒரு மனிதன் தரித்திரத்தால் கஷ்டப்படக் கூடுமோ? பரத்ரோஹம் ஒன்றையே விரதமாகக் கொண்டிருப்பவன் பயமில்லாமல் வாழமுடியுமா? காமியாக வாழும் மனிதனே ஸ்திரியோ களங்கமில்லாமல் எவ்விதம் வாழமுடியும்?" (700)

"அக்னி ஸ்வரூபமாகிற பிராம்மணனை துர்புத்தியுடன் நடத்துகிறவர்களுக்கு வம்ச விருத்தி ஏற்படுமா? ஜீவாத்ம ஸ்வரூப ஸ்வபாவங்களை அறியாமல் கர்மங்களில் ஸித்தியோ, வெற்றியோ எவ்விதம் அடையக்கூடும்? தெய்வசகாயமின்றி, எல்லாக் காரியங்களிலும் வெற்றி பெறக்கூடுமா? துஷ்டர்களை அடைந்த மனிதனுக்கு நல்லபுத்தி எவ்விதம் ஏற்படும்? பரஸ்திரி கமனம் கொண்ட புருஷனுக்கு உத்தம கதி ஏற்படுமா?" (701)

"பரமாத்மாவின் பாத ருசியைக் கண்ட ஜீவனுக்கு ஜன்ம மரண சுழல்களாகிற ஸம்சார சுழல் என்ன செய்யக்கூடும்? ஸர்வ பாபங்களை ஸம்ஹரித்து பக்தர்களின் இடையூறுகளைப் போக்கும், ஸர்வேஸ்வரரான ஹரிபகவானை நிந்தனை செய்பவர்கள் எங்கேயாவது நிரந்தரமான சுகத்தை அடையக்கூடுமா? ராஜ தர்மத்தை அறியாத புருஷனுக்கு ராஜ்ய லாபம் கிடைத்து யாது பிரயோசனம்? பகவானுகிற ஹரியினுடைய கதாமிருதங்களைக் கேட்பவனுக்கு எங்கேயாவது பாபங்கள் ஸம்பவிக்குமா?" (702)

"ஸுக்ருதங்களால் யேற்படும் புண்ய லாபத்தினுல் அல்லவோ சுபமான கீர்த்திகள் ஏற்படும். பாபமின்றி எவ்விதம்

அபகீர்த்திகள் ஏற்படும்? (நாரத வால்மீகி வேத வியாஸாதிகளால் ஸந்ததமும் புகழப்படும்) என் பிரபு ஹரிபகவானை, புராண புண்ய புருஷனை, ஸாதுக்கள் அடிக்கடி அடிக்கடி முயற்சித்துக்கொண்டு, ஸந்ததமும் தங்களது ஆத்ம குகையில் கிளியைப் போல தேக்கி, அடைத்து வைத்திருக்கும் மரகதஸ்யாம நிறமுள்ள சுபாங்கரான ஸ்ரீமந் நாராயணரை, பாவனமாக மனத்தினால் அறியமுடியாத போனால் அவனுக்கு எந்த லாபம் மஹத்தான ஐஸ்வர்யமாக விருக்கும்?'' (சீதை, யசோதை, அர்ஜுனன் போன்ற மஹானுபாவர்கள் பொன், ரத்னங்களை வெறுத்து, சம்பாதிப்பதற்கும், காப்பாற்றுவதற்கும், அனுபவிப்பதற்கும் மிக்க விரும்பத்தக்க தனஞ்ஜயரான விஷ்ணு பகவானை விட்டுவிட்டு, விரும்பத்தக்கதாக வேறு ஐஸ்வர்யங்களை அவர்கள் பெரிதாக நினைக்கவில்லையே.'' (703)

''ஸர்வ ஸ்ரேஷ்டரே, ஜகத்தில் பிறவி எடுத்து மனுஷ்ய உருவம் கொண்ட ஒருவனுக்கு, கோபமில்லாதவனும், சாந்தனும் கருணாமூர்த்தியும், அபராதிகளையும் காப்பாற்றுவதில் ஊர்ஜித சாஸனராகவிருக்கும் என் பிரபு ஸ்ரீராமனைப் பஜிக்காமல் ஜீவ வாழ்க்கையை நடத்துவானாகில், அவனுக்கு என்ன ஜன்ம லாபம் ஏற்படக்கூடும்? மஹத்தான தீங்கு அல்லவோ ஸம்பவிக்கும்? (பராசராதிகளால் அனவரதமும் கொண்டாடப்படும்) லக்ஷ்மி நாதனாகிற ஜானகி நாதனைப் பஜிக்காமல் அவன் எவ்விதம் நிரந்தர சுகங்களை அடையமுடியும்? கோள் சொல்லுவதைப் போலவும், துரோஹ சிந்தனையுடன் இருப்பதைப்போலவும் வேறு என்ன பாபம் மஹத்தாக இருக்கக்கூடும்? பூததயையை விட என்ன தர்மம் பெரிதாக விருக்கக்கூடும்?'' (704)

''இந்தப் பிரகாரம் நான் அடிக்கடி அடிக்கடி ராம கல்யாண குணங்களை (ராமானுஜாதிகளைப் போல) சிந்தித்துப் பார்த்தேன். என்னுடன் கூடவிருந்த லோமச முனிவரிடமும் சொல்லிப் பார்த்தேன். மிக்க வினயத்துடன் சொல்லிப் பார்த்தேன். நான் ஸகுண பிரும்மத்தின் கல்யாணச் சிறப்புக்களை அடிக்கடி அடிக்கடி சொல்ல ஆரம்பித்தேன். ஆனால் அந்த மஹா முனிவருக்கு என் தர்க்கவாதங்கள் பிடிக்கவில்லை, அதிவிரோத மூர்ச்சிதராக விருந்த அவர் என்னைப் பார்த்து கடும் வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார்.'' (705)

[தியானம்

நாராயணா, சீதாபதி ராமா, உன்னைச் சரணம் என்று வந்து அடிபணிந்தேன். ஹே பவானி, ஜகத்பதே முராரி, தேவர்கள்

உன்னுடைய சங்கல்பத்திற்கு அடங்கி நடப்பது போல, நானும் நடந்து வருகிறேனே. ஸாது ஜன பிரியா என்றும், ஸஜ்ஜன ஜீவனு என்றும் உன்னை தியாகராஜர் சொல்லுகிருரே, அந்த "ஸாது" என்கிற அர்த்தத்திற்கு உன் திருவுள்ளப்படி நடப்பவன் என்றுதானே அர்த்தம். நல்லதோ, கெட்டதோ, உனது கிருபையை என்றும் நம்பிவாழும் பக்தர்கள், ஜகத்தையும் அதன் பிரவிருத்தி நிவிருத்திகளில் உதாஸீனர்களாக விருக்கிருர்கள் அன்ருே? அந்த பலம் உன் ஆதரவினுல் தான் அல்லவோ அவர்களுக்கு ஸித்திக்கிறது. நான் எதை அடைந்தாலும், அடையாவிட்டாலும், இதுவும் உனது திருவுள்ளம் என்று நடக்க சித்தமாயிருக்கிறபோது, என்னிடம் மாத்திரம் உனக்கு ஏன் இந்த பராங்முகம்? ராமா, தாசரதே, காமாக்ஷி, கருணு கடாக்ஷி, என்று அனவரதமும், கடைசியிலும் சொன்ன எங்களைப் பார்க்கக்கூட மாட்டாயா? ராஜ ஹம்ஸம் போல விருக்கும் உனக்கு என் தாபங்கள் தெரியுமா? நாரதரைப் போன்ற மஹாத்மாக்களின் வழியை பின்பற்றி வாழும் எனக்கு யார் சமாதானம் சொல்லுவார்கள்?]

"அடேமுடா, என்னுல் சொல்லப்பட்டதும், அதிம்ருது பரம உத்தமமான ராஜவித்யையாகிய தத்வம் ஹிதம் புருஷார்த்தத்தை நீ உல்லங்கனம் செய்கிருய்? ஒவ்வொரு உத்தரத்திற்கும் பிரதி உத்தரம் கொடுப்பவனுக நீ என்னை அலக்ஷ்யம் செய்கிருய். ஸர்வோன்னதமான என் வசனங்களில் நம்பிக்கை யில்லாதவனுகக் காணப்படுகிருய். என் வார்த்தைகள் நிஜஸத்யம் என்று அறிய மாட்டாதவனுக விருக்கிருய், உன்னுடைய நடத்தை யாவரையும் நம்பாமல் வாழும் காக்கையைப் போல விருக்கிறது." (706)

"அடே மூர்க்கனே, உன்னுடைய ஹ்ருதயம் ஸ்வபக்ஷம் வாதிக்கும் பக்ஷவாதியைப்போல விசாலமாகபடர்ந்திருக்கிறது. உனக்குப் பிறர்களை சகிக்கும் தன்மையில்லை. அதனுல் பக்ஷிகளுள் நீசமானதும், சண்டாள பக்ஷியாகிற காக்கையின் உருவத்தை நீ அடைவாய்," என்று சாபமிட்டார். "ஹே கருடரே, நான் ஆனந்தத்துடன் அந்த சாபத்தை ஏற்றுக் கொண்டேன். அதனுல் நான் பயத்தையோ தீனத்தன்மையையோ அடையவில்லை." அவரை வணங்கிக் கொண்டு, பகவானுடைய கோடூரமான நெஞ்சின் ஸங்கல்பத்திற்கு ஹரி, நாராயண பக்தன் எவ்விதம் அடங்கி, க்ரோதம், மதம், லோபம், மாத்ஸர்யம், அசுபமான புத்தி, ஆகியவைகளால் நிரம்பப்படாத

வைஷ்ணவ பக்தன் எவ்விதம் வாழ்வானோ, அதைப் போல கருடரே, நான் என் மனத்தை அடக்கிக்கொண்டு, நாராயண ப்ரீத்யர்த்தம் வாழ்ந்தேன், வாழ்ந்து வந்தேன்.'' (707)

"பகவான் லோமசருடைய சாபத்தினால் உடனேயே நான் வாயஸமாக மாறினேன். அடிக்கடி அடிக்கடி அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தேன். ஸ்ரீரகு குலமணியாகிற ஸ்ரீராம சரணங்களை நினைத்தேன். பரம சந்தோஷத்துடன் நான் உயரக் கிளம்பினேன்.'' (708)

பகவான் சம்பு உமையிடம் சொன்னார். "பிரியதம உமா, ரகுவரன், சுபகரன், பக்தஜன பரிபாலன், நகதரன், மஹாபுண்ய கர்மங்களினால் அடையப்படும் என் பிரபு ரகுவம்ச நாயகனாகிற ஸ்ரீராம சரணங்களில் ஈடுபடும் பக்தனுக்கு காமம் ஏது? க்ரோதம் ஏது? அவனுக்கு என்று தனிப்பட்ட ஸங்கல்பம் ஏது? அவன் ராமனுடைய திருவுள்ளப்படி நடப்பவன், "ராமன் ஸதா ஹிதத்தையே செய்பவன்,'' என்று தீவிர நம்பிக்கை உள்ளவன், எதற்கு அஞ்சவேண்டும்? அவன் ஜகம் முழுவதையும் ஜகந் நாராயணனாக, வாஸுதேவ மயமாக; ஒரே அம்ருதமயமாக வல்லவோ பார்க்கிறான். அவனுக்கு ஏன் விரோதம் ஏற்படப் போகிறது? அவன் உலகத்தை ராம மயமாக வல்லவோ பார்க்கிறான்.'' (709)

காகபுசுண்டி மீண்டும் கருடனை நோக்கிச் சொன்னார். "கருடரே, பக்ஷிராஜரே, யாரை இந்த விஷயத்தில் குற்றம் சொல்லமுடியும்? அந்த ரிஷியைத் தோஷம் சொல்வதில் யாது பயன்? என் பிரபு, ரகுவம்சபூஷணனாகிற ஸ்ரீராமன் அந்தர்யாமி யாக விருந்து ஒவ்வொருவருடைய மனதிலும் குடிகொண்டு காரியங்களில் தூண்டுகிறான். கிருபாஸிந்துவாகிற முனியி னுடைய மனதும் அவ்வாறே தூண்டப்பட்டிருக்கிறது. அவரே அம்முனிவரின் ஹ்ருதய குகையில் உட்புகுந்து என் பிரேமை பக்தியைச் சோதிப்பதற்காக அவ்விதம் செய்திருக்கிறார்.'' (710)

"பகவானுக்கு எவன் மனம், கர்மம், வசனம் ஆகியவற்றில் உண்மையான பக்தன் என்று தெரியும். அதனால் அவர் முனி யினுடைய மனத்தைக் கலக்கி அவரை அவ்விதம் சபிக்கும்படி தூண்டியிருக்கிறார்; அதே முனிவர் என்னுடைய மன அமைதி யையும் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போய்விட்டார். என்னுடைய விசேஷ பக்தியையும் ஸ்ரீராம பாதங்களில் நான் வைத்திருக்கும் அதிசயமான விஸ்வாஸத்தையும் அவர் கண்டார்.'' (711)

"அடிக்கடி அடிக்கடி என்னையும் என்மன சாந்தியையும் அந்த முனிவர் கண்டு பச்சாதாபப்பட்டார். என்னை ஒருநாள் மரியாதையுடன் கூப்பிட்டு அனுப்பித்தார். அவ்விதம் என்னை அழைப்பித்து, பாரிதோஷகமாக என்னை ஆஸ்வாஸப்படுத்தி, அதனால் மனம் சந்தோஷம்கொண்டவராக எனக்கு ஸ்ரீராம மந்திரத்தை தீக்ஷை செய்தார்." (712)

"பிரபு கிருபாளுவாகிற என்குருநாதர் எனக்குப் பாலராமச் சந்திரனைத் தியானம் செய்வதற்குக் கற்றுக்கொடுத்தார். அடிக்கடி என்மீது கிருபையை வர்ஷிப்பவராக அவர் அந்த தியானத்துக்குரிய விதிகளை எடுத்து உரைத்தார். அழகானதும் சுகத்தைத் தருவதுமான அந்த தியானபூர்வமான தீக்ஷை எனக்கு பரமானந்தத்தை அளித்தது. இந்த தியானத்தின் ஆனந்தத்தையும் அதனுடைய மகிமைகளையும் நான் தங்களுக்கு விவரமாக ஏற்கனவே சொல்லியிருக்கிறேன்." (713)

"லோமசமுனிவர் என்னைத் தன்னிடம் சிலநாட்கள் தங்கும்படி நியமித்தார். அப்பொழுது அந்தபிரபு "ராமசரித மானஸம்" என்கிற காவியத்தை எடுத்துச் சொன்னார். நானும் மிக்க ஆர்வமுடன் அந்தக் கதைமுழுவதையும் கேட்டேன். அதன்பிறகு முனிவர் மிக்ககிருபையுடன் அழகான வாணியில் எனக்குச் சொன்னார்." (714)

"என் பிள்ளாய், "ஸ்ரீராமசரித மானஸம்" அதிரஹஸ்யமான கிரந்தம். இந்த அழகான கதையை நான் பகவான் சிவனுடைய பிரஸாதத்தினால் அடைந்தேன். உன்னைப் பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய நிஜமான பக்தன் என்று தெரிந்துகொண்டு உனக்கு அந்த கதையை விஸ்தாரமாக எடுத்து உரைத்தேன்." (715)

"பிள்ளாய் எந்த மனிதனுக்கு ஸ்ரீராமபக்தி ஏற்படவில்லையோ, அவன் முன்னால் இந்தக் கதையைப் பிரகடனப்படுத்தாதே. அந்த முனீஸ்வரர் பலவிதங்களால் ஸ்ரீராமனுடைய பெருமைகளையும், ஸ்ரீராமசரித மானஸ்ஸின் பெருமைகளையும் எடுத்து உரைத்தார். அவைகளை நான் மிக்க சிரத்தையுடன் கேட்டு முனியை ஆனந்தித்து அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தேன்." (716)

[தியானம்

ஹே முகுந்தா, அச்யுதா, மாருதகேஹதீசா, உன்னைக் காண விரும்பினேன். ஆனால் உனது சங்கல்பமோ வேறுவிதமாக

விருந்தது. உன் அம்ருத கடாக்ஷவர்ஷங்களால் கோபாலர்களையும், பசுக்களையும் காளிங்கனுடைய விஷத்தினுல் ஏற்பட்ட மரணத்திலிருந்து காபாற்றினுய். ஹே ராமா, ஆனுல் என்னிடம் மாத்திரம் உனக்கு தயை பிறக்கவில்லை. நாரத ருத்ராதிகளால் சிக்ஷிக்கப்பட்ட எனக்கு உன் ஆறுதலும் பிரேமையும் வரண்டதாகிவிட்டது. கருணுஸாகரம், அச்யுதன், என்று காளிங்கன் முதல் புகழும்படி நீ பெயரை அடைந்திருக்கிருய். உமையைப் பின்பற்றின எங்களிடம் மாத்திரம் உனதுதயையாகிற சந்திரனே உதிக்கவில்லை. கடல்போல ஞானத்தை உடையவனுகவும் ஆயிரம் ஸ்ரோத்திரங்கள், கண்கள், வாய்கள் பாதங்கள், கைகள் உள்ளவனுகவுமிருக்கிருய். என் விஷயத்தில் மாத்திரம் உன் ஹ்ருதயகபாடம் மூடிக்கொண்டிருக்கிறது. இதற்கு நானல்லவோ காரணமாகவிருக்கவேண்டும். அவ்விதமிருக்கும் போது தியாக ராஜர் உன்னைப் பார்த்து "ராமா, உனக்குச் சமமானவர் யார்?" என்று சொல்லுகிருரே; நாராயண பட்டத்ரி "அச்யுதா" என்று சொல்லுகிருரே. இவர்களுடைய பதபிரயோகங்கள் என்னை உன்னிடம் மோஹமடையச் செய்கின்றனவே. உன்னை அருள் பிரகாசன், மௌனசித்தர்க்குள் வாஸன், முருகேசன், ஸ்வயம் பிரகாசன், ஜகதீசன் என்று பலமுறைகள் சொல்லியும், உன் பாதங்களை பன்முறை நமஸ்கரித்தும், என் சித்தம் ஏன் கவலை தீர்ந்தபாடில்லை? புரந்தரவிட்டல், "ராம மந்திரம்" ஸகல வேதஸாரம், மூலமந்திரம், பக்திரஸத்தைத் தருவது என்று சொன்னுர். அதைக் கடைப்பிடித்த எனக்கு மாத்திரம் அது அனுக்ரஹம் செய்யவில்லை. இருந்தாலும் பெரியோர்களின் வாக்கியங்களை நம்பிக்கை உள்ளவனுக, உன்னைத்தான் சரண் புகுந்து, நீதான் ஸகல ஆகமஸாரம், எனது யோக விசாரம் என்று சொல்லுகிறேன். எனக்குப் பரம சாம்பவன் என்று உன்னைக் கூறுகிறேன். தயைசெய்ய மாட்டாயா?]

"என் பிரபு குருநாதர் என் தலைமேல் பாரி தோஷமாக கரகமலங்களை வைத்து, என்னை ஆசீர்வதித்தார். அவருடைய கருணை பொருந்திய ஆனந்தம் மட்டற்றதாக விருந்தது. தீனனுன என்னைப் பார்த்து, தன்னை ஆனந்தித்துக் கொண்டவராக, பிரபு என்னிடம் மீண்டும் சொன்னுர். "உனக்கு ராம பக்தி என் கிருபையினுல் அதிகமாக வளரட்டும்; அந்த ராம பக்தி வெள்ளமாய்ப் பெருகி, உனக்கு ஸத்கீர்த்தியை அளிக்கட்டும்." (717)

"நீ ராமனுக்கு ஸதா பிரியனாக விருக்கக்கடவாய். உன்னிடம் ஸகல கல்யாண குணங்களும் வந்து சேரட்டும். சுபமானதும், மானரஹிதமாகவும், உன் இஷ்டப்படி ரூபம் தரித்துக் கொள்வதற்கு சக்தியும் உன்னிடம் வந்து சேரும். உனது இஷ்டப்படி ம்ருத்யு நீவிரும்பும் சமயம் வரட்டும். உனக்குப் பரபக்தி, பரஞான, பரமபக்தி ஏற்பட்டு, ராமானுவர்த்தியினால் வைராக்ய சீலனாக நீ விளங்குவாய்." (718)

"இது மாத்திரமில்லை. இன்னமும் உனக்கு நல்லவரங்களைக் கொடுக்கிறேன். எந்த ஆஸ்ரமத்தில் நீ வசிக்கிறாயோ, அந்த ஆஸ்ரமத்தின் ஒரு யோசனை தூரம்வரை அக்ஞானமோ அமங்களமோ, மாயா மோஹங்களோ ஏற்படாது. நீ ஸதா பகவான் ஸ்ரீராமனுடைய தியானத்தில் காலம் கழிக்கக்கடவாய்." (719)

"கலிகாலத்தின் கர்ம தோஷங்கள் உனக்கு ஏற்படாது. கர்மங்களில் பாபம் ஏற்படாது. இயற்கையாகவே குணங்களையும் தோஷங்களையும் விட்டு, கர்மங்களால் ஏற்படும் கிலேசங்களும் தாபங்களும் உன்னை அணுகாது. மனத்தில் சந்தோஷம் கொண்டவனாக, ராமனுடைய திருவிளையாடல்களின் ரஹஸ்யங்களையும், குப்தமாகப் புதைக்கப்பட்டிருக்கும் இதிஹாஸ புராண ரஹஸ்யங்களையும், உள்ளது உள்ளபடி எனது அனுக்ரஹத்தினால் அறிவாய். உனது மனத்தில் சந்தேகங்கள் ஒன்றும் ஏற்படாமல் நிச்சய புத்தியுடன் ராமபக்தியை வளரச்செய்து கொண்டு வருவாய்." (720)

"எனது அருளினால் திவ்யசக்ஷுஸ் பெற்றவனாக எல்லா ரஹஸ்யங்களையும் ஒருவித சிரமமின்றி சுலபமாக அறிவாய். உனக்கு ஸ்ரீராம பாதங்களில் பிரேமை, அன்பு தினந்தோறும் வளர்ச்சி அடைந்து சிரஞ்சீவியாக மோக்ஷ காங்கிஷிதனாக (தியாகராஜாதிகளைப் போல கருடாகமன வரதனைப் பற்றி 'ஸ்ரீராமா' 'மனோஹரா', 'ஆஸ்ரிதஹ்ருதய விஹாரா', 'ரகுவர தீரா', 'கருணா காகுத்ஸா' என்று) எப்பொழுதும் ஸ்ரீராம கீர்த்தனங்களைப் பாடி ஆடி மகிழ்ந்து மனம் கசிந்து பிறர்களை ஆனந்திப்பாய். உன் மனத்தில் எது நடக்கவேண்டும் என்று எண்ணுகிறாயோ, அதுவும் என் கிருபையினால் நடந்தே தீரும். உனக்கு ஹரிபகவானின் பிரஸாதம் பூர்ணமாகக் கிடைத்திருப்பதால் துர்லபமகவும், கிடைக்கக்கூடாத விஷயமும் ஒன்றுமிருக்காது. உனக்கு எனது பரிபூர்ண ஆசீர்வாதங்களைக் கொடுத்திருக்கிறேன். நீ போய்வா" என்று என் பிரபு, லோமசர், (நாரத குருஸ்வாமி வால்மீகியையும், தியாகராஜாதி

களையும் எவ்விதம் ஆசீர்வதித்தாரோ, அதுமாதிரி) என்னை ஆசீர்வதித்தார்.'' (721)

காகபுசுண்டி கருடனைப் பார்த்துச் சொன்னர். "கருட மஹாராஜரே, மீண்டும் கேளும். முனியினுடைய பரமபவித்திர மான ஆசீர்வாதங்களைக் கேட்ட நான் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கையில் ஆகாயத்தில் கம்பீரமான மேகத்வனியைப் போல ஆகாசவாணி ஒன்று என்னுல் கேட்கப்பட்டது. "இந்த முனீஸ்வரர் சொல்லியபடி எல்லாம் உனக்கு நடக்கட்டும். இவன் கர்மம், வசனம், மனம் ஆகிய மூன்றிலும் என்னுடைய ஸத்பக்தன்.'' (722)

"நான் அந்த வசனங்களைக் கேட்டேன். என் மனத்தில் ரோமாஞ்சலியுடன் கூடிய ஆனந்தம் ஏற்பட்டது. பிரேமை வெள்ளத்தில் மூழ்கியவனுக, நான் சகல சந்தேகங்களும் ஒழிந்தவனுக, ஒரே ராமரஸத்தில் மூழ்கியிருந்தேன். அதன்பிறகு முனீஸ்வரரை அடிப்பணிந்தேன். அவருடைய ஆக்ஞையைப் பெற்று, அவருடைய பாதபங்கஜங்களில் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரித்தேன்.'' (723)

"மிக்கச் சிறந்த சந்தோஷத்துடன் நான் இந்த ஆஸ்ரமத் திற்கு வந்து சேர்ந்தேன். ஸ்ரீராம பிரசாதத்தினுல் துர்லபமாக அடையக்கூடிய வரங்களை நான் அடைந்தேன். பக்ஷிராஜரே, நான் இங்கு வந்து வாஸம் செய்து இருபத்தேழு கற்பங்கள் ஆகிவிட்டன.'' (724)

"இங்கு வந்தது முதற்கொண்டு ஸ்ரீ ரகுபதியின் குண விலாஸங்களில் ஈடுபட்டு, ஸுஸ்வரமயமாகப் பாடி ஆனந்த மடைகிறேன். ("ஹே ராமா, நீதான் பாக்யமுள்ளவன். ஸ்ரீகரா, கருணுஸாகரா, துளசிதாஸ, கம்பர், காகபுசுண்டி, கருடர், தியாகராஜாதிகளால் சூழப்பட்டு, ஏக ஹ்ருதயமாக நித்யானந்த மாகிற சுகத்தை நீ அவர்களுக்கு அளித்து, நீயும் இன்புறுகிருய். எவ்விதம் சீதைக்கு உனது ஸௌந்தர்யப் பூர்ணமான திருமுக மண்டலத்தைப் பார்க்க விருப்பமோ, அதுபோல இந்த பக்தர் களுக்கு நீ அருள்வரதனுக விருக்கிருய். நீயும் எனக்கு வரகுண ஆனந்தத்தை அளிப்பாயா? ஆஞ்சநேயரால் அனுபவிக்கப்படும் உனது சரண திருவடிகளின் சுகத்தை எனக்கு அளிப்பாயாக.'') "எப்போதைக்கெப்போது என் பிரபு ரகுவீரன் அயோத்தியில் ஜனனம் எடுத்து மானிட சரீரத்துடன் அவதரிப்பாரோ, (725)

நானும் அந்த சமயங்களில் அயோத்திக்குச் சென்று, ஸ்ரீராமனுடைய நகரத்தில் வசித்து, அவருடைய பாலலீலைகளைக்

கண்டு ஆனந்திப்பேன். அதன் பிறகு பகவானுடைய பால ரூபத்தை மனத்தில் தரித்துக்கொண்டு, எனது ஆஸ்ரமத்திற்கு வந்து சேருவேன்.'' (726)

''கருடமஹாராஜரே, எந்தவிதம் எனக்கு வாயஸரூபம் கிடைத்தது என்கிற ஆத்மகதையின் விருத்தாந்தங்களை முழுவதும்நான் தங்களுக்குச் சொல்லிவிட்டேன். பிள்ளாய், ஸ்வாமி, தங்களால் கேட்கப்பட்ட சகல கேள்விகளுக்கும் தகுந்த பதில் என்னால் முடிந்தவரை கொடுக்கப்பட்டது. ஸ்வாமி, ஸ்ரீசீதாராம பாதங்களில் ஈடுபடும் பக்தி ரொம்ப அகாதமாகவும், அதிக மகிமைகள் கொண்டதாகவும் இருக்கின்றது. ஸகல ஆனந்தத்தையும் முடிவில் கொடுக்கிறது.'' (727)

(''ஸ்ரீகாந்தா, என்னிடமும் இவ்விதம் அனுக்ரஹ உள்ளத்துடன் இருப்பாயா? ஸந்ததமும் இருப்பாயா!'')

[தியானம்

ஹே சீதாராமா, நாராயணா, மாருதகேஹபதே, பரிபாஹி மாம், பரிபாஹிமாம் என்று அழைக்கும் உன் புத்ரனைப் பார் அம்மா. நாராயணா, கைங்கர்ய லக்ஷ்மி, உங்களுடைய ஸ்வரூபம் பொறுமை, கைங்கர்யம், கருணை என்று விளம்பரம் செய்வதற்காக நீங்கள் அவதரித்தீர்களா? பொறுமையை யாரிடம் காண்பிக்க வேண்டும்? அபராதிகளிடம் காண்பிப்பது உமது குணத்தின் சிறப்பைப் பெருக்கும். நான் தோஷமுள்ளவன் என்று பறைசாற்றிக் கொண்டு, என்னை விளம்பரம் செய்து கொண்டு, ஸாதுக்களுடன் வாழ்கின்ற என்னை பொறுமையாகிற தவத்தை அடையச் சொல்கிறபோது உனது கருணைக்கு தொழில் இல்லாதுபோயிற்றே. உமக்கு கைங்கர்யம் செய்துவாழும் நம்மாழ்வார், நாத முனிகள்கூட பொறுமையைக் கடைப்பிடித்ததாகவும் கடைசியில் பொறுமையை இழந்தவர்களாகவும் காணப்பட்டார்களே. அதிதுச்சமான ஜன்மத்தை அடைந்த என்னிடம் எவ்விதம் குணக்குறை இல்லாமல் போய்விடும்? ராமகிருபாளு, கைங்கர்யானுவ்ருத்தியை லக்ஷ்மிதனமாகக் கொண்ட ராமானுஜனும் உமது சங்கல்பத்திற்கு அனுசரணையாக விருந்ததைப் பார்த்தால், உம்முடைய நிஜ ஸ்வரூபம் பரத்வமும் ஸர்வ ஸ்வாமித்வமும், ஸர்வ ஸ்வதந்திரத்வமும்தானே. நீரே அர்ஜுன தர்மபுத்ராதிகளிடமும் தாழ்ந்து நிற்காதபோனால், அவர்களால் தான் என்னசெய்ய முடிந்திருக்கும்? பக்த பராதீனம் என்கிற ஸௌலப்யமும், தாழ்மை அடைந்த ஹானி உமக்கு ஏற்பட்

டிருக்குமே? ஸ்வாமி, இன்னமும் உமது சோதனையில் என்னை உட்படுத்தலாமா? சோதிவாய் மலர்ந்திடமாட்டாயா?]

"இதனால் அல்லவோ இந்த வாயஸரூபம் எனக்கு மிகப் பிடித்தமாகவிருக்கிறது. கருடரே, இந்த காக்கை உருவத்தினால் ராமதர்சனம் ஏற்பட்டது. ராமதர்சன லாபத்தை அடைந்த நான் ராமப்ரேமையை எவ்விதம் விட்டுவிடமுடியும்? இவ்விதம் ராம பக்தியை அடைந்த எனக்கு ஸ்ரீராமனுடைய பரத்வ சௌலப்ய வாத்ஸல்யாதிகளில் எவ்விதம் சந்தேகங்கள் ஏற்படக்கூடும்?" (728)

## மாஸபாராயணம்—29வது நிறுத்தம்

"நான் ஸகுணபக்தியின் பெருமைகளைப் பிடிவாதமாக என் குருநாதரிடம் பக்ஷவாதியாக, நிர்தாரணம் செய்தபடியால், தீனனாகப் போய் மஹரிஷியாகிற லோமசருடைய சாபத்தை நான் பெற்றேன். ஆனால் அந்த கிருபாளு பச்சாதாபம் அடைந்து என்மீது அருள்மழையைப் பெய்வித்தார். மஹா யோகிகளுக்கும் துர்லபமானதும், எனக்கே பிரத்யேகமாகவுள்ளதும், அனுத்தமமான வரதானங்களைப் பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய பிரேரணையினால் நான் அடையப்பெற்றேன். இதனால் ராமபஜனையினுடைய பிரதாபங்களை அறிந்துகொள்ளவும்." (729)

"எந்த மஹானுபாவனால் பக்தியின் பிரபாவங்கள் இவ்வளவு மஹத்தானவை என்று அறியப்படுகின்றதோ, அவன் கேவலம் ஞானத்திற்கு ஏன் மிக்க பரிஸ்ரமம் எடுத்துக்கொள்ளவேண்டும்? அவ்விதமில்லாமல் பக்தியைவிட்டு ஞானத்தையும் அடைய முயற்சி செய்யும் முட்டாள் தனது கிரஹத்திலிருக்கும் காம தேனுவைவிட்டுவிட்டு, "ஆகு" என்கிற கள்ளிப்பாலை (செடியின் பால்) ஏன் சிரமம்கொண்டு தேடவேண்டும்? அவன் நிஜமாகவே ஜலத்திற்காக கானல்நீரைத் தேடிப் போகிறான் அன்றோ?" (730)

"ககேசரே, பக்ஷிராஜரே, கேளும். ஸ்ரீஹரியின் சரணங்களை மனதில் தரித்துக்கொண்டு ஆனந்த நர்த்தனமாடும் கணபதியை பார்த்திருக்கிறீரா? அவ்விதமில்லாமல் ஹரிபக்தி வேண்டாம் என்று ஒதுங்கிவாழும் மனிதர்களுக்கு எந்த உபாயத்தினால் முக்தி ஸம்பத் ஏற்படும்? அவ்விதம் முக்திக்கு உபாயம் செய்பவர்கள் நிச்சயமாக மூர்க்கர்களாகதான் இருக்கவேண்டும். கருணா ஸாகரமாகிற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை அடையாமல் மஹா ஆபத்துக்கள் நிறைந்த ஸம்சாரார்ணவத்தை ஓடமில்லாமல் தாண்டுவதற்கு

ஸாஹஸம் செய்தவர்களைப் போல அல்லவா ஆகிவிடுகிறார்கள்? அவர்களால் எவ்விதம் தாபங்கள் நிறைந்த சமுத்திரத்தைத் தாண்டமுடியும்?'' (731)

''பகவான் சம்பு உமையிடம் சொல்கிறார், ''உமா, பவானி, காகபுசுண்டியின் வசனங்களைக் கேட்ட கருட மஹாராஜர் ஆனந்தமடைந்தார். அதிகிருதக்ஞை, அதிஸரளத்வம், அதி கோமளத்வம், அதிமேதாவித்வம் கொண்ட அந்த கருடர் குருஸ்ரேஷ்டரான காகபுசுண்டியை சுக்ருத நமஸ்காரம் செய்து அஞ்சலி பந்தம் செய்துகொண்டு, சொல்ல ஆரம்பித்தார். (அவ்விதம் சொல்லும்போது, கருட மஹாராஜருடைய மனத்தில் தியாகராஜாதிகளின் மனத்தில் தோன்றிய எண்ணங்கள் தோன்றின. ''ஹே ஹரிபகவானே நீர் எங்கு போய் ஒளிந்து கொண்டிருக்கிறீர்? பிரும்மாதிகளுக்கும், எட்ட முடியாத பரபிரும்மமாகிற ராமபிரும்மமே, கல்பகாலங்களி லிருந்து துஷ்கிருதங்கள் செய்து என்னைப் போன்ற பாபாத் மாக்கள் வெட்கமின்றி தங்களை ''விஷ்ணுவின் பக்தர்கள்'' என்று மஹா பிரதாபங்களுடன் பிரகடனம் செய்துகொண்ட மஹா மந்தமதி படைத்தவர்களுக்கு, தாமஸாதி குணங்களால் பற்றப்படும் எங்களுக்கு, எவ்வளவு தூரம் நீ வலுவில் விலகிச் சென்று விடுகிறாய். தாமஸஜன தூரா, பக்த ப்ரேமை ரஸம் என்னது என்று அறியமாட்டாமல் பகட்டாக, டம்பமாக வாழ்ந்து வீணாகக் காலத்தை கழித்த எங்களிடம் அபராத க்ஷமை என்கிற விரதம் நீர்பூண்டிராவிடில், இந்தமாதிரி காகபு சுண்டியைப் போல, லோக உத்தாரணம் செய்ய அருள் நோக்கம் கொண்ட மஹானுபாவர்கள் இல்லாவிடில், தியாகராஜ கருட வந்தித ஸ்ரீராமா, எப்படி சாந்தியும் மனநிம்மதியும், ஹரிபக்தியும் ஏற்படும்?) கைகளைக் கூப்பிக்கொண்டு, கருடர் சொல்ல ஆரம் பித்தார். ''பிரபு, தங்களுடைய அருட்பிரஸாதத்தினால் நான் இன்று தன்யனாக ஆக்கப்பட்டேன். எனது சந்தேகங்கள் முற்றிலும் அழிந்தன. சோகமும் விலகிவிட்டது. மஹா மோஹம் நீங்கி, நான் ஸம்சாரப் பிரமையிலிருந்து விடுபட்டேன். என்னுடைய முயற்சி வீணாகவில்லை. ராமபிரும்மானந் தத்தின் பிரேமை ரஸமாகிற தங்களைக் கண்டு, நான் கிருத புண்யனானேன்.'' (732)

கருடன் மீண்டும் சொன்னார், ''பிரபு, நான் தங்களிட மிருந்து புனிதமான ராம கதையை இன்று கேட்டேன். அதைக் கேட்பதற்கு மீண்டும் ஆவலுடனிருக்கிறேன். பரம மங்கள

குணங்களை உடைய ராமசரித மானஸம் சுபங்களையும் உத்தம சாந்தியையும் கொடுக்கிறது. ஸ்வாமி, தங்களுடைய கிருபையினால் விஸ்தாரமாக நான் சகல விருத்தாந்தங்களைக் கேட்கப் பெற்றேன். பிரபு, எனக்கு ஒரு விஷயத்தைப் பற்றி தங்களிடமிருந்து கேட்க விரும்புகிறேன். கிருபாநிதி, அதையும் தாங்கள் சொல்லவேண்டும்.'' (733)

"வேதங்களும் புராணங்களும் ஸாதுக்களும் ஒரு விஷயத்தைப்பற்றிச் சொல்லுகிறார்கள். அதாவது ஞானமாகிற பரஞானம் என்பதற்குச் சமமாக ஒன்றுமில்லை யென்றும், அது மிகவும் துர்லபமாகக் கிடைக்கிறது என்றும் சொல்லுகிறார்கள். கோஸாயி, அந்த ஞானத்தைப்பற்றி தங்களுடைய குருநாதரான லோமச முனிவரால் சகலமும் தங்களுக்கு முழுவதும் சொல்லப் பட்டதென்று தாங்கள் சற்றுமுன்பு சொன்னீர்கள். ஆனால் நீரோ பக்திக்கு ஸமமானது ஒன்றுமில்லை யென்று வாதித்து அவருடைய கருத்துக்கு மரியாதை செய்யவில்லை.'' (734)

"கிருபாதாம், பிரபோ, ஞானத்திற்கும் பக்திக்கும் உள்ள வித்தியாசத்தைப்பற்றி சொல்லவேண்டும். பிரபு, எது ஞானம் என்றும், எது பக்தியென்றும் அறியப்படுகிறது? தயவுசெய்து தாங்கள் முழுவதையும் சொல்லவேண்டும்.'' கருடனுடைய வார்த்தைகளை பிரபு காகபுசுண்டி கேட்டார். மஹா கெட்டிக்கார சாமர்த்தியமுள்ள காக்கை மிக்க மரியாதையுடன் பதில் அளித்தது. (735)

"கருடரே, பக்திக்கும் ஞானத்திற்கும் வித்தியாசம் ஒன்றுமில்லை. இரண்டும் சம்சாரத்தில் ஏற்படும் க்லேசங்களை அபஹரிக்கின்றன. நாதரே, அவ்வித மிருந்தபோதிலும் மஹ ரிஷிகள் இரண்டிற்கும் ஏதோ வித்தியாசமிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். பக்ஷி ஸ்ரேஷ்டரே, அதையும் நான் சொல்லி விடுகிறேன். ஸாவதானமாகக் கேளும்.'' (736)

"ஹரி வாஹனரே, தயவுசெய்து கேளும். ஞானம், வைராக்யம், யோகம், விக்ஞானம் ஆகிய யாவும் புருஷ லக்ஷணங்களைக் கொண்டது. ஸ்வாமி, புருஷனுடைய பிரதாபங்கள் ஸ்வாபாவிகமாகவுள்ள பௌருஷத்தைக் கொண்டது. பௌருஷத்தை அடிப்படையாகக் கொண்டு, சுலபமாக பிரபலத்தை யடைகின்றது. அது தங்களுக்கு எல்லாம் தெரியும். அதேமாதிரி, பெண் பிறப்பானது துர்பலமாகவும் பிறப்பிலேயே ஜடமூர்க்கத்தையும், தோஷங்களையும் கொண்டதாக விருக்கிறது.'' (737)

"எந்த மனிதன் தீரமான புத்தியுடன் வைராக்யத்தை அடைகிறானோ, அவனே ஸ்திரியைத் தியாகம் செய்கிறான். ஆனால் காமிகளோ விஷயங்களில் பற்றுதல் கொண்டவர்களாகவும் ஸ்ரீரகுவீரனுடைய பதங்களில் விமுகர்களாகவும் ஆகிவிடுகிறார்கள்." (738)

[தியானம்

ஹே பக்த கல்பதரு, பாக்யஸூரதேனு, ராமாசீதா, நாராயணா, மஹாலக்ஷ்மி சரணம் சரணம். உமது திருவடிகளை அடைந்த நான் ஞானம் எனப்படும் மூன்றுவித ஆகாராதிகளை அடைகிறேன். அனன்யார்ஹ சேஷத்வம், அனன்யகதித்வம், அனன்யபோக்யத்வம் என்கிற மூன்றுவித ஆகாரத்தில், பிரபு, உம்மிடம் பரபக்தி பரஞானம் ஏற்படுகிறது. அந்த பரபக்தி பரஞானமே பரமாபக்தியாகிற பாகவத பிரியத்தையும் ஆசார்ய கைங்கர்யத்தையும் அளிக்கிறது. நாராயணா, நீரோ ஸ்வாபாவிகமாகவே பொறுமையையும் கருணையையும் விரதமாகக் கொண்டீர். அவ்வித மிருக்கும்போது, சரணாகதர்களின் அபீஷ்டங்களைப் பூர்த்திசெய்து வைக்கிறீர். பரிமிதமான தேசத்தில் பரிமிதமான காலத்தில், பரிமிதமாக பலனையும் அளிப்பவராகவு மிருக்கிறீர். பிரும்மா, சிவன், மஹரிஷிகளால் வணங்கப்படும் மும்மூர்த்திகளே, எனது ஸ்வர்ணர்களே, உங்களை நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன்.]

"பிரபு, பரமஞானிகள் என்று சொல்லப்படும் குணப் பொக்கிஷங்கள், மான்போலக் கண்களையும் சந்திரனைப்போல குளிர்ச்சியுமுள்ள யுவதிகளைக் கண்டதும், மனம் இழந்தவர்களாகி விடுகிறார்கள். கருடமஹாராஜரே, நீர் ஸ்திரியை ஸாக்ஷாத் பகவான் விஷ்ணுவின் மாயாதேவியாக ஸ்வீகரித்துக்கொள்ள வேண்டும்." (739)

"இவ்விதம் சொல்லுகிறேன் என்று தாங்கள் பச்சாதாபப்பட வேண்டாம். எல்லாவற்றையும் தெரிந்துகொண்டுதான் நான் சொல்லுகிறேன். நான் சொல்லுவதை வேதங்களும் புராணங்களும் ஸாதுக்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். பிரபு, எங்கேயாவது ஒரு ஸ்திரி மற்றொரு ஸ்திரியின் அழகைக் கண்டு மோஹித்துப் போகிறாளா? அழகு விலக்ஷணமாக விருந்தபோதிலும், உலகில் காணப்படும் இந்த ரீதி அதிசயிக்கத்தக்கதாக விருக்கிறது." (740)

"பிரபு, இன்னமும் கேளும். மாயை, பக்தி ஆகியவைகளைப் பற்றியும் சொல்லுகிறேன். இவைகள் இரண்டும் நாரி வர்க்கத்தில் சேர்ந்தவையாக விருக்கின்றன. இவைகள் இரண்டும் ஸ்திரி ரூபமுள்ளது என்று யாவரும் அறிந்த விஷயம். ஆனால் பிரபு ரகுவீரனிடம் கொண்டுள்ள பக்தியானது, பதி ஸ்திரியைப் போல உறவு கொண்டதாகவும், அதிகமாக போக்யதரமாகவு மிருக்கிறது. அந்த ராமபக்தியின் முன்பு மாயை நிச்சயமாகவே நாட்டியமாடும் நர்த்தக ஸ்திரியைப் போல விளங்குகிறாள்." (741)

"பகவான் ஸ்ரீராமச்சந்திரன் தனது பக்தர்களிடம் விசேஷமான அனுகூலத்தைக் காண்பிக்கிறான். இதனால் மாயை ரகுபதியிடம் அத்யந்த பயத்தினால் தனது சேஷ்டிதங்களைக் காண்பிக்கிறதில்லை. எந்த மஹாத்மாவிடம் அனுத்தமான ராமபக்தியிருக்கிறதோ, எவனிடம் விசுத்த ஆத்மாவினால் செய்யப்படும் ராமகைங்கர்யம் இருக்கிறதோ, அவனைப் பகவான் ஸ்ரீராமச்சந்திரன் மிகவும் நேசிக்கிறார். பிள்ளாய், அந்த பக்தியாகிற ஸ்திரி ரத்னத்திடம் மாயையாகிற தாசி நடுநடுங்குகிறாள். பக்தியுள்ளவனே கிலேசங்களின்றி சுகமாக வாழ்ந்து வருகிறான்." (742)

"அந்த விசுத்த பக்தியைக் கண்டு மாயை நடுநடுங்குகிறாள். அவளுடைய பிரபுத்வங்கள் அந்த ஸ்திரி ரத்னத்தினிடம் பலிக்கிறதில்லை. இதை அறிந்து கொண்ட விக்ஞானிகளாகிற முனீஸ்வரர்கள் பக்தியை யாசிக்கிறார்கள். பக்தியே சுகத்தைத் தரும் சாதனம் என்று நினைத்து, அதையே ஏகமாத்திரமாக ஸ்வீகரிக்கிறார்கள்." (743)

"ரகுநாதருடைய மகிமையினால் இது ஏற்படுகிறது. இந்த ரஹஸ்யம் யாருக்கும் சுலபமாகப் புரிபடுகிறதில்லை. ரகுபதியின் கிருபை ஒன்றினால் மட்டும், அவருடைய பக்தர்கள் இதை அறிகிறார்கள். அவர்களுக்கு ஸ்வப்னத்தில் கூட மோஹம் ஏற்படுகிறதில்லை. புத்தி சாதுர்யமுள்ள கருடபகவானே, ஞானத்திற்கும், பக்திக்குமுள்ள பேதத்தை இன்னமும் விவரித்துச் சொல்கிறேன், கேளும். அதைக் கேட்கும்போது ஸ்ரீராம பாதங்களில் என்றும் மாறாததும், அவிச்சின்ன பக்தியும், பிரேமையும், அனன்ய போக்யத்வமும் ஏற்படுகிறது." (744)

"பிள்ளாய், இது அநிர்வசனீயமான சரித்திரம் என்று சொல்லப்படுகிறது. இதை ஞானம் என்கிற கண்களால்தான் காணமுடியும். இதை வாயாலயோ சொற்களினாலும் அறிய முடியாது. ஜீவன் அவிநாசியான ஈஸ்வரனுடைய அம்சம்.

பகுத்தறிவு கொண்ட சேதனன். இந்த ஜீவன் இயற்கையாகவே அமலன் (நிர்மலன்) தோஷங்கள் இல்லாதவன்; ஸ்வபாவ மாகவே சுகத்திற்கு இருப்பிடம்.'' (745)

''கோஸாயி, அவன் மாயையின் வசமடையும் போது, கிளியைப் போலவும், வானரத்தைப் போலவும், தன்னை அதன் கயிற்றினால் கட்டிக்கொள்ள சம்மதிக்கிறான். இந்த பிரகாரம் சேதன அசேதன வஸ்துக்கள் கூட இவ்விதம் கயிற்றினால் கட்டப்படுகிறார்கள். அதனால் அவர்கள் உலகத்தை மித்யை என்று நினைத்துக் கொண்டாலும், அவர்களால் இந்த உலக பந்தம் அறுக்கப்பட முடிகிறதில்லை,'' (746)

''எப்போது ஜீவன் மாயையின் வசமடைந்து விடுகிறானோ, அவன் ஸம்சாரமாகிற ஜன்ம மரணச் சுழல்களில் அகப்பட்டுக் கொண்டு மீளாதபடி போய்விடுகிறான். இந்த பந்தம் அறுபடாத வரை, அவனுக்கு சுகம், ஆனந்தம் ஏற்படுகிறதில்லை. வேதங் களும், புராணங்களும் இந்த ஜன்ம ஸம்சார பந்தங்கள் அறுபடு வதற்கு பல உபாயங்களைச் சொல்லுகின்றன. ஆனால் ஹ்ருதய கிரந்தியாகிற அக்ஞானமும் பற்றுதலும் அறுபட முடியாமல், அந்த முடிச்சுக்கள் நாளுக்கு நாள் இறுகி, பலமாகிவிடு கின்றன.'' (747)

''ஜீவனுடைய ஹ்ருதயத்தில் பற்றுதல் ஏற்பட, அவனுக்கு விசேஷ ரூபத்தில் அக்ஞானம் வளர்கிறது. அவனால் அக்ஞானத் திற்குப் பற்றுதல்தான் காரணம் என்று சுலபமாக அறியப்பட முடிகிறதில்லை. அவ்விதமிருக்கும் போது அவன் ஜன்ம சம்சார பந்தங்களிலிருந்து எவ்விதம் விடுதலை அடையக்கூடும்? ஈஸ்வரர் ஒரு தடவை இவனிடம் அருள் கொண்டு, இந்த ஸம்யோ கத்தை எப்போது நிரூபித்துக் காண்பிக்கிறாரோ, அப்போதும் கூட அவனுடைய பற்றுதலாகிற கயிறு அறுகிறதில்லை.'' (748)

''ஸ்ரீ ஹரிபகவானுடைய கிருபையினால் அவனுக்கு சிரத்தை யேற்பட்டு, அழகான கோமாதா ரூபமுள்ள ஹ்ருதயத்தில் ஸாத்விக பழக்கங்கள் இவனிடம் எப்போது கோயில் கொண்டு வாழ்கின்றதோ, ஜபம், தபம், விரதம், யமம், நியம நிஷ்டைகள் இன்னும் அபாரமான சமதமாதி சேர்க்கைகள் இவனிடம் குடிகொண்டு வசிக்கின்றதோ, இன்னும் வேதங்களால் புகழப் படும் ஆசாரங்கள், தர்மங்கள் யாவையும் குடிகொள்ளு கின்றனவோ,'' (749)

''அப்போது பிரபு, அந்தப் பசு இம்மாதிரி ஜபதபாதிகளைப் போல ஆகாரங்களை உண்டும், அதனுடைய கன்றினுடைய

சேர்க்கையினுல் பால் மடுக்கள் பெருகி, அன்னமாகிற க்ஷீரத்தை உற்பத்தி செய்கின்றது. அந்தப் பாலைக் கறப்பதற்கு பசுக்களின் கால்களைக் கட்டவேண்டியதாக விருக்கிறது. ஸம்சாரத்தில் நிவிருத்தி ஏற்படுவதற்கு இந்தமாதிரி ஆத்மாவை சமதமாதி குணங்களால் கட்டவேண்டியதாக விருக்கிறது. விஸ்வாஸம் எனப்படும் பால் பாத்திரத்தில் பாலைக் கறப்பது போல, நிர்மலமானதும், பாபரஹிதமான மனம், காமம், க்ரோதம், லோபமின்றி நிஜ தாஸ்யபாவத்துடன் விளங்குகிறது. அந்த சமயம் பாலைக் கறக்க முடிகிறது.'' (750)

[தியானம்

ராமா, நாராயணு, சீதாநாயகா, பராசரர், ஜனகர் ஆகியவர்களைப் புறம் வைத்து நான் உன்னை நமஸ்கரிக்கிறேன். மனிதனுக்கு ஸ்ரேயஸுக்குக் காரணம் நீதானே அப்பா. அதற்காக பற்றற்றிருப்பது என்கிற ஞானத்தை நீயல்லவோ அவனுக்கு அளிக்கிருய். இந்த ஞானமானது அனுஷ்டிக்கப்பட்டால், ஸத்பாத்திரத்தில் தானம் செய்யப்பட்டது போல, நசிக்காமல் விருத்தியடைகிறது. அதர்மமயமான பாசத்தை அறுத்துத் தள்ளி, தர்மத்தைச் செய்து மனிதன் சித்தி அடைகிருன். பீஷ்மர், ''கிருஷ்ணு, ராமா, சீதாநாயகா, மஹாலக்ஷ்மி பிரபோ'' என்று உன்னைத்தானே எல்லாவற்றிலும் பெரிய தர்மம் என்று சொன்னுர். ஆசை நீங்கினவனும், கோபம், க்ரோதம், லோபம், மதம் ஆகியவைகளை வென்றவனும், விஷயங்களில் இருந்தாலும், பாவத்தை அடைகிறதில்லை என்பதற்கு, ஜனகர் திருஷ்டாந்தமாக விளங்கினுர். மோக்ஷ தர்மம் எனப்படும் தியாக புத்தியை அடைந்தவர்கள், பரமாத்மாவைத் தவிர நன்மையானவன் ஒன்றுமில்லை என்று நினைக்கிருர்கள். முகுந்தனுடைய சரணுரவிந்தங்களைப் பஜித்துக்கொண்டு, பரதன், நம்பூத்ரி, கோபாலர்களைப் போல வாழும் சுத்தமான மனதுடையவர்கள், பனி போன்ற அக்ஞானத்தை கர்மங்களாலும்' ஞானத்தினுலும் அறிந்து விலக்கி, மிருத்யுவை விலக்குகிருன். பிறந்த ஜீவனுக்கு இறப்பு மரணம் நிச்சயமானபடியால், ஸம்சாரம் தாண்டப்பட முடியாததாக விருக்கிறது. மனம் ஒன்றினுலே பரமாத்மா அறியப்படுகிருனுகையால், சுபமான காரியங்களால் மனத்தைச் சுத்தப்படுத்தி, தைர்யமாய் அந்தராத்மாவான ஈஸ்வரரைத் தியானித்துக் கொண்டு வாழும் வித்வானை, ஸம்பத்தானது எவ்விதம் சூர்யகிரணங்கள் சூர்யனை

விடாதது போல, விடுகிறதில்லை. முயற்சி என்கிற உபாயத்தினால், ஞானம் என்கிற புத்தியினால் பரலோக நம்பிக்கையாகிற விஸ்வாசத்தினால் குற்றமற்ற கர்மாக்களைச் செய்த சேதனன் தனக்கு ஏற்பட்ட ஆசாரத்தினால் ஸம்யோகம் எனப்படும் புருஷனுடைய ஆத்மாவானது மனத்தால் விடுபட்டு, மனமானது இந்திரிய விஷயங்களில் விடுபட்டு சுபமான கர்மங்களால் யோகத்துடன் கூடுகிறபொழுது, அந்த சுத்தமான மனம் பரமாத்மாவைப் பார்க்கிறது. அவன் விஷயங்களை அதிகிரமிக்கிறான். பரமாத்மாவை அறியாதவன் சிற்றின்பத்தில் பிறவிக் குருடனைப் போல அவதிப்படுகிறான். ஆகையால் தர்மத்தை உடையவன் மனோவசத்தை அடையவேண்டும். பரமாத்மாவைப் பஜிக்க வேண்டும். ஆகையால், ஹே மனமே, நீ ஸதா ஹரி பகவானை பஜிப்பாயாக.]

"அன்புள்ள சஹோதரனே, இந்த விதமாக மனோவசத்தை அடைந்த தர்ம ஆசாரமுள்ளவன் பற்றுதலற்ற வாழ்க்கையெனப்படும் ஞானத்தினால் ஸ்ரேயசை அடைகிறான். பராசராதி முனிவர்களைப் போலவும், ஜனக மஹா ராஜரைப் போலவும் அவன் தர்ம மயமாகவும், தியாகபுத்தியுள்ளவனாகவும், நிஷ்காம புத்தியினால் சுபமான கர்மங்களைச் செய்பவனாகவும், சுத்தமான வாழ்க்கை, ராமதியானம், பரமாத்மாவின் சிந்தனை என்கிற அக்னியில் ஸகலத்தையும் ஆஹுதி செய்பவனைப்போல விருக்கிறான். பிரபு, அவனிடம் கடிமையும், பொறுமையும், ஸமகதியும் யேற்படுகிறது. ஆத்மகளிப்பும் ஏற்பட்டு ஸகல சோகங்களும் பெரும் காற்றினால் விரட்டப்பட்ட மேகங்களைப் போல சிதறுகின்றன. தியாகம் எனப்படும் ருசியுள்ள பாலைக் கொதிக்கவைத்து, ஆசையில்லாமை என்கிற அக்னியில் கொதிக்கவைத்து, அந்தப் பாலைக் குளிர்ந்த பின்பு, திருதி எனப்படும் பொறுமை க்ஷாந்தி, சமதமாதி குணங்களால் கலக்கப்பட்ட தயிரைப் போல அவன் அப்யாஸத்தினால் தன்னை ஆக்கிக் கொள்கிறான்." (751)

"மன சந்தோஷம், அதாவது விஷயங்களிலிருந்து விடுபட்ட மனம் ஆத்மாவை ஸம்யோகமாகப் பார்க்கும்போது யேற்படும் களிப்பு என்கிற மண்பாண்டத்தில், மத்தாகிற தியான யோகத்தினால் ஆத்ம விசாரத்தினால், ஸத்யம் என்கிற வழியில், அழகிய ஸுஸ்வரங்களால் பாடப்படும் நாத யோகமாகிற வழியில், உலாவுகிறவன், நாளடைவில் மனத்தை ஸ்வாதீனப்படுத்திக்

கொண்டு, நவநீதமான வைராக்யத்தை புனிதமான வழியில் அடைகிருன்.'' (752)

''வைராக்ய மடைந்த புருஷனிடம் ஞானுக்னி பிரகடனப் பட்டு அதனுல் சுபா சுபகர்மங்களேயும் பழைய கர்ம வாஸனே களேயும் பஸ்மம் செய்கிருன். அப்பொழுது அவன் மமதை எனப்படும் ஜலமாகிற மோரைத் தியாகம் செய்கிருன். அதன் பிறகு சுத்த ஞானமாகிற பசுவின் நெய்யை அடைந்து, நிச்சய மான புத்தியினுல் ஆராய்ந்து பார்த்து, அந்த நெய்யை குளிர வைக்கிருன்.'' (753)

'' நாளடைவில் அவனுக்கு யேற்படும் ஸீக்ஞானம் விக்ஞான மயமாகி, அவனுடைய புத்தி கங்கா ஜலத்தைப் போல நிர்மல மாகி, விசுத்த ஆத்மாவாக, சித்தத்தை அந்த சுத்தமான நெய் யினுல் எரிய விடுகிருன். அதனுல் அவனுக்கு சஞ்சலமற்றதும் ஸமகதியை உடையதும் தார தம்யமின்றி யாரிடத்திலும் ஒரே நிகராயிருக்கும் தன்மையை அடைகிருன். அவன் அவ்வித மிருக்கும்போது, பார பக்ஷமின்றி யாவரையும் ஸமமாக நினேக் கிருன்.''

'' ஜாக்ரதை, ஸ்வப்பன, ஸுஷுப்தி ஆகிற மூன்று அவஸ்தைகளிலும், ஸத்வ ரஜஸ் தமஸ் ஆகிற மூன்று குணமய மான பஞ்சினுல் ஞான விளக்கு எரியப்படும்போது, நான்காவது அவஸ்தையாகிற துரியாவஸ்தையில் மனம், புத்தி ஆகிற எல்லாம் பரமாத்மாவிடம் லயித்து அவனேயே ஸதா பார்த்துக்கொண் டிருப்பவனுக, இன்பமடைகிருன். அந்த தீபம் அழகாக எரியும் போது இவன் ஞானம் ஆனந்த பிரும்மமயமாகத் தோன்று கிருன்.'' (754)

'' இந்த விதமாக தேஜஸ்ஸின் கொத்துப்போல விருக்கும் ஞானபிரகாசம் விக்ஞானமயமாகிற பரமாத்மாவின் திருஷ்டி கோசரத்தில் விளங்குகிறது. அப்பொழுது அவன் மனேவச மடைந்த காரணத்தினுலும், பரமாத்மாவின் கிருபையினுலும் மமதை முதலிய ஸ்வரூப விரோதிகளே அழிக்கிருன். அந்த தோஷங்கள் யாவும் தீச்சுடரில் விட்டிற் பூச்சிகளேப்போல மடிந்து அழிந்து போகின்றன.'' (755)

'' அஹமஸ்மி, ஸோஹமஸ்மி, ஹம்ஸோஹம், நானே அவன், அவனே நான்,'' என்கிற பிரும்ம பாவத்தினுல் ஞானபூர்வமாக அந்த சேதனன் அணேயாத நந்தா விளக்குப்போல பிரகாசித் துக்கொண்டு, ஸ்வயம்பிரகாசமான பிரும்மமாக ஆகிவிடுகிருன். அப்பொழுது ஸ்வய ஆத்மானுபவத்தினுல் யேற்படும் சுகங்களே

அடைந்து, ஸர்வ ஜகத்தையும் அதில் அடங்கின சேதனு சேதனங்கள் அனைத்தையும் பிரும்மமயமாகவும் சச்சிதானந்த மயமாகவும் பார்க்கிறுன். அப்பொழுது நான், அவன், நீ என்கிற பேதபுத்தி நாசமடைகிறது. இந்த பேதபுத்தி நாச மடைந்து போகும்போது, ஸம்சாரத்தின் அடிவேர்போல விருக்கும் பிரமையும் நாசமடைகிறது.'' (756)

[தியானம்

ஹே சீதே, ஹம்ஸமே, உன்னை மாயை என்றும் உன்னுடைய கடாக்ஷமின்றி மனிதன் பெருமாளுடைய பதங்களில் சேரமுடி யாது என்றும் சொல்லுகிறுர்களே. அது நிஜமாகவே கடினமா? நீ ஒரு வேடக்காரனைப்போலவும், உன்னைப்பற்றிய அறிவு ஓடத்தைப் போலவும் சொல்லப்படுகிறது. தத்வ ஞானியான வன் மனத்தை ஒருமைப்படுத்தி ஸாரம் எது, எது அஸாரம் என்று தெரிந்து கொண்டு மனத்தை ஆத்மாவில் பற்றச் செய்கிறுன். உலகமானது அக்ஞானத்தினுல் சூழப்பட்டிருக் கிறது. மத்ஸரத்தால் பிரகாசிப்பதில்லை. லோபத்தால் நண்பர் களையும் ஹிதகாரிகளையும் நழுவச் செய்கின்றது; ஸங்கத்தால் ஸ்வர்க்கத்தை அடைய முடிகிறதில்லை; பேரறிவு உள்ளவனே சந்தேஷத்தை அடைகிறுன். அவனே அநேகர்களுடனிருந்தும் மௌனியாக விருக்கிறுன். அவனே யாவரிடமும் பகை கொள் ளாமல் வாழ்கிறுன்; வேதாத்யயனத்தையும், நாராயண தியான பரனுகவும், மங்கள விரதங்கள் கொண்டவனுவும், ஸாதுத் தன்மையை அடைந்தவனுகவும், தேவரும் பகவானும் நித்யரும் ஜகந்நாதருமான நாராயணரைப் பஜித்து வாழ்பவன், தேகத்தை கர்மங்களுக்கு காரணம், அதில் விரதங்களோடு கூடியது ஸாதுத் தன்மையாகவும் அறிந்து கொள்கிறுன். ஆதலால் மிக்க முயற்சி யுடன் வித்வானுனவன் குறி, உதரம், கைகள், வாக்கு ஆகிய நான்கையும் அடக்கி, உண்மை, அடக்கம், நேராயிருத்தல், க்ரூரமில்லாமை, சந்தோஷம், பொறுமை இவைகளைக் கைக் கொண்டு, நான்கு மூலைகளையும் ஸமமாகப் பார்க்கிறுன். ஸத்யம் என்கிற விரதத்தைக் கைக்கொண்டு, அடக்கமுள்ளவனுக, கோபத்தையும் கிரோதத்தையும் தியாஜ்யம் செய்துவிட்டு, கபட மின்மையையும் க்ரூரத் தன்மையில்லாமையாலும், அவமானத் தையும் விட்டவனுகவும், தர்மத்தினின்று விலகாதவனுகவும், இன் சொல்லால் யாவரையும் இன்புறுத்துகிறவனுகவும் மோக்ஷபதத் திற்கு அருகதையாகிறுன். அப்பேற்பட்ட விவேகம், அடக்கம்,

ஸத்யம், யாவும் மஹாலக்ஷ்மி, உனது அருட் பிரஸாதத்தினுல் அல்லவோ ஸித்திக்கின்றன. அப்படிப்பட்ட ஸந்தோஹ லக்ஷ்மி யான நீ என்னிடம் கிருபையுடன் இருக்கவேண்டும்.]

"பிரபலமான பலமுள்ளவளாகிற அவித்யை, "நான்" என்கிற மமகாரம், அத்துடன் கூடவிருக்கும் பரிவாரங்களாகிற மோஹம், டம்பம், கபடம், அதர்மம், அஸத்யம் ஆகிய யாவும் அழிந்து போகின்றன. அந்தகாரம்போல மன இருள் கொண்ட சேதனன் ஸகல தோஷங்களைத் தியாகம் செய்துவிட்டு, விக்ஞான ரூபியாகிற ஹம்ஸத் தன்மையை ஆத்மானுபாவத்தினுல் தேக செளக்யம், மனேசாந்தி, ஆகியவைகளை ஸித்திக்கப்பெற்று, அவன் ஹ்ருதய கோவிலில் குடிகொண்டிருக்கும் முடிச்சுக்களை பிரகிருதியிலிருந்து அவிழ்க்கிருன். அப்பேற்பட்ட அடக்கசில முள்ளவன் ஜடசேதன சேதனங்களில் எது ஸாரம், எது அஸாரம் என்று அறிகிருன்." (757)

"அவ்விதம் மேதாவியான அவன் ஹ்ருதய கிரந்தியின் முடிச்சுக்களை அவிழ்த்து, ஞான தீபத்தினுல் ஸ்வயம் பிரகாச மாகும்போது, எந்த ஜீவன், (ராமா சீதா, உங்களுடைய கிருபை யினுல், தியாகராஜாதிகளைப்போல), கிருதார்த்தனுக ஆகிருன்." ("ஹே மனஸே, என் விண்ணப்பத்தைக் கேட்கமாட்டாயா? நான் உனக்குச் சிறந்த ரஹஸ்யத்தை தெரிவிக்கிறேன். ராமச்சந் திரனுடைய கருணுந்தரங்கத்தை தெரிந்துகொள். வேதங்களில் சொல்லப்பட்ட கர்ம காண்டங்கள், பிறப்பு இறப்பாகிற காட்டில் சேதனர்களை அலைய வைக்கின்றன. அவைகளால் அவர்கள் துன்பத்தைத்தான் அடைகிருர்கள். மனிதனுக அவதரித்த ஸ்ரீ சீதாராமன் தனது ஆசாரமான நடத்தையினுல் வழி காண் பித்தான். அதை அறிந்துகொண்ட தியாகராஜர் ஞான வழியா கச் சென்று, நளினமான ராம சீதா பதத்தை அடைந்தார். அதுபோல நீ ஏன் நடக்காமல் உதாஸீனனுக விருக்கிருய்?") "ககராயா, பக்ஷிகளின் ராஜாவே, அவ்விதம் அந்த சேதனன் கர்ம காண்டங்களிலிருந்து விடுபட முயற்சிக்கும்போது, மாயை எனப்படும் தேவி அநேக விக்னங்களை ஏற்படுத்துகிருள்." (758)

"அன்புள்ளவரே, மாயை அநேகரித்திகளையும் ஸித்திகளை யும் அனுப்பிக் வைத்து, அவைகளின் உதவியால் அவனுடைய புத்தியைக் கலக்குகிருள். அதனுல் அவனுக்கு லோபம் ஏற்படு கிறது. அநேக தந்திரங்களாலும், ரூபங்களாலும், கபடங்க ளாலும், சேதனனுடைய சமீபத்திற்கு வந்து, அவனுடைய அசஞ்சலமான புத்தியைப் பேதலிக்கப் பார்க்கிருன். அப்போது

யேற்படும் வாயுவாகிற தந்திரங்களால் புத்தியின் ஞானதீபத்தை அணைக்கப் பார்க்கிருள்.'' (759)

''ஆனல் புத்தி என்கிற மேதாவியான ஸதி இருக்கிருளே, வெகு சாமர்த்தியத்தால் ரித்தி தேவிகளேயும் ஸித்தி தேவிகளே யும் கண்ணெடுத்துப் பாராமல் நின்ற நிலேயாகவிருக்கும்போது, அவளுக்கு தேவதைகளால் கஷ்டங்கள் ஏற்படுகின்றன''

''தேவதைகளின் வசமிருக்கும் இந்திரியங்கள் அவனுக்கு விபரிதமாக வேலே செய்கின்றன. எந்த எந்த இந்திரியங்களில் தேவதைகள் உட்கார்ந்து கொண்டு சரீரத்தில் ராஜ்யம் செலுத்து கிருர்களோ, அந்த அந்த இந்திரியங்களின் தேவதைகள் விஷய போகங்களில் அவனே ஈடுபடச் செய்யப் பிடிவாதமாக இந்திரிய வாயில்களேத் தடையின்றி திறந்து விடுகிருர்கள்.'' (760)

''எப்போது அவனுடைய ஹ்ருதயத்தில் விஷயங்களின் மீது ஆசையாகிற பிரசண்டமான காற்று வீசுகிறதோ, அப்போது அவனுடைய விக்ஞான ரூபமாகிற தீபம் அணைந்து விடுகிறது. அவன் மதி மயக்கம் கொண்டிருக்கும்போது, ஹ்ருதய கிரந்தியின் முடிச்சுக்கள் அவிழப்படாமலிருக்கும் போது, அவனுடைய ஞானபிரகாசம் முழுவதும் அழிந்து போகிறது. அவனுக்கு தடுமாற்றம் ஏற்படுகிறது.'' (761)

''பேரறிவு என்று சொல்லப்படும் பரஞானம், இந்திரியங் களால் அறியப்படுகிறதில்லே. ஏனெனில் இந்திரியங்கள் தேக சுகங்களுக்காக ஏற்பட்டன. அதனுடைய தேவதைகளும் போகங்களில் தான் விருப்பமுள்ளவர்கள். அப்பொழுது புத்தி ஏமாந்துபோய் சூத்திரபொம்மை மாதிரி நாட்டிய மாடுகிருள். அந்த சமயம் அணேந்துபோன ஞானதீபத்ஸத மீண்டும் யார் ஏற்றக் கூடும்?'' (762)

''ஞானம் என்கிற தீபத்தை இழந்த ஜீவன் குருடனுகி, அநேக பிரகாரம் ஜன்மம்ருத்யுக்களே அடைகிருன். அதனுல் ஜனனமரணமாகிற ஸம்ஸ்ருதியின் க்லேசங்களே அந்த ஜீவன் அநேக விதமாக அனுபவிக்கிருள். பிரபு, பக்ஷி ராஜரே, ஹரி பகவானுடைய மாயைகளே யாவரரலும் அதிக்கிரமிக்க முடிகிற தில்லே. அவைகள் ஸஹஜமாகவே தாண்டக் கூடாதவையாக விருக்கினறன.'' (763)

''நீர் என்னே விவேக ஞானத்தின் ஸ்வரூபத்தைச் சொல் லும்படி கேட்டீர். அதை விவரிப்பது மிகக் கடினம், அதைவிட அதை அனுஷ்டிப்பதும் மிக்க கடினம். எப்பொழுதாவது இந்திரிய அடக்கத்தால் யேற்படும் மனேவசியம், அந்த அடக்கப்

பட்ட மனத்துடன் பரமாத்மாவின் சேருதலாகிற ஸம்யோகம் ஏற்பட்டால், அந்த சமயம் அதைக் காப்பாற்றி நீடித்து அனு பவிப்பதற்கு இன்னும் மிகமிகக் கடினம். அதற்கும் அநேக விக்னங்கள் ஏற்படுகின்றன.'' (764)

"பேரறிவு எனப்படும் பரஞானம் கத்தி முனையைப் போல தீக்ஷ்ணயமாகவுள்ளது. பக்ஷி ராஜரே, இந்த வழியில் போகிற வனுக்கு ஆபத்துக்கள் அதிகமாக யிருக்கிறபடியால், சேதனன் கீழே நழுவி விழுவதற்கு சந்தர்ப்பங்கள் அநேகமிருக் கின்றன. ஒருவேளை எந்த மஹாபாக்யவான் ஜாக்ரதையினுல் விக்னங்களைத் தாண்டி முன்னேறுகிருனே, அல்லது அவன் வழி யில் தெய்வகிருபையினுல் விக்னங்கள் ஏற்படாமலிருக்குமாகில், அவனுக்கு கைவல்யம் எனப்படும் ஸ்வய ஆத்மானுபவம் ஏற் பட்டு, அதுவே அவனுக்குப் பரமபதமாக மாறிவிடுகிறது.'' (765)

"ஸாதுக்களும் புராணங்களும், வேதங்களும் "கைவல்ய மார்க்கத்தை அனுஷ்டிப்பது, அதில் சித்தி பெறுவது மிகமிக துர்லபமாக விருக்கின்றது'' என்று கோஷிக்கின்றனர். ஆனுல், பிரபு, கோஸாயி, ராமபக்தி செய்பவனுக்கு, அப்பேற்பட்ட துர்லபமான முக்திபதம் இச்சாமாத்திரத்தில் ஒருவித கிலேச மின்றி வந்து சேருகிறது. அதுவாக அவனை வலுவில் வந்து அடைகிறது. பிரபு, இதை நன்ருகத் தெரிந்து கொள்ளும்.'' (766)

[தியானம்

பிரபு நாராயணு, சீதாபிரபோ, ஸாங்கியம் என்கிற சாஸ்திரம் "ஞானம்'' என்று சொல்லப்படுகிறது. ஞானத்தினுல் சுத்த ஸத்வம் அடையப்படுகிறது. அனந்த பகவானைப் போல், அது அவனை விஷ்ணுவின் பக்தனுக ஆக்குகிறது. சுத்த ஜீவ ஸ்வரூபம் ஸத்வமான நாராயணரை அடையச் செய்கிறது. அவனே யதி என்று சொல்லப்படுகிருன். அது சுகதுக்கம் முதலிய த்வந்தங்களிலிருந்து அவனை விடுதலை செய்து, நேர்மை யிலும் பற்றுதலற்ற மனத்துடனும் எல்லாப் பிராணிகளிடத் திலும் தயை உள்ளனுக ஆக்குகிறது. அப்பேற்பட்ட ஜீவனை க்ஷேத்ரக்ஞன் தானே ஸ்வயமாக அடைகிருன், அந்த ஜீவனுக்கு இந்திரியங்கள் சொன்னபடி கேட்கின்றன. அப்பேற்பட்ட மஹாத்மாவாகிற ஜீவன் பிரகிருதி இந்திரியங்களை அதிகிரமித்து தன்னுடைய ஆத்மஸ்வரூபத்தில் நிலை நின்று, ஸ்வயம் பிரகாச

மான நாராயணரை அடைகிறுன். அவன் ஈஸ்வர ஆக்ஞையை செய்து வருகிறுன். பிராரப்தம் நாசம் ஏற்படும் காலத்தில், அவன் விதேக முக்தியாகிற உத்தமசாந்தியை அடைகிறுன். சரீரமில்லாத பரமாத்மாவுக்கு, க்ஷேத்ரக்ஞனுக்கு, ஸாங்கிய ஞானம் சரீரம் என்று வேதம் சொல்லுகிறது. பதார்த்த ஞானங்களே அவருடைய ஞானமாகச் சொல்லுகிறுர்கள். ஸாங்கியத்தில் அடக்கமும் காணப்படுகிறது. இவ்விதம் ஞானம் மேன்மையை அடையும்போதுதான், கோபிகைகள், பக்தி என்கிற அனுராகம் ஸ்வபாவத்திஞலேயே, மன்மத மன்மதனுகிற நாராயணனே, வேணுகானலோலனே, ரிஷிகள் கோதண்டஹஸ்தனே அடைந்ததைப்போல அடைந்தார்கள். நாராயணபட்டத்திரி சொல்லுகிறபடி, ராமா, கோபாலா, மோக்ஷமானது பிரயத்தனமாகிற யோக ஸாங்கிய சாஸ்திரங்களால் ஏற்படலாம்; உண்டாகாமலுமிருக்கலாம்; ஆனுல் பகவானுடைய அனுக்ரஹத்தால் பத்தராகவிவஸாஃ என்கிறபடி கிருஷ்ணனிடமோ, கோபாலனிடமோ, ஆசையை வைத்து, பரவசர்களாகிய கோபிகைகளுக்கு பிரயத்னம், பிரயத்னமில்லாமை ஆகிய இரண்டு வழிகளாலும், இரண்டும் சேர்ந்து ஒன்றுகவே தங்கள் நிஜ ஸாந்நித்யம் கிட்டிவிட்டதல்லவா? அவர்களுடைய பாக்யமே பாக்யம்தானே. ஹே வாதாலயேசா, எங்களே நீதான் காப்பாற்றவேண்டும்.]

"எங்கேயாவது பூமியின்றி ஜலம் நிற்கக்கூடுமோ? கோடிக் கோடிக்கணக்கான உபாயங்கள் செய்து பார்க்கலாமே. கருட மஹாராஜரே, மோக்ஷஉபாயம், மோக்ஷசுகம் ஹரிபக்தியில்லாமல் ஏற்படக்கூடுமா?" (767)

"ஸ்வாமி, இந்த விதமாக தீர விசாரித்து ஹரியினிடம் பக்தி செய்கிறவன் புத்திமான். அவனுக்கு கைவல்யம் எனப்படும் முக்திகூட பெரிதாகத் தோன்றுகிறதில்லே." நவகலாயகோமளம் ப்ரேமை தோஹனம் அசேஷ மோஹனம் தத்வ பரசின் முதாத்மகம், "என்கிற கிருஷ்ண பிரும்மத்தை ஸ்திரிகள், புருஷர்கள், யதிகள், ஸகல சேதனுசேதனங்கள் கண்டு அந்த உருவத்தில் மயக்கமடைகின்றனர். ஹரியினுடைய மோஹன உருவம் ஆயிரம் கோடி மன்மதர்களேயும் மயக்கிவிடுகிறது. அந்த பிரபுவை ஒரு தடவை பார்த்தவர்கள் காம விகாரத்தில் மூழ்கிப் போய்விடுகிறுர்கள். அவருடைய ஜகன்மோஹன ரூபம் சேடன அசேடன வஸ்துக்களேயும், பசு, பக்ஷி, கன்றுகளேயும் கரையச் செய்கிறது. (அவருடைய அதராம்ருதத்தைப் பருகின கோபஸ்திரிகள் பேராசையுடன் அந்த பிரபுவினிடம் ஆசையை வைத்து

தங்களது ஸ்வயநிலையை மறந்துவிடுவதில் ஆச்சர்யம் ஒன்று மில்லை. பிரபோ, இந்த ரஹஸ்யம் தங்களுக்குத் தெரியுமே.) பக்தியை அனுஷ்டிப்பதினால், பிரபு ஸம்ஸ்ருதியாகிற ஜன்ம இறப்பு சுழல்களின் மூலமாகிற அவித்யை அழிந்து விடுகிறது. ஒருவித பிரயாசையுமின்றி பக்தன் பரமாத்மாவுக்கு பாரதந்திரனாகி, தன்னுடைய அஹங்கார மமகாராதிகளை நஷ்டப்படுத்திக் கொள்கிறான்." (768)

"ஒருவன் மதுரமான விருந்தைச் சாப்பிடுகிறான். அதனால் அவன் திருப்தியை அடைகிறான். அந்த போஜனத்தை அவனுடைய உதரத்திலிருக்கும் ஜாடராக்னி அவனுடைய உத்தரவில்லாமல் அதுவாகவே அந்த உணவை பஸ்மமாக்குகிறதல்லவா? அதுபோல பிரபு, ஹரியினிடம் செலுத்தும் பக்தி நல்ல தேகமன சௌக்யத்தையும், சௌபாக்ய செல்வங்களையும் இன்பங்களையும் இயற்கையாகவே அளிக்க வல்லமையாக விருக்கிறது. ஹரிபக்தியைக் கொண்டவன் பரமசிவனைப்போல ஆனந்தக் கூத்தனாகவும், மிருடனாகவும் ஆகிவிடுகிறானல்லவா?" (769)

"உரகாரி, ஸர்ப்பங்களுக்கு எதிரியே, "நான் ஹரிபகவானுடைய சேவகன், அவர் எனது ஸ்வாமி", இந்த ஸ்வபாவம் அவனுக்கு இயற்கையாகவே ஏற்பட்டுவிடுகிறது. இந்த பாவத்தினால் அன்றி, பிரபு, ஸம்சார ரூபியாகிற சமுத்திரத்தை அவனால் வேறு எந்த உபாயத்தாலும் தாண்ட முடியாது. ஆகையினால் பிரபு, நான் தீர விசாரித்துப் பார்த்துவிட்டு ஸ்ரீராமனுடைய பாதபங்கஜங்களைச் சேவை செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்று சித்தாந்த பூர்வமாகச் சொல்வேன்." (770)

"சேதனா சேதனர்கள் ஒரு தடவை ஸ்ரீராம பரபிரும்மத்தை தர்சனம் செய்து மோஹித்துப் போகிறார்கள். அதைப்போல் பறவைகளும், மிருகங்களும், பசுக்களும், விருக்ஷங்களும், மானிடர்களும், தேவர்களும் ஸ்திரிகளும் நாகயக்ஷகின்னரர்களும், பிரபு, ராமபதங்களில் சிநேகமுள்ளவர்களாக, அந்த பிருந்தாவனத்தைக் கண்டு தங்கள் தேக ஸ்திதி நிலையை முழுவதையும் இழக்கிறார்கள். சேதனன் ஜடனாகிவிடுகிறான். ஜடன் சைதன்ய ரூபமாகி விடுகிறான். இந்த ஸாமர்த்தியம் என் பிரபு ஸ்ரீ ரகு நாயகனைப் பஜிப்பதால் அல்லவோ யேற்படுகிறது. அவர்களே ஜீவர்களில் மிக்க பாக்யமுள்ளவர்கள் அன்றோ.? (கோதண்டத்தைத் தரித்த ராமனையும், வேணுவைத் தரித்த கிருஷ்ணனையும் கண்டு,) "அசைகின்ற துளிர்போன்ற தங்களுடைய தேக அதர

ஸ்பர்சத்தால், பிரபோ,'' அவைகளின் நிஜதேக நிலையை இழந்து, (நம்மாழ்வாராதிகளைப் போல, பேச்சு மூச்சின்றியும், கோப ஸ்திரிகள் மோஹமடைந்து அடைந்த இன்ப நிலையையும் போன்றும்,) அவைகளும் அடைகின்றதே, ஆச்சர்யமல்லவா பிரபு? தங்களுக்குத் தெரியாததா? பகவானுடைய மாந்துளிர் போன்ற பாதங்களின் ஸ்பரிசத்தால் அடையாளம் செய்யப்பட்ட தேகத்தை உடைய ஹரிவாஹனரே, நீரே சொல்லும்.'' (771)

''பிரபு, தாங்கள் என்னிடம் வினவியதால் ஞான ஸித்தாந்தம் எனப்படும் ஸாங்கியம்; பரஞானம் என்பதையும் விளக்கிச் சொன்னேன். அதன் பிறகு பக்தியைப் பற்றியும், அதில் ரத்ன மணியாக பிரகாசிக்கும் ஒளியையும் பற்றிச் சொல்கிறேன். கேளும், பிரபு, சீதாராம பக்தி சிந்தாமணியைப் போல அழகானதாகவும், ஸர்வாபீஷ்ட ஸித்தியைக் கொடுப்பதாகவும் இருக்கிறது. கருடரே, எந்த மஹாத்மாவிடம் சீதாராமன் வசிப்பார்களோ, எவர்களின் ஹ்ருதயக் கோவிலில் அவர்கள் குடிகொண்டு (தியாகராஜ, துளசிதாஸ, வால்மீகி, கம்பர் போன்ற மஹாத்மாக்களிடம் வசித்தது போல) ஸந்ததமும் வசிக்கின்றார்களோ, எவர்களுக்கு ஸந்ததமும் சீதாராமனே குலதனமாகவும், ஜீவனாகவும் இருக்கிறார்களோ, (772)

''அப்பேற்பட்ட மஹானுபாவர்கள், உள்ளும் புறமும் சந்தோஷமிகுதியினால் பிரகாசிக்கிறார்கள். அவர்களே ஸ்வயம் பிரகாசர்கள். அவர்களுக்குத் தீபம் ஒன்றும் வேண்டாம்; நெய் வேண்டாம்; திரியும் வேண்டாம்; அந்த சிந்தாமணி ஸ்வயமாகவே ரத்னம், வெள்ளி, ஸ்வர்ணத்தைக் கக்கிவிடுவதால் தரித்திரம் கிட்ட நெருங்காது. பிரபோ, அந்த மஹான்களிடம் லோபமாகிற காற்று அடிப்பதில்லை. அவர்களுடைய ஞானதீபம் அணைகிறதில்லை. ஸ்வயம்பிரகாசர்களாக அவர்கள் இருப்பதால், மற்றவர்களின் சகாயமும் அவர்களுக்குத் தேவையில்லை.'' (773)

''அவர்கள் ஞானச் சுடராக விருப்பதால் பிரபலமான மோஹங்களால் யேற்படும் அவித்யையும் அழிந்துபோகிறது. மதம், மாத்ஸர்யம், ஆகிற விட்டிற் பூச்சிகள், இன்னும் அவைகளின் தோஷ ஸமுதாயங்கள், தங்களது தோல்வியை ஒப்புக்கொண்டு ஓடிப்போய் விடுகின்றன. அவர்களிடம் நிஜதாஸ்ய பக்தி வாழ்வதால், காமக்ரோதலோபம் இன்னும் அவர்களைப் போல அநேக துஷ்டர்கள் கிட்ட நெருங்குவதில்லை.'' (774)

''அப்பேற்பட்ட ராம பக்தர்களுக்கு விஷமும் அமிருதமாகி விடுகிறது. சத்ருமித்ரனாகிவிடுகிறான். அவனுக்கு அது அந்த

மணியினுல் ஏற்படுகிறது. அந்த சுகம் பரம சுகமாகவிருக்கிறது. அவனுக்கு மிகப் பெரிய மனோவியாதிகளும் ஏற்படுகிறதில்லை. அவ்விதம் நேர்ந்தாலும் அவனுக்குத் தாங்கும் சக்தி ஏற்படுகிறது. அதனுல் அவைகள் பாரமுள்ளவைகளாகவும், சுமையுடனும் இருப்பதாகவுமில்லை. ராம பக்தியில்லாதவர்கள் அந்த தாபங்களிலிருந்து மிக்க கஷ்டத்தை அனுபவிக்கிருர்கள். ஆனுல் அவைகள் ராமபக்தியுள்ளவர்களிடம் வியாபிக்கிறதில்லை. ராம மணி அப்பேற்பட்ட மஹா பொக்கிஷமாக விருக்கிறது.'' (775)

[தியானம்

சீதாராமா, நாராயணு, உங்களை உமாமஹேஸ்வரர்களை முன்னிட்டு சரணமடைகிறேன். பிரபோ, உமை பிரகிருதியாகவும், மஹேஸ்வரர் மஹா பிராக்ஞுகவும் விளங்குகிருர். உமாமஹேஸ்வரர்களே, புத்தி, க்ஷேத்ரக்ஞன் போல விருக்கும் நீங்கள் ஆத்மா பிரகிருதி தத்வமே, நீங்களே இருபத்தைந்தும், இருபத்துநான்காம் தத்வங்களாகச் சொல்லப்படுகிறீர்கள். ஹிரண்யகர்ப்பரே, விரிஞ்சி, சம்புவே, க்ஷரம் என்றும், அக்ஷரம் என்றும் சொல்லப்படும் ஜகத்தும் ஆத்மாவும் நீங்களே. இருபத்தைந்தாம் தத்வம் எனப்படும் புருஷன் சரீரமில்லாதவன். அவனே எல்லா மூர்த்திகளுள்ளவனுகவும், மூர்த்தியில்லாதவனுகவும், சேதன வஸ்துக்களுக்கு அறிவைக் கொடுத்து, எப்பொழுதும் எல்லா மூர்த்திகளாலும் ஹ்ருதயத்தில் ஆத்மாவாக இருக்கிருன். அவன் குணமில்லாதவனுக விருந்தும், குணமுள்ளவன் என்ற பெயருடன் எப்பொழுதும் விஷயமாகிருன். ஸ்ருஷ்டி பிரளயங்களில் சம்புவானவரும், ஹிரண்யகர்ப்பரான இவனே ஸமர்த்தனுக விருக்கிருன். அவனே பிரகிருதியுடன் கூடி விகாரத்தை அடைகிருன். விகாரத்தை அபிமானிக்கிறவனுகவும், ஸத்வரஜஸ் தமஸ்ஸாதிகளால் அந்த அந்த பிறப்பில் அழுந்துகிருன். பரமாத்மாவை அறியாத அக்ஞானிகளாகிற ஜனங்களுடைய பழக்கத்திஞல் ஆத்மாவை அறியாமல், சுக வாஸத்திற்கு இருப்பிடமான சரீரம் இவைகளின் மயமாகி, நான் வேறு என்று அறியாமல், ''நான் இப்படிப்பட்டவன், அப்படிப்பட்டவன்,'' என்று அகங்கார ஸ்வரூபமாக பிராணன் முதலிய குணங்களை ஆஸ்ரயித்து, பிரகிருதியைச் சேர்ந்த ஸம்சாரியாகிருன். இவ்விதமாக அவ்யக்தத்தின் விஷயத்தை வித்வான்கள் க்ஷரம் என்று சொல்லுகிருர்கள். இருபத்தைந்தாம் தத்வமான

புருஷன் ஞானத்தினாலே பிரவர்த்திக்கின்றார். புருஷன் கார்ய ரூபமாகி லிங்கத்தின் மத்தியை அடைந்து, பிரகிருதியைச் சேர்ந்த விகாரமில்லாத லிங்கமாகிறான். இந்திரியங்களை நான் என்றும், தான் ஸ்வபாவகமாகவே விகாரமில்லாதவனாக விருந்தாலும், தான் விகாரமுடையவனாக விருக்கிறான் என்று அவன் நினைக்கிறான். ஆத்மாவை லிங்க சரீரமில்லாத போனாலும், லிங்கமுள்ளதாகவும், காலமில்லாதவனாயினும் காலமுள்ளவனாகவும், புத்தியாகிற ஸத்வமில்லாதவனாயினும் ஸத்வமுள்ளவனாகவும், தத்வமாகவும், மரணமில்லாததாயினும் மரணமுள்ளதாகவும், ஸஞ்சாரமில்லாததாயினும் ஸஞ்சரிப்பதாகவும், சரீரமில்லாததாயினும் சரீரமுள்ளதாகவும், உற்பத்தியில்லாததாயினும் உற்பத்தியுள்ளதாகவும், ஸம்சாரமில்லாததாயினும் ஸம்சாரமுள்ளவனாகவும், கர்த்தாவாகவில்லாத போதிலும் கர்த்தாவாகவும், காரணமில்லாத போயினும் காரணமுள்ளதாகவும், நாசமில்லாததாயினும் நாசமுள்ளவனாகவும், அவித்வான்கள் அபிமானிக்கிறார்கள். அப்பேற்பட்ட க்ஷர அக்ஷரம் என்கிற தத்வங்களை நமஸ்கரித்து, உமாமஹேஸ்வரர்களை மனதில் தியானித்து, லக்ஷ்மி சம்பன்னனான நாராயணரை சரணம் அடைகிறேன்.]

"பிரபு, எந்த மஹானுபாவனிடம் ராமபக்தி எனப்படும் சீதாமணி வசிக்கிறாளோ, அவனுக்கு ஸ்வப்னத்தில் கூட துக்கம் ஸம்பவிக்கிறதில்லை. க்ஷர அக்ஷரங்களின் லக்ஷணங்களை அறிந்த வித்வான்கள், உமாமஹேஸ்வர தம்பதிகளைப் போல, மிக்க அனுபவசாலிகளாக, மிக்கக் கெட்டிக்காரத்தனத்தால் சீதாமணி, ராஜலக்ஷ்மியாகிற ராமபக்தியை அடைந்து, அந்த பக்தியின் உபாயத்தினால், அந்த மணியின் பிரபாவத்தினால் தங்களுக்கு மேன்மையைத் தேடிக்கொள்கிறார்கள். அந்த சீதாமணியாகிற பரம பக்தியை அடைவதற்கு, பரபக்தி, பரஞானம் கொண்ட வித்வான்கள் ஸதா முயற்சித்துக் கொண்டிருக்கிறார்கள்." (776)

"பிரபு, இந்த ரத்னமணியாகிற பக்தி சூடாமணி ஜகத்தில் அவதரித்து, பிரத்யக்ஷமாக நேரில் காணப்பட்டு, அதுவே தன்னை வெளிப்படுத்திக் கொண்டிருந்தாலும், மனிதன் அதை நிரந்தரமாக அடைவதற்கு ஸ்ரீராம கிருபை ஒன்றினால்தான் முடியும். ஆதலால் ராமகிருபையை அடைவதற்கு அவர்கள் முயற்சிக்கிறார்கள். எவ்விதம் பிரகிருதி புருஷனுடைய ஆடையினால் வஸ்திரபூஷிதையாக விளங்குகிறாளோ, அதுபோல ராம கிருபையாகிற சுகந்தமான உபாயத்தினால், அவன் நிரந்தரமாக

ராமகிருபையை அடைகிருன். நரஸ்ரேஷ்டர்கள் உத்தமமான ராமகிருபையை சுலபமான வழிகளில் ஸம்பாதிப்பதை விட்டு விட்டு, சுலபர் சுசீலரான ஸ்ரீராமனை எளிதில் அடையாமல், பாக்யஹீனர்களாக அவர்கள் கடினமான உபாயங்களை ஏன் அனுசரிக்க வேண்டும்?'' (777)

''வேதபுராணங்கள் மிக்க பாவனமான பர்வதங்கள், ரத்னங்கள் நிறைந்த அப்பேற்பட்ட பர்வதங்களின் பொக்கிஷமாக ஸ்ரீராம கதாம்ருதம் விளங்குகிறது. ஸாது புருஷர்கள் நல்ல மதியை கோடாரியாகக் கொண்டவர்களாக, இந்த ரகஸ்ய பொக்கிஷத்தை ராமகிருபையினுல் அறிந்து கொண்டு, ஹே கருடமஹாராஜரே, ஞானம், வைராக்யம் ஆகிய இரு நேத்ரங்களால், அந்த ரத்னகிரியைத் தோண்டுகிருர்கள்.'' (778)

''விஸ்வாஸம் என்கிற மனேபாவத்துடன் எல்லாப் பிராணிகளிடம் பிரேமை செலுத்துகிறவர்களாக, அந்த மஹாத்மாக்கள் தேடிக்கொண்டு, கடைசியில் வெற்றி பூர்வமாக, சுகதாயகமான சிதாமணியை, ரத்னசூடாமணியை, ராமபக்தி தாயகமான சிந்தாமணியைக் கண்டுபிடித்து தோண்டி எடுக்கிருர்கள். பிரபு, நான் இந்த விஷயத்தில் அடிக்கடி அடிக்கடி ஆலோசித்து, சிந்தனை செய்து கடைசியில், பிரபு, இந்த விஸ்வாஸ புத்தியினுல் நான் ராமனையும், ராமனுடைய தாஸர்களையும் பெரிதாக மதிக்கிறேன். பிரபோ, இந்த விஷயத்திலும் ராமனை விட ராம சேவகன், ராமதாஸன் அதிகப் பெருமையுள்ளவனுக விளங்குகிருன். அதையும் விவரித்துச் சொல்கிறேன் கேளும்.'' (779)

''ராமன் என்கிற பரபிரும்மம் ஒரு பெரிய மஹாசமுத்திரம். அந்த ஸமுத்திரத்திற்கு ஸஜ்ஜன புருஷர்கள் ராமாம்ருதத்தை வர்ஷிக்கும் புஷ்கலாவர்த்தங்களாகிற கனமேகங்களைப் போல விருக்கின்றனர். என் பிரபு ஹரிபகவான், ஒரு சந்தன விருக்ஷம், ஸாது ஜனங்கள் அந்த விருக்ஷத்தின் மணத்தைப் பரவச் செய்யும் மந்தமாருதம். யக்ஞம், தவம், இந்திரிய மன அடக்கம் ஆகிற ஸகல ஸாதனங்களுக்கும், பிரபத்தி ஆகிற உபாயங்களுக்கும், கர்மம், பக்தி, ஞானம் ஆகிற மார்க்கங்களுக்கும் ஏகமாத்திரமான பலன் அழகான ஹரிபகவானிடமுள்ள பக்தி ஒன்றுதான். குருமஹாராஜருடைய அனுக்ரஹ பிரஸாதமின்றி ஹரி பக்தி யாவராலும் இதுவரை சம்பாதிக்கப்படவில்லை.'' (780)

''இவ்விதம் தீர ஆலோசித்து, பிரபு, நான் ஸத்ஸங்கத்தை முயற்சியுடன் அடைந்திருக்கிறேன். கருடபகவானே, அவர்

களுக்கு ராமபக்தி சுலபமாகக் கிடைத்து விடுகிறது அல்லவா? (781)

"பிரபு, வேதங்கள் க்ஷீர ஸாகரமாக விருக்கின்றன. பரஞானம் மந்திரா சலம் போல மத்தாகவுள்ளது. ஸாதுக்கள் தேவதைகளைப்போல விருக்கிருர்கள். ராமகதா ஸுதாவாகிற அம்ருதம் கடைந்து எடுக்கப்படுகிறது. அந்த அம்ருதத்தின் தித்திப்புத்தானே மதுரமான பக்தியாக விளங்குகிறது." (ஸ்ரீராம னுடைய அவதாரம், சீதை, சௌமித்ரி, பரதன், சத்ருக்னன் இன்னும் அநேகர்கள் கூடி நடத்திய ஸ்ரீராமனுடைய திரு அவதாரச் செய்கைகள் அம்ருதத்தைப் போல தித்திப்பாகவும், சகல புருஷார்த்தங்களையும் சௌக்யத்தையும் ஆனந்தத்தையும் அளிக்கின்றன. பாமாமணியாகிற ஜானகியுடன் அந்த பிரபு நடத்திய செய்கைகள் கர்ம பந்தங்களை அறுத்து கலி கல்மஷங்களையும் போக்கி, ஸ்ரீசீதாராம பாதங்களில் சுலப மாகச் சேர்த்து விடுகின்றன. அப்பேற்பட்ட ராம கதா ஸுதா ரஸத்தை, ஹே துஷ்ட மனஸே, நீ ஏன் பருகத் தயங்குகிருய்? ஹே ராமய்யா, சீதை, லக்ஷ்மண, பரத, சத்ருக்ன, ஆஞ்சநேயாதி களுடன் பூலோகத்தில் அவதரித்ததாயே, சதரூப லாவண்யா, தியாகராஜ `துளசிதாஸ் வால்மீகாதி முனிவர்களாலும், கம்ப நாட்டாழ்வாராலும், வியாஸ, சுகப்பிரும்மத்தாலும் அடிக்கடி அடிக்கடி பக்ததாஸ்யரூபமாவும் வினயமாகவும் ஸமர்ப்பிக்கப்பட்ட சதரூப ராகரத்ன மாலிகையை அணிந்து கொண்டு அழகு பார்ப் பதற்காகவல்லவோ, நீ அவதரித்தாய் என்று நான் சொல்லித் தான் தெரிந்து கொள்ளவேண்டுமா? பிரபு, அந்த மஹான்களை நாரதரை புறம் வைத்து நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். என் னிடமும் உங்களுடைய ராஜதயை ஸம்பவிக்குமா? சீதே, உமா தேவி, காமாக்ஷி, நீயே சொல்.) (782)

"ராமபக்தி, ராம ஸாம்ராஜ்யம், ராமஸுதாரஸம் ஆகியவை களைக் குடிக்கும் மஹாபாக்யமுள்ள ராஜசேவகனுக்கு விரக்தி தானே கேடயம்; ஞானம் தானே `கத்தியாகிறவாள். மதம் லோபம், மோஹம் ஆகிற சத்ருக்கள். ஹரிபக்தியாகிற ராம னுடைய தயை, ராமனுடைய ராஜ நீதி, ராம சௌக்யம், நாரத பிரும்மா, சிவன், தேவதைகள் ஆகியவர்களால் காத்துக் கிடந்து மஹா தவத்தின் பலமாகப் பெறும் ராமதர்சனம், ராம சங்கல்பம், ராமகைங்கரியம், ராம ஆக்ஞை, ஆகிய எல்லாம் அந்த மஹா பக்தியின், பரமா பக்தியின் அருட் பிரஸாதங்கள் அல்லவோ?

ககேசரே, இதை நீரே தீர விசாரித்துத் தெரிந்து கொண்டிருக்கிறீர்.'' (783)

கருட மஹாராஜர் மீண்டும் சொன்னார். '' பிரபு, தங்களிடம் வினயமாக என் வார்த்தைகளை மீண்டும் ஸமர்ப்பிக்கிறேன். [அவ்விதம் சொல்லும் போது, கருடனின் மனத்தில்,'' ஹே கஜரக்ஷகா, கோதண்ட பாலதாஸானுடேன தியாகராஜ ஸேவித ராமா, வர தியாகராஜர், துளசிதாஸர் கம்பர் போல மஹா யோகிகளின் ஹ்ருதயத்தில் ஸதா வசித்துக் கொண்டு, தனது பத்ம மலரடிகளை அவர்களை அணிந்து கொள்ளும்படி செய்துகொண்டு ''நிண்டு'' ப்ரேமையுடன், அளவு கடந்த பிரேமையுடன், சரீரம் மெய் சிலிர்க்க, வார்த்தைகள் கண்டத்தில் தழுதழுக்க, ஸதாப் பிரபுவைத் தியானித்து பூஜித்த வண்ணமிருக்கிறார்களே, அந்த மஹானுபாவர்களுடைய நிஷ்காம பக்தியானது எவ்வளவு மஹத்தானது என்று யோசிக்க ஆச்சர்யகரமாக விருக்கிறது'' என்று கருடன் தனக்குள் எண்ணமிட்டார்.] [மீண்டும் காகபுசுண்டியை நோக்கி அவர் சொல்லலானார். ''ஸ்வாமி, குருநாதரே, தண்ட பாணியாகிற ராமனைப் பஜிக்கும் மஹாத்மாவே, யமதர்மராஜன், காமாக்ஷியின் பக்தர்களிடம் கிருபை செலுத்துவதுபோல,] நீரும் என்னிடம் அருட்கொண்டு என் வார்த்தைகளை செவிசாய்த்துக் கேளும். நான் தங்களுடைய தாஸன். உங்களைச் சேர்ந்தவன் என்று ஸ்வீகரித்து அனுக்ரஹ உள்ளத்துடன் பிரபு, என்னுடைய ஏழு கேள்விகளுக்கு தயைகொண்டு விடை கொடுக்கவேண்டும்.'' (784)

'' நாதரே, தீரபுத்தியுள்ளவரே, முதல் கேள்வியை சொல்லுகிறேன். எல்லாச் சரீரங்களிலும் எந்த சரீரம் அனுத்தமமாகவும், அதிதுர்லபமாகவும் கிடைக்கக்கூடியது? எல்லாத் துக்கங்களிலும் எந்த துக்கம் சகிக்க முடியாதபடி ''மஹத்தாக'' விருக்கிறது? எல்லாவற்றிலும் எது அத்யந்த சுகத்தைத் தரக்கூடியது? இவைகளை தங்களுடைய பெரும்புத்தியினால் ஆராய்ந்து, எனக்கு சுலபமாகவிளங்கும்படி சொல்லவேண்டும்.'' (785)

''மேலும் ஸாதுக்கள், அஸாதுக்கள் ஆகியவர்களுடைய மர்மபேதங்களையும் தாங்கள் நன்கு அறிவீர்கள். அவர்களுடைய இயற்கையான ஸ்வபாவங்களையும் கருணைகூர்ந்து எனக்குச் சொல்லவேண்டும். பிரபு, வேதங்களில் பிரசித்தியாகச் சொல்லப்பட்ட எந்த விஷயம் மஹத்தான புண்யத்தை அளிக்கக்கூடியது? எல்லாப் பாபங்கள் பாதகங்கள் ஆகியவற்றில் எது பரம

கொடுமையானதும் பிராயச்சித்தமும் இல்லாத மஹா பாதகம்? ஸ்வாமி, தாங்கள் தயை கூர்ந்து சொல்லவேண்டும்.'' (786)

''மனோ நோய்கள் என்று சொல்லக்கூடியவை யாவை? பிரபு, தாங்கள் ஸர்வக்ஞர். எனக்கு சிக்ஷை செய்வதற்கு அதிகாரி. என்னிடத்தில் கிருபை கொண்டு உபதேசிக்க வேண்டும்'' என்று வினயபூர்வமாக கருடன் தண்டன் செய்து காகபுசுண்டியைக் கேட்டார். பிரபு காகபுண்டி கருடனுடைய வினய நம்ரதிகளை ஆனந்தத்துடன் ஸ்வீகரித்துக்கொண்டு, அதிப்ரீதியுடன் சொல்ல ஆரம்பித்தார். நான் உன்னுடைய கேள்விகளுக்கு ஸங்க்ஷேபமாக பதில் சொல்லுகிறேன். கேளும்.'' (787)

[தியானம்

பிரபோ, நாராயணா, சீதாராமா, சரணம் சரணம். வஸிஷ்டர், ஜனகர் ஆகியவர்களைப் புறம் வைத்து உங்களை நமஸ்கரிக்கிறேன். ராமா, நாராயணா, நீதானே இருபத்தாருவது தத்வம் என்று சொல்லப்படும் பரபிரும்மமாக விருக்கிறீர். மத்ஸயத்துக்கும் ஜலத்துக்கும்போல பேத புத்தியால் பார்ப்பவன் அக்ஞானம், அவித்யையை உடையவனாகக் கருதப்படுகிறான். இவைகளுக்கு அநேகத் தன்மையையும், ஏகத்தன்மையையும் அறிகிறவன் அறியத்தக்கதான பரஞானத்துடன் அவ்யக்த ஞானம் என்கிற ஜீவன் இருபத்தைந்தாம் தத்வம் என்று அறியப் படும் ஜீவன் மோக்ஷம் என்று சொல்லப்படுவதை அடைகிறான். தேகத்திலிருக்கும் இவன் அப்பொழுது தன்னைக் கேவலனாகி அறிந்துகொண்டு, பிரக்ருதி ஸம்பந்தத்தைத் தள்ளி, பரமாத்மா வைப் பார்த்துக்கொண்டிருக்கிறவனாக, அந்த பரஞானம் எனப் படும் அவ்யக்த விஷயத்திலிருந்து விடுவிக்கத்தக்கவனாக விருக்கிறான். அவன் அப்பொழுது பரமாத்மாவோடு சேர்ந்து, பரமாத்மாவின் தர்மத்தை உடையவனாகிவிடுறான். சுத்த ஸத்வத்துடன் சேர்ந்து அவன் சுத்த விசுத்தனாகிறான். அவன் ஞான ரூபத்துடன் ஞான ரூபனாகிறான். ஆனந்த ரூபத்துடன் ஆனந்த ரூபனாகிறான். முக்தனுடன் சேர்ந்து முக்தனுடைய தர்மத்தை அடைகிறான். வியோக தர்மத்தை அடைந்து, இவனும் வியோக தர்மமுடையவனாகிறான். இகத்தில் மோக்ஷமுடையவனுடன் சேர்ந்து, மோக்ஷமுடையவனாகவும் சுசியுமாகிறான். நிர்மலமான ஆத்மாவுடன் சேர்ந்து இவனும் நிர் மலமாகிறான். கேவலனோடு சேர்ந்து இவனும் கேவலனாகிறான்.

சுதந்திரனோடு சேர்ந்து இவனும் சுதந்திரனாகிறான். இவ்விதம் ராமா, நாராயணா, உன்னைப் பக்தி செய்து வழிபடுகிறவர்கள் நாளடைவில் அக்ஞானமாகிற சமுத்திரத்தைத் தாண்டி மேலான மங்களத்தைப் பார்க்கிறார்கள். அப்பேற்பட்ட விடுதலையை அடைந்தவன் உமா மஹேஸ்வரர்களைப்போல, ரஜஸ்ஸும் தமஸ் ஸும் இல்லாதவர்களாகிறார்கள். அப்பேற்பட்ட உமா மஹேஸ் வரர்களை நமஸ்கரித்து அவர்களையும் புரஸ்ஸகாவாக வைத்து நான் சீதாராம பாதங்களில் சரணமடைகிறேன். ஹேராமா, தியாகராஜாதிகளுக்குக் கிடைத்ததைப் போல, உன் ராஜகிருபை எனக்கு கிடைத்தால் போதும். ஹே சீதாபதி, என் சித்தத்தில் குடிகொள்ள ஓடிவா. மஹாத்மாக்களாகிற பிரும்மா, ஸனக ஸநந்தனாதிகள் மஹேந்திரன் இந்திராணி, திக்பாலர்கள், அவர்க ளுடைய மஹிஷிகள் நாரதாதிகள் உன்னைப் பஜித்து இன்பமடை கிறார்கள். சிலையாக விருந்த அஹல்யை உனது பாதங்களின் மகிமையினால் ஸித்திபெறவில்லையா? ஹே ஸம்சார தாபங்களைப் போக்கும் சூரனே, தியாகராஜாதிகளை ஸம்ரக்ஷித்தது போல என்னையும் கிருபையுடன் பார்த்து அனுக்ரஹி.]

"பிரபு, அநேகமாயிரம் ஜன்மங்களுக்குப் பின்பு தேவ லோகத்தையும், பசு முதலிய விலங்கு ஜாதியையும், மனித ஜன்மத்தையும் அடைகிறான் ஒரு ஜீவன். ஆகையினால் மனுஷ்ய ஜன்மம் மிக துர்லபமானது. அந்த மனுஷ்ய சரீரத்தின் மீது ஆசை சகல சராசரங்களில் இருக்கும் ஜீவர்களுக்கும் இருக்கிறது. ஏனெனில் இந்த மனுஷ்ய சரீரம்தான் நாகம், ஸ்வர்க்கம், மோக்ஷ மார்க்கம் என்று சொல்லப்படும் ஸ்ரீராம பாதத்திற்கு ஏணியைப் போல விருக்கிறது. அந்த மோக்ஷ பதத்திற்கு மங்களத்தைத் தருவது ஞானம், வைராக்யம், பக்தி ஆகியவைகள்." (788)

"எந்த மஹானுபாவர்கள் மனுஷ்ய சரீரத்தைத் தரித்து, ப்ராப்யருசி கொண்டு, ஸ்ரீ ஹரியினுடைய விஷயங்களில் ஈடு பட்டு, ஏகமாத்திரமாக பஜிக்கிறார்களோ, அவர்கள் ஸ்ரீ ஹரி நாராயண பதத்தை அடைகிறார்கள். அவ்வித பக்தியில்லாமல் விஷய போகங்களில் ஈடுபட்டவர்களாகவிருந்தால், அவர்கள் மதிமோசம் போய், அபாக்யர்களாக நரகத்தில் விழுந்து இகத் திலும் பரத்திலும் கஷ்டப்படுகிறார்கள். அந்த அபாக்யர்கள் சிந்தாமணியை எறிந்து விட்டு, விதியினால் கெடுக்கப்பட்டவர் களாகி, கண்ணாடித் தூள்களை ஆஸ்ரயிக்கிறார்கள்." (789)

"இந்த ஸம்சாரத்தில் தரித்திரத்தைப்போல ஸமமான துக்கம் இல்லை. அதே மாதிரி ஸாதுக்களைப் போல ஜகத்திற்கு

சுகத்தைத் தருபவர்கள் இல்லை. பக்ஷிராஜரே, மனம் வசனம் கர்மம் இத்யாதிகளால் பரோபகாரம் செய்வது இந்த கற்பக விருக்ஷத்தைப் போலவிருக்கும் ஸாதுக்களுக்கு இயற்கையான ஸ்வபாவம் அன்றோ?'' (790)

''மஹாத்மாக்களாகிற இந்த ஸாதுக்கள் பிறர்கள் படும் துக்கங்களை தங்களுடைய துக்கங்களைப் போல சகித்துக் கொண்டு, ஸ்வீகரிக்கிறார்கள். ஆனால் அஸாதுக்கள் பரபிடை பரஹிம்சையைத் தொழிலாகக் கொண்டு ஜகத்தில் தாங்களும் துக்கமடைந்து அபாக்யர்களாகி விடுகிறார்கள். இந்த ஸாதுக்கள் அத்யந்த நளின ம்ருது ஸ்வபாவமுள்ளவர்களாகி, கிருபை என்கிற கவசம் கொண்டு, ''பூஜ்'' என்கிற விருக்ஷத்தைப் போல (சில மரங்கள் தங்கள் தோல் பட்டைகளைக் கொடுத்து, பிறர் களின் கஷ்டங்களைப் போக்குமாப் போலே) பிறர்களின் ஹிதத் திற்காக பெரும் விபத்துக்களை தாங்கள் ஏற்றுக் கொண்டு சகிக் கிறார்கள்.'' (791)

''ஆனால் துஷ்ட ஜனங்கள் சாக்கு துணியைப் போல பிறர் களைக் கட்டி பந்தனம் செய்து, அந்த நாசவேலையில் தங்களை நியமனம் கொண்டு, தங்கள் ஆயுள்களையும் இழக்கிறார்கள். பிரபு, ஸர்ப்பங்களின் எதிரியே, ஸ்வார்த்தமாகப் பிறர்களுக்கு துரோகம் செய்பவர்கள் பாம்பைப் போலும், எலியைப் போலும், (பெருச்சாளியைப் போலும்) பிறர்களுக்கு அபகாரம் செய்து கொண்டு, தாங்களும் ஒருவித நன்மையை அடைகிறதில்லை.'' (792)

''பிறர்களின் ஐஸ்வர்ய ஸம்பத்துக்களை நாசம் செய்வதில் அவர்களுக்கு மஹா ஆசை. ஆனால் அதில் அவர்கள் லாபமடை கிறார்களோ, அதுவும் இல்லை. அதனால் அவர்களும் நாசமடை கிறார்கள். ஆலம்கட்டி தானும் அழிந்துபோய், வயல்களிலுமுள்ள தானிய நெற்கதிர்களையும் நாசம் செய்துவிடுகிறது. அதுமாதிரி, கருடரே, துஷ்டர்களின் உன்னத ஸ்திதி கேதுவைப் போல ஜகத்திற்கு மஹா அனர்த்தத்தை விளைவிக்கிறது. கேது உதய மாகும் போது, ஜகத்தில் மஹா கஷ்டம் ஏற்படுகிறது அல்லவா?'' (793)

''ஆனால் ஸாதுக்களின் உன்னத ஸ்திதி எல்லோருக்கும் மங்களங்களைக் கொடுப்பதாகவும், பரமசுகங்களை அளிப்பதாகவு மிருக்கிறது. சந்திரனும், சூர்யனும் உதயமாகும் போது, ஸகல விஸ்வமும் நன்மையை அடைகிறதல்லவா? அதுபோல ஸாதுக்

களின் உன்னத உத்தம பதவி பிறருக்கு உபயோகப்படுகிறது. ஸ்வாமி, வேதங்களில் அஹிம்சையே பரமதர்மமாகச் சொல்லப் படுகிறது. அதுமாதிரி பரநிந்தையைப் போல கடுமையான தோஷமுள்ள பாபம் ஒன்றுமில்லை.'' (794)

"சங்கரபகவானையும், குருநாதரையும் நிந்தனை செய்யும் மனுஷ்யர்கள் அடுத்த பிறவியில் தவளைகளாக மாறுகிறார்கள். அதுமாத்திரமில்லை. அவர்கள் ஸஹஸ்ர ஜன்மங்களிலும் அதே சரீரத்தை அடைகிறார்கள். பிராம்மணர்களை நிந்திப்பவர்களும் அநேக தடவைகள் நரகத்தில் மூழ்கி, அதன் பிறகு வாயஸத்தின் ரூபத்தை எடுக்கிறார்கள்.'' (795)

"எந்த ஸ்வய அபிமானிகள் தேவதைகளையும், வேதங் களையும் நிந்தனை செய்கிறார்களோ, அவர்கள் ரௌரவ நரகத்தை அடைந்து பரிதவிக்கிறார்கள். அதுமாதிரி ஸாதுக்களை நிந்தனை செய்பவர்கள் ஆந்தையின் சரீரத்தை அடைகிறார்கள். அவர் களுக்கு மோஹரூபியாகிற ராத்திரி பிரியமாக விருக்கிறது. அது மாதிரி இவர்களுக்கு ஞானரூபியாகிற சூர்யன் அஸ்தமித்துப் போய்விடுகிறான்.'' (796)

"எந்த மூர்க்கன் எல்லா மனிதர்களிடமும் தோஷங்களையே பார்ப்பவனாகவும், நிந்தை செய்கிறவனாகவும் இருக்கிறானோ, அவன் வௌவாலின் ஜன்மத்தை அடைகிறான். இப்பொழுது மனோநோய்களின் விபரங்களைச் சொல்லுகிறேன். கருட மஹா ராஜரே, இந்த மனோவியாதிகளால் மனிதன் பெரும் மீளாத துக்கத்தை அனுபவிக்கிறான்.'' (797)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, சீதாபதி, ராமய்யா, தியாகராஜாதிகள் உன்னைப் பூஜித்ததால் உன்னையே அவர்களுக்குத் தந்தாய். பரதன் உன் பாதுகைகளைப் பூஜித்து மீண்டும் உன்னையே அடைந்தான். உன்னை அடைவது, உனது வைகுண்டபதத்தை விட மேலானது என்று நாரத, பிரஹ்லாத, வால்மீகி, தியாக ராஜாதிகள் சொல்லுகிறார்கள். பிரபு, நம்மாழ்வாரும் இதையே "நின்ற நிலை'' என்று சொல்லுகிறார். வெண்ணெய் தயிரில் அடங்கி மறைந்திருப்பது போல நீ ஸகல பிரபஞ்சங்களிலும் வசித்தாலும், இந்த மஹான்களை ஆராதித்து வந்தால், உன்னை யும் சுலபமாக அடைந்து விடலாம் என்று நாரத ஆஞ்சநேயாதி களை திருஷ்டாந்தமாகக் கொண்டு நான் நம்மாழ்வாரைப் புறம்

வைத்து, நாராயணு, உன்னை அடைய விரும்புகிறேன். ஸ்ரீயப்பதி, தாசரதி, ராஜ லக்ஷ்மியாகிற சீதை உன்னை முத்தமிடும்போது, என்னைப் பற்றி ராமா, உன்னிடம் நிச்சயம் சொல்லியிருக்கக்கூடும். பரதனும் சாமரம் வீசும் போது உன்னிடம் என்னைப் பற்றி கட்டாயம் சொல்லியிருப்பான். மாருத ஸுதனும் என் பூஜை நைவேத்யங்களை ஏற்றுக் கொண்டு அவ்விதமே சீதையிடமும் ராமனிடமும் சொல்லியிருப்பான். குஹனும் என்னுடைய தூயபக்தியைப் பற்றிச் சொல்லியிருப்பான். லக்ஷ்மணனும் உனக்குச் சேவை செய்யும்போதும், சத்ருக்னனும் அவ்விதமே எனது அகிஞ்சனத்தைப் பற்றி சொல்லியிருப்பார்கள். இவர்கள் எல்லோரும் உங்களுக்குச் சொல்லியும், இது சமயமா என்று நீங்கள் யோசிக்கிறீர்களே, உங்களுக்கு இது நியாயமா? ராமா, ஜனகஜா, ஒருவேளை நான் சொல்வதெல்லாம் உனக்கு வேடிக்கையாவும் பரிகாசத்திற்கு விஷயமாகவுமிருக்கும். நாராயணு, பராசரர்வழியில் நடந்து வரும் எனக்கு மஹாலக்ஷ்மியின் அருளும், நாரதவேதவியாஸர் பிஷ்மர் வழியில் ஊர்ந்து வரும் எனக்கு ஆசாரியகிருபையும் கிடைத்தல்லவோ, உனது திருவருள் கிடைக்கக் கூடும்? இந்த இரண்டும் யேற்படுவது உனது திருவுள்ளம் தானே. திரௌபதிக்கு எல்லாமாக நீயே தானிருந்தாய். விபீஷணனுக்கும், கஜேந்திரனுக்கும், பிரஹ்லாதனுக்கும் நீயேதானே எல்லாவற்றையும் கொடுத்தாய். அந்த மஹாபாகவதர்களை நமஸ்கரித்து விட்டு, உன்னை நான் நமஸ்கரிக்கிறேன். துளசி பிரியா, தியாகராஜஸேவித ராமா, சீதா சரணுகதனை எனக்கு ஹிதத்தை நினை. என் காலத்தையும் நினை. முராரி திரிலோகஜகத்பதே, "தத்வம்" என்று சொல்லப்படும் மருத்புரீசா, லக்ஷ்மி நாராயணு, கிருஷ்ணு, கோவிந்தா, சரணம் சரணம்.]

சகலமன நோய்களுக்கும் ஆதிகாரணம் அக்ஞானம் எனப்படும் மோஹம்தான். நிலையில்லாத தேகத்தில் காமத்தின் வசமிருக்கும் புருஷனுக்கு இவ்வுலகிலும் பரலோகத்திலும் நன்மை ஏற்படுவதில்லை. மோஹம் மனிதனை விபரீதமாயுள்ளவைகளை விரும்பச் செய்கிறது. அவன் இந்திரியங்களையும் மனத்தையும் அடக்காமல் பிரதி கூலமாக விருக்கும் காரியங்களிலிருந்து ஒழிவை அடைகிறுனில்லை. அதனுல், அவன் அந்த மனோவியாதியினுல் கஷ்டப்பட்டு, அதிலிருந்து சூலம் போல கொடிய வியாதிகளால் கஷ்டப்படுகிறுன். காமம் வாத ரூபமாக அவனுடைய தர்மபுத்தியைக் கெடுக்கிறது. அதனுல் அவன் சீக்கிரமாகவே

லோபத்திற்கு வசம் அடைகிருன். லோபம் எனப்படும் வியாதி அவனுடைய உடம்பில் அதிகமான கோழை, கபம் என்று நினைத்துக் கொள். கிரோதம் அவனுக்கு காமத்தின் ஏமாற்றத்தினுலும் லோப புத்தியினுலும் ஏற்படுகிறது. கிரோதம் அவனுக்குப் பித்தமாக விருக்கிறது. அதனுல் அவனுடைய ஹ்ருதயம், மார்பு பிரதேசம் கொழுந்துவிட்டு எரிகிறது. அவனுடைய உடம்பு அதனுல் தகிக்கப்படுகிறது. (798)

"வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் எப்போது ஒன்று சேர்ந்து அவனே வாட்டுகிறதோ, அப்போது ஸன்யபாதி என்று சொல்லப்படும் ஜன்னியுடன் கூடிய விஷ ஜ்வரம் ஏற்படுகிறது. அத்துடன் அவனுடைய விஷய மனேரதங்களின் ஆசைகளும் அதனுல் யேற்படும் ஏமாற்றங்களும், சிரமங்களும் அவனேப் பரம துக்கத்திற்கு ஆளாக்குகின்றன. ஒவ்வொன்றையும் திரிசூலம் என்று நினைத்துக் கொள்ள வேண்டும். அவைகளின் நாமங்களும் ரூபங்களும் பலவிதமாகயிருக்கிறபடியால், அவைகளே யாரால் வர்ணிக்கமுடியும்?" (799)

"மமதை, அஹங்காரம், ஆகியவற்றை சீழை உண்டு பண்ணும் புழுக்கள், பூச்சிகள் என்று நினைத்துக்கொள். பொருமை அப்பேற்பட்ட புண்களில் யேற்படும் அரிப்பைப் போல விருக்கிறது. சந்தோஷம் துக்கம் ஆகிய இரட்டைகள் தொண்டையில் ஏற்படும் கலகண்ட், கண்டமாலா, போன்ற ரோகங்களாக விருக்கின்றன. இவைகள் பிறர்களின் ஸம்ருத்தியைக் கண்டு அனல் போல கொழுந்து விட்டு எரிகின்றன. அவைகள் க்ஷய ரோகத்திற்கும் காரணமாக விருக்கின்றன. வஞ்சக புத்தி, குடிலபுத்தி, மனம் ஆகியவை குஷ்டத்தைப் போல விருக்கின்றன." (800)

"அஹங்காரம் என்பது அத்யந்த துக்கத்தைத் தரும் கால்வலி, முழங்கால் வீக்கம், கீல்வாதம் என்கிற ரோகமாக விருக்கிறது. டம்பம், கபடம், மதம், மானம் ஆகியவை பூச்சி, புழுக்களால் ஏற்படும் காலரா வியாதிகளாக விருக்கின்றன. விஷயபோகங்களில் இச்சையாகிற திருஷ்ணே, ஜலோதரம் போன்ற உதரரோகம், மேகநீர் ரோகம் போல விருக்கிறது. மூன்றுவித ஆசைகளாகிற புத்ரபுத்ரி ஸ்நேகம், தனம், கௌரவம் மரியாதை ஆகிய மூன்றும் குளிர்காய்ச்சலாக விருக்கிறது." (801)

"மத்ஸரம் எனப்படும் பொருமை, பிறர் சுகத்தைக் காண சகியாமை, அவிவேகமாகிற ஈஸ்வர நிந்தை ஆகிய இரண்டும்

ஜ்வரம்போல விருக்கிறது. இந்தவிதமாக மனேவியாதிகள், தேக வியாதிகள் பலவிதங்களாக விருக்கின்றன. அவைகளையாரால் முழுதும் வர்ணிக்க முடியும்?'' (802)

''பிரபு, மனிதனுடைய தேகவன்மை மிகமிக அல்பமானது. ஒருரோகத்தின் வசமடைந்தாலே மனிதன் எளிதில் மரண மடைகிருன். அவ்விதமிருக்கும் போது எல்லா வியாதிகளும் ஒருங்கே கூடி அவனைத் தாக்கினுல், அவன் எவ்விதம் உயிர் பிழைக்க முடியும்? இவைகள் அவனுக்கு நிரந்தரமாகக் கஷ்டத்தைக் கொடுக்கின்றன. அப்பேற்பட்ட நிலையில் பிரபு அவனுக்கு சமாதி எனப்படும் உத்தம சாந்தி எவ்விதம் ஏற்படும்?'' (803)

''பிரபு, மனிதனிடம் நியமம், தர்மத்தில் நம்பிக்கை, ஆசாரம் ஆகிய தர்மானுஷ்டானம், தவம், ஞானம் எனப்படும் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும் பரமாத்மாவின் ஸ்வரூபத்தையும் அறிதல், யாகம், ஜபம், தானம் ஆகிய கோடிக் கணக்கான அருமருந்துகள் இருக்கின்றன. கருடமஹாராஜரே, ஆனுல் அவைகளால் மனிதனுடைய ரோகங்கள் நாசமடைகிறதில்லை.'' (804)

[கருத்து :—பிரபோ, நாராயணு, நம்மாழ்வார் சொல்லியது போல, கபம் வாதம் பித்தம் ஆகியவைகளால் வாட்டப்படும் என் சரீரம் அந்திமஸ்திதியில், பிராணப் பிரயாண சமயத்தில் உன் நாமதேயத்தையும், உனது ரூபத்தையும், புகழ்பெற்ற உனது கதாம்ருதங்களையும் நினைக்கவொண்ணுமல், நான் பரிதவிப்பேனே. அதை நினைக்கும்போதே, எனக்குப் பயம் ஏற்படுகிறது. அப்போதைக்கு இப்போதே நான் சொல்லிவைக்கிறேன். ''அப்பா, முனியே, நான்முகனே, முக்கண்ணப்பா, என் பொல்லாக் கனிவாய்த் தாமரைக்கட் கருமாணிக்கமே, யென் கள்வா, தனியேனுருயிரே, யென் தலைமிசையாய் வந்திட்டு, இனி நான் போக வொட்டேன் ஒன்றும் மாயம் செய்யே லென்னையே'' நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.]

''இந்த மாதிரியான விதி ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் இந்த ஜகத்தில் ஏற்பட்டு, ஸகல சேதனு சேதனர்களும் பலவிதமான ரோகங்களால் பீடிக்கப்பட்டு, தாபத்தை அடைகின்றனர். இந்த ரோகங்களுடன் சோகமும், தாபமும், பரிதாபமும், மன சந்தோஷமும், பயங்களும், உற்ருர் உறவினர்கள், தனம் தான்யம், கிருஹம் முதலிய லௌகிக, ஐஹிக ஐஸ்வர்யங்களில் பற்றுதலும், அவைகளின் பிரிவினுல் ஏற்படும் துக்கங்களும்

ஜீவனைப் பல விதங்களால் துன்புறுத்தி நாசமடையச் செய்கின்றன. ஸ்வாமி, ஸர்வக்ஞரே, என்னுல் தங்களுக்கு சில மனோதேக நோய்களைப்பற்றிச் சொல்ல முடிந்தது. இதுமாதிரி அநேகம் இருக்கின்றன. அவைகளை முழுவதும் சொல்வதற்கு ஸாத்யமில்லை. அவைகளை அறிபவன் ஒருவனும் இல்லை.'' (805)

"இவ்விதம் ஜீவன் பல நோய்களால் அவதிப்படும்போது, அதிருஷ்டவசத்தினுல், அந்தரோகம், அதன் காரணம் ஆகியவை அறியப்படுமானுல், அந்த ரோகத்திற்கு மருந்து கொடுத்து அதைக் குணப்படுத்தலாம். ஆனுல் பிரபு அந்த ரோகம் முற்றிலும் நாசமடையாது. விஷய ரூபமாகிற அபத்ய (ரோகிகள் சாப்பிடக்கூடாத ஆகாரம் முதலியவற்றை உண்ணுதல்) முதலியவற்ருல் யோகம் ஸாங்க்யம் ஆகிய முறைகளில் தேர்ந்த மஹா முனிவர்கள்கூட கஷ்டப்படுகிருர்களே. அவ்விதமிருக்கும் போது, (பிரபோ, கிருபாளு, ஓஷதிகிரியில் வேதாந்த தேசிகருக்கு ஹயக்ரீவ மந்திரத்தைப் போதனம் செய்த மஹா கருடரே, ஆண்டாளுக்கு ரங்கபதியைக் காட்டிக்கொடுத்த ககனவாஹனரே, நாதனற்றவனும்) சாதாரண மனுஷ்யனுகிற என்னைப்போலிருப்பவனுக்கு எவ்விதம் அவைகளிலிருந்து விடுதலை அடையமுடியும்? இராமபிரானுடைய அருளால் எப்போதாவது ஒருசமயம் ஒருவன் பாக்கியம் பெற்றவனுகில், இந்த நோய்கள் அனைத்தும் அழிந்துவிடுகின்றன. ஸத்குரு எனும் நல்வைத்தியனுடைய சொல்லில் நம்பிக்கை ஏற்படும். விஷயங்களில் பற்று அறுபடுவது என்பதுதான் இந்த சிகித்சையில் பத்தியமாகும்.'' (நாராயணு, மஹாகுரு, லக்ஷ்மி, நாராயணு, அமரர்கள் புகழும் உனது சீலமே, சீலமெல்லையிலானடிமேல் அணி கோல நின் குருகூர் சடகோபன் சொல் பணிந்த எனக்கு பிரபோ, கிருத்திவாஸா, வைகுந்தமேறுதல் பான்மையே.) (806)

[கருத்து :—('' அஹிர்புதன்யரிஷி அருள் செய்தபடி '' நான் அபராதங்களுக்கு இருப்பிடம் என்னை ரக்ஷித்துக்கொள்ள வேறு உபாயத்தை நான் காணவில்லை. வேறு அடையவேண்டிய வஸ்து உன்னைத் தவிர இல்லாதவனுக விருக்கிறேன்.''

'' अहमस्म्यपराधानामालयो अकिञ्चनोऽ गतिः न धर्मनिष्ठोऽस्मि,''

ஆளவந்தார் சொல்லியபடி நான் கர்மயோகத்தையோ, ஞான யோகத்தையோ, பக்தி யோகத்தையோ, செய்தவனுமில்லை ;'' என்று பிரார்த்திக்கும் சேதனனுக்கு, தொண்டரோங்கள் பாடி

யாடச் சூழ்கடல் ஞாலத்துள்ளே வண்டுழாயின் கண்ணி வேந்தே வந்திட கில்லாயே என்கிறபடி, ராமார்த்தியான வனுக்கு நாராயண க்ருபை ஸம்பவித்தால் ஸகல ரோகங்களும் நாசமடைந்து விடுகின்றன. அவனுக்கு மனம் ஆத்மா ஆகிற இரண்டும் சேர்தலாகிற ஸம்யோகத்தினுல் ஸகல தாபங்களும் தீர்ந்துவிடுகின்றன. ஸநாதன தர்மமாகிற ராமனிடம் பதிந்த உள்ளத்தினனுக்கு அப்யாஸத்தினுல் அல்லவோ விஷய சுகங் களிலிருந்து நிவிருத்தி யேற்பட்டு, பிரவிருத்தியின் குண தோஷங்களை நன்ருகத் தெரிந்து கொண்டவனுக, ஸாதுக்களின் ஸங்கமத்தை அடைந்தவனுக, பச்சாதாபம் இல்லாமல் வித்வா ஞனவன், பரம வைஷ்ணவ பாகவத பிரியன் மனத்தை அசுபங் களிலிருந்து திருப்பி, சுபாஸ்ரயமான ஸ்ரீசீதாராம பாதங்களில் ஆசை வைக்கிருன். ஆஞ்சநேயாதிகளைப் போல நின்று நிலையில் நிலைக்கச் செய்யும் மஹானுபாவனைப் போல, சாந்தகுணத்துடன் புத்தி மதாம் வரிஷ்டனுகவிருக்கிருன். அப்பேற்பட்ட ஆஞ்ச நேயரை, நிஜமான அவருடைய வால்போல அகண்டதும், நீள மானதுமான ராமபக்தியைக் கொண்ட ராமபக்தனுக்கு, எனது ராஜஸ்ரீ என்று சொல்லி ஆயிரம் நமஸ்காரங்கள் நான் செய் கிறேன். பிரபோ, எங்களுக்கு உன் அருள்கிட்டுமா? உனது தயை ஸம்பவிக்குமா? உனது பேரருள் கிடைக்கக்கூடுமா? அர்த்த காமங்களிலிருந்து புத்தியைத் திருப்பி ஸநானதன தர்மமாகிற கிருஷ்ண ராம பாதாரவிந்தங்களில் பக்தி ஏற்படுமா? அப்பேற்பட்ட மானஸரோகங்களுக்கு நாரத ஆஞ்சநேயாதிகளைப் போல ஸத்குரு கிடைப்பார்களாஞல் அந்த ஜீவனுக்கு தன்வந்திரி மாதிரி பேஜஷர் கிடைப்பாராகில், சிகித்ஸைக்கு மீறிய ஸம்ஸாரவியாதிக்கு சஞ்சீவினி போன்ற ஔஷதியைக் கொடுக்கும் வைத்யன் ஏற்படுகிருன். காமாக்ஷியின் வரபிரஸாதத்தைப் போல, அந்த ஜீவனுக்கு அந்த வைத்யநாத னுடைய சிகித்சையில் விஸ்வாஸம் ஏற்படுகிறது. அந்த வைத்யர் நியமிக்கும் வழியில் இவனும் உட்படுகிருன். ஆசார்ய நியமனம், ஆசார்ய ப்ரீதி, ஆசார்ய கைங்கர்யம், ஆசார்ய கடாக்ஷம் இத்யாதிகளால் அந்த மஹானுபாவனுக்குப் பெரிய பாப நிவிருத்தி ஏற்பட்டு, விரோசனம் செய்தவனுக்கு நெய் நல்ல மருந்தாவதுபோல, தர்மமானது மரணத்திற்குப்பின் சுகத்தைத் தருவதுபோல, ஒரு நிலையில் நின்றவனுக, பரமான மனோ தைர்யத்தினுல், யயாதி தர்மவான்களுடைய சேர்க்கையால் விரிவான புத்தியை அடைந்ததுபோல, நல்ல ஸ்வபாவத்தை

இயற்கையாகவே வஸுமான் என்கிற ராஜரிஷி அடைந்தது போல, அந்த நோயாளி ரோகத்திலிருந்து குணமடைகிறான்.'']

"அந்த மஹானுபாவன் தர்மபுத்தியின் மஹாத்மியத்தினால் பகவான் ஸ்ரீரகுபதியின் பக்தியை ஸஞ்சீவினி ஒஷதியாக, நித்யமாக அடையும் பாக்யம் உள்ளவனாகிறான். அந்த மஹானுபாவனுக்கு அனுபமான சிரத்தையும், பூர்ணபுத்தியும் ஏற்படுகிறது. தர்மா தர்மங்களிலிருந்து விடுபட்டு ஸகல சந்தேகங்களிலிருந்தும் விடுபட்டு, ஜனன மரணங்களிலிருந்தும் விடுபட்டு, புண்ணிய பாபக் கூட்டங்களிலிருந்தும் விடுபட்டு, அந்த ஜீவன் ராம கிருபையினால் மங்களகரமானதும் பயமில்லாததும், விகாரமில்லாததான ஏகநிலை என்று சொல்லப்படும் சாந்தரூபியான நின்றநிலையை (நம்மாழ்வார், ஆஞ்சநேயாதிகளைப் போல) அடைகிறான். (அழிவற்றதும், சுசியானதும் ஆயஸமில்லாததுமான உத்தமநிலையை தியாகராஜாதிகளைப் போல அவன் அடைகிறான்.) இந்த விதிபிரகாரம், பிரபோ, அவனுக்கு பிராண ஸம்யோகம் எனப்படும் நாதபிருமம வித்யையின் சூக்ஷ்மபலன் ஏற்படுகிறது. அவன் (மஹா பாக்யமுள்ள ராஜ்யஸ்ரீயை அடைந்தவன் போல,) சகல ரோகங்களையும் நஷ்டப்படுத்துகிறான். இப்பேற்பட்ட பிரபத்தி நாதயோகமின்றி பிரபு, கோடி கோடிக் கணக்கான உபாயங்களாலும் பிரயத்னம் செய்த போதிலும் இந்தவியாதிகள் நாசமடைகிறதில்லை.'' [ஹே ராமா, அதிம்ருதுதர ஸத்ய பாஷணுநிகி அகிலாண்ட நாயுனிகி, சீதா பதிக்கு ராஜவிபாகர ராஜ பராமர ராஜசுகாஜ விராஜ^லு சூடக, ராஜமான மகுகாஜு^லு கல்லன ராஜித தியாகராஜனது நிகி ஸ்ரீபதி சீதாபதிக்கு மங்கள நீராஜன ஹாரத்தியைச் செய்யும் எனக்கு உனது கிருபை பரிபூர்ணமாகக் கிடைக்குமா? ராமா, சீதா, நீங்களே எனது ராஜவித்யை. நீங்களே எனது தஞ்சம்.) (807)

[தியானம்

நாராயணா, சீதாபதே, உன்னை என் குருநாதரான யாக்ஞுயவல்கியர், ஜனகமஹாராஜரைப் புறம் வைத்து நமஸ்கரிக்கிறேன். பிரபு, நீர் யாக்ஞுயவல்கியரால் அஹங்காரம் எனப்படும் ஆத்மாவாகிறீர் என்றும், பிரளய காலத்தில் அந்த அஹங்காரம் சம்புவினால் முழுங்கப்படுவதாகவும் சொல்லப்டுகிறீர். பசுபதியான சம்புவுக்கு மேற்பட்டவரும், ஜ்யோதி ஸ்வரூபமும், ஆயிரம் தலைகள், கால்கள், கைகள் கொண்ட விராட்

புருஷரும், ஸ்ரீமந்நாராயணருமாகிறீர். அந்த நாராயணரின் அம்சமான சீதாநாயகா, ஸ்ரீராமா, நீர்தானே தியாகராஜருக்கும், கருடனுக்கும், எனக்கும், காகபுசுண்டிக்கும் குல தனம். ஸந்ததமும் பஜிக்கப்பட வேண்டிய மஹாபுருஷன், ஸர்வோத்தமன், பலகாலம் உன்னை அறிந்து கொள்ளாமல் நான் மதிமோசம் போய்விட்டேன். பிரபு. ஈஸ்வரரே, ஸுஜனப்ரியா, பரமாத்புத சரித்ரா, காதியாக ஸம்ரக்ஷணு, மாதுர்யமாகவும், ஸுஸ்வரமாகவும், கனபாவத்துடன் உன் புகழ் கீர்த்திகளை லயத்துடன் பாடி ஆடி இன்பமடைகிறேன். ஆனந்தக்கந்த சுந்தரஸுரவர்யனே, ராகவனே, என்னிடம் சீதையுடனும், பிராதாக்களுடனும், ஆஞ்நேயருடனும் வரமாட்டாயா? உன்னை ஸ்வயம்பிரகாசர் என்றும், பக்தர்களுக்கு ரமணீகரன் என்றும் சொல்லுகிறார்களே. விபீஷணனைக் காப்பாற்றிய உள்ளத்துடன் என்னிடம் வரமாட்டாயா? தியாகராஜ ஹ்ருதய நிவேசா, ஜானகீசா, தரணிசசாங்க லோசனு, தயை செய்.]

"பிரபோ, கோஸாயி, இந்தவிதமாக "ராகவ" பக்தியில் ஈடுபட்டவனுடைய மனம் ரோகங்களின் உபாதைகளிலிருந்து விடுபடுகிறது. எப்பொழுது ஹ்ருதயத்தில் வைராக்யம் தோன்று கிறதோ, அப்பொழுதும் மனம் விஷயங்களிலிருந்து விடு படுகிறது. வைராக்ய பலத்தினால் அவனுக்கு உத்தம புத்தி ஏற்படுகிறது. அது தினந்தோறும் ஸுமதியாக வளர்ந்து, அந்த வைராக்ய ஆகாரத்தினால் வளர்ச்சியை அடைகிறது. வைராக்யம் அதிகரிக்க அதிகரிக்க, விஷயங்களிலிருந்து ஆசை நிவர்த்தியை அடைகிறது. ஆசை நசிக்க, துர்பலமாக ஆக, இவனுக்கு மனசாந்தி யேற்பட்டு, தெளிந்த புத்தியுள்ளவனாகிறான்." (808)

"தெளிந்த புத்தி ஏற்பட்டவுடன் அவனுக்குப் பரஞானம் என்கிற ஈஸ்வர ஞானம் கிடைக்கிறது. அவன் நிர்மலமான ஞானத்துடன் தெளிந்த ராமஸாகரத்தில் குளிக்க விரும்புகிறான். அப்பொழுது அவனுக்கு ராமபக்தி ஏற்படுகிறது. ராம பக்தியையே சின்னமாகக் கொண்ட சம்பு, பார்வதி, பிரும்மா, சுகர், ஸனகாதி ரிஷிகள், நாரத, தியாகராஜ, வால்மீகி, துளசி தாஸ, கம்பர், போன்ற உத்தம வாக்கேயக்காரர்கள் யாக்ஞ்ய வல்கிய, ஜனக, பீஷ்மர், போன்ற பிரும்ம விசாரத்தில் மூழ்கிய சாஸ்திர விசாரதர்கள்," (809)

"பக்ஷிகளுள் ஈஸ்வரரே, அவர்களுக்கு ஒரே ஒரு மதி தான் இருக்கிறது. அதாவது ஸ்ரீராம பாதபங்கஜங்களில்

அத்யந்த விஸ்வாசத்துடன் பூர்ண பக்தியைச் செலுத்த வேண்டும் என்பதே. பிரபு, இதையே வேதங்களும், புராணங் களும், ஸகல சாஸ்திர கிரந்தங்களும் உத்கோஷிக்கின்றன. (க்ஷீரஸாகர சயனனுகிறவரும், கருணுமூர்த்தியும் தியாகராஜாதி களால் காணப்பட்டவரும், வினயமாக விஸ்வாமித்திரரைப் பின் தொடர்ந்து சென்ற தனுஷ்பாணியாகிற ராமலக்ஷ்மணர்களை சீதாபிராட்டியுடன் சேர்ந்து எப்போது காணப்போகிறேன்?) "ஸ்ரீ ரகுபதியினுடைய பக்தியில்லாதில் எனக்கு எவ்விதம் சுகம் கிடைக்கும்?'' என்று ஸதா அவர்கள் சிந்தித்துக் கொண்டிருக் கிருர்கள்.'' (810)

"பிரபு, ஆமையின் முதுகு ஓட்டில் மயிர்க்கால் வளரலாம்; மலடிக்கு ஒரு புத்ரன் பிறந்து விடலாம்; ஆகாயத்தில் இஷ்ட பிரகாரம் பலவிதமான புஷ்பங்களை உதிர்த்து விடலாம்; யாரை யாவது வெகு சுலபமாகக் கொன்றுவிடலாம். ஆனுல் ஹரிபகவா னுக்குப் பிரதிகூலமாக விருக்கும் ஜீவனுக்கு சுகமோ நற்கதியோ கிடைக்காது.'' (811)

"தாகம் கொண்டவனுக்கு கானல் நீரினுல் தாகசாந்தி அடையக்கூடும்; முயலுக்கு கொம்புகள்கூட முளைத்து விடலாம்; அந்தகார இருட்டு தனது மகிமையினுல் சூரியனை நாசமடையச் செய்யலாம்; ஆனுல் ராமனிடம் பராங்முகனுக விருக்கும் ஜீவ னுக்கு எவ்விதம் சுகமோ, நற்கதியோ கிடைக்கும்? (812)

"பனிக்கட்டிகளிலிருந்து அக்னி பிரகடனப்படுத்தலாம்; ஆனுல் ராமனிடம் பராங்முகனுக விருப்பவனுக்கு எவ்விதம் சுகம் ஆனந்தம் யேற்படும்?'' (813)

"ஜலத்தைக் கடைவதால் நெய் ஏற்படலாம்; எண்ணெய் மணலிலிருந்து எடுக்கப்படலாம்; ஆனுல் ககேசரே, ஹரி பகவானிடம் பக்தியின்றி அவரைப் பஜிக்காமல், ஸம்சாரக் கடலானது தாண்டவே முடியாது. இது சித்தாந்த ரூபமாக பல காலமாக நாரத மகரிஷிகளைப் போன்ற மகான்களால் நிரூபிக்கப் பட்டிருக்கின்றது.'' (814)

"என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் ஒரு கொசுவை பிரும்மா வாகப் பண்ணிவிடுவார். பிரும்மாவையும் ஒரு கொசுவின் கௌரவத்தை விட கீழான நிலைக்கு கொண்டுவந்து விடுவார். ஸர்வ சக்திமான், ஸர்வ ஸ்வதந்திரர், அவரை யாரும் கேட் பவரில்லை. ஸர்வ ஸ்வாமித்வம் கொண்ட அந்த பகவான் மஹா

கிருபாளுவாகவுமிருக்கிருர். இவ்விதம் தீர விசாரித்துக்கொண்டு, வித்வானுன்வன் சகல சந்தேகங்களையும் விட்டுவிட்டு, ஸ்ரீராமச் சந்திரனைப் பஜிக்கிருன்.'' (815)

''பிரபு, நான் சித்தாந்த பூர்வமாக உத்கோஷிக்கிறேன்.

''विनिश्चितं वदामि............तरन्तिते''

விநிஸ்சிதம் வதாமி தே ந அன்யதா வசாம்ஸிமே
ஹரிம் நரா பஜந்தியே அதி துஸ்தரம் தரந்திதே.

(வேதவியாசரைப் பிரமாணமாகக் கொண்டு, உயரத் தூக்கின கைகளுடன் உத்கோஷிக்கிறேன். என் வார்த்தைகள் ஸத்யம், ஸத்யம். கேசவனை விட வேறு தெய்வம் உயர்ந்ததில்லை.) எந்த மனிதர்கள் ஸ்ரீ ஹரிபகவானை உபாஸனை செய்து பஜிக்கிருர்களோ, அந்த மஹானுபாவர்கள் அடக்க முடியாததும், அதிக ஆபத்துக்கள் நிறைந்ததும், அகாதமாக விருக்கும் ஸம்சார ஸாகரத்தை சரளமாகவும், எளிதாகவும் தாண்டுகிருர்கள்.'' (816)

''நாதரே, நான் இதுவரை ஹரிபகவானுடைய அனுபமானதும், புண்ய சாரித்திரிய கீர்த்திகள் கொண்டதுமான கதாம்ருதங்களைச் சொன்னேன். என் புத்திக்குத் தக்கபடி விசாலமாகவும், விஸ்தாரமாகவும், ஸங்க்ஷேபமாகவும், தங்களுக்கு எடுத்துச் சொன்னேன். ஸர்ப்பங்களுக்கு எதிரியே, இந்த விஷயத்தையே, அதாவது ''ஸ்ரீராமனைப் பஜியுங்கள், எல்லாக் கார்யங்களையும் தியாஜ்யம் செய்துவிட்டு, ஸ்ரீ சீதாராமனை ஏகமாத்திரமாகப் பூஜித்து இன்பமடையுங்கள்,'' என்று வேதங்களும் ஸித்தாந்தபூர்வமாக உத்கோஷிக்கின்றன.'' (817)

''நீங்களே சொல்லுங்கள் ஸ்வாமி, என் போன்ற மூர்க்கனிடத்தும் அன்பைக் காட்டிய என் பிரபு ரகுபதியை விட்டு, அந்த பிரபுவுக்கு சேவகனுக நித்ய கைங்கர்யம் செய்வதை விட்டு விட்டு, (சீதாநாயகனுக்கு துளசி, பில்வம், மல்லிகைப்பூக்களால் அர்ச்சிப்பதை விட்டுவிட்டு,) எவனுவது நரஸ்துதி செய்யலாமா? (தியாராஜாதிகளால் காண்பிக்கப்பட்ட ''ராமநிதியை'' விட்டு விட்டு, உன் சுகத்திற்காக, அழிந்து போகும் தன்மையை உடைய ''நிதியாகிற மற்றச் செல்வப் பொக்கிஷங்களை'' அடைவதற்கு முயற்சிக்கலாமா?'' (தயிர், வெண்ணெய், அம்ருதம் சாப்பிடுவதற்குப் பதிலாக கள்ளைச் சாப்பிடலாமா? ஸ்ரீசீதாராமனைத் தர்சிப்பதற்குப் பதிலாக விஷய போகங்களில் மனத்தை ஆசைப்பட வைக்கலாமா? தமம், சமம் ஆகிற கங்காஸ்நானத்தை

விட்டுவிட்டு, துர்விஷயங்களாகிற கிணற்றின் ஜலத்தினுல் ஏற்படும் ஸ்நானம் சுகத்தைத் தருமா? மமதை கொண்ட நரர்களை ஸ்துதி செய்வது சுகத்தை தருமா? ஸுமதி கொண்ட என் பிரபு தியாகராஜரால் ஆராதனம் செய்யப்பட்ட ஸ்ரீராமுனியை சேவித்து கீர்த்தனம் முதலியவைகளால் இன்பமடையச் செய்வது அல்லவோ சுகம்?) (ஹேராமா, சீதாபதே, நீதான் எனக்கு சால சுகம் என்று பல தடவைகள் உபதேசிக்கப்பட்டும் என்னுடைய சஞ்சலமான மனது மஹா விஸ்வாஸத்தை அடைய மறுக்கிறதே. நீ க்ருபை செய்யமாட்டாயா? மமதை கொண்ட மூர்க்கர்களிடம் ஸ்நேகம் செய்து கொண்டு, அவர்களை நரஸ்துதி செய்வது சுகமா?) "கருடரே, நீர் வேதமயம். சந்தோமயமான விக்ஞான ஸ்வருபி, ஸ்வயம் பிரகாசமுள்ளவர். உமக்கா, பிரபு, மோஹம் ஏற்பட்டிருக்கிறது? இல்லவே இல்லை!! நாராயணரால் அடையாளம் செய்யப்பட்ட மஹாபிரபுவாகிற தங்களுக்கு எவ்விதம் ஸ்வாமி, மோஹம் ஏற்படக் கூடும்? பரமபாகவத பிரியருகிற தங்களால் என்னை அனுக்ரஹம் செய்வதற்காக மஹா கிருபையானது தங்களால், தங்களுடைய தர்சனத்தால், எனக்கு அனுக்ரஹம் செய்யப்பட்டது. வாயு வாஹனரே, உம்மால் நான் பரம உபகாரம் அடைந்தேன். உம்முடைய கிருபையால் நான் இந்த விதமாக ராம கிருபையையும் அத்யாத்மவித்யையும் அடைந்தேன். பிரபு, நான் தங்களுக்கு எவ்விதம் கைம்மாறு செய்யக் கூடும்?'' என்று பரம ஆசார்யரான காகபுசுண்டி கூப்பிய கரங்களுடன் விஷ்ணுவின் பக்தரான கருட மஹா ராஜரைத் தழுவிக் கொண்டு, மெய் சிலிர்க்க, கண்டம் தழுதழுக்க, அத்யந்த பாகவத பிரேமையினுலும் நன்றிப் பெருக்காலும் ஆனந்த பாஷ்பங்களை உதிர்த்துக் கொண்டிருந்தார். [அப்பேற்பட்ட மஹானுபாவர்களை புறம் வைத்து சீதாராமா, உங்களை ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பிரபோ, என்னையும் எங்களையும் காக்க வேண்டும், என்று தீனமாக உங்களிடமும், அவர்களிடமும் பிரார்த்திக்கிறேன்.] (818)

[தியானம்

கோவிந்தா, காமதேனுவினுல் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீராஜ கோபாலா, ஸ்ரீராமா, மஹீபதே, திரிலோகேசா, மஹேந்திரனுல் விமர்சிக்கப்பட்ட ஆத்ம விபூதியை ஐஸ்வரியமாகக் கொண்ட ஸ்ரீசீதாராமா, சரணம் சரணம். உனது ராம அவதாரத்தில் ஞானம் வைராக்யம் ஆகியவை பெரிய ஸம்பத்துக்கள் என்று நீ

காண்பித்தாய். பிரபு, கிருஷ்ணுவதாரத்தில், கோவர்த்தன கிரியைத் தூக்குதல், கோபாலர்களேயும் கோக்களேயும் காத்தல், பிதாவாகிய நந்தகோபனுக்கு வைகுண்டத்தைக் காண்பித்தல் ஆகிற சகல, ஸர்வஸ்வாமித்வம் கொண்ட விபவங்களால், உன்னுடைய பரத்வ விபவங்களேப் பிரகடனப்படுத்தினுய். அவைகளே அடிக்கடி அடிக்கடி பந்து ஜனங்களிடம் காண்பித்தாய். எனக்கு எது வேண்டும் என்று தெரியவில்லே. என் மனம் துக்கத்தை சகிக்காது என்று தெரிந்தும்கூட துக்கத்தைக் கொடுக்க தயங்குகிருயில்லே. ஆனுல் உன் ஸம்பந்தச் சேர்க்கை கொண்ட நான் ஓரளவு எனது துக்கங்களேப் பொறுத்துப் பார்க்கிறேன். அடுத்த நிமிஷம் உன் ஸம்பந்தம் இழக்கப்பட்டு நஷ்ட மடையும் போது, நான் நாதனற்று துக்க மடைகிறேன். இதற்கு நிரந்தரமாக சுகத்தை அடைவதற்கு அத்யாத்ம வித்யையும், பகவான் விஷ்ணுவை மார்க்கமாகவும், ஆதிபூதமாகவும் சொல்லுகிருர்கள். அவரையே க்ஷேத்ரக்ஞன் என்று சொல்லுகிருர்கள். ஸ்ருஷ்டியிலும், ஸ்திதியிலும், முடிவிலும் அவரே இருப்பவர். பிரகிருதியானது அசேதனமாகக் கருதப்பட்டு பரமாத்மாவினுல் வியாபிக்கப்பட்டு, ஸ்ருஷ்டிக்கவும் ஸம்ஹரிக்கவும் செய்யப்படுகிறது. அப்பேற்பட்ட பரமாத்மாவை துளசி தளத்தினுல் கோவிந்தா, நாராயண, ராமா சீதா ஸரஸிருஹா, சுகந்த ராஜா, தர்மாத்மா, என்று பூஜித்து இன்பம் அடைவதைவிட வேறு என்ன சுகம் பெரியதாகவும், நிரந்தரமாகவும் ஏற்படக்கூடும்? இதற்கு ஞானமும் வைராக்யமும் ராமகிருபையும் அவசியமல்லவா. இதை நீதான் ஸங்கல்பிக்கவேண்டும்.]

"பிரபு, கருட மஹாராஜரே, வைநதேயரே, கோவிந்த வாஹனரே, தங்களால் என்னிடமிருந்து ஸ்ரீஞானமும் வைராக்யமும், ராமக்ருபையையும் ஸம்பாதித்துக் கொடுக்கக்கூடிய "ராமகதாம்ருதம்" வினவப்பட்டது. இந்த பவித்திரமான கதை பகவான் சுகதேவரையும், ஸனகாதி மஹரிஷிகளேயும், பகவான் சம்பு பார்வதியையும் பிரியப்படுத்தும். அவர்களுக்கும் இந்தக் கதையைக் கேட்பதிலும் சொல்வதிலும் மிக்க ஆனந்தமாயிருக்கும். இந்த ஸம்சாரத்திற்கு மிக்கத் தேவையான பொருள் ஸாது ஸங்கமம் ஒன்றே. அது மிக்க துர்லபமாக விருக்கிறது. அந்த ஸத்ஸங்கமம் ஒரு நிமிஷமானுலும் சரி, அரைமணி நேரமானுலும் சரி, ஜீவிய வாழ்க்கையில் ஒரே ஒரு தடவை கிடைத்தாலும் சரி, அது மாத்திரம் ஒருவனுக்கு ஸம்பவித்தால் போதும்." (819)

"பிரபு கருடரே, நான் சொல்வதை நீங்களே உங்கள் தீர புத்தியினுல் விசாரித்துத் தெரிந்து கொள்ளுங்கள். நானும் ரகு வீரனைப் பஜிப்பதற்கு உத்தமமான அதிகாரியா இல்லையா" என்று மனத்திற்குள் விசாரித்துத் தெரிந்து கொளுங்கள். எனக்குள்ள குறைகளையும் தோஷங்களையும் தாங்கள் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல அறிகிறீர்கள். என்னைவிட அதமன் மஹாபாவி, குருத்ரோஹி, நன்றிகெட்டவன் ஒருவரும் இருக்க முடியாது. என்னையும் என் பிரபு உதார ஹ்ருதயத்தினுல் ஒரு பொருளாக்கி, திருத்திப் பணிகொண்டு, உலகங்களைப் பாவனம் செய்யும் கங்கையைப்போல தீர்த்தபாவனமாகச் செய்திருக்கிருர். என்னையும் உலகம் புகழும்படி ஸத்குண ஸம்பன்னன், குண சீலன் என்று தங்களாலும், பகவான் சம்புவினுலும் சொல்லும்படி தன்னுடைய மகிமையினுல் பவித்திரமாக ஆக்கியிருக்கிருர். என்னைப்போல மட்டமான பிறப்பையும், வஞ்சக புத்தியுடன் கூடிய வாயஸ ஜன்மத்தையும் என் பிரபு கோவிந்தராகப் புனிதப் படுத்தியிருக்கிருர். இதை நன்ருகத் தெரிந்து கொள்ளும்." (820)

"பிரபு, தங்கள் தரிசனம் இன்று எனக்கு கிடைத்தது. நான் தங்களால் மிக்க கௌரவிக்கப்பட்டேன். தன்யனுகவும் கிருத புண்யனுகவும் ஆக்கப்பட்டேன். நான் மிக்கத் தாழ்ந்தவனுக விருந்தபோதிலும், பரமாத்மாவினுல் கண்டு எடுக்கப்பட்டு, பொருளாக்கப்பட்டேன். உம்மிடம் நான் கருணுகாகுத்ஸனுல் ஸமர்ப்பிக்கப்பட்டேன். பகவான் ஸ்ரீராமசந்திரனுல் நான் அவருடைய அத்யந்த பிரியமுள்ள தாஸனுக, தங்கள் வரவினுல் தங்களுடைய தரிசனத்தால், தங்களுடைய வினய ஸம்பத்துக்கள் கொண்டதும், ஸர்வ பக்ஷிகளின் முன்பும் கௌரவமான வார்த்தைகளாலும் தன்யனுக ஆக்கப்பட்டேன். என்னைப் பிரபு ஸ்ரீசீதா ராமச்சந்திரன் தங்கள் மூலமாக "நிஜபந்து", நிஜ சேவகன் என்று ஸ்வீகரித்துக்கொண்டுவிட்டார். எனக்கும் தங்களைப்போன்ற ஸாது ஸங்கமத்தை அருளிச்செய்து, என்னைப் பாக்யமடையச் செய்தார். பிரபு, அவருக்கும் உமக்கும் எனது பரிபூர்ண கிருதக்ஞதைகளை மஹா வினயத்துடன் செலுத்துகிறேன்." ["ராமா, சீதாநாயகா, உன்னைக் கருடனையும் காகபுசுண்டியையும் புறம் வைத்து ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். என்னையும் நீங்கள் அனைவரும் உங்கள் பொருளாக ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும்" என்று வினயமாகப் பிரார்த்தித்துக்கொள்கிறேன்."] (821)

"நாதரே, ஏதோ தங்களிடம் என் புத்திக்குத் தக்கவாறு இவ்விதம் சொல்லப்பட்டது. ஆனால் என்னால் ஒன்றும் தங்களிட மிருந்து மறைக்கப்படவில்லை. பிரபு ஸ்ரீரகுநாயகருடைய சரித்திரம் சமுத்திரத்தைப் போல அகாதமாக விருக்கிறது. அதன் ஆழத்தை யாவராலும் அளவிடமுடியுமா?" (822)

"இந்த விதமாக காகபுசுண்டி ஸ்ரீசீதா பிரபுவாகிற ராம னுடைய கல்யாண குணோத்தமங்களை ஸ்மரணம் செய்து கொண்டு, ஆனந்த பாஷ்பங்கள் விட்டுக் கொண்டிருந்தார். அவருடைய ஆனந்தங்கள் மன உல்லாஸங்கள் பெருகிக்கொண் டிருந்தன. "எந்த பிரபுவினுடைய மகிமைகளை வேதங்களும் கரை காணமல் "இதுவுமில்லை, இதுவுமில்லை," என்று சொல்லி தயங்குகின்றனவோ, அப்பேற்பட்ட பிரபு ஸ்ரீரகுநாதனின் பலமோ, பிரதாபங்களோ, பிரபுத்வ மகிமைகளோ, அனந்த மாகவும் ஒப்பிட முடியாதபடி சிறந்து தனிப்பட்டு விளங்கு கின்றன." (823)

"எந்த ரகு ராய் பிரபுவினுடைய சரண கமலங்களை உமை யுடன் கூடிய பகவான் சம்புவும், பிரும்மாவும் ஸதா பூஜித்து வருகிறார்களோ, அந்த பிரபுவினுடைய அதிமிருதுவான கிருபை யினாலன்றோ எனக்கு இந்த மாதிரி ராமபக்தி செய்யும் பாக்யம் ஏற்பட்டது. பிரபு இப்பேற்பட்ட அதிநளினமான ஸ்வபாவத்தை யும் இயற்கையாகவே நன்மையைப் பயக்கும் உதார மனத்தையும் நான் இதுவரையிலும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. பக்ஷி ராஜரான கருடரே, அதனால் நான் என் பிரபு ஸ்ரீரகுபதிக்குச் சமமான ஹிதகாரி, ஸர்வஜனரக்ஷகன் யாரும் இல்லை என்று ஊர்ஜிதமாகச் சொல்லுகிறேன்." (824)

"ஸாதகம் செய்யும் யோகி புருஷர்களாக விருக்கட்டும். ஸித்த புருஷர்களாக விருக்கட்டும். ஜீவன் முக்தர்களாக விருக் கட்டும். வைராக்யம் உள்ளம் படைத்த உதாஸீனர்களாக விருக் கட்டும். பிரபல கவிஞர்களானாலும் சரி, சாஸ்திரங்களை அறிந்த வித்வான்களானாலும் சரி, கர்ம காண்டங்களைப் பாண்டித்யம் செய்த மஹாமேதாவிகளாக விருக்கட்டும்; ஸந்யாசியாகவோ யோகம் ஸாங்கியம் ஆகிய சாஸ்திரங்களை முழுவதும் அறிந்த வனாக விருக்கட்டும். சூரனாக விருக்கட்டும், மஹா தபஸ் செய்த ரிஷியாக விருக்கட்டும்; தத்வஞானியாக விருக்கட்டும். தர்ம துரந்தரர்களாக விருக்கட்டும். எது நியாயம், எது அநியாயம் என்று சொல்லக் கூடிய பண்டிதனாக விருக்கட்டும். விக்ஞானி யாக விருக்கட்டும்." (825)

"இவர்களில் யாராவது இருந்து விட்டுப் போகட்டும். அவர்கள், பிரபு, என் பிரபு சீதாராமனை நமஸ்கரிக்காமல், பக்தியுடன் பூஜை செய்யாமல் ஸம்சாரமாகிற கடலைத்தாண்ட முடியாது. நான் என் பிரபு ஸ்ரீராமச்சந்திரனை அடிக்கடி அடிக்கடி சுக்ருத நமஸ்காரம் செய்துகொண்டு இந்த வசனங்களைச் சொல்லுகிறேன். அந்த மஹா பிரபுவை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். அந்த மஹாத்மாவை அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிப்பதால், என் பாபக் கூட்டங்கள் நாசமடைகின்றன. நான் பாபரஹிதனுகி விடுகிறேன். என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் சுத்த ஸத்வம், அவிநாசி, அழிவில்லாத பரபிரும்மம், அதனுல், அந்த ராமபிரும்மத்தை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்." (826)

"அந்த பிரபுவினுடைய நாமஜபம், ஜன்ம மரண ரூபத்தை உடைய சம்சார ரோகத்திற்கு சஞ்சீவினியைப் போன்ற மஹா ஔஷதமாகவிருக்கிறது. பயங்கரமான மூன்று வித தாபங்களாகிற ஆதி ஆத்மிக, ஆதிதைவிக, ஆதி பௌதிக தாபங்களை சமனம் செய்யும் மந்திரமணி ஔஷதமாகவிருக்கிறது அவருடைய நாம ஜபம். அப்பேற்பட்ட பிரபு ஸ்ரீரகுநாயகன் ஸதா என்னிடமும் தங்களிடத்திலும் பிரஸன்ன மனத்துடன் இருக்கவேண்டும், என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன்" என்று காகபுசுண்டி வியைத்துடன் நிவேதனம் செய்தார். (827)

[தியானம்

நாராயணு, முராரி, திரைலோக்ய ஈசரே, திருமாமகள் கேள்வனே, உன்னைக் கருடனை புறம்வைத்து நமஸ்கரிக்கிறேன். மங்களகரரும் சதா ஹரிசேவையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் பக்ஷிராஜரான கருட மஹாராஜாவை நான் க்ஷமஸ்வத்வம், க்ஷமஸ்வத்வம் என்று அடிக்கடி வேண்டுகிறேன். பிரபு, உம்முடைய மங்கள வரவானது பகவானுடைய சுப தர்சனத்தை சூசிப்பதாகவிருக்கிறது. பிரபோ, சுபாங்கரான சீதாராம தர்சனம் உம்மால் ஏற்படவேண்டும். ராமா, காமித பலதாயகா, மனிதனுக்குப் புண்யமிருந்தால் அன்ரோ உமது தர்சனம் கிடைக்கும் என்பார்கள். என்விஷயத்தில் மாத்திரம் தாங்கள் விதிவிலக்காக விருக்கவேண்டாம். கோபிகைகள் ராஸக்கிரீடையில் என்ன மனோபாவத்துடன் வந்தார்கள். அப்பேற்பட்ட அப்ராக்ருதமான மனோபாவங்கள் என்னிடம் எவ்விதம் காணப்படும்? ஆனுல் நான் அடிக்கடி என் ஆசார்யர்க

ளான நாரத, பிரஹ்லாத, பராசரர், ராமதாஸர் என்று அடிக்கடிச் சொல்லிக்கொண்டிருக்கிறேன். பிரபு, தியாகராஜ ஆஞ்சநேயாதிகளிடம் தாங்கள் எதிர்பார்க்கும் ரீதி என்னிடம் எதிர்பார்க்க முடியாது. "உன்பக்தன்" என்று நான் சொல்லிக்கொள்கிறேன். அதை நீதானே உண்டுபண்ணினுய். அப்படி யிருக்கும்போது நீ என்னை ஸ்வீகரிக்காவிட்டால் நான் யாரிடம் தஞ்சம் புகுவேன்? பன்னகசயனு, என்னை ரக்ஷிப்பதற்கு இன்னமும் ஏது தயக்கம்? உங்கள் கிருபையை சீக்கிரம் வர்ஷியுங்கள்.]

பதகேஸ்வரரான கருடமஹாராஜர் காகபுசுண்டியின் நிரதிசயமான ராமபக்தியைக் கண்டும், ஸ்ரீசீதாராம பதாப்ஜங்களில் அவருக்கு ஏற்பட்டிருக்கும் மனப்ரீதியையும் ஈடுபாட்டையும் கண்டு ஆச்சர்யப்பட்டுப் போய்விட்டார். "ஆகா, இதுவல்லவோ நிஜ ராமபத்தி. இதுவல்லவோ ராமனிடம் காட்டவேண்டிய விஸ்வாஸ ப்ரேமை பக்தி. இதுவல்லவோ நிஜதாஸ்ய பக்தி. இதுவல்லவோ விஷ்ணுபகவானுக்கு மிக்க உகந்த பகவத்ப்ரீதி, பாகவத லக்ஷணம். இவ்வித புத்தியையும் ஆசார அனுஷ்டானங்களையும் ஸர்வதீர்த்தகரரான பகவான் நாராயணர் தன்னுடைய ஸர்வ பக்தர்களிடம் எதிர்பார்க்கிருர்." இவ்விதம் எண்ணிக்கொண்டே போனுர் என்பிரபு கருட மஹாராஜரான ஸுபர்ணர், தர்மாத்மா, பரமகிருபாளு, அவரையுமறியாமல் அவர் பத்த அஞ்சலியுடன் கிருதக்ஞை பூர்வமாகச் சொல்ல ஆரம்பித்தார். (828)

"பிரபு, தங்களுடைய அருள்மொழிகளால் சொல்லப்பட்டதும், மதுரமான குரலில் அழகாக சித்தரிக்கப்பட்ட ஸ்ரீராம கதாம்ருதத்தை நான் பருகி, இன்றுதான் கிருதகிருத்யனுக ஆனேன். ஸ்ரீரகுவீரனுடைய பக்திரஸம் என்று சொல்லப்படும் ராம ரஸாயனத்தை நான் முழுக்கமுழுக்க தங்கள் கிருபையினுல் குடித்தேன். ஸ்வாமி, இதைவிட ஆனந்தம் இகத்திலும் பரத்திலும் யாது இருக்கக்கூடும்? இந்த ஆனந்தத்தை அடைவதற்கல்லவோ ஸாது ஜனங்கள் ஸர்வ ஸம்மதமாக ராம பக்தியே மோக்ஷசுக ஆனந்தம் என்று சாதிக்கிருர்கள். (" பிரபு, ராமா, இதுவல்லவோ ஹரிகீர்த்தனை. தேகாதி இந்திரிய ஸமூகங்களை அடக்கி, மனத்தை ஒருமைப்படுத்திக் கொண்டு, தங்களை மறந்தவர்களாக, ஸோஹமஸ்மி என்று சொல்லுபவர்களான கணபதி, தியாகராஜாதிகளைப் போல நாதவித்யையினுல் தங்கள் குணக்கீர்த்திகளைப் பரக்கப் பாடி இன்பமடைகிருர்கள். ஹே ராகவா, ரகுகுல சிகாமணியே. உனது ராமநாமமானது

இந்த ஜகம் முழுவதும் வியாபித்திருக்கிறது. இந்த வார்த்தை ஸர்வ ஸம்மதமாக ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது.'') கருடன் காகபுசுண்டியை நோக்கிச் சொன்னார், ''ஆம். பிரபு, உங்களைப் போல ஜீவன் முக்தர்களால் அல்லவோ மோக்ஷசுக மாகிற ராமசரணங்கள் சுலபமாக அடையப்படுகின்றன. பிரபு, தங்களிடம் ஸத்பக்தியும், ஸங்கீத ஞானமும், வினயமும், பிராண அனல ஸம்யோகத்தினால் யேற்படும் பிரணவ நாத வித்யையும், ஸப்த ஸ்வரங்களோடு லயபாவத்துடன் ஆனந்தக் கீர்த்தனம் செய்யப்படும் ராம கதாம்ருதமும் ஸாக்ஷாத்கரித்திருக் கின்றன. இதுவும் பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய பூர்ணமான கிருபை. ஸ்ரீராமனைப் பஜிப்பவர்களுக்கே, தனிப்பட்ட முறையில் ஏற்படும், நூதன ரீதியில் இகத்திலும், பரத்திலும் யேற்படும் மோக்ஷசுக ஆனந்தம். இவைகளை நான் தங்களிடம் பார்த்து, எனது தாபங்களையும், மாயையினால் ஏற்பட்ட பிரமைகளையும் நான் ஒழிக்கப்பெற்றேன்.'' (829)

''பிரபு, நான் தங்களைக் காண்பதற்கு முன்பு மோஹமாகிற பெரும் சமுத்திரத்தில் மூழ்கியிருந்தேன். தாங்கள் என்னைக் காக்கவந்த ஓடம் போல, பகவானால் விதிக்கப்பட்டிருக்கிறீர்கள். என்னைக் கட்டிக் காக்கும் நாதரே, நான் தங்களால் பல பிரகார மாக சுக ஆனந்தத்தை அடைந்தேன். தாங்கள் செய்த பேருப காரத்திற்குப் பிரதி உபகாரம் என்னால் செய்யமுடியாது. ஆதலால் கிருதக்ஞை பூர்வமாக நான் அடிக்கடி அடிக்கடி உங்களுடைய சரணங்களில் விழுந்து, சுக்ருத நமஸ்காரங்கள் செய்கிறேன். பிரபு, தாங்கள் கிருபை கூர்ந்து என்னை ஸ்வீகரிக்க வேண்டும்.'' (830)

''பிரபோ, தாங்கள் பூர்ணகாமர். ஸ்ரீ சீதாராமனிடம் அத்யந்த பிரேமை, அனுராகம் கொண்டவர். தங்களைப் போல பரம பாக்யவான் ராமகிருபையைப் பரிபூர்ணமாக அடைந் திருக்கும் புண்யசாலி யாவரும் இருக்கமுடியாது. ஹே பிரபு, கிருபாளு, ஸாதுக்களும், விருக்ஷங்களும், நதிகளும், பர்வதங் களும், பூமியும், யாவும் பிறருடைய ஹிதத்திற்காகவே வாழ்கின்றனர்.'' (831)

''ஸாதுக்களுடைய ஹ்ருதயம் நவனீதமாகிற வெண் ணெய்க்குச் சமானமாக விருக்கிறது. இந்த விதமாக கவிகள் ஸாதுக்களின் ஹ்ருதயத்தையும், அவர்களுடைய மென்மைத் தனத்தையும் வர்ணிக்கிறார்கள். அதற்கு மேல் அவர்களால் ஸாதுக்களின் ஹ்ருதய மேன்மையை வர்ணிக்க முடிகிறதில்லை.

பாருங்கள் ஸ்வாமி, வெண்ணெய் உஷ்ண சூட்டை அடைந்தால் உருகுகின்றது. ஆனால் புண்யமான சாதுக்களின் ஹ்ருதயமோ, பிறர்களின் துக்கங்களைக் கண்டு கலங்குகிறது. அவர்களுக்கு ஸ்வபாவமாகவே இந்த ஆற்றாமை ஏற்படுகிறது.'' (832)

''பிரபு, தங்களுடைய அருட் பிரஸாதத்தினால் எனது வாழ்க்கை ஜீவனும், ஜன்ம லாபமும் ஸபலமடைய வேண்டும். எனது பாபபயங்களையும் தாங்கள் கிருபை கூர்ந்து ஒழித்து, என்னையும் தங்களுடைய வரப்பிரஸாதத்தினால் தங்களைச்சேர்ந்த நிஜ பக்தன், நிஜ கிங்கரன் என்று பூர்ண தயையுடன் ஸ்வீகரிக்க வேண்டும். தங்களுடைய ஸம்பந்தத்தால், எனது ஸம்சயங்கள் முற்றிலும் அழிந்து போய்விட்டன'' என்று சொல்லிக்கொண்டு ஸுபர்ணர் கிருதாஞ்சலியுடன் காகபுசுண்டியை அடிக்கடி கிருதக்ஞை பூர்வமாக நமஸ்கரித்தார். ராமநாமமே உருவெடுத்து ராமானந்தத்தை ஸதா பருகிக் கொண்டிருக்கும் பகவான் சம்பு உமையிடம் சொல்லலானார்: ''உமா, இவ்விதம் சொல்லிக் கொண்டு, பக்ஷிராஜரான கருடர் அடிக்கடி அடிக்கடி சொல்லிக் கொண்டும், காகபுசுண்டியை நமஸ்கரித்துக் கொண்டிருந்தார்.'' (833)

''மஹாத்மாவாகிற காகபுசுண்டியின் சரண திருவடிகளில் கருடன் அடிக்கடி நமஸ்கரித்து, பிரேமையுடன் வார்த்தைகளைச் சொன்னார். மதிதீரனாகிய கருடர், ஸுபர்ணர் ஸ்ரீ ரகுவீரனுடைய பாத சரணங்களை தனது ஹ்ருதய புண்டரத்தில் தரித்துக் கொண்டு, மஹா ஆனந்தத்துடன் வைகுண்டத்திற்கு நாராயண திருவடிகளை மீண்டும் ஆஸ்ரயம் செய்வதற்குச் சென்றார்.'' (834)

''கிரிஜா, ஸாதுக்களின் சேர்க்கையைவிட பெரிய லாபம் ஒன்றுமில்லை. ஆனால் அந்த உத்தமமான ஸாதுக்களின் சேர்க்கை ஸ்ரீ ஹரிபகவானுடைய பூர்ண கிருபையின்றி ஸித்திக் கிறதில்லை, என்று வேதங்களும் புராணங்களும் கோஷிக் கின்றன.'' (835)

''உமா, என்னால் பரம புனிதமான ''ராமசரிதமானஸம்'' என்கிற ரகுவீரனுடைய புண்யகீர்த்தி பிரபாவங்களடங்கிய சரித்திரம் முழுவதும் உனக்குச் சொல்லப்பட்டது. இந்த ராமசரித்திரம் பரம விசித்திரமானது. எவன் ஒருவன் இதை பக்தி சிரத்தையுடன் கேட்கிறானோ, பிறர்களுக்குச் சொல்லு கிறானோ, அவனுக்கு பவபந்தங்கள் நாசமடைகின்றன. அதற்கு ஏற்ப, கற்பதருவும் பாக்யஸுர தேனுவாகிற ஸ்ரீ சீதாராம

சரணங்களில் பவித்திரமான பக்தி ஏற்படுகிறது. என் பிரபு ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி பரம தயாளுவன்றோ?'' (836)

"எந்த மஹானுபவன் மனம் கர்மம் வசனம் இத்யாதிகளால் இந்த உத்தம கதையைக் கேட்கிறானோ. கேட்பிக்கிறானோ, அவர்களின் மனம், வசனம், கர்மம் இத்யாதிகளால் செய்யப்பட்ட பாபக்கொத்துக்கள் விரைவில் நாசமடைகின்றன. அவனுக்கு புண்யதீர்த்த யாத்திரைகளும், இன்னும் அநேகப் பிரகாரமான புண்ய ஸாதனங்களும், யோக முறைகளும், நியம நிஷ்டைகளும், வைராக்யமும், பரஞானத்தில் நிபுணத்வமும்.'' (837)

"இன்னும் அநேகப் பிரகாரம் ஏற்படக்கூடிய கர்மங்களும், தர்மங்களும், விரதங்களும், தானங்களும், இன்னும் அநேக விதமான தியாகங்களும், தமம், ஜபம், தவம், யக்ஞாதிகளும், பிராணிகளிடம் காட்டப்படவேண்டிய பூததயையும், பிராம்மணர்கள், குருக்கள் இவர்களிடம் காட்டவேண்டிய பக்தியும், வினயமும், சேவைகளும், ஸகல வித்யைகளும், வினயஸம்பத்துக்களும், அடக்கமும், விவேக புத்தியும், பெருமைகளும், ஸ்ரேயஸ்களைக் கொடுக்கக்கூடிய அநேக ஐஸ்வர்ய பிராப்திகளும் ஏற்படுகின்றன.'' (838)

"வேதங்களில் பலதடவைகள் புகழப்பட்டதும் இன்னும் அநேக அனுத்தமமான ஸ்ரீ ஸம்பத்துக்களும் அவனுக்கு சுலபமாக கிடைக்கின்றன. பவானி, இவைகள் யாவும் ஸ்ரீ ஹரி பகவானின் பக்தியினால் ஏற்படும் மாபெரும் சுக்ருத பலன்கள். ஸ்ரீ சீதாராமனைப் பக்தி பூர்வமாக அடைந்துவிட்டால், அந்த ஐஸ்வர்ய விலாஸங்கள் அவனைத்தேடி தாமே வந்து வலிய ஒட்டிக்கொள்ளுகின்றன. பவானி, இந்தவிதமாக வேதங்களும் சாஸ்திரங்களும் ரகுநாதனுடைய பக்தியைப் புகழ்ந்து, எவ்விதமாவது ஸ்ரீ சீதாராம கிருபையை எந்த மஹானுபாவனாலும் அடையக்கூடும் என்று வற்புறுத்திச் சொல்லி சாதிக்கின்றன. ராமகிருபை ஒன்றையே ஏகமாக வரித்து, மஹாபாக்யமுள்ள (தியாகராஜாதிகளைப்போல) புருஷர்கள் அவ்விதமாக வாழ்ந்து, ராமபக்தியைச் செலுத்தியிருக்கிறார்கள்.'' (அப்பேற்பட்ட மஹனீயர்களுக்கு நான் அடிக்கடி அடிக்கடி சிவன், பவானியை புறம் வைத்து நமஸ்கரிக்கிறேன்.) (839)

"ஹரி பக்தி என்னும் மஹாப் பேறு ஜகத்தில் நிரந்தரமாக கிடைப்பது மிக துர்லபமாகவிருக்கிறது. எந்த மஹானுபாவர்கள் பரம விஸ்வாஸம் கொண்டு ஸதா இந்த உத்தமமான ராம சரித

மானஸத்தைக் கேட்கிருர்களோ, அவர்களுக்கு ஒருவித பரிஸ்ரம மின்றி பரமயோகிகளுக்கும் கிடைக்கப் பெருத ஹரிபகவானிடம் ஏற்படும் பக்தியானது ஸித்திக்கிறது.'' (840)

"எந்த மஹாத்மாவினுடைய உள்ளம் ஸதா திருமாலாகிற ஸ்ரீராம பதாப்ஜங்களில் அனுரக்தமாக லயமடைகின்றதோ, அந்த மஹாத்மா தான் ஸர்வக்ஞன். அவனே யாவற்றையும் நிச்சய புத்தியினுல் அறிந்தவன். அவனுக்குத் தான் எது நியாயம், எது அநியாயம் என்று கலக்கமின்றித் தெரியும். அவன் தான் தர்மாத்மா. அவன் ஸகல புருஷார்த்தங்களையும் மிச்சமின்றி அடைந்தவன்; அவன் தான் இகத்திலும், பரத்திலும், ஸகல கல்யாண குணங்களின் சேர்க்கையுள்ள புண்ய ராசி; அவனே குணுேத்தமன். அவனே பரம ஞானி. அவனே குலத்தின் நாயகன். அவனே பூமிக்கு விலக்ஷணமான ஆபரணம். அவனே பண்டிதன், ஹ்ருதி வேத்யனை அறிந்த மஹாவித்வான். அவனே பவித்திரமான தானங்களைச் செய்த வள்ளல், அவனே தர்ம பராயணன். அவனே யாவராலும் போற்றத் தகுந்த குலீனன்.'' (841)

"எந்த மஹானுபாவன் சஞ்சல புத்தியில்லாமல் மனத்தை ஒருமைப்படுத்திக் கொண்டு, ஸ்ரீராம சரணங்களில் (நாரத வால்மீகி, அத்ரி, அகஸ்திய, துளசிதாஸாதிகளைப் போல) ஸதா ரகுவீரனைப் பஜிக்கிருனே, அவனே நீதியில் நிபுணன்; அவனே எதை அடையவேண்டியது, எதைவிட வேண்டியது என்கிற ஸம்யக்ஞானத்தைப் பூர்ணமாக அறிந்த பரம ஞானி. அவனே ஸ்ருதி சித்தாந்தங்களை நிர்வகிக்கிருன். அவனே சகல சாஸ்திரங் களுக்கும் தனது ஆசார சீலங்களால் பிரமாணமாக விளங்கு கிருன். அவனே ஸர்வத்தையும் பார்க்கும், பரக்கப்புகழும் கவியாகவிருக்கிருன். அந்த மஹானுபாவனே தீரனுகிற வித்வான் என்று புகழப்படுகிருன். அந்த மஹாத்மவே அக்ஞானக் காடுகளை அழிப்பதில் ரணதீரனுகவிருக்கிருன்.'' (842)

"அந்த மஹாத்மாவை சுமக்கும் தேசம் தன்யமாகவிருக் கிறது; பெரும் பாக்கியமுள்ளதாக விருக்கிறது. அவனிருக்கும் இடத்தில் பரம புனிதமான கங்கை ஓடுகிருள். கங்கை ஓடும் பிரதேசமே பரமபவித்திரமாக விருக்கிறது. பாரத தேசமே தன்ய மாக விருக்கிறது. அந்த தேசத்தில் தான் உத்தம ஸ்திரிகள் பதிகளுக்கு அடங்கி ராஜ மார்க்கத்தில் வாழ்க்கை நடத்து கிருர்கள். எந்த ராஜ்யத்தில் நியாயம் சரி வர நடத்தப்படு

கிறதோ, அந்த ராஜ்யத்தில் அரசனே மஹா புண்யம் படைத்தவன். எந்த விடத்தில் பிராம்மணர்கள் தங்கள் குலத்திற்கு ஏற்ப ஆசரணைகள் செய்து வருகிருர்களோ, அவர்களே நிஜமான தர்ம துரந்தரர்கள். அவர்களே பரம பாக்யசாலிகள்.'' (843)

'' எவர்களுடைய தன ஸம்பத்துக்கள் நியாயமாக சம்பாதிக்கப்பட்டு, உத்தமமான தான தர்மங்களில் செலவுபடுகின்றதோ, அவர்களே தனம் படைத்தவர்களுள் மிக்க தன்யர்கள். ஐஸ்வரியங்கள் போகத்திற்காகவும், பிறர்களால் களவாடப்படாமலிருந்தும் தர்மத்திற்காகச் செலவழிக்கப்படாமலிருந்தால், அந்த ஸம்பத்துக்கள் வீணுக ஸம்பாதிக்கப்பட்டவையே. எந்த மஹானுபாவர்களுடைய புத்தியும், ஆசரணை ரீதிகளும் யாவராலும் புகழும்படி புண்யமாகவும், பழுத்தும் பிறர்களுக்கு உபயோகப்படும்படியாக விருக்கின்றனவோ, அவர்களே புத்திமான்களில் மிக்க தன்யர்கள், மிகச் சிறந்தவர்கள். எந்த மஹானுபாவர்கள் ஸத்ஸங்கத்தில் நிலைத்து நிற்பவர்களாகவும், பிராம்மணப் பிரியர்களாகவும் வாழ்கின்ருர்களோ, அவர்களே பூமியில் ஜன்மம் எடுத்ததின் லாபத்தைப் பூர்ணமாக அனுபவிப்பவர்கள். அவர்களே மனிதர்களுள் மிக்க பாக்யவான்கள். (844)

[தியானம்

ராமா சீதா, மஹாலக்ஷ்மி நாராயணு, சரணம் சரணம். அன்று நடந்த யாக்ஞ்யவல்கிய விஸ்வாவஸு ஸம்வாதத்தில், பிரக்ருதி புருஷனைத் தெரிந்தவன் இருப்பதாருவது தத்துவமாகிற பரமாத்மாவை ஞானத்திஞல் பார்க்கிருன் என்று சொல்லப்பட்டது. ஞானத்திஞல் மோக்ஷமுண்டாகிறது. அக்ஞானத்திஞல் உண்டாகிறதில்லை. ஆகையால் ஆத்மாவை ஜனன மரணங்களிலிருந்தும் விடுவிக்கக்கூடிய ஞானத்தை உண்மையாகத் தேடவேண்டும். அது எவ்விதத்திலும் தேடத்தக்கது. பிரும்மாவினுலும் மற்றவனுலும் அந்த பிரும்மத்திலிருக்கிறவனுக்கு நிலைபெற்ற மோக்ஷம் உண்டென்று சொல்லுகிருர்கள் என்று யாக்ஞ்யவல்கியர் தேவராதனுடைய மகனுகிற ஜனகமஹாராஜனுக்குச் சொன்னர். அதுமாதிரி திரிபுவன சுந்தரா, ராமா, கிருஷ்ணு, மன்மத பாணத்தால் அடிக்கப்பட்ட கோபிகைகளின் அபீஷ்டத்தை நிறைவேற்றத் தீர்மானித்திருந்த தாங்கள் அவர்களுக்கு குலஸ்திரிகளின் தர்மத்தை உரைத்துவிட்டு, பிற்பாடு புண்ணிய பாப ஸம்பந்தமில்லாத மாசற்ற தங்களுடைய நிர்மலமான மனத்தை ஆனந்தத்துடன் கருணை

நிரம்பியவராய் அவர்களுக்குக் கொடுத்து, அவர்களுடன் யமுனை யின் மணற்திட்டுக்களில் இஷ்டம் போல விளையாடினீரே. ஹே முராரி, ஸ்ருங்கார ரஸத்தில் மூழ்கிய மனத்தையுடைய அந்த கட்டழகிகளுக்கு அப்பொழுது என்ன எண்ணம்தான் நிறைவேறவில்லை? அதுமாதிரி தாங்கள் அவர்களை விட்டுப் பிரியும் போது தீக்கனல் போல மீண்டும் ஆனீர். சேர்ந்திருக்கும் போது ஸ்ருங்காரமாக விருந்த நீர் ராஸக்ரீடையில் கூட கோபி கைகளின் ஸங்கமம் அடைந்திருந்த சமயம்கூட அங்காரமய மாக (தீக்கனலாக) விருந்தீர்; என்பதைக் கேட்க எனக்கு மிகப் பயமாக விருக்கிறது. ஹே கிருஷ்ண, துளசிதாஸராலும் காகபு சுண்டியினாலும், யாக்ஞ்ய வல்கியராலும் பகவான் உமா மஹேஸ்வரர்களாலும் ஆராதிக்கப்பட்ட சீதா நாயகா, ஸ்ரீராமா, என்னைக் கட்டிக்கொள்வதிலும் உமக்கு ஆசையுள்ள மனம் எவ்விதம் உண்டாகப் போகிறது? ஹே கோதண்டபாணி, உன்னை ஸலிலமான மனத்தை உடைய தியாகராஜாதிகள் சீலம்கொண்டு, மிக்க ஜாக்ரதையாக உபாஸித்து ஆராதனை செய்தார்கள். ஹே சேஷசாயி, ரெங்கபதே, ராஜகோபாலா, சுகந்தபிரியா, நந்த ஸீதா, கௌஸல்யா புத்ரா, ஸ்ரீராமய்யா, ஜனகராஜரின் மகளாகிற சீதை உனது புஜங்களை சந்தனம் முதலிய வாசனையுள்ள வஸ்துக்களால் தடவி இன்புறுவதுபோல, பராசர நாரதாதி ரிஷிகளின் வழியில் வரும் எனக்கு உன் இன்பச் சேர்க்கையை எப்போது கொடுப்பாய்? ஸுரபதி, நரபதி, தயைசெய். தயைசெய். ஸர்வஸஹே, நீதான் என்னைக் காப்பாற்றவேண்டும்.]

"உமாபதியாகிற சம்பு பார்வதியிடம் சொல்கிறார். "பிரிய மான உமா, நன்றாகக்கேள். எந்த மஹானுபாவன் ஸ்ரீரகு வீரனையே ப்பராயணமாக ஏகமாத்திரமாக வரித்து, அவரையே நம்பிவாழ்கிறானோ, அவனே குலத்தில் தன்யன். அவனே இந்த ஜகத்தில் புண்யாத்மாவாகப் பூஜிக்கத் தகுந்தவன். அவனே வேறு நரர்களை ஸ்துதி செய்யாமல், அனன்ய பக்தியுடன் விளங்கும் வினயமான ராம பக்தன். அவனுடைய குலமே மிகச் சிறந்தது; மிக்க பவித்திரமானது. அவனே உலக மரியாதைகளையும், ஸர்வதர்ம மரியாதைகளையும் காக்கும் வினய ஸம்பத்துள்ளவன்." (845)

"பவானி, நான் என் புத்திக்கு எட்டியவாறு இந்தக் கதையை உனக்கு உபதேசித்தேன். பலகாலம்வரை இதை நான் பெரும் ரகசியமாக என் மனதில் தேக்கி வைத்திருந்தேன். இது

தான் முதலில் மறைக்கப்பட்ட ரகசியம். நாளடைவில் உனக்கும் இதில் அதிக பிரேமையிருக்கிறது என்று தெரிந்துகொண்டு, உன் மனம் அதிக ஆவலுடன் இதைக்கேட்க விரும்பியதால், நான் என் பிரபு ரகுபதியின் கதாம்ருதத்தை உனக்கு உபதேசித்து அருளினேன்.'' (846)

'' இந்த கதையை மூர்க்கனுக்கும், கேட்கவிருப்பமில்லாத வனுக்கும் சொல்லக்கூடாது. ஹரி பகவானிடம் பக்தி செலுத்தாதவனிடமும் இதைச் சொல்லக்கூடாது. காமம் க்ரோதம், லோபம் ஆகிய துர்க்குணங்கள் உள்ளவர்களிடமும் ஸகல சராசரங்களுக்கும் ஸ்வாமியாகிற ஸ்ரீ ரகுநந்தனைப் பஜிக்காதவர்களிடம் இதைச் சொல்லக்கூடாது.'' (847)

'' பிராம்மணர்களுக்குத் துரோஹம் செய்பவன் யாராயிருந் தாலும், ஸுரபதியான இந்திரனுக்குச் சமானமாக அரசனுக விருந்தாலும்கூட அவனிடமும் இதைச் சொல்லக்கூடாது. எந்த மஹானுபாவனுக்கு ஸாது ஸங்கமத்தில் நிஜமான அன்பிருக்கிறதோ, அவனே இந்த புண்யமான ராமகதையைக் கேட்கத் தகுந்த அதிகாரி.'' (848)

'' எவர்களுக்கு குருபக்தியிருக்கிறதோ, எவர்கள் நீதியை அனுசரித்து தர்ம பராயணமாக வாழ்கிருர்களோ, எவர்கள் பிராம்மணர்களுக்குச் சேவைசெய்யும் மனப்பான்மை உள்ளவர் களாக விருக்கிருர்களோ, அவர்களே இந்த புண்யமான ராம கதையைக் கேட்பதற்கு யோக்யமான அதிகாரிகளாக விருக் கிருர்கள். அப்பேற்பட்ட மஹானுபாவர்கள் இந்தக் கதையைக் கேட்டு விசேஷமான சுகத்தை அடைகிருர்கள். அவர்களிடம் என் பிரபு ரகுராய் பிராணப் பிரியராக விருக்கிருர்.'' (849)

'' எந்த மஹாத்மாக்களுக்கு ஸ்ரீ சீதாராம சரணங்களில் அத்யந்த பிரியம் ஏற்படுகின்றதோ, அவர்கள் மோக்ஷபதத்தை விரும்பட்டும்; அவர்கள் இந்த ராமசரிதமானஸம் என்கிற புண்யமான சரித்திரத்தை ஸத்பாவத்தினுல் அம்ருதத்தைக் குடிப்பதுபோல, தங்களது காதுகளினுல் இன்பமாகப் பருகி, நிர்வாண பதத்தையும் அடைகிருர்கள்.'' (850)

'' கிரிஜா, என்னுல் வர்ணிக்கப்பட்ட ராமகதை கலிகாலத்தில் ஏற்படக்கூடிய ஸகல பாபங்களையும் நாசம் செய்யக்கூடியது; மனத்தின் மலத்தை அகற்றி, அவனை ராமனிடம் சேர்க்கிறது. இந்த உத்தமமான ராமசரித்திரம் ஜனனமரணமாகிற ஸம்ஸ்ருதி யாகிற ரோகத்தை நாசம் செய்யும் ஸஞ்சீவினி ஓஷதியைப்

போல விருக்கிறது. இதையே வேதங்களும் புராணங்களும் அடிக்கடி புகழ்ந்து சொல்லுகிறார்கள்.'' (851)

''இந்த உத்தம சரித்திரத்தில் ஏழு காண்டங்கள் விமர்ச்சிக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஏழு காண்டங்களும் உத்தமமான ஏழு படிகளாக விருக்கின்றன. ஒவ்வொரு படியும் ரகுபதியினிடம் காட்டவேண்டிய பக்திக்கு ஏறிப்போகும் மார்க்கமாகவிருக்கிறது. எந்த மஹானுபாவனிடம் ஸ்ரீ ஹரி பகவானின் அத்யந்தகிருபை காட்டப்படுகிறதோ, அவனே இந்த மார்க்கங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறான்.'' (852)

''எந்த மஹாத்மா கபட எண்ணங்களை விட்டுவிட்டு, ஸத்பாவத்தினால் இந்த உத்தம கதாம்ருதத்தைப் பருகுகிறானோ, அவனுக்கு மனத்தில் தோன்றிய ஸகல மனோபீஷ்டங்களும் நிறைவேறுகின்றன. எந்த மஹாத்மா இந்தக் கதையைக்கேட்க விருப்பத்துடன் இருக்கிறானோ, பிறர்களைவிட்டுச் சொல்லச் சொல்கிறானோ, கேட்பவர்களையும், சொல்பவர்களையும் புகழ்கின்றானோ, அவன் ஸம்சாரமாகிற கடலை பசுவின் குளம்பு போல சுலபமாகத் தாண்டிவிடுகிறான்.'' (853)

''பிரும்ம ரிஷியான யாக்ஞ்யவல்கியர் பரத்வாஜரிடம் சொல்கிறார், ''இந்த ஸகல விருத்தாந்தங்களை கிரிஜா மஹாதேவரிடமிருந்து உபதேசமாகப் பெற்றாள். அவளுடைய ஹ்ருதய ஆனந்தம் அதிகமாகப் பொங்கி வழிந்தது. அத்யந்தம் சுகம் அடைந்தவளாக, பரமபாக்யமுள்ள பார்வதிதேவி பகவான் சம்புவை நமஸ்கரித்து, பிரதக்ஷிணம் செய்து, பிரேமாஞ்சலியுடன் கிருதக்ஞை பூர்வமாக உமாபதியை நோக்கி, சொல்ல ஆரம்பித்தாள்.'' (854)

''நாதரே, மஹாதேவரே, கிருபாளு, தங்களுடைய பிரபாவத்தினால் என் சந்தேகங்களை ஒழிக்கப்பெற்றேன். பிரபு, தங்களுடைய மஹா கிருபையினால் ஸ்ரீசீதாராம சரணங்களில் புதிது புதிதாகத் தோன்றும், ஸதாவர்த்திக்கும், நவயௌவன பக்தியை என் பரம பாக்யமாக அடையப்பெற்றேன்.'' (855)

''தேவதேவரே, திரிதசஸ்ரேஷ்டரே, தங்களுடைய மஹா பிரஸாதத்தினால், இன்று நான் கிருத கிருத்யையாக ஆக்கப்பட்டேன். விஸ்வேஸ்வரரே, தங்களுடைய உபதேச மகிமையினாலும், அருட்பிரஸாதத்தினாலும் என் மனதில் ஸ்ரீராம பக்தியைத் திருடமாக அடையப்பெற்றேன். ஸ்வாமி, தங்களுடைய

வரப்பிரஸாதத்தினுல் எனதுதேக மனக்லேசங்கள் என்னைவிட்டுப் பிரிந்துபோய்விட்டன. ஸ்வாமி, நான் தங்களுடைய அனுக்ர ஹத்தால் சாந்தரூபியாகி ஆத்ம ஸந்துஷ்டியை அடைந்தேன்.'' (856)

''பரத்வாஜரே, இப்படிப்பட்ட சம்பு பகவான் உமாதேவிக்கு அருளிய ஸம்வாதங்களை உமக்குச் சொன்னேன். இந்த சம்பு உமா ஸம்வாதங்கள் சுக ஆனந்தங்களை உற்பத்தி செய்யும் லோக கல்யாண ஸம்வாதங்களாக விருக்கின்றன. இதைக் கேட்பவர்களின் ஸகல க்லேசங்களையும் துக்கங்களையும் சமனம் செய்து, ஜன்ம மரணமாகிற தாபங்களையும் அழியச் செய்கிறது. ஸகல சந்தேகங்களையும் விபரீத ஞானத்தையும் நாசம் செய் கிறது. பக்தர்களுக்கு ஆனந்தத்தை ஸதா தருவதாக விருக் கிறது. இது ஸாதுக்களுக்குப் பிரியமான விஷயமாக விருக் கிறது.'' (857)

''ராமனை உபாஸனை செய்யும் பக்தர்களுக்கு இந்த மஹா ஸ்ரேஷ்டமான கதைக்கு சமமாகப் பிரியத்தைக் கொடுப்பது வேறு ஒன்றுமில்லை. பரத்வாஜரே, ஸ்ரீரகுநாதருடைய கிருபை யினுல் நான் உமக்கு இந்த அழகானதும் பரமபவித்திரமான சரித்திரத்தை எனது புத்திக்கு ஏற்ப சொல்லி முடித்தேன். ராம பரமாத்மாவைக் காட்டிலும் வேறு ஒன்றும் நித்யமில்லை. நித்ய ரூபமாயிருக்கின்ற ராமபிரும்மத்தை அறிகிறவர்கள் ஜனன மரண மற்றதும், எப்பொழுதும் பந்தமற்றதுமான நித்யசுக ஆனந் தத்தை அடைகிறுர்கள். ஞானத்தை அறிந்தவர்கள் ஜனனத்தை யும் மரணத்தையும் துர்க்கமாகச் சொல்லுகிறுர்கள். மனிதர்கள் யாகங்களாலும், தவங்களாலும், நியமங்களாலும், விரதங்களா லும் ஸ்வர்க்கத்தை அடைந்து மீண்டும் பூமியில் விழுகின்றுர்கள். ஆகையால் மங்களமும் மோக்ஷரூபமும் நிர்மலமும் பரிசுத்தமு மான பரம்பொருளாகிற நாராயணரை உபாஸிக்கக்கடவீர்.'' (முன் காலத்தில் யாக்ஞ்யவல்கியர் தேவராத குமாரனுகிற ஜனக மஹாராஜருக்கு உபதேசித்ததுபோல, இன்று அவர் பரத்வாஜ ருக்கு ராமபிரும்மத்தைப்பற்றிய உபநிஷத்தை உபதேசித்தார். அனுதியும் அழிவற்றதும் வித்வான்களால் ஸதா தியானம் பண் ணப்படுவதும், சுபமும் சோகமற்றதும், மோக்ஷரூபமான அந்த ராமபிரும்மத்தை யாக்ஞ்யவல்கியர் பரத்வாஜரை முன்னிட்டுக் கொண்டு, நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். தேவ தேவரே, சீதாநாயகரே, ராமபிரும்மமே, நாராயணரே, மஹா லக்ஷ்மி நாயகா, என்னிடமும் கிருபை செய்யவேண்டும்.) (858)

துளசிதாஸர் மீண்டும் சொல்லுகிறார். "இது கலிகாலம். இந்த கலிகாலத்தில் யோகமோ, யக்ஞமோ, ஜபமோ, தபமோ, மஹாவிரதங்களோ பூஜை முதலிய ஆராதனங்களோ ஆகிய யாவையும், மகத்துவம் வாய்ந்ததும், மோக்ஷ ரூபமானதும், மறுபடியும் பூமியில் ஜனிக்கச் செய்யாததுமாகிற ராம பிரும்மத்திற்கு இணையில்லை. இவைகள் ஸாதனங்கள் இல்லை. அவைகளால் மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைந்து மீண்டும் பூமியில் ஜனித்துவிடுகிறார்கள். ஆனால் பரபிரும்மமாகிற ஸ்ரீராமனைத் தியானிப்பதாலும், புண்ய ஸ்லோகரான ஸ்ரீசீதா ராமனுடைய கீர்த்திகளையும் பிரபாவங்களையும் அடிக்கடி ஸ்மரிப்பதாலும், நாம் ஜன்மமரணத்தை அடைகிறதில்லை." (நிரந்தரமானதும், நிர்மலமானதும், சோகமற்றதும், மோக்ஷரூபமானதும், கல்யாண குணங்களை உடைய குணபிரும்மமாகிற ஸ்ரீராமச்சந்திரனுடைய அழிவற்ற ஸ்வரூபம் ஸதா தியானிக்கவேண்டிய விஷயம்" என்று வற்புறுத்துகிறார் எனது பரமாசாரியர் துளசிதாஸர். (859)

"என்பிரபு பகவான் ராமச்சந்திரன் பதிதர்களையும் பரம பவித்திரமாக்கிவிடுகிறார். அதனால் அவர் பதிதபாவனர், என்கிற பெயருடன் பிரஸித்தமாக விளங்குகிறார். இவருடைய மஹத்துவங்களை சுக்ராசார்யார் போன்ற அநேக கவிகளும வேதங்களும், ஸாதுஜனங்களும், புராணங்களும் பலவிதமாகப் புகழ்கின்றன. இவ்வளவு சொல்லியும், ஹே மனமே, உனது குடிலத்தனத்தை தியாகம் செய்துவிட்டு, சீதாராமனை ஏன் பஜிக்கமாட்டேன்கிறாய்? ஸ்ரீசீதாராமனைப் பஜித்துவிட்டு, எவனால் உத்தமகதி அடையப் படவில்லை? நீயே சொல்." [அப்பேற்பட்ட மஹா விஸ்வாஸமுள்ள பரம ராமபக்தரான துளசிதாஸருக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் மஹாகிருதக்ஞையுடன் நான் செலுத்துகிறேன். அவரை அடிக்கடி அடிக்கடி பிரதக்ஷிணம் செய்து அனந்தமான நமஸ்காரங்கள் செய்கிறேன். ராமகிருபாளு, அவர் என்னிடம் காணப்படும் தோஷங்களை குணங்களாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று பரம வினயத்துடன் பிரார்த்தித்துக் கொள்கிறேன். எனது தோஷங்களை க்ஷமிக்கவேண்டுமாறு கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன்.] (860)

[தியானம்

ராமாசீதா, நாராயணா, மஹாலக்ஷ்மி பிரியா, முராரி, கராரி, ராவணாரி சரணம் சரணம். உங்களுடைய மகிமைகளையும் ஸம்பந்தத்தையும் எனக்கு அடையவித்து, என் மனத்தை

ஆனந்தப்படுத்தியும் எனக்கு கைங்கர்ய பூர்த்தியையும் செய்து வைத்தமஹானுபாவரான துளசிதாஸருக்கு, எனது ஸத்குருவுக்கு ஆயிரம் நமஸ்காரங்களை கிருதக்ஞை பூர்வமாகச் செய்கிறேன். ஹே காமாக்ஷி, உமாதேவி, உனது அருளின்றி இந்த ராம ஸம்பத்தை நான் அடையமுடியுமா? ஹே சம்போ, உமது கிருபையின்றி நான் ராம மஹாத்மியத்தை உணரமுடியுமா? நாரதபகவானே, உமது கிருபையின்றி என்போன்றவர்களுக்கு ராமதிவாகரன் உதயமாவாரா? ஆஞ்சநேயா, உமது வரப்பிரஸாத மின்றி நான் சீதாராம பதாப்ஜங்களை நினைக்கத்தான் முடியுமா? சீதாதேவியே, உனது தாய்மை உணர்ச்சியின்றி பாலகனுகிற நான் ராமாம்ருதத்தைப் பருகமுடியுமா? பரதா, உன்னுடைய பிரபாவத்தினுல் அல்லவோ ஸ்ரீராமனுடைய பாதாரவிந்தங்களின் மகிமைகளைப் பூர்ணமாக அறிகிறேன். லக்ஷ்மணு, உனது அன்பினுல் அல்லவோ ராமானுஜன் ஸம்பந்தம் பெற்ற நான் ராம கைங்கர்ய அனுவர்த்தியை அடைகிறேன். சத்ருக்னுழ்வாரே, உமது திருவருளால் அல்லவா ராம பக்தர்களின் பிரேமையை ஸம்பாதிக்கிறேன். வால்மீகி முனிவரால் ஜகத்திற்கு முதலில் அளிக்கப்பட்டதும், அவர் காட்டிய வழியில் வந்த பராசர, வேத வியாஸ, சுக, சௌனகாதிகளினுல் அனுக்ரஹிகப்பட்டதுமான ஸ்ரீமத்ராமாயணம் கலிகல்மஷங்களையும், என் பாபக் கொத்துக் களையும் போக்கும், ராம சஞ்சீவினியாக விளங்குகிறது. அக்ரோதம் கொண்ட தியாகராஜர், ஸ்யாமா சாஸ்திரி, தீக்ஷதர் போன்ற பிரஸித்தி பெற்றவாக்கேயகிகாரர்களும், கம்ப நாட்டாழ்வரும் பாடும் உத்தம ராமகதையானது ஸதா என் மனத்தில் தோன்றி, எனக்கு இன்பத்தை ஸதா அளித்துக் கொண்டிருக்கவேண்டும். ராம நாமம் என்கிற ஒளியினுல் சீதா ராமனை அடைய விரும்பும் எனக்கு, கருணைக் கடலான சீதா ராமன், துளசிதாஸ பிரபு, ராமகுணங்களையே பாடச் செய்யும் என் மனத்திற்கு, ராம பிரிவினுல் யேற்படும் வருத்தம் ஏற்படாமல் இருக்கும்படி செய்யவேண்டும். கோகுல ஸ்திரிகளை யும் ராதையையும் அனுபவித்த கண்ணன், ஜகத் த்ரயீ மோஹன மோஹனுத்மா எப்பொழுதும் மந்தஹாஸத்துடன் அவர்கள் முன்பு தோன்றி சந்தோஷப்படுத்திய பின்னும், அந்தக் கட்டழகிகள் மீண்டும் அவரைத் திரும்பிக் காண்போமா என்று சந்தேக நிலையை அடையும்போது, "பிரபு," ஹேகிருஷ்ணு, ஹரி பகவானே, ராமா, சீதாபதி, நாராயணு, கோபிகைகள் தங்களுடைய ஆத்ம காந்தியால் ஸ்ரீகோபாலனைப் பார்த்து,

தங்கள் பிரியதமனுன நாராயணனைக் கண்டு, எவ்விதம் ஆனந்தித்தார்களோ, அதுபோல நாரத, வஸிஷ்ட, விஷ்வக்ஸேனு விஸ்வாமித்ர அனுக்ரஹம் பெற்ற என்னிடம், மாருதேசா, விரைவில் வந்து என்னையும் உங்கள்பொருளாக ஆட்கொள்ள வேண்டும். நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.]

" ஹே மனஸே, சாந்த ரூபத்தை யடைந்து, பதித பாவனரான சீதாராமனை ஸந்ததமும் பஜித்துவா ; உன்னுடைய துஷ்ட ஸ்வபாவங்களை விட்டுவிட்டு, சீதாராமனை அந்தரங்கமான பக்தியினுல், பதிவிரதையான ஸ்திரி ஸத்புருஷனை உபாஸிப்பது போல, பூஜித்துவா. இந்த விஷயத்தில் கலக்க மடையாமல், (ஸ்ரீ துளசிதாஸ, தியாகராஜர், கம்பர், வால்மீகி, வேதவியாஸ சுகசௌன காதிகள், நாரதர், பராசரர், உமாசம்பு ஆகிய) மஹனீயர்களின் உபதேசத்தைப் பெரும் பாக்கியமாகப் பெற்று, அனுதினமும் பூஜித்துவா. ஸ்ரீ சீதாராம சரணங்களைத் தவிர துக்கமயமாகவிருக்கும் ஸம்சாரத்தில் உனக்கு வேறுகதியில்லை. தீனபந்துவாகிற வேங்கடேச பாதங்களை நம்பி வாழும் வைஷ்ணவன் எங்கேயாவது கெட்டகதியை அடைந்திருக்கிருனே? இவ்வளவு சொல்லியும், சஞ்சலமான மனமே, உனது சஞ்சலதனத்தை தியாகம் செய்து விட்டு, பூர்வாசாரியர்களால் திண்ணமாகக் காட்டப்பட்ட சீதாராம, புருஷோத்தம நாராயணனின் சரணங்களை ஸம்சார பாரிஜாதம் என்று ஸ்வீகரிக்க ஏன் தயங்குகிருய்? உத்தம கதியைக் கொடுக்கும் ஸ்ரீ சீதாராம சரணங்களை ஆஞ்சநேயாதிகளைத் திருஷ்டாந்தமாகக் கொண்டு பஜித்துவா. நான் சொல்வதில் உனக்கு இன்னமும் சந்தேகம் ஏற்பட்டால், பிங்களை என்கிற தாசி ஆசையற்றவளாக, கவலையின்றி தூங்கி பரமாத்மாவின் பாதம் ஒன்றையே நினைப்பவளாக உத்தம கதியை அடையவில்லையா? அஜாமிளன் மரிக்கும் சமயம் " நாராயணு " என்று தன் பிள்ளையைக் கூப்பிட்டு, உத்தமமான நாராயண பதத்தை அடையவில்லையா? " மரா " என்று தப்பிச் சொல்லிய வால்மீகி பகவானும் உத்தமகதியை அடையவில்லையா? அவர் ஜாதியில் வேடனுகவல்லவோ பிறந்தார். ஜடாயு பக்ஷியாக விருந்த போதிலும் ஸ்ரீசீதாராம கைங்கர்ய பாக்யத்தினுல் ஜிக்ஞாஸுக்கள் அடையும் வைகுண்ட பதத்தை அடையவில்லையா? ஆதி மூலமே என்று கதறிய கஜேந்திரனை நினைத்துப் பார். அவன் அடைந்த உத்தம கதியை நினைத்துப்பார். அவனைப் பிடித்த முதலையும் உத்தம கதியை அடைந்தது. இந்த சம்பவங்களை நினைத்துப் பார்த்து, ஏன் உத்தம உத்தம ஸ்ரீசீதாராம

பதத்தை அடைய மறுக்கிருய்? இது மாத்திரமில்லை. இன்னும் அநேகம் பேர்கள் ராம நாம ஸம்பந்தத்திஞல் உத்தம கதியை அடைந்திருக்கிருர்கள். பூமியின் தென்மேற்கு மூலையில் குடி கொண்டு மிக்க ஹிம்சையையேத் தொழிலாகக் கொண்ட ஆபீர்கள் என்கிற மலை ஜாதியர்கள், யவனர்கள், கிராதர்கள் (பீலர்கள்), அஸ்ஸாம் மலைப்பகுதியில் வாழும் "கஸ்" என்னும் மலை ஜாதியர்கள், நாய் மாம்சத்தை பக்குவம் செய்து சாப்பிடும் சண்டாளர்கள், இன்னும் அநேக கோடி பாபாத்மாக்கள் ஹிம்சையையே தொழிலாகக் கொண்ட அரக்கர்கள், ஒரு தடவை தற்செயலாகக் கிடைக்கப்பட்ட ராம நாம பிரபாவத்திஞல் உத்தாரணம் செய்யப்பட்டதை நினைத்துப்பார். இவர்கள் பவித்திரமான ராம நாமத்தின் பிரபாவத்திஞலே சுத்தமாக்கப் பட்டு உத்தம கதியை அடைந்திருக்கிருர்கள்." (அப்பேற்பட்ட மஹாத்மாவாகிற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை, சீதா ராமபத்ரரை, நான் ஆயிரம் சுக்ருத நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (861)

"என் பிரபு சீதாராமச்சந்திரன், துளசிதாஸபிரியன், ரகு வம்ச பூஷணனுடைய மஹா புண்யமான சரித்திரமாகிற ஸ்ரீமத் ராமாயணம் பிரும்மா, நாரத, வால்மீகி போன்ற விக்ஞான விசார தர்களால் ஸதா கானம் செய்யப்பட்டு, முதலில் உமா சம்புவிஞல் பிரகடனப்படுத்தப்பட்டது. அப்பேற்பட்ட உத்தம ஸ்ரீமத்ராமா யணத்தை எந்த மனிதர்கள் பிறர்களுக்கு உபதேசிக்கிருர்களோ, தாங்களும் பிறர்களிடமிருந்து கேட்கிருர்களோ, பிறர்களைச் சொல்லும்படி செய்கிருர்களோ, அவர்கள் கலி காலத்தில் மஹத் தான பாபங்கள், பாதகங்களை நஷ்டப்படுத்தி, தங்களுடைய மனத்தை பரிசுத்தம் செய்து கொள்ளுகிருர்கள். அவர்கள் ஒருவித ஸ்ரமமுமின்றி சீதாராம பதங்களை, "ரெங்கதாம்" என்று சொல்லப்படும் ஸ்ரீவைகுண்ட பதத்தை அடைகிருர்கள். இது மிக வும் உண்மை. பரம பவித்திரமான ராமசரிதமானஸத்தில் ஐந்து அல்லது ஏழு சௌபாய்களை (நான்கு சிறிய வாக்யங்களைக் கொண்டது சௌபாய் என்று சொல்லப்படுகிறது)—மனோஹர மாக நினைவுபடுத்திக் கொண்டாலே போதும். அவர்களுக்கு உடனடியாகவே ஐந்து விதமான அவித்யை, அக்ஞானம் அழிந்துவிடுகிறது. (ஐந்துவித அக்ஞானமாவது, எது நிஜம் எது நிஜமில்லாதது; எது நித்யம் எது அநித்யம்; எது சுகம் எது துக்கம்; எது சுத்தமாகவும் சுசியாகவுமுள்ளது, எது அசுத்தமாகவும் அசுசியாகவுமிருக்கிறது; எதைப்பற்றவேண்டும் எதைவிடவேண்டும், ஆகியவை). சீதாராமனே, இவ்வித ஐந்து

வித அக்ஞான இருள்களைப் போக்கவல்ல ஞான பாஸ்கரனாக விருக்கிறான். அப்பேற்பட்ட ரகுகுல ஸோமனை, நரவரனை, புருஷோத்தம ராமனை ஸர்வோத்தமனை ஏன் நாம் பஜித்து ஸகல க்லேசங்களையும் போக்கி, உத்தமகதியை அடையக் கூடாது?'' (சீதாராமா, நீங்கள் தான் எனக்கு கதி. நீங்கள் தான் எங்களை ரக்ஷிக்க வேண்டும்.) (862)

''என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் ஸ்யாமசுந்தரன். நல்ல எண்ணமுள்ள ஹிதகாரி, மஹா அறிஞர். மஹா கிருபாளு, அநாதையான தீனர்களிடம் பரம ப்ரீதி செலுத்துகிறவர். தன்னுடைய பதமாகிற மோக்ஷ நிர்வாண பதத்தை சுலபமாகக் கொடுக்கும் தயாளு. அவரைப்போல இந்த ஸம்சாரத்தில் யார் ஸர்வசக்திமானாகவும், பரம கிருபாளுவாகவும் இருக்கக் கூடும்? அந்த மஹா கிருபாளுவினால், (துளசிதாஸர் தான் தன்னைச் சொல்லிக்கொண்டாலும் நான் அவரைச் சொல்லத் துணிவேனா!)—''என்னைப்போல மதிமந்தர்களுக்கும், அருகதை யோக்யதாம்சம் லவலேசமுமில்லாதபோதிலும்,'' தன் பொருளாக ஆக்கிக்கொண்ட உத்தமர்; பரம சாந்தியை அளித்த உதாரர்; ஸகல க்லேசங்களையும் போக்கி, அனுத்தமமான கதியைக் கொடுத்த ஸரஸிருஹநயனன். அப்பேற்பட்ட ஸுரதேனுவாகிற ஸ்ரீ சீதாராமனுக்கு சமமாக யார் இருக்கக்கூடும்?'' (863)

''ஹே ரகுவீரா, நான் உம்மிடம் அடிக்கடி சொல்லியிருக்கிறேன். இன்னமும் சொல்லுகிறேன் பிரபு. எனக்குச் சமமாக தீனனும், நாதனற்றவனும், தங்களுடைய கிருபையை வேண்டுபவனும் யாரும் இல்லை. ஹே ரகுவம்ச சிகாமணி, யார் எதைக் கேட்டாலும் ''இல்லை''யென்று சொல்லாமல் ஸகலத்தையும் தானம் செய்யக்கூடிய ரகுவம்சத்திற்கு சிரோண்மணியாக தாங்கள் விளங்குகிறீர். தீனர்களுடைய துக்கங்களைப்போக்கி, ஹிதத்தைச்செய்யும் கிருபாளு, என்னிடம் கிருபைகொண்டு, எனக்குத் தாபங்களைத் தரும் ஜன்மமிருத்யு பயங்களிலிருந்து விடுதலையை நீர்தான் அளிக்கவேண்டும்'' என்று தாழ்மையுடன் பிரார்த்தித்துக்கொள்கிறேன். ''இனி எனக்குப்போதும் இந்த பயங்கரமான பவசாகரம். என் கஷ்டத்தை நன்றாகப் புரிந்துகொண்டு எனக்கு உதவி செய்யவேண்டும்.'' (864)

''பிரபு, எவ்விதம் காமிகளுக்கு ஸ்திரி முதலிய விஷய போகங்களில் இச்சையிருக்கின்றதோ, லோபிகளுக்கு தனம் எவ்விதம் மிக்க ஆசையாகவிருக்கின்றதோ, அதுபோல

  

ரகுநாத்ஜி, ஹே ராம்ஜி, தங்களுடைய ஸ்ரீராம நாமமும் தங்களிடம் ஏற்படும் பக்தியும் நிரந்தரமாகப் பிரியமாக விருக்கும்படி அருள்செய்து, நீரும் எங்களிடம் ஸதா பிரசன்ன மனத்துடன் இருக்கவேண்டும். ஸ்வாமி, எங்களை ஸதா உனது தாஸர்கள் என்று ஸ்வீகரித்துக்கொண்டு ரக்ஷிக்கவேண்டும், சந்தோஷமாக வைத்துக்கொள்ளவேண்டும்; கூப்பிய கரங்களோடு, பிரபு, நான் மிக்க தாழ்மையாகப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.'' (865)

"புருஷ ஸ்ரேஷ்டரானவரும், மஹாகவியும், ஆத்மாராமனு மாகிற பகவான் சம்புவானவர் உமாதேவிக்கும் ஸகல ஜகத்திற்கும் ஹிதத்தைத் தருவதற்காக "மானஸராமாயணம்," என்கிற உத்தம காவியத்தை தன் மனத்திற்குள்ளே தேக்கி வைத்திருந்தார். பிற்பாடு அதை ஸ்ரீமத் ராமபதாப்ஜங்களில் ஸமர்ப்பித்து பராதீனராக, நித்ய நிரந்தரமாக ஒப்புயர்வற்ற அனன்ய பக்தியை ராமனிடமிருந்து அடைவதற்காக இந்தக் காவியத்தை ரஞ்சனம் செய்து, ராமபதாப்ஜங்களில் அர்ப்பணம் செய்தார். புண்யமானதும், சிலாகிக்கத் தகுந்ததுமான அவருடைய பக்தியை என்பிரபு ஸ்ரீ ரகுநாத் ஸ்வீகரித்துக்கொண்டார். அந்த பக்தி பெருகும் காவியத்தை எனது ஆசார்யரும், மார்க்கதரிசியும், பக்தர்களுக்கும், தாஸர்களுக்கும் ஹிதத்தைச் செய்யும் கிருபாளுவான துளசிதாஸர் சாதாரண பாஷையில் யாவரும் சுலபமாகப் புரிந்துகொள்ளும்படி எழுதி ரஞ்சனம் செய்தார். அவரால் இயற்றப்பட்ட இந்த காவியம் அவருடைய மனசாந்திக்கும், அந்தக்கரண இருட்டுக்களாகிற அக்ஞானங்களையும், மஹாமோஹங்களையும் விரட்டுவதற்காக மிக்க உபயோகமுள்ளதாக விருந்தது. அதுமாத்திரமில்லை. அவருடைய மனமாகிற மானஸ ஸரோவரில் காவிய ரூபமாக எழுந்து பரமபவித்ரமான ஸ்ரீரகுநாதனுடைய ராமநாமத்தையும் தாங்கிக்கொண்டு, துளசி பிரபுவினுடைய மனத்திலிருந்து வெளி வந்தது. அதனுல் அந்த காவ்யம் "ராமசரித மானஸம்" என்று பெயர்பெற்று விளங்கிற்று. அவருக்கு தமம், சாந்தியையும் புஷ்டியையும், ஆரோக்கியத்தையும் கொடுத்ததுமாதிரி, ராமசரித மானஸம் எல்லோருக்கும் அந்த உத்தம ஸம்பத்துக்களைக் கொடுக்கட்டும்.'' (866)

"இந்த மஹா உத்தமமான "ராமசரித மானஸம்" பரம புண்யத்தைக் கொடுக்கக்கூடியது. ஸகல பாபங்களையும் அதன் வாசனைகளையும் அறவே ஒழிக்கக் கூடியது. ஸ்தாமங்களங்களை

யாவருக்கும் அளிப்பதாக விருக்கிறது. விக்ஞான பக்தி ஸம்பத்துக்களை அளிப்பதாகவுமிருக்கிறது. மாயை, மஹா மோஹம், மனம் தேகம் ஆகியவைகளின் அசுத்தங்களையும் நாசம்செய்து, பரம நிர்மல பிரேமை ரஸத்தை உண்டு பண்ணி, மங்களமய, சுபமயமாக விருக்கின்றது. அப்பேற்பட்ட உத்தம மான "ஸ்ரீராமசரித மானஸம்" என்கிற காவ்ய ரூபமாகிற மானஸ ஸரோவரில் எந்த மனிதர்கள் பக்திபூர்வமாக மூழ்கி, ஸ்நானம் செய்கிருர்களோ, அவர்களுக்கு சம்சாரம் என்கிற பிரசண்ட சூர்யனுடைய கிரணங்களால் ஏற்படும் தாபங்கள் ஒன்றும் ஏற்படுவதில்லை. அவர்கள் உத்தம மனசாந்தியை அடைந்து சௌக்யத்துடன் இன்புறுகிருர்கள்." (867)

மாஸ பராயணம்—30வது நிறுத்தம்

நவாஹ பாராயணம்—9வது நிறுத்தம்

இத்துடன் ஸ்ரீமத்ராமசரித மானஸம் என்கிற
காவியத்தில் ஸகல கலிகால தோஷங்களை
நாசம் செய்யக்கூடிய ஏழாவது
சோபானம் முற்றிற்று.

## உத்தர காண்டம் ஸமாப்தம்

சீதா ராமார்ப்பணம்
நாராயண மஹாலக்ஷ்மி அர்ப்பணம்
மங்களம் மங்களம்.

---

மங்களம்: ராமா சீதா, நாராயணு மஹாலக்ஷ்மி அம்மா, கிருஷ்ணு, குருபுரீபதே, சரணம் சரணம். பகவானே, தீனபந்து, துளசிதாஸபிரியா, கம்பர், வால்மீகி ஸேவித சீதா ராமா, ஆஞ்சநேய பரதசத்ருக்ன லக்ஷ்மண ஸேவிதராமா, சீதாபதே, கோபிகைகளிடம் பகவானுன கிருஷ்ணன் எவ்விதம் பிரியமாக விருந்தாரோ, அதேபோல என்னிடமும் இருக்க வேண்டுமென்று நான் தங்களைப் பிரார்த்திக்கிறேன். ரமாபதே, "கருணை" என்பது பலவிதம் உண்டு. சிலபேர் எல்லோரிடத்திலும், சிலர் தம்மை அண்டினவர்களிடத்திலும்; சிலர் கோபிகைகளைப் போல ஆஸ்ரயித்தவர்களிடத்திலும், தங்களைப் போல "கருணையற்றவர்களிடத்திலும் கருணையுடன் இருக்கிருர்கள்," என்கிற கோபிகைகளின் வசனங்களைக் கேட்டு, தாங்கள் அவர்களுக்குச் சொல்லிய பதிலை மாத்திரம் என்னிடம் தயவுசெய்து சொல்லி, அந்தர்தியான மடையவேண்டாம். பிரபு, நீர் உரைத்த வசனங்களை மீண்டும் நான் உமக்கு ஞாபகப்படுத்துகிறேன். "பெண்களே, பிரேமையற்று விடுமோ என்று பயந்த என்னிடத்தில் கடுமையைப்பற்றி சந்தேகிக்கப்படவேண்டாம்; ஆனுல் என்னிடத்தில் உங்களுடைய மனதின் தொடர்பு அனுவ்ருத்திக்காக, இவ்விதம் என்னுல் அந்தர்தியானம் என்கிற தோன்றி மறைதல் செய்யப்பட்டது. பிராணநாயகிகளே, ஜீவவல்லபைகளே, உங்களைப் போல எனக்கு மிக்கப் பிரியமான பந்து ஜனங்களே இல்லை. ஆகையால் நாம் தங்கு தடையின்றி விளையாடுவோம்," என்று பிரபு, ஸ்வாமி, தாங்கள் திருமுக மண்டலத்திலுல் மலர்ந்தருளினீர்களே. அந்த ப்ரேமை பாக்யத்தை நானும், என் தொடர்பு ஸம்பந்தத்தைக் கொண்ட ஜனங்கள் யாவரும் உங்களுடைய கிருபை ஒன்றினுல் மாத்திரம் அடைவோமாக.

"சீதாபதிக்கு நான் கற்பூர நிராஞ்ஜனம் செய்கிறேன். கம்பர், தியாகராஜ துளசிதாஸாதிகளால் ஸேவிக்கப்படும் அயோத்யா ராமனுக்கு நாங்கள் மங்கள ஹாரத்தி செய்கிறோம். ராஜவிபாகர ராஜதராமர ராஜசுகாஜ விராஜலுசூடுக ராஜ மான மகுகாஜீலு கல்லன ராஜித தியாகராஜ நுதுனிகி ஸ்ரீசீதாபதிக்கு, அதிம்ருதுதர ஸத்ய பாஷணுநிகி அகிலாண்ட நாதுனிகி, சீதாபதிக்கு நாங்கள் மங்கள ஹாரத்தி எடுத்து ஜயசப்தங்களைச் செய்கிறோம். ஹே நாரதபகவானே, கருணு ரஸாக்ஷா, நீரும் நாங்களும், ஸ்ரீராமனுக்கும், சீதாதேவிக்கும், மாருதி புடைசூழ் தம்பிமார்களான பரத லக்ஷ்

மண சத்ருக்ஞுதிகளுக்கும், அனந்தகோடி ராமதாஸர்களுக்கும், வைஷ்ணவ கோஷ்டியைப்போல ஒன்று சேர்ந்திருக்கும் பராசராதி பாகவத பிரமுகர்களுக்கும், அகஸ்திய லோபாமுத்திரை போன்ற பரம மங்கள ஹ்ருதயத்தையுடைய ரிஷிகளுக்கும், ஜயமங்களம் நித்ய சுபமங்களம் பாடுவோம். நம் பிரபு கருஞுரஸாக்ஷன், காமாரிவினுதன், தருணஅருணன், சுந்தரபதன், நிருபசரீரன், நிகில ஆகம சரணன், ஸுரவினுத சரித்திரன், சரஞுகதர்களை ரக்ஷிக்கும் ஸுவ்ரதன், மாதவன், கந்தர்ப்பலாவண்யம் கொண்டவன், காமித ஸுபலதாயகன், நிர்விகாரன், மானிதகுணன், ஸார்வபௌமன், நிர்வாண பலப்ரதன், ஜகத்ராஜ, தியாகராஜ, துளசிதாஸ போஷகன், நிர்மலன், என் பிரபு சீதாராமனுக்கு ஜயமங்களங்கள் ஸதா பாடிக்கொண்டு களிப்போம். ''பிரபோ, எங்களிடம் ஸதா அனுக்ரஹ சித்தத்துடன் இருக்கவேண்டும்,'' என்று நாங்கள் பிரார்த்தித்துக் கொள்கிருேம். சீதாராம, நாராயண மஹாலக்ஷ்மி திருவடிகளே சரணம் சரணம்.

ஆஞ்சநேய சுக்ரீவாய விபீஷஞுய சரணம்.
கம்பர், தியாகராஜாய, துளசிதாஸாய மங்களம்.
ஜய மங்களம் ஜய மங்களம்.
எங்கும் சுப மங்களம்.
முற்றிற்று சுபம்.